உ

# முன்னுரை

நலமெலாம் வழிபட்டோர்க்கு நன்று அருள்புரியும் குமாரக் கடவுளின் திவ்விய சரிதையாகிய இக்கந்த புராணத்தை, காஞ்சி யெனும் பதியில் அவதரித்த கச்சியப்ப சிவாசாரியர் என்னும் பெரியார் முருகப்பிரான் அருள்கொண்டு பாடியருளி, இந்த உலகிற்கு ஓர் பெருங் கொடையைத் தந்திருக்கிறார்.

இந்தக் கந்தபுராணத்தின் மகிமை, பெருமை, இப்புராணத்தை ஓதுங்கால் யாவர்க்கும் விளங்கும்.

இப்புராணத்தை மெய்யன்போடு யாழ்ப்பாணத்து பல பாகங்களிலும், இலங்கையின் ஏனைய பாகங்களிலும் ஒதி உரை கூறிவரும் வழக்கம் இன்றும் உண்டு.

அடியேன் முற்றவப் பேற்றினால்போலும் இப்புராணத்துக்கு உரை கூறிவரும் பேறும் பெற்றேன். கொழும்பிலும் யாழ்ப்பாணத்து பல பாகங்களிலும் உரைகூறிவருங்கால் பல பெரியார்கள் என்னை இப்புராணத்துக்கு ஓர் உரை எழுதி வெளியிட வேண்டுமென்றார்கள். ஆனால் என்னால் செய்யும் ஆற்றல் இல்லை என்பதை உணர்ந்தேனாக மெதுவாக பேசாதிருந்துவிட்டேன்.

இந்த ஆண்டில் மானிப்பாய் வேலக்கைப் பிள்ளையார் கோவிலில் கந்தபுராணத்தை விரிவுரையாக நிகழ்த்தி வருங்கால் நாளும் நாளும் பல பெரியோர்கள் வந்து கூடிக் கேட்டு மகிழ்ந்து செல்வார்கள். அவர்கள் எல்லாம் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளின் திறமையைப் பாராட்டிப் போவார்கள். சிலர் விரிவுரை முடிந்த பின்னும் நின்று என்ன தமிழ்! என்ன கருத்து! எப்படியான அறிவுரைகள்! வாழ்க்கையின் சிக்கலில் எப்படி நாம் நடந்துகொள்ளலாம் என்பது போன்றவைகள், என்ன அருமையாகச் சொல்லியுள்ளார். இப்புராணத்தை நாம் இவ்வளவுநாளும் அறியாதது பெருந் தவறாயிற்றே, எனக் கூடிப் பேசிவருவது என் காதிலும் விழுந்தது. ஆக, இப்புராணத்துக்கு ஓர் உரையை எழுதி, எல்லாருக்கும் இதை விளங்கவைக்க வேண்டும் என என்னைத் தூண்டினார்கள். வேறும் எனது நண்பர் பலரும், என்னை இதைச் செய்ய வேண்டுமென்று

வற்புறுத்தினர். ஆனால் இப்புராணத்திற்கு உரை எழுதும் தகுதி உடையேன் அல்லன் என உணர்ந்தும், ஏதோ என்னையறியாத ஒரு வேட்கை என் உணர்வையும் கடந்து எழுந்து இப்பணியைச் செய்யுமாறு தூண்டியது. ஆகவே சூழ்ச்சிமுடிபு துணிபெய்தல் என்னும் தகைமையாக, வாழ்க்கையின் பேறும் இதுவே பாகும் எனத் தெளிந்து இப்பணியை மேற்கொள்கிறேன்.

எனது இந்த உரையை சிறந்ததென்று நான் சொல்வதற்கில்லை. ஏதோ இலகுவாக எல்லாரும் வாசித்துப் பாடற் கருத்தை உணரும்வகையில் எனது குருபரன் அருளால் இலகுவான தமிழ் வார்த்தைகளால் ஓர் பொழிப்புரையை எழுதி சஞ்சிகை ரூபமாக இதை இப்போது வெளியிடுகின்றேன்.

அவ்வாருக செய்வதன் காரணம் இக்காலநிலைபில் புராணம் முழுவதற்கும் உரையெழுதிவிட இயலாமல் இருந்நலேயாதும். ஆகவே தொடர்பாக மாதந்தோறும் வரக்கூடிய இச்சஞ்சிகைகளை வேண்டிப்படித்து என்னை ஆசீர்வதித்து, உலகெங்கும் நிறைகின்ற அருட் சோதியாகிய முருகன்பெருமை விளங்க உதவுவாராக என வணக்கத்துடன் அனைவரையும் வேண்டுகிறேன்.

இச்சஞ்சிகையை விரைவில் வெளியாக உதவிய ஸ்ரீ காந்தா அச்சக முதல் அனைவர்க்கும் என் நன்றி.

என்னு யகன்விண் ணவர்நாயகன் யானை நாமம்
மின்னு யகன் மறைநாயகன் வேடர் நங்கை
தன்னு யகன்வேல் தனிநாயகன் தன்பு ராணம்
நன்னு யகமா மெனக்கொள்கஇந் ஞால மெல்லாம்.

உயரப்புலம்
கொக்குவில் மேற்கு
கொக்குவில்
18-11-72

இங்ஙனம்
வை. நல்லையா

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம்



## 1. பாயிரம்



### விநாயகர் காப்பு

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

"திகடசக்கர" முருகப்பெருமான் அருள்வாக்கு. எங்கும் விளங்கித் திகழ்கின்ற பத்துத் திருக்கைகளையும் செம்மையான ஐந்து திருமுகங்களையும் உடையவராகிய சிவபெருமான் முன்னொருகாலத்து இரும்பு, பொன், வெள்ளி என்னும் உலோகங்களினால் அமைந்த மதில் கொண்டதும், அந்தரத்து திரிவனவுமாய் ஓயாது தேவர்கட்கு இன்னல் செய்த முப்புரங்களை அழிக்கும்படி எழுந்தருளி தேர்மேல் சென்றார். அவர் சென்றருளிய தேர்ச்சில்லாக அமைந்தார் தாமரைக்கு நாயகரெனப்படும் சூரியபகவான். அவ்வாறாகிய சூரிய பகவானை தன்னுடைய திருவயிற்றின்மேல் திகழ்கின்ற பூநூலாகிய பாம்பின் உச்சியின் மணியாக அணிந்தருளிக்கொண்ட விகட சக்கரன் எனும் பெயர்கொண்ட விநாயகப் பெருமானின் என்றும் அழிவில்லாத மெய்ம்மை வாய்ந்த பாதங்களைப் போற்றுவாம்.

"திகடசக்கர" என்பது கந்தபுராணத்தைப்பாடி அருளிய கச்சியப்பசிவாசாரியார் என்பவருக்கு முருகப்பெருமானால் அருளப்பெற்ற முதல் வாக்கியமாகும். இந்த முதல் வாக்கியத்தைக்கொண்டே கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் 10345 பாடல்களால் இந்த மகாபுராணத்தைப் பாடிமுடித்தார்.

விகடசக்கரன் என்னும் நாமம் பிள்ளையாருக்கு வந்தது எப்படியென்றால் முன்பொருகாலத்து தக்கன் என்பவனின் யாகத்தை வீரபத்திரக்கடவுள் சங்காரம் செய்தார். அவ்வாறாகிய நேரத்தில் விஷ்ணுபெருமான் வீரபத்திரக் கடவுளோடு போர்செய்தார். செய்தபோரில் விஷ்ணு சக்கரத்தை விட வீரபத்திரக்கடவுளின் தலை ஒன்று அதை விழுங்கியது. போரிலே வீரபத்திரக்கடவுளுக்கு தோற்றார் விஷ்ணு. பின்னர் சிவனருளால் வீரபத்திரப்பெருமான்

நிலை உணர்ந்து சக்கரத்தை திரும்பவேண்டி, வீரபத்திரப்பெருமான் திருமுன்னர் விஷ்ணுவின் சேனாதிபதி உடம்பை வளைத்து விகடக் கூத்தாடினான். ஆடிய போது எல்லாரும் சிரிக்க வீரபத்திரக்கடவுளின் தலை ஒன்றும் சிரித்தது. அப் போது சக்கரம்விழ, விஷ்ணு அதை எடுக்குமுன் விநாயகப்பெருமான் அதை எடுத்து ஒளித்து வைத்தார். பின்னர் விஷ்ணு விநாயகக்கடவுளை தரும்படி வேண்டியபோது விநாயகப்பெருமான் தம்முன்பும் விகடக் கூத்தாடினால் தரு வேன் எனக் கூற அவ்வாறு கூத்தாட்டுவித்து விஷ்ணு சக்கரத்தைப் பெற்றார். இதனால் விநாயகப்பெருமானை அன்பால் எல்லாரும் ''விகடசக்கரன்'' எனப் போற்றுவார்கள். 1

உச்சியின் மகுடமின்ன வொளிர்தர நுதலினோடை
வச்சிர மருப்பினொற்றை மணிகொள் கிம்புரி வயங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

உச்சியில் மகுடம் மின்னவும், நுதலோடை ஒளிரவும், வச்சிர ஒற்றைக் கொம் பில் அணிந்த இரத்தினங்களாலாகிய கிம்புரி ஆபரணம் பிரகாசிக்கவும், உண்மை வடிவாகிய செவிகளில் கவரிகள் தூங்கவும், யானை முகத்தோடும் பொலிந்து நிறைந்து காஞ்சியென்னும் பதியில் வீற்றிருந்து அருளும் விகட சக்கரனாகிய கணபதி பகவானை மறவாது அன்பு செய்வோம். 2

## சுப்பிரமணியர் காப்பு

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

ஆறுக நிறைந்தருளும் திருமுகங்கட்கு வணக்கம். மாறாது பொழிகின்ற திரு முகங்களின் கருணைக்கு வணக்கம். ஈறின்றி யாவரும் தோத்தரிக்கும் பன்னிரு தோளுக்கு வணக்கம். காஞ்சியில் மாமர அடியில் வைகும் செம்மேனிச்செல்வர் மலரடிகட்கு வணக்கம். அவருடைய சேவலுக்கும், மயிலுக்கும் வணக்கம். அவர் திருக்கைமேல் நிறைகின்ற வேலுக்கு வணக்கம், வணக்கம். 3

## நூற் பயன்

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர்
அந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணம் தன்னைக் காதலித் தோது வோரே.

இந்திரராகச் சிறந்து இப்பூமிமேல் இன்பமுற்று இனிது வாழ்ந்து, தங்கள் சிந் தையில் நினைந்தவெல்லாம் முற்றப்பெற்று அப்பால் சிவகதியில் சேர்வார்கள். யாரெனில் முடிவில்லாத அசுரர்கள் வலிகெட்டழியும்படி கோபித்தருளிய திரு

நெடுவேலை ஏந்திய கரம் பொலியும் கந்தக்கடவுளின் புராணத்தைக் காதலோடும் ஓதுவோர். 4

கந்தபுராணத்தை ஓதுவோர் பலன் கூறப்பட்டது.

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்களோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்.

வானத்தில் முகில்கள் குறைவிலாது மழை பெய்யட்டும். வளங்கள்யாவும் மலிந்து சிறந்து சுரக்கட்டும். அரசன் செங்கோன்மைமுறை அரசு செய்யட்டும். குறைவில்லாது உயிர்கள் வாழட்டும். நான்கு வேதங்கள் வழியாகிய தருமங்கள் ஓங்கட்டும். நல்ல தவமும் யாகங்களும் சிறக்கட்டும். மேன்மையான சைவநீதி உலகெலாம் விளங்கட்டும். 5

ஆகத் திருவிருத்தம்–5

# 2. கடவுள் வாழ்த்து

## சிவபெருமான்

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
அருவந் தனையு முருவத்தையு மன்றி நின்றான்
ஒருவன் றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம்.

திருவமைந்த பழமையான புவனத்துயிர்களோடு தேவர்கள் தாமும் போற்றியும், பெருவந்தனை வழிபாடுசெய்தும் அறிதற்கு முடியாத நிலைகொண்டு, அருவாயும், அப்பால் உருவங்களாயும், அல்லாமல் எல்லாமாய் அல்லவுமாய் நின்றான், ஏகனாய் பூரணனாய் நிறைகின்ற ஈசன் ஒருவன். அவனுடைய அளவிடற்கரும் பெருமைகொண்ட திருவடிகளை எம் உள்ளத்துள் வைப்பாம். 1

ஊனாகி யூனு ளுயிராயுயிர் தோறுமாகி
வானாதி யான பொருளாய்மதி யாகி வெய்யோன்
தானாகி யாண்பெண் ணுருவாகிச் சராச ரங்கள்
ஆனான் சிவன்மற் றவனீழ்கழற் கன்பு செய்வாம்.

ஊனாகி, ஊனுள் உயிராகி, உயிர்கள்தோறும் இருப்பவராகி, ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், பூமி இவையாகி, சந்திரதேவனாகி, சூரியபகவானாகி, ஆணாகி பெண்ணாகி நிற்பனவும் நடப்பனவுமாகிய சராசரங்கள் ஆனான் எம் ஐயன் சிவன். அவரது அளவு காணமுடியாத பெருமைவாய்ந்த திருப்பாதங்கட்கு அன்பு செய்வாம். 2

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையும்
மறப்பது நினைப்பதும் வடிவம் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம்.

பிறப்பதும், இறப்பதும் பெயரும் செயல்களும், மறதிகொள்ளலும் அல்லது நினைத்தலும், வடிவங்களை நீக்குதலும் அல்லது ஆக்குதலும் ஆகிய இவைகள் ஒன்றும் தமக்கெய்தாத சிறப்பினை உடைய சிவபெருமான் திருவடிகளை எம் உச்சி சேர்ப்பாம். 3

பூமலர் மிசைவரு புனிதனாதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம்.

தாமரை மலர்மீது ஆசனம் கொண்ட பிரமதேவர் ஆதியாகிய கடவுளர் தாமும் உணர்தற்கரியதோர் தலைமையான தன்மை எய்தியே, வேதங்களின் முதலுக்கு ஒரு வடிவமாய் நிறைவானின் ஒப்பிலாத உவமை கடந்த அழகுடைய மலர்ப்பாதங்களை வணங்குவோம். 4

பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுளி
அங்கவர் வெருவர வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்.

தாமரை ஆசனராகிய பிரமதேவரும், நாராயணக் கடவுளும் தாம்தாமே பரம்பொருளென நினைந்து அகந்தை மேலீட்டால் தங்களில் தாங்கள் இருவரும் போர்செய்து நின்றார்கள். அவ்வாறு கோபவேகத்துடன் போர் செய்தார் இருவரும், நிலைகலங்கி அஞ்சி நீங்க அவர்நடுவே அன்று அனல் சோதியாய் எழுந்த பேரருளாளனின் பொன்மலரடிகளைப் போற்றி செய்குவாம். 5

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றுய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம்.

காண்பவன் காட்டுவான் காட்சி காட்சிப்பொருள் முதலிய திறங்களாகிய மாண்புடை செல்வராயும், வலிமை கொண்டதாய் புலன் உணர்வுக்கெட்டாத நுண்ணிய மலபந்த, மாய சம்பந்தம் பூணுதவராயும், ஆனுல் எல்லார்க்கும் நன்மையே செய்யும் கிருபாசமுத்திரமாகியும் மனம் வாக்கினுல் அறியமுடியாதபடி எங்கும் நிறைகின்ற சிவபிரானின் வெட்டவெளியில் பொலிந்தருளி அனைத்தையும் இயக்கி நிற்கும் பெருங்கூத்தின் செயலை ஏத்தித் துதித்து வாழ்வாம். 6

இக்கருத்தைக் கீழேயுள்ள பாடலில் காண்க.

வான்ஆகி மண்ஆகி வளிஆகி ஒளிஆகி
ஊன்ஆகி உயிர்ஆகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோன் ஆகி யான் எனது என்று அவர் அவரைக் கூத்தாட்டு
வானுகி நின்றுயை என்சொல்லி வாழ்த்துவனே. — திருவாசகம்.

## சிவ சத்தி

செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு மரனிட மரபின் மேவியே
அறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய
இறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

செறிந்து எங்கும் நிலவும் உயிர்கள்தோறும் திகழ்ந்து விளங்கி இருக்கும் குறைவிலா நிறைவாகிய சிவபிரான் இடப்பாகத்து தேவியாகி மரபால் அமர்ந்தருளி, அறுவகைச் சமயங்களையும் பிறவற்றையும் ஆக்கி அருளிய இறைவியாம் பார்வதி அம்மையாரின் திருமலரடிகளை இறைஞ்சி ஏத்துவாம். 7

## விநாயகக்கடவுள்

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுதலு டையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

பண்ணினுல் ஆகிய இவ்வுலகத்து நாம் எடுத்துக்கொண்ட இப்பிறவியின் தோஷங்கள் நீங்கவும், நாம் எண்ணிய பொருள் யாவும் நமக்கு எளிதில் கைகூடும்படியும், நெற்றியில் கண் உடையவராய், பெரிய யானைமுகம் பொலிின்றவராய் விளங்கும் பகவானின் மலரடிகளை, பணிந்து போற்றுவாம். 8

## வைரவக் கடவுள்

பரமனை மதித்திடாப் பங்கயாசனன்
ஒருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்.

பரம்பொருளாகிய சிவபிரானை மதித்திடாத தாமரைமலர் ஆசனராகிய பிரமதேவரின் ஐந்துதலையில் ஒன்றைக் கிள்ளி அத்தலையோட்டை பிச்சைப் பாத்திரமாக ஏந்தி மற்றைய தேவர்கள் கடவுளர்கள் உடைய இரத்தத்தோடும் அவர்களுடைய அகந்தையையும் கொண்டு அவர்கட்கு தண்டனைபுரிந்த சிறுவடிவினர் ஆகிய வைரவப் பெருமானை போற்றி செய்குவாம். 9

வெஞ்சினப் பரியழன் மீது போர்த்திடும்
அஞ்சனப் புகையென வால மாமெனச்
செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக்
கஞ்சுகக் கடவுள்பொற் கழல்க ளேத்துவாம்.

கொடுங் கோபங்கொண்ட குதிரை முகத்தில் தோன்றும் வடவை அக்கினி என்னும் நெருப்பை சூழ்ந்த இருண்ட புகைபோலவும் காட்சி தரும்படி செவ்வொளி பரந்த திருமேனிமேல் போர்த்தருளிய இரத்தினப் போர்வையை உடைய வைரவப் பெருமானுக்கு வணக்கம் செய்குவாம். (இஃது அவர் காட்சி.) 10

## வீரபத்திரக் கடவுள்

அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரும்
முடிந்திட வெருவியே முனிவர் வேதியர்
உடைந்திட மாமக மோடியத் தக்கனைத்
தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவாம்.

தேவர்கள் எல்லார்க்கும் தலைமை எய்திய தக்கன் அகந்தை மேலீட்டால் சிவபிரானுடைய முதன்மையை மாற்ற எண்ணி விஷ்ணுவைப் பொருளாகக்கொண்டு தேவரோடுகூடி ஓர் யாகம்செய்தான். அவ்வாறுகத் தக்கன் யாகசாலையைச் சார்ந்து அவிப்பாகம் உண்டிட்ட அமரர்கள் யாவரும் முடிவாகவும் அஞ்சிப் பயந்து முனிவர்களும் பிராமணர்களும் ஓடவும், பெரிய யாகம் அழியும்படி தக்கனைச் சங்காரஞ்செய்த வீரபத்திரக்கடவுளின் திருவடிமலர்களைப் போற்றுவாம். 11

## சுப்பிரமணியக்கடவுள்

இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்
பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங் கமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்.

இரும்பினுல் ஆய அரம்கொண்டு இராவி நீட்டிய கூர்மையான வேலினை உடையராய், மலையில் வாழும் வேடர்கள் புதல்வியாகிய வள்ளிநாயகி அம்மையார் முருகன் ஆணையால் அங்கு வளர்ந்தார். அவ்வாருகக் கன்னியாகிய எம் அன்னை வள்ளிநாயகியாரை முருகக்கடவுள் எய்தி, வேடரை அறியாது ஒருநாள் இரவு அம்மையைக் கூட்டிச்சென்ருர். விடிந்ததும் தம் மகளாரைக்காணுத வேடுவர் களும் தந்தையாகிய நம்பியும் தேடிச்சென்று, விற்சேவக வடிவங்கொண்டு வள்ளி நாயகியாரோடு ஒரு பூஞ்சோலையிலே எம்பெருமான் தங்கியிருப்பதுகண்டு வேடர் கள் பொருராகி அவரை உணராது போர்செய்தார்கள். அவ்வாருகிய போரிலே வேடர்களைக்கொன்று பின்னர் வள்ளிநாயகி அம்மையாரின் வேண்டுகோளுக் கிணங்கி அவர்களை எழுப்பித் தமது அருட்கோல நிசரூபத்தினைக் காட்டி அவர் கள் உணர்வுறத், தாம் வள்ளிநாயகியாரிடத்துக்கொண்ட அன்பினை அவர்களுக்கு காட்டியருளி திருப்பரங்குன்றம் என்னும் கோயிலில் அமர்ந்தருளும் குமரநாய கனைப் போற்றுவாம். 12

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மேந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம்.

உலகை அலைத்த சூரனை, அலைகள் மோதும் கடலிலே வைத்து அவன் மாமர வடிவைத் தொலைத்துவிட, அதிலும் அழியாது எழுந்து போர்செய்த சூர னின் உடலில் பாய்ந்து அவன் நெஞ்சைக் கிழித்து இருகூருக்கி ஈரலை வாயிட்டு உலகைக் காத்த வேலினைத் திருக்கரத்தேந்தி ஐவகைக் கோபுரங்கள் பொலிந் தோங்கும் கைலைமலையைவிட்டு நீங்கியருளித் திருச்செந்தூர் என்னும் பதியில் வந்தருளி வீற்றிருக்கும் குமரநாயகனைப் போற்றிசெய்வாம், 13

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரு மமலற் போற்றுவாம்.

தேவவிருட்சங்களின் சிறப்புக்கள் நிறைந்து அழகுடன் பொன்மயமாகி விளங்கியும், ஒருகால் சூரபன்மன் மகன் பானுகோபனுல் எரிக்கப்பட்டுச் சாம்ப ராகி எரிந்துபோய்க் காடாகிக்கிடந்த தேவ உலகம் பழையபடி சிறப்புடன் மேவவும், அந்தத் தேவ உலகத்தை எரித்தழித்த அசுரர் முதல்வனுகிய சூரன்

அழியவும், தாமரைமலர் வாசகராகி உலகைப் படைக்குங் கடவுளாகிய பிரம தேவரே பிரணவப்பொருளை அறியாது, அறிய ஆவலுறவும், அருளாடல் புரிந்து திருவாவினன்குடி எனும் பதியில் எழுந்தருளிய நிர்மலசோதியாகிய முருகனை வணங்குவாம். 14

நீரகத் தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடுந்
தாரகத் துருவமாந் தலைமை யெய்திய
ஏரகத் தறுமுக னடிக ளேத்துவாம்.

தருமம் தயை அன்பு இவைகளால் நிறையப்பெற்ற நெஞ்சினை உடையராய்த் தன்னை நினைக்கின்ற அடியார்கள், தங்கள் பிறவியில் படும் துயரங்கள் நீங்கி அருள் எய்தவும், எங்கள் உள்ளத்து அறிவுக்கு அறிவாகி அப்பாலுக் கப்பாலாய் நிறைந்து நமக்கெல்லாம் தலைமை எய்தியும், திரு ஏரகம் என்னும் சுவாமிமலையில் குருமூர்த்தியாய் இருக்கும் ஆறுமுகப்பிரான் திருவடிகளைப் போற்றுவாம். 15

ஒன்றுதொ ளூடலை யொருவி யாவிமெய்
துன்றுதொ ருடலைத் தொடங்கி ஐவகை
மன்றுதொ ருடிய வள்ளல் காமுறக்
குன்றுதொ ருடிய குமரற் போற்றுவாம்.

தானகத் தன்னந்தனியே நிறைகின்ற நீர்மையை நீக்கி உயிர்களும் உடலமும் உலகமும் ஆகும் வண்ணம் ஓர் பெரிய ஆடலைத் தொடங்கி, தமது உலகு ஏழும் காத்தாடும் அறியப்படாத ஆடலை ஐந்துவகையாகிய சபைகளிலே நிறைந்துநின்று காட்டிய அப்பன் எம் சிவபிரான், கண்குளிரக்கண்டு ஆசை கொள்ள உலகெங்கும் நின்ற மலைத்தலமெல்லாம் ஆடியருளிய குமரதேவனைப் போற்றி செய்வோம். 16

எழமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

தினையும் கிழங்கும் சீர் பெற்று ஓங்கும் புனத்தில் காவல் கொண்ட எம் இறைவியாகிய வள்ளிநாயகியார் முன்பு தமது கிழப் பண்டார வேடங் கொண்ட மூவாமுதுமை இன்பம் எய்துமாறு வள்ளிநாயகியார் பொருட்டாகத் தமது தமையனாகிய விநாயகப் பெருமானை மகிமைமிக்க முதிய ஆனைவடிவினராக தம்மை நீங்கி செல்லும் வள்ளி நாயகியார் திருமுன்பாக வருதல் வேண்டியவராய், பழமுதிர் சோலை எனும் பதியில் கோயில் கொண்ட எம் பன்னிருகை வேலவரை பணிதல் செய்வோம். 17

ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியிற்
கூறுசீர் புனைதரு குமர கோட்டம்வாழ்
ஆறுமா முகப்பிரா னடிகள் போற்றுவாம்.

உலகம் அழிவுறு காலத்தும் அழிவில்லாது முடிவின்றி மாறுபாடிலாது இருக்கப் பெறும் வளங்கள் நிறைந்த காஞ்சி என்னும் பதியில் பெரியோர்களால் கூறப்படுகின்ற சிறப்புக்கள் அத்தனையும் நிறையப்பெற்ற ''குமரகோட்டம்'' என்னும் பெயர் கொண்ட கோயிலில் வாழ்கின்ற ஆறுமுகப் பெருமானின் திருவடிகளைப் போற்றி செய்குவாம். 18

## திருநந்தி தேவர்

ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூழ்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்.

வியாசமுனிவர் சிவபிரான் அருளால் பூமியில் தோன்றி உலகம் உய்யும் பொருட்டு ஈசன் புகழாகிய சிவபுராணங்கள் பத்தையும் ஈசன் அருள் பெருகும் பொருட்டு ஓதினர், அவற்றோடு செம்மையான வேதங்கள் ஆகமங்கள் பலவற்றையும் உணர்ந்து தெரிந்தார், அவ்வண்ணமாகி தெளிவுற்றிருந்து சிவனே பரம்பொருள் என உணர்ந்தும் விஷ்ணு பெருமானுக்கு நாலு புராணமும் பிரமதேவருக்கு இரண்டும் அக்கினிக்கு ஒன்றும் சூரியக் கடவுக்கு ஒன்றுமாக வேறு எட்டினையும் ஓதினர். இந்நிலையில் சிலமுனிவர் வியாசமுனிவரை அடைந்து எல்லாவற்றையும் ஓதினீர் பரம்பொருள் யாரெனக் கேட்டார்கள். அப்போது வியாசமுனிவர், மாயை அவரையும் சேர்ந்து மயக்க மயங்கி காசியில் சென்று தன் இரு கைகளையும் நீட்டி விஷ்ணுவே பரம்பொருள் எனச் சபதம் செய்தார். அவ்வாறாக அகந்தை மேலீட்டினால் நீட்டியகையோடும் நின்ற வியாசரைக் கண்ணுற்று நந்தியெம்பெருமான், வியாசனே! சிவபிரான் அருளால் தோன்றி, அருளால் உணர்ந்து, அருளால் வாழ்ந்து வந்த நீ அகந்தை மேலீட்டால் விஷ்ணுவே பரமென பெரியோர்முன் கைநீட்டினாய் நீட்டியகை மடக்காமல் போகக் கடவது எனக் கூறியருளி அவர் கைகளை வழங்காதவாறு செய்தார். அவ்வாறாகிய நந்தியெம்பெருமானின் திருவடிகளை உச்சிமேற் போற்றுவாம். 19

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

பண்டைவல் வினையினாற் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றருளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்.

முன்னைப் பிறவிகளில் செய்த தீவினைகளின் மேலீட்டால் இப்பிறவியிலே சணுணாகிப் பிறந்து உலகில் சிறப்பாக அணிய பல உடைகள் இருந்தும் பாயை உடையாகக்கொண்டு பொய்பேசி மனம் மயக்கி உலகத்து மக்களை தீய நெறிக்கண் வழிப்படுத்துவர் சமண சமையத்தவர்கள். அவர்கள் ஓர் காலத்து அருள் பூமி எனப்படும் பாண்டிநாட்டு மக்கள் அனைவரையும் பாண்டிய அரசனு கிய கூன்பாண்டியனையும் தம் சமயத்துச்சேர்த்து, கொல்லாமை செய்யோம் என வெளியில் போதித்து கொடுமையைச் செய்வார்கள்; இவ்வாறு நிலைகொண்ட பாண்டி நாட்டில் பாண்டிய அரசனின் மனைவி மங்கையர்க்கரசி அம்மையாரும் குலச் சிறையார் எனும் மந்திரியாருமே சைவர்களாக வாழ்ந்தும், சமணர்களின் கொடுமை கண்டு பொறாராகி திருஞானசம்பந்த சுவாமிகளை அங்கு வரும்படி வேண்ட அவர் அங்கு சென்றார். சென்ற எம் சுவாமிகள் தங்கிய மடத்திற்கு சமணர் பொறாமையில் தீமூட்ட, அத்தீயை சம்பந்த சுவாமிகள் பாண்டிய அரசனுக்கு வெப்பு நோயாகும்படி மாற்றினர். பாண்டியன் வெப்பு நோய் வரப் பெற்று மருந்து மந்திரங்களால் தீராமை கண்டு தமது மனைவி மங்கையர்கரசி அம்மையார் தூண்டுதலால் சம்பந்த சுவாமிகளை அங்கு வருவித்து தம் நோய் நீங்கும்படி அருள் செய்ய வேண்ட அப்போது திருநீறு கொண்டு சுவாமிகளின் பாண்டியனின் வெப்பு நோய் ஒழித்தார்; ஒழித்த தன்மை கண்டு வெட்கி நாண முற்ற சமணர் சம்பந்த சுவாமிகளை நெருப்பிலும் நீரிலும் தத்தமது சமய உண்மைகளை எழுதிய ஏடுகளை இட்டு வாதம்செய்ய அழைத்தார்கள். அவ்வாறு கிய வாதத்திலே முதலில் எரிகின்ற நெருப்பிலே ஏடிட்ட பொழுது சமணர் இட்ட ஏடு எரிந்து சாம்பராயது. சம்பந்த சுவாமிகளின் ஏடு பச்சையாகி விளங்கக் கண்டும் பின்னரும் சமணர் சம்பந்த சுவாமிகளை நீரிலே ஏடிடும்படி தமது உயிரையே பந்தயமாக வைத்து அழைத்தார்கள். அதிலும் சமணர்கள் இட்ட ஏடு ஆற்றிலே அள்ளுண்டு சென்றது; சுவாமிகள் இட்ட ஏடு நீரிலே எதிர்த்தோடி சிவனே பரம் பொருள் எனக் காட்டியது; ஆகவே இல்லாத ஒரு தெய்வம் பேசிய சமணர் யாவரும் சபதப்படி தாமே கழுமரமேறி தொலைந் தார்கள். இதைக்கண்ட மதுரையில் உள்ளார் அனைவரும் தங்கள் பிழை உணர்ந்து திருநீறு அணிந்து சிவன் உண்மை தெளிந்தார்கள். ஆகவே மதுரை யில் தங்கி இருந்து திருநீற்றின் ஒளிவிளங்கச் செய்து, அதுமட்டுமல்லாமல் தமி ழுக்கு உயிரெனப்படும் மறையாகிய தேவாரங்களைப் பாடி இறைவன்மேல் தமிழ் இசை பெருக்குதலே இச்சையாகிய திருஞானசம்பந்த சுவாமிகளின் மெய்மையான மலர்போன்ற திருப்பாதங்களை கைகூப்பி வணங்குவாம். 20

## திருநாவுக்கரசு சுவாமிகள்

பொய்யுரை நூல்சில புகலும் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றேணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தா டொழுது போற்றுவாம்.

பொய்யாகிய இல்லாத் தெய்வத்தன்மை பேசும் சமணர்கள் திருநாவுக்கரசு சுவாமிகளை தம்பக்கமாகச் சேர்த்தார்கள். ஆனல் திருநாவுக்கரசு சுவாமிகள் சூலை நோயினல் ஈசன் அருள் எய்தி உண்மை உணர்ந்து சமணப்படுகுழியினின்றும் தப்பினர். அவர்மீது பொருமைகொண்ட சமணர்கள் அவரைக் கல்லோடு கட்டிக் கடலிலே போட்டார்கள். போட்டபோது கடலிலே ஆழுகின்ற எம் சுவாமிகள் தமது சூலை நோய் நீக்கி ஆண்டருளிய பெருமானை நினைந்து,

கற்றுணை பூட்டி ஓர் கடலுள் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே

எனப்பாடி தம்மை ஆழும்படி கீழிழுத்துச் சென்ற கல்லே ஆழாது தோணி போல மிதந்து அவரை மேலேதாங்கிக் கரையேற்ற தூய்மையான ''சொற்றுணை வேதியன்'' எனச் சொல்ல வல்ல ''நாவுக்கு அரசனே'' என ஈசனே பட்டங் கொடுத்த திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிகளைத் தொழுது போற்றுவாம். 21

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவண்
உறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதால்
இறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலொன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்.

முன்னெரு காலத்து ஓர் நாள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம்தோழராகிய சேரமான் பெருமாள் நாயனரிடம் சென்ருர். செல்லும் வழியில் வீதியின் எதிரெதிராக இருந்த இரண்டு மாளிகைகளில் ஒன்றில் மங்கல ஓசையும், மற்றென்றில் அழுகுரல் ஓசையும் கேட்கப்பட்டது. சுந்தரர் நின்றுரை அப்படி நிகழ்வதற்கு காரணம் வினவ அவர்கள் சொன்னர்கள் ஐயா இந்த இரண்டு மாளிகைகளிலும்வசித்த இரண்டு பிராமணப் பிள்ளைகள் ஒத்த ஐந்து வயதினர், குளத்து நீராட சென்றபோது ஒரு முதலை ஒரு பிள்ளையை பிடித்துக்கொண்டு ஓடிவிட, மற்றப் பிள்ளை தப்பி வந்துசேர்ந்தது. இது நிகழ்ந்து பல காலமாக, இப்போ தப்பி வந்த பிள்ளைக்கு உரிய காலத்து பூநூல் அணிகிறூர்கள். அதுவே அந்த வீட்டில் மங்கல ஓசை கேட்கிறது. அதே நேரத்தில் பிள்ளையை இழந்த அந்தத் தாய் கவலை மிகுதியால் அழுகிருள். அதுவே இந்த ஓசை எனச் சொல்லும் அளவில் அழுது கொண்டிருந்த பிராமணரும் மனைவியும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வந்தார் எனக் கேள்விப்பட்டு ஓடிவந்து அவர் மலர்க்காலிலே தாழ்ந்து வணங்குவாராயினர். வணங்குவாரை சுவாமிகள் நோக்கி இன்பமைந்தனை இழந்தீரோ என்ன, அவர்கள் சொன்னர்கள் பெருமானே முன்பு நிகழ்ந்தது அது; ஆனல் தேவரீருடைய திருவடிகள் வணங்க வேண்டுமென்று முன்பெல்லாம் பல நாள் ஆசைகொண்ட எம் அன்பு பழுதாகாமல் இவ்விடம் எழுந்தருளப் பெற்ரேம் என மீண்டும் வணங்க சுவாமி அங்கு சொல்கிருர் ''நான் வந்தணைந்ததற்கு சிந்தை மகிழ்ந்தார் இந்த பிராமணரும் அவர் மனைவியும், தம் புதல்வன் இழந்த துயரம் மறந்து''. ஆனமையால் அந்த முதலை வாய் நின்றும் பிள்ளையை அழைத்துக் கொடுத்தே செல்வேன் என்று குளக்கரையை விசாரித்து அங்கு சென்ருர். சென்றபோது அங்கே குளம் வற்றிப்போய் இருந்தது. ஆகவே வறண்டு போன குளம் முன்நிரம்பி, நிறைய, அங்கிருந்த முதலையும் வந்து உதிப்ப அதுவல்லாமல் இறந்து போன பிள்ளை முதலை வயிற்றில் சென்ற ஆண்டுகள் நிரம்பி வளர்ந்து இப்போதிருந்தால் உற்ற பருவம் வந்து எய்தி முதலைவாயினின்றும் கரையேறித் தோன்றவும் தெய்வப் பாடல் ஒன்று அன்று சொல்லி முதலைவாய்ப் பிள்ளையை மீட்டருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடிகள் போற்றுவாம். 22

### மாணிக்கவாசக சுவாமிகள்

கந்தமொ டுயிர்படுங் கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர் தியங்க மூகராய்
முந்தொரு மூகையை மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை வணக்கஞ் செய்குவாம்.

பஞ்சகந்தங்களும் கூடிக் கெடுதலே முத்தி என்று இருட்டில் தடவுவார் போல சிந்தை கொண்டு சீலம் பேசி சீலம் அறியாத புத்தர்கள் அனைவரும், உண்மை ஒளி வடிவின் நாமமாகிய தில்லை அம்பலம் எனும் வார்த்தை கேட்டு பொறுராகி தில்லை சிதம்பரத்திற்கு, தில்லை வாழந்தணர்களோடு வாதிடும்படி அங்கு சென்றார்கள். சென்ற அவர்கள் யாவரும் மாணிக்கவாசக சுவாமிகளோடு வாதாடும் பொழுது சிலவிடங்களில் சிவ நிந்தனை செய்த படியால், மாணிக்க வாசக சுவாமிகளால் ஊமைகளாகச் சபிக்கப் பெற்று ஊமைகளாகவும் ஊமை யாக இருந்த இலங்கை அரசன் மகள் ஊமைநீங்கிப் பேச வல்லவளாகவும் அல்லா மலும் தில்லைவாழ் அந்தணர்கள் எல்லாம் திருவாசகத்தின் பொருள் கேட்ப அவர்களை எல்லாம் அழைத்துச்சென்று கனகசபையிலே போய் முன்நின்று, இவர் தான் பொருள் எனக் கைகாட்டிப் பின்னர், திடீரென நேர்சென்று ஈசன்சபை உள்சென்று தம்வடிவைப் பின் யாவரும் அறியாது ஈசனோடு கலந்த பெருமா னாகிய மாணிக்கவாசகரின் திருவடிகளை வணங்குவாம். 23

### திருத்தொண்டர்கள்

அண்டரு நான்முகத் தயனும் யாவருங்
கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவாய்
எண்டகு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

தேவர்களும் நாலு தலைகளை உடைய பிரமதேவரும் மற்றும் யாவரும் காண்பதற்கு அரியதோர் காட்சி பேறதாய் நிறைகின்ற மேன்மை நிறைந்த சிவ பிரான் திருவடி அடைந்து வாழ் வெய்திய திருத் தொண்டர் தம் பாதமலர் தொழுது போற்றுவாம். 24

### சரசுவதி

தாவறு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதொ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம்.

குற்றம் நீங்கிய உலகெலாம் படைக்கின்ற நான்கு முகங்களை உடைய பிரம தேவரின் துணைவியாய்ச் சகல உலகெங்கும் செறிந்து விளங்கும் உயிர்கள் நாவு கள்தோறும் இருந்திடுகின்ற இறைவியாகிய சரஸ்வதிதேவியின் மலர்போன்ற திருவடிகளை எம் முடிமீது புனைந்து போற்றுவாம். 25

ஆகத் திருவிருத்தம் — 30.

# 3. அவையடக்கம்

இறைநில மெழுதுமு னிளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமால்
அறுமுக முடையவோ ரமலன் மாக்கதை
சிறியதோ ரறிவினேன் செப்ப நின்றதே.

ஓர் சிறுபிள்ளையானது தான் மேன்மையான இப்பூமியில், மண்ணில் எழுதி எழுதப் பழக ஆரப்பிச்குமுன் தான் எல்லாம் அறிந்து விட்டேன் என எண்ணிக் கொண்டு ஓர் பாடல் நிறைந்த காவியத்தைச் செய்வேன் என எண்ணி அதற் கான முயற்சிசளை, அப்பிள்ளை முயன்றல் எப்படி இருக்குமோ, அதுபோலத் தான் இருக்கும், ஆறுமுகம் உடையவராய், மலப்பற்று இல்லாதவராய், நிறைந்து நிற் கின்ற பெருமானுடைய இந்தப் பெரிய கதையை அற்ப அறிவு உடையேனாகிய அடியேன் சொல்லும் படியாக எடுத்துக் கொண்ட எனது செயலும். ஆகவே சொல்லால் மனத்தால் அளந்தறிய முடியாத பெருமானின் புராணத்தை, சிறிய அறிவுடையனாகிய யான் எப்படிச் சொல்வேன் எனக் கூறினர். 1

## வேறு

ஆன சொற்றமிழ் வல்ல வறிஞர்முன்
யானு மிக்கதை கூறுதற் கெண்ணுதல்
வான கத்தெழும் வான்கதி ரோன்புடை
மீனி மைப்ப விரும்பிய போலுமால்.

நல்ல சொல் இலக்கணம், பொருள் இலக்கணம் முதலியன கற்றுத் தெளிந்த அறிவாளிகள் முன்னிலையில், யானும் இந்தக் கதையைக் கூறுதற்கு எண்ணும் தன் மையானது, எப்படி ஆகிறது எனில், ஆகாயத்திலே தோற்றிவரும், சூரியபக வான் பக்கராக ஓர் நட்சத்திரம் தோன்றி மின்னி நிற்பதற்கு விருப்பம் கொண் டது போலவும் ஆகும். ஆகவே கற்றறிந்த அறிவாளிகள் முன்னிலையில் சிறப் பாகச் சொல்லும் தன்மையிலேன் என்றார். 2

முன்சொல் கின்ற முனிவட நூறெரீஇத்
தென்சொ லாற்சிறி யேனுரை செய்தலான்
மென்சொ லேனும் வெளிற்றுரை யேனும்வீண்
புன்சொ லேனு மிகழார் புலமையோர்.

முன்னே சூதமுனிவன் வட மொழியில் சொன்ன புராணங்களைக் கற்றுக் கொண்டு தென் சொல்லாகிய தமிழிலே, அடியேனும் இந்த புராணத்தை சொல்லலாச், என்னுடைய பாடல்கள் மென் சொல்லால் ஆக்கப்பட்டாலும் அல்லது நெற் சப்பி போன்று பொருள் தாக்கம் இல்லாதிருந்த போதிலும் அல் லது வீண புன்சொல் வார்த்தையாக இருந்தாலும், அறிவுடைப்புலமை உள் ளோர் இகழார்கள். (வியாச முனிவர் 18 புராணங்களை வகுத்தார். அவர்பால் உபதேசம் பெற்ற சூத முனிவர் உலகில் இதனைச் சொன்னர்.)

சிந்து மென்பு சிரம்பிறை தாங்கினோன்
மைந்த னாதலின் மற்றவன் றானுமென்
சந்த மில்லுரை யுந்தரிப் பானெனாக்
கந்த னுக்குரைத் தேனிக் கதையினை.

தமது திருச்சடையின் மீது கங்காநதியினையும், எலும்பையும் தாங்கியருளும் பேரருளாளராகிய சிவபிரான் திருக்குமாரன் ஆனபடியால் எம்முருகப்பெருமானும், சிறப்பில்லாத இப்பாடல்களையும் தாங்கிக் கொள்வார் எனும் நம்பிக்கையால், கந்தக் கடவுளுக்கே எனது இக்கதையை உரைத்தேன் அடியேன். 4

வெற்றெ னத்தொடுத் தீர்த்து வெளிற்றுரை
முற்று மாக மொழிந்தவென் பாடலிற்
குற்ற நாடினர் கூறுப தொல்லைநூல்
கற்று ணர்ந்த கலைஞரல் லோர்களே.

சாதாரணமாக, நல்ல ஆழ்ந்த அறிவின்றி, ஏதோவகையாக சிறப்புக்கள் இல்லாது அமையுமாறு பாடிய எனது பாடலில் குற்றம் நாடுபவருக்கு நான் சொல்லுவது ஒன்று உண்டு. அது என்னவெனில் என் பாடலின் சிறப்பின்மை உணர்ந்தும், நீங்கள் குற்றம் காணமுயன்றால் அது நீங்கள் நல்ல முதிய அறிவுடை நூல்களைக் கற்று உணர்ந்த கல்விமான்கள் அல்ல என்றுதான் காட்டும் என்பதேயாம். 5

குற்ற மேதெரி வார்குறு மாமுனி
சொற்ற பாவினு மோர்குறை சொல்வரால்
கற்றி லாவென் கவிவழு வாயினும்
முற்று நாடிவல் லோருய்த் துரைக்கவே.

குற்றம் காண்பதே இயல்பாக உடையார்கள், தமிழ்த் தெய்வமெனப்படும் அகத்திய முனிவன் சொன்ன பாடலிலும் குற்றம் காண்பார்கள். ஆனபடியால் எனது பாடல்களைப்பற்றி, அறிவுடையோருக்கு நான் சொல்வது என்னவெனின், என் பாடல்கள் பிழை உள்ளனவாய் இருந்தால், அவைகள் யாவற்றையும் நீங்கள் கண்டுபிடித்துத் திருத்திக்கொண்டு உரைப்பீராக எனக் கேட்டுக்கொள்கிறேன். 6

## வேறு

குறைபல மாமதி கொளினு மன்னதால்
உறுபய னோக்கியே யுலகம் போற்றல்போற்
சிறியவென் வெளிற்றுரை சிறப்பின் றாயினும்
அறுமுகன் கதையிதென் றறிஞர் கொள்வரே.

சந்திரனிடத்திலே தேய்தல், வளர்தல், மேனியில் கறுப்பு இவைகள் பல குறைகள் இருந்தாலும் என்றும் பூரணநிலவு தராமல் மாதத்தில் ஒருநாள் மட்டும் பூரணனாகக் காணப்பட்டு விளங்குங்கால், அவனால் உலகிற்கு வரும்

பயனை உணர்ந்து, உலகம் சந்திர தேவனைப் போற்றல்போல, சிறியேனுடைய இந்த வெறும் பாடல்கள் சிறப்பின்றாயினும் ஆறுமுகப் பெருமானுடைய கதை இது என்பதை உணர்ந்து அறிவாளிகள் என்னுடைய இந்த உரையை ஏற்றுக் கொள்வார்கள். 7

''உரைப்பார் உரை உகந்து உள்கவல்லார் தங்கள் உச்சியாய்'' (தேவாரம்)

நாதனு ரருள்பெறு நந்தி தந்திடக்
கோதிலா துணர்சனற் குமரன் கூறிட
வாதரா யணமுனி வகுப்ப வோர்ந்துணர்
சூதனே தியதுமூ வாறு தொல்கதை.

நாதனாகிய சிவபிரான் அருள்பெறும் நந்தியெம்பெருமான்பதினெண் புராணங்களை உணர்ந்து அருள் செயக் கேட்ட சனற்குமாரர் எனும் முனிவன் அவைகளை நன்குணர்ந்து கூறீட அதை அருளால் வியாசர் என்னும் முனிவர்உணர்ந்து வகுத்து வைப்ப, அவற்றைச் சூதனென்னும் முனிவன் ஓர்ந்துஉணர்ந்து ஓதினன்: பதினெட்டு மிகப் பழமையான இப்புராணங்களை. 8

சொல்லிய புராணமாந் தொகையு ளீசனை
அல்லவர் காதைக ளனையர் செய்கையுள்
நல்லன விரித்திடு நவைகண் மாற்றிடும்
இல்லது முகமனு லெடுத்துக் கூறுமே.

சொல்லப்பட்ட பதினெட்டுப் புராணமாம் இந்தத் தொகையில் ஈசன் ஒருவனாகிய சிவபிரானுடைய கதைகள் மட்டுமல்லாது வேறுகடவுளர் கதைகளும் இருக்கின்றன. அப்படியாயினும் ஈசன் அல்லாத மற்றையோரைப் பற்றிய புராணங்களிலே அந்தந்தக் கடவுள்களின் குறைபாடுகளை நீக்கிவிட்டு, சிறப்புக்களை மட்டுந்தான் சொல்லின. அல்லாமலும் அத்தக்கடவுளர் இடத்தே இல்லாத சிறப்புக்களை முகமனினால் எடுத்து அக்கதைகள் கூறின. 9

பிறையணி சடைமுடிப் பிரான்றன் காதைகள்
இறையுமோர் மறுவில யாவு மேன்மையே
மறைபல சான்றுள வாய்மை யேயவை
அறிஞர்க ளுடியே யவற்றைக் காண்கவே.

ஆனால் இளம்பிறை அணிந்த சடையோடும் பொலியும் சிவபெருமானுடைய கதைகளில் ஓர் இறையளவு தானும் மாறுபாடுகள் இல்லை. எல்லாம் மேன்மை உடையன. இதை யாம் மட்டும் சொல்லவில்லை, வேதங்களிலே சொல்லிய பல வற்றையே எம் பிரானுடைய கதைகளின் மேம்பாட்டுக்குச் சான்றாகக் காணலாம். அவை யாவும் உண்மையே. இந்த உண்மைகளை அறிவாளிகள், எம்பிரான் கதைகளைப் படித்துணர்ந்து, வேதங்கள் சிவபெருமானைப்பற்றிக் கூறியவற்றையும் உணர்ந்து உண்மைகளைத் தெளிந்து கொள்க. 10

புவியின ரேனையர் புராணந் தேரினுஞ்
சிவகதை யுணர்கில ரென்னிற் றீருமோ
அவர்மய லரசனை யடைந்தி டாரெனில்
எவரெவ ராக்கமு மினிது போலுமால்.

இப்பூமியில் உள்ளார் எவராயினும்சரி சிவபிரானுடைய கதைகள் அல்லாத வேறு கடவுளரின் கதைகளை எவ்வளவு தூரம் கற்றாலும் உணர்ந்தாலும் அவர்கள் சிவகதை உணர்ந்தாலொழிய தங்கள் மனக்கவலை, மன இருள் முதலிய துயரங்களை நீக்குவாரோ, அல்லது அவர் மாயப்பந்தங்கள் அகலுமோ? அல்லவே. இது எதுபோல என்றால் அரசன் இல்லாவழி குடிகள் போலவே இருக்கும்.

இக்கருத்தைக் கீழே உள்ள திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரத்தில் காண்க.

வேதமுதல்வன் முதலாகி விளங்கி வையம்
ஏதப்படாமல் உலகத்தவர் ஏத்தல் செய்ய
பூதமுதல்வன் முதலே முதலாகப் பொலிந்த
சூதன் ஒலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே

எனச் சம்பந்தசுவாமிகளும் கூறியருளி சிவபுராணமகிமையைக் கூறியருள்கிறார். 11

மங்கையோர் பங்குடை வான நாயகற்
கிங்குள பலபுரா ணத்துள் எஃகவேற்
புங்கவன் சீர்புகழ் புராண மொன்றுள
தங்கதி லொருசில வடைவிற் கூறுகேன்.

உலக முதல்வியாகிய பிராட்டியை இடப்பாகத்துஉடைய சிவபிரானின் இந்தப் புராண காதைகளிடை, கூரிய எஃக வேலை ஏந்திய திருக்கரத்தை உடைய முருகப்பெருமான் சிறப்புக்களைக் கூறும் பகுதியும் ஒன்று உண்டு. அந்தப் பகுதியில் சிலவற்றை இங்கு ஒழுங்காக யான் கூறுகிறேன். 12

புதுமயி லூர்பரன் புராணத் துற்றிடாக்
கதையிலை யன்னது கணித மின்றரோ
அதுமுழு தறையவெற் கமைதற் பாலதோ
துதியுறு புலமைசேர் சூதற் கல்லதே.

என்றும் புதுமையோடு விளங்கும் மயில் மீது ஏறியருளிவரும் பெருமான் புராணகதையிலே உற்பவியாத கதைகள் வேறிலை. அவருடைய புராணகதைகள் எவ்வளவு எனவே கணக்கிட முடியாது. அவை முழுவதும் சொல்ல எனக்கு முடியுமோ! முடியாது. எல்லாராலும் போற்றப்படுபவரும் புலமை மிக்கவருமாகிய சூதமுனிவர் ஒருவர்க்குத்தான் அவ்வாறு எம்பெருமானுடைய சரித்திரங்களை எடுத்துக் கூறும் ஆற்றல் உண்டு. 13

காந்தமா கியபெருங் கடலுட் கந்தவேள்
போந்திடு நிமித்தமும் புனிதன் கண்ணிடை
ஏந்தல்வந் தவுணர்கள் யாரு மவ்வழி
மாய்ந்திட வடர்த்தது மற்றுங் கூறுகேன்.

சிவபுராணங்களில் ஒன்றாகிய காந்தபுராணம் என்னும் கடல் போன்ற பெரிய புராணத்தில் முருகப் பெருமானுடைய சிறப்புக்கள் கூறும் பகுதியிலே, ஆறு முகப்பிரான் திரு அவதாரம் செய்யவேண்டியமைக்கு இங்கு உலகில் இருந்த நிமித்தமும், (அதாவது அசுரர் தோற்றி சிவபிரான் வரத்தால் தேவர்களை அடிமைகளாக்கி மீளாத சிறை வைத்து துன்புறுத்தியது) அவ்வாறாக, தேவர் சிறை மீட்க, எங்கள் முருகப் பெருமான் சிவபிரான் நெற்றிக்கண்ணில் வந்து தோன்றி அவ்வழியாகக் கொடிய அசுரர்கள் மாண்டு போகும்படி சங்காரம் செய்ததும் இன்னும் மற்றவைகளும் கூறுகேன். 14

வேறு

ஏதி லாக்கற்ப மெண்ணில சென்றன
ஆத லாலிக் கதையு மனந்தமாம்
பேத மாகுமப் பேதத்தி னுள்விரித்
தோது காந்தத்தி னுண்மையைக் கூறுகேன்.

இவைகள் நடந்து குறைவில்லாத கற்பங்கள் எத்தனையோ எண்ணற்றன சென்றுவிட்டன, ஆனதால் இந்தக் கதையும் அனேகமாகவே இருக்கும். ஆகவே கால நிலையால் அக்கதைகள் அநேக பேதங்களாகவே இருக்கும். அப்படியாயினும் காலங்களுக்கேற்ப கதைகள் வேறுபாடாக பேதித்திருப்பினும், அப்பேதங்களுள் விரித்து ஓதப்படும் காந்தம் என்னும் புராணத்தில் உண்மையினை இங்கு கூறுகிறேன். 15

முன்பு சூதன் மொழிவட நூற்கதை
பின்பி யான்றமிழ்ப் பெற்றியிற் செப்புகேன்
என்ப யன்னெனி லின்றமிழ்த் தேசிகர்
நன்பு லத்தவை காட்டு நயப்பினால்.

முன்னே சூதமுனிவன் வடமொழியிலே சொன்ன இந்த நூலின் கதையைப் பின்பு யான் இப்பொழுது தமிழினாலே செய்கிறேன். என்ன பயனாகும்படி செய்கிறீர் என எனைக் கேட்டால், நல்ல தமிழ் அறிவு பெற்றுக் குரவர்போல் விளங்கும் பெரியோர் அறிவிலே இதனையும் காட்டிவைக்க வேண்டும் என்னும் ஆசை அன்றி வேறில்லை. 16

தோற்ற மீறின்றித் தோற்றிய சூர்ப்பகைக்
கேற்ற காதைக் கெவன்பெய ரென்றிடின்
ஆற்று மைம்புலத் தாறுசென் மேலையோர்
போற்று கந்த புராணம தென்பதே.

தோற்றமும் முடிவும் இல்லாதே தோன்றியளிருயவரும் அசுரர்களின் பகைவராய் இருக்கின்ற எம்பெருமானுடைய இந்தக் கதைக்கு ஏற்றதொரு பெயர் எது எனக் கேட்டால், ஐந்து புலன்கள் வழி செல்லாது புலன் அடக்கம் பெற்று இறைவன் அருள் நாடும் பெரியோர்களால் போற்றப்படும் ''கந்தபுராணம்'' என்பதேயாகும். 17

பகுதி கொண்டிடு பாக்களி னத்தினுண்
மிகுதி கொண்ட விருத்தத் தொகைகளால்
தொகுதி கொண்டிடு சூர்கிளை சாய்த்தவன்
தகுதி கொண்ட தனிக்கதை சாற்றுகேன்.

பல்வேறு பகுதிகளாகக் காணப்படும் வேறு வேறு பாடல் இனங்கள் உள. அவற்றிலே சிறப்பாகிய விருத்தப்பாடல்களால், தொகுதியாக எங்கும் பரந்து துயர் செய்த அசுரர் கிளைகளை வேரோடு அழித்த ஆறுமுகப்பிரானின், தகுதியை உடைய இந்த தனிக்கதையாகிய இப்புராணத்தைச் சொல்லுகிறேன். 18

செந் தமிழ்க்கு வரம்பெனச் செப்பிய
முந்து காஞ்சியின் முற்றுணர் மேலவர்
கந்த னெந்தை கதையினை நூன்முறை
தந்தி டென்னத் தமிய னியம்புகேன்.

செந்தமிழ் வளர்ச்சிக்கு எல்லை எனச் சிறந்து விளங்கிப் பல புலவர்களால் பாராட்டப் பெற்ற காஞ்சி என்னும் பதியில் வாழ்கின்ற முழுதும் உணர்ந்த பெரியோர்கள், கந்தக் கடவுளாகிய எங்கள் பெருமானின் கதையை நீ புராணமாகப் பாடித் தந்திடுவாயாக என்னைக் கேட்டுக்கொண்டபடி அடியேன் இதை இங்கே சொல்கின்றேன். 19

வெம்பு சூர்முதல் வீட்டிய வேற்படை
நம்பி காதையை நற்றமிழ்ப் பாடலால்
உம்பர் போற்ற வுமையுடன் மேவிய
**கம்பர் காஞ்சியிற் கட்டுரைத் தேனியான்.**

கொடுங் கோபங்கொண்டு உலகை அலைத்த அசுரர் முதல்வனான சூரபன்மனை சங்கரித்த வேலேந்திய பெருமானுடயை இந்தக் கதையை நல்ல தமிழ் பாடல்களினாலே தேவர்கள் யாவரும் தினமும் போற்றும்படி உலக மாதாவாகிய காமாட்சி அம்மையாரோடும் வீற்றிருந்து அருளுகின்ற ஏகாம்பர ஈசனுடைய காஞ்சியம் பதியில் இருந்து அனைவர்க்கும் அறிய உரைத்தேன் நான். 20

ஆகத் திருவிருத்தம் — 50.

# 4. ஆற்றுப்படலம்

செக்கரஞ் சடைமுடிச் சிவனுக் கன்பராய்ச்
தக்கவ ரறிஞர்க டவத்தர் செல்வராய்த்
தொக்கவர் யாரும்வாழ் தொண்டை நாட்டினின்
மிக்கதோ ரணியிய லதுவி ளம்புகேன்.

சிவந்த திருச்சடை முடியை உடைய சிவபிரானுக்கு அன்பராயும், தக்கவராயும், அறிஞராயும், தவத்தராயும், செல்வராயும் விளங்கித் திகழ்பவர்கள் யாவரும் வாழ்கின்ற தொண்டை நாடு என்னும் நாட்டினில், சிறந்தோங்கி விளங்கும் மேம்பாடாகிய அணி அலங்காரங்களைப் பற்றிய இயல்புகளை இப்போது கூறுகிறேன். 1

சுந்தர மாயவன் றுயிலு மாழிபோல்
இந்திர னூர்முகி லியாவு மேகியே
அந்தமில் கடற்புன லருந்தி யார்த்தெழீஇ
வந்தன வுவரியின் வண்ண மென்னவே.

பேரழகு மிக்க நாராயணக் கடவுள் யோக நித்திரை செய்கின்ற பாற்கடலைப் போல், இந்திர தேவனுடைய ஊர்திகள் எனப்படும், முகில்கள் யாவும், திரண்டு எழுந்து சென்று, கடலிலே படிந்து, நீரைப் பருகின. பருகிய பின்னர் இடி முழக்க ஆரவாரத்தோடும் முகில்கள் மேலெழுந்தன. எழுந்துவரும் முகில்களைப் பார்த்தால் கருங்கடல் வண்ணம் போல கருமையாக இருந்தன. 2

பார்த்தென துலகடும் பரிதி யென்னொடும்
போர்த்தொழில் புரிகெனப் பொங்கு சீற்றத்தால்
வேர்த்தெனப் பனித்துவெள் ளெயிறு விள்ளநக்
கார்த்தென வேதடித் தசனி கான்றவே.

அவ்வாறான முகில்கள் எழுந்து சூரியதேவனை நோக்கி நீ என்னோடும் போர் செய்வாயா வா, என அழைப்பன போல, பற்கள் தோன்ற கோபத்தினால் சிரிப்பனபோலவும், கோபமிகுதியினாலே மேனி வேர்ப்பனபோலவும், அந்த முகில்கள் மின்னி, இடித்து, பின்னர் அவை நீர்த் துளிகளாகத் திரண்டு நந்தி என்னும் மலை நோக்கிச் சென்றன. 3

சுந்தர வயிரவத் தோன்றன் மீமிசைக்
கந்தடு களிற்றுரி கவைஇய காட்சிபோல்
முந்துறு சூன்முகில் முழுது முற்றுற
நந்தியம் பெருவரை மீது நண்ணிய.

சுந்தரமாய், அழகு பொலிவதாய் விளங்கும் திருமேனிகொண்ட வைரவக் கடவுள் தமது திருமேனிமேல் யானை உரியைப் போர்த்த காட்சிபோல், முன் வந்த இந்த மழை முகில்கள் எல்லாம் நந்திமலை என்னும் பெருமலையின் உச்சி மேல் திரண்டு சேர்ந்து கொண்டன. 4

வேறு

வாரை கான்றநித் திலமென வாலிகண் மயங்கச்
சீரை கான்றிடு தந்திரி நரம்பெனச் செறிந்த
தாரை கான்றவோ ரிருதுவி னெல்லையுந் தண்பால்
வீரை கான்றிடு தன்மைய தாமென **மேகம்.**

கடலில் தோன்றும் முத்துக்கள்போல் மழைத் துளிகள் திரண்டு பெரிதாகிப் பின்னர் யாழ் நரம்பு போல நீண்டு மழைத் தாரைகளாகி நந்தி மலைமேல் மேகங்கள் மழை பொழிந்தமை ஓர் இருது மாதகால எல்லையும் பால் கடல் மழையாக பொழிந்தது என்பது போலவும் இருந்தது. 5

பூட்டு கார்முகந் தன்னொடுந் தோன்றிய புயல்வாய்
ஊட்டு தண்புன னந்தியங் கிரிமிசை யுகுத்தல்
**வேட்டு வக்குலத் திண்ணனுர் மஞ்சனம் விமலற்**
**காட்டு கின்றதோர் தனிச்செயல் போன்றுள தன்றே.**

நல்ல கருமையான தங்கள் மேனிமேல் வானவில்லோடும் தோன்றிய முகில்கள், வாயால் சொரிந்தனபோல பெய்த மழையானது மலைமேல் பொழிகின்ற காட்சி எப்படி இருக்கும் என்றால் வேட்டுவக் குலத்துத் தோன்றிய கண்ணப்ப நாயனர் காளத்திமலையில் இருந்தருளும் ஈசனுக்குப் பூசை செய்தபோது, வாயினால் ஈசன் திருமேனி மேல் நீர் பொழிந்த தன்மை போல அமைந்துளது. 6

கல்லென் பேரிசைப் புனன்மழை பொழிதலாற் கானத்
தொல்லும் பேரழல் யாவையு மிமைப்பினி லொளித்த
வெல்லுந் தீஞ்சல மருவுமிக் காருக்கு வியன்பார்
செல்லுங் காலையி லங்கண்வீற் றிருப்பரோ தீயோர்.

கல்லென இரைந்து கொண்டு பேரிசையோடும் முகில்கள் மழை பொழிந்தமையால் எங்கும் குளிர்மையாகி அந்த நந்தி மலைமீது இதற்கு முன்பு இருந்த அழல் வெப்பம், யாவும் அவியப் பெற்றன. ஆகவே எவற்றையும் வெல்லும் படியாக, வண்மை, குளிர்மை, இனிமை இவையாவும் உடைய மேகங்கள் மழையாகிய இந்தப் பெருங் கொடையோடும் உலகில் வருதலால் இவைகட்கு முன்பாக தீயவர்கள் நெருப்பாக நின்று நிலாவ முடியுமோ? முடியாது.

அழுக்காறு பொறாமை கோபம் இவைகள் பொல்லா நெருப்பு என பெரியோர் சொல்வர். ஆகவே தவமேம்பாட்டோடு தண்ணளியாகிய சிந்தை உடையார் பால் இவை சாரா என்பது போல உட்பொருள் அமையுமாறு சொன்னார். 7

தேக்கு தெண்டிரைப் புணரிநீர் வெம்மையைச் சிந்தி
ஆக்கி வாலொளி யுலகில்விட் டேகலால் அடைந்தோர்
நீக்க ரும்வினை மாற்றிநன் னெறியிடைச் செலுத்திப்
போக்கின் மேயின தேசிகர்ப் பொருவின புயல்கள்.

தேக்கி அலைமோதும் கடலில் உள்ள உப்பு நீரின் கசப்பு, உப்புத் தன்மையான வெப்புத் தன்மையை இந்த முகில்கள், தாங்கள் அக்கடல் நீரை உண்ணும்போதே நீக்கி நல்ல நீராக்கி உலகில் நல் நீர் மழையாகப் பொழிந்து அனைவரும் உவக்குமாறு உலகை விளங்க வைத்துச் செல்லலால், இம்முகில்களை எதற்கு ஒப்பிடலாம் எனக் கூறின் இவ்வுலகில் நீக்க முடியாத வினைகளில் தடுமாறி அலைந்து துயருறுவோர், தம்மை அடைந்தால், அவ்வாறு அடைந்தவரின் நீக்கமுடியாத இருவினைகளை நீக்கி, அவர்களைப் பின்னர் நல்ல நெறியிலே ஒழுகும்படி 'ஆக்கி, மேல் நிலையில் விளங்கும்படி ஆக்குகின்ற ஞானகுரு போலவும் இருப்பன எனவும் கூறலாம். 8

கழிந்த பற்றுடை வசிட்டன திருக்கையாக் கவிஞர்
மொழிந்த நந்தியம் பெருவரை மொய்த்தசூல் முகில்கள்
பொழிந்த சீதநீர் பொற்புறு சாடியிற் பொங்கி
வழிந்த பாலெனத் திசைதொறு மிழிந்தன மன்னோ.

பற்றுக்களை எல்லாம் விடுத்த வசிட்ட முனிவனுடைய இருப்பிடமாக, கவிவாணர்களால் புகழப்படும் இந்த நந்தி மலையில் மொய்த்த மழைமுகில்கள் பொழிந்த மழை நீர், நான்கு புறமும் வழிந்தோடி, அருவி நீராகிமாறி, வருங் காட்சி எப்படி ஆகிறது எனில் வசிட்ட முனிவன் வளர்த்த தேனுவாகிய பசு பொலிந்த பாலை, சாடியிலே அவர் கறந்த போது அது சாடி நிறைந்து வழிந்தோடிய தன்மைபோல இருப்பதாகும். 9

சீல மேதகு பகீரதன் வேண்டலுஞ் சிவன்றன்
கோல வார்சடைக் கங்கையம் புனலினைக் குன்றின்
மேலை நாள்விட வந்தென நந்திவீழ் விரிநீர்
பாலி யாறெனும் பெயர்கொடு நடந்தது படிமேல்

சீலமிக்க பகீரதன் என்பான் சிவபிரானைக் குறித்து தவம் செய்து அவரிடம் தனது மூதாதையர் உய்யும் பொருட்டால் கங்கை நீரை வேண்டுதலும், சிவபிரான் அதை உதவும் பொருட்டு அக்கங்கையை இந்த மலை உச்சியில் செல்லும்படி விட்டால் அக்கங்கை வந்து வழிந்தோடினல் எப்படி இருக்குமோ அது போல இருக்கும், அந்த நந்தி மலைமேல் மழை பொழிந்து, அருவியாக வழிந்தோடி, பாலி என்னும் நாமம் பூண்ட ஆறுகளூற்றெடுத்து, இப்பூமிமேல் பெருகி ஓடிய தன்மை. 10

வாலி தாகிய குணத்தினன் வசிட்டனென் றுரைக்குஞ்
சீல மாமுனி படைத்ததோர் தேனுவின் றீம்பால்
சால நீடியே தொல்லைநாட் படர்ந்திடு தன்மைப்
பாலி மாநதிப் பெருமையான் பகர்வதற் கெளிதோ.

மேலாம் அறிவுடை வசிட்ட முனிவன் எனப்படும் குணசீலமுடையவர், தாம் வளர்த்த காம தேனுவின் தித்திப்பாகிய பால், முன்னை நாள் பெரிதும் நீள வழிந்தோடிச் சென்ற அத்தன்மைபோலும், மலையினின்றும் ஊற்றெடுத்தோடு கின்ற இப்பாலி என நாமம் பூண்ட இந்த ஆற்றின் பெருமையை என்னால் எடுத்துச் சொல்ல, எளிதானது ஒன்று அல்ல. 11

எய்யும் வெஞ்சிலைப் புளிஞரை எயிற்றியர் தொகையைக்
கைய ரிக்கொடு வாரியே சிறுகுடி கலக்கித்
துய்ய சந்தகில் பறித்துடன் போந்தது தொன்னாள்
வெய்ய சூர்ப்படை வான்சிறை கவர்ந்துமீண் டதுபோல்.

இந்த பாலியாறு, மலையில் நின்றும் பூமிமேல் ஓடிச் செல்லுங்கால் மலையில் வாழும் வேடுவர் குடிகளைக் கலக்கி, வேடரை வேடப்பெண்களை திரைகளால் வாரிக்கொண்டும், சந்தன மரங்களைப் பறித்துக் கொண்டும் சென்றது. அது எப்படியெனில் முன்னொரு கால் கொடிய அசுரப்படைகள் தேவர் உலகத்தைச் சேர்ந்து தேவர்களைச் சிறை செய்துகொண்டு தங்கள் வீரமகேந்திரபுரம் சென்ற வாறு போலவே இருக்கிறது. 12

காக பந்தரிற் கருமுகிற் காளிமங் கனலும்
மாக நீள்கரி யாவையுங் குழுவொடும் வாரிப்
போகன் மேயின மேற்றிசைப் புணரியுண் டமையா
மேக ராசிகள் குணகடல் மீதுசெல் வனபோல்.

காகம் போலும் பந்தர் மேலாக கருமுகில்களின் கருநிறம் தோற்றினால் எப்படியோ அப்படியே நீண்ட உடலினை உடைய பெரும் யானைகளை, இந்த பாலியாறு குழுவோடும் வாரிக் கொண்டு போகின்ற காட்சி அமைகிறது. இன்னும் மேற்குப் புறத்தில் உள்ள சமுத்திரத்தை உண்ட மேகங்கள் கிழக்கில் உள்ள கடலையும் உண்ணுமாறு அமைந்து செல்வது போலவும் ஆற்றின் போக்கு இருக்கிறது. 13

குவட்டு மால்கரிக் குருகுதே ரரிபுலிக் குவையுண்
டுவட்டி யுந்திடு திரைப்புனல் மதூகநல் லுழிஞ்சில்
கவட்டி னேனைசாய்த் தாறலை கள்வரூர் கலக்கித்
தெவிட்டி வந்தது பாலையுட் கொண்டிடு செருக்கால்.

பெரிய மதம்பொழியும் யானைக்கன்றுகளையும், சிங்கங்களையும், புலிகளையும் இந்தப் பாலியாறுதான் உண்டு உவட்டி வெளியேற்றியது போல திரைமேல் கொண்டு, இலுப்பை, வாகை, கொம்பினை உடைய மா, முதலிய மரங்களை வேரோடு சாய்த்து ஊரிடையே சென்று வழிப்பறி செய்யும் கள்வர்களாகிய வேடுவர்கள் வாழும் ஊரைக் கலக்கி, இந்தக் கொடியரை அழித்தேன் என்பது தால் தெவிட்டி, பாலை நிலத்தையே அழித்தேன் என்ற செருக்கோடும் ஓடி வருகிறது பாலி என்னும் ஆறு.

இங்கே புலி யானைக் கன்று இவைகளை உண்டமையால் அது தீதாகிய மாமிச உணவை உண்டது போல அருவருத்து சத்தி எடுத்தது போலவும், அப்பால் இலுப்பை, மா, வாகை அழித்து சேர்த்து வருதலால் தாவர உணவு கொண்டு தெவிட்டியது போலவும், பாலை நிலத்தின் வெப்பை அடக்கியமையால், தீமையை நீக்கிச் செருக்குற்றது போலவும் உட்பொருள் காண்க. 14

காலை வெம்பகல் கதிரவன் குடதிசைக் கரக்கும்
மாலை யாமம்வை கறையெலாஞ் செந்தழல் வடிவாய்
வேலை யும்பரு கியவெழும் வெம்மைபோய் விளிந்து
பாலை காண்கிலா வாரியின் பெருமையார் பகர்வார்.

காலையிலும், நண்பகலிலும், சூரியன் மறையும் மாலையிலும், யாமத்திலும், விடியற்காலமும், எக்காலமும் சிவந்த நெருப்பு வடிவாய் இருந்து, சமுத்திரத்தை யும் ஒருங்கே உறிஞ்சிக் குடிக்கும் வெப்பம் உடைய பாலை நிலத்தில் இந்தப் பாலி யாறு ஓடிப் பாய்ந்து, அந்த பாலை நிலத்தின் கொடுமையை நீக்கி அதை அறவே காண முடியாதபடி செய்தது. ஆகவே பாலியாற்றின் இப் பெருமையை ஆர் தான் சொல்ல முடியும். 15

குல்லை மாலதி கொன்றைகா யாமலர்க் குருந்து
முல்லை சாடியே யானிரை முழுவது மலைத்து
மெல்ல மற்றவை நீந்தலுங் கரைக்கண்விட் டுளதால்
தொல்லை மாநதி யான்வழித் தோன்றிய தொடர்பால்.

வெட்சி, கொன்றை, காயா, குருந்து முதலிய மரம் செடிகளை அழித்து, இடை யர் ஊர்புகுந்து, பசுக்களை அலைப்ப, அப்பசுக்கள் நீர் பெருகக்கண்டுநீர்மேல் மெல்ல நீந்துதலும், சரி நீங்கள் கரையே போய்ச் சேருங்கள் என அவைகளைச் சுகமே போய்க் கரைசேர விடுத்து வருவது போல, ஆறு ஓடி வருகிறது. ஏனென்றால் தான் வசிட்ட முனிவன் வளர்த்த காம தேனு வழி தோன்றி, பாலி எனப் பேர் கொண்டேன் எனத் தன் முன்னை நிலைமையை உணர்ந்து போலும் மற்றப் பொருள்களை வாரி அடித்துக் கொண்டுபோனாலும் அப்பசுக்களை மட்டும் கரைசேர விட்டுவரும் தன்மை விளங்குகிறது. 16

சுளையு டைப்பல வாசினி பூகமாந் துடவை
உளைம லர்ச்சினை மருதமோ டொழிந்தன பிறவுங்
களைத லுற்றுமாட் டெறிந்தது கண்ணகன் குடிஞை
அளவின் மிக்குறு பாணிபெற் றதற்கவை யரிதோ.

சுளையுடைக் கனிதரும் பல பலாமரம், கமுக மரம், பெரிய கொம்பரினையுடைய மருதமரம் இவைபோன்ற பல மரங்களைப் பாலியாறு பெருகி வேரோடு களைந்து, கரையிலே வீழ்த்தி ஓடி வருகிறது. இப்படி இம்மரங்களை கரையில் வீழ்த்துதல் அளவு கடந்த கிளைகள் எனப்படும் கைகள் பெற்ற அதற்கு, இந்தச் செயல் அரிதோ? அல்லவே. 17

இலைவி ரித்துவெண் சோறுகால் கைதையு மெழுதுங்
கலைவி ரித்திடு பெண்ணையுங் களைந்திடுங் களைபோய்
அலைவி ரித்திடு கடல்புக வொழுகுமா றனந்தன்
தலைவி ரித்துழி யுடனெளித் தன்னதோர் தகைத்தால்.

இலைகளை விரித்துச் சோறு படைத்ததுபோல் தோன்றும் தாழைமரம், எழுத ஓலை தரும் பனை, இவைகளை இந்தப் பாலியாறு களைந்து அழித்து வருகின்றது. இவ்வாறு இவைகளை களைந்து அழித்து, திரைமேல் சுமந்து சென்று போய், அலை கடலில் ஆறு விழுகின்ற தன்மையைப் பார்த்தால் அனந்தன் என்னும் பாம்பு தலையை விரித்து உடலை நெளித்துக்கொண்டு ஓடிச் செல்வது போல இருக்கின்றது. 18

கொங்கு லாமலர்க் கொன்றைகூ விளைகுர வுழிஞை
பொங்கு மாசுணந் தாதகி பாடலம் புன்னை
துங்க மார்திருத் தலைமிசைக் கொண்டுறுந் தொடர்பால்
**எங்க ளையகன் றன்னையு மொத்ததவ் விருநீர்.**

பொங்கி மலரும் நல்ல கொன்றை மரம், வில்வ மரம், பாம்புகள், ஆத்தி, பாதிரி, இவைகள் தன் திரைகள் மேல் புரண்டுவர பாலியாறு ஓடிச் செல்கின்ற அத்தொடர்பால் இதனை எங்கள் நாயகராகிய சிவபிரானுக்கு ஒப்பிட்டுச் சொல்லவும்கூடும். ஏனெனில் சிவபிரானும் திருச்சடைமேல் பாம்பு, கங்கை, வில்வை, ஆத்திமலர், கொன்றைமலர் இவைகளைச் சூடும் தன்மையினால். 19

கொலைகொள் வேன்மற வீரர்த மிருக்கையிற் குறுகாச்
சிலையும் வாளொடு தண்டமுந் திகிரிவான் படையும்
நிலவு சங்கமுங் கொண்டுசென் றடல்புரி நீரால்
**உலக மேழையு முற்பக லயின்றமா லொக்கும்.**

இன்னும் இந்தப் பாலியாறு கொலைபுரிகின்ற வேடர்கள் இருப்பிடங்கள் தோறும் சென்று அவர்கள் ஆயுதமாகிய வில்லையும், வாளையும், தண்டையும், சக்கரம் முதலிய படைகளை வாரிக்கொண்டும், சங்குகளும் திரைகள் மேல் தோன்ற ஓடிச்சென்று, போர்செய்யும் தன்மைபோல, ஊர்களை, பெருகி அழித்து வருதலால் உலகம் ஏழையும் முன்னொருகாலத்து உண்டருளிய நாராயணக் கடவுளையும் ஒக்கும்படியாக இருக்கிறது. ஏனெனில் நாராயணக் கடவுளும் தண்டு, சக்கரம், வில்லு, வாள், சங்கு முதலிய படைகளை ஏந்தி போர் செய்கின்றவராதலாற்போலும் இங்கு நாராயணக் கடவுள் பாலியாற்றுக்கு ஒப்பிடப்படுகிறார். 20

[ தொடரும் ]

தேன்கு லாவிய மலர்மிசைப் பொலிதரு செயலால்
நான்க வாமுகந் தொறுமறை யிசையொடு நணுகிக்
கான்கு லாவிய கலைமரை மான்றிகழ் கவினுல்
வான்கு லாமுல களிப்பவ னிகர்க்குமால் வாரி.

தேன் ஈக்கள் மொய்க்கும் தாமரை மலர்களைத் திரை மேல் ஏந்திவருதலாலும், நான்கு திசையிலும் கிளையாகப் பெருகி வேத ஓசைபோல் இரைந்து ஓடி, காட்டில் வாழும் கலைமான், மரை, புள்ளிமான் முதலிய மிருகங்களையும் வாரிக்கொண்டு, அவைகள் நீர்மேல் மிதப்பப் பாலியாறு வருகின்ற செயலால் இந்த ஆற்றை உலகைப் படைக்கின்ற பிரமதேவருக்கும் ஒப்பிடலாம். எப்படியெனில் பிரமதேவரும், தாமரை மலர்மேல் இருப்பவர்; மான்தோலைப் போர்த்தவர்; நான்குமுகமுடையவர் ஆனமையால் போலும். 21

மீது போந்திரி சங்கைவிண் ணிடையின்மீ னேடும்
போத லாயுற வீசலாற் சலமிகும் புலனுல்
தீதின் மாக்களைச் செறுத்தலா லளித்திடுஞ் செயலாற்
காதி காதல னிகர்க்குமாற் கன்னிமா நீத்தம்.

இப்பாலியாறு பெருகிவரும் நீர்ப் பெருக்கத்திலே, சங்குகள்மேல் மிதப்ப அவைகள் வரும் காட்சி, எதிர்நோக்குவார்க்கு, இந்நீர்த் திரைகள் சங்குகளை நட்சத்திர மண்டலத்தைத்தொட வீசுவனபோல இருக்கின்றது. நீர்த் திரைகள் பெரிதும்பொங்கி அலைந்து வருகின்றது. அதோடமையாது நன்மைதீமையறியாத மிருகங்களை, மக்களை வாரிக்கொண்டும் வருகிறது. இதனுல் இந்த ஆற்றை காதி என்னும் முனிவருடைய மைந்தராகிய விசுவாமித்திரருக்கும் ஒப்பிடலாம் போலவும் இருக்கிறது. ஏனெனில் விசுவாமித்திரர் பொங்கி எழும் கோபமுடையவர். திரிசங்கு என்னும் பெயருடைய அரசனை சொர்க்கம் அனுப்பியவர். தபோபலம் உடையவர் ஆனமையால்போலும்.

திரிசங்கு சொர்க்கம் அடைந்த வரலாறு: திரிசங்கு தேகத்தோடு சுவர்க்கம்புக வேண்டி, தனது குலகுருவாகிய வசிட்டரை அடைந்து பிரார்த்தித்தான். அவர் அதை கூடாது என்று மறுக்கவே அவர் புத்திரரிடம் சென்ருன். அவர்கள் நீ குருவாக்கைத் தடுத்தபடியால் நீசனுவாய் எனச் சாபமிட, அப்பால் விசுவாமித்திரரிடம் சென்ருன். அவர் அவனுக்காக தனிப்பட்ட ஓர் அந்தர சுவர்க்கத்தை உண்டாக்கி அவனை அங்கே வைத்தார். இத்திரிசங்கு அரிச்சந்திரனுடைய தந்தையாவான். 22

தெழித்த மால்கரி யினங்கட மெயிற்றினுற் சிதையக்
கிழித்த பேரிறுல் சொரிந்ததேன் கிரியுள வெல்லாங்
கொழித்து வந்துற வணைதரும் பாலியின் கொள்கை
கழித்த நீர்க்கங்கை யமுனையைக் கலந்தெனத் தோன்றும்.

பெரிய ஓசையோடும் முழங்குகின்ற யானைகள் தங்கள் கொம்பினுலே தேன் கூடுகள் சிதைவாகும்படி குற்றியபொழுது, கூடுகளிலிருந்து சிதைந்த தேன், அம்மலையிலெங்கணுமிருப்பனவற்றை இந்தப் பாலியாறு திரைகளினுல் திரட்டிகொழித்து வந்துளது. இதை நோக்குங்கால் கங்கையாறு, காளிந்தி என்ற ஆருேடுகலந்துவந்தால் எப்படி இருக்குமோ அப்படிப்போலும். அது எவ்வாறெனில் காளிந்தி (யமுனை) கருமை நிறமுடையது. கங்கை வெண்மையுடையது. ஆகவே இரண்டும் கலந்தால் இருக்கும் தன்மைபோல இருக்கிறது இந்தப் பாலியாறு தேனைவாரிவரும் காட்சி. 23

சங்க மார்த்திடத் திரையெழ நதியுறுந் தகைமை
அங்கம் வெம்பினை பனிக்கதி ரல்லைநீ யழலோய்
இங்கு வாதிளைத் தேகுதி யெனக்கர மெடுத்தே
பொங்கும் வாய்விடா விரவியை விளிப்பது போலும்.

இந்தப் பாலியாறு, சங்குகள் ஊதி இரைந்து வர நீர்த்திரைகள் இந்த சங்குகளை மேலே ஏந்தி வரும் காட்சி எப்படி ஆகிறது எனில்; இந்த ஆறு சூரிய தேவனை நோக்கி, நீர் என்ன வெப்பக் கிரணங்களோடும் இருக்கிறீர், ஆனமையால் உமது உடலம் வெம்பியது போலும், இங்கே வாரும்! என்னிடத்து சேர்ந்து குளித்து நீராடிச் செல்வீராக, உமது உஷ்ணம்போய் விடும் என, சத்தமிட்டு சூரியதேவனை கையெடுத்து அழைப்பது போலவும் ஆகிறது. 24

வேத மேமுதல் யாவையு முணர்கினு மேலாம்
ஆதி வானவன் கறைமிடற் றிறையென வறியாப்
பேதை மாக்கட முணர்வென வலைந்து பேர்கின்ற
சீத நீரெலாந் தெளிதலின் ருயது சிறிதும்.

வேதங்கள் முதலாகிய பல கலைகளைக் கற்று உணர்ந்தாலும், எல்லாத் தேவர்க்கும் மேலாகியவன், நீலநிறங்கொண்ட நஞ்சினையுண்ட கண்டத்தினை உடைய சிவபிரானே எனத் தெளியாத அறிவிலாப் பேதை மனிதரின் உணர்வுகள்போல இந்த ஆற்றின் அலைகள் பெரிதும் அலைந்து, சிறிதும் தெளிவில்லாமல் வருகின்றது. குளிர்மையான இந்த ஆற்றின் திரைகள் அலைவதனல் தெளிவில்லாமல் இருப்பன எதைப் போல எனில், பல கலைகளைக் கற்றும் சிவனே பரம்பொருள் என உறுதிகொள்ளாதார் சிந்தை உலையுமாப்போல.

அங்கு இங்கென் றேடாதே
அவன் இவனென்றுன்னுதே
எங்கும் சிவத்தைக் கண்டு — தங்கமே
இன்பமாய் வாழ்ந்திடடி.

(நற்சிந்தனை) 25

செம்பொன் மால்வரை யல்லன கிரிகளுந் திசையும்
உம்பர் வானமுந் தரணியுந் துளங்கவந் துறலால்
எம்பி ரான்முனம் வருகென நதிகளோ டெழுந்த
கம்பை மாநதி யொத்தது கரைபொரு பாலி.

இந்தப் பாலியாறு பெருகிவரும் வேகத்தில் செம்பொன் மயமான மேருமலை முதலான பல்வேறு மலைகளும், திக்குகளும், திசைகளும், பூமியும் நடுங்கும்படி வருதலால், இது எதுபோல் என்றுல், முன்பு காஞ்சி எனும் பதியில் மாமர நிழலில் தான்றேன்றியாகிய ஈசனை, காமாட்சியம்மை அருச்சிக்குங்கால், எம்பெருமான். திருவிளையாட்டாக, கம்பையாற்றைப் பெருகி வாவென, அக்கம்பையாறு எம்பிரான் பணி தலைமேற்கொண்டு வேறு நதிகளோடும் வேகங்கொண்டெழுந்த தன்மைபோலவும் கரைகளை மோதிக்கொண்டு பாலியாறு வருகிறது. 26

உதிரு கின்றசிற் றுண்டிகொண் டொலிபுனற் சடைமேல்
மதுரை நாயகன் மண்சுமந் திட்டமா நதியின்
முதிரு முத்தமிழ் விரகன தேடென மொய்ம்மீன்
எதிர்பு குந்திடப் போவது பாலியா மியாறு.

இவ்வாறுகப் பெருகிவரும் இந்தப் பாலியாற்றில், மீன்கள் நீரில் எதிரோடிச்செல் கின்றன. எப்படி எனில் முன்னொரு நாள் பிட்டினை அவித்து சீவியம் செய்கின்ற செம்மனச் செல்வி என்னும், ஆரும் துணையிலாத கிழவிக்காக, மதுரையில் கோவில் கொண்ட நாயகராகிய சிவபிரான் கூலியாளாகச் சென்று வைகை ஆற்றின் கரையடைக்கும்போது முன்னர்க் கூலியாக, அவர் செம்மனச் செல்வி அம்மையாரின் உதிர்ந்து போகும் பிட்டினை ஏற்று திருவமுது செய்து, கங்கைநதி விளங்கும் தமது திருச்சடைமேல், மண்ணைச்சுமந்து கரைமேல்கொட்டி மண்சுமக்கும் திருவிளையாட்டைப் புரிந்த பெருமை வாய்ந்த வைகை ஆற்றின்கண் திருஞானசம்பந்த சுவாமிகள் சமணர்களோடு வாதம்செய்யுங்கால் ஏடிட்டார். அவ்வாறு இட்ட ஏடு ஆற்று நீரிலே நீரை எதிர்த்து வேகமாக ஓடியது. அதுபோல பாலி ஆற்றில் இந்த மீன்கள் எதிரோட பாலியாறு வருகிறது.

செம்மனச் செல்வியார் அவித்த பிட்டிலே நல்ல பிட்டெல்லாம் அவள் விற்றுப் பிழைக்கட்டும் உதிர்ந்த பிட்டை எனக்குத் தந்தால் போதும், என்ற கடவுளின் கருணையையும், சம்பந்த சுவாமிகள் இட்ட ஏடு எதிர்த்துச் சென்ற வேகம்போல் மீன்கள் சென்றன, என்றமை ஏடு, எப்படி வேகமாகப் போயிருக்கும் என சுவாமிகளின் அருள் ஆற்றலையும் உட்பொருளாகக் காண்க. 27

## வேறு

மாசறத் துளங்கு துப்பு மரகதத் திடைவந் தென்னப்
பாசடை நடுவட் பூத்த பங்கயத் தடாகம் யாவுந்
தேசுடைத் தரங்க நீத்தச் செலவினுற் சிதைந்த பன்றே
பேசிடிற் சிறுமை யெல்லாம் பெருமையா லடங்கு மன்றே.

குறைவின்றி ஒளிரும் பவளம், மரகதப் பச்சை இடையே தோன்றல்போல், நல்ல தாமரைக் குளங்களிலே பச்சை இலைகள் நடுவிலே மலர்ந்த தாமரைப் பூக்கள் யாவும், இந்தப் பாலியாற்றின் ஒளி உடைய நீர் பெருகிவந்து குளங்களில் நிறைய உள் அடங்கி மறைந்து சிதைவாயின. இது எதுபோல எனில் சிறுமைகள் யாவும் பெருமையாலே அடங்கிக் கொள்ளுமாறு போலும்.

ஒருவனிடத்தே காணப்படும் ஒரு பெருமை ஒன்றாலேயே அவன் சிறுமைகளைப் பெரியோர் பொறுப்பர் என உட்பொருள் உவமம் காண்க. 28

வளவயன் மருத வைப்பின் வாவியங் கமலம் யாவுங்
கிளையொடும் பறித்து வாரிக் கேழுறப் பொலிந்த தோற்றம்
விளைதரு பகையிற் றேலா வெவ்வழற் சிறுமை நோக்கிக்
களைதலைப் புரிந்து பற்றிப் பெயர்ந்தெனக் காட்டிற் றன்றே

வளங்கள் நிறைந்த வயல்கள்கொண்ட மருத நிலத்தை, இப்பாலியாறு சேர்ந்து, அங்குள்ள குளங்களில் மலர்ந்த செந்தாமரை மலரையெல்லாம் திரைகளினால் வாரிக்

கொண்டு அந்தத் தாமரை மலர்கள் நீர்மேல் மிதந்து தோன்ற வருகிற காட்சி, அந்தப் பாலியாறு, நெருப்பு எனது பகை, அதை அழிப்பது எனக்கு ஒரு பொருளல்ல, இதோ பாருங்கள் என் பகையாகியதை எவ்வளவு சுலபமாகப் பிடுங்கினேன், எனக் காட்டுவதுபோல நீர்மேல் தாமரைமலர் மிதப்ப ஓடி வருகிறது. தாமரையை இங்கு நெருப்புக்கு அதன் நிறங்கொண்டு ஒப்பிட்டுப் பேசப்பட்டது. 29

திரைகட னீத்தங் கொண்மூ வினத்தொடு சேண்போய் நோக்கித்
தரையிடை யிழிந்து சென்று தன்பொருள் கொடுபோந் தென்னப்
பரதவ ரளவர் வாரிப் படுத்தமீ னுப்பின் குப்பை
இருபுடை யலைத்து வெளவி யேகிய தெறிநீர்ப் பாலி.

இப்பாலியாறு பெருகி ஓடிச்சென்று இப்பால் நெய்தல் நிலமெனப்படும் சமுத்திரக் கரையைச் சேர்கிறது. சேர்ந்தபோது ஆறு சமுத்திரக் கரையோரமாக வாழுகின்ற மீன்பிடித் தொழிலர்கள் வாழும் குடி இடையே சென்று அவர்கள் பிடித்து வைத்த மீன்களை, உப்பை வாரிக்கொண்டு போகின்ற காட்சி எப்படி எனில், சமுத்திரம் தன்னிடத்துள்ள பொருள்களாகிய உப்பை, மீனை, இந்தப் பரதவர் எடுத்துச் சென்றார்கள். ஆனமையால் அவற்றை நான் திரும்ப எடுக்க வேண்டுமென எண்ணி மேகங்களோடு நீராய்க் கலந்து மழையாய்ப் பொழிந்து, ஆறாய் ஓடி, இழந்த பொருளைத் திரும்பத் தன்னிடத்துச் சேர்க்கும் தன்மைபோல ஆகிறது. 30

பாரிடை யினைய பண்பிற் படர்ந்திடு பாலி யந்தத்
தாருயி ரனைத்துந் தத்த மருவினைக் கமைத்த நீராற்
சேருறு கதிக ளென்ன மரபினிற் றிறமே யென்னத்
தாருவின் கிளைக ளென்னத் தனித்தனி பிரிந்த தன்றே.

பூமிமீது இவ்வாறு ஓடிவருகிற பாலியாறு பரந்து ஓடிச்சென்று, ஓர் மரம் முளைத்துவந்து பல பக்கமும் தனது கொம்பரினை போக்குகின்ற தன்மை போல, பல கிளைகளாகப் பிரிந்து செல்கிறது. இந்த ஆறு கிளைகளாகப் பிரிந்த இயல்பை நோக்குமிடத்து இது எதைப்போல இருக்குமெனில் இவ்வுலகத்து உயிர்கள் அனைத்தும், தங்கள் தங்கள் வினைகட்கு ஏற்ப தோற்றம் எடுத்து நற்கதி, தீயகதிகளை அடைதல்போல அமைந்துள்ளது.

இக்கருத்தை கீழே தரப்பட்டுள்ள சிவஞான சித்தியார் பாடலிலும் காண்க.

பேறிழவு இன்பமோடு பிணிமூப்புச் சாக்காடென்னும்
ஆறுமுன் கருஉட்பட்ட தவ்விதி அனுபவத்தால்
ஏறிடும் முன்புசெய்த கன்மம்இங்கு இவற்றிற்குஏது
தேறுநீ இனிச்செய் கன்மம் மேலுடற்சேரும் அன்றே. 31

கால்கிளர் கின்ற நீத்தங் கவிரிதழ்க் கலசக் கொங்கைச்
சேல்கிளர் கரிய வுண்கட் டிருநுதல் மிழற்றுந் தீஞ்சொல்
மேல்கிளர் பரவை யல்குன் மெல்லிய லறன்மென் கூந்தல்
மால்கிளர் கணிகை மாதர் மனமெனப் போயிற் றுமால்.

இன்னும் பலகால்களாகப் பிரிந்தோடுகின்ற இந்தப் பாலியாறு, கிளைகளாகி, பின்னர் வாய்க்கால்வழி ஓடி வருகிறது. இந்த ஆற்று நீர்பிரிந்து சிதறுண்டு ஓடிவருந் தன்மையை நோக்குமிடத்து இது எப்படி இருக்குமெனில், முருக்கம்பூபோ ல சிவந்

சொண்டும், கலசம்போலும் தனமும், சேல்மீன்போல கருமையான கண்ணும், இனிமையான மொழியும், சமுத்திரமென பரந்த அல்குலும், மிருதுவான கரும்கூந்தலும் கொண்டு காண்பாரை மயக்கி தியங்க வைக்கும் கணிகைப் பெண்ணின் மனம் போல இருக்கும்.

ஒழுக்கமுள்ள உத்தமியரின் மனம்போல உறுதியில்லாது கணிகைப் (வேசிப்) பெண்ணின் மனம் பலபாட்டுக்கும் இயையும். ஆனதினுல் ஒழுங்காக ஓடிவந்த பாலியாறு அப்பெண்ணின் மனம்போல பல கால்களாக இப்போது பிரிந்தோடுகிறது. 32

பாம்பளை புகுவ தேபோற் பாய்தரு பரவைத் தெண்ணீர்
தூம்பிடை யணுகு மாற்ருற் சொன்முறை தடைசெய் வோரில்
தாம்புடை பெயரா வண்ணந் தலைத்தலை தள்ளு மள்ளர்
ஏம்பலோ டார்க்கு மோதை யுலகெலா மிறுக்கு மாதோ.

பாம்புகள் புற்றிலே உள்ளிடும் தன்மைபோல பாய்ந்து ஓடிவருகின்ற பாலியாற்றின் தெளிந்த நீரை, உழவர்கள் தங்கட்குத் தேவையான நீர்தேக்கும் ஓடைகளிலே சேர்க்க வேண்டி, ஓடிச்செல்லும் பாம்பை சொல்லால் தடைசெய்வோர் போல, உறுதியான சொற்களால் உரக்கச் சத்தமிட்டு வாய்க்கால்களை வெட்டித்தடுத்து நீரை மறித்து தங்கட்குரிய நீரோடைகட்கு மாற்றும்போது அவர்போடும் சத்தம் உலகெல்லாம் சென்று சேரும்.

நீரைத் தடுத்து அணைகட்டுவது மிகச் சிரமமான வேலை. அதைச் செய்யும்போது உரக்கச் சத்தமிட்டுத்தான் செய்வார்கள். இன்றும் பாரவேலை செய்வோர்கள் சத்தமிடுதலைக் காண்க. 33

பணையொலி யிரலை யோதை பம்பையின் முழக்க மங்கட்
கிணையொலி மள்ள ராரப்புக் கேழ்கிளர் தரங்க நன்னீர்
அணையொலி யவற்றை வானத் தார்ப்பொலிக் கவனி தானும்
இணையொலி காட்டிற் ருேவென் றெண்ணுவார் விண்ணுளோரும்.

உழவர் இவ்வாறு ஆற்றுக் கால்வாய்களைத் தடுத்து மறிக்கும்போது போடுகிற சத்தமும், வேலை செய்வோரை உற்சாகப்படுத்த முழக்கப்படுகின்ற முரசப்பறையோசையும், கொம்பு வாத்தியம் ஊதிய முழக்கம், பம்பை எனும் பறையோசையும், சேர்ந்து முழங்குகின்ற இந்த ஓசையோடு, ஆற்று நீரின் இரைச்சல் முழக்கமும் ஒருங்காகத் திரண்டு சேர்ந்த ஓசையை, வானத்திற் கேட்கப்படுகின்ற முழக்க ஓசைக்கு இணையாகப் பூமியும் ஓசை காட்டுகிறதோ! என எண்ணுவார்கள், தேவர் உலகுள்ளார்கள். 34

இயல்புகுங் களிநல் யானை யினந்தெரிந் தெய்து மாபோல்
கயல்புகுந் துலவுஞ் சின்னீர்த் தடம்புகுங் காமர் காவின்
அயல்புகுங் கோட்ட கத்தி னகம்புகு மார்வத் தோடி
வயல்புகுங் களிப்பு நீங்கா மாக்களின் மயங்கு மாதோ.

இயல்பாகக் களிப்புப் பொருந்திய யானை தனது இனத்தைத் தெரிந்து அடையுமாறு போல இந்தப் பாலியாறும் பெருகியோடி, கயல் மீன் உலாவும் அற்ப நீர் பொருந்தும் தடாகம் புகும்; அழகான சோலையின் பக்கர் செல்லும்; பெரிய ஏரிகளிடத்தேயும் சென்று நிறையும்; ஆர்வத்தோடும் ஓடி வயல்களிலே புகும்; மதுஉண்டு களிமயக்குற்ற மனிதரைப் போல் நீர் பரந்தும் தேங்கியும் பாயும். 35

எங்கணு நிறைந்து வேறோ ரிடம்பிறி தின்மை யாகச்
சங்கமா யீண்டு மள்ளர் தாங்குபல் லியமு மார்ப்பப்
பொங்கிய நகரந் தோறும் புறமெலாம் வளைந்த நீத்தம்
அங்கண்மா ஞாலஞ் சூழு மக்கரை நிகர்த்த தாமே.

எல்லாவிடமும் நீராக நிறைந்து வேறு ஓர் இடம், தன்னால் நிரப்பப்பெறாதது பிறிது இல்லாததாக; கூட்டமாக திரண்டு ஆற்று நீரை தமது வயல்களுக்காக, வழிப் படுத்திய உழவர்கள் முழக்கும் வாத்தியம் எங்கும் ஆரவாரிக்க, ஆற்றுநீர் அழகு பொங்கிய நகரங்கள் தோறும், அதன்புறம் எல்லாம் வளைந்து நிற்கும் இக் காட்சி இப்பூமியைச் சூழ்ந்த சமுத்திரம் போலவும் அமைந்துள்ளது. 36

மாறடு மள்ள ருய்ப்ப மருதத்தி னிறைந்து விஞ்சி
ஏறியநார மீட்டு மிருங்கட னோக்கிச் சென்ற
வேறுகொள் புலனை வென்றோர் மேலைநன் னெறியுய்த் தாலுந்
தேறிய வுணர்வி லாதோர் செல்வுழிச் செல்வ ரன்றே.

உழவர்கள் தமக்கு தேவையெனப் பாய்ச்சிய ஆற்றுநீர் வயல் நிலமாகிய மருத நிலத்தை நிறைந்து மிஞ்சி மிதந்த நீரானது கடலை நோக்கிச் சென்றது. இது எது போல் ஆகிறது எனில் மயக்கம் செய்யும் புலன்களை வென்றோராகிய பெரியோர்கள் தங்கள்பால் சேர்ந்த ஓர் அறிவிலாதவரை அறிவூட்டி நன்னெறிப்படுத்தி தம்மைப் போல் உயர்ந்த நிலையில் உய்த்தாலும் தெளிவில்லாத சிந்தையில்லார் தாம் நினைத்த படியே செல்வர் அதுபோல. 37

வாளெனச் சிலைய தென்ன வால்வளை யென்னத் தெய்வக்
கோளெனப் பணிக ளென்னக் குலமணி குயிற்றிச் செய்த
மீளிவெஞ் சரங்க ளென்ன வேலென மிடைந்து சுற்று
நாளெனப் பிறழு மீன்க ணடவின நார மெங்கும்.

இந்த பாலியாற்று நீர் பரவிய இடமெல்லாம் மீன்கள் உலாவி ஓடுகின்றன. அவைகள் தன்மை எதுபோல எனில் வாள் எனும்படியும், வில்லு எனும்படியும். சங்கு எனும்படியும், தெய்வத் தன்மையான கிரகங்கள் எனும்படியும், பாம்புகள் போலவும். இரத்தினங்கள் பதித்து செய்த வலிமையான அம்புபோலவும், வேல் போலவும், நெருங்கி சூழுகின்ற நட்சத்திரம் போலவும், வடிவங்கள் உடையன வாகக் காணப்படுகின்றன. 38

மாண்டகு பொய்கை தோறும் வயலூறு மற்று மெல்லாம்
வேண்டிய வளவைத் தன்றி மிகுபுனல் விலக்கு கின்ற
ஆண்டகை மள்ளர் தம்பா லமைந்திடுங் காலை யெஞ்சி
ஈண்டிய வெறுக்கை வீசும் இடைப்படு வள்ள லொத்தார்.

மாட்சிமை உடைய தடாகம் தோறும் வயல்தோறும், மற்று மிடமெல்லாம் வேண்டிய அளவுக்கு மேம்பட்டு மிகுந்த நீரை வடிவாய்காலால் வெளியேற்றுகின்ற ஆண்டகமை உடைய உழவர்கள் யாவரும் தங்களிடத்தே உள்ள செல்வத்தைத் தாமும் அனுபவித்து மிகுதியைப் பிறர்க்கும் கொடுக்கின்ற இடைப்பட்ட கொடை வள்ளல்களை ஒத்தார்கள், 39

# 5. திருநாட்டுப் படலம்

அவ்வியல் பெற்றிடு மாற்றன் மள்ளர்கண்
மைவரு கடலுடை மங்கை தன்னிடை
மெய்வளங் கொள்வதை வேண்டி யந்நிலச்
செவ்விக ளுடியே யினைய செய்குவார்.

அவ்வாறாகிய இயல்பினை உடைய, அஃதாவது தமது நிலங்கட்கு வேண்டிய நீரினைத் தேக்கி வைத்த வலிமையுடைய உழவர்கள், இருண்ட கடல் சூழ்ந்த பூமி எனப் படும் மங்கையிடத்து உள்ள உண்மையாகிய வளங்களைத் தாங்கள் பெறவிரும்பி அந்தந்த நிலங்களின் இயல்பு நோக்கி பின்வருவனவற்றைச் செய்யத் தொடங்கு வாராயினர். 1

சேட்டிளந் திமிலுடைச் செங்க ணேற்றொடுங்
கோட்டுடைப் பகட்டினம் விரவிக் கோன்முறை
காட்டினர் நிரைபட வுழுப காசினி
பூட்டுறு பொலன்மணி யாரம் போலவே.

இளமையும் திரட்சியும் உடைய ஏரியோடும் பொலியும் சிவந்த கண்களை உடைய எருதுகளோடு, நீண்டு வளைந்த கொம்புகளை உடைய எருமைக் கடாக்களை யும் ஏரிலே பூட்டி, உழத் தொடங்கி, அவ்வாறு உழும்போது அவைகள் துரிதமாக செல்லுமாறு கம்பினைக் காட்டி, வயலில் உழவு சால்கள் நிரையாகத் தோன்ற உழும் செய்கை இப்பூமியில் வரிசையான மணிமாலை அணிவது போலாகிறது.

உழவு சால்கள் வளைந்து காணப்படுதல் பூமிமேல் மணிமாலை அணிந்தது போல இருந்தன. 2

காற்றினு மனத்தினுங் கடுமை சான்றன
கோற்றொழில் வினைஞர்தங் குறிப்பிற் செல்லுவ
ஏற்றினஞ் சேறலு மிரிந்த சேலினம்
பாற்றின மருளவிண் படர்ந்து பாயுமால்.

உழும்போது, ஏரிற் பூட்டிய எருதுகள், காற்றுவேகம், மனோவேகம், இவற்றினி லும் விரைவாக நடந்து, கம்பால் காட்டி வழிநடத்தும் உழவனின் குறிப்பின்வழி வேகமாய் உழுது வருங்கால், அந்த எருதுகளின் காலில் தட்டுண்ட சேல்மீன்கள் எழுந்து வயலில் வட்டமிடும் பருந்துகளும் மருளும்படியாகத் துள்ளி மேல் எழுந்து வீழ்கின்றன. 3

சால்வளை தரவுழும் வயலிற் றங்கிய
வால்வளை யிளிவெரீஇ யலவன் மாப்பெடைச்
சூல்வளை புகுவதங் கறிஞர் சூழ்விலைக்
கோல்வளை மகளிர்பால் கூட்ட மொத்ததே.

உழவர்கள் வட்டமாக உழுத உழவுசால் பொருத்திய வயலில் முன் தங்கிய சங்குகளின் கூட்டம், உழவிற்குப் பயந்து, தம் இருப்பிடம் விட்டுப் பெயர்ந்து வேறு அங்குள்ள நண்டுப் புற்றுகளில் நுழைந்து செல்கின்றன, இதைப் பார்க்கும்போது அறிவாளி ஒருவன், தனது உணர்விழந்து மானத்தை விற்றுண்ணும் மகளிர் வீடு நுளைந்தது போலக் காணப்படுகிறது. 4

உலத்தொடு முறழ்புயத் துழவர் பொன்விளை
புலத்தினும் வியத்தகு வயலிற் போக்கிய
வலத்திடைப் பிறழ்மணி வேள்வி யாற்றிடும்
நிலத்திடைப் பிறந்தமின் னிகர்க்கும் நீர்மைய.

கற்போலும் வலியுடை தோள்கொண்ட உழவர்கள், பொன்விளையும் நிலத்தி லும் பார்க்க சிறப்புடைய இந்த வயல்களில் செலுத்திய கலப்பை உழுதசால்வழித் தோன்றிய மணிகள், யாகம் செய்கின்ற நிலத்தில் தோன்றிய ஒளியை ஒத்திருக்கும்.

வயல் நிலத்தை, பொன் விளையும் பூமியில் மேலாகவும், யாகம் செய்கின்ற பூமிக்கு ஒப்பாகவும் பேசிய ஆசிரியரின் உழவின் மேம்பாடு கூறும் சிறப்பைக் காண்க. 5

நாறுசெய் குநர்சிலர் நார நீர்வயல்
ஊறுசெய் குநர்சில ரொத்த பான்மையிற்
சேறுசெய் குநர்சிலர் வித்திச் செல்லுநீர்க்
காறுசெய் குநர்சில ரளப்பின் மள்ளரே.

இவ்வாருக இந்த வயல்களிலெல்லாம் நாற்றங்கால் செய்வார் சிலர், நீர் நிரம் பிய வயலை உழுது பண் செய்கிருர்கள் சிலர், உழுது பண்படுத்தி பின் மட்டம் செய் கிருர்கள் சிலர், சிலர் சேருக்குகிருர், சிலர் வித்திட்ட இடங்கட்கு நீர்வர வாய்க்கால் போடுகிருர், இவ்வாருக இந்தப் பல தொழில்களை எல்லாம் அளவற்ற மக்கள் செய்த வாறு வயல் நிலம் எங்கும் காணப்படுகிருர்கள். 6

குச்செனப் பரிமிசைக் குலாய கொய்யுளை
வைச்செனத் தளிர்த்தெழு நாற்றின் மாமுடி
அச்செனப் பதித்தனர் கடைஞ ராவியா
நச்சின மகளிரை நினைந்து நைந்துளார்.

குதிரையின் பிடரிமயிரினைக் கூர்க் குடுமியாக முடிந்தால் எப்படியோ அப்படி முடி யப் பெற்ற நாற்றுப் பிடிகளை உழவர் தங்கள் கையிலே எடுத்துக்கொண்டு அச்சுப் பதித்தால்போல் நேராக, கோணல், சாய்வு இன்றி தாங்கள் பண்படுத்திய வயல் களில் நாற்று நடுகிருர்கள். அவ்வாறு நடுகின்றபோது இந்த உழவர்கள் தாங்கள் தமது உயிர்போல் விரும்பி நேசித்த, காதற் பெண்ணை நினைந்து நைகிருர்கள், தங்கள் காதலியரை நினைந்து வருந்தியதாவது அவர்களும் உடன்கூடி வேலை செய்ய வந்திருந்தால் மகிழ்வாயிருக்கும் என்பதனுலேயே. 7

வாக்குறு தேறலை வள்ள மீமிசைத்
தேக்கின ருழவர்தந் தெரிவை மாதரார்
நோக்குறு மாடியி னுனித்து நோக்கினர்
மேக்குறு காதலின் மிசைதன் மேயினார்.

பின்பு இடையிடையே தாங்கள், தங்களது கைகளிலே, நல்ல வள்ளங்களில் கள்ளை வார்த்தார்கள். அந்தக் கள்ளைத் தமது கண்ணாடியில் தங்கள் பெண்கள் பார்க்கும் தன்மைபோல, உற்று நோக்கினார்கள். அதன்பின் மிகு ஆசைப்பாட்டோடும் அந்தக் கள்ளைப் பருகிக் கொள்கிறார்கள்.

கள்ளைக் குடிக்குமுன் அதைப் பாத்திரமொன்றில் வார்த்துக் கையிலேந்தி அதை உற்று நோக்கியபின் குடிப்பது கள் உண்பார் இயல்பு. இது இங்கே உழவர்வகையிலும் பேசப்பட்டது. 8

வாடுகின் றார்சிலர் மயங்கி நெஞ்சொடு
மூடுகின் றார்சில ருயிர்க்கின் றார்சிலர்
பாடுகின் றார்சிலர் பணிகின் றார்சிலர்
ஆடுகின் றார்சிலர் நறவ மார்ந் துளார்.

கள்ளை உண்டபின் மதி மயங்கி வெறியேறிக் கொண்டமையால், சிலர் வாடுகின்றார்; சிலர் மயக்க மிகுதியினால் புலம்பித் தம்மோடு தாமே கோபிக்கிறார்; சிலர் பெருமூச்சு விடுகிறார். சோம்பி இருந்தவர் சிலர் இப்போ உசார் கொண்டார்கள்; சிலர் பாடுகின்றார்கள். சிலர் தம்பாட்டில் கண்டாரையெல்லாம் கும்பிடுகிறார்கள். சிலர் ஆடுகிறார்கள்.

கள்ளுண்டு வெறியேறியோர் கருத்திழந்து செய்கின்ற செயல் யாவும் நாம் இக்காலத்துக் காணும் ஓர் காட்சி. அழகாக இங்கே சொல்லப்பட்டது. 9

அந்தரப் புள்ளொடு மளிக டம்மொடும்
வந்தடுத் தவரொடு மயக்கு தேறலை
இந்திரத் தெய்வத மிறைஞ்சி வாமமாந்
தந்திரக் கிளைஞர்போற் றாமு மேயினார்.

இன்னும் இவர்கள் கள்ளைத் தனியே தாம் உண்ணவில்லை. கள்ளுண்பாரின் இயல்பும் அதுதான். கூடிக்குடித்தல், ஆகவே இந்த உழவர்களும் தமது கள்ளை முதல் அதிகம் மொய்க்கிற வண்டிற்கும், பின் காகம், குருவி முதலியவற்றிற்கும் பக்கரில் நிற்கிற பெண்கள், வேறு பேருக்கும் பகிர்ந்து வார்த்துவிட்டுப் பின் தாங்கள் இந்த மயக்கம் செய்யும் கள்ளை உண்கிறார்கள். உண்ணுமுன் இந்திரக்கடவுளை வணங்கிவிட்டு வாம மதத்தினர் கைக்கொள்ளும் தந்திரங்களை மேற்கொள்ளுவார் போல தாமும் தமது மனைவியர் முதலியரோடு வணக்கத்துடன் உண்கிறார்கள். வாம மதத்தினர் சிவபிரானை வணங்கினாலும் மது மாமிச வர்க்கமும் கையாளுவார்கள். அவர்கள் பூசைப் பொருளில் மதுவும் ஒன்றாகும். இதைச் சத்தி வழிபாடு எனக்கூறுவர். 10

வில்லூறு நாணினர் விரகத் தீயினர்
உள்ளூறு முயிர்ப்பின ருலையு நெஞ்சினர்
தள்ளூறு தம்முணர் வின்றிச் சாம்பினர்
கள்ளினு முளதுகொல் கருத்த ழிப்பதே.

உழவர்களும் அவர் மனைவிமாரும் வேறு வேலை செய்து நின்றார். அனைவரும் கள்ளை உண்டார். உண்டபின் என்னுகுகிறார் எனில் வெட்கத்தை அடியோடு மறந்திட்டார்கள். அவர்கட்கு நினைவுகள் காம வெதுப்பாக மாறுகிறது. உள்ளே மூச்சை அடிக்கடி இழுத்துப் பெருமூச்சாக விடுகிறார்கள். திடமில்லாதபடி மாறு படும் நெஞ்சினை உடையராகிறார்கள். அவர்களை வாழ்வில் நல் நிலைக்கு ஆக்குகின்ற நல் உணர்வுகள் இல்லாமல் அவை இப்போ மது மயக்கத்தினால் அழியப்பெற்று வாடிச் சாம்புகிறார்கள். ஆகவே வயலில் வேலைக்கு வரும்போது இயல்பாக வந்தவர் கள் இப்போ மதுவெறியால் வேலையும் செய்ய இயலாத நிலை கொண்டனர். ஆகவே கள்ளினும் பார்க்க மனிதனுடைய நல்லுணர்வை அழிக்கக்கூடிய பொருள் வேறுண்டோ? 11

பளிக்கறை யன்னதோர் படுகர்ப் பாங்கினுந்
தளிர்ப்புறு செறுவினுந் தவறுற் றேகுவார்
தெளிப்பவ ரின்மையி னெறியிற் சென்றிலர்
களிப்பவர் தமக்குமோர் கதியுண் டாகுமோ.

கண்ணாடி போன்ற பரந்த நிலத்திலும் தளிர்த்த புற்றரையிலும் இயல்பாக நடக்க முடியாதவரும் நடந்து செல்லக்கூடிய இடத்திலும் மதுவெறியினால் பெரும் பாலும் இந்தப் பெண்களும் ஆண்களும் தவறிக் கொண்டு செல்கிறார்கள். இவ்வா றாக வழுக்கித் தவறுவார் கைபிடித்து வழிப்படுத்துவார் இன்மையால் இவ்வண்ணம் சறுக்கி நெறியால் போக இயலாதிருக்கிறார்கள். ஆகவே நெறிநீதி இல்லாது சும்மா வெறும் களிப்புடையார்க்கு ஓர் கதி உண்டோ? இல்லை.

இயல்பாக மனிதன் தன் உடலில் சோம்பல் எய்த அதனால் மனம் சலிப்படைய அந்த நிலையினின்றும் நீங்கி உற்சாகமடைய வேண்டுமென்றே மதுவை உண்கிறான். அதை உண்டவுடன் அவனுக்கு ஒரு களிப்பை மது கொடுக்கிறது. ஆனால் அதே நேரத்தில் அவனுடைய நன்மை நிலையைக் கெடுத்தே அந்தக் களிப்பை மது கொடுத் தது. நன்மை கெட்டவுடன் தீமையே பெருகும். இதனால் அதை உண்டவன் தனக் கும் பொதுவாகச் சமூகத்திற்குமே உதவற்றவன் ஆகிறான்.

கள்ளுண்பார் நஞ்சுண்பவர். (குறள்) 12

இன்னன பற்பல வியற்றி யீண்டினர்
உன்னருந் தொல்லையி லுணர்வு வந்துழிக்
கன்னெடுந் திரள்புயக் கணவ ரேவலில்
துன்னின ரவரொடுந் துவன்றிச் சூழ்ந்துளார்.

இவ்வாறாக மது வெறியால் பல விபரீதச் செயல்களைப் புரிந்தவர்கட்கு வெறி முறிந்து, பழையபடி நல்ல உணர்வு வந்தபின் பருத்தகல் போன்ற பெருந்தோளினை உடைய கணவன்மார் ஏவலில் இந்த வயலில் வேலை செய்யும் பெண்கள் யாவரும்

களைபிடுங்கும், நாற்று நடும் வேலையை ஆரம்பித்தார்கள்; இப்போது தங்கள் கண வன்மாரோடு நெருங்கி நின்று வேலை செய்வாராயினர். 13

மள்ளர்தம் விளைபுரி மழலைத் தீஞ்சொலார்
கள்ளூறு புதுமணங் கமழும் வாலிதழ்
உள்ளூறு நறுவிரை யுயிர்த்து வீசிய
வெள்ளிய குமுதமென் மலரின் மேவுமே.

உழவர்களின் ஏவல் வேலை செய்கின்ற மழலைச் சொற்களால் செல்லமாகப் பேசு கின்ற இந்தப் பெண்கள் கள்ளுண்ட புதுமணம் அவர்கள் மூச்சிடும்போது வெளியே வந்து, அவர்கள் நெற்பயிருக்கிடையே வளர்ந்த களைகளைப் பிடுங்கும்போது, சேர்த் துப் பிடுங்கி வீசுகின்ற நல்ல வாசனையுடைய குமுத மலரினை மேவிக் காணப்படும். 14

நட்டதோர் குழுவினை நடாத தோர்குழு
ஒட்டலர் போலநின் றெறுத்த லுன்னியே
அட்டன ராமென வடாத வான்களை
கட்டனர் வேற்றுமை யுணருங் காட்சியார்.

வயலிலே ஒரு கூட்டம் ஆட்கள் நாற்று நடுகிறார்கள், இன்னோர் பகுதி நட்ட இடங்களில் வளர்ந்து, ஒருவரின் பகை அவரைத் துன்புறுத்துவதுபோல் நெற்பயிரை வளரவிடாது மங்கச் செய்கின்ற களைப்புற்களைக் களைந்து எடுக்கின்றார்கள். இஃது பகைவரைக் காலம் பார்த்துப் பருவத்திலே அழிக்கவேண்டுமெனச் செயல் புரிவார் போல இருக்கிறது. மதுவுண்ட மயக்கத்திலும்கூட நெல்லையும் புல்லையும் வேற்றுமை உணரும் காட்சியுடையராய் இருக்கிறார்கள். 15

ஏயின செயலெலா மியற்றி வேறுவே
றாயிடை வேண்டுவ தமைய வாற்றியே
மாயிரும் புவிமிசை மகவைப் போற்றிடுந்
தாயென வளர்த்தனர் சாலி யீட்டமே.

இவ்வாறு ஏவப்பட்ட பொருந்திய செயல்களைச் செய்தும், இன்னும் வேறு வேறு அவ்விடத்து செய்யவேண்டிய நீர்ப்பாய்ச்சல், களை கட்டல் முதலிய செய்தும், தன்னு டைய பிள்ளையைத் தாய் அக்கறையோடும் வளர்ப்பதுபோலச் சிறப்பாகச் செஞ்சாலி நெற்பயிர்களை வளர்த்து வருகிறார்கள். செஞ்சாலி நெல், நெல் வகையிற் சிறந்த வொன்று. 16

மன்சுடர் கெழுமிய வயிர வான்கணை
மின்சுடர் தூணியின் மேல கீழுறத்
தன்சுடர் பொலிதரச் செறித்த தன்மைபோற்
பொன்சுட ரிளங்கதிர் புறத்துக் கான்றவே.

இப்போது இந்த நெற்பயிர்கள் எல்லாம் வளர்ந்து முற்றிப் பொன் ஒளிபோல் கதிரினை வெளியே நீட்டி நின்றன. இந்தப் பச்சை நிறத்தோடு பொலியும் நெற்பயிர், கதிரை வெளித் தோன்றக் காட்டிய தன்மையை எதற்கு ஒப்பிடலாமெனில், ஓர் அம்புகள் வைக்கின்ற கூட்டிலே ஒளியுடைய சிறகுகள்கொண்ட வைர அம்பு ஒன்றை யெடுத்துத் தலைகீழாகக் கூட்டில் வைத்தால் எப்படி அம்பின் சிறகுடைய அடிப்பாகம் தோன்றுமோ அப்படியே இந்த நெற்கதிர் காணப்படுகிறது.

இதனால் நெற்பயிரின் விளைவும் கதிரின் தாக்கமும் பெரிதாக இருக்கிறது எனக் கூறப்பட்டது. 17

பச்சிளங் காம்புடைப் பணையின் மீமிசை
வச்சிரத் தியற்றுமோ ரிலைகொள் வான்படை
உச்சிமே லுறநிறீஇ யொருங்கு செய்தெனக்
குச்சுறு சாலிமென் கதிர்கு லாவுமால்.

பசிய இளங்காம்பு உடைய ஓர் மூங்கில் தண்டின் மேலாக உச்சியிலே இலைபோலும் கூர்மையான ஓர் வச்சிரத்தினால் ஆக்கப்பட்ட வேலைக் குற்றி வைத்தால் எப்படி அது காணப்படுமோ அப்படியும் கூர்மையாக நீண்டு விளங்கும் இந்த நெற்கதிர்கள் காணப்படும். அந்த நெற் பயிர் விளைவு முதிர்ச்சியினாலே மூங்கில்போல் பருத்து விளைவுக்கேற்ற பருமனை பாரித்த கதிர்களைப் படைபோல ஈன்று நின்றன. 18

சுற்றுறு பஃறலைச் சுடிகை மாசுணம்
பெற்றுறு குழவிகள் பெயர்த லின்றியே
முற்றுறு நிவப்பொடு முறையி னிற்றல்போல்
நெற்றுறு பசுங்கதிர் நிமிர்தல் மிக்கவே.

சூழ நிற்கும் பல தலைகளையுடைய நாகபாம்பு சீறி மேலெழுந்து நிற்கும் போது அதன் குட்டிகள் அதனைச் சூழநின்று தாமும் தாய்போல மேலே நிமிர்ந்து நின்றால் எப்படியோ அப்படிப்போல இப்போது நெற்பயிர்கள் ஈன்ற கதிர் நடுத்தண்டு நீண்டும் சூழவுள்ள கணுக்கள், அதனை வளைந்தும் பொருந்த நின்றன.

நாகபாம்பு கோபத்தாற் சீறினால் வால் நுனிமட்டும் கீழிருப்ப மேலெழுந்து நிற்கும். அதன் குட்டிகள் ஈன்ற 28ஆம் நாள் தாங்கள் நஞ்சைப்பெறத் தாயைப்போல மேலெழுந்து சூரியனைநோக்கி நிற்கும். ஆனமையால் போலும் இங்கே நெற்கதிர்கள் பொத்தியாகக் குடலையில் நின்றும் வெளிவந்து பூக்களோடும் மலர்ந்து நேராக நிமிர்ந்து கிளைகளான கணுக்களோடும் நின்றன என உவமித்தார். 19

மையுறு கணிகையர் மகிழ்நர் வந்துழிப்
பொய்யுறு மளியெனப் பயனில் புன்கதிர்
கையுறு முவகையாற் பணியுங் கற்பினோர்
மெய்யுறு பரிவென விளைந்து சாய்ந்தவே.

தனது சிந்தையை வேறொருவர்பால் வைத்துக்கொண்டு பாசாங்காகத் தனது கணவனைக் கண்டபோது சிரித்து மருட்டுகிற தாசிப்பெண் உள்ளமானது தான்

செய்வது சரியென எண்ணி அஞ்சாது நிற்பதுபோல நெற்சப்பிக் கதிர்கள் பய னற்றுக் காணப்படுகின்றன. அஃதன்றி தனது கணவனிடத்து விசுவாசமுள்ள கற் புள்ள உத்தமி எவ்வாறு கணவனைக் கண்ட நேரம் உண்மையான பணிவாக இருப் பாரோ அதேபோல நெற்கதிர்கள் விளைந்து சாய்ந்தன.

தனது கணவனிருப்பவும், வேறொருவரிடத்துச் சிந்தை கொண்ட பெண், இருட் டிலே இருப்பவர் நன்மைதீமையறிந்து செயற்பட முடியாததுபோல் இருப்பவள். ஏனென்றால் இருட்டில் இருப்பார்க்கு வெளிச்சத்தின் உதவி இல்லாத போது எதனையும் அறியமுடியாது. அதேபோல ஒருவர் தனது அறிவெனும் ஒளிகொண்டே தனது தீமைகளை உணரலாம். ஆனமையாற் போலும் ''மையுறு கணிகையர்'' என அவர்கள் இருளான உள்ளத்தைச் சொன்னார்.

கற்புடைய மகளிரைத் தெய்வமெனச் சொல்வர், தெய்வங்கள் கிருபையும், மகிழ்வும், கருணையும் இயல்பாகப் பொருந்தப்பெற்றன, ஆகவே கற்புடை மகளிரை ''கையுறும் உவகையால் பணியும் கற்பினோர்'' எனவும் கூறினர். இன்னும் ஒழுக்க மில்லாத பெண்களால் உலகிற்கு பலனேதும் இல்லாது, தீமையே விளையும். நெற் சப்பி அதை அறுவடைசெய்து, அதை அகற்ற, உபத்திரவம் தருதல்போல, இத் தாசிகளும் உலகிற்குப் பெரும் துயரம் தருவர்; அதனால் சப்பிக்கதிர்களை தாசிகளுக் கும், கற்புடைய மகளிரால் அவரின் உயர்வான தெய்வத் தன்மையால் உலகிற்கு பெரும் பேறுவதுபோலவும் நல்ல கதிர்களைக் கற்புடைய மகளிருக்கு உவமித்தும் சிறப்பித்தமை காண்க. 20

மாலுறு பொன்னகர் மருவு மன்னற்குப்
பாலுறு தீம்பதம் பலவு மார்த்தியே
மேலுறு சாலியின் விளைவு நோக்கியே
கோலிநின் றரிந்தனர் குழாங்கொண் மள்ளரே.

நெற்கதிர்கள் விளைந்து முற்றின. இப்பால் செய்ய வேண்டியது அரிவிவெட்டல். ஆகவே அதற்கு முன்பாக மருத நிலத்திற்கும், பொதுவாக வேளாளர் என்ற வகுப் பைச் சார்ந்தார்க்கும் தெய்வம் இந்திரபகவான். ஆகவே, இந்திர பகவானுக்கு அஞ் சலியாகவும், (இது மட்டும் அல்லாதுபோக விருப்பம்பெரிதும் கொண்ட தேவ உல கத்தார்க்கும் தெய்வம் இந்திரன்) தங்கள் வயலில் இந்த உழவர்கள் சென்று நெற் கதிர்களைப் புதிதாக (இதைப் புதிர் எனச் சொல்வர்) எடுத்துப் பாலோடு சேர்த்துப் பதம்செய்து இந்திர தேவனுக்கு நிவேதித்து, வழிபாடு செய்வர். இந்தக் காரியங் கள் பலவும் செய்த பிற்பாடு, நெற்களின் விளைவையறிந்து, வயல்சென்று கூட்ட மாகக் குழுமிநின்று அரிவாள்கொண்டு கோலி அரிவியை அரிவார்கள் இந்த வேளாண் மக்கள். 21

அரிந்திடு சுமைகளா லவனிப் பேருடல்
நெரிந்திடச் சேடனு நெளிந்து நீங்கிடத்
தெரிந்திடும் போர்கள்சே ணளவுஞ் சேறலால்
விரிந்திடு கதிர்சுலா மேரு வாயவே.

இவ்வாறு அரிந்திட்ட நெற்சுமைகளைக் கொண்டுவந்து ஓரிடத்திற் சேர்த்து, அவை களைப் பெரிய, பெரிய சூடுகளாக அடுக்குவார்கள். அவ்வாறு அடுக்கப்பெற்ற சூடு

சள் முறுகிவிளைந்த நெற்கதிர்களைக் கொண்டமையால் அது பூமிக்கே பெரும் பார மாகிறது. விளைவு நன்றாக இருந்தபடியால் அவர்கள் வைத்த சூடும் பெரிதாகி, பார மாகி, இதன் சுமையைப் பூமி தாங்காது அதன் உடலாகிய மண் நெரியவும், அதனால் பூமியைத் தாங்கும் ஆதிசேடன் என்னும் பாம்பு உடல் நெளியவும், அசைந்து நீங்க வும் இருக்கிறது இந்தக் கதிர்ச் சூடுகள். இந்தச் சூடுகள் மிகவும் பெரிதாக அடுக்கப் பெற்று, வானளவும் நீண்டு நிற்பதால், சூரியதேவன் வலம்வரும் மகாமேரு மலைக் கும், இந்தக் கதிர்ச் சூட்டினை ஒப்பிடலாம் போலும். 22

ஏற்றொடு பகட்டின மிசைத்துப் போருரு
மாற்றினர் வலமுறை திரித்து வாழ்த்தொலி
சாற்றினர் பரனொடு தமது தெய்வதம்
போற்றினர் மீமிசை பொலிகென் றோதுவார்.

நல்ல எருதுகளோடு எருமைக் கடாக்களையும் சேரக் கந்தாகப் பூட்டிய பின்னர் கதிர்ச் சூட்டினைத் தூய்மையாக்கிய நல்ல நிலத்திலே தள்ளிக் குவித்துப் பூட்டிய எருது களையும், கிடாக்களையும், நெற்கதிர்க் குவியல்மேலாக ஏற்றி, வலமுறையாக அவை கள் திரிந்து வரும்படி வளைப்பார்கள். அவ்வாறு எருதுகளை வளைத்து வரும்போது அந்த எருதுகளை நடத்துவதற்குப் பொலி எனச் சொல்லியே நடத்துவார்கள். அங்கு எச்செயலுக்கும் முதன்மைப்பதமாகப் பொலி எனச் சொல்வார்கள், அதோடு சிவ பிரானை வணங்கி, தமது குலதெய்வம், காவல்தெய்வம் முதலியோருக்கும் வழிபா டாற்றிப் பொலி பொலியென ஓதுவர். 23

தொங்கலம் பூமுடித் தொழுவர் போரினை
அங்குறப் படுத்துவை யகற்றி யாக்கிய
பொங்கழிப் பதடிகள் புறத்து வீசியே
எங்கணு நெற்குவை யியற்று வாரரோ.

இப்பால் நல்ல பூமாலையணிந்த முடியினையுடைய உழவர்கள், எருதுகள் வளைத்து நெல்லும், வைக்கோலும் (வைக்கோலையே பொலிக் கொடியெனப் பெயரிட்டழைப் பர்) வேறாகியவுடன் அவைகளைக் கோல்களாலும், கைகளாலும் பிரித்தெடுப்பர். பின் னர் நெற்சப்பிகளையகற்றி வீசிவிட்டு எல்லாவிடத்தும் நெற்குவியலாக்குவார்கள். 24

களப்படு கைவலோர் கால்க ளான்முகந்
தளப்புறு நெற்றுழா மவற்றுண் மன்னவற்
குளப்படு கடன்முறை யுதவி மள்ளருக்
களித்தனர் வேண்டிய தனைய நாட்டுளோர்.

சூடு மிதிக்கும் களத்துக் குவியலாக்கிய இந்த நெல்லினை, நெல்அளக்கும் தொழி லில் கைதேர்ந்தார்கள், குவித்த நெல்லினை மரக்காலினாலே அளந்தளந்து, முதலில் அரசருக்குரிய ஆறில் ஒரு பங்கைக் கொடுத்தார்கள், பின்னர் இதுகாறும் தங்கள் வயலில் வேலைசெய்தோருக்கு அவர் வேண்டிய நெல்லைக் கூலியாகக்கொடுத்து மகிழ்கிறார்கள், இத்தொண்டை நாட்டிலுள்ள வேளாளப் பிரபுக்கள்.

ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறிவாளன் திரு. (குறள்) 25

சொற்குவை வழிபடப் புகழிற் றேன்றுதம்
மிற்குவை வேண்டுவ தேவி யெஞ்சிய
நெற்குவை குரம்பையி னிரப்பு வித்தனர்
பொற்குவை யரிந்தனர் பொதிவித் தென்னவே.

இப்பால் புலவர்களால் சிறப்பித்துப் புகழ்ந்து பாடப்பெற்ற தமது மாளிகைக்கு வேண்டிய நெல்லை அனுப்பிவிட்டு, மிச்சமாகவிருக்கும் நெல்லை அங்கு கூடுகளில் நிரப்பி வைத்தார்கள். இதனைப் பொற்குவியலை அரிந்து சேமிப்பார்போலச் செய்கின்றார்கள். 26

தலத்திடை வேறிடத் தொதுங்குந் தண்ணிய
குலத்திடைப் பிறந்தவர் கூட்ட மாயென
நலத்திடை வந்திடு முதிரை நல்வளம்
நிலத்திடை யொருசிறை விளையு நீரவே.

இப்பூமியிலே பெருமக்கள் வாழும் கூட்டத்தினரிடம் பிரிந்து ஒதுங்கி வாழும் சிறு தொழில் (மதுச்சேர்த்தல், மாமிசம் விற்றல் முதலியன) செய்யும் மக்களைப்போல, இந்த நெல் விளையும் பூமிக்கு அயலாக, நலமாகப் பெருகி வரும், புன்செய் தானியங்கள் (குரக்கன், சோளம், பயறு முதலியன) விளையும் நிலங்கள் காணப்படுகின்றன. இங்கே இத்தானியங்கள் ஒரு சிறையாகச் சிறந்து விளைவன. 27

பிறப்பதும் வளர்வதும் பின்னர் மூப்புவந்
திறப்பதும் வைகலு முலகி லேய்ந்தெனச்
சிறப்புட னடுவதும் பருவஞ் செய்வதும்
மறப்பதுந் தொகுப்பது முலப்பின் றுயவே.

உலகிலே, உயிர்கள் பிறப்பதும் வளர்வதும், பின்னர் மூப்பு வந்தடைய இறப்பதும், நாள்தோறும் காணப்படும் இயற்கைபோல, இந்த நெல்லினை வயலிலே வித்திடுதலும், வளர்ப்பதும், பின்னர் முற்றியபின் அரிந்து சேர்த்தலும் குறைவின்றி எக்காலமும் நிகழும் செயலாக இருக்கிறது. இது பாலியாற்றின் நீர்வளச் சிறப்பினுற் போலும். 28

முழவொலி விண்ணவர் முதல்வற் காக்குறும்
விழவொலி கிளையொலி விரும்பு மென்சிறர்
மழவொலி கடைசியர் வள்ளைப் பாட்டொலி
உழவொலி யல்கலு முலப்பு றுதவே.

இன்னும் இந்த நாடெங்கிலும் முரசப்பறை ஓசையும், மருதப்பறை ஓசையும் இந்திரதேவனுக்கு விழாக்கொண்டாடும் ஓசையும், யாவரும் விரும்பும் மழலைச்சொல் பேசுகின்ற குழந்தைகள் ஓசையும், உழத்தியர்கள் வள்ளைப் பாட்டு (நெற் குத்துப் பாட்டு) ஓசையும், உழுவாரின் ஓசையும் எஞ்ஞான்றும் கேட்கப்படும். 29

காலுற நிமிர்ந்திடு காமர் சோலையும்
நீலமுங் கமலமு நிறைந்த பொய்கையும்
ஆலையங் கழனியும் அநங்கற் காயுத
சாலைக ளிவையெனச் சாற்ற நின்றவே

இந்தத் தொண்டை நாட்டில் நீண்டு வளர்ந்தோங்கிய மரங்கள் நிறைந்த அழகிய சோலைகளும், நீலோற்பல மலர், தாமரை மலர் நிரம்பி மலர்ந்து தோன்றும் பொய்கைகளும், கருப்பஞ்சாறு பிழியும் இயந்திர ஆலைகளும், நெற்கழனிகளும் நிரம்பிப் பரந்து எங்கும் காணப்படலால் இவைகள் யாவும் மன்மதனுடைய ஆயுதசாலைக ளெனத் தோன்றி நிற்பன.

சிற்றின்ப நுகர்ச்சிக்குப் பொருட்செல்வம் நிறைவு, அழகிய காட்சிகள், ஆயின காரணமாதலாலும் மன்மதன் இன்ப நுகர்ச்சியை உயிர்களிடத்து ஊக்குவிப்பவன் ஆதலாலும் மன்மதனது ஆயுதசாலைகளென இவை கொள்ளப்பட்டன. 30

நெறியிடை யொழுகலா விழுதை நீரரை
மறலிதன் னகரிடை வருத்தல் போலுமால்
குறைபடத் துணித்தவுண் குவைசெய் கன்னலை
அறைபடு மாலைக ளிடையிட் டாட்டலே.

இப்பூமியில் பிறந்து தீயவொழுக்கத்தைக் கடைப்பிடித்து வாழ்ந்தோரை யமனுடைய தூதர்கள் யம உலகத்தில் செக்கிலேயிட்டு நெரித்துத் துயர்செய்கின்ற தன்மை போல், துண்டாக வெட்டிய கரும்புகளை எல்லாம் யந்திரத்திலே போட்டு ஆட்டிச் சாறு செய்கிறார்கள். 31

ஏறுகாட் டியதிற லிளைஞ ரெந்திரங்
கூறுகாட் டியகழை யழுங்கக் கோறலுஞ்
சாறுகாட் டியதரோ யாதுந் தம்மிடை
ஊறுகாட் டினர்க்கலால் உலோப ரீவரோ.

சிங்கம்போலும் வலியுடையவராய் இருந்த கரும்பு ஆலைகளில் வேலை செய்யும் இளைஞர்கள் வெட்டுண்ட துண்டுகளை யந்திரத்தில் இட்டு நெரித்தலும் அவைகள் சாறுகப் பெருகின. கரும்புகள் தம்மிடத்துள்ள சாற்றை நெரித்தபொழுது வெளியே தந்தன. ஆகவே பொருள் ஈதல்செய்யாத உலோபியான ஒருவன் அப்படி வெருட்டி அடித்துத் துன்புறுத்துவோர்க்குத்தான் தனது பொருளைக்கொடுப்பான். 32

மட்டுறு கழையினும் வலிதிற் கொண்டபின்
இட்டகொள் கலங்களி னிருந்த தீம்புனல்
தொட்டிடு கடலெனத் தோன்று மன்னவை
அட்டதோர் புகைமுகி லளாவிற் றெருக்குமே.

இனிய சாற்றையுடைய கருப்பஞ் சாற்றைப் பிழிந்து எடுத்த பின் சாற்றைப் பெரிய பெரிய, அண்டாக்களிலே நிரப்பிக் காய்ச்சுகிறார்கள். இவைகளை நோக்கும்

போது கருப்பஞ்சாற்றுக் கடல்போலத் தென்படுகிறது. இதுவன்றி இவைகளைக் காய்ச்சுங்கால் எழுகின்ற புகையே கடல்மேல் படியும் மேகம்போலக் காட்சிதருகிறது.

கூடின தேனிசை யிளமென் கோகிலம்
பாடின மயில்சிறை பறைய டித்தன
வாடின வஞ்சிதந் தலைய சைத்திடா
நாடின பாதவம் புகழ்வ நாரையே.

தேன் ஈக்கள் எங்கும் இரைந்து பாடலுக்குச் சுருதி இசைகூட்டுவனபோல்வன. மென்மையான இளங்குயில்கள்பாடின. மயில்கள் சிறகுகளை விரித்து அடித்துப் பாட்டுக்குப் பறையடிப்பதுபோல நிற்பன. கொடிகளெல்லாம் காற்றால் அசைவுண்டு நடனமாடுவாராயின. இச்செயல்களையெல்லாம் பார்த்துப் பாராட்டித் தலையசைப்பார் போன்று மரங்கள் காற்றினால் அசைவுண்டு தலையசைப்பன. நாரைகள் புகழ்வன போன்று நிமிர்ந்து நின்றன. 34

காசொடு நித்திலப் பொதியுங் காட்டியே
பாசடை மாதுளை சினையிற் பைங்குயில்
பேசிட நிற்பன பெறீஇயர் வம்மென
வீசுதல் கருதியே விளித்தல் போன்றவே.

பொன் காசுகளோடு விலை உயர்ந்த முத்துக்களையும் சேர்த்து முடிச்சாக வைத்திருக்கும் தன்மைபோல மாதுளம் பழம்தூங்க, பச்சைப் பசேலென விளங்கும் இலைகளையுடைய மாதுள மரத்தில் நல்ல ஒரு கொம்பிலே குயில் கூவிக்கொண்டிருக்கின்றது. இது எதுபோல என்றால், ''இதோ நான் காசும் முத்தும் முடிந்து வைத்திருக்கிறேன் (மாதுளம் பழத்தை) இதை விரும்புவார் வாருங்கள் தருவேன்'' என கேட்டார்க்கு அதை வீசிவிடுதல் கருதியே கூவி அழைப்பதுபோல இருக்கிறது.

படிக்கின்றிலை பழநித்திருநாமம் படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை முசியாமல் இட்டுமிடிக்கின்றிலை

என்னும் அருணகிரியார் அருமைவாக்கு இங்குமேற்கூறிய பாடற் கருத்தோடு ஒப்பிடவும் கூடும். 35

சித்திரக் கதலிமா வருக்கைத் தீங்கனி
துய்த்திட வரும்பய னுதவுந் தோற்றத்தால்
உத்தம முதலிய குணத்தி னோங்கிய
முத்திறத் தவர்கொடை மொழிய நின்றவே.

அழகிய வாழைமரம், மாமரம், பலாமரம் இவைகள் யாவும் இந் நாட்டிலே செழித்து வளர்ந்து நல்ல வாழைப் பழம், மாம்பழம், பலாப்பழம் முதலிய கனி வகைகளை உண்பார்க்குத் தாமாகவே பயன் கருதாது கொடுக்கும் எனும் தோற்றமுடையனவாக நிற்கின்றன. இது எதுபோல என்றால் முதல், இடை, கடை என்னும் முத்திறத்துக் கொடையாளிகள் போலக் பயனப்படுவன.

முத்திறத்துக் கொடையாளிகள்போல வாழை, மா, பலா என்பன அமைவது எப்படி எனில் கொடையாளிகள் முத்திறப்படுவர். உத்தமர், மத்திமர், அதமர். உத்தமர் ஒருவர் விரும்பிய பொருளை அவர் கேட்குமுன்னே அவரின் தேவையை உணர்ந்து தாமாகவே கொடுப்பர்; அவரைப் போன்றது வாழைப்பழம். அதை உண்ப

தில் ஏதும் சிரமமில்லை. தோலை மேலால் தட்டிவிட்டு முழுமையாகவே உண்ண லாம். எல்லாப் பழமும் இனிமையுடையது. ஆகவே அது உத்தம கொடையாளர் போலும். மாம்பழம் அதன் தோலையும், கொட்டையையும் நீக்கியபின் தான் உண்ண முடியும், அதோடு புளி, பால் முதலிய சங்கடங்களுமுண்டு. அதேபோல இடைப் பட்ட கொடையாளர்கள் ஒரு பொருளைக் கேட்டால் கொஞ்சம் யோசித்து, சிரமப் பட்டுத்தான் தருவர். ஆகவே, இவரை மாம்பழத்திற்கு ஒப்பாகக் கூறினர். மூன்றுவது கடைப்பட்ட கொடையாளர், இவரிடம் பொருளை ஒருவர் கேட்டால், (பொருள் கேட்கப் போவதே முதலில் சிரமம், அப்படிப் போய்க் கேட்டாலும்) இல்லை, இல்லை எனப் பலகால் சொல்லிய பின்னர் கேட்பாரின் தந்திரவார்த்தைகளாலும், நெருக்கு தலாலும் கடைசியாகக் கொடுப்பார். இவரைப்போலப் பலாப்பழமும் புறத்தோலில் முள்ளுடையது. அதை வெட்டினுல் உள்ளே தண்டு, குந்து, ஒட்டும் தன்மை யான பால் இவை யாவும் உண்டு. இவ்வளவும் நீக்கிப் பெரும் சிரமத்தோடுதான் பலாப்பழத்தை உண்ணவேண்டும். ஆகையால் பலாப்பழம் கடைப்பட்ட கொடை யாளர்க்கு உவமிக்கப்பட்டது. 36

வீசுகால் பொரவசை விசும்பிற் றுழைகள்
தேசுலாம் பரிதிமெய் தீண்டுஞ் செய்கைய
காசினி தன்கையாற் கலைவெண் டிங்கள்போல்
மாசுரு வகைதுடைத் திடுதல் மானுமே.

வீசப்படுகின்ற காற்றினுல் அசையுண்டு, அசையுண்டு வானளவு என உயர்ந்து தோன்றுகின்ற தென்னை மரங்கள் யாவும் இப்படிக் காற்ருல் அசைவுண்டு நிற்கும் தன்மையை நோக்குமிடத்து எப்படி இருக்குமோ எனில் உடலிற் சந்திரன் கருமை உடையவன். அவனைப்போல எனது நாயகனுன சூரிய பகவானுக்கு உடலில் கருமை வரக்கூடாது என எண்ணி இப்பூமிதேவியானவள் தன் கைகளைச் சூரியதேவனுடைய உடலைத் துடைக்க நீட்டியவாறு போலக் காட்சிதருகிறது. 37

வாசநீள் பொதும்பரின் மைந்தர் மாதர்கள்
காசுநூன் மேகலை பரியக் கைவளை
பூசலிட் டலமரப் புணருஞ் செய்கைகண்
டாசைமிக் கழுங்குவ பிரிந்த அன்றிலே.

மலர்வாசம் நிரம்பிய பூஞ்சோலைகளிலே காதலர்களும் அவர் காதலியரும், காதலி மாருடைய கைகளிலே அணியப்பெற்ற காப்புகள் நெரியும்படியும் அரையில் அணிந்த ஒட்டியாணம் முதலிய ஆபரணம் நெரியும்படியும் இறுகத்தழுவி அணைத்து முத்தமிட்டு மகிழ்வாகப் பேசி கூடி உலாவிவருகின்ற இந்தக் காதல் அன்பின் காட்சியினைக் கண் ணுற்று அச்சோலையில் இருக்கின்ற சோடி பிரிந்த அன்றில் பட்சிகள் தாமும் அவர் போல் மகிழ்ந்து இன்புற நினைந்து பிரிந்த சோடியினை நினைந்து கூவிக் கதறி அழைக் கின்றன. 38

கானுலா நந்தன வனமுங் காரென
வானுலாந் தண்டலை மருங்கும் வைகலும்
வேனிலா னன்னவர் மகளிர் மேயினர்
ஊனுலாங் குரம்பையு ளுயிருற் றென்னவே.

வாசனையுடைய பூக்கள் மலர்ந்து சிறந்து விளங்கும் பூஞ்சோலையிடத்தும், வானளவு எனும்படி உயர்ந்த மரங்கள் நிறைந்த ஏனைய சோலைகள் இடத்தும் எந்நாளும் மன்மதனைப்போல அழகினையுடைய ஆடவர்களும், இரதியைப்போல அழகும் பொலிவும் உடைய பெண்களும் அன்பினால் மகிழ்ந்து பொருந்தி வாழ்ந்து வருகிறார்கள். இப்பொருத்தம் உடலிடத்து உயிர்பொருந்தி நிற்கும் தன்மைபோல இருப்பது. காதல் தெய்வீகமானது. இங்கே உடலும், உயிரும் போல இந்தக் காதலர்களும் காதலியரும், காதலால் மகிழ்ந்து, அன்பினால் இணைந்து; ஓர் உயிரும் ஈருடலுமாக அன்பினால் இணைந்த காட்சி பொலிந்தது சோலையெங்கும்.

நீர்வளத்தால் மிகுந்து, விளைவால் பெருகி, வளத்தால் ஓங்கி, செல்வத்தால் மிகுந்து, கொடையால் சிறந்து, இன்பத்தால் மகிழ்ந்த காட்சி எங்கும் இந்நாட்டில் மலிந்தது. 39

அசும்புறு மகன்புன லறுத சூழலின்
விசும்புற வோச்சிய விரைமென் றுதினற்
பசும்பொனிற் குயிற்றிய பதியிற் றூபிகைத்
தசும்பெலாம் வெள்ளிய தாக்குந் தாழையே.

ஊற்று நீரெனப் பெருகிப் பரந்து ஓயாத நீர்ப்பசுமை குறையாத இடங்களில் வளர்ந்து, மதர்த்தோங்கிய நல்ல தாழை மரங்கள் அழகான பூக்களைமலர்ந்துநின்றன. இப்பூக்களில் உள்ள மரகந்தப் பொடிகள் காற்றினால் அள்ளுண்டு தேவ உலகம்சென்று அங்கே தேவஉலகத்தில் பொன்னினால் செய்யப்பெற்ற கோபுரக் குடங்களை வெண்மை நிறமாக்கி வெள்ளியாகவும் மாற்றுகின்றன. நீர் ஓயாது சுரக்கும் பூமியில் நிற்கும் தாழை மரம் மதர்த்து ஓங்கி வளர்ந்து உயர்ந்து நிற்கும் காட்சி சிறப்புறக் கூறப்பட்டது. 40

உற்றிட வரிதவ னுழவர் நீத்ததார்
சுற்றிடுந் தாண்மிசை யிடறுஞ் சூல்வளை
தெற்றிடும் பூங்கொடி புடைக்குஞ் சேலினம்
எற்றிடுந் தேம்பழ மிழுக்குந் தேன்களே.

எமது காலால் மிதித்து நடந்து செல்ல முடியாதபடி வழுக்கும் தன்மையுடையது இந்த நாடு, ஏனெனில் உழவர்கள் அரிவிவெட்டிய பின் உள்ள அடித்தண்டின் மீது கருக்கொண்ட சங்குகள் ஊர்ந்து ஏறிச்சென்று வழுக்கி விழுந்து கீழே நீரில் உள்ள சேல் மீனிலேபட அது துள்ளியெழுந்து அங்கு பக்கராக நின்ற பூங்கொடிகளிலும், பழ மரங்களிலும் பாய்ந்து அதன் வேகத்தால் பழங்கள் உதிர்ந்து சிதைவாகி, தேன் எங்கும் சொரிந்திருப்பதால் மிதித்தால் வழுக்கும். இதனால்நாட்டின் வளப்பெருக்கம் கூறப்பட்டது.

ஓடாதே வழுக்குமடி. (நற்சிந்தனை) 41

கானிமிர் கந்திகள் கான்ற பாளைமேன்
மீனினம் பாய்தலுஞ் சிதறி வீழ்வுறு
வானதோர் மருதவைப் படையுந் தன்மைய
வானுறு தாரகை வழுக்கிற் றெருக்குமால்.

நீண்டு உயர்ந்த கமுக மரங்கள் மலர்ந்த பூம்பாளைகளின் மேல், கீழே ஓடிய நீரில் சென்ற மீன்கள் பாய்ந்தபோது அப்பூக்கள் தட்டுண்டு உதிர்ந்து கீழே பரந்து காணப் படுகின்றன. இவைகளைப் பார்த்தால் ஆகாயத்தில் உள்ள வெள்ளிகள் வழுக்கி விழ்ந்துள்ளன போலத் தோன்றுவன. 42

மாகுல வல்லியின் மஞ்ஞை யாடல்போல்
கோகுல மார்தருக் குழாத்தி னூசன்மேற்
பாகுல லின்சொலார் பனிக்கு மெல்லிடைக்
காகுலம் பிறர்கொள மகிழ்வி னுடுவார்

பெரிதாகத் திரண்டு வளர்ந்த கொடிகளில் மயில் ஏறிநின்று தோகையைவிரித்து ஆடி நிற்கின்ற தன்மைபோல், இனிய குயில் கூவிப் பாட்டிசைக்கும் சூழலாகிய இச் சோலைகளிடத்து நீண்ட கயிற்றால்கட்டிய ஊஞ்சலில் ஏறிக்கொண்டு அமர்ந்து இனியமொழிகளைப் பேசிக்கொண்டு இளம்பெண்கள் ஊஞ்சல் ஆடுகிறார்கள். இவர்கள் அழகையும், எழிலையும் கண்டு இவர்களை நோக்குகின்ற ஆடவர் சிந்தை வேறாகித் துயருறும்படி ஆடுகிறார்கள். 43

## வேறு

ஊச லூற்றவர் குழைக்குடைந் திடுதலா லுவரை
வீச லொப்பன வாடுதல் கிளிமொழி வெருவிப்
பேச லொப்பன வீழ்ந்திலர் பிழைத்ததீ தென்னு
ஏச லொப்பன கோகிலப் பறவைக ளிசைத்தல்.

ஊஞ்சலில் அமர்ந்து ஆடும் பெண்கள், காதிலே அணிந்த குண்டலங்கள் (இக் காலத்து, காதுத் தூக்கம் - சிமிக்கி என்பர்) அசைந்து ஆடுதலால் இந்தக் குண்டலங் களின் அசைவைப் பார்த்து, ''நான் தோற்றேன் இவர்கள் அணிந்த குண்டல அசைவுக்கு'' என எண்ணி இவரைத் தூக்கிவீசுவதுபோல, ஊஞ்சற் கயிறுஆடுகிறது. ஐயய்யோ ''இவர்கள் இனிய வார்த்தைபோல் என்னால் பேசமுடியவில்லையே, என் னால் பேசமுடியவில்லையே'' என, குரோதத்தால் பேசுவனபோல் கிளிகள் சத்தமிடு கின்றன. ''இதோ பாருங்கள், இவர்கள் இவ்வளவு வேகமாக ஆடுகிறார்கள், தவறி விழுந்தால் என்னவாகும் தெரியுமா?'' என இவரைப் பேசுவதுபோலக் குயில்கள் கூவுகின்றன. 44

கூர்ப்புக் கொண்டகட் கொடிச்சியர் குளிர்புனங் காப்போர்
ஆர்ப்புக் கொண்டுகை விசைத்தெறி மணிக்கல்வந் தணையச்
சார்ப்புக் கொண்டதஞ் சிறகரால் விலக்கியத் தட்டுத்ப்
பார்ப்புக் கொண்டுகொண் டெழுவன தோலடிப் பறவை.

கூர்மையான கண்களைக் கொண்ட வேடுவப் பெண்கள் குளிர்மையான தங்களது காவற் புனங்களில் காவல் புரிந்து இருக்குங்கால், அவர்கள், தங்கள் புனங்களில் கதிரி னைக் களவாண்டு கொய்து போகாதபடி புனத்தைச் சேருகின்ற பட்சிகளை விலக்கு மாறு கைகளிலே உள்ள கவணின் மீது போட்டு வீசி எறிந்த மணிக்கல் வேகமாக வருகிறது. அப்படி அவர்கள் வீசிய கற்களைத் தங்களது அகன்ற சிறகுகளினால் எதிர

டித்து விலக்கிவிட்டு அப் புனச்சாரலில் உள்ள குளங்களிலிருந்த தம் குஞ்சுகளைத் தூக்கிச் செல்வன தோலடிப் பறவை.

தோலடிப் பறவை: தோல் பொருந்திய காலினை உடையது. தாரா முதலிய நீரில் வாழும் பட்சி இனத்தைச் சேர்ந்தது. 45

## வேறு

கடற்பரு கியமுகில் பெய்யுங் காட்சிபோல்
அடற்பெரு மேதிக ளனைத்தும் புக்குராய்த்
தடப்புனல் வறிதெனப் பருகித் தம்முலைக்
குடத்திழி பாலினுற் குறையைத் தீர்க்குமே.

கடலில் உறிஞ்சிக் குடித்த நீரை மேகங்கள் திரும்பவும் கடலிலே மழையாகப் பெய்கின்ற அதே காட்சிபோல் வலிமையான பருத்த எருமைகள் யாவும் குளத்திலே சென்று தங்கி, அக்குள நீரைத் தாம் வயிருர உண்டு, அவைகள் தாங்கள் உண்ணு தலாலே குறைந்து போன அக்குள நீரைத் தம்முடைய பாலாகச் சொரிந்து நிரப்பு கின்றன. இதனுல் இந்நாட்டின் பால்வளம் எத்துணைச் சிறப்பினது எனக் கூறுகிருர். 46

பாட்டிய லளிமுரல் பதுமக் கோயிலில்
நாட்டிய நிமலன்மு னந்தி நீரிடை
மாட்டிய பல்பெருஞ் சுடரை மானுமாற்
கோட்டுயர் தடந்தொறுங் குவளை பூத்தவே.

வேதங்கள் யாவும் எம் ஐயா என ஓலமிட்டுத் தேடி ஓசை கொள்ளும் கமலா லயம் எனும் திருவாரூர்க் கோவிலிலே கறையான் புற்றின் மீது கோவில் கொண்ட சிவபெருமான் திருச்சந்நிதியில் முன்பொரு நாள் நமிநந்தி நாயனுர் என்னும் அன்பர் நீரினுல் விளக்கிட்டார். அவர் அவ்வாறு விளக்கிடுவதற்கு அகழிகளில் திரியை வைத்து நெய்க்குப் பதிலாக நீரை வார்த்து அழகிய நல்ல சுடர்களாக அவை பொலி வுற விளக்கேற்றினுர். அவ்வண்ணம் அவர் ஏற்றிய பல தீபச்சுடர்கள் எப்படிப் பொலி வாக எரிந்தனவோ அப்படிப் போலும் உயர்ந்த அணைகள் கொண்ட குளங்களிலெல் லாம் செங்கழுநீர் மலர்கள் பூத்திருக்கின்றன.

**திருவிளக்கிட்ட வரலாறு:** நமிநந்தி நாயனுர் என்னும் அன்பர் திருவாரூர்க் கோவிலுக்கு ஈசனை வணங்கும்படி சென்றுர். சென்றபோது ஈசன் கோவிலில் விளக்கிட வேண்டி ஆசைமிகுதியால் முன்னுற் காணப்பெறும் ஒரு வீட்டில் நெய் கேட்டார். கேட்ட இல்லம் பிற சமயத்தவனுகிய சமணனது ஆக, அவன் இவரைக் கேவலமாக இகழ்ந்து, ''கையிலே நெருப்பு ஏந்தியவர் உம் கடவுள். அவருக்கு விளக்குத் தேவை யில்லை. நெய்யும் இங்கு இல்லை. வேண்டுமானுல் நீரிட்டு விளக்கேற்றும்'' என அச் சமணன் சொல்ல, அதுகேட்டுப் பொருராகிய நமிநந்தி அடிகள் விளக்கேற்ற வேறு வழியறியாது பெருமான் சந்நிதியில் ஓடிவந்து, வீழ்ந்து தமது துயரை விண்ணப்பித் தார். அப்போது ''முன்புள்ள குளத்தில் நீர் எடுத்து விளக்கேற்று'' என ஓர் அசரீரி வாக்கியம் கேட்டு மகிழ்ந்தெழுந்து, விளக்கு அகழிகளுக்கெல்லாம் திரியிட்டு முன் புள்ள குளத்தில் இறங்கி, ஈசனை வணங்கி நீர் எடுத்து அகழிகளில் நெய்க்குப் பதி லாக நீரை வார்த்து விளக்கிட்டார்.

ஆராய்ந்தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத் தம்பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் விளக்கிட்டமை நீணு டறியுமன்றே. (அப்பர் தேவாரம்)

47

கலனிடைத் தருவதுங் கானத் துள்ளதும்
பொலனுடைப் பொருப்பிடைப் பொருளு மல்லது
நலனுடை நாட்டவர் நயத்த லின்றியந்
நிலனிடைப் பொருள்பகர் வழக்க நீத்ததே.

இந்நாட்டிலே, கடலிலே இருந்துபெறும் உப்பு, முத்து, சங்கு முதலியனவும், காட்டிலிருந்து பெறப்படும்; அரக்கு, மெழுகு, தேன், மயிற்பீலி, நாவிப்புனுகு, முதலியனவும், மலையிலிருந்து பெறப்படும் மிளகு, கோட்டம், அகில், தக்கோலம் முதலிய பொருட்களும், நகரில் வரும் பொருள்களான கண்ணாடி, பட்டாடை, ஆபரணவகை ஆகிய இவைகள்தாம் விலைபகர்ந்து விற்கப்பெறும் பொருட்கள். இவைகளேயல்லாது அந்நாட்டில் விளையும் பொருட்களாகிய நெல், சாமி, குரக்கன், பழவகை வேறு தானியப் பொருட்கள் நாடெங்கிலும் எல்லாரிடத்தும் உள்ளன: ஆகையால் இப்பொருட்களைப் பகிர்ந்து விற்பார் இல்லை. விற்கும் வழக்கமும் இல்லை.

48

யாழ்க்கையர் பொருநருக் கிறைவ ரேழிசை
வாழ்க்கைய ரளவையின் வகுத்த பாடலைக்
கேட்குநர் நன்றென மருப்புக் கிம்புரிப்
பூட்கைக ளுதவுவார் பொதுவி ரேறுமே.

யாழைக் கையில் உடைய யாழ்ப்பாடியரும், கூத்தர் வகுப்பைச் சேர்ந்த தலைவரும், ஏழு சுரங்களின் இயல்பறிந்து வாய்ப்பாட்டினால் சீவனம் செய்கின்ற பாடகர்களும் ஆகிய இவர்கள் வகுத்துப்பாடிய பாடல்களைக் கேட்டு மகிழ்ந்த பிரபுக்கள் அப்பாடகர்களுக்குப் பரிசிலாகப் பெரிய பூண் அணிந்த கொம்பினை உடைய யானைகளைக் கொடுப்பார்கள். இவ்வாறு பாடகர்களுக்கு பரிசில் வழங்கவும், பாடல்களைக் கேட்டு மகிழ்வுறவும் மக்கள் திரண்டு கூடும் சபைகள் இந்நாட்டிற் பல இடங்களிலுல் உண்டு.

49

கஞ்சிதேய்ப் புண்டகில் கமழும் பூந்துகில்
வஞ்சிதேய்ப் புண்டன மருங்கு லாரடி
பஞ்சிதேய்ப் புண்டன பணியத் தாக்கலாற்
குஞ்சிதேய்ப் புண்டன குமரர் கூட்டமே.

கஞ்சிபோட்டு சந்தனப்புகையும் ஊட்டி நறுமணமும் அழகும் பொருந்திள நல்ல பட்டாடைகளை அணிந்து அழகும், சிறப்பும் விளங்கும். சிறிய இடையினை உடைய பெண்கள் தம் காதலரோடு ஏதோ காரணத்தினால் ஊடினார்கள். இந்த ஊடல் என்பது அன்பினால் ஏற்பட்ட தற்காலிக வெறுப்பு. ஆகவே அவ்வாறு தனது காதலனின் பிழையைக் கண்டு வெப்பியாரங் கொண்ட தன் காதலி, தன்னைப் பிரிந்தமையை உணர்ந்த காதலன் அவளிடம் சென்று தன் பிழையினை மறந்து தன்னைச் சேருமாறு வேண்டுகிறான். அப்படிக் காலிற் பணிவானின் தலையிலே அக்காதலி செம்பஞ்சு

தீட்டிய, சிவந்த, மிருதுவான பாதத்தால் உதைத்தாள். உதையை வாங்கிய பின்னரும் இரந்தான் காதலன். அதனுல் அவனே, இப்போ தனது கோபம் ஆறிவிட மகிழ்வாக பழையபடி ஏற்கிருள் காதலி. இவ்வாருகிய நிலைமைகள் பெரும்பாலும் அடிக்கடி இந்த நாட்டில் நிகழ்வதால் இங்கு வாழ்கின்ற பெரும்பாலான இளைஞர்களின் உச்சி மயிர்மீது அவர்கள் காதலிமாரின் உதைபட்ட செம்பஞ்சின் சிவப்பு பட்டதோடு, உதை வாங்கித் தேய்ப்புண்டதும் காணப்படுகிறது. 50

அன்றிலம் பெடைகளை யணுகி யன்னைகேள்
நன்றென வினையின்மே னடந்த நாயகர்
இன்றுவந் திடுவரிங் கெம்பொ ருட்டினுல்
ஒன்றுநீ யிரங்கலென் றுரைக்கின் றூர்சிலர்

இன்னும் அங்கு சில நாயகிமார்கள் தங்கள் கணவன்மார் தம்மை விட்டுப் பிரிந்து வேற்றூர்களுக்கு, பல்வேறு நற்செயல்களை முன்னிட்டுச் சென்றமையால் அவர்கள் பிரிவால் பெரிதும் வருந்தி துயருற்று அக்கவலை மேலீட்டால் அதை வெளிப்படுத்துவார் போல, தனது துயரம் பேச இயலார் இன்னெருவரது துயரத்தைச் சொல்லி ஆறுவது போல, தமது சோலையிலே இருக்கின்ற அன்றில் பேட்டைப் பார்த்து அன்றிலே கவலையுருதே! எனது கணவர் நிச்சயமாக இன்று வந்திடுவர் எனக் கூறி, அன்றில் தனது சோடி பிரிந்ததால் அதைத் தேடிக் கூவிக் கத்தியதை, தன் பொருட்டாகத்தான் அது இரங்கியது என எண்ணி அன்றிலோடு இவ்வாறு சொல்லி நிற்கிருர்கள். 51

ஆடியல் கருங்கணுஞ் சிவப்புற் றங்கமும்
வாடுவ தாகியே மதன வேர்வுருக்
கூடிய மகளிருங் குமரர் தங்களை
ஊடிய மகளிரு முலப்பின் றுயினுர்.

கூர்மையானதும், புரண்டு அழகுற மிளிர்வதுமான கருமை கொண்ட கண்கள் சிவக்கவும், தமது மேனி வாடியும், மேனி வியர்க்கவும், இவ்வாருகிய கோலம் அடையும்படி தமது நாயகரோடு கூடி இன்புற்ற மகளிரும், தமது காதலரது பிழையையுணர்ந்து கோபித்து வெறுப்புற்றுக் கவலைகொண்ட மகளிரும் பலராக இங்கே நாடெங்கிலும் காணப்படுகிருர்கள். 52

அகனமர் கணிகைய ரடிகள் சூடியே
முகனுறு முவகையான் முயங்கி யன்னவர்
நகனுறு குறிகொளீஇ நாளுங் காமநூல்
தகைமைசெய் காளையர் தொகுதி சான்றதே.

தமது காமக்கிழத்தியர் எனப்படும் வைப்பாட்டியரிடம் இரந்து சென்று அவர்களைப் பணிந்து வேண்டித் தமது உள்ளப் பரிவால் அவர்களோடு கூடி மகிழ்ந்தும், அவர்கள் நகக்குறி கொண்டு அதனுல் காம இன்பத்தின் சுவையை அவர்கள் மூலமாக அனுபவிக்கப் பெற்றமையால் மீண்டும் மீண்டும் தமக்கு தன்மனைவியர் இருப்பவும் அவர்களையே விரும்பிக் காமநூல் வழிகூடி மகிழ்வாருமாகிய பல இளைஞர்கள் இந்நாடெங்கிலும் காணப்படுகிருர்கள். 53

வாளைக ளிகல்புரி வயலும் வாவியும்
பாளையொ டுற்பலம் பதும நாறுமால்
வேளயர் தடங்கணூர் விரைமென் ரூளினை
காளையர் குஞ்சியுங் கரமு நாறுமால்.

வாளை மீன்கள் தாம் தாம் ஒவ்வொன்ருேடு போர் செய்து விளையாடித் துள்ளிக் குதித்தெழ அதனுல் சிதைவுண்டு கமுகம்பூப் பாளைகள் வயற் தண்ணீரிலே கொட்டுண்ணவும், குளத்திலுள்ள தாமரைப் பூக்கள் அம்மீனுல் சிதைவுண்ண, அப்பூக்கள் உதிர்ந்து குளநீரிற் சேர இதனுல் வயல்நீரும் குளநீரும் கமுகம்பூ வாசனையும் தாமரைப்பூ வாசனையும் பொருந்தும். அதுவல்லாமல் மன்மதன் அம்பு இது என்னும்படி நீண்ட பசுமையான கண்களினை உடைய பெண்களின் காலிலே பூசப்பட்ட வாசனை கலந்த செம்பஞ்சுக் குழம்பின் வாசனை அந்நாட்டில் உள்ள இளைஞர்களது தலையிலும் கைகளிலேயும் நாறும். அது எப்படி என நீங்களே ஊகித்தறியுங்கள். 54

சேவக மணவன கரிகள் சேனைகள்
காவக மணவன கலைகள் புள்ளினம்
பூவக மணவன பொறிவண் டாயிடைப்
பாவக மணவன பாட லாடலே.

இன்னும் அந்நாட்டில் யானைகளின் ஊர்வலமும் சேனைகளின் அணிவகுப்பும் எங்கும் நிறைவன. இது அல்லாமல் சோலைகள் தோறும் புள்ளி மான்களும் கலைமான்களும் கூட்டமாகக் காணப்படுவன. பூஞ்சோலைகள் யாவும் எஞ்ஞான்றும் குலுங்கப் பூத்து மலர்தலினுலே வண்டுகள் சோலைதோறும் இரைந்து உலாவுகின்றன. பாடல், ஆடல் எல்லாம் பாட்டின் இசைக்கும் இலக்கணத்திற்கும் பொருந்தியே நிகழ்வன. 55

ஆடக மாமதி லம்பொற் கோபுரம்
நீடிய மண்டப நெறிகொ ளாவணம்
பாடலொ டாடிடம் பிறவும் பாலிநன்
ஞடுள பதிதொறு நண்ணி யோங்குமே

இன்னும் இப் பாலியாற்றின் நீர்வள மிகுதியினுல் சிறப்புறப்பெற்று, செல்வமும், சீரும், தருமமும் ஓங்குதலாலே எங்கு பார்த்தாலும் பொன்னின் மதில்களும் கோபுரங்களும், நீண்ட பெரிய மண்டபங்களும், நன்னெறியினையுடை ஆவண வீதிகளும், பாடல் ஆடல் நிகழும் நாட்டிய அரங்குகளும், இன்னும் பிற யாவும் இந்நாட்டில் மேம்பட விளங்குவன. 56

தெண்டிரை யுலகினிற் சீர்பெற் ருேங்கிய
மண்டல மெங்கணு மதிக்க நின்றதோர்
தொண்டைநன் ஞட்டணி சொல்லி ஞமினித்
தண்டமிழ் வளநகர்த் தன்மை கூறுவாம்.

தெள்ளிய திரைக்கடல் சூழ்ந்த உலகினிற் சீர்பெற்று ஓங்கியதும், இப் பூமி மண்டல முதல் ஏனைய உலகங்கள் எல்லாவிடமும் மதிக்கும்படி நின்ற தொண்டை நாடு எனும் நாட்டின் சிறப்புகளை ஒருவாறு சொன்னேம். இனி உள்ளக் குளிர்ச்சியை ஊட்டும் தமிழ் வளர்ந்த நகரத்தின் பெருமை சொல்வாம். 57

திருநாட்டுப் படலம் முற்றிற்று.

**ஆகத் திருவிருத்தம் 146**

# 6. திருநகரப் படலம்

மாவுல கெங்கு மலர்த்தட மாகத்
தாவறு சீர்புனை தண்டக நாடே
மேவிய கஞ்சம தாவதின் மேவுந்
தேவினை யொத்தது சீர்பெறு காஞ்சி

இப்பூமி முழுவதையும் நாம் ஒரு தாமரைக் குளமாக வைத்துக் கொண்டால், அப்படியான தாமரைக் குளத்தில் ஒரு தாமரைப்பூ இருப்பதுபோல உலகிற் சிறப்புடைய தொண்டை நாடு இருக்கிறது. ஆனல் தாமரைப் பூவினை ஆசனமாக உடையவர் பிரம்மதேவர். ஆகவே அவ்வாறு சொல்லப்பட்ட தொண்டைநாடு எனும் பூவின் மேல் உற்ற பிரம்மதேவரைப் போல் காஞ்சி எனும் நகரம் திகழ்கின்றது.

காஞ்சி, கச்சி காஞ்சிபுரம் எனப்படும் காஞ்சியிலே எப்பொழுதும் உலகில் சிறப்புற்ற கல்விமான்கள், ஞானிகள் வாழ்ந்தனர். ஆகவே இந்நகரைப் பிரம்ம தேவருக்கு ஒப்பிட்டுப் பேசப்பட்டது, 1

பூங்கம லத்துறை புங்கவன் மாயோன்
பாங்குறை தேவர்பல் லாண்டிசை பரவ
ஓங்கிய புள்ளின மூர்ந்தவ னுறலால்
ஆங்கவர் மேவு மரும்பத மாமே.

தாமரை மலர்மேல் ஆசனம் கொண்ட, படைக்கும் கடவுளாகிய பிரமரும், காக்கும் கடவுளாகிய விஷ்ணு மூர்த்தியும், தமக்குப் பக்கராக உள்ள தேவர்கள் பலர் பல்லாண்டு கூறிப் பணிய இக்காஞ்சி என்னும் பதியில் இவர்கள் தங்கள் அன்ன வாகனத்தும், கருட வாகனத்தும் ஊர்ந்து வந்து சேர்தலினல் இதை இவர்களுடைய சத்திய உலகமும் வைகுந்த உலகமுமாம் எனச் சொல்லவும் கூடும்.

படைப்பவரும், காப்பவரும் பல தேவர் தம்மைப் போற்ற அவ்விடத்து உறைதலால் இவ்வாறு நகரத்தைச் சிறப்பித்துக் கூறினர். 2

இன்னிய றேர்தரு மிந்திரன் முதலா
மன்னிய வானவர் மற்றுளர் யாருந்
துன்னின ராயிடை சூழ்ந்துறை செயலாற்
பொன்னக ரென்று புகன்றிட லாமால்.

இனியதாகிய இயல்பைத் தேடுகின்ற இந்திரதேவன் முதலாக நிலைபெற்ற தேவர்களும் மற்றுள்ளார் எல்லாரும் இக் காஞ்சியில் வந்து சூழ்ந்து இருக்கும் தன்மையால் இக் காஞ்சியைப் பொன்மயமான தேவ உலகம் எனவும் சொல்லுதல் கூடும்.

தேவர்கள் எப்பொழுதும் சுகத்தையும், போகங்களையும் அதிகம் விரும்புவர். இச் சுகபோகங்கள் தெய்வ அருளாலே வரும். ஆகையால் ஈசன் அருளால் இவைகளைப் பெறவேண்டி இந்திரன் முதல் தேவர்கள் யாவரும் இங்கு வந்தனர். 3

கின்னரர் சித்தர் கெழீஇயத ஞலத்
தந்நிக ரில்லவர் தம்பதி போலும்
பன்னக வேந்தர் பராயின ருறலால்
அன்னவர் தம்பதி யாகிய தன்றே'

குதிரை முகமும், மனித வடிவும் உடைய கின்னரர்களும், அணிமா முதல் எட்டு வித சித்திகளையும் உடைய சித்தர்களும் இங்கே காஞ்சியில் வந்து கூடுவதனுல், நிகரற்ற பெருமை உடைய இவர்களுடைய பதிகள் போலவும் சொல்லலாம். இன்னும் நாக அரசர்களும் அவ்விடத்து வந்து வாழ்தலினுலே அவர்கள் பதங்கள் என்றும் கூடக் காஞ்சியைச் சொல்லலாம். 4

எண்டிசை காவலர் யாவரு மீண்டப்
பண்டவர் பெற்ற பதங்களை மானும்
மண்டல மார்சுடர் மற்றைய வுறலால்
அண்டமு மாகிய தப்பதி யென்பார்

எட்டுத் திக்குகளிலுமுள்ள இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் எனப்படும் காவலர்கள் வந்து அங்கு கூடுதலால், அவரவர்களுடைய உலகங்களை ஒப்பிட்டுச் சொல்லவும்படும். அஃதன்றி உலகெங்கும் ஒளிசெய்கின்ற சுடராகிய சூரிய பகவான் இங்கு வருதலாலே இது சூரியன் முதல் சகல கிரகங்களினதும் இருப்பிடமாகிய அண்டங்களுமாகியது அப்பதி.

சூரியனின் சத்தியால் அவரைச் சூழ்ந்த ஏனைய கிரகங்கள் தொழிற்படுவன ஆகவே சூரியதேவன் அங்கு வருதலால் அனைத்து மண்டலமும் ஆகியது அப்பதி எனக் கூறினர். 5

இப்படி யாவரு மெய்திய திறனுல்
ஒப்பன போல வுரைத்திட லொப்போ
அப்பதி யேயத னுக்கிணை யன்றிச்
செப்பரி தாற்பிற சீர்கெழு காஞ்சி.

இப்படி யாவர்களும் அங்கு எய்திய திறனினுல், அந்தந்தத் தேவருடைய பதி இக் காஞ்சி நகருக்கு ஒப்பாகுமென்று நாம் உரைத்திட அது பொருந்துமோ? பொருந்தாது. ஆகவே அந்தக் காஞ்சியெனும்பதி, தனக்குத்தானே ஒப்பாயது. அன்றிப் பிறிதோர் உலகையோ, நகரத்தையோ நாம் ஒப்பிட்டுச் சொல்ல முடியாது. 6

மறைமுத லோர்தனி மாவி னிழற்கீழ்
உறைதரு காஞ்சி தனக்குல கெல்லாம்
பெறுமய ஞதியர் பெற்றிட வல்ஞன்
நிறுவிய தொன்னக ரோநிக ராமே.

வேதங்களின் முதற் பொருளாகிய ஈசன் தன்னிகரற்ற ஒரு தனி மாமர நீழலிலே தான்தோன்றியாய் அமர்ந்தருளி அருள் புரியும் காஞ்சியெனும் பதிக்கு உலகெல்லாவற்றையும் படைக்கின்ற பிரமனுதியாம் கடவுளர் தாங்கள் பெற்றுக் கொள்ளும்படி. சிவபிரான் உதவிய அவர்களது உலகங்களை எவ்வாறு ஒப்பிட்டுச் சொல்ல முடியும்,

பிரமதேவர் படைப்பவர். அப்படிச் சகல உலகங்களையும், அவர் படைப்புக்கு அருள் எய்துமாறு வரங் கொடுப்பவர் சிவபிரான். ஆனமையால் அவ்வாறு வரங் கொடுக்கும் பெருமான் வதியும் பதி காஞ்சி என்றால் இதற்குப் பிரமர் படைப்பினுட் பட்ட ஏனைய உலகங்களை எவ்வாறு உவமையாகச் சொல்ல முடியும்?

ஆங்காரமும் அடங்கார் ஒடுங்கார் பரமானந்தத்தே
தேங்கார் நினைப்பும் அறார் தினைப்போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக்குள்ளே முருகன் உருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய்யார் என்செய்வார் யமதூதருக்கே

என வேத முதல் ஈசன் என அருணகிரியாரும்;

வஞ்ச நீங்கியமாவின் மூலத்து வந்துதோன்றினர் மலைமகள் காண;

எனச் சேக்கிழார் கூறியமையையும் காண்க. 7

மேயதொல் லூழியில் வேலைக ளேழுந்
தூயத னெல்லை சுலாவுற நிற்றல்
ஆய பரஞ்சுட ராங்குன தாயும்
மாயைகள் சுற்றிய மன்னுயி ரொக்கும்.

உலகங்கள் அழிவுறும் ஊழிக்காலத்துச் சமுத்திரங்கள் ஏழும் பொங்கி எழுந்து உலகெல்லாவற்றையும் அழித்து வருங்கால், இக் காஞ்சி நகரை எய்தித் தமது செயல் அங்கு கைகூடாமையால் காஞ்சி நகரை வளைந்து, அதன் எல்லையில் வளைத்தபடி நிற்பன. இவ்வாறாகிய சமுத்திரங்கள் காஞ்சியை அழிக்க முடியாது வளைந்து நிற்றல் மாயையானது உயிர்வர்க்கங்களைப் பற்றிச் சூழ்ந்து நின்றாலும் உயிர்களுக்கு உயிராய், ஒளியாய் விளங்கும் ஈசனைப் பற்ற முடியாத தன்மைபோல, சமுத்திரங்கள் ஏனைய உலகை அழித்தாலும், காஞ்சியை அழிக்க வலு இல்லாது சூழ நின்றன.

உலகத்து உயிர்க்கெலாம் ஒளியானை (சுந்தரர்) 8

## வேறு

பாழி மால்வரை யெறிதிரை வையகம் பலவும்
வாழு மண்டங்கள் சிற்றுரு வமைந்துவந் தென்னச்
சூழு நேமியம் புள்ளின முதலிய சுருங்கும்
ஆழி நீத்தம தொத்தது மதிற்புறத் தகழி.

பெரிய மகாமேரு மலை முதலியனவும், கடல் சூழ்ந்த உலகங்கள் பலவும், மேலோங்கிய அண்டங்கள் பலவும் தமது பேர் உருச் சிறுமையாகி அமைந்து வந்து கூடியது இங்கே எனவாக; வட்ட வடிவினை உடைய சக்கரவாகப் பட்சிகள் சஞ்சரிக்கும் ஆழ்ந்த சமுத்திரத்தை ஒத்து விளங்கியது காஞ்சியின் நகர் எல்லையைச் சூழ்ந்த மதிலும், மதிற்புறத்து உள்ள அகழிக்கிடங்கும்.

முற்காலத்து நகரங்களுக்குக் காவலாக நகர எல்லையிலே பெரிய மதிலும்; மதிலைச் சூழக் கடல் போல ஆழ்ந்த, எஞ்ஞான்றும் நீர் நிரம்ப நிற்கும் கிடங்கும் அமைப்பார்கள். ஆகவே இந்த மதிலும், கிடங்கும் காஞ்சி நகர எல்லையிற் காணப் படுகின்றன. இதனைச் சிறப்பிக்குங்கால் இக்காஞ்சி நகர மதிலை, மலைகளும், உலகங் களும், அண்டங்களும் சிற்றுருவாக வந்துற்றன போலவும், புறவாழிச் சமுத்திரம் சிற்றுருவமைந்து வந்துற்றது என மதில் சூழ்ந்த அகழிக் கிடங்கையும் கூறினர். 9

மண்ட லப்பொறை யாற்றுவான் பற்பல வகுத்து
முண்ட காசன மீமிசை யிருந்திடு முதல்வன்
அண்ட கோளகை தாங்கவோர் சுவர்த்தல மதுவும்
பண்டு செய்தென வோங்கிய நெடுமதிற் பரப்பு.

தாமரை மலர் ஆசனராகிய பிரமதேவர், தமது படைப்பிலே மண்டலங்கள் பலவற்றைப் படைத்து அவற்றைத் தாங்க வேறு வேறு பொருள்களை அமைத்தவாறு போல அண்டகோளங்களைத் தாங்குதற்கும், அதன் பாரத்தினைப் பொறுத்தற்கும் ஒரு சுவர்த்தலத்தை அவர் அமைத்தால் எப்படியோ, அப்படிப் போலும் இக்காஞ்சி நகர் மதில் ஓங்கி நீண்டு பரந்துள்ளது, 10

சென்று மூவெயி லழலெழ நகைத்தவன் செழும்பொற்
குன்று தோளுற வாங்கலு முலகெலாங் குலைந்த
அன்று நான்முக னனைத்தையுந் தாங்குகென் றருள
நின்ற தென்னவும் பாதலம் புகுந்துமேல் நீண்ட.

இன்னும், முன்னொரு காலத்து முப்புரங்களைச் சங்காரஞ் செய்யும்படி சிவபிரான் தேர்மேல் சென்று, முப்புரங்கள் முன்பாக நின்று மகாமேரு மலையை வில்லாக ஏந்தி வளைத்தார். வளைத்தபோது அண்டங்கள் எல்லாம் சீர்குலைந்து தவறி விழுந்தன. விழும் நிலைமையை, உலகைப் படைக்கும் பிரமதேவர் உணர்ந்து, நிலைகுலையும் அண் டங்களைத் தாங்கும்படி இருத்திய ஒரு மதில் போலவும், இந்த மதில் பாதாளமள வும் அத்திவாரம் கொண்டு மேல் நீண்டு நின்றது.

உடைந்து சரியும் ஒரு வீட்டைப் பின்னர் அணைகொடுத்து நிறுத்துதல் வழக்கம். அதேபோலச் சிவபிரான் மேரு மலையை வில்லாக வளைக்க, அதனால் நிலைகுலைந்த அண்டங்களைத் தாங்க ஓர் அணையாகப் பிரமதேவர் பாவித்த பொருள் போல இந்த மதில் பொருந்திற்று என உவமை.

வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீ பற
ஒருங்குடன் வெந்தவா உந்தீபற. (திருவாசகம்) 11

மேக நாட்டிற்கும் விஞ்சையர் நாட்டிற்கும் விண்ணோர்
மாக நாட்டிற்கும் மலரய னாட்டிற்கும் மற்றை
நாக நாட்டிற்கும் பாதல நாட்டிற்கும் நணுகிப்
போக நாட்டிய பொன்மதில் ஆனதப் புரிசை.

இந்திர உலகிற்கும், விஞ்சையர் உலகங்கட்கும், உயர்வான தேவ உலகங்கட்கும் பிரம உலகம், வைகுந்தம் முதலிய நாட்டிற்கும், மற்றை நாகர்களது நாட்டிற்கும் பாதாள உலகங்கட்கும் எங்கும் சென்று சேர்வதற்காக நாட்டிய பொன்மதில் போல இந்த மதில் பரந்து நின்றது. 12

முதிரை வண்ணமா நவமணிக் குவையும்வான் முளைக்குங்
கதிரி னெல்லெனும் பொருளுட னேனவுங் காட்டிப்
பொதிவ தாகியே முழுவதும் நிரம்புதல் பொருந்தா
நிதிய மேயகூ டொத்தது நெடியமா மதிலே.

ஐந்து வகை நிறங்களுடையதாகிய ஒன்பது வகை இரத்தினக் குவியல்களும், ஆகாயத்துத் தோன்றுசிற சூரிய காந்த ஒளியும், சந்திரகாந்த ஒளியும் ஆகிய இப் பொருள்களுடன் ஏனையவற்றையும் காட்டியே பொதிவதாய் நின்றும். அவைகள் நிரம் புதல் பொருந்தாத நிதி வைக்கும் கூடு எனும்படியும் பொருந்திக் காணப்படுவது அந்த நெடிய மதில்.

**ஐந்துவகை நிறங்களாவன:** வெள்ளை, சிகப்பு, கறுப்பு, மஞ்சள், பச்சை.

**நிறங்கள் ஓர் ஐந்துடையாய்** (திருவாசகம்)

**நவரத்தினங்களாவன:** மாணிக்கம், பவளம், முத்து, மரகதம், புருடராகம். வைரம், நீலம், கோமேதகம், வைடூரியம். 13

**நிறையும் வார்கடல் சுற்றிய நேமியும் நேமிக்**
**குறையு ளாகிய கணிப்பிலா வண்டமு மொப்ப**
**சிறையில் வான்கிரி நிரையெனச் செவ்விதிற் கிளர்ந்து**
**மறுகெ லாந்திகழ் மாளிகைப் பத்திசூழ் மதிலே**

நிறைந்து பெருகிய கடல் சூழ்ந்த சக்கரவாளம் என்னும் பெயருடைய மலையும், அந்த மலைக்கு இருப்பிடமாகிய அளவற்ற அண்டங்கள் போலவும் அமைந்துள்ள இக் காஞ்சி என்னும் நகரிலே, சிறகில்லாத பெரிய மலைகளை நிரையாக வைத்தாற் போலச் செம்மையாக மேற்கிளர்ந்து வீதிகள் எங்கிருந்து பார்த்தாலும் ஒரே தன்மை யாகத் தென்படும் பல அடுக்கு மாளிகைகளுடன் இணைந்திருக்கும் அம்மதில்.

வானளாவிய அடுக்கு மாளிகைகள் எங்கும் காணப்படப் பெருவீதிகளோடும் இணைந்துள்ள காஞ்சி நகரின் புறமதில் அதன் இயல்பை நோக்குவார்க்குச் ''சக்கர வாளம்'' என்னும் மலை சமுத்திரம் சூழ, அண்டங்களைத் தன்னிடத்தே கொண்டு நின்றது போன்றது. 14

**தடுக்கு மாற்றலர் நால்வகைப் படையொடுஞ் சாய**
**முடுக்கும் வாள்கொடு விதிர்த்திடு மெழுவினுன் முருக்கும்**
**எடுக்கு மெற்றிடு மெறிந்திடும் விழுங்கிடு மீர்க்கும்**
**படுக்குங் கன்மழை சொரிந்திடும் விற்படை பயிலும்.**

இன்னும் இந்த மதில்மேலே சில யந்திரங்களை அமைத்துள்ளார்கள். இந்த யந்திரங்கள் காஞ்சி நகரைப் பிறநாட்டுச் சேனைகள் வந்து தாக்காதபடியும் எதிர்ப் பாரை வெருட்டி ஓட்டும்படியும் அமைத்திருக்கிறார்கள். இந்த யந்திரங்களைப் ''பொறி கள்'' எனச் சொல்கிறார். அந்த யந்திரங்கள் பகைவர்மேற் செய்கின்ற பல்வேறு தந்திர, உபாயங்களை நான்கு திருப்பாட்டால் சொல்கிறார். அவற்றின் இயல்பை இங்கு நோக்குக.

பகைவரைத் தடுத்துப் போர் செய்யும் வீரர்களாகிய தேர்மேல் வந்தார், யானை மீது வந்தார், குதிரை மீது வந்தார், காலால் நடந்து வந்தாரை எல்லாம் கிட்ட நெருங்க முடியாதபடி இந்த யந்திரங்கள் செயற்படும்.

வேகமாகச் சென்று இடித்துத் தாக்கும். வாளைச் சுழற்றும் சில யந்திரம், சில ஏவாயுதமும் எறியும், சில போரிட வருவாரைத் தூக்கி எடுக்கும். சில தூக்கி அடிக் கும், சில எறியும், சில பகைவரை விழுங்கும், சில பகைவரை விறுவிறெனப் பிடித்து

ஈர்த்தெறியும், சில கொல்லும், சில பகைவர் மீது கல்மழை பொழியும் சில வில்லை வளைத்து அம்பும் எய்யும். 15

உருக்குஞ் செம்பினை வங்கத்தை யிழுதொடு மோச்சும்
வெருக்கொ ணேமிக ளெறிந்திடும் வச்சிரம்வீசி
இருக்கும் நின்றிடுங் குப்புறுஞ் செறுநரை யிகலி
நெருக்குந் தாழ்ந்திடும் உலகளந் தோனென நிமிரும்

சில உருக்கிய செம்பை, உருக்கிய ஈயத்தை, கொதிக்கின்ற நெய்யைப் பகைவர் மீது வீசி எறியும், யாரும் அஞ்சும்படி வேகமாக வரும் சக்கரங்களை வீசும், வச்சிரா யுதம் வீசும் சில இருக்கும். நிற்கும் சில. குட்டிக்கரணம் போடும்; பகைவரை மிகக் கிட்டி நெருக்கும். தாழ்ந்து போகும்; ஈரடியால் மூவுலகளந்த நாராயணக் கடவுள் போல நீளும். 16

பீடு தங்கிய பணைமுர சியம்பிடும் பிடிக்குங்
கோடு மார்த்திடுந் துடிகளு மொலித்திடுங் கொட்புற்
ருடும் மீயுயர் புள்ளையு மெறிந்திடு மரண்மேல்
ஓடும் மீனுமக் கதிரையுந் தடுப்பபோல் உந்தும்.

சில யந்திரங்கள் பெருமையான முரசப் பறையை முழக்கும்; மக்கள் தம் கையாற் பிடித்தூதும் கொம்பு வாத்தியத்தினை ஊதும் சில யந்திரங்கள்; சில யந்திரங்கள் உடுக்கை ஒலிக்கும்படி அடிக்கும்; சில யந்திரங்கள் சுழன்று ஆடும். மேலே பறக் கின்ற பட்சிகளைச் சிதைத்து வீழ்த்தும்; மதில்மேல் ஓடும்; சூரியனையும் தடுப்பது போல் மேலதாக உந்தி எழும். 17

சூலம் வீசிடுந் தோமரம் வீசிடுஞ் சுடர்வேல்
ஆலம் வீசிடுஞ் சுடுமணல் வீசிடு மளப்பில்
சாலம் வீசிநின் றீர்த்திடு மகழியிற் றள்ளுஞ்
சீலம் வீசிய பாரிட மாமெனத் திரியும்.

சில யந்திரங்கள் சூலம் வீசும்; தோமரம் வீசும்; ஒளிபொருந்திய வேற்படையை மழுப்படையை வீசும்; சுடுகின்ற மணலை வீசும்; அளவில்லாத வலைகளை வீசி, அதில் அகப்பட்டாரைப் பிடித்து இழுக்கும். புறத்தே சூழ்ந்த அகழிக் கிடங்கில் சிலரைத் தள்ளும். நன்னிலை கெட்ட பூதம் போலச் சில யந்திரங்கள் பயங்கர வடிவுடன் திரியும். 18

திகழும் வெங்கன லுமிழ்ந்திடு மொன்னலர் செலுத்தும்
பகழி மாரியை விழுங்கிடும் பறவையிற் படரும்
இகழு நாவையும் மனத்தையு மெறிந்திடு மென்றுற்
புகழும் நீரவன் றம்மதின் மேலுறும் பொறிகள்.

சில யந்திரங்கள் பெரிதும் ஒளி உடைய நெருப்பை உமிழும். பகைவர் மழை சொரிந்தாற் போற் செலுத்தும் அம்புகளைத் தாங்கள் விழுங்கிடும். பட்சிகள் போலப் பறக்கும். சில யந்திரங்கள் இகழுகின்ற பகைவனுடைய நாக்கை வெட்டும்; அவன்

மனத்தை அழித்து மங்கச் செய்யும்; இவ்வாருகப் பல அற்புத, அதிசயப் போர்த் தொழிலை இந்த மதிலில் உள்ள யந்திரங்கள் புரிகின்றன. ஆனமையால் என்னுல் சொல்லப்படும் தகமை உடையன அல்ல இவை.

விஞ்ஞானம் வளர்ந்துள்ளது எனக் கருதப்பட்டு அதனுல் விதம் விதமான யந்திரப் போர்க்கருவிகளை, ஆயுதங்களை நாம் இன்று காண்கிருேம். ஆனுல் இவைகளில் பெரும்பாலான...ற்றின் இயல்புகள் பற்றி இங்கே கூறப்பட்டன. இங்கே கூறப்படும் யந்திரங்களின் இயல்பை நோக்கினுல், இப்போ மேல் நாட்டவர் கண்டுபிடித்தது எனச் சொல்லப்படும் ஆயுதங்களில், போர்க்கருவிகளில் இன்னும் மேம்பாடானவை பற்றி மேற்கூறிய பாடலில் குறிப்பிட்டுள்ளது. ஆகவே எம் முன்னேர் கொண்டவைகளில் புதிதாக ஒன்றும் இப்போ செயற்படவில்லை என்பது தெளிவாகிறது. அக்காலத்துள்ளது இக்காலத்துள்ளது; இக்காலத்துள்ளது அக்காலத்துள்ளது எனும் கருத்தால் ஒரு புதினமும் நிகழ்வதில்லை என்னும் வாக்கியம் ஒப்பாகிறது. உலகில் கருமங்கள் என்றும் ஒரு மாதிரியே. வியப்பதற்கொன்றுமில்லை, 19

பூணி னேர்தரும் பொன்னவாம் புரிசைமேற் புனைந்த
வாணி லாநெடுந் துகிலிகை பெயர்வன மலரோன்
சேணு லாயதீஞ் சுடரெனுங் கோபுர சிகரங்
காண வேபல வெகினமாய்த் தேடல்போற் கவினும்

அழகிய ஆபரணங்களை ஒத்துச் சிறந்து, திருவோங்கிய மதில்கள் மேலாக நாட்டியிருக்கின்ற வெண்ணிறக் கொடிகள் காற்றினுல் அசைவுண்டு படபடத்து நிற்பன. இது எதுபோல ஆகிறதெனில் பிரமதேவர் இம்மதில் மீதுள்ள வானளாவிய கோபுரங்களைப் பரஞ்சுடரென எண்ணி, இன்னும் அச்சுடரின் முடியினைத் தேடியடைவேன் என எண்ணி அன்னப்பட்சி வடிவங்கொண்டு மேற்பறந்து செல்வதுபோலாகிறது. 20

ஈர்த்த மாமதி சசியென்ப துலகுளோ ரிட்ட
வார்த்தை யல்லது சரதமோ கடிமதின் மருங்கில்
தூர்த்த கேதன மவன்மணி மேனியிற் றுடக்கப்
போர்த்த வெண்ணிலாக் கஞ்சுகம் பீறியபோலாம்.

குளிர்ச்சிபொருந்திய சந்திரதேவனிடத்திலுள்ள முயற்கறை (கறுப்பை நோக்கி) உலகத்தவர் சசியென அவனைப் பெயரிட்டழைப்பர். அவ்வாறு உலகத்தவர் அவனைச் சசி என்று சொல்வது உண்மையோ? ஆகாதெனவே சொல்லவேண்டும். ஏனென்ருல் இந்தச் சந்திரன் தனது நிலா என்கின்ற போர்வையைப் போர்த்திக் கொண்டு இம் மதில்மேலாக வந்தான். வந்தபோது இம்மதில்மேல் உள்ள கொடியின் நுனிக் கூர் பட்டு அவனது போர்வை கிழிந்துவிட்டது. ஆனபடியால் போர்வையிற் கிழிபட்ட இடம் கருமையாகத் தென்படுகிறது, எனவே சொல்லலாம், 21

காட்சி மேயவக் கடிமதிற் கதலிகை காணூஉச்
சூட்சி நாடிய பரிதியுங் கீழுறத் தொடர்ந்தான்
மாட்சி தேய்ந்திலன் வரன்முறை மனப்படு மதியோர்
தாட்சி செய்யினு மனையர்பா லணுகுமோ தவறு.

அழகிய காட்சிதரும் காஞ்சிநகர் மதில்மேலாக நாட்டிய கொடிகளைப் பார்த்தான் எல்லாவற்றையும் முன்கூட்டியே யோசித்து நடக்கின்ற சூரியதேவன். பார்த்ததும் அவனுக்கு ஒரு யுக்தி தோன்றியது. ''நான் இம்மதில் மேலாகச் சென்றால் இங்கு இக் கொடிகள் என்னைக் குற்றும். ஆகையால் மெதுவாகக் கீழாகப் போய்விட்டால் ஆபத்தில்லை'' எனத் தெளிந்து இக்கொடிகளின் கீழாகத் தான் தாழ்ந்து சென்றான். ஆனமையால் பெரியவனாகிய சூரியன் தாழ்ந்து சென்ற இடத்திலும் தவறில்லை. இதேபோலப் புத்திசாதுரியமாகச் சமயத்திற்குத் தக்கவாறு நடப்பவர்கள் சிற்சில காலந் தாழ்ந்து நின்றாலும் அவர்பால் தவறுகள் நணுகாது 22

புடைப ரப்பிய புரிசையி னுற்றிசைப் புறத்துந்
தடநி லைப்பெருங் கோபுர முளதழ னிறத்துக்
கடவு ளுச்சியின் வதனமொன் றின்றியே காண்பான்
அடைத லுற்றிடு திசைமுகம் பொருவின அவையே.

பக்கராகப் பரந்து பொலிகின்ற மதில்களின் நான்கு புறத்தேயும் விசாலித்த அடுக்கு நிலைக்கோபுரங்கள் நான்கு உள்ளன. இந்தக் கோபுரங்களின் நிலையை எவ்வாறு சொல்லலாம் எனில், அக்கினி போலும் மேனியுடைய உருத்திர மூர்த்தி தமது உச்சிமேல் உள்ள திருமுகத்தை நீக்கிவிட்டு நான்குமுகங்களோடு இந்த நகரத்தின் சிறப்பைக் காணும்படியாக வந்திருக்கிறார் எனும்படியாகவும் கோபுரங்கள் அமைந் துள்ளன. 23

என்று மாமதிக் கடவுளும் பிறருமீ ரியல்பாங்
குன்ற மேயெனக் கீழ்த்திசை யதனெடுங் குடபால்
நின்ற கோபுரங் கடக்கலர் வாய்தலி னெறியே
சென்று சென்றுபோ யப்புறத் தேகினர் திரிவார்.

என்ஞான்றும், சந்திரக் கடவுளும் பிறரும் கிழக்கேயும் மேற்கேயும் உள்ள மதிற் கோபுரங்களை உற்றுநோக்கி அவையைத் தமது உதய மலையையும் அஸ்தமன மலை யையும்போல எண்ணித் தாங்கள் எவ்வாறு தங்களது உதய அஸ்தமன மலை மேல் செல்லாது கீழாற் செல்வாரோ, அதேபோல இந்த மதிற் கோபுரங்களின் இடையே கீழாகச் செல்வார்கள், இவ்வண்ணம் மேலால் வருபவர் கோபுரங் கண்டவுடன் கீழாற் சென்று பின்னர் வழமைபோல மேல் எழுந்து செல்வார்கள். இதனால் கோபுர உயர்ச்சி கூறப்பட்டது. இதன் ஊடாகச் சூரிய சந்திரர் உள் நுழைந்து வெளித் தோற்றுவது, தேவ உலகத்தார்க்கு உதய அஸ்தமன மலை ஊடாக வருவதுபோலத் தோன்றியது. 24

தீபு ரத்திடை மடுத்தவ னாணையாற் சிறந்த
மாபு ரத்திடை வான்றொடுங் கடிமதில் வரைப்பில்
ஆபு ரத்தவாய்க் கிளர்ந்தவே யமைத்தவன் றென்னக்
கோபு ரத்திடைக் கொழுந்துபோ லோங்கிய கொடிகள்.

சிரிப்பெனும் நெருப்பினால் முப்புரங்களையும் எரித்தருளிய சிவபிரானது ஆணை யால் சிறந்து விளங்கும் காஞ்சியாகிய இந்நகரிலே அந்தரத்தவாய்த் திரிந்த இரும்பு, பொன், வெள்ளியாகிய புரங்களை எட்டித் தொடுவதுபோல வளர்ந்தோங்கி இருக்

கின்றன எனும்படியாக மதில்மேற் காணப்படுகின்ற கொடிகள் விளங்குகின்றன. இக்கொடிகளைக் கீழ் நின்று நோக்குவார்க்குப் புரங்களைத் தாவிப் பிடிக்கச் செல்லும் கொழுந்துகளைப் போல்வன. 25

மாடமாளிகை மண்டபங் கோபுர மறுகிற்
கோடி கோடியின் மேலுமுண் டன்னதார் குணிப்பார்
ஆடு கேதனத் தளவையு மன்னதே அகல்வா
னூடு போகலா தலமரும் பறவைக ளொப்ப.

இந் நகரிலே, மாடங்கள், மண்டபங்கள், கோபுரங்கள் ஆகியன வீதி தோறும் கோடானு கோடிக் கணக்காகக் காணப்படுவன. அதனை யார் அறிந்து கணக்கிடுவார்? இன்னும் இக் கட்டிடங்கள் மேலே நாட்டிய கொடிகளுக்கு அளவேயில்லை. அக் கொடிகள் காற்றினால் அசையும் தன்மையை நோக்குங்கால் வானமேல் செல்லமுடியாது சிறகினை அடித்துத் தவிக்கும் பறவைகள் போலாகின்றன, 26,

சிகர மால்வரை யன்னமா ளிகைதொறுஞ் சிவணும்
மகர தோரண மாடிகள் பலவுற வயங்கல்
இகலும் வெய்யகோ ளிரண்டுமா யொருவடி வெய்தி
அகல்வி சும்பிடைக் கதிர்களின் புறமறைத் தனைய.

மேலுள்ள முடிகொண்ட மலைபோலும் வளர்ந்தோங்கிய பல அடுக்கு மாளிகை தோறும் பொருந்திக் காணப்படும் மகர தோரணங்கள், மாடிகள், பலவாகப் பிரகாசித்தல் வலியுடைய கொடிய இராகு கேதுக்கள் இரண்டுமாய் ஒருவடிவம் கொண்டு அகன்ற ஆகாயத்தே சூரிய சந்திரனின் புறத்தை மறைத்தாற் போலவும் உள்ளது. இராகு, கேதுக்கள் பாம்பின் வடிவுடையன. அவைகள் இணைந்தாற்போல 'மகர தோரணங்கள்' அமைந்தன. 27

செம்பொ னிற்புரி நிலையுடைத் திகிரியந் தேர்கள்
அம்ப ரத்திடை வசியுற வீற்றுவீற் றுகுந்
தம்ப முற்றல மருவன செய்யகோற் றலையிற்
பம்ப ரத்துருத் திரிப்புறக் கறங்கிய படிய.

செம்பொன்னினாற் செய்த சில்லினையுடைய நிலைக்கொண்ட தேர்கள் ஆகாயத்திடத்து நீண்டிருக்கும் கூர்களையுடைய தம்பங்களில் தொடுக்கப்பட்டு அசைந்து சுழன்று நிற்பன. இது எது போலாகிறதெனில், ஒரு தண்டின் தலையிலே பம்பரம் சுழல்கின்ற தன்மைபோல இருக்கிறது. 28

பளிங்கி னாற்செய்த தெற்றியின் றலைமிசைப் பனிதோய்
வளங்கொ ணித்திலஞ் செம்மணி குயிற்றிய வைப்பில்
துளங்க நாற்றிய பொன்மணிப் பாலிகை தொகுவ
குளங்கொ டாமரை மலர்ப்பொகுட் டாயின குறிக்கின்.

பளிங்குக் கண்ணாடிக் கற்கள் பதித்துச் செய்த திண்ணையின்மேற் குளிர்ச்சி பொருந்திய முத்துக்களையும் மாணிக்கங்களையும் அழுத்திப் பதித்துள்ளார்கள். இதன்

மேலாக, பொன்னினலும், இரத்தினங்களாலும் ஆக்கப்பட்ட நவதானிய முளைகள் பொருந்திய பாலிகை வைத்திருக்கிருர்கள், இதன் இயல்பை நோக்குங்கால் தாமரக் குளத்தில் தோன்றும் தாமரைப்பூ மொட்டுப்போல இருக்கிறது.

நாம் எமது இல்லங்களிலே ஒரு பாத்திரத்து அழகான பூக்களைக்கொய்து திண்ணையிலோ அல்லது வரவேற்பு அறையின் நடுவிலோ கீழ் நிலத்து அழகாகக் கோலமிட்டு வைப்பது வழக்கம். இதேபோலத் தான் இங்கு மாளிகைகளின் திண்ணைகள் மீது பொன்பாலிகை முளைத்த பாத்திரங்களை அழகாக வைத்திருக்கிருர்கள்.

இங்கே பளிங்குக் கற்பதித்த திண்ணைக்குத் தாமரைக் குளத்தையும், குளமேற் தோன்றும் மலர் மொட்டுக்குப் பாலிகையையும் சொல்லப்பட்டது. 29

ஓவி யத்தியன் மரகதத் தலத்தின் தும்பர்த்
தாவி லாடகத் தலமிசை நித்திலத் தவமேற்
கோவை பட்டசெம் மணித்தலம் பொலிதலாற் கொண்மூ
மூவ கைக்கதிர் வியலிடந் தெரிப்பதம் மூதூர்.

சித்திர வேலைப்பாட்டோடு அமைந்த, மரகதப் பச்சையாற் செய்த நிலத்தின் மேலே, குற்றமில்லாத மஞ்சள்நிறம் பொருந்திய பொன்னினல் வேருேர் அடுக்குத் தலம்பொருந்தியது. இதனினும் மேலாகக் கோவையாக அணியப்பட்ட முத்துத் தலம் பொருந்தியது. இதன்மேலாக மாணிக்கத்தலம் இருக்கிறது, இவ்வாறு வரிசை வரிசையாகப் பொருந்திய தலங்களின் உச்சியிலே முகில்கள் படிந்திருக்கிறது. இந்த முகில்கள்மேல் இந்தப் பச்சை, மஞ்சள், நீலம் முதலிய ஒளிகள் படுதலாலே மூவகை ஒளிகளை இம்மூதூரில் அம்முகில்கள் தெரிய நின்றன. 30

கன்னல் வேளெனும் மைந்தரும் மாதருங் கலந்து
மன்னு நித்தில மாளிகைப் பத்தியின் மாடே
பொன்ன வாஞ்சிறை மணிமயிற் குழாத்தொடும் போகும்
அன்னம் மாமதி முகிலிடை நுழைந்துபோ யனைய.

கரும்பு வில்கொண்ட மன்மதனையொத்த அழகினையுடைய ஆடவர்களும், அவர் காதலியரும் தம்முட் கலந்து மகிழ்வாகப் பொருந்திவாழும் முத்து மாளிகைப் பத்தியின் பாங்கராகப் பொன்போலும் சிறகினையுடைய மயிற் கூட்டத்தோடும் பறந்து செல்கின்றது அன்னப் பறவை. இந்தக் காட்சி எப்படிப் போலும் எனில் பெரிய பூரண சந்திரன் முகில் கூட்டத்திடையே சென்றதுபோல இருப்பது. 31

தண்ட மாகியே புவியுறு பணியெலாந் தழுவி
அண்ட மீமிசை யிரவியும் மதியமு மடைதல்
கண்டு மாளிகைச் சூளிகை மருங்குபோய்க் கவர்வான்
கொண்ட சீற்றத்தின் நாவெறிந் தன்னபூங் கொடிகள்.

இப்பூமியிலுள்ள பாம்புகளெல்லாம் திரண்டெழுந்து வானத்து எழுகின்ற சூரியனை, சந்திரனைக் கண்ணுற்று, இந்த மாளிகைகளின் பக்கராகச் சென்று சூரியர், சந்திரர் தம்மையறியாதபடி மெதுவாகத் தாவிப் பிடிப்பேன் என எண்ணிக்கோபத்

தோடும் சீறி மேலெழுந்த தன்மை போலும் நல்ல பூங்கொடிகள் மாளிகைகளின் கரைகளிலே முளைத்து மேலோங்கி நிற்பன.

'' சீறிக்கொண்டு வளருது இது '' எனச் சில கொடிகளைச் சொல்லல்போல மாளிகைக் கரைமேல் வளர்ந்தோங்கும் கொடிகளைச் சூரிய சந்திரரைச் நோக்கிச் சீறியெழும் பாம்புகள்போல எனக் கொடிகளின் வளர்ச்சியைச் சிறப்பித்தார். 32

தேனை வென்றசொல் லாரொடு மைந்தருந் திளைக்கும்
மீன வாவிபோல் வியன்படி கத்தினுல் விளங்குந்
தான மீமிசைத் தயங்கிய முழுமணித் தலந்தான்
வான நின்றிடு தெய்வத மானமே மானும்.

தேனிலும் இனிய சொல்பேசும் பெண்களோடு ஆண்களும்கூடி நீராடும் குளம் போல அழகான கண்ணாடிப் பளிங்கினுற் செய்யப்பட்டு விளங்குகின்ற இடத்தின் மேல் விளங்குகின்றது மாணிக்கத்தினுல் ஆக்கப்பட்ட ஒரு தலம். இந்த மாணிக்கத் தலத்தை நோக்கினுல் ஆகாயத்தில் நின்றிட்ட தெய்வீக விமானம்போல இருக்கும். 33

தேவர் தானவர் முனிவரர் சித்தரோ டியக்கர்
வாவு கின்னர ருவணர்கந் தருவர்மற் றுள்ளோர்
ஏவ ருந்தம தகன்பதி யிகந்தவ ணெய்தா
மேவு கின்றன தனித்தனி யிருக்கைகண் மிகுமால்.

தேவர்களும், அசுரர்களும், முனிவர்களும், சித்தர்களும், இயக்கர்களும், பறக்கும் இயல்பினையுடைய கின்னரர், கருடர், கந்தர்வர்களும் மற்றுளோர் யாவரும் தத்தமது இருப்பிடங்களை வெறுத்து இக்காஞ்சியிலே சேர்தலால் அவர்கள் வந்து இருக்கின்ற தனித்தனி இருப்பிடங்கள் மிகுந்து காணப்பெறுவன. 34

தூங்கு குண்டிகை யருகுறக் காலெதிர் தூண்டி
ஓங்கு நாசிமேல் விதிமுறை நயனங்க ளுறுத்தி
ஆங்கொ ராசனத் திருந்தர னடியகத் தடக்கிப்
பாங்கர் மாதவம் புரிகுநர் சாலைகள் பலவால்.

கையில் தூங்குகின்ற கமண்டலத்தைத் (தூக்குச் செம்பு) தமது பக்கராகபொருந்த வைத்துப் பிராண வாயுவை மேலெழுப்பி மூக்கு நுனியினைத் தமது கண்ணுல் விதிமுறை நோக்கியவாறு அங்கே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்து சிவபெருமான் திருவடியினை உள்ளத்துள் இருத்தி நிட்டை கூடித் தவஞ்செய்கின்ற முனிவர்கள் இருப்பிடங்கள் பலவாகவும் இருக்கின்றன.

இருந்து பார் என்றெனக்கு இனிய நல்வாக்குத் தந்த
அருந்தவன் என்னும் தெய்வ ஆசான் தன்தாள்கள் வாழ்க. (நற்சிந்தனை) 35

பாடு நான்மறை யந்தணர் வேள்விகள் பயில
மூடு தண்புகை யண்டமுங் கடந்தன முன்னந்
தேடு கின்றதோர் பரஞ்சுடர் மீட்டுமித் திறத்தால்
நீடு கின்றதோ வென்றுநான் முகத்தனும் நினைய.

நான்கு வேதங்களையும் முறையே ஓதுகின்ற பிராமணர்கள், யாகங்களைச்செய்ய அந்த யாக நெருப்பிலே தோன்றிய புகையானது அண்டமேல் சென்று அப்பாலும் போகின்றது. இவ்வாறு நீண்டு நேராக மேற்போகின்ற புகை உருவினைப் பார்த்த பிரமதேவர் இதுதான் நான் முன்னர் தேடும்படி தோன்றிய அனற் சோதி யோஎன நினைக்கும்படி இருக்கிறது. 36

நான்ம றைக்குலத் தந்தணர் நவையறு காட்சி
ஊன்ம றைத்திடு முயிரென வோம்பிய வொழுக்கார்
மேன்மு றைக்கணோ ரைப்புலப் படிற்றினை வென்றோர்
வான்ம றைத்திடு மாளிகை வீதியும் மலிந்த.

ஊனில் மறைந்துநிற்கும் உயிரைப் பேணுதலிலும் பார்க்கத் தமது ஒழுக்கத்தைப் பேணுகின்ற பெருமையுடைய பிராமணர்கள் வாழ்க்கையில் மேம்பாடாவது பொன் அல்ல, புகழல்ல, பெருமையல்ல, ஆனால் ஐந்து புலன்களையும் அடக்குதலே பெருமையெனத் தெளிந்து, களவாக நின்று எம்மை மயக்கும் புலன்களை வென்றோர்களாய்த் தம்மைத் தாமே உணர்ந்த சிவப்பிராமணர்கள் வாழுகின்ற மாளிகைகள் நெருங்கிய வீதிகளும் மலிந்தது அக்காஞ்சி நகரம். 37

ஏவு பல்படை வலியினர் வெஞ்சம மிகந்தோர்
நாவி னுன்மறை பயில்பவர் நணுகுறு நலத்தாற்
கோவு நீணகர் மறுகெலாங் குருமணிச் சிகரத்
தேவு நீணகர் நிலைமையே போல்வது தெரியின்.

பல படைக்கலங்களைப் பிரயோகத்தலிற் சாமர்த்தியமுடையவர்களும், கொடிய போரிலே வெற்றியீட்டியவர்களும், நாவினுல் வேதங்களை ஓதுபவர்களுமாகிய அரசர்கள் இந்நகரிற் பொருந்தி வாழும் தன்மையினுல், நெடிய அந்தக் காஞ்சி நகரிலுள்ள அரச வீதிகள் முழுவதும், நாம் ஆராய்ந்து பார்க்குமிடத்து நிறம் வேறு வேறாகக் காணப்படும், இரத்தினங்கள் இழைத்த முடிகளை உடைய பெரிய தேவ உலகத்தை ஒத்து விளங்குகிறது.

அரச வீதிகள் தேவ உலகத்தை ஒத்து விளங்குவன. 38

அணியி னேங்கலும் பன்மணிக் குவால்களு மார்வந்
தணிவி லாடகக் குவைகளும் பிறவுமுன் றழைப்பக்
கணிக ணுறு கற்பக மனையன காட்சி
வணிக ராவணத் தெற்றிகள் வயின்றொறும் வயங்கும்.

இந்நகர்க் கடை வீதிகளில் ஆபரணக் குவியல்களும், பலவகைப்பட்ட இரத்தினக் குவியல்களும், காண்பார் ஆசைப்படாமல் இருக்க முடியாத பொற் குவியல்களும், பிறபொருளும் முன் மாளிகையிலே அமர்ந்திருப்ப, இக்கடை வீதிகளின் எண்ணிக்கைகளைக் கணக்கிட முடியாதபடி பெருகிக் கற்பக விருட்சத்தினைப் போலும் காட்சி தருவனவாய் விளங்குவன. 39

கங்கை மாமகள் தொல்பெருங் குலத்தர்கா சினியின்
மங்கை யாளருள் புரிதரு மகாரெனும் வழக்கோர்
செங்கண் மானிகர் வெறுக்கையர் அயன்பதஞ் சேர்ந்தோர்
துங்க வீதியு மேனையர் மறுகொடுந் தோகுமே.

மகிமை பொருந்திய கங்காதேவியினது பழைய பெரிய மரபிலே தோன்றியவரும், பூமிதேவி பெற்ற பிள்ளைகள் என்று சொல்லப்படும் வழக்கத்தை உடையவரும், சிவந்த கண்ணை உடைய விஷ்ணுமூர்த்தியை ஒத்த செல்வத்தை உடையவரும், பிரமதேவரின் பாதத்துதித்தவர் எனச் சொல்லப்படுபவரும், ஆகிய வேளாண் மக்களது மேன்மை பொருந்திய திருவீதிகளும், மற்றையோருடைய வீதிகளோடும் இணைந்து தோன்றும்.

உலகில் பிரமதேவரின் படைப்பைப் போல் தாமும் உணவு உற்பத்தி செய்வாராதலின் வேளாளரை இங்கு அயன்பதத்துதித்தோர் எனவும் கூறப்பட்டது. 40

கண்டு கேட்டவை யுண்டுயிர்த் துற்றறி கருவி
கொண்ட வைம்புல னெருங்குற நடாத்திய கொள்கைத்
தொண்டர் கூட்டமும் விழிவழிப் புனலுகத் தொழுங்கை
அண்டர் கூட்டமும் ஆலயந் தொறுந்தொறு மருவால்.

கண்டும், கேட்டும், உண்டும், உடுத்தும், பரிசித்தும் அறியப்படுகின்ற பஞ்சப் புலன்களை வேறு வீண் வழியிற் செல்லவிடாது காண்பவற்றைக் கண்டு, கேட்பவற்றைக் கேட்டு, உண்பவற்றை உண்டு, உணர்பவற்றை உணர்கின்ற சிவனடியார் கூட்டமும் கண்கள் ஆனந்த நீரினைப் பரப்ப உருகுகின்ற உள்ளத்தோடு கைதொழுகின்ற தேவர் கூட்டமும் ஆலயங்கள் எங்கும் எக்காலமும் காணப்பெறும். 41

ஆதி நான்முகன் எகினத்தி னடிகளு மமலன்
பாதி யாளன்றன் உவணத்தி னடிகளும் பனிக்கார்
நாத னூர்தரு தந்தியி னடிகளும் நாளும்
வீதி வீதிக டொறுந்தொறுங் காண்வர விளங்கும்.

இக் காஞ்சியிலே பிரமதேவரும், விஷ்ணு மூர்த்தியும், இந்திர பகவானும் நாள் தோறும் வந்து போதலாலே இங்கு நகர வீதிகள் தோறும் இவர்களுடைய வாகனங்களுள் ஆதி தேவனாகிய பிரமரின் வாகனமாகிய அன்னத்தின் அடிகளும், சிவபிரானது சக்தியென ஓதப்படுகின்ற விஷ்ணு மூர்த்தியினுடைய வாகனமாகிய கருடனின் அடிச் சுவடும், மேகவாகனன் எனச் சொல்லப்பெறும் இந்திரனுடைய ஐராவத யானையின் அடிச்சுவடும் இங்குள்ள வீதிகள் தோறும் காணப்படுவன. 42

மாவி னோதையுங் களிற்றின தோதையும் மருங்கின்
மேவு தேர்களி னோதையுங் கவிகையாய் விரிந்த
காவு சூழ்தரு மன்னர்சீ ரோதையுங் கறங்குந்
தேவ துந்துபி யோதையு மிறுத்தில தெருவு.

குதிரைகளின் கனைப்பொலியும், யானைகளின் பிளிற்றோசையும் பக்கராகப்பொருந்திச் செல்லுகின்ற தேர்களினோசையும் குடைபோல் விரிந்த பசுமைக்கொம்பரினையுடைய மரங்கள் சூழ்ந்த சோலைகளிலே சூழ்ந்து உலாவ விரும்பும் அரசர் செய்யும் ஓசையும் ஓயாது ஒலிக்கும் தேவதுந்துபி ஓசையும் குறைந்திலது இக்காஞ்சி வீதியிலே. 43

நாட்டி யச்செயல் யாவையுஞ் சிவனது நடனம்
பாட்டி சைத்திறம் யாவையு மன்னதே பதியோர்
கேட்டி ருப்பன யாவையு மவனிசைக் கேள்வி
கூட்டம் யாவையு மன்னவன் றொண்டுசெய் கூட்டம்.

அந்நகரிற் செயும் நடனச் செயல்கள் யாவும் சிவபிரானது நடனமாகும். பாட்டு இசைகள் யாவும் ஈசனைப் பாடும் இசையே. அப்பதியோர் கேட்டு இருப்பன யாவையும் அவனுடைய புகழ் இசையே. அதுவன்றி அங்கு கூட்டமாக உள்ளனவெல்லாம் ஈசனின் தொண்டு செய்கூட்டம், அந்நாட்டிலுள்ளார்களின் ஆடல், பாடல், கேட்டல், செய்தல் ஆகிய அனைத்தும் ஈசனுக்காகவே ஆகும். 44

பாலு றுந்ததி யிழுதுதே னிருக்கைகள் பலவுங்
கோல மாகுமந் நகரிடை யவையுறை கூவல்
போலு மாயிடை மாதவத் தவளறம் புரியுஞ்
சாலை யாயின வரம்பிலா அடிசிலஞ் சாலை.

அழகுடைய அந்நகரிலே பால், தயிர், நெய், தேன் முதலிய பொருட்கள் யாவும் இருக்கும் இடமெல்லாம் இந்தப் பொருட்கள் இருக்கும் கிணறுகளாகவே இருக்கும். அவ்வளவில் இப்பொருட்கள் எஞ்ஞான்றும் குறைவின்றி ஓங்குவன. அஃதன்றி அந்நகரிலே மாதவஞ் செய்பவளாகிய எம் காமாட்சி அம்மை உறைதலினாலே அங்கு அளவு கடந்த தவச்சாலைகள் இருக்கின்றன. அதுவன்றியும் எம்பிராட்டி 32 அறங்களையும் அங்கு செய்தலால் அளவற்ற அன்ன சத்திரங்களும் அங்கு உள்ளன. 45

அளவில் பற்பகல் தம்மினும் நீங்கியோ ரடுத்த
கிளைஞர் வந்துழி யெதிர்தழீஇ நன்னயங் கிளத்தி
உளம கிழ்ந்தவர்க் கூட்டுமின் னடிசில்போ லுறுவோர்
எளிதி னுங்கிட வழங்குமால் ஓதன விருக்கை.

வெகு நாட்களாகத் தம்மைப் பிரிந்து நீங்கிச் சென்ற உறவினர் பின்வந்துசேரக் கண்டபோது எவ்வாறு உள்ள மகிழ்வாக அவரைத் தழுவி வரவேற்று உபசரித்து இனிய வார்த்தைகளைப் பேசிக்கொண்டாடிப் பரிவோடும் நல்விருந்தாக அவருக்குப் போசனம் கொடுப்பார்களோ, அவரைப்போல் அங்குள்ள அன்னசத்திரங்கள் வேண்டியளவு உணவினை அங்கு வருவோருக்கு பரிவாக அளித்தவாறு இருக்கின்றன, 46

வேறு

மாட மாளிகை வாயி றொறுந்தொறும்
நீடு கண்ணுள ராமென நின்றுநின்
றூடு சித்திரப் பத்தி யமரரும்
நாடி நோக்கி நயந்திடப் பட்டதே.

மாடங்கள், மாளிகைகள் முதலானவைகளின் வாயில்கள் தோறும் காணப்படும் பலவிதமான சித்திரங்களின் அழகைக்கண்டு பார்த்த கண் திசைதிருப்ப முடியாத படி வியந்து நின்று தேவரும் நயந்திடுகிறார்கள். அவ்வாறு இத்தேவர்கள் அசை வில்லாது நோக்கி நிற்கும்படி அச்சித்திரப் பத்திகள் திகழ்கின்றன. இவ்வாறு சித்தி ரப் பத்திகளை நோக்கி நிற்பாரின் அசைவற்ற நிலைநோக்கி நாம் இவரை நீடுகண்ணு ளரோ எனவும் சொல்லும்படி நிற்கிறார்கள். 47

எல்லை தீர்ந்த விரவிக டுண்டிய
சில்லி யாழித் திகிரிகண் மானுமால்
மல்லன் மாநகர் மைந்தர்க ளூர்தரும்
பல்வ கைச்சுடர்ப் பண்ணுறு தேர்களே.

எல்லையற்ற ஒளியினையுடைய சூரியர்கள் தூண்டிய வட்டமான உருளையினையு யுடைய தேர்கள்போல ஒத்திருக்கின்றன, அக்காஞ்சி நகரில் வாழுகின்ற இரத்தின பரணங்கள் அணிந்த மைந்தர்கள் ஊர்ந்து செல்லுகின்ற பலவகையான ஒளியுடைய முத்து, வைரம் வைத்திழைத்த தேர்கள். 48

வெள்ளை யாதி வியன்கவி யாவையுந்
தெள்ளி தின்மொழி தென்கலை யேமுதல்
உள்ள பல்கலை யோதுகின் றார்களும்
வள்ளி யோர்களும் மன்றுதொ றீண்டுவார்.

வெண்பாப் பாட்டு முதலாகச் சொல்லுகின்ற பல பாடல் இனங்களைச் சிறப்பா கவும், தெளிவாகவும் சொல்லப்படும் தென்கலை எனப்படும் தமிழ்க்கலையை முதற் கொண்டு, பல பாஷைகளையும் பயின்று, அழகான செய்யுட்களைப் பாடிக் கேட்பாரை மகிழ வைக்கின்ற புலவர்களும், அப்புலவர்கள் செயலுக்குப் பரிசில் கொடுத்து ஆதரிக்கும் பெருங் கொடையாளிகளும் இந்நகரில் உள்ள சபைகள்தோறும் காணப் படுவர். 49

இகலும் வேழத் தெயிற்றினை யேய்ந்திடும்
நகிலி னார்க ணறுங்குழன் மேலிடும்
அகிலி னாவியு மாய்மணி மாடமேல்
முகிலும் வேற்றுமை யின்றி முயங்குமே.

ஒன்றோடொன்று போட்டியிடுகின்ற யானைக் கொம்பைப் போலும் நீண்ட தனங் களை உடைய மகளிர் தங்கள் கூந்தலுக்கு இடுகின்ற சந்தனப்புகை விம்பி மேலெழுந்து சென்று வானத்திலுள்ள முகிலோடு கலந்து, முகிலும் அப்புகையும் வேற்றுமையின் றித் திகளும். 50

பண்ணி னோசையும் பாலினை வென்றிடுங்
கண்ணி னார்கள் களிநட வோசையுந்
தண்ண ரம்பிய றந்திரி யோசையும்
விண்ணு ளோர்க்கும் விருந்தென லாயவே.

பண்களின் இனிய ஓசையும், தமது பசுமையால் பாலையும் வென்றிடும் கண்களை உடையாரது ஆனந்த நடன ஓசையும், குளிர்மையாகச் செவியில் புகும் யாழ் நரம்

பின் ஓசையும், தேவ உலகத்தார்க்கும் விருந்தென ஆகியது. பாடல், இசை யாவும் இவ்வுலகுளார்க்கு மட்டுமன்றி, தேவர்கட்கும் பிரீதியானது. இசைவல்லவர் தேவர், நாரதர், கிம்புருடர், கருடர் ஆயினர்கள். அப்படி இருக்கவும் காஞ்சியிற் கேட்கப் படும் இசை, இசைவல்லார்களும் இச்சை கொள்ளும்படியாக இருந்தது. 51

அணிகு லாவு மரம்பையர் காளையர்
நணிய தோளை நயப்புற நாகருங்
கணிகை மாதரைக் காமுற மேவலான்
மணிகொள் காஞ்சி மதனர சாயதே.

அழகிய இக்காஞ்சியில் ஆடவர்கள் பொலிந்த தோளோடும், அழகான மேனியும் உடையர். இவர்களின் அழகால் மயங்கி, தேவ உலக அரம்பை மாதர் இவர்பால் மனம் போக்கி இவர்களைச் சேர எண்ணுவர். இதே நிலையில் இங்குள்ள அழகான தாசிப்பெண்ணைக் கண்ணுற்ற தேவர்கள், தாசிப்பெண்களைத் தானும் சேர விரும்புவர். ஆகவே காஞ்சி எனும் பதி மன்மதனுக்கு ஓர் அரசானது. 52

கூற்றிற் செல்லுங் கொலைக்கரித் தானமும்
ஏற்றிற் செல்லு மிடையர்தஞ் சேரியின்
ஊற்றிற் செல்லு மொண்பாலு முடனுரு
ஆற்றிற் செல்லுமவ் வாவணந் தோறுமே.

இயமனைப் போலப் பொல்லாக் கோபத்தோடும், வேகத்தோடும் செல்லும், கொலை செய்யும் யானையின் மதம்பொழிந்த நீரும், பெரிய இடபங்களில் செல்லுகின்ற இடையர் சேரியிலே ஊற்றெடுத்து ஓடும்படியாகிப் பெருகிய பாலும், அக்காஞ்சியிலே ஆறுபோல வீதியூடெல்லாம் கான்வழி வழிந்தோடியபடியே இருக்கும். 53

## வேறு

பண்ணுளர் நரம்பியல் பாணிக் கேற்றிட
எண்ணுள கணிகைய ரினத்தொ டாடலுங்
கண்ணுள ராடலுங் காம னுடலும்
விண்ணுள ராடலும் வெறுப்ப மேவுமே.

பண்ணமையும் ஓசைபெருக்கும் நரம்பினைக் கொண்ட யாழ் வாசிப்போரின் பாணிக்கேற்ப, அநேக தாசிப்பெண்கள் கூட்டமாகப் பரந்து நின்று ஆடிய ஆடல் களும், இதைக் கண்டு மகிழ்ந்து, அவர்கள் ஆடலைக் கண்ணால் நோக்கிக் களித்து, அவர்கள் மேற் கண்போக்கி நிற்பாரது அந்த விளையாட்டும், இத்தன்மையால் எனது செயல் புரிய எங்கே இடமென்று தேடி அலைந்த மன்மதன் இவர்களைக் கண்டு. ''எனக்கு வாய்த்த இடம் இதுதான்'' என, தனது விளையாட்டை அங்கே வைத்துக் கொள்கின்ற மன்மதன் ஆடலும், இதையெல்லாம் பார்த்துத் தேவர்கள் எல்லாம், எங்களுக்கும் ஏன் இந்த ஆடல்? இது வேண்டாம் என்று அலுத்து வெறுப்பாகும்படி ஆடல்கள் பொருந்தியன. 54

சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, யாழ்ப்பாணம். J-276-72

அரிவையர் மைந்தர்க ளணிந்து நீத்ததே
திருமகள் காமுறுஞ் செல்வ மாகுமேற்
கருதரு நான்முகக் கடவுட் காயினும்
பொருவரு நகர்வளம் புகலற் பாலதோ.

இங்குள்ள பெண்கள் அணிந்து, 'இனிக் கூடாது இது' எனக் கழித்த ஆபரணங்கள், பட்டாடைகள் முதலிய பொருட்களைப் பார்த்து, இலக்குமிதேவியும் ஆசைப்பட்டு, ஐயய்யோ இந்த அருமையான, அழகான பொருட்களையும் அல்லவோ பழையது இது என்று கழட்டி, கழித்தெறிந்தார்களே என, அவர்கள் நீக்கிய செல்வம் இருக்குமானால், எம்மால் நினைக்கவும் முடியாத நான்கு முகமுடைய பிரமதேவர்க்காயினும் இந்த நிகரற்ற நகர்வளம் பேச முடியுமோ? முடியாது. 55

## வேறு

மாருய்ச் சிருர்க ளெறிந்தாடிய மான்ம தத்தாற்
சேருய்ப் பொற்சுண்ணத் துலர்வாய்ப்பனி நீர்கள் சிந்த
ஆருய்ப் பளிதத் தினில்வாலுகத் தாறு மாகி
வேருய்ப் புவியோ ருணர்வாமென மேய வீதி.

குழந்தைகள் விளையாடும்போது தம்மில் தாம் மாறுபாடாகி, ஒருவர்மீது ஒருவர் எறிந்து விளையாடிய கஸ்தூரிக் குழம்பால் அந்நில முழுதும் சேருகி, இதன்மேல் அங்குள்ளார் வீசிய பொற்சுண்ணப் பொடிகளால் சேறு உலர்வாகும் வேளையில் பின்னர், அங்குள்ளார்கள் வீசிய பன்னீரினுல் ஆருகிப் பெருகி, இப்பால் அங்குள்ளார் வீசிய பச்சைக் கற்பூரத்தால் நீர் வரண்டு, வெள்ளை மணல் நிலம்போல, ஆற்றினூடு உள்ள மணற்பாதை போலாகிறது. இவ்வகையான மாற்றங்கள் எதுபோல என்ருல் பூமியிலுள்ள மனிதர்களின் உணர்ச்சி ஒருபோதும் உறுதியாக நில்லாது, திரிந்து மாறுபடுவது போலாகிறது.

உதாரணமாக உயிர்கட்குத் தீங்கு செய்யக்கூடாது என்பது எல்லார்க்கும் தெரியும். அப்படியாயினும் இன்னெருவரைத் தமது வசதிக்கேற்றபடி சிலர் பல நாட்கள் அல்லற்பட வைப்பார்கள். அந்நிலையை அறிந்தும், தான் பொருள் சம்பாதிக்கவோ, பெருமை எய்தவோ, சந்தர்ப்பத்திற்கேற்றவாறு மனதை மாற்றுவது போல, என்றமையால் புவியோர் உணர்வெனக் கூறினர். 56

தண்டாமரை யேந்திய வானவன் றன்னை யொத்தான்
எண்டாவிய மாமத னேந்திழை யாரி லஞ்சி
வண்டாமரை பூத்தன வொத்தனர் வந்து செந்தேன்
உண்டாடிய தேன்களை யொத்தனர் ஓங்கல் மைந்தர்.

குளிர்மையான தாமரை மலரில் வாசஞ் செய்கின்ற பிரமதேவரை ஒத்தான் மன்மதன். ஏனெனில் பிரமதேவர் உயிரினைப் படைப்பது போல, காம இன்ப உணர்வை ஊட்டுபவன் மன்மதன். ஆகவே அவனுல் உணர்வூட்டிப் பக்குவப்படுத்திய நிலையில், இளங்கன்னியர்கள், தாமரைப்பூ மலர்ந்து தேனைத் தன்னில் உண்டாக்குவது

போல், பொலிவாலும், அழகாலும், எழிலாலும் நிறைந்து காணப்பட்டனர். அவ்வாறுகிய கன்னியரை அணைந்து, அவரிடமுள்ள எழிலாகிய இன்பத்தேனை நுகருமாறு ஓடித்தேடி அலைகிறார்கள் இளைஞர்கள். ஆகையால் இவர்கள் தாமரைப்பூவில் உள்ள தேனை உண்ணும் வண்டுபோல் ஆயினர். 57

ஏமங் குலவு முரசங்க ளிரட்ட வாசத்
தாமங் கமழ்பந் தரினூடு தமக்கி யன்ற
ஓமங் களின்மா மணஞ்செய் தனரூர் குலாவும்
மாமங் கலமே யுலப்பின்றி மலிந்த தன்றே.

இன்பச்சுவை நிரம்பிய குழலோசை, மேள ஓசையுடன் பொலிவெய்த வாசனை உடைய பூமாலையால் ஆக்கிய பந்தர்களூடு, ஓமாக்கினி வளர்த்துத் தமக்கியன்றவாறு விதிப்படி வேதமுறை திருமணம் செய்கின்ற பெரிய மங்கலச் செய்கையே எங்கும் பொலிவெய்துகிறது. இச்செய்கை நகரெங்கிலும் குறைவின்றி நிகழ்வதாகிறது. 58

மாகந் திகழு மகிலாவிகொள் மாட மீதிற்
பாகின் மொழியா ரிளமைந்தர்தம் பாலி னேச்சப்
போகுஞ் சிவிறிப் பனிநீர்புறஞ் சிந்த வென்று
மேகஞ் சிதறும் பெயலென்ன விளங்கும் வீதி.

ஆகாயத்திற் பறந்து செல்கின்ற அகிற்புகையோடு பொலிவெய்துகின்ற மாடங்களூடே இனிய சர்க்கரைப் பாகுபோலும் மொழி பயில்கின்ற இளம் கன்னிமார் தம் காதலரோடு விளையாட்டாக வீசுகின்ற பன்னீர் தெளிக்கும் கருவியால் (சிவிறி) தெளித்த பன்னீர்த் திவலைகள் ஒருவர்மீது பட்டுப் பட்டு, மழைத்துளி போல மேல் மாடங்களினின்றும் கீழ்நோக்கி வருகிறது. இதனால் இங்கு எப்போதும் துந்துமி மழை பெய்கின்றதோ என எண்ணும்படியும் ஆகிறது. 59

வன்மா முலையேந் தியமங்கையர் மைந்த ரானோர்
தொன்மாட மீதி லெறிந்தாடுபொற் சுண்ண மோடு
நன்மா மலர்த்தாது விசும்புற நண்ண மேகம்
பொன்மா முகிலாய்ப் பனிநீரிற் பொழியு மன்றே.

வலிமையான முலைகளைச் சுமந்திருக்கும் மங்கையர்களும், ஆடவர்களும் மகிழ்வாய் மிக மிக உயர்ந்த பெருமாடங்கள் மீது ஏறி நின்று, அவர்கள் ஒருவர் மீது ஒருவர் விளையாட்டாக எறிந்தாடிய பொற்சுண்ணப் பொடிகளும், நல்பூக்களை ஒருவர் மீது ஒருவர் வீசியபோது அப்பூக்களில் இருந்து உதிர்வாகிய மகரந்தப் பொடிகளும், மேலெழுந்து வான மீது செல்ல, சுண்ணப் பொடியும், மகரந்தப் பொடியும், மஞ்சள் நிறம் கொண்டமையால் மேகங்களில் இப்பொடிகள் பட்டவுடன் மேகங்கள் பொன் போன்ற முகில்களாக நிறங்கொண்டு, மலர் வாசனை மரகந்தப்பொடியுடனும் சேர்ந்து முகில்களில் கலத்தலாலே பன்னீர் மழையாக முகில்கள் மழைபொழியும்.

காதலர்கள் மாட மீது நின்று மகிழ்வால் ஒருவர் மீது ஒருவர் வீசி விளையாடிய சுண்ணப்பொடியாலும், மகரந்தப்பொடியாலும் மேகங்கள் பொன்னிறமாகி, பன்னீர் மழையாகப் பெய்யும். 60

தாராற் பொலிபொற் புயவீரர் தவாது செல்லுந்
தேரார்ப்பு நால்வாய்க் கரியார்ப்பும்வெஞ் சேனை யார்ப்பும்
ஏரார்ப்பு மிக்க பதிமானவ ரீண்டு மார்ப்புங்
காரார்ப்பும் வேலைக் கடலார்ப்புங் கடுத்த வன்றே.

இக்காஞ்சி என்னும் நகரில் ஓயாத இரைச்சல் ஓசை கேட்டுக் கொண்டே இருக்கும். அது எவ்வாறெனில்; மாலைகள் நிரம்ப அணிந்து செல்லுகின்ற வீரர்கள் தேர்மேல் செல்கிறார்கள். இவர்கள் செல்லும் தேர்கள் ஓயாது வீதிகளெல்லாம் செல்லுதலால் ஏற்படும் தேரோசையும், பெரிய வாயினை உடைய யானைகளின் பிளிற்றோசையும், கொடிய சேனைகளின் ஆரவாரமும், அழகிய பல தேசங்களில் இருந்து வருகின்ற வீரர்களின் ஆரவாரிப்பும் ஆகிய இவைகள் மேக முழக்க ஓசையையும், கடல் இரைச்சலையும் போல ஒத்து விளங்குவன. இங்குள்ள தேர்களோசை, யானையோசை, மனிதர் ஓசை, யாத்திரீகர்கள் ஓசை இவை யாவும் கடல், மேகமுழக்கங்களோடு ஒத்து எஞ்ஞான்றும் கேட்கப்படுவன. 61

வானோக்கி நிற்கு முலகென்னவு மன்ன வன்செங்
கோனோக்கி நிற்குங் குடியென்னவுங் கோதி லும்பர்
ஆனோர்க்கு நாக ருலகோர்க்கு மவனி யோர்க்கும்
ஏனோர்க்கும் நாடும் நகராகி யிருந்த தவ்வூர்.

மழையின்றி உலகம் வாழ முடியாதபடியால், வானத்தை நோக்கும் உலகத்தவர் எனவும், அரசன் செங்கோன்மையாக அரசாட்சி செய்யாதபோது மனிதர் சீர் கெட்டு அழிந்து போவர். ஆகையால் அரசன் செங்கோலை நோக்கி நிற்கும் குடிகள் என்னவும், இவ்வாறு மழையையும், செங்கோலையும் நோக்கி நிற்கும் உலகமக்களின் அவாப்போல, இக்காஞ்சி எனும் நகரமானது, தேவர்களுக்கும், ஏனைய உலகில் வாழ்வார்க்கும் இவ்வுலக மனிதர்க்கும், பெரிதும் விருப்புடை நகரமாயது.

வெப்பம் நீங்க மழையையும், பகை பயம் நீங்க அரசின் செங்கோலையும் நோக்கி நிற்பது இயல்பு. அதேபோல் உயிர்க்கு ஆறுதல் தருவானாகிய ஈசன் தான்தோன்றியாக அமர்ந்திருப்பதினாலும், 32 அறங்களையும் புரிகின்ற தாயாகிய காமாட்சி அம்மை இங்கு தவம் புரிந்து உயிர்களை வளர்த்தலாலும், வானையும், கோலையும் நோக்கும் உலகுபோல் காஞ்சியை எல்லாரும் விரும்பி நிற்பர். 62

கோடு நெறியு மிகலும்மனக் கோட்ட மாய
கேடும் பிணியு முதலாகிய கேதம் யாவும்
நீடும் பரிவோ டுறைவா ரிடைநீங்க லாலே
வீடந் நகரே யெனிலென்னின் விளம்ப வற்றோ.

இந்நகரத்தில் ஒழுக்கமின்மையும், பகையும், மனத் தீங்குகளாகிய பொறாமை, குரோதம், கோபம், உலோபம் முதலிய கேடுகளும், நோயும், துன்பமும், சஞ்சலங்கள் இவையான குற்றங்கள் யாவும் அங்கு நெடிது வாழ்வோரிடத்து இல்லாமற் போய் விடுதலால் இந்நகர வாழ்வுதான் கேடு நீங்கிய முத்தி இன்பத்திற்கு ஒப்பாகிறது. இவ்வாறாகிய நிலையுடைய காஞ்சியின் பெருமை என் சொல் அளவில் அமையுமோ, முடியாது. 63

## வேறு

ஏமமே தருவாச் சினைகளு மனைத்தா விலைதளிர் செய்யபூந் துகிராக்
காமர்பூ மணியா வுதித்தொரு காஞ்சி கண்ணரோ ரைவர்முன் கண்டு
தாமினி தருளும் பொய்கையின் மருங்கே தன்னிழல் பிரிகிலா துறலாற்
பூமியெண் காஞ்சி மாபுர மெனும்பேர் புனைந்ததப் பொருவிலா
நகரம்.

உடற் பக்கம் இன்பமாகவும், கிளைகளும் இன்பமயமாகவும், இலை, தளிர் செம்மையான பவளமாகவும், அழகிய அதன் பூ இரத்தினமாகவுந்தான்றோன்றியாக உதித்த ஒரு காஞ்சி மரத்தை ஐந்து விஷ்ணு மூர்த்திகள் முன்னே கண்டார்கள். இக் காஞ்சி மரம், இங்கே இதனைக் கண்ட ஐந்து விஷ்ணு மூர்த்திகளால் அமைக்கப்பெற்ற, ஐந்து தாமரைக் குளங்களின் பக்கராக நின்று தனது நிழலானது, தனது பக்கரில் உள்ள குளங்களின் செறிவால் தன்னைவிட்டு நிழல் பிரியாதிருக்கும்படி நிற்கின்ற தன்மையினால், இதனை மகத்தான காஞ்சிபுரமென இப்பூமியிலுள்ளோர் பெயரிட்டழைப்பர்.

விஷ்ணு மூர்த்திகள் ஐவர் பெயர்களாவன:- வாசுதேவர், நாராயணர், பிரத்தியுத்தர், அநிருத்தர், சங்கர்ஷணர் என்போராவர். இவர்கள் அமைத்த குளங்கள் ஐந்து. அவையாவன சூரிய புஷ்கரணி, சந்திர புஷ்கரணி, அக்கினி புஷ்கரணி, சுவர்ண புஷ்கரணி, அமிர்த புஷ்கரணி என்பனவாம்.

இந்தக் காஞ்சி மரம் தன்னைச் சூழ இருக்கும் மேற்கூறிய ஐந்து பொய்கைகளோடும், சூரிய உதய அஸ்தமன காலங்களிலும், தன்னிழல் தன்னை விட்டுப் பிரியாதபடி அமைந்து நிற்பது. இதனை;

மன்னு வெங்கதிர் மீதெழும் போதும் மறித்து மேல்கடல் றலைவிழும் போதும்
தன்னிழற் பிரியாத வண் காஞ்சித்தான மேவிய தன்மையு முடைத்தால்

எனப் பெரிய புராணத்து சேக்கிழாரும் கூறியருளினர். 64

சுருதியானுறங்கு மிராத்தொறு முடிவிற் றுஞ்சிய வூழிக டோறும்
விரையவந் துலக மழித்திடுங் கடலவ் வியன்பதி யெல்லையுட் சிறிதும்
வருவதை யஞ்சிப் புறந்தனிற் சூழ வந்தொரு சத்திகாத் திடலாற்
பிரளய சித்தென் றொருதிரு நாமம் பெற்றதக் காஞ்சியம் பேரூர்.

வேதங்களை ஓதுகின்ற பிரமதேவர், நித்திரை செய்கின்ற பிரளய காலத்தும், அவர் இறக்கின்ற பெரும் பிரளய காலத்தும், அதி விரைவாக எழுந்து வந்து உலகை அழித்திடுகின்ற கடல் இந்தக் காஞ்சி நகரத்துட் பிரவேசிக்க முடியாமல் பயந்து, இந்நகரத்தை மட்டும் சூழ நிற்கும்படி ஓர் சத்தி இங்கிருந்து காத்திடலால் இந்தக் காஞ்சி நகரத்திற்கு பிரளயசித்து எனும் நாமமும் உண்டு.

**பிரளயசித்து:-** பிரளய காலத்து அழியாதது. இவ்வுலகத்து இரவும் பகலும் போல் உலக சிருஷ்டியும் அப்படித்தான். எங்களுக்கு ஒரு பகலும், ஒரு இரவும் கொண்டது ஒரு நாள். இப்படி 365 நாட்கள் கொண்டது ஒரு வருடம். இப்படியான ஒரு வருடம் தேவர்கட்கு ஒருபகலும் இரவுமான ஒருநாள். இப்படி அவர்கட்கு வருடங்கள் நாளாகி

வருடமாகிப் பின்னர் உலகமுடிவாக அமையும். இங்கே பிரளயமென்பது உலகஅழிவை ஒருதுளி மண்ணில் எவ்வளவோ மடங்கு நீர் அடங்கியுள்ளது ஒரு துளி மண்ணே எவ்வளவோ மடங்கு நீராகுமெனில், இப்பூமியில் உள்ள மண்ணெல்லாம் நீரானுல் எப்படி அந்த நீர் பரந்து தோன்றும் என யோசித்துப் பாருங்கள். இஃதன்றி ஓர் சதுர்யுக காலமென்பது 43,20,000 வருடங்கள். இப்படியாக 1000 சதுர் யுகம் கொண்டால் பிரமதேவருக்கு ஒரு பகல். இப்பகல் செல்ல, அவர் நித்திரை செய் வார். அப்போது எல்லாம் ஒடுங்கும். நீராகவே எங்கும் காணப்படும்,

வாரிதிகள் நாற்றிறமும் வல்லேயில் எழுந்தே
ஆரியை தவஞ்செய் பதி ஆதிய அல்லால்
பாரினே அருந்தி ஒருபாக முறமேலும்
ஓரெழு பிலத்துலகும் உண்டுலவும் அன்றே.

என இங்கு பின்னரும் கூறுவர். பிரளய விரிவை நாம் பின்னர் தக்கன் வரலாற்றில் காண்போம். 65

**கயிலேயி லரனே யம்மைபூங் காவிற் கண்களே மூடலு முலகிற்**
**பயிலுறு கொடிய வினையிரு ளகலும் பான்மையால் வந்துமா நிழற்கீழ்**
**இயலொடும் பரமன் பூசனே யியற்றி யிரைத்தெழு கம்பைகண் டஞ்சிச்**
**செயன்முறை தழுவக் குழைந்தருள் செய்யச் சிவபுர மானதச் சீரூர்.**

முன்பொருகால் திருக்கைலாய மலேயில் அம்பிகை விளேயாட்டாக எம்பெருமானு டைய கண்களே மூடினுள். மூடலும் இங்கும் எங்கும் இருள்பரந்து அதனுல் உயிர்கள் துயருற்றன. அவ்வாறு உயிர்கள் வேதனேயுறும் செயலால் அதை நீக்கும் பொருட் டாக எம்பிராட்டி இப்பூமியில் வந்து எம்பெருமானே அருச்சனே புரிந்து வழிபட வேண்டி வந்தபோது இக்காஞ்சியிலே மாமர நீழலில் தான்தோன்றியாக அமர்ந்து ஈசனேப் பூசித்தாள். அவ்வாறு பூசித்த பெருமாட்டியின் அன்பினே நுகரவேண்டி எம் பெருமான் விளேயாட்டாக கம்பையாற்றினேப் பெருகும்படி அருள்செய்ய கம்பையாறு அவ்வண்ணமே வேகமாகப் பெருகிவர, அதைத் தான் தடுக்கவும், அது நில்லாது பெருகிவரக்கண்டு எம்பெருமானேயே தஞ்சமென ஓடிச்சென்று தழுவிக் கொண்டாள். எம்பிரான் தம்மைத் தழுவிய எம்பிராட்டிக்கு திருமேனி மெத்தெனவே குழைந்து காட்டினுர். இவ்வாறு பிரான் வெளிப்பட்டு பிராட்டிக்கு அருள் செய்தமையால் சிவபுரம் என்னும் பெயரும் கொண்டது காஞ்சி.

எள்கலின்றி இமையவர் கோனே ஈசனே வழிபாடு செய்வாள்
உள்ளத்துள்கி உகந்துஉமை நங்கை வழிபடச் சென்று நின்றவாகண்டு
வெள்ளங்காட்டி வெருட்டிட அஞ்சி வெருவி ஓடித்தழுவ வெளிப்பட்ட
கள்ளக் கம்பனே எங்கள்பிரானே காணக்கண் அடியேன் பெற்றவாறே.

(சுந்தரர் தேவாரம்) 66

**விண்ணுறை மகவான் கரிபுரி தவத்தால் வெற்பதாய்த்** தன்னே முன்ருங்கு
**புண்ணிய கோடி யிபகிரி மிசையே பொருவிலா வேதியுத் தரத்தில்**
**அண்ணலங் கமலத் திசைமுகன் வேள்வி யாற்றலு** மவற்கருள் செய்வான்
**கண்ணன்வந் திடலால்விண்டுமா புரமாங் கட்டுரை பெற்றதக் காஞ்சி**

தேவ உலகத்தை ஆளுகின்ற இந்திரதேவன் ஊர்ந்து செல்லும் யானை ஐராவதமெனப்படும். இவ்வாருகிய வெள்ளை நிறம்பொருந்திய ஐராவதமென்னும் யானைமேல் சென்று இந்திர பகவான் முருகப்பெருமானின் பெருமையறியாது அவரோடு போர் செய்தான். அப்போது இந்திரன் அவருக்கு தோற்று வீழ்ந்து பின்னர் அவர் அருளால் எழுந்தனன். இந்த யானை முருகப்பெருமானேடு போர் செய்ய இந்திரன் ஏறிச் சென்றமையால் பாவமடைந்து, அப்பாவம் நீங்கும்பொருட்டு இப் பூமியிலே வந்து புண்ணியகோடி என்னும் இடத்திலே விஷ்ணுபெருமானை மலையாகச்சுமந்து நின்றது இது இபகிரி எனப்படும். இந்த மலைமேலாக வடக்கேயுள்ள ஓமம் செய்யப்படும் உத்தரவேதி எனப்படும் இடத்தில், பிரமதேவர் தன்னுடைய படைப்புத் தொழில் கைகூடுமாறு யாகம்செய்ய, அந்த யாகத்தில் விஷ்ணுமூர்த்தி வந்து தோன்றினர். அதனல் இக்காஞ்சி விண்டுமாபுரம் எனவும் பெயர் பெற்றது.

பிரமதேவர் யாகம்செய்த வரலாறு:

முன்னெரு காலத்து பிரமதேவர் தனது படைப்புத் தொழில் சரிவராதுபோகவே ஓர் யாகம்செய்தார். அந்த யாகத்திற்கு என அவர் வைத்திருந்த குதிரையை மாயாவி என்னும் அசுரன் திருடிச் சென்று நன்னீர்க் கடலில் ஒளித்தான். பிரமதேவர் செய்வகையறியாது கலங்கி, காஞ்சியிலே மாமரநீழலில் இருக்கும் ஏகாம்பர ஈசனை பூசித்து வணங்கினர். அப்போது சுவாமி வெளிப்பட்டு விஷ்ணு மூர்த்தியைக் கொண்டு களவாடப்பட்ட குதிரையை வாங்கித் தருவதாக அருள்செய்து, விஷ்ணு பெருமானை நோக்கி, ''நீ இப் பிரமதேவருடைய குதிரையை களவாடிச் சென்ற மாயாவியை வதைத்து குதிரையை பெற்றுக்கொடு, அதுவல்லாமல் நீயே சென்று இப்பிரமதேவர் செய்யும் யாகத்தில் எமக்குரிய அவியை ஏற்பாய்'' எனத் திருவருள் புரிந்தார். ஆகவே விஷ்ணு பின்னர் பிரம்மதேவர் செய்த யாகத்திற்கு தான் வந்து தோன்றியமையால் காஞ்சிக்கு விண்டுபுரம் என்னும் பெயர் வந்தது. 67

கார்த்திரு மேனித் தண்டுழாய் மௌலிக் கண்ணனுங் கமலமே லயனும்
ஆர்த்திடுந் தரங்கப் பகீரதி மிலைந்த வவிர்சடை யமலனுமாகும்
மூர்திக டத்த முலகமே போல முன்னியப் பதியமர் செயலாற்
சீர்த்திரி மூர்த்தி வாசமா கியபேர் சிறந்ததக் கச்சிமா நகரம்.

மேகத்தையொத்த கருநீல நிறமுடையவரும், துளசி மாலையை திருமுடியில் அணிந்தவருமாகிய கண்ணபிரானும், தாமரை மலர்மேல் வாசம் செய்கின்ற பிரமதேவரும். கங்கை நதியைத் திருச்சடைமேல் அணிந்த சிவபிரானுமாகிய மூவரும் தங்கள் தங்கள் இருப்பிடமாகக் கருதி இங்கு அருளோடும் வாழ்தலினல் இந்த காஞ்சி நகரை, சிறப்பு வாய்ந்த திரிமூர்த்தி வாசம் எனவும் பெயரிட்டழைப்பார். 68

தரணிகண் முழுதும் புரிதரும் விரிஞ்சன் றன்மனம் புனிதமாம் பொருட்டால்
திருமகள் கணவன் கமடமாய்ப் பூசை செய்திடு கச்சபா லயத்தில்
அரனடி பரவி யருச்சனை யியற்றி யங்கண்வீற் றிருந்திடு நெறியால்
வரமிகு பிரம புரமென வொருபேர் மன்னிய தன்னதோர் நகரம்.

இப்பூமி முழுவதையும் படைக்கின்ற பிரமதேவர் தனது மனமானது புனிதத் தன்மையெய்தும் பொருட்டாக, மகாலெட்சுமி தேவிக்கு நாயகராகிய விஷ்ணுமூர்த்தி ஆமை வடிவங்கொண்டு சிவபிரானைக் குறித்து தவஞ்செய்து பூசித்த கச்சபாலயம் என்

னும் தலத்தில், பிரமதேவர் சிவபிரானுடைய திருவடிகளை பூசித்துக்கொண்டு அங்கு இருத்தலால் பிரமபுரம் எனவும் ஓர் பெயரினை இக்காஞ்சி பெற்றது.

விஷ்ணு மூர்த்தி பூசித்த வரலாறு: முன்பொரு காலத்தில் இந்திரன் தனது தருக்கினுல் செல்வமெல்லாவற்றையும் இழப்ப அதனுல் அவன் செல்வம் பெறும்படி பாற்கடல் கடைந்து அவனுக்கு அமிர்தம் வழங்க சிவபிரான் அருளால் எண்ணினுர் விஷ்ணுமூர்த்தி. பாற் கடலைக் கடைவதற்கு சிவபிரான் அருள்பெறும்படி விஷ்ணுவானவர் இக்காஞ்சியிலே சிவபிரானை ஆமைவடிவாக அமைந்திருந்து பூசித்து பேறுபெற்ருர். அதனுல் அவர் பூசித்த இடம் கச்சபாலயம் என ஆயிற்று.

பிரமதேவர் பூசித்தது: பிரமதேவர் அடிமுடி தேடலிலே ஓர் பொய் சொன்னதினுல் அவருடைய மனம் அழுக்கானது. அந்தஅழுக்கை நீக்கும் பொருட்டாகக் காஞ்சியில் வந்து விஷ்ணுபிரான் பூசித்த இடத்திலே இருந்து சிவபிரானை அருச்சனை புரிந்து அவர் அருளால் மனத்தூய்மை பெற்ருர். 69

வீடுறு முத்தி போகமென் றவற்றில் வெஃகிய வெஃகியாங் கென்றுங்
கூடுறு தவத்தால் வழிபடு வோர்க்குக் கொடுத்திடுந் தன்மையாற் காம
பீடமென் றொருபேர் பெற்றது மலர்மேற் பிரமனே முதலினேர் தவத்தை
நாடினர் செயலால் தபோமய மெனும்பேர் நணியது கச்சிமா நகரம்

எல்லாவற்றினின்றும் நீங்குதல் எனப்படும் முத்தி இன்பம், போகஇன்பம் எனப்படும் இவ்வுலகத்து பிறந்தார் பெறப்படும் இன்பங்களில் எதை எதை விரும்புகிருர்களோ விரும்பியதை, விரும்பியவாறு அவரவர் செய்கிற தவத்திற்கேற்றவாறு கொடுத்துதவுகின்ற தன்மையால் காமபீடம் என்றும் ஒருபேரைப் பெற்றுக்கொண்டது இக்காஞ்சிமாநகரம். தாமரை மலர்மேல் இருக்கின்ற பிரமதேவன் முதலாகச் சொல்லப்பட்ட கடவுளர் தவஞ் செய்வதற்குக் காஞ்சியையே நாடி இருந்து தவஞ் செய்தலால் தபோமயம் எனவும் ஒரு பேர் பெற்றது காஞ்சியாகிய இப்பதி.

காமபீடம்: உலக நாயகியாகிய காமாட்சி அம்மை தானே உலகருள் காரணத்தினுல் காமக்கோட்டம் என்னும் கோவிலில் இனிது தவக்கோலத்துடன் இன்றும் இருத்தலால் இங்குறைவார் யாவரும் தம்மனத்து எப்பொருளை விரும்பித் தவம் இருப்பாரோ அது நிச்சயமாகக் கைகூடும். ஆனமையால் காமபீடம் எனப் பெயர் பெற்றது.

தபோமயம்; தவம் செய்வார்க்கு மன அடக்கம், ஆசைகள் நீங்குதல் முதலியன கைகூடுதல், மற்றும் இடங்களிலும் பார்க்க இங்கு சிறப்பாகப் பெறுதலினுல் இந்த பெருமையை உணர்ந்து உலகைப் படைக்கின்ற முதல்வராகிய பிரமதேவரே இந்த காஞ்சியைத் தவம் செய்வதற்கு சிறந்த இடமாகத் தெரிந்து இங்கு இருக்கிருர்கள் என்றமையால் இதற்கு தபோமயம் எனக் கூறினுர். சிற்சில இடங்கள் தவம் செய்வதற்கு இயல்பாக பொருத்தமுடையன. இதை யோகர் சுவாமிகளும்,

''மிண்டு மனத்தவரை மேல் நிலைக்கு கொண்டுவரும் — நல்லூர்த் தேரடி'' என நற்சிந்தனையில் கூறியமை காண்க.

70

சகங்களோர் மூன்றி லறம்பெரி துளதித் தரணியித் தரணிமா நகர்க்குள்
மிகுந்தரு மத்தின் பலத்தினைத் தரலால் வியன்சகற் சாரமென் றொருபேர்
புகும்பரி சுடைய தட்டசித் திகளும் பொருவின்மா தவர்க்கரு டிறத்தாற்
பகர்ந்திடுஞ் சகல சித்தி யென்றொருபேர் படைத்தது கச்சியம் பதியே.

சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்று உலகங்களிலே பெரிதும் தருமம் ஓங்கியது இந்த பூமி. இப் பூமியில் எத்தனையோ நகரங்கள் இருப்பினும், இங்கு இருப்போர்க்கு அவர் ஏனைய நகரங்களில் இருந்து செய்யக் கூடிய தருமங்களுக்கு பெறக்கூடிய பலனை இங்கிருந்து செய்யும்போது அநேக மடங்கு கூடுதலாகப் பெறும் படி இத்தலம் பெற்றுக்கொடுக்கின்றபடியால் இதற்கு சகற்சாரம் என்றொரு பெயர் பெறும் பரிசுடையது இக்காஞ்சி நகரம். இங்கு தவம்செய்யும் நிகரற்ற முனிவர் எட்டுச் சித்திகளையும் பெறும்படியாக அருள்கூடப்படும் திறத்தினால் எல்லோராலும் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற சகலசித்திபுரம் என்று இன்னோர் பெயர் படைத்தது காஞ்சியாகிய இப்பதி.

எட்டு சித்திகளையும் அருள்தரு திறத்தை

அட்டமா சித்திகள் அணைதரு காளத்தி
வட்டவார் சடையனை (சம்பந்த சுவாமிகள்)

எட்டு வகைச் சித்திகளாவன: அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகியன. 71

**உன்னருங் கயிலை நாயக னுமையை யொருபக னீலியென் றுரைப்ப**
**அன்னவ டனது காளிமங் கழிப்ப வங்கதி லையைவந் தெழலும்**
**முன்னவ னவளை யிந்நக ரிருந்து முறைபுரிந் தருளென விடுப்பக்**
**கன்னிகாத் திடலாற் கன்னிகாப் பென்னுங் கவின்பெய ருடையது கச்சி.**

நினைப்பாலும் நினைக்கமுடியாத திருக்கைலாய மலைமேல் நாயகராகிய சிவபிரான் ஒரு நாள் உமையம்மையாரை நோக்கி நீலி என்று சொல்லியருளினர். அப்போது உமையம்மை தமது இடத்திலிருந்த கருமை நிறத்தை கழித்து நீக்கினள். இப்படி நீக்கப்பட்ட கறுப்பிலிருந்து துர்க்காதேவி வந்து தோன்றினள். தோன்றிய துர்க்கா தேவியை நோக்கி சிவபெருமான் நீ இந்த காஞ்சிநகரைக் காவல் செய்வாயாக என்று அருளி துர்க்கையை காவல்புரியும்படி விடுப்ப அத்துர்க்காதேவி காத்திடலால் இக் காஞ்சி நகர் கன்னி காப்பு என்று இன்னொரு பெயர் பெற்றது. 72

**அரியதோர் கயிலைக் கணங்களி லொருவ னுனதுதுண் டீரன்மா லதிபால்**
**பெருமயல் கொள்ளச் சிவனிவ ளொடுநீ பிறந்திருந் தின்பமுற் றெம்பால்**
**வருகென நிலமேன் மன்னர்பாற் றோன்றி மற்றவளோடுசேர்ந் தரசு**
**புரிதரு செயலாற் காஞ்சிதுண் டீர புரமெனப் புகலநின் றதுவே.**

அடைதற்கு அருமையான திருக்கைலாய மலையிலுள்ள சிவகணங்களில் ஒருவனான துண்டீரன் என்பவன், உமையம்மையாரின் தோழிப் பெண்ணான மாலதி என்னும் பெண் மீது பெரிதும் மோகங்கொண்டான். அத்தன்மையை சிவபிரான் உணர்ந்தருளி துண்டீரனைப் பார்த்து நீ விருப்பங்கொண்ட மாலதியோடும் பூமிமீது போய்ப் பிறந்து இன்பத்தினை அனுபவித்து பின் என்பால் வருவாயாக என விடுத்தருளினர்.

அவ்வாறே ஈசன் அருள்படி துண்டீரன் பூமியிலுள்ள அரசர் குடும்பத்தில் பிறந்து வளர்ந்த மாலதி என்பாளைத் திருமணம் செய்து, அவளுடன் சேர்ந்து காஞ்சியில் இருந்து அரசு செய்தபடியால் துண்டீரபுரம் என பலராலும் சொல்லப்பட்டது.

துண்டீரன் என்பான் ஒரு நாள் திருக்கைலாய மலைமேல் சுவாமி அம்பாளோடு அருளோடும் உலா வருங்கால் அம்பாளின் தோழிப் பெண்ணாகிய மாலதி என்பாள் மேல் மனம்போக்கி, அவள்மேற் காதலாகி தன் சிந்தையை அடக்க முடியாதபடி

தவித்து நின்றான். அவன் நிலை உணர்ந்த கருணைப் பெருங்கடலாகிய ஈசன் அவனைப் பார்த்து, ''துண்டீரனே! நீ பூமிமேற் சென்று, நீ காதலித்த மாலதியோடு இன்புற்று அரசாண்டிருந்து, பின் எம்பால் வருவாய்'' என அருள் செய்தார். அவ்வாறே துண்டீரன் பூமியில் தோன்றி, காஞ்சியில் அரசு செய்திருந்தான். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அனிந்திதை கமலினி காரணமாக இவ்வுலகத்திற்கு வரவேண்டிய காரணத்தையும் நோக்குக. 73

தன்னையே யருச்சித் திடமலர்க் கேகித் தடந்தனிற் கராவின் வாய்ப்பட்டுத்
தன்னையே நினைந்து தன்னையே யழைத்த தந்தியைக் காத்தவொண் புயமால்
தன்னையே வேண்டித் தழன்மகஞ் செய்யத் தண்டகற் கெண்டிசை யரசு
தன்னையீந் திடலால் தண்டக புரமாந் தனிப்பெயர் பெற்றதத் தனியூர்

தனது தன்மையுணர்ந்து தன்னையே அர்ச்சனை செய்யும்படியாக யானையொன்று பூக்கொய்யும்படி தாமரைக் குளத்திற்குச் சென்றது. அவ்வாறு சென்று யானை பூவினைக் கொய்யும் போது, குளத்து நீரில் இருந்த முதலை ஒன்று யானையின் காலைப் பிடித்து இழுத்தது. முதலை வாயில் அகப்பட்ட யானை வேறு செயல் அறியாது அஞ்சி, தனது மூலப்பொருளை உணர்ந்து, ஆதி மூலமே என ஓலமிட்டுக் கதறியது. கதறிய யானையைக் காக்கவேண்டி, கருடன் மீது எழுந்தருளி வந்தார் நான்கு புயமுடைய நாராயணக் கடவுள். யானையை அன்று முதலை வாயினின்று நாராயணப் பெருமான் காத்தருளினார். அவ்வாறு காத்தருளிய நாராயணக் கடவுளை வேண்டி யாகஞ்செய்த தண்டகன் என்பானுக்கு, அவன் ஆணை எட்டுத் திக்கும் பரவி விளங்க அரசு செய்யுமாறு வரங் கொடுத்தார் நாராயணக் கடவுள். வரத்தைப் பெற்ற தண்டகன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அரசு செய்தபடியால் தண்டகபுரம் எனத் தனியான ஒரு பெயரையும் காஞ்சி பெற்றது.

முதலை வாய் யானையை மீட்டார் நாராயணக்கடவுள். முதலை உண்ட பிராமணப் பிள்ளையை மீட்டருளினார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். 74

அழகிய வயோத்தி மதுரையே மாயை யவந்திகை காசிநற் காஞ்சி
விழுமிய துவரை யெனப்புவி தன்னின் மேலவாய் வீடருள் கின்ற
எழுநக ரத்துட் சிறந்தது காஞ்சி யென்றுமுன் னெம்பிரா னுமைக்கு
மொழிதரு நகரந் நகரெனி லதற்கு மூவுல கத்துநே ருளதோ.

அழகான அயோத்தி நகரம், மதுரை, மாயை, அவந்திகை, காசி, நல்ல காஞ்சி, உத்தமமான துவாரகை என்று இப்பூமி தன்னில் மேலாக இந்த ஏழு நகர்களையும் முத்தி தருவதற்கு உரிய இடங்களாகச் சொல்வார்கள். இந்த ஏழு நகரங்களிலேயும் சிறந்தது காஞ்சி நகரம் என்று சிவபிரானே உமையம்மையாருக்குச் சொல்வதனால், இந்தக் காஞ்சி நகர் போல் சிறந்தது அல்லது நேராக உள்ளது இந்த மூன்று உலகங்களிலும் உளதோ. 75

பங்கமில் வசிட்டன் பசுப்பொழி பாலி படர்ந்திடு முத்தரஞ் சேயைச்
செங்கம லத்தோன் முதலினோ ராட்டுந் திருநதி தென்றிசைச் செல்லும்
அங்கவற் றிடையே கம்பமே முதலா மாலயத் தந்தரு வேதி
கங்கைகா ளிந்தி யிடைப்படுந் தலத்தின் முற்படுங் காஞ்சிமா நகரம்!

பங்கமில்லாத நெறியுடைய வசிட்ட முனிவன் வளர்த்த காமதேனுவின் பால் வழித் தோன்றியது எனப்படும் பாலி ஆறு இக்காஞ்சி நகருக்கு வடக்கே ஓடும். செந்தாமரை மலர் மீது இருப்பிடம் கொண்ட பிரமதேவர் முதலியோர் முருகக் கடவுளுக்கு அபிஷேகம் செய்வதற்கு சிறந்த நீர் இதுவென உணர்ந்து, அவரை அபிஷேகம் செய்கின்ற நீர் பொருந்திய சேயாறு தென் திசை செல்லும். இந்த இரு ஆறுகளுக்குமிடையில் திருக்கச்சியேகம்பம் முதலிய தலங்கள் பொருந்த இக் காஞ்சி அந்தர்வேதியாகப் பொருந்துதலால், காளிந்தி கங்கை என்னும் ஆற்றின் இடைப் படலால், விசேடித்துச் சொல்லப்படும் காசி தலத்திலும் சிறந்து முற்பட்டது காஞ்சிமாநகரம்.

**அந்தர்வேதி:** இரு ஆறுகளின் இடையில் இருப்பது. 76

**தொல்லையோர் பிரமன் றுஞ்சிய காலைத் தோன்றிய நீத்தமே லரிபோல்**
**செல்லுமார்க் கண்டன் கரத்தினிற் கம்பை சேர்ந்ததோர் தனிப்பெருஞ் சூதம்**
**எல்லைநீ ரிகந்து வளர்தலு மருப்பொன் றெய்தவக் கொம்பர்தொட் டிழிந்து**
**நல்லுமை குறிக்கொண் முதல்வனை வணங்கி நயந்தவ னிருந்ததந் நகரம்.**

முன்னொரு காலத்து, ஒரு பிரமதேவர் இறந்த காலத்து உலகெங்கும் ஒரே நீர் மயமாகி, பரந்து மூடிக்கொண்டது. அப்போது அந்த நீர்ப்பிரவாகத்திலே மார்க்கண்ட முனிவர் ஆலிலையில் பள்ளி கொள்ளும் நாராயணக்கடவுள் போல நீர் மேலாக நீந்திச் சென்றார். இப்படிச் செல்லும் மார்க்கண்ட முனிவர் கைக்கு, கம்பையாற்றின் பக்கராக நிற்கும், உலகை அழிக்க மேற்பட்டெழுந்த நீரிலும் மேலோங்கி வளர்ந்து நின்ற ஒரு மாமரத்தின் கொம்பு ஒன்று எட்டுதலும், அதைத் தொட்டுக் கீழே இறங்கி அந்த மாமர அடியில் தோன்றியருளுகின்ற நல்ல உமையம்மையார் குறிக் கொண்ட ஈசனை வணங்கி, அவரை விட்டு நீங்க முடியாத ஆர்வத்தால் அங்கு மார்க்கண்ட முனிவர் உறைவது காஞ்சிமாநகரம். 77

**சமையமா றினையுந் தாயென வளர்த்துச் சராசர வுணுக்களுய்ந் திடுவான்**
**அமைதரு மெண்ணான் கறத்தினைப் போற்றி யாதிபீ டத்தில்வீற் றிருக்கும்**
**உமையமர் காமக் கோட்டியைக் கதிரோ னுடுபதி கணங்கள்சூழ் தரலால்**
**இமையவர் தமக்குந் திசைமயக்குறுத வியல்புடைத் தந்நக ரென்றும்.**

ஆறு சமயங்களையும் தாய் எனும்படியாக வளர்ப்பவளாய், உலகில் உள்ள நிற்பனவும், சஞ்சாரம் செய்வனவுமாகிய உயிர் வர்க்கம் அனைத்தும் உய்யும் பொருட்டாக அமைந்த 32 அறங்களையும் வளர்ப்பவளாகிய எம்பிராட்டி அமரும் காமபீடம் எனப்படும் காமக்கோட்டக் கோயிலை சூரியன், சந்திரன், கணங்கள் சூழ்ந்து வருதலால் தெளிவான சிந்தை உடைய தேவர்களுக்கும் திசை மயக்கம் நீங்காதபடி திக்குத் திசை சொல்ல முடியாதபடி இருப்பது அக் காஞ்சிமாநகரம்.

**சமயங்கள் ஆறுவகை:** அகச்சமயம், புறச்சமயம், புறப் புறச் சமயங்கள் எனப்பல வகைச் சமய பேதங்களாயினும் எல்லாச் சமயத்திற்கும் அவரவர் பாவ நிலைப்படி தெய்வக் கொள்கையை வளர்ப்பவள் ஈஸ்வரியே. ஆகையால் பல்வேறு சமயங்களில் பாசுபதம், மாவிரதம், கங்காளம், பைரவம், சைவம், வாமம் என சிறப்புறக் கூறி னும், ஏனைய சமயத்தார்க்கும் அவ்வவர் பொருட்டால் தெய்வத் தன்மை வளர்ப்பாள் எம் அன்னை என்றமையால் சமயம் ஆறினையும் தாயென வளர்த்து எனக் கூறினர்.

தாயே யாகிவளர்த்தனை போற்றி (திருவாசகம்)
அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் (சித்தியார்)

**32 அறங்கள்:** அநாதையர் விடுதி, ஓதுவார்க்கு உணவு, அறுசமய சந்நியாசிகட்கு உணவு, பசுவிற்கு வாயுறை, சிறையில் இருப்பார்க்கு உணவு, பிச்சை, தின்பண்டம், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், பிள்ளை வளர்த்தல், பாலில்லாப்பிள்ளைக்குப் பால் கொடுத்தல், அநாதையின் பிணஞ் சுடுதல், அறவைத் தூரியம், சுண்ணப்பொடி கொடுத்தல், நோய்க்கு மருந்து, வண்ணான் கூலி, அம்பட்டன் கூலி, கண்ணாடி கொடுத்தல், தோடு கொடுத்தல், கண் மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர் துயர் காத்தல், தண்ணீர்ப்பந்தல், குளம் தோண்டல், பூஞ்சோலை, மடம் கட்டல், பசு உராய்ஞ்சிக்கல் நாட்டல், விலங்குகட்கு உணவு, எருது பேணல், கொலை செய்யப் படும் உயிரை விலைக்கு வாங்கி விடுத்தல், வயது வந்த கன்னிக்கு ஒரு வரன் தேடிக் கொடுத்தல் ஆகிய 32 அறங்களும் இறைவி செய்தருளுவன. 78

பாவமோர் கோடி புரியினு மொன்றும் பரிவினிற் றருமமொன் றியற்றின்
ஏவரும் வியப்பக் கோடியாய் மல்கு மின்னதோர் பெற்றியை நாடித்
தேவர்கண் முனிவர் தம்பதம் வெறுத்துச் சிவனருச் சனைபுரிந் தங்கண்
மேவினர் தவஞ்செய் திருத்தலாற் காஞ்சி வியனகர்ப் பெரிமையார்
விரிப்பார்.

இக் காஞ்சியிலே ஒரு கோடி பாவஞ் செய்யினும் அவை தேய்ந்து ஒன்றாகும். பரிவால் ஒரு தருமம்செய்தால் அது எல்லாரும் வியக்கும்படி கோடியாய் பெருகிப் பலனைத் தரும். இந்தத் தன்மையை உணர்ந்த தேவர்கள். முனிவர்கள் எல்லாரும் தமது அருமையான இருப்பிடங்களை வெறுத்து இங்கு காஞ்சியில் சேர்ந்து சிவனை அருச்சனை புரிந்து அங்கண் மேவி தவஞ்செய்திருத்தலால் காஞ்சிநகரின் பெருமையை யார் பகர்வார். 79

கங்கைதன் சிறுவ னருள்பெறு வேதாக் கண்படை கொண்டகா லையினும்
அங்கவன் றுஞ்சும் பொழுதினுங் காஞ்சி யழிவுறு திருந்தபான் மையினால்
துங்கவெண் பிறையு மிதழியு மரவுஞ் சுராதிபர் முடிகளு மணிந்த
மங்கையோர் பங்கன் படைத்ததே யன்றி மலரயன் படைத்ததன் றதுவே.

கங்காபுத்திரர் எனப்படுதலாலே காங்கேயன் எனத் திருநாமம் பூண்ட முருகப் பெருமானாலே, தனது அறியாமை நீக்கப்பட்டு அருள் பெற்ற பிரமதேவர் நித்திரை புரிந்த பிரளய காலத்தும், அங்கு அந்த பிரமதேவர் இறந்த ஊழிக்காலத்தும், காஞ்சி நகரம் அழிவுறாது இருந்த பான்மையினால், இந்தக் காஞ்சி நகரை, அழகிய இளம் பிறையையும், கொன்றை மலரையும், பாம்பையும், தேவராதியருடைய மண்டையோட்டு மாலையையும் அணிந்தருளிக் கொண்ட பெண் ஒரு பாகமாகப் பொருந்திய சிவபிரான் படைத்ததே அன்றி, பிரமதேவர் இந்நகரைப் படைக்கவில்லை.

உலகம் யாவற்றையும் படைப்பவர் பிரமதேவர். அவர் படைப்புகள் அவரோடு அழியத்தானே வேண்டும். ஆனால் காஞ்சி அஃதல்லாமல் அவர் அழிவுறும் காலத்தும் காஞ்சி அழியாதிருத்தலின், காஞ்சி பிறப்பு, இறப்பெல்லாம் கடந்த ஈசனாகிய சிவபிரானால் படைக்கப்பெற்றது. சிவன் எனும் வார்த்தையின் பொருள் மங்களகரமானது; அழிவைக் கடந்தது. அதனால் படைக்கப்பட்டதானமையின் அழிவற்றது காஞ்சி. 80

அரியபல் லிசையும் மறைபுனல் கங்கை யருஞ்சிலை யிலிங்கமங் குறைவோர்
சுரர்தரு வனைத்துங் கற்பக மின்பந் துய்ப்பது வேள்வியூண் பூசை
உரைசெப நடத்தல் வலம்வருந் தன்மை யுன்னலே தியானம்வீழ்ந் திடுதல்
பரனடி வணக்க மாவது காஞ்சிப் பதிக்கலால் எந்நகர்க் குளதே.

இந்தக் காஞ்சியிலே கேட்கப்படுகின்ற அரிய பல இசைகளும் வேதம். தண்ணீர் எல்லாம் கங்கா நீர். அருமையான கல் எல்லாம் இலிங்கம். அங்கு வாழ்கின்ற எத் திறத்து மனிதரும் தேவர்கள். மரங்கள் அனைத்தும் கற்பக மரம். அங்கு இன்பங்களை அநுபவித்தல் என்பது தான் யாகம். உணவு உண்பது சிவபூசை. அங்கு பேசுதல் செபம் செய்தல். அங்கு நடந்து திரிதல் கடவுள் கோயில் வலம் வருதலை ஒப்பது. ஏதொன்றை நினைத்தல் தியானம் செய்தல். கீழே விழுதல் சிவபிரானை வணங்குத லாகும். ஆகிய இச்சிறப்புக்கள் எல்லாம் காஞ்சிநகர்க்கல்லாது வேறு எந்த நகரத் திற்கு உளது?

உலக மாதாவாகிய அம்மை, காமக்கோட்டம் என்னும் பதியில் அமர்ந்தருளி அகிலமெல்லாம் அருள் நிறைந்து உய்யத் தவம் இருக்கிருள். அவள் குறிக்கொண்ட ஈசன் அப்பால் ஏகாம்பர ஈசஞக அமர்ந்து அருள் பாலிக்கிருர். இவ்வாருகச் சிறப் புற்ற காஞ்சியில் வாழ்வார் செயல் யாவும் இறை வழிபாடே ஆகிறது. 81

கணமுகில் செக்கர் போர்த்தெனுங் கரிய கஞ்சுகச் செந்நிறக் கடவுள்
மணிசுடர் வயிரக் கிம்புரி மருப்பு மால்கரி முகத்தவன் வருசூர்
துணிபட வெறிந்த வேலவ னயன்போற் ருேன்றிய சாத்தன்மால் விசயை
இணையில்சீர்க் காளி முதலினுே ரென்று மினிதுகாத் திடுவதந் நகரம்.

கருமையான முகில் செக்கர் போர்வை போர்த்தது எனும்படியான கரிய யானை உரிபோர்த்த சிவந்த ஒளி பரக்கும் திருமேனி உடைய வைரவக் கடவுள், முத்து மணிகள் ஒளிவிடும் வைரத்தினுல் செய்த கிம்புரி ஆபரணம் பொருந்திய கொம்பினை உடைய யானை முகமுடை விநாயகப் பெருமான், முளைத்து வரும் அசுரர் கிளைகளை துணிபடும்படி வேலால் கொன்றருளிய முருகப் பெருமான், பிரமதேவரைப் போல் விஷ்ணுமூர்த்தியினிடத்து சிவபிரான் அருளால் தோன்றிய எம் ஐயனுர், விஷ்ணு மூர்த்தி, துர்க்காதேவி, இணையற்ற சிறப்புப் பொருந்திய காளிதேவி முதலாயினுேர்கள் என்றும் மகிழ்வால் இனிது காவல் செய்யும்படி அருள் கொண்டது அக் காஞ்சி நகரம். 82

அறுசம யத்திற் கடந்தசை வத்தின் அன்றிவீ டிலதெனத் தெளிந்து
பிறரறி யாது தொன்மைபோ லிருந்து பிஞ்சகன் மீதுகன் மலரால்
எறிதரு தேரர் அன்பர்தங் கலிங்க மெழிலிகள் நனைத்தலுஞ் சிரத்தை
முறைபுரி சிலைமேல் மோதினுேர் முதலோர் முத்திபெற் றுடையதம் மூதூர்.

அறுவகைச் சமயங்களை அன்றி சமயங்கள் எல்லாவற்றையும் உள்ளடக்கியும் சமயவாதம் கடந்தும் எங்கும் பரவி நிற்பது சைவம். இதன் உண்மையைத் தெளிந்து தான் இவ்வாறு சைவஞகினேன் என்பதை பிறரறியாதவாறு பழமைபோல, புத்த சந்நியாசிபோல இருந்து அதனுல் சாக்கிய நாயனுர் எனப் பெயர்கொண்டு சிவபிரா

னுடைய இலிங்கம்கண்டு கல்மலரால் எறிந்து முத்தியெய்திய சாக்கிய நாயனுரும், ஓர் அன்பருடைய வஸ்திரத்தை தோய்க்கப்போனபோது, அது மழையால் நனைந்ததினுல் தனது தலையை தான் சீலைதோய்க்கும் கல்லிலே மோதிய திருக்குறிப்புத்தொண்ட நாயனுர் ஆகியவர்கள் முத்திபெற்றது இக்காஞ்சி நகரில்.

சாக்கியநாயனுர் வரலாறு: இந்நாயனுர் உண்மைப் பொருளை உணர வேண்டி முதல் புத்த சமயத்தைச் சார்ந்து அவர்களின் கோட்பாட்டுக்கு அமைந்து உடையும் மஞ்சள் போர்வையாகி ஒழுகி வந்தார். அவ்வாறு வருங்கால், தனது தாகம் அங்கு நிரம்ப முடியாமையினுல் உண்மை நிலையை சைவம் தான் சொல்லும் எனத் தெளிந்து சைவராக மாறினுர். ஆனுல் உடைமட்டும் மாறவில்லை. உள்ளம் சிவன்பால் வைத்தார்க்கு உடை என்ன, உணவு என்ன, குறி என்ன என்று தமது புத்த வேடத்தோடும் நின்றே ஒழுகுவார். ஒரு நாள் வீதியால் அவர் வரும்போது சிவலிங்கம் ஒன்றைக் கண்டார். கண்டபோது மகிழ்வாகி ஊனுமாய், உயிருமாகி, உள்ளுமாய், புறமுமாகி நடனஞ் செய்யும் சோதியின் அருள் நிறையப்பெற்று யாது செய்வதென அறியாராகி ஓர் கல்லையெடுத்து சிவலிங்கத்தின் மீது ஆனந்தத்தோடும் எறிந்ததே அவருக்குத் தெரியாது. பின்னர் சுயபுத்தி வந்தபின் ஈசனருள் எனத் தெளிந்து அன்று தொடக்கம் தாம் உணவு உண்ணும்முன் சிவலிங்கம் கண்டு கல்லெறிந்துதான், பின்னர் உணவு உண்பது வழக்கமாகியது. இப்படியொருநாள் உணவு உண்ணப்போகும்போது கல் எறியாமல் போய்விட்டார். உணவு உண்ண கையெடுக்கும் போது இன்று கல்லெறிய மறந்தேனே என திரும்பியோடி வந்து கல்லெடுத்து கல் மலரால் ஈசனை அர்ச்சிக்கப் புகுங்கால் சிவபிரான் முன்னுகத் தோன்றி அருள்செய்ய முத்தி எய்தினுர்.

திருக்குறிப்புத் தொண்டர்: இந்நாயனுர் வண்ணுர்குலத்தைச் சார்ந்தவர். இவர் சிவனடியார்களை, அன்பர்களைக் கண்டால், அவர் வஸ்திரங்களை தாமே வேண்டி தோய்த்துக் கொடுக்கும் பணியில் நின்றவர்.

இவ்வாருக இவர் ஒரு நாள் வயோதிபராகிய ஓர் அன்பர் வருவதைக் கண்டார். அவரை நாயனுர் அருகில் சென்று அவர் உடையை பார்த்து அது அழுக்கேறியிருந்தமையால் தோய்ப்பதற்கு அதைத் தரும்படி வேண்ட அந்த அன்பர் சொல்கிறுர், ''தொண்டரே! எனது உடல் பிணியால் வருந்துகின்றது. குளிர்காலம். குளிர் தாங்க மாட்டேன். ஆகவே இரவு வரமுந்தி இந்த வஸ்திரத்தை தோய்த்து தருவீராகில் நன்று'' எனக்கூறிக் கொடுப்ப, வணங்கி, நாயனுர் வஸ்திரத்தை வாங்கிக் கொண்டு, தோய்க்கும் படி சென்று அழுக்கை நீக்கி, கற்பாறைமேல் துவைக்கும்பொழுது மழை வந்தது. வந்த மழை ஓயாதுபெய்து அவர் உடையை நனைத்துவிட்டது. இதனுல் மனங் கலங்கிய நாயனுர் செய்வதறியாது ஐயையோ அந்த அன்பருக்கு இந்த உடையை இராக் காலத்துக்கு உதவமுடியாதபடி செய்துவிட்டேனே, இனி என்செய்வேன், இது தான் இதற்கு தீர்வென தனது தலையை கற்பாறையில் மோதினுர். மோதியபோது இரத்தம்பெருகி ஓட, அவர் தலையை அம்பலத்து ஆடும் ஈசருடைய கை பிடித்துக் கொண்டது. அதனுல் ஒளிவிளங்கி தேவ வடிவாகி இறைவன்பால் முத்தியெய்தினுர்.

83

ஈசன தருளாற் கயிலையை நீங்கி யிமையமா மயிலறம் புரிவான்
காசியி லிருந்து முடிவுறு தேகிக் கனகமா நீழலிற் பரனைப்
பூசனை புரிந்து கம்பைகண் டஞ்சிப் பூண்முலை வளைச்குறிப் படுத்தி
ஆசிலா வருள்பெற் றின்னுநோற் றிடலா லனையகாஞ் சிக்குநே ரதுவே.

உமையம்மையார் ஈசனது அருளினுல் திருக்கைலாய மலையை விட்டு நீங்கியருளி ஞர். அவ்வாறு இமயமலையின்கண் தோன்றிய மயில்போலும் சாயலையுடைய எம் பிராட்டி உலகில் உயிர்கள் உய்யும்படி தருமம்புரியும் பொருட்டாக இப்பூமிமேல் வந்த ருளினுள். வந்தருளியவள் காசியிலிருந்து தனது எண்ணம் நிறைவுருமையால் காசி யைவிட்டு நீங்கி இக்காஞ்சிக்கு எழுந்தருளி வந்து தவம்செய்ய, பொன் மயமான மாமர அடியிலே எம்பிரான் சிவலிங்க ரூபியாகத் தான்தோன்றி முளைத்தெழுதலைக் கண்டு, எம்பெருமானை தான் அன்பினுல் மலர்கொண்டு பூசைசெய்து வழிபட்டாள். அவ்வாருக பூசைபுரியுங்கால் ஈசன் விளையாட்டாக கம்பையாற்றைப் பெருகிவரும்படி ஏவ, கம்பையாறு பெருக்கெடுத்து வருதலைக்கண்டு எம்பிராட்டி அஞ்சி ஓடிச்சென்று தனது நாயகனின் திருஉருமேல் இறுகத்தழுவி அதனுல் தனது முலையாலும், திருக் கைகளாலும் பெருமான் திருமேனியை வடுப்படுத்தி குறைவிலா நிறைவாகிய அருள் பெற்று இன்னும் அங்கிருந்து தவமியற்றலால் அவ்வாறு பெருமைபெற்ற காஞ்சிக்கு நேராயது காஞ்சியே.

ஏலவார் குழலாள் உமைநங்கை
என்றும் ஏத்தி வழிபடப்பெற்ற
கால காலனை கம்பனெம்மானை. (சுந்தரர்) 84

ஆருயிர் முழுதும் வீடுபெற் றுய்வான் அறம்புரி சாலைய தணித்தாப்
பேரர விறைவன் றவத்தின்மு னிருந்த பிலத்திடைக் கோயில்கொண் டென்றும்
பூரணி நோற்று வழிபட வனையாள் பூசனை கொண்டியா வர்க்குங்
காரண மான பரசிவ னனந்த கலையொடு நிலையதக் காஞ்சி.

அனைத்து ஆருயிர்களையும் வீடுபெற்று உய்யும்பொருட்டாக எம்பிராட்டி தரு மம் செய்கின்ற காமக்கோட்டத்தின் பாங்கராக, முன்னெருநாள் மாபதுமன் என் னும் நாக அரசன் தவம் இருந்த பிலத்தின் இடை கோயில்கொண்ட காமாட்சியம் மையார் என்றும் தவம் இயற்றி வழிபாடு செய்ய, எம்பிராட்டியின் பூசனையை ஏற் றுக்கொண்டு யாவர்க்கும் காரண முதல்வராகிய பரமசிவன் அநந்த அருட்கலைக ளோடும் பொருந்தி நிலைபெற்றிருப்பது காஞ்சி நகரம்.

யாவர்க்கும் காரணனுகிய ஈசன் அளவற்ற அருள் கலைகளோடும் அம்பாளுடைய பூசையை ஏற்றபடி எஞ்ஞான்றும் காஞ்சியில் அமர்ந்தருள்கிருர். எம்பிராட்டி தவம் இயற்றியவிடம் முன்னர் பாம்பரசனுகிய பதுமன் தவம் செய்த இடம், இதனை சேக்கிழாரும்,

துன்னு பல்லுயிர் வானவர் முதலாச் சூழ்ந்துடன் செலக் காஞ்சியணையத்
தன்னைநேர்வரும் பதுமமாநாகம் தம்பிராட்டி தாள்தலைமிசை வைத்தே
அன்னையா உலகனைத்தையும் ஈன்றுய் அடியனேன் உறைபிலமதனிடையே
மன்னு கோயில்கொண்டருளு வாயென்ன மலைமடந்தை மற்றுஅதற்கருள் புரிந்து

என பெரிய புராணத்தில் கூறியருளினுர். 85

இன்னமு முமையாள் நோற்றிடு மாங்கே, யிறப்பினும் பிறப்பினும் நிலையாய்
மன்னியே யுறினு மொருகண மேனும் வைகினும் மறைகளாந் தனிமா
நன்னிழ லிருந்த பரஞ்சுடர் புரியும் நடந்தரி சிக்கினு மதனை
உன்னினும் முத்தி வழங்குகாஞ் சியைப்போ லுலகில்வே றெருநக ருளதோ.

இன்னமும் உமையம்மையார் தவஞ்செய்யும் அவ்விடத்தே இறந்தாலும் அல்லது பிறந்தாலும், நிலையாய் வாழ்ந்தாலும் அல்லது ஒரு கணமேனும் இருந்தாலும் வேதங்களாகிய வடிவுடைத் தனி மா நீழலிருந்தருளிய பரஞ்சோதியின் திருநடனம் தரிசிக்கினும் அத்திருக்கோலத்தை தியானித்தாலுமே முத்தி தருவதாகிய பேறு இக்காஞ்சிக்கே உளது. ஆனமையால் இக்காஞ்சியைப் போல உலகில் வேறொரு நகர் உளதோ. 86

கண்ணுதற் பரனுந் தண்டுழாய் மவுலிக் கடவுளுங் கமலமே லயனும்
விண்ணவர்க் கிறையுங் கொற்றமா லினியும் மேலைநாட் பிறந்ததொன் மனுவுந்
தண்ணளி புரிதுண் டீரனும் நள்ளார் சமர்த் தொழில் கடந்ததண் டகனும்
அண்ணலங் கரிகால் வளவனும் பிறரு மரசுசெய் தளித்ததந் நகரம்.

நெற்றிக் கண்ணினையுடைய ஈசனும், துளசி மாலையணிந்த முடியுடைய விஷ்ணு மூர்த்தியும், தாமரை மலர்மேல் இருக்கும் பிரமதேவரும், தேவர்க்கு அரசனாகிய இந்திரனும், வீரமிக்க துர்க்காதேவியும், யாவர்க்கும் இன்பநிலை எய்தும்படி அரசாண்ட துண்டீரனும், பகைவரின் போரினை வென்று உலகெலாம் ஆண்ட தண்டகன் என்னும் அரசனும், மேன்மையான கரிகால் சோழனும் இன்னும் பிறரும் அரசுசெய்து இருந்த பதி இக்காஞ்சி மாநகரம். 87

வேலைசூ ழுலகி னெங்கணு மிருபால் வீட்டினை வெஃகினோர்க் குதவும்
ஆலய நூற்றெட் டுள்ளமற் றவற்றுள் ஐம்முகப் பரஞ்சுட ரமருங்
கோலமார் நிலய மிருபது மாயோன் கோநக ரெட்டுமாக் குழுமி
நாலெழு தான முள்ளவந் நகர்போல் நாம்புகழ் நகரமற் றெவனோ.

சமுத்திரம் சூழ்ந்த நில உலகத்தில் இருவிதமாகச் சொல்லப்படும் பதமுத்தி, பரமுத்தி ஆகிய இன்பத்தை, வணங்கி வேண்டுவார்க்கு கொடுக்கின்ற விசேடமான 108 ஆலயங்கள் உள. அவற்றிலே ஐந்து திருமுகங்களையுடைய பரஞ்சுடராகிய சிவபிரான் அமரும் இருபது ஆலயங்கள் இங்கு இருக்கின்றன. நாராயணக் கடவுளுடைய கோயில் எட்டு. ஆகக்கூடி மேற்சொல்லப்பட்ட உலகமெங்கும் உள்ள நூற்றெட்டில் இருபத்தெட்டு விசேட பதிகள் இங்கு இருத்தலால் இதைப்போல நாம் புகழ்ந்து சொல்லக் கூடிய நகரம் வேறு எது உளது? 88

கச்சபா லயமே கம்பமே மயானங் கவின்கொள்கா ரோணமா காளம்
பச்சிமா லயநல் லநேகபங் கடம்பை பணாதர மணீச்சரம் வராகம்
மெய்ச்சுர கரமுன் னிராமம்வீ ரட்டம் வேதநூ புரமுருத் திரர்கா
வச்சிர னகரம் பிரமமாற் பேறு மறைசையாஞ் சிவாலய மிருபான்.

இக்காஞ்சியிலே சொல்லப்படும் சிவாலயங்கள் இருபதாவன: கச்சபாலயம், திருஏகம்பம், திருமயானம், அழகு பொருந்திய திருக்காரோகணம், மாகாளேசம், திருமேற்றளி, திருஅநேகபேசம், திருக்கடம்பையும், திருப்பணாதரம், திருமணீச்சரம், திருவராகம், உண்மை நிலையான சுரகரேசமும், பரசுராமேசம், வீரட்டகாசமும், வேத நூபுரமும், உருத்திரர்காவும், இந்திராலயமும், சதுர்முகசங்கரம், திருமாற்பேறு, திருவோத்தூர் எனும் சிவாலயங்களாம்; 89

கரிகிரி யட்ட புயந்திரு வெஃகாக் கருதுமூ ரகஞ்சகா ளாங்கஞ்
சுரர்புகழ் நிராகா ரந்நிலாத் திங்கட் டுண்டநற் பாடக மினைய
அரிதிரு முற்ற மெட்டவை யன்றி அறுபதி னுயிர நிலயம் பரசிவன்
சத்தி குமரர்மால் புறத்தோர் பலரும்வீற் றிருப்பதப் பதியே.

அத்திகிரியும், அட்டபுயமும், திருவெஃகாவும், யாவரும் சிந்திக்கின்ற திருசிர கமும், சகாளாங்கமும், தேவர்கள் புகழுகின்ற நிராகாரமும், சந்திர கண்டமும், நல்ல திருப்பாடகமும் எனச் சொல்லப்படும் விஷ்ணு மூர்த்தியின் தலங்கள் எட்டா கும். இவையேயன்றி அறுபதினுயிரம் நிலையங்கள் சிவபிரான், உமையம்மை, விநா யகர், சுப்பிரமணியக் கடவுள், வைரவக் கடவுள், விஷ்ணு ஆதியாகச் சொல்லப் படும் ஏனைய கடவுளர்க்கும் பொருந்தியது. 90

ஒன்றுதீ விளக்க மீரிட மொருமூன் றுற்றிடு தெற்றிநான் கரணம்
நின்றிடு தருவைந் தாறுபுள் ளேழு நெடுநதி யெண்பொது வொன்பான்
மன்றலம் பொய்கை வியன்சிலை யொருபான் மன்றவை பத்தின்மே லொன்று
நின்றமர்ந் தொழுகு நெறியில்அற் புதமாய் நிகரிலா துறையுமந் நகரம்.

இக்காஞ்சியில் விசேடித்து சொல்லப்படும், தீ விளக்கு ஒன்று, இரண்டு இடம், மூன்று வீதி, நான்கு அரண், அழியாது நிற்கின்ற மரம் ஐந்து, ஆறு பட்சிகள், ஏழு ஆறுகள், எட்டு பொதுக்கள், ஒன்பது நறுமண மலர்க் குளங்கள், பத்து சிலை கள், பதினொரு சபை மண்டபங்கள் ஆகிய இவைகள் இந்தவிந்த வர்க்கங்களில் வேறுவேருக இருக்கும். ஆனல் இவைகள் இங்கு தொழிற்படும் நிலையிலே மிக அற்புதமாக விளங்கும்படி இருப்பது காஞ்சி நகரம்.

உலகில் பல இனப் பொருளாக, விளக்கு, இடங்கள், வீதிகள், அரண்கள், மரங்கள், பட்சிகள், குளங்கள், ஆறுகள், பொதுக்கள், சிலைகள், சபைகள் ஆகி யன இருப்பினும் இக்காஞ்சியில் உள்ள சொல்லப்பட்ட எண்கொண்ட இவைகள் விசேடமானது. அவை யாதென இங்கே கீழே சொல்லப்படுகின்றது. 91

சிறந்திடு மதியு மிரவியு மாழ்கச் செகமெலாந் தனதொளி பரப்பி
அறம்புரி காமக் கோட்டிமந் திரத்து எம்மைவாழ் பிலத்தினு ளழியா துறைந்திடு
தூண்டா விளக்கமொன் றுதித்த வுயிர்த்தொகை யிறந்திடா விடமொன்
றிறந்திடு முயிர்கள் பிறந்திடா விடமொன் றெம்பிரா னிருந்தவீ ரிடமே.

சிறந்த ஒளியுடைய சூரிய சந்திரரே தமது ஒளி மங்கும்படியாக உலகமெல்லாம் தனது ஒளியைப் பரப்பிக் கொண்டு, தருமத்தைப் புரிகின்றவளும், காமக்கோட்டம் என்னும் கோயிலில் இருப்பவளுமாகிய எம் அம்மை வாழ் பிலத்தினுள் அழியாது உறைகின்ற தூண்டாமணி விளக்கு ஒன்றும் அப்பால் பிறக்கின்ற உயிர்கள் இறவாத இடம் ஒன்றும், இறந்த உயிர் மீளப்பிறவாத இடம் ஒன்றும் ஆக எம்பிரான் இருக் கும் இடங்கள் இரண்டாகும். 92

தோற்றுயிர்க் குணவு நல்குமோர் தெற்றி சொற்றவை யுதவுமோர் தெற்றி
தேற்றுசொன் மூகர்க் களிக்குமோர் தெற்றி தெற்றிமுன் றிவைநக ரெல்லை
ஈற்றினிற் கீழ்பா லளக்கருந் தென்பா லியற்பெரும் பெண்ணைநன் னதியும்
மேற்றிசைப் பவள சயிலமும் வடபால் வேங்கட வெற்புநான் கரணே.

உலகில் தோன்றிய உயிர்க்கு உணவுகொடுக்குமோர் வீதியும், சொன்னதை, கேட்டதை உதவும் ஓர் வீதியும், ஊமைகளை பேசச் செய்விக்குமோர் வீதியும், ஆக விசேடமாக மூன்று வீதிகள் உள்ளன. காஞ்சியின் எல்லை முடிவில், கிழக்கே சமுத்திரமும், தெற்கு பக்கமாக இயல்பாக பெருகுகின்ற பெண்ணை ஆறும், மேற்கே பவளமலையும், வடக்குப் பக்கராக திருவேங்கடமலையும் ஆகிய இவை விசேடமான நான்கு அரண்களாகும். 93

மறைகளி னுருவாய்ப் பொன்மலர் தனிமா மலரொடு காயிலா தென்றுஞ்
செறிதரு பலங்க ளுதவிநுங் கினர்க்குச் சித்திகள் வழங்குறு மெகினம்
வெறிமலர் பலவும் மலர்ந்திடு மதூகம் விண்ணினை நோக்குமோ ரத்தி
நறுநிழல் பிரியா திருந்ததோர் காஞ்சி நன்னகர் தன்னில்ஐந் தருவே.

வேதங்களின் வடிவாய் பொன் மலர்ந்து விளங்கும் தனியான மாமரம், பூவோடு காயும் இல்லாது என்றும். வேண்டுவார்க்கு இனிய பழங்களைக் கொடுத்து அதை உண்பார்க்கு சித்திகள் உதவும் ஓர் புளியமரம், வெறிக்கும் தன்மையான பூக்கள் பலவற்றை மலர்ந்து விளங்குகின்ற ஓர் மாதுளை மரம், ஆகாயத்தை நோக்கி வளர்ந்து நிற்கும் ஓர் அத்திமரம், தனது நிழல்தன்னை விட்டு பிரியாத காஞ்சிமரம் ஆக மரங்கள் ஐந்தாகும். 94

உம்பருண் பகிருஞ் சாதக மணிக ளுதவிடு மன்ன நூலுரைத்துக்
கொம்புறு கிள்ளை யலகுசொல் லாந்தை குறைபெறிற் கூவுறுக் கோழி
இம்பரிற் பாவந் துடைத்திடு நேமி இவையறு புள்ளெழு நதிதான்
கம்பைநற் பம்பை மஞ்சனீர் பிச்சி கலிச்சி பொன் மண்ணிவெஃ காவே.

தேவாமிர்தத்தை பங்கிட்டு பிறருக்கு கொடுக்கின்ற சாதகப் பறவையும், இரத்தினங்களைக் கொடுக்கின்ற அன்னப் பறவையும், சாஸ்திரங்களை உரைத்துக்கொண்டு கொம்பிலே இருக்கும் கிளிப்பிள்ளையும், சோதிடம் சொல்லும் ஆந்தையும், குறை ஒன்று நடந்தால் கூவாத கோழியும், இவ்வுலக பாவம் நீக்கும் சக்கரவாகப் பட்சியும், இவைகள் ஆறு விசேடமான பறவைகள். ஏழு ஆறுகளாவன: கம்பையாறு, நல்ல பம்மையாறு, மஞ்சளாறு, பிச்சியாறு, கலிச்சியாறு, பொன்மயமான மண்ணியாறு, வெஃகா ஆறும், ஆக ஏழு ஆறுகள் உண்டு. 95

குரைபுனல் வேட்டோர்க் குதவியே திரியுங் கூவலம் பொதுக்குறு முயல்போய்க்
கரிதொடர் பொதுவே ழிசையுறு பொதுமால் கண்டுயின் றிடுபொது வேற்றோர்
உருவுசெய் பொதுவோர் புற்றின்மா முழவ மொலித்திடும் பொதுத்திசை மயக்கம்
புரிதரு பொதுவென் னம்மைநோற் றருளும் பொற்பொது விவைகள் எண்பொதுவே.

தண்ணீர் தாகமுடையார்க்கு தண்ணீர் உதவிக்கொண்டு திரிகின்ற கிணறு உடைய பொது ஒன்று, சின்ன முயல் சென்று யானையைப் பற்றக் கூடும் ஆற்றல் பெறும் பொது ஒன்று, ஏழிசையும் பெறப்படும் பொது ஒன்று, நாராயணக் கடவுள் யோக நித்திரை செயும் பொது ஒன்று, அங்கு செல்வாரை வேற்றோர் உருவு செய்திடும் பொது,

ஓர் புற்றிலே பெரிய முரசப்பறை ஓசை கேட்கப்படும் பொது, அங்கு செல்வார்க்கு திசை மயக்கம் புரியும் பொது, என் தாயாகிய காமாட்சி அம்மை தவம்செய்யும் பொது என பொதுக்கள் எட்டாகும்.

பொது - பொதுவான இடம். முயல் யானையைப் பற்றுவதைப் பற்றி சுந்தர மூர்த்தி சுவாமிகளும்,

''முயல்வழி யானைபடுமென மொழிந்தவர் வழிமுழுதெண்ணி'' எனத் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார். 96

**முன்னுறு பிணிகள் மாற்றிடும் பொய்கை முதல்வர்கள் முடிவுறுங் காலைச்**
**செந்நிறமாகும் பொய்கைமுக் காலந் தெரித்திடும் பொய்கைகண் ணுதலோன்**
**தன்னடி காட்டும் பொய்கை வேண்டியது தந்திடும் பொய்கைமெய்ஞ் ஞானம்**
**பொன்னிறஞ் செல்வம் வசீகரந் தருநாற் பொய்கையோ டொன்பதாம் பொய்கை.**

முன்னால் அநுபவத்தாலும், மருந்தாலும் தீராத வியாதிகளை தீர்த்திடும் பொய்கை, இங்குள்ள பெருந்தலைவர்கள் இறக்குங்கால் சிவப்பு நிறமாக மாறும் பொய்கை, மூழ்குவார்க்கு மூன்று காலமும் தெரியப்படுத்தும் பொய்கை, சிவபிரானுடைய திருவடிகள் காட்டப்படும் பொய்கை, வேண்டியது தந்திடும் பொய்கை, மெய்ஞானம் தரும் பொய்கை, பொன்னிறம் தரும் பொய்கை, செல்வம் தரும் பொய்கை, வசீகரம் தரும் பொய்கை ஆக ஒன்பது பொய்கைகள் அங்குள்ளன. இவற்றில் மூழ்குவார்க்கு இந்த பலன்கள் கொடுக்கப்படும். பொய்கை — குளம் 97

**விடந்தனை யகற்று மொருகலா ருயிர்கள் மெய்ப்பிணி மாற்றிடு மொருகல்**
**அடைந்தவ ரெல்லா மிமையவ ராக வளித்திடு மொருகல்வெம் படையால்**
**தடிந்திட வேருய்த் துணிபடு முடலஞ் சந்துசெய் வித்திடு மொருகல்**
**நெடும்படை வரினு மவையிரிந் தோட நிலை பெறீஇ நிற்குமாங் கொருகல்.**

நஞ்சை நீக்குகின்ற ஒருகல், உயிர்களின் பிணி நீக்குகின்ற ஒரு கல், அடைந்தவர் எல்லாரையும் தேவர்கள் ஆக்குகின்ற ஒரு கல், வாளால் அல்லது படையால் வெட்டுண்ட உடலம் திரும்பவும் பொருத்தப்பட்டு உருவாகி எழுகின்ற புதுமைசெய்யும் ஒரு கல், பெரியபடை தாக்கவந்தாலும் அவை பயந்து ஓடும்படி நிலைபெற்று நிற்கும் ஒரு கல். 98

**துஞ்சினர் தம்மை யெழுப்புமாங் கொருகல் தொல்வழக் கறுத்திடு மொருகல்**
**எஞ்சலி னிதியங் கெடுத்துளோர் வினவி வீதெனக் காட்டிடு மொருகல்**
**விஞ்சிய வினைக டீர்த்திடு மொருகல் வேந்தருக் கரசிய லுதவித்**
**தஞ்சம தாக நின்றிடு மொருகல் தக்ககல் லையிரண் டவையே.**

இறந்தாரை எழுப்புமோர் கல், தீர்ப்புக்காண முடியாத பழைய வழக்கை அறுக்குமோர் கல், பொருளைக் களவு கொடுத்தோர்க்கு வந்து கேட்டால் களவுபோன பொருள் ஈது எனக் காட்டும் ஒரு கல், மிதமிஞ்சிய வினைகள் தீர்க்குமோர் கல், அரசியல் இழந்த வேந்தர்க்கு அரசியலை திரும்ப உதவி அவருக்கு எஞ்ஞான்றும் தஞ்சமாக நிற்குமோர் கல், ஆக தகுதியான அற்புதமுடைய கல் பத்தாகும். 99

அயன்மனைச் சென்றோர் கணவரைப் பிழைத்தோர் அடிகளை யிகழ்ந்துளோர் அணுகில்
துயருறு மூகை யாக்குமோர் மன்றஞ் சோரர்முன் சுழலுமோர் மன்றம்
வியனிறம் பலவாத் தோன்றுமோர் மன்றம் விஞ்சைகள் வழங்குமோர் மன்றம்
மயல்புரி கின்ற பொழுதொடு திசையின் மயக்கறத் தெளிக்குமோர் மன்றம்

பிறருடைய மனைவியை விரும்பியவனும், பாவியும் தனது கணவனுக்கு பிழை செய்த பெண்ணும், தனது குருவை, முனிவர்களை இகழ்ந்தோரும், கிட்டிச் சென்றால் அவர்கள் துயரப்படும் வகை ஊமைகளாக்கும் ஓர் மன்றமும், கள்வர்போனால் அவர் முன்னாக சுழலுமோர் ஓர் மன்றமும், நிறங்கள் பலவாக தோன்றுமோர் மன்றமும், அறியாத வித்தைகள் கைகூடும்படி செய்யும் ஓர் மன்றமும், திசை மயக்கம் புரியப்படும்பொழுது தெளிவுபடுத்திக் காட்டும் ஓர் மன்றம். 100

நாகரு ருய்க்கும் பிலத்ததோர் மன்றம் நவமணி யுதவுமோர் மன்றம்
மாகர்பே ரமிர்த மிருக்குமோர் மன்றம் வடிவினை மறைப்பதோர் மன்றம்
மேகநின் றறுது பொழியுமோர் மன்றம் வியன்பகல் கங்குலாக் கங்குல்
ஆகிய பகலா விருப்பதோர் மன்றம் ஐயிரண் டொன்றுமன் றவையே.

நாகர் உலகிற்கு செல்ல பிலத்துவாரம் காட்டும் ஓர் மன்றம், நவ இரத்தினங்கள் உதவும் ஓர் மன்றம், தேவர் அமிர்தத்தை வைத்திருக்குமோர் மன்றம், வடிவை மறைக்கின்ற ஓர் மன்றம், மேகங்கள் ஓயாது மழைபொழியுமோர் மன்றம், மேலான பகல் இரவாக, இரவு பகலாகும்படி காட்டும் ஓர் மன்றம், ஆக பதினொரு மன்றங்கள் அங்குண்டு. மன்றம் — சபைகள் 101

ஈங்கிவை யன்றிச் சிலைகளுந் தருவு மிடங்களுங் கூவலும் நதியும்
பாங்குறு குளனுந் தீர்த்தமும் பிலமும் பழனமுஞ் சோலையும் பிறவும்
ஆங்கவை யனந்த கோடியுண் டோரொன் றளவில்அற் புதத்தன அவ்வற்றைப்
பூங்கம லத்தோன் சுருக்கற விரித்துப் புகலினு முலப்புற வற்றே.

ஈங்கு சொல்லப்பட்ட இவைகளேயல்லாமல் இன்னமும் எத்தனையோ கோடி சிலையும் (கல்) மரமும், இடங்களும், கிணறும், ஆறும், பாங்கான குளமும், தீர்த்தமும், பிலங்களும், பழனமும், சோலையும் பிறவும் உண்டு. இவைகள் ஒன்றிற்கொன்று அளவில்லாத அற்புதத்தன, அவைகளை தாமரை மலர் மேலிருக்கும் பிரமதேவர் சுருக்கமாகச் சொல்லாது, விரிவாகச் சொன்னாலும் உலவாதது அது. 102

தோட்டலர் வனசத் திசைமுகன் முன்னஞ் சொற்றன னவனடி வணங்கிக்
கேட்டருள் சனகன் வியாதனுக் குரைப்பக் கேடில்சீர் வியாதனங் குணர்ந்து
மாட்டுறு சூதன் றனக்கியம் புதலும் மற்றவன் முனிவரர்க் கிசைத்த
பாட்டினில் அடங்காக் காஞ்சியின் பெருமை பகர்ந்திடத் தமியனுக் கெளிதோ.

இக்காஞ்சியின் பெருமையை, இதழ் அழகான தாமரை மலர்மேல் இருக்கின்ற பிரமதேவர் முன்னே சொன்னார். அவருடைய பாதங்களை வணங்கி கேட்டருளினார் அவர் மகனெனப்படும் சனக முனிவர். அந்த சனக முனிவர், வியாச முனிவருக்கு இதன் பெருமையைச் சொல்ல கேடில்லாத சிறப்பினை உடைய வியாசன் அவற்றை

உணர்ந்து, தனது மாணுக்கனெனும் சூத முனிவருக்கு உரைத்தருள, அவர் அதை உணர்ந்து நைமிசாரணியத்து முனிவர்களுக்கு உரைத்தருளிய காஞ்சி நகரின் பெருமை இது பாட்டினில் அடங்காது. ஆகவே பாட்டினில் அடங்காததைப் பேச தமியேனுக்கு முடியுமோ? ஆகாது, 103

## வேறு

சொற்படு மினைய காஞ்சித் தொன்னக ரதற்கு நாப்பண்
கற்புறு மிமைய வல்லி கருணையால் வைகி நோற்கும்
பொற்புறு காமக் கோட்டம் போலவே அதற்கோர் சாரில்
எற்படு குமரகோட்டம் என்றெரா லயமுண் டன்றே.

சொல்லப்படும் இனைய இயல்புடைய காஞ்சி என்னும் பழைய நகரத்தின் நடுவணுக, கற்பினையுடைய இமயவல்லி எனப்படும் காமாட்சி அம்மையார் கருணையால் இருந்து தவம் செய்கின்ற பொற்பமைந்த காமக்கோட்டம் என்னும் கோயில் போலவே, இக் காமக்கோட்டம் என்னும் தாயின் கோயிலுக்கு ஒரு சாராக பேரொளி விளங்கும் குமரகோட்டம் என்று ஒரு ஆலயம் உண்டு.

இமயவல்லி — மலை அரசன் புத்திரியாக, இமய மலையில் மானச சரோருவம் என்னும் குளத்தில் தாமரை மலர்மேல் ஈசன் அருளால் குழந்தையாகத் தோன்றியவள். 104

ஆவதோர் குமர கோட்ட மதனிடை யரன்கண் வந்து
தூவுடை யெஃக மொன்றாற் சூர்முத றெலையச் செற்றுத்
தேவர்வெஞ் சிறையை மாற்றிச் சேண்மக பதிக்கு நல்கி
மேவிய குமர மூர்த்தி வியத்தக வுறையும் மாதோ.

அவ்வாறுகிய குமரகோட்டம் என்னும் ஆலயத்திடத்து, சிவபிரானின் நெற்றிக் கண்ணினின்றும் தோன்றியருளி வந்து, பிரகாசமுடைய வேல் ஒன்றினுல் அசுரர் முதல்வனை சூரபத்மனைத் தொலைத்து, அழித்து, கொடுஞ் சிறையில் இருந்து அவதியுற்ற தேவர் சிறை மாற்றி, வானுலகமாகிய தேவ உலகத்தை திரும்பவும் இந்திரன் பெறும்படி கொடுத்து அருள் செய்த குமரமூர்த்தி யாரும் கண்டு அற்புதமும், ஆனந்தமும் கொள்ளும்படி வீற்றிருந்தருள்வார்.

குமரமூரத்தி மணம்கமழ் தெய்வத்து இளநலம் (நக்கீரர்.) 105

மேவருங் கூடல் மேலை வெற்பினில் அலைவாய் தன்னில்
ஆவினன் குடியி னல்லே ரகந்தனிற் றணிகை யாதிப்
பூவுல குள்ள வெற்பிற் பொற்புறும் ஏனை வைப்பிற்
கோவில்கொண் டருளி வைகுங் குமரகோட் டத்து மேயோன்.

செல்வதற்கு அருமையான மதுரைப்பதிக்கு மேற்குள்ள திருப்பரங்குன்றத்திலும், சமுத்திரம் அலைமோதும் கரையில் பொருந்திய திருச்செந்தூரிலும், திருவாவினன்குடியிலும், நல்ல திருவேரகத்திலும், திருத்தணிகை முதலாகச் சொல்லப்பெறும் பூமி எங்குமுள்ள பல மலைத்தலங்களிலும், பொற்பு மிகுந்த ஏனைய பகுதிகளிலும், கோவில் கொண்டருளி இருப்பார் இக் குமரகோட்டம் எனும் பதியில் இருந்தருளும் எமது இறைவன். 106

வச்சிர மெடுத்த செம்மல் வைகிய துறக்கந் தன்னில்
அச்சுதன் பதத்துக் கப்பா லானதன் பதத்தில் விண்ணேர்
மெச்சுறு கந்த வெற்பில் வீற்றிருந் தருளு மாபோல்
கச்சியிற் குமர கோட்டங் காதலித் தமருங் கந்தன்.

வச்சிராயுதத்தை எடுத்த இந்திரதேவன் வீற்றிருக்கின்ற சொர்க்க உலகத்தில், விஷ்ணுவின் வைகுந்தத்திற்கப்பாலான தன் பதத்தில் விளங்கும் தேவர்கள் புகழு கின்ற தனது கந்தமலையில் வீற்றிருந்தருளுமாப் போல், காஞ்சியம்பதியில் குமர கோட்டம் என்னும் கோயிலைக் காதலித்து அங்கு உறைவார் எம் கந்தன். 107

ஈண்டுள தரணி முற்று மெல்லைதீர் வான வைப்பும்
ஆண்டகை மகவான் சீரு மம்புயன் முதலோர் வாழ்வும்
மாண்டிடல் பிறத்த லின்றி மன்னிய வீடும், போற்றி
வேண்டினர் வேண்டி யாங்கு வேலவன் புரிந்து மேவும்.

ஈண்டுள்ள பூமி முழுவதும் ஆளும் பேறும், எல்லை கடந்துள்ள மேலுலக வைப் புக்களும் ஆளும் பேறும் ஆண்டகமை உடைய இந்திரதேவனது சீரும், பிரமதேவர் முதலியோருடைய பெருவாழ்வும், பிறப்பு, இறப்புகளைக் கடந்த முத்தி நிலையும், இவை யாவும் குமரகோட்டத்து உறையும் பெருமானை வேண்டிப் போற்றுவார்க்கு வேலவன் அவரவர் வேண்டியபடி அருள் செய்தவாறு அமர்ந்தருள்கிறார்.

துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ (திருவாசகம்)
வேண்டினர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட (நக்கீரர்)
பாவம்போம், பொல்லாப்பழி போகும்
பாருலகில் சேவற்கொடியோன் திருப்பாதம் ஏத்த. (நற்சிந்தனை) 108

கொண்டலை யளக்கு நொச்சிக் குமரகோட் டத்துச் செவ்வேள்
கண்டிகை வடமுந் தூநீர்க் கரகமுங் கரத்தி லேந்திப்
பண்டையி லயனை மாற்றிப் படைத்தருள் வேடந் தாங்கி
அண்டர்க ளெவரும் போற்ற வருள்புரிந் தமர்ந்தா னன்றே

மேகங்கள் உறையும்படி வளர்ந்த மதில் சூழ்ந்த குமரகோட்டம் என்னும் கோயி லில் அமர்ந்தருளும், செவ்வொளி பரந்த சோதியான முருகப்பிரான் தமது திருக் கரம் ஒன்றில் உருத்திராக்க மாலையும், மற்றைய திருக்கரத்தில் கமண்டலமும் ஏந்தி யருளியவாறு, முன்னொரு காலத்தில் பிரமதேவனை, அவன் படைப்புத் தொழிலை நீக்கிச் சிறை செய்தபோது, தானே படைப்புத் தொழிலை மேற்கொண்ட திருக் கோலத்தோடும், தேவர்கள் யாவரும் வந்து போற்றும்படியாக அருள் புரிந்து கொண்டு அமர்ந்தருளுவாராயினர். 109

ஆயதோர் காஞ்சி மூதூ ரதனிடை யம்பு யத்தின்
மேயவன் றனது புந்தி விமலமாம் பொருட்டான் மேனன்
மாயவன் கமட மாகி வழிபடு தலத்தின் முக்கண்
நாயகன் றனையர்ச் சித்து நாமக ளுடனுங் குற்றான்.

அவ்வாருகிய எம்பிரான் கோவில் கொண்ட காஞ்சி மூதூரில், தாமரை மலர் மேல் ஆசனம் கொண்ட பிரமதேவர், தனது மனமானது தூய்மையாகும் பொருட்டு, முன்னுள் விஷ்ணு மூர்த்தியானவர் ஆமை வடிவு கொண்டு பூசித்த கச்சபாலயம் என்னும் தலத்தில் மூன்று கண்களையுடைய நாயகராகிய சிவபிரானை அர்ச்சனை செய்து கொண்டு சரஸ்வதி தேவியோடும் அங்கே இருந்தார். 110

உற்றிடு கின்ற நாளி லுலகிலில் லறத்தை யாற்றி
நற்றவம் பலவும் போற்றி நண்ணிய முனிவ ரெல்லாம்
மற்றவ ணேகிக் கஞ்ச மலர்மிசை யிருந்த வையன்
பொற்றிரு வடியைத் தாழ்ந்து போற்றினர் புகல லுற்றுர்,

அவ்வாறு பிரமதேவர் அங்கு உற்றிடுகின்ற நாளில், இந்த உலகில் இல்லற தருமத்தைச் செவ்வனே நடத்தி நல்ல தவம் பலவும் புரிந்து போற்றிய கண்ணியம் உள்ள முனிவர்கள் எல்லாரும் இந்த பிரமதேவர் இருக்கும் இடத்தைச் சேர்ந்து தாமரை மலர்மீது எழுந்தருளிய பிரமதேவரின் பொன்னுன திருவடிகளில் தாழ்ந்து, பணிந்தெழுந்து, போற்றி செய்து, பின்னர் ஈதொரு வார்த்தையைச் சொல்லுகிருர் கள் அம் முனிவர்கள். 111

அத்தகே ளிந்நாள் காறும் அடியமில் லறத்தை யாற்றி
இத்தல நகர மெங்கு மிருந்தன மினிமேல் நாங்கள்
சித்தம தொருங்க நோற்றுச் செய்கட னியற்றி வைக
மெய்த்தவ வனம தொன்றை விளம்பியே விடுத்தி யென்ருர்.

ஐயனே! கேட்பீராக, இற்றைநாள் வரையும் அடியேன்கள் இல்லற தர்மத்தை முறையே ஆற்றிக்கொண்டு, இப்பூமித்தலத்தின் நகர் எங்கும் இருந்தோம். எங்களுக்கு வாழ்க்கை இனிப் போதும். இனிமேல் நாங்கள், எங்கள் மனமானது ஒடுங்கித் தவம் செய்ய விரும்பினேம். ஆனமையால் தவத்திற்கேற்பச் செய்கடன்கள் யாவற்றையும் செய்து, சிறந்த தவம் செய்திருப்பதற்கு ஏற்ற உண்மையான தபோவனம் ஒன்றை எடுத்துச் சொல்லி, அங்கு எமை விடுப்பீராக என, அம்முனிவர்கள் கூறினுர்கள். 112

என்றலுந் தருப்பை யொன்றை யேமுல களித்தோன் வாங்கி
ஒன்ஞெரு திகிரி யாக்கி யொய்யென வுருட்டிப் பாரில்
இன்றிதன் பின்ன ராகி யெல்வி'ரு மேகி யீது
நின்றிடும் வனத்தி னூடே நிலைப்பட விருத்தி ரென்ருன்.

என்று முனிவர்கள் சொல்லுதலும், ஏழு உலகங்களையும் படைக்கின்ற பிரமா வானவர் தர்ப்பை ஒன்றைக் கையில் எடுத்து, அதைச் சக்கரம் போல வட்டவடிவாக்கி, விறுக்கென அதை உருட்டிவிட்டு, முன்னின்ற முனிவரை நோக்கி பிரமா சொல்லுகிருர். ''முனிவர்களே! இதோ என்னுல் உருட்டப்பட்டு, இப்பூமி மேல் உருண்டோடும் தர்ப்பைச் சக்கரத்தின் பின்பாக நீங்கள் செல்லுங்கள். செல்லும் போது தர்ப்பைச் சக்கரம் எந்த வனத்தில் நிற்கின்றதோ அந்த இடம்தான் நீங்கள் கேட்டபடி உங்கட்கு உகந்த இடமாகும். அந்த வனத்தின் இடத்தே நீங்கள் நிலைப் பாடாக இருங்கள்'' எனக் கூறினுர். 113

திருப்பது மத்து வள்ளல் சேவடிக் கமலந் தாழா
விருப்பொடு விடைகொண் டேக விரைவினி லன்னுன் விட்ட
தருப்பையின் நேமி சென்றோர் தனிவனத் திறுத்த லோடும்
இருப்பிட மெமக்கீ தென்னு இருந்தவ ரிருந்தா ரங்கன்,

இதைக் கேட்டதும் அம்முனிவர்கள் தாமரை மலர்மேற் கொண்ட வள்ளலாகிய பிரமாவின் சிவந்த திருவடிகளில் தாழ்ந்து வணங்கி, விருப்பத்தோடும் விடைபெற்றுக்கொண்டு, அதிவிரைவாக அவ்விடமிருந்தும் புறப்பட்டு, முன்பாக பிரமதேவரால் விடப்பட்டு, உருண்டு செல்லும் தர்ப்பையின் பின் செல்லலும், அத்தர்ப்பைச் சக்கர மானது சென்று, ஒரு தனிமையான வனத்திலே நிற்றலும், முனிவர்கள் யாவரும் அதுகண்டு மகிழ்வாகி, இதுவே எமக்குச் சிறந்த இருப்பிடமெனக் கூறி, அவ்விடத்தே இருந்தார்கள். 114

தாமரை யண்ண லுய்த்த தருப்பையின் நேமி தன்னல்
நாமம தொன்று பெற்ற நைமிசா ரணியம் வைகுந்
தாமுனி வராக ளெல்லாஞ் சொல்லருந் தவத்தை யாற்றி
மாமறை நெறியி னின்று மகமொன்று புரித லுற்றார்.

தாமரை மலர் மேலிருக்கும் பிரமதேவர் செலுத்திய தர்ப்பைச் சக்கரத்தினுல் ஓர் சிறப்பான பெயராகிய நைமிசாரணியம் என்னும் பெயரை, அவர்கள் சென்று சேர்ந்த வனம் பெற்றுக் கொண்டது. இதன் மேலாக அங்கு சேர்ந்த அம்முனிவர்கள் யாவரும் சொல்லற்கரிய பெரிய தவத்தைச் செய்து, மேலாகிய வேதநெறிப்படி ஒழுகி நின்று, அங்கு அவ்வனத்திலே யாகம் ஒனறு புரிதலுற்றுர்.

சொல்லருந்தவம்: தவம் செய்தலினுல் உடலம் வருந்தினும் அதைப்பற்றி எண்ணுது தமது தவச்செய்கையே மேம்பாடாகக் கொள்ளல்.

தாவு இல் கொள்கைத் தந்தொழில் முடிமார். (நக்கீரர்)

உவமை கடந்த இன்பம் எல்லாரிடத்துமுண்டு
தவம் செய்வார் தாமறிவர் தப்பார். (யோகசுவாமிகள்) 115

அகனமர் புலனோர் நான்கு மான்றமை பொருட்டா லாங்கோர்
மகவினை செய்து முற்றி வாலிதா முணர்ச்சி யெய்தி
இகலறு முளத்த ராகி யிருந்தன ரிதனை நாடிச்
சுகனென வுணர்வு சான்ற சூதமா முனிவன் போந்தான்.

உள்ளம் அமைந்து அடங்குமாறும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கும் விகாரப்படாமல், அமைதியுற்று அமைந்து, ஈசன் அருளையே நோக்குமாறு ஆங்கோர் யாகத்தைச் செய்து முடித்து அதன் பேருக ஈசன் அருளையே நாடுகின்ற மேலான உணர்ச்சி எய்தி, பகை நீங்கிய உளத்தராகி இருந்தனர் இம் முனிவர்கள். இவ்வாருக இம்முனிவர்கள் சிறப்புற்றிருத்தலை நாடி உணர்ந்து சுக முனிவரைப் போல் உணர்வு கொண்ட சூத முனிவர் அங்கு வந்தருளினுர்.

சுக முனிவர்: இவர் கிளி முகமுடையவர். வியாச முனிவரின் புத்திரர். பிறக்கும் போதே பூர்வஞானமுடையவர். பற்றற்ற தூய முனிவர். 116

முழுதுணர் சூதன் றன்னை முனிவரர் கண்டு நேர்போய்த்
தொழுதனர் பெரியோய் எம்பாற் றுன்னலா லின்ன வைகல்
விழுமிது சிறந்த தென்னு வியத்தகு முகமன் கூறித்
தழையொடு தருப்பை வேய்ந்த தம்பெருஞ் சாலை யுய்த்தார்.

எல்லாம் உணர்ந்த சூத முனிவன் வருகையை, தபோவனத்திலிருந்த முனிவர்கள் கண்டு, நேர் சென்று தொழுதனர். பின் முனிவர் சொல்லுவார், ''பெரியோய்! எம்பால் தேவரீர் வருதலால் இன்றாகிய நாள்தான் எம் வாழ்க்கையில் சிறந்த தொன்றாகும். எனப் பலவான இன்னுரைகளால், சூதமுனிவன் வருகையை தம்பெறற் கரும் பெரும் பேறாகக் கருதிப் புகழ்ந்து, மர இலைகளினாலும், தர்ப்பையினாலும் கூரை அமைந்த தங்கள் ஆச்கிரமத்திற்கு அழைத்துச் சென்றார்கள். 117

திருக்கிளர் பீட மொன்று திகழ்தர நடுவ ணிட்டுச்
சுருக்கமில் கேள்வி சான்ற சூதனை யிருத்தி யாங்கே
அருக்கிய முதல நல்கி யவனது பாங்க ராகப்
பொருக்கென யாரும் வைகி யிஃதொன்று புகல லுற்றார்.

அழைத்துச் சென்று அவருக்குத் திருவோங்கிய அழகிய பீடமொன்றைத் தமது தவச்சாலை நடுவணாக இட்டு அதன் மேலாக விரிவான பரந்த நூல்கள் பலவற்றை ஓதாதுணர்ந்தருளிய சூத முனிவனை அமர்வித்தருளி பின்னர் சூத முனிவர்க்கு அருக்கியம், பாத்தியம், ஆசமனம் முதலிய செயல்களைப் புரிந்து, பெரியோரை உபசரிக்கும் முறையாக பாத பூசை முதலியன புரிந்து, வணங்கி, அதன் பின்னர் எல்லா முனிவர்களும் சூத முனிவர் பாங்கராக அதி, அதி விரைவாக வந்து, வந்து, அமர்ந்திருந்தார்கள். அமர்ந்த முனிவர்கள் யாவரும் சூதமுனிவரை நோக்கி இஃது ஒரு வார்த்தை சொல்கின்றார்கள், 118

முந்தொரு ஞான்று தன்னில் முளரியந் தேவன் சொல்லால்
வந்திவ ணிருந்தே மாக, மற்றியாம் புரிந்த நோன்பு
தந்தது நின்னை யற்றாற் றவப்பயன் யாங்கள் பெற்றேஞ்
சிந்தையி னுவகை பூத்தேஞ் சிறந்ததிப் பிறவி யென்றார்.

முன்னே ஒரு நாள் தாமரை மலர்மேற் கடவுளாகிய பிரமன் சொல்லால் இவ்விடத்து நாம் வந்து இருந்தோமாக, மற்று நாங்கள் இங்கு புரிந்த தவம் தேவரீரை இங்கே இன்று தந்தது. அதனால் எம் தவத்தின் பயனை யாங்கள் பெற்றோம். எமது சிந்தை தேவரீர் வரவால் மகிழ்ந்து மலர்வாகினோம், எமது பிறவியும் இன்றோடு சிறந்தது என்றார்கள், 119

அன்னது சூதன் கேளா ஆதியம் பரனை யேத்தி
மன்னிய வேள்வி யாற்றி வாலறி வதனை யெய்தித்
துன்னிய முனிவிர் காணுந் தொல்குழு வடைத லன்றோ
என்னிக ராயி னோருக் கிம்மையிற் பெறும்பே றென்றான்.

அன்னதைச் சூத முனிவன் கேட்டுச் சொல்கிறான்; ஆதியாகிய ஈசனைப் போற்றி உயர்வான யாகத்தைப் புரிந்து மேலாம் அறிவைப் பெற்றுக்கொண்டு நன்னிலை எய்திய முனிவீர்காள்! உம்முடைய மேலாகிய கூட்டத்தை அடைதல்அன்றோ என்னை யொத்தவருக்கு இம்மைப் பிறவியிலே அடையும் பெரும் பேறாகும் எனக் கூறியருளினார்;

அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்
பொன்னம்பலத்து எம் முடியா முதலே (மாணிக்கவாசகசுவாமிகள்)

சூரிற் கிரியிற் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர் குழாம்
சாரிற் கதியன்றி வேறிலை (அருணகிரியார்)

'சீரான அடியரொடும் கூடு' (யோகசுவாமிகள்)

என்னும் வாக்கியங்களை மேலுள்ள சூதமுனிவன் கூற்றோடு ஒப்ப நோக்குக. 120

**அவ்வழி முனிவர் சொல்வார் அருமறை கண்ட வண்ணல்**
**செவ்விய மாணுக் கர்க்குட் சிறந்துளோய் திறற்சூ ராவி**
**வவ்விய நெடுவே லண்ணல் மாண்கதை தேர்வான் பன்னாள்**
**இவ்வொரு நசைகொண் டுள்ளே மியம்புதி யெமக்க தென்றார்.**

அவ் வழியாக முனிவர்கள் சொல்கிறார்கள்: அரிய வேதங்களைக் கரை கண்ட வியாச முனிவரின் மாணுக்கர்கட்குள் சிறந்துளோய்! பெரும் பலமுடைய அசுரர்களின் உயிரை மாய்த்த நெடுவேல் ஏந்திய எம் அண்ணலாகிய முருகப் பெருமானின் திவ்விய கதையினை அறியும் பொருட்டு நெடு நாளாக இந்த ஒரு ஆவல்கொண்டோம். ஆகவே தேவரீர் எமக்கு முருகப்பிரான் சரிதை வரலாற்றை சொல்வீராக என்றார்கள். 121

**அம்மொழி சூதன் கேளா அழல்படு மெழுகே யென்னக்**
**கொம்மென வுருக வுள்ளங் குதூகலித் தவச மாகி**
**மெய்ம்மயிர் பொடிப்பத் தூநீர் விழித்துணை யரும்ப வாசான்**
**பொய்ம்மையில் படிவ முன்னித் தொழுதிவை புகலலுற்றான்.**

அந்த மொழியினை சூதமுனிவன் கேட்டருளி உடனே நெருப்பிலிட்ட மெழுகு போல என்பும் உடலும் நைந்துருக உள்ளம் குதூகலம்கொண்டு பரவசமாகி உரோமங்கள் சிலிர்க்க, கண்களிலிருந்து நுண்ணிய துளிகள் அரும்ப, தனது குருமணியின் பொய்யில்லாத உண்மை வடிவத்தை தியானித்து தொழுது பின்னர் இஃதொன்று புகல்வாராயினர்.

என்பு நைந்துருக நெக்கு நெக்கேங்கி
அன்பெனும் ஆறுகரையது புரள
நன்புலனொன்றி நாதவென் றரற்றி
உரைதடுமாற உரோமஞ் சிலிர்ப்ப
கரதலம் மொட்டித்து இருதயம் மலர
கண் களி கூர நுண்துளி யரும்ப (மணிவாசகர்)

நல்லூரான் திருவடியை நான் நினைத்த மாத்திரத்தில்
எல்லாம் மறப்பேனடி—கிளியே
இரவு பகல் காணேனடி (யோகசுவாமிகள்) 122

என்னும் வாக்கியங்களை ஒப்ப நோக்க.

**மன்னவன் மதலை யாசான் மாமகன் றனது மைந்தன்**
**பன்னுசொற் கொள்வோன் ஈவோன் வழிபடு பண்பின் மிக்கோன்**
**என்னுமிங் கிவருக் கிவை தேனூல் உங்கள் போலச்**
**செந்நெறி யொழுகு வார்க்கே செப்புவன் புராணம் முற்றும்.**

அரசனின் மகன், குருவின் மகன், தனது மகன், தன் சொல்வழி நடப்பவன், பொருள் கொடுப்பவன், வழிபடும் நிலையில் நிற்பவன், பண்புடையவன், எனப்படும் இவர்களுக்கு ஓத வேண்டியவை பிற கலைகள். ஆனல் உங்கள்போலச் செம்மை யான நெறியின்கண் ஒழுகி நிற்பார்க்கு புராணம் முழுவதையும் சொல்வேன் எனக் கூறிப் பின்னரும் சூதமுனிவர் சொல்கின்றுர். *123*

**தனைநிகர் பிறரின் ருய சண்முகற் கன்பு சான்ற**
**முனிவிர்காள் உரைப்போர் கேட்போர் முத்திசேர் காந்தத் துண்மை**
**வினவினீ ரதனை யின்னே விளம்புவன் புலன்வே றின்றி**
**இனிதுகேண் மின்க ளென்னு எடுத்திவை இயம்ப லுற்ருன்.**

தனக்கு நிகர் பிறர் இன்ருய சண்முகப் பெருமானுக்கு அன்பு பூண்ட முனிவர் களே! உரைப்பாரையும் கேட்பாரையும் முத்திநிலையில் சேர்க்கின்ற காந்தம் என்னும் நூலின் உண்மைப்பாட்டையே கேட்டீர்கள். அதனை இப்பொழுதே நான் சொல்வேன். நீங்கள் யாவரும் உமது புலன்கள் வேறுவழி செலுத்தாமல் இனிதாக அமர்ந்திருந்து கேட்பீராக என சொல்லிவிட்டு எடுத்து இவைகளைப் பின்னர் இயம்பல் உற்ருர் சூதமுனிவர்.

ஒப்பிலாதன உவமனில் இறந்தன
ஒண் மலர்த் திருப்பாதத்து அப்பன் (மணிவாசகர்)
பத்தித்திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்
தித்தித்து இருக்கும் அமுது. (அருணகிரிநாதர்)

என்பன மேற் கூறிய திருப்பாட்டொடு ஒப்பநோக்க. *124*

திருநகரப் படலம் முற்றிற்று.

**ஆகத் திரு விருத்தம் - 270.**

# 7. பாயிரப் படலம்

முந்தொரு காலத்தின் மூவுல கந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
அந்தமின் மறையெல்லா மடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்றார்.

முன்னொரு காலத்திலே சொர்க்கம், மத்திமம், பாதாளம் என்னும் மூவுலங்களில் வந்துள்ள உயிர்கள் செய்துகொள்ளும் கொடிய பாவச் செயல்களினாலே எல்லையற்று விளங்கும் வேதங்கள் யாவும் அடிதலை தடுமாறிச் சிந்திப்போயின. இதனால் முனிவர்களும், தேவர்களும் பெரிதும் மனம் மருண்டார்கள். வேதநெறியாகிய புண்ணியச் செய்கை குன்றியது, பாவம் எங்கும் பெருகியது. நீதி நெறிகள் குன்றின, மக்கள் கட்டுப்பாடின்றி மிருகங்கள்போல ஒழுகி வரலாயினார்.

புண்ணியம்மேல் நிலைவைக்கும் — செயும்
பொல்லாத பாவங்கள் கீழ்நிலை வைக்கும். *(யோக சுவாமிகள்)* 1

நெற்றியில் விழிகொண்ட நிமலன தருளாலே
அற்றமில் மறையெல்லா மாதியின் வரலாலே
மற்றத னியல்பெல்லாம் மயலற வேநாடித்
தெற்றென வெவராலுஞ் செப்புவ தரிதாமால்.

இந்நிலையில் வேதங்கள் யாவும் தமது திருநெற்றியில் கண்ணுடைய நின்மலனாகிய சிவபிரான் அருளால் ஆதியிலே வருவதானவையானபடியால் நெறிமறந்து, ஒழுக்கம் நீத்த மக்களால் அதன் இயல்பையெல்லாம் மயக்கம்தீர நாடி இதுதான் உண்மையெனத் தெளிவாக எவராலும் சொல்லவும் முடியாது போய்விட்டது. 2

ஆனதொர் பொழுதின்க ணமரரும் முனிவோரும்
மாநில மிசைவைகும் மாக்களு மிறையுள்ள
ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார்.

இவ்வாறாகிய பொழுதிலே தேவர்களும், முனிவர்களும் பூமியின்கண் இருக்கின்ற மனிதர்களும் கொஞ்சமேனும் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற சிந்தனை இல்லாதவராக ஞானவுணர்வின்றி, தாம் நினைத்தவாறே வேதநெறிகளை மாற்றியமைத்து, தீமை பயக்கும் பலவாறான செயல்களை, கருமங்களை, அல்லது நெறிகளைக் கடைப்பிடித்து தங்கள் இஷ்டப்படி சில நூல்கள் செய்தார்கள். 3

அவனியி லறமெல்லா மருவினை யெனநீக்கிப்
பவநெறி யறமென்றே பற்பல ருஞ்செய்யப்
புவனம துண்டோனும் போதனு மதுகாணுச்
சிவனரு ளாலன்றித் தீர்கில திதுவென்றார்.

இன்னும் இவர்கள் பூமியில் தருமமெல்லாம் பாவம் என அதை விலக்கிவிட்டு, பாவச் செயல்களை தருமம் என நினைந்து பற்பலரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் செய்யத் தொடங்க, இதனை பூமி உண்டவராகிய விஷ்ணு மூர்த்தியும், பிரமதேவரும் அவதானித்தருளி, இவ்வாறாக உலக நிலையில் ஏற்பட்டுள்ள செயல்களுக்குத் தம் மாலும் ஒன்றும்செய்ய இயலாது. சிவன் அருளாலன்றி இத்தீங்கு தீராதெனச் செப்பினார்கள்.

பாவம் செய்வாரை, நெறிமாறினரை அவர் தீங்காகிய செயலினின்றும் நீக்க, சிவனருள் எய்தின் அன்றி முடியாது என படைப்பவர், காப்பவர்கள் எண்ணித் தேறினர். 4

## வேறு

இன்ன பான்மையை யெண்ணி யிருவரும்
பொன்னி னாடு புரந்திடும் மன்னனுந்
துன்னு தேவருஞ் சுற்றினர் வந்திடக்
கன்னி பாகன் கயிலையி லேகினார்.

இன்னபான்மையாக எண்ணிய பிரம்மதேவர், விஷ்ணுமூர்த்தி ஆகிய இருவரும் பொன்னாடு என்னும் தேவ உலகை அரசாளுகின்ற இந்திரதேவனும் இன்னும் இவர் பாற்பட்ட மற்றைய தேவர்களும் சூழ்ந்துவர நித்திய கன்னிகையாகிய உமையம்மை பாகராகிய சிவபிரான் வீற்றிருக்கும் திருக்கைலாய மலையில் சென்றார்கள். 5

அந்தில் செம்பொ னணிமணிக் கோயிலின்
முந்து கோபுர முற்கடை யிற்புகா
நந்தி தேவரை நண்பொடு கண்டுநீர்
எந்தை யார்க்கெம் வரவிசைப் பீரென்றார்.

அவ்வாறாக அங்கு சென்றருளி செம்பொன்னினால் அணிந்து திகழ்கின்ற மணிக் கோயிலின் முற்படும் கோபுர வாயிலை எய்தினார்கள். அங்கு காவல் கொண்டருளிய நந்தியெம்பெருமானை நண்போடு கண்டு அவரைப் பார்த்து நீர் எந்தை பிரானுக்கு எம்வரவை இசைத்தருள்வீராக என வேண்டி நின்றனர். 6

தேவ தேவன் திருமுன்ன ரேகியே
காவல் நந்திக் கடவுள்பணிந் தெழீஇப்
பூவை வண்ணனும் போதனும் புங்கவர்
ஏவ ருஞ்செறிந் தெய்தின ரீண்டென்றான்.

இதைக்கேள்வியுற்ற நந்தியெம்பெருமான் தேவதேவன் திருமுன்புசென்று காவல் புரியும் நந்தியம் கடவுள் பணிந்தெழுந்து சொல்கிறார்: "பெருமானே காயம்பூப் போலும் மேனியுடைய கண்ணபிரானும், தாமரை மேல்வராகிய பிரமதேவரும், தேவர்கள் எல்லாரும் செறிந்து கூடி இவ்விடத்து எய்தினார்கள்" என்றார். 7

என்ற காலையின் யாரையு மிவ்விடைக்
கொன்றை சூடி கொணர்கெனச் செப்பலும்
நன்ற தேயென நந்தி வணங்கியே
சென்று மான்முதற் றேவரை யெய்தினன்.

என்று நந்தியம் கடவுள் கூறிய நேரத்து கொன்றைமாலை சூடிய சிவபிரான் அவரைப் பார்த்து அவர்கள் யாரையும் ஈண்டு நீ அழைத்து வருவாயாக, என நன்றென்று நந்தியம் கடவுள் வணங்கி திரும்பிச் சென்று வாசலில் அவர் வரவைநோக்கியவாறு நிற்கின்ற நாராயணக் கடவுள் முதலியோரைச் சேர்ந்தார். 8

செம்மை போகிய சிந்தைய ரைக்கெழீஇ
எம்மை யாளுடை யானரு ளெய்தினன்
உம்மை யங்கு வரநுவன் முனினி
வம்மி னீரென வல்லையிற் கூவினன்.

செம்மையான சிந்தையரான விஷ்ணு பிரமாதி தேவர்களை அணுகி நந்தியங் கடவுள் சொல்கிறார். எம்மை ஆளுடைய சிவபிரான் அருள் எய்தியுள்ளார். ஆனமையால் உம்மை அங்கு வரும்படி சொல்லியருளினர், எல்லீரும் வாருங்கள் என விரைவாக கூப்பிட்டருளினர். 9

விளித்த காலை விழிவழி போதநீர்
துளிக்க நின்று தொழுது கவலொரீஇக்
களிக்கு நெஞ்சினர் கண்ணுத லெந்தைமுன்
அளித்தி யாலென் றவனுட னேகினர்.

நந்தியம்கடவுள் இவ்வாறு கூறியருளி அழைத்த நேரத்தில் ஈசன் அருள் கூடப்பட்டதை உணர்ந்த விஷ்ணுபிரானும், பிரமாதி தேவர்களும் உள்ளம் உருக கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் சொரிதர தொழுது தமது கவலையாவும் நீங்கப்பெற்று களிப்புடைய நெஞ்சினையுடையவராய் நந்தியங் கடவுளைப் பார்த்து நெற்றிக்கண்ணுடைய பகவான் திருமுன்பு எம்மை அழைத்து செல்வீராக என வேண்டினர்கள். 10

புடைக டந்திடு பூதர்கள் போற்றுமத்
தடைக டந்து தடுப்பரும் வேனிலான்
படைக டந்தவர் பாற்படு மெண்ணிலாக்
கடைக டந்துபின் அண்ணலைக் கண்டனர்

வலிமைமிக்க தோள்கொண்ட பூதர்கள் எண்ணில்லார் காவல்கொண்ட தடையாகிய வாயில்கள் பலவற்றைக் கடந்து, தடுக்க முடியாத அம்பினை வேகமாகச் சொரிந்து மயக்கும் மன்மதனின் படைகளை அழித்து அவனை நீறுக்கிய சிவபிரானை அடைவதற்கு இன்னும் அங்கு உற்ற எண்ணற்ற தடைகளையும் கடந்து நீங்கிச் சென்று பின்பு எம் அண்ணலாகிய பெருமானைக் கண்டனர். 11

முன்ன ரெய்தித் தொழுது முறைமுறை
சென்னி தாழ விறைஞ்சினர் சேணிடைத்
துன்னு மாதரந் தூண்டவந் தண்மினுர்
உன்னு மன்பின் உததியி ழுழ்ந்துளார்.

சிவபிரான் திருமுன்பாக எய்தி தொழுது முறைமுறை தமது தலைகள் தாழும் படி வணங்கினுர்கள். அன்பினுல் உள்ளத்திலே சிறந்தோங்கும் ஆதரவு பெருகப் பெருக ஓடோடி வந்து பெருமானைச் சேர்ந்து தரிசித்து அளவிடற்கரிய பேரின்பக் கடலுள் ஆழ்ந்துள்ளார்கள். 12

ஈர்க்கும் பாசத் திருவினை யின்ருெடே
தீர்க்கின் ருமிவ ணென்னுஞ் செருக்கினுல்
தூர்க்கின் ருர்மலர் சோதிபொற் ருண்மிசை
போர்க்கின் ருர்மெய்ப் பொடிப்பெனும் போர்வையே.

எம்மை வாளால் அரிவது போல எம்மை ஈர்க்கின்ற இருவினைகளை இன்ருேடு இவ்விடத்து தீர்க்கின்ருேம் என்னும் செருக்கினுல் நல்ல பூக்களைக் கொணர்ந்து சோதியாகிய பெருமானின் பொற்ருள் மீது சொரிந்து பரவசமாகி உடம்பெல்லாம் உரோமம் சிலிர்ப்ப மேனி முழுதும் ஓயாத கூச்செறிவினுலே உவகைப் போர்வை போர்த்தவர் ஆகிருர். 13

நேய முந்த நெடும்பகல் நீங்கிய
தாயெ திர்ந்திடு கன்றின் தகைமையாய்த்
தூய வந்தனை யொடு தொழுமவர்
வாயின் வந்தன வந்தன போற்றினுர்.

நெடுநாளாகப் பிரிந்துபோன தாயை அன்பால் காணவேண்டுமென்று ஆசைப் பட்ட ஓர் குழந்தை தனது தாயைக்கண்டால் எவ்வண்ணம் மகிழ்வாகி கூத்தாடி மகிழுமோ அவ்வாறே எம்பிரானைக் கண்டு இவர்கள் யாவரும் தொழுது தமது வாயிலே வந்தன வந்தன சொல்லித் துதித்து போற்றி செய்தார்கள். 14

அண்ண லீசன் வடிவை யகந்தனில்
எண்ணி னெல்லையி லின்பம் பயக்குமால்
கண்ணி னேர்வரு காட்சிய ராயிடின்
ஒண்ணு மோவவர் தஞ்செய லோதவே.

எல்லார்க்கும் ஈசனுகிய சிவபிரானின் திருவடிவத்தை எமது உள்ளத்தால் நினைத்தாலும் எல்லையில் இன்பம் பயக்கும் என்ருல் அப்பகவானைக் கண்ணுல் நேருக்கு நேராக கண்டு தரிசிக்கும்போது பிரம்ம விஷ்ணுக்கள் பெறும் பேரானந்த நிலையைப்பற்றி எம்மால் பேசவும் வேண்டுமோ. 15

மேலே வானவர் வேந்தொடு மெம்பிரான்
சீல மேய திருமுன்பு மேவினர்
மாலு நான்முகத் தண்ணலும் வந்திரு
பாலு மாகிப் பரவின ரென்பவே.

மேலாகிய தேவர் தலைவனை இந்திரனோடும் எம்பெருமானுடைய சீலம் மிக்குள்ள திருமுன்பு சென்றார்கள். பிரம்ம விஷ்ணுக்கள். இவர்கள் யாவரும் எம் பிரானின் இருபக்கமுமாகி நின்று துதி செய்தார்கள் என்பவே. 16

## வேறு

அம்புயா சனமுடை யண்ண லாழியான்
உம்பரோ டித்திற முற்றுப் போற்றுழிச்
செம்பொனேர் முடிமிசைத் திங்கள் சேர்த்திய
எம்பிரா னருள்புரிந் தினைய கூறுவான்.

தாமரை மலர் ஆசனமுடை பிரமதேவரும் விஷ்ணு மூர்த்தியும் தேவர்களோடும் இத்திறம் சென்று எம்பிரானைப் போற்றுதலும், செம்பொன்னினை ஒத்த திருமுடிமேல் பிரகாசமான இளம்பிறையை அணிந்த எம்பெருமான் அருள் புரிந்து இனியவற்றைக் கூறுவான். 17

ஒன்றொரு குறைகளு முறாத பான்மையால்
நன்றுநும் மரசியல் நடந்த வோவெனாக்
குன்றவில் லுடையவோர் குழகன் செப்பலும்
நின்றமால் தொழுதிவை நெறியிற் கூறுவான்.

பிரம விட்டுணுக்களே! ஒன்றேனும் குறைவில்லாதபடி நன்றாக உமது அரசியல் முறை நடந்ததோ வென, மகாமேருமலையை வில்லாக உடையவரும் குண்டல மணிந்த திருச்செவியினையும் உடைய பெருமான் கூறியருளலும் அதைக்கேட்டு நின்ற திருமாலானவர் எம்பிரானை வணங்கி நெறிப்பட யாவற்றையும் கூறி யருள்கிறார். 18

ஆதியி லயன்படைப் பல்ல தென்னருண்
மேதியன் அடுதொழி லேனை விண்ணவர்
ஏதமில் செயன்முறை யாவுங் கண்ணுதல்
நாதநின் னருளினால் நடந்த நன்றரோ.

ஆதியில் எல்லாவற்றையும் படைக்கும் பிரமதேவரின் படைப்பும் அல்லாமல் என்னுடைய காவல் தொழிலும் எருமைக்கடா வாகனமுடை இயமனுடைய சங்காரத் தொழிலும் மற்றைய தேவர்களுடைய செயன் முறையாலும் கண்ணுதற் கடவுளே! நாதனே! உமது பேரருளால் நன்றாக நடக்கின்றன. 19

**கருமணி மிடறுடைக் கடவு ளின்னுநீ**
**அருளுவ தொன்றுள ததனைக் கூறுவன்**
**இருநில மேலவர் யாரும் நின்றனைப்**
**பரமென வுணர்கிலர் மாயைப் பான்மையால்.**

கருமை நிறம்பொருந்திய நீல மணிபோலும் கண்டத்தையுடைய நீலகண்ட மகா தேவனே! இன்னும் தேவரீர் அருளிச் செய்யவேண்டியது ஒன்று உளது அதனைக் கூறுவன். அஃது யாதெனில் இப்பூமிமேல் யாவரும் தேவரீரையே முதலாகிய பரம் பொருள் எனக் கருதுகின்றரில்லை. மாயபந்தங்களோடு மயங்கிய அத்தன்மையால் போலுமென விஷ்ணுபிரான் விளம்பினர். 20

**நின்றன துரிமையை நிகழ்த்தி மேன்மையா**
**என்றனை யயன்றனை யெண்ணு வார்சிலர்**
**அன்றியும் நின்னுடன் அநேகர் தம்மையும்**
**ஒன்றென வேறினைந் துரைக்கின் றார்சிலர்.**

தேவரீர் உருத்திரமூர்த்தியாவீர் என்பதுமட்டையும் சொல்லிவிட்டு என்னை பிரம தேவரைப் பரம்பொருளென நினைக்கின்றார்கள் சிலர். அன்றியும் தேவரீருடன் வேறு அநேகம் கடவுளையும் ஒன்றென்று நினைந்து உலகில் பேசுகிறார் சிலர். 21

**காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருள்**
**மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்**
**மேலுமுண் டோசில விளம்ப விஞ்சையின்**
**பாலுறு முணர்ச்சியே பரமென் பார்சிலர்.**

காலமும் கருமங்களையும் கடந்து மேலாக கடவுள் என்றொரு பொருள் இருப் பதோ? அதை நாம் நம்பமாட்டோமென சிலர் மொழிகின்றார், இன்னும் சிலர் வேறாக நாம் மேற்கொண்டு ஏதேனும் சொல்லவேண்டுமோ விஞ்ஞானத்தின் பாற் பட்டு உலகிற்பயன்தரு முணர்ச்சியே கடவுள் எனச் சொல்லுவார். 22

**ஆற்றுறு புனல்படிந் தழுக்கு நீக்கலார்**
**சேற்றிடை வீழ்ந்தென மறைகள் செப்பிய**
**நீற்றோடு கண்டிகை நீக்கி வன்மையால்**
**வீற்றொரு குறிகொடு மேவு வார்சிலர்.**

ஆற்று நீரிருப்ப அதில் சென்று மூழ்கி தமது அழுக்கை நீக்கிக்கொள்ள வழிய றியாதவர் பின்னர் சேற்று நீரிலே சென்று மூழ்கி மேனியெல்லாம் சேறாகி நோயும் அடைதல்போல வேதங்கள் சிறந்ததென்று சொல்லப்படுகின்ற திருநீற்றோடு உருத் திராக்க மணியும் இருப்ப அதை நீக்கிவிட்டு வேறான குறிகளை அணிந்து கொண்டு சிலர் காண ப்படுகின்றார்கள்.

காமமோ டுவகையுங் களிப்பு நல்கலால்
வாமமே பொருளென மதிக்கின் ருர்சிலர்
தோமிலா மூவகைத் தொழிலும் வேள்வியும்
ஏமமார் பொருளென இயம்பு வார்சிலர்.

காம இன்பத்தையும், மகிழ்வையும் ஆனந்தத்தையும் வாமதந்திர நெறிதருதலால் வாம மதக்கொள்கையே மேலெனக் கொள்கிருர் சிலர். வாம மதக் கொள்கை மது, மாமிச உணவு இவைகளை உண்பதும் சக்தியை வழிபட்டு வாலாயம் செய்தல், அத ஞல் வசீகர தோற்றம் முதலியன எய்தி பெண் போகம் முதலியவற்றை அநுபவித்து வாழ்தலாகும். குறைவிலாத நித்தியம், நைமித்தியம், காமிகம் எனும் மூவகைத்தொ ழிலும், யாகமும், இவ்வுலக வாழ்வில் எமக்கு இன்புறும்படியான நிலையையும் தரு தலால் இச்செய்கையே மேலானதென்று விளம்புவார் சிலர்.

விரதமே பரமாக வேதியரும் சரதமாகவே சாத்திரம் காட்டினர் (திருவாசகம்)

நித்தியம், நைமித்திகம், காமிகம்: விதிப்படி சில கிரியைகளை நாள்தோறும் செய்வது நித்தியம். விசேடமாக திருவிழாபோன்று செய்வது நைமித்திகம். விரும்பிய தொன்றை பெறும்படியாக நினைந்து செய்வது காமிகம். கிரகசாந்தி முதலியன புத் திர பாக்கியம் செல்வம் வேண்டுவோர் யாகம் செய்வார்கள். இந்தவிந்தச் செய லைப் புரியுங்கால் அந்தந்த செயல்கள் அவர்கட்குரிய பேற்றை உடன்தரலால், முத் தொழில் பேறே பெரிதெனக் கூறினர். 24

உரையிசை யாதியா மொலிகள் யாவையும்
பிரமம தேயெனப் பேசு வார்சிலர்
அரிதுசெய் நோன்பினு லடைந்த சித்திகள்
பொருள்பிறி திலையெனப் புகல்கின் ருர்சிலர்.

பேசும் வார்த்தை, இசை ஆதியாகச் சொல்லப்படும் ஓசைகள் யாவையும் பிரமம் என்று பேசிக்கொண்டு திரிகின்ருர் இன்னும் சிலர், அரிதாகச் செய்யப்படும் விரத மும் நோன்பும் நல்ல சித்திகளைத் தரும். அவ்வாறு சித்தியடைதலே மேலானது என எண்ணி இதனையும் கடந்ததோர் இன்பப் பொருள் இல்லையெனச் சொல்வார் சிலர். 25

பெருமைகொள் குலந்தொறும் பிறந்து செய்திடும்
விரதமுஞ் சீலமும் வினைகண் மாற்றிட
வருகலும் பிறவுமா யங்கம் விட்டுயிர்
பரவுதல் வீடெனப் பகரு வார்சிலர்.

பெருமையான நல்ல குலத்திலே பிறந்து, அங்கங்கே செய்கின்ற விரதமும், சீலமும் தம்முடைய கொடிய வினைப்பயனை மாற்றிவிட தேய்தலும், வளர்தலும், பிறவுமாய இயல்புகள் பலவற்றினூடு அமைந்து, பின்னர் உடலம் விட்டு உயிர் பிரிந்தால் முன்போல ஏகமாக உயிர் பரவி நிற்கும். அவ்வாறு உயிர் பரவுதலே முத்தியென சொல்லுவார் சிலர். 26

அறிந்தறிந் துயிர்தொறு மதுவ தாகியே
பிறந்திறந் துணர்வெலாம் பெற்று நோன்பொடு
துறந்துகொன் றிட்டன துய்த்துக் கந்தமற்
றிறந்திடல் முத்தியா மென்கின் றூர்சிலர்.

அறிந்தறிந்து உயிர்கள் தோறும் அதுவதாகவே பிறந்து இறந்து இன்னிலையால் உணர்வெலாம்பெற்று நோன்பு விரதங்கள்கொண்டு துறவியாகி இது மட்டுமல்லாது கொலைசெய்யப்பட்ட ஊன் முதலியவற்றை உண்டு பஞ்சகந்தங்களும் கூடிக்கெடு தலே முத்தி என்றும் சொல்லுகிறுர் சிலர். 27

நன்னல மாதரை நண்ணு மின்பமே
உன்னரு முத்தியென் றுட்கொள் வார்சிலர்
இன்னன துறைதொறு மெய்தி யாவருந்
துன்னரும் பிறவியுட் டுன்ப நீங்கலார்.

இன்னும் சிலர் அழகான நலமுடைய பெண்களையே கூடிச் சேர்ந்து அவ்வாருக அவர் சேர்க்கையால் அனுபவிக்கும் இன்பம்தான் மேல் என எண்ணி இந்த இன்பம் நினைக்க முடியாத ஒரு பெரிய முத்தியென உட்கொண்டு வாழ்வார்கள் சிலர். இன்னன துறைகள் தோறும், சமயங்கள் தோறும் சேர்ந்து எம்மாலும் நினைக்கமுடியாத துன்பம்தரும் தத்தம் வினைக்கேற்ப பிறவியிலே சேர்ந்து துயரப்படுவார்கள் பலரும். 28

இறந்தன வரம்புல கெவரும் வேதநூல்
மறந்தனர் பவநெறி மல்கி நாடொறுஞ்
சிறந்தன வவையுயிர் செய்த தொல்வினை
அறிந்தரு ளையநீ யமைத்த வாயினும்.

ஆகையால் ஒழுக்க வரம்புகள் அழிந்தன. உலகில் கட்டுப்பாடு நீங்கியது, எல்லாரும் வேத நூல் மறந்தனர், பாவச் செயல்களே எங்கும் பெருகிக்கொண்டு சிறக்கிறது, அதைச் செய்வாரும் சிறந்து வாழ்கிறுர்கள். ஆகவே பெருமானே! இவைகள் தாம் உயிர்கள் செய்த வல்வினையாகும். இ வ யாவும் அறிந்தருளுவீர் ஐயா! இவைகளை நீ அமைத்ததுவாயினும்.

எல்லாம் ஈசன்செயலாக கருதப்பட்டாலும், இங்குள்ள தீங்குகளையும் தேவரீர் அறிந்தருள்க எம்பிரானே என விஷ்ணுபிரான் கூறியருளினுர்.

உணர்த்தா தொழிந்தேகழிந் தெழிந்தேன்
ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைப்பேன். (திருவாசகம்) 29

அங்கவர் போதமுற் றுசொ ரீஇமனச்
சங்கையு மகன்றுநின் சரண மேயுறப்
புங்கவ சிறிதருள் புரிய வேண்டுமால்
எங்கடம் பொருட்டென இறைவன் கூறுவான்.

அங்கு இவர்கள் யாவரும் பெருமானே உமது அருளால் ஞான உணர்வு கொண்டு அதனுல் தம் தீமைச் செயலை நீங்கி மனத்திலே கொண்ட சந்தேக, விபரீத எண்ணங்களை விடுத்து தேவரீரின் திருவடிப்பேறு பெறும்படி அருள்

செய்யவேண்டும். எங்கள் பொருட்டாக தேவரீர் இதைச் செய்ய வேண்டுமென விஷ்ணு மூர்த்தி கூறி நிற்றலும், ஈசனுகிய பெருமான் கூறியருள்கிருர்.
கண்ணுர் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர. (திருவாசகம்) 30

இனிதொரு திறமதற் கிசைத்து மாருயிர்
அனையவும் புரப்பவ னுத லாலவர்
வினையறு நெறிமையால் வேண்டு கிற்றிநின்
மனனுறு மெண்ணினை மறுத்தி மாசிலாய்.

இனி ஒரு திறம் அதற்கு உண்டு. விஷ்ணுவே கேள் அது யாதெனில் நீ எல்லாவற்றையும் காப்பவன். உலக மக்கள் வினையெய்தியபோது அது பாரமாதலின் அவர்கள் வினை அறும்பொருட்டு இவ்வாறு கேட்டருளினுய். ஆகவே நின் மனதில் உற்ற கவலையை மறப்பாயாக, மாசில்லாதவனே யாம் சொல்வதைக் கேள். 31

காதலி னருளுமுன் கலையின் பன்மையிற்
கோதறு மோர்கலை கொண்டு நேமிசூழ்
மேதினி யதனிடை வியாதன் என்றிடு
போதக முனியெனப் போந்து வைகுதி.

உலகில் உயிர்களைக் காக்கும் காதலாகி எங்கும் பரந்து அருளும் உன் கலைகள் பலவற்றுள்ளும் ஓர் குறைவற்ற கலையைக் கொண்டு, கடல்சூழ்ந்த இப் பூமியில் பிறப்பாயாக. அவ்வாருக நீ பிறக்கும் போது வியாதன் என்ற பெயரோடு பிறப்பாய், பிறந்து மேலாம் ஞானவுணர்வெய்திய முனிவனுகத் திகழ்ந்து வாழ்ந்திருப்பாய். 32

போந்தவ ணிருந்தபின் புகரி லாமறை
ஆய்ந்திடின் வந்திடு மவற்றை நால்வகை
வாய்ந்திட நல்கியே மரபி னேர்க்கெலாம்
ஈந்தனை யவரகத் திருளை நீத்தியால்.

அவ்வாறு உலகில் வியாசன் என பெயர் கொண்டு அவ்விடத்து வாழ்ந்துவரும் கால் நீ சிந்தித்து ஆராயப் புகுங்கால் வேதங்கள் யாவும் உனக்கு ஓதாதே உணர்வில் தோன்றும். தோன்றிய வேதங்களை நால்வகையாக வகுப்பாய். வகுத்த பின் அதை உரிய மரபிற்கு உற்றவர்களுக்கு போதிப்பாயாக. போதித்து அவரவர் உள்ளங்களில் கொண்ட அறியாமை இருளை நீக்கிக் கொள்வாய். 33

அன்னதோர் மறையினை யறிந்து மையமா
உன்னிய நிலையினர் உள்ளந் தேறவும்
மன்னவ ரல்லவர் மரபிற் றேரவும்
இன்னமோர் மறையுள திதுவுங் கேண்மதி.

அவ்வாருக வேதங்களை உணர்ந்தும், இன்னும் சந்தேகம். ஐயுறு கோள்வாரின் உள்ளம் மேலும் தெளிவுபட்டு விளங்குமாறும், இன்னும் வேதம் உணர்ந்தார் அல்லாத மற்றையோர் உணர்ந்து கொள்ளுமாறும் இன்னுமோர் வேதம் உளது, இதையும் கேட்பாயாக,

ஏற்றம தாகிய மறைக்கும் யாமுனஞ்
சாற்றிய வாகமந் தனக்கு மாங்கது
வீற்றுற வருவது மன்று மேன்மையால்
ஆற்றவும் நமதிய லறையும் நீரதே.

மேலோங்கிய சிறப்புடைய வேதங்கட்கும், யாம் முன்னர் சொல்லியருளிய ஆகமங்கட்கும், அதன் சார்பாக வருவதுமன்று. அதன் சிறப்பு என்னவென்ருல். நமது ஆற்றலே மேம்பாடாக சொல்லி நிற்கும் திறமை வாய்ந்த இயல்பினைக் கொண்டது. 35

என்பெய ரதற்கெனி லினிது தேர்ந்துளோர்
துன்பம தகற்றிடுந் தொல்பு ராணமாம்
ஒன்பதிற் றிருவகை உண்ட வற்றினை
அன்புடை நந்திமுன் னறியக் கூறினேம்.

என்ன பெயர் அதற்கெனில் இனிதாக அதைக் கற்றுளோர் துன்பங்களை அகற்றி நிற்கும் மிகப் பழைமையான புராணமாம். இவைகள் பதினெட்டு வகையாக உண்டு. அவற்றையெல்லாம் எம்மீது அன்புகொண்ட நந்தி அறியும்படி நாம் கூறியருளினேம்.

சிந்தை மகிழச் சிவபுராணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓயஉரைப்பணியான்.

எனும் மணிவாசகர் வாக்கும் இனிது தேர்ந்துளோர் துன்பமகற்றிடும் தொல் புராணமாம் என வரும் பாடற் கருத்தையும் நோக்குக. 36

ஆதியில் நந்திபா லளித்த தொன்மைசேர்
காதைகள் யாவையுங் கருணை யாலவன்
கோதற வுணர்சனற் குமாரற் கீந்தனன்
நீதியொ டவணிடை நிலத்திற் கேட்டியால்.

ஆதியில் நாம் நந்திதேவரிடத்து உணர்த்திக் கொடுத்த கதைகள் யாவற்றையும் கருணையால் நந்தி தேவர் குறை நீக்கி உணர்ந்து தெளிந்த சனற்குமார முனிவனுக்கு உரைத்தருளினர். அவ்வாறு நந்திதேவரிடத்தில் பெற்றதை நீதியோடும் சனற்குமார முனிவனிடமிருந்து பூமியில் கேட்பாயாக. 37

என்னலும் நன்றென இசைந்து தாழ்ந்தெழீஇ
முன்னவன் விடைகொடு முளரி யான்முதல்
துன்னிய வானவர் தொகையொ டேகியே
தன்னுல கத்தின்மால் சார்தல் மேயினன்.

என சிவபிரான் கூறியருளலும் நன்றென்று நாராயணக் கடவுள் இசைந்து, திருமுன்னர் தாழ்ந்து எழுந்து எப்பொருட்கும் முதல்வராகிய சிவபிரானிடத்து விடைபெற்று அவ்விடத்தினின்றும் நீங்கி தாமரைமலர் மேலவராகிய பிரமதேவர் முதல் தேவர் கூட்டத்தோடு ஏகி தனது உலகத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் சேர்தல் மேவினர். 38

சார்தலு மயன்றனைச் சதம கத்தனை
ஆர்தரு மமரரை யருளி னவ்வவர்
சேர்தரு புரந்தொறுஞ் செல்லற் கேவியே
கார்தரு மெய்யுடைக் கடவுள் வைகினன்.

அவ்வாறு வைகுந்த உலகைச் சேர்ந்த விஷ்ணு மூர்த்தியானவர் தன்னோடும் உடன்வந்த தேவரை, இந்திரனை, பிரமதேவரை அருள்புரிந்து அவரவர் இடங்கள் செல்லுமாறு விடுத்த பின்னர் கருமேகம்போல நிறமுடைய எங்கள் கடவுளாகிய விஷ்ணு தனது உலகில் வீற்றிருந்தருளினர். 39

திருவொடு மருவியோன் செறிவுற் றெங்கணும்
பரவுறு மியல்பெறு பகவ னாதலால்
தரணியி லருளினாற் றனது சத்தியில்
ஒருகலை தன்னுட னுதிக்க வுன்னியே.

மகாலெட்சுமியோடும் அவ்வாறு அமர்ந்த பெருமான். எல்லாவிடமும் நீக்கமற நிறைந்து நிற்கும் இயல்பினை உடையவன் ஆதலால் இப்பூமியில் தனது அருளாலே தனது சக்தியில் ஒரு கலையோடு திருஅவதாரம் செய்ய நினைந்தருளி. 40

பங்கயத் தயன்வழிப் பராச ரப்பெயர்த்
துங்கநன் முனிபனித் தூவ லெல்லையிற்
கங்கையி லியோசன கத்தி யோடுற
அங்கவர் தம்மிடை அவத ரித்தனன்.

தாமரைமலர்மேல் இருக்கும் பிரமதேவரின் வழித்தோன்றல் எனப்படும் பராசரன் எனும் பெயருடைய மேலான முனிவன் ஒருபொழுது மூடு பனியாக பொருந்திய நேரத்தில் கங்கையாற்றின் மேலாக மற்சகந்தி என்னும் கன்னியால் செலுத்தப்பட்ட ஓடத்தின்மேல் சென்றார். சென்றபோது சிவனருளால் உணர்ந்த முனிவர் அந்த மற்சகந்தி என்னும் இழிந்த குலக் கன்னியைச் சேர்ந்தார். அவர்கள் கூடிய நேரத்து அவள் வயிற்றிலே தனது ஒரு கலையோடும் விஷ்ணு குழந்தையாக அவதரித்தார். 41

மற்றவன் வதரிகா வனத்தில் வைகியே
அற்றமில் வாதரா யணன்எ னும்பெயர்
பெற்றன னாகியெம் பிரான்ற னாணையாற்
கற்றிடா துணர்ந்தனன் கரையில் வேதமே.

இவ்வாறு பிறந்த குழந்தை வதரிகாவனம் என்னும் வனத்தில் தங்கியிருந்து குற்றமில்லாத வாதராயணன் என்னும் பெயர் பெற்றனன். அவ்வாறாக வாதராயணன் எம்பெருமானுடைய அருளாலே கல்லாதே கரைகாணமுடியாத வேதங்கள் எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டார். 42

மோனக முற்றிய முனிவர் மேலவன்
தானுணர் மறையெனுந் தரங்க வேலையில்
ஆனதோர் பொருளினை யறிஞர் பெற்றிடத்
தூநெறி கொண்டநாற் றுறைசெய் தானரோ.

மோனநிலை உணர்வால் முற்றப்பெற்ற வாதராயணன் எனும் மேலான முனிவர் இவ்வாறு தான் உணர்ந்துகொண்ட வேதங்கள் எனும் பெரிய கடலில் தோன்றிய பொருள்களை அறிவாளிகள் பெறும்படியாக நான்கு பகுதிகளாக, துறைகளாக வகுத்தருளினர். 43

**கரையறு வேதமாங் கடலை நான்கவாய்ப்**
**பிரிநிலை யாக்கியே நிறுவு பெற்றியாற்**
**புரைதவிர் முனிவரன் புகழ்வி யாதன் என்**
**றொருபெயர் பெற்றனன் உலகம் போற்றவே.**

அவ்வாறு கரையற்ற வேதங்கள் என்னும் கடலினை இருக்கு, அசுர், சாமம், அதர்வணம் என நான்கு நிலையாகப் பிரித்து அவற்றை வைத்த பெற்றியால் குற்றங்கள் யாவும் தவிர்ந்த இம்முனிவன் வியாதன் என்று ஒரு பேரை பெற்றுக் கொண்டான், உலகத்தார் பலரும் தனது செயலை உணர்ந்து போற்றும்படியாக. 44

**விரவிய மறைதெரி வியாத னுமவன்**
**குரவனே யாஞ்சனற் குமாரன் றன்னிடை**
**இருவகை யொன்பதா யியல்பு ராணமும்**
**மரபொடு கேட்டவை மனத்துட் கொண்டபின்.**

பரந்து விளங்கிய வேதங்களை தெரிந்த வியாதன் எனும் முனிவர் தனது குருவாக விளங்கும் சனற்குமார முனிவனிடத்து, பதினெட்டு வகையாகிய இப்புராணங்களை குரு, சீட மரபாற் கேட்டு அவைகளை மனத்திலே கொண்டார். 45

**ஏத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருள்**
**மாத்திரைப் படாவெனு மாசில் காட்சியர்**
**பார்த்துணர் பான்மையாற் பலவ கைப்படச்**
**சூத்திர மானவுஞ் சொற்று வைகினன்.**

போற்றித் துதிக்கின்ற வேதங்கள் எடுத்துச் சொல்லும் பொருட்கள் மாத்திரைப் பட அமையாத அத்தன்மையால் குறைவிலா உணர்வால் அருளை நாடும் காட்சி பெறும் பெரியோர் பார்த்து உணர்ந்து கொள்ளும் பான்மையால் பலவகைப்பட்ட சூத்திரங்களாக அவற்றைச் சொல்லி இருந்தார். 46

**மயலறு பயிலரே வைசம் பாயனர்**
**சயிமினி சுமந்துவாந் தவத்தர் நால்வர்க்கும்**
**வியலிருக் காதியாம் வேத நான்கையும்**
**உயர்வுறு தவத்தினன் முறையி னோதினன்.**

பின்னர் இவ் வேதங்களை உலக மயக்கமில்லாத பயிலர், வைசம் பாயனர், சைமினி, சுமந்து முதலாக உள்ள நான்கு முனிவர்க்கு, இருக்கு, அசுர் சாமம், அதாவணம் எனும் நான்கையும் உயர்வான தவநெறியை உடைய வியாச முனிவன் முறையாக மேற்சொன்ன நான்கு முனிவர்க்கும் ஓதினன்.

**தோல்வரு மறைகளின் சூத்தி ரத்தையும்**
**மேல்வரு சயிமினி முதல மேதையர்**
**நால்வரு முணரிய நவின்று நல்கினன்**
**ஆல்வரு கடவுளை யனைய தன்மையான்.**

உள்ளே கேட்கப்பட்டன எனும் பெருமை வாய்ந்த வேதங்களின் சூத்திரத்தை சைமினி முதலாகச் சொல்லிய மேதாவிகள் நால்வர்களும் உணரும் வண்ணம் வியாச முனிவர் சொல்லியருளி அவர்கள் அதனை பெறும்படி கொடுத்து உதவினர். கல்லால விருட்சத்தின் கீழே அமர்ந்தருளிய தட்சணாமூர்த்தியைப் போல இந்நால்வருக்கு வேதங்களை வியாச முனிவன் சொல்லியருளினன். 48

**மெய்ம்முனி யனையரை விளித்து நீரினி**
**இம்மறை யியல்பினே ரெவர்க்கு மீமென**
**அம்முறை நால்வரு மனைய வேதநூல்**
**செம்மையொ டளித்தனர் சிறந்து ளோர்க்கெலாம்.**

மெய்மை உணர்ந்த வியாச முனிவன் இதன் பின்னர் அந்நால்வரையும் பார்த்து இம்முறையாக நாம் உமக்கு உணர்த்திய வண்ணம் நீங்கள் இயல்புடையார்க்கு இதைக் கற்றுக் கொடுப்பீராகவென அருள் செய்ய, அதைக் கேட்டுணர்ந்த சைமினி முதல் நால்வரும் இந்தவேத நூலை இவ்வுலகில் செம்மையாகச் சிறந்து ஒழுகுவார்க் கெல்லாம் உபதேசித்தருளினர். 49

**அன்னதோர் முனிவர னதற்குப் பின்னரே**
**பன்னருந் தொகையினுற் பதினெண் பான்மையாய்**
**முன்னுறு புராணநூல் முழுது முற்றிய**
**இன்னருள் நிலைமையா லெனக்கு நல்கினன்.**

அந்த வியாச முனிவன் அதற்குப் பின்னர் சொல்லொணாத தொகைப்பட்ட பழமையான பதினெண் புராணங்களையும், தன்னிடத்தே பழுத்து முதிர்ந்த அருள் நிலைமையால் எனக்குக் கற்றுக் கொடுத்தருளினன் என சூத முனிவர் நைமிசாரணி யத்து முனிவர்க்கு சொல்லியருளினர். 50

**வேதம துணர்தரு வியாத மாமுனி**
**காதல னுமெனைக் கருணை செய்திவை**
**ஓதுதி யாவரு முணர வென்றனன்**
**ஆதலி னுலகினி லவற்றைக் கூறினேன்.**

வேதங்களை ஓதாது உணர்ந்துகொண்ட வியாசமாமனிவர் தனது காதல்மைந்தன் போல்பவனாகிய என்னை கருணைசெய்து பார்த்தருளி சூதனே நீ என்னிடத்து கேட்ட இப்புராண முழுவதையும் இந்த உலகில் எல்லாரும் கேட்டு உணரும்படி சொல்லுவா யாக எனக் கூறியருளினன். ஆதலால் எனது குருபரனின் ஆணைப்படி இதை உலகில் யாவரும் அறிய அவற்றைக் கூறினேன், 51

(கந்தபுராணத்திற்கு உரை ஒன்று சிறப்பாக, எல்லாரும் அறியும்படி இருக்க வேண்டுமென்பது எமது குருபரன் ஆணையுமாம்; —உரையாசிரியன்)

காமரு தண்டுழாய்க் கண்ண ளுகிய
மாமுனி யருளினுல் மறைகள் யாவையுந்
தோமறு புராணநூற் ெருகுதி யாவையும்
நேமிகொ ளுலகெலா நிலவி யுற்றவே.

அழகுவாய்ந்த துளசிமாலை அணிந்த கண்ணபிரானின் அம்சமாகிய வியாச முனிவர் நல் அருளினுல் வேதங்கள் யாவையும் குற்றமற்ற புராணநூல் தொகுதிகள் யாவையும், சமுத்திரம் சூழ்ந்த உலகில் நிலவி விளங்குகின்றன. 52

நம்பனுர்க் கொருபது நார ணற்குநான்
கம்புயத் தவற்கிரண் டலரி யங்கியாம்
உம்பர்வான் சுடர்களுக் கோரொன் றென்பரால்
இம்பரி லிசைக்கும்அப் புராணத் தெல்லையே.

இவ்வாருகிய புராணங்கள் பதினெட்டில் உள்ளும் சிவபிரானுக்கு பத்து, நாராயணருக்கு நாலு, பிரமதேவருக்கு இரண்டு, உலகில் ஒளித் தெய்வங்களாகிய அக்கினி தேவனுக்கு ஒன்று, சூரியதேவனுக்கு ஒன்ருக அமைந்தது, 53

## வேறு

எதிரில் சைவமே பவிடியம் மார்க்கண்ட மிலிங்கம்
மதிகொள் காந்தநல் வராகமே வாமனம் மற்சம்
புதிய கூர்மமே பிரமாண்டம் இவைசிவ புராணம்
பதும மேலவன் புராணமாம் பிரமமே பதுமம்.

நிகரற்ற சைவபுராணம், பவிடியபுராணம், மார்கண்ட புராணம், இலிங்க புராணம், நல்ல ஞான உணர்வுதரும் காந்தபுராணம், நல் வராக புராணம், வாமன புராணம், மற்சபுராணம், புதுமைகொண்ட கூர்மபுராணம், பிரமாண்ட புராணம், என சிவபிரானின் புராணம் பத்தாகும். தாமரை மலர்மேல் இருக்கும் பிரமதேவரின் புராணங்களாவன, பதுமம், பிரமம் என இரண்டாம். 54

கருது காருடம் நாரதம் விண்டுபா கவதம்
அரிக தைப்பெயர் ஆக்கினே யம்மழற் கதையாம்
இரவி தன்கதை பிரமகை வர்த்தமாம் இவைதாம்
தெரியும் ஒன்பதிற் றிருவகைப் புராணமாந் திறனே.

யாவராலும் விரும்பப்படும் காருடபுராணம், நாரத புராணம், விண்டு புராணம், பாகவத புராணம் ஆகிய நாலும் விஷ்ணுமூர்த்தியின் புராணமாகும், அக்கினி தேவனுடைய புராணம் ஆக்கினேயம் எனப்படும். சூரியதேவனுடைய புராணம் பிரமகைவர்த்தம் எனப்படும். ஆக பதினெண் வகைப்புராணமும் இவையேயாகும். 55

இத்தி றத்தவாம் புராணங்கள் ஒன்பதிற் றிரண்டின்
அத்த னுக்குள புராணமீ ரைந்தினில் அடல்வேற்
கைத்த லத்தவன் காந்தத்துள் அன்னவன் கதையை
மெய்த்தொ கைப்பட வுரைப்பனென் றேமுனி விளம்பும்.

இத் திறத்தவாகிய புராணங்கள் பதினெட்டில் சிவபிரானுக்குரிய புராணங்கள் பத்தில் வலிமைகொண்ட வேலைக் கையிலேந்தியருளிய முருகப்பிரான் வரலாறு சொல்லப்படும் அவர் பெயர் நாட்டமுள்ள காந்தம் என்னும் புராணத்துள் அவருடைய கதையில் இப்போது உண்மையாகிய தொகுதிகளை சுருக்கமாக எடுத்து இயம்புகிறேன் என சூதமுனிவர் சொல்லியருள்கிறார். 56

## வேறு

பூமிசை யிருந்த புத்தேள் புரிந்திடு புதல்வர் தம்முள்
ஏமுறு தக்க னீன்ற விருந்தனிக் குமரி யான
தீமையை யகற்ற அம்மை சிந்தைசெய் திமைய மன்னன்
மாமக ளாகி நோற்று வைகினுள் வைகு நாளில்.

தாமரைமலர் மேலிருந்த பிரமதேவரின் புத்திரருள் ஒருவனான தக்கன் பெற்றமையால் தாட்சாயனி என்னும் நாமம் பூண்ட குமரியாகிய அம்மை அவன் மகளாகிய தனால் ஏற்பட்ட தீமையினின்றும் நீங்கவேண்டி எம்பிராட்டி சிந்தைசெய்து, இமயமலை அரசன் மகளாகத் தோன்றி இமயத்துத் தவம் செய்திருந்தாள். அவ்வாறு இருக்கும்நாளில். 57

அவுணர்க ளோடுசூர னவனிமேற் றோன்றி நோற்றுச்
சிவன்வர மளிக்கப் பெற்றுத் தேவர்யா வரையும் வென்று
புவிதனி லுவரி தன்னிற் புங்கவர் புனைவன் செய்த
தவலரு மகேந்தி ரத்தில் வைகினன் தானை சூழ.

அசுரர்களோடும் சூரபன்மன் இப் பூமிமேல் தோன்றி தவம்செய்து சிவபிரான் வரங்கள் கொடுப்ப பெற்றுக்கொண்டு வலியவனாகி விளங்கிப் பின்னர் தேவர்கள் எல்லாரையும் வெற்றிகொண்டு அடிமையாக்கி, சிறந்து, இப்பூமி தன்னில் தேவ தச்சன் கட்டிமுடித்த வீரமகேந்திரபுரம் எனப்படும் தனது புரத்தில் அரசாண்டு இருந்தான். 58

அனையதோர் காலை வெள்ளி யடுக்கலிற் சனக னாதி
முனிவரர் தமக்குத் தொல்லை மூவகைப் பதமுங் கூறி
இனியதோர் ஞான போதம் இத்திற மென்று மோனத்
தனிநிலை யதனைக் காட்டித் தற்பர னிருந்தா னன்றே.

அவ்வாறு சூரன் அரசாண்டிருக்குங்கால் வெள்ளி மயமாகிய திருக்கைலாயமலை மீது எம்பெருமான் சனகர், சனற்குமாரர், சனாதனர், சதானந்தர் எனப்படும் நாலு முனி பிள்ளைகட்கும் சரியை, கிரியை, யோகம் எனும் பழமையான தொன்று தொட்டு என்றும் நிகழும் மூன்று பதங்களையும் கூறி, அப்பால் உரை மாண்ட ஞான பதமாகிய ஞானபோதம் இத்துணைத்தது எனக் காண்பிக்க திருவுளமாகி அவர்கட்கு உபதேசிக்கத் தான் யோகத்து வீற்றிருந்தருளினார். 59

வீற்றிருந் தருளு மெல்லை வெய்யசூர் முதலா வுள்ளோர்
ஆற்றவுந் தீங்கு செய்தே யமரர்கள் சிலரைப் பற்றிப்
போற்றிடுஞ் சிறையி லுய்ப்பப் புரந்தரன் முதலா வுள்ளோர்
மாற்றருந் துயரின் மூழ்கி மறைந்தன ராகி வைகி.

இவ்வாறு எம்பிரான் யோகத்து வீற்றிருந்தருளும் எல்லை கொடிய சூரபன்மன் முதலாய் உள்ள அசுரர்கள், யாவராலும் தாங்கமுடியாத தீங்குகளை உலகில் செய்து தேவர்களையும் ஏனையோரையும் துயரப்படுத்தி வருங்கால், சில தேவரைப் பிடித்து விட்டு நீங்கமுடியாத சிறையிலே வைப்ப அதனுல் இந்திரன் முதலாயுள்ளார்கள் மாற்றுதற்கு முடியாத துயரத்துள் மூழ்கி மறைந்தனராகி பயந்து ஒளித்துத் திரிந்தார்கள். 60

சங்கரன் மோனத் தன்மை சதுர்முகற் குரைப்ப வன்னுன்
வெங்கணை வேளை யுய்ப்ப விழித்தவன் புரநீ ருக்கிப்
பங்கயன் முதலா வுள்ளோர் பலரும்வந் திரங்கிப் போற்ற
அங்குறை மோனம் நீங்கி யவர்க்கருள் செய்தா னையன்.

சிவபிரான் மௌன நிலையினை பிரமதேவருக்கு உரைப்ப. அதுகேட்ட பிரமதேவர் கொடிய மலர்ப் பாணங்களை உடைய மன்மதனை சுவாமியின் மௌன நிலை நீக்க விடுப்ப, அவ்வாறு சென்ற மன்மதனை சுவாமி நெற்றிக் கண்ணினுல் பார்த்து, மன் மதனுடைய புரத்தை நீருக்கி எரிப்ப, பின்னர் பிரமதேவன் முதலியோர் வந்து, இரங்கிப் போற்றுதல் செய்ய, எம்பிரான் தான் அங்கு உறைகின்ற மோனநிலை நீங்கி வணங்கிய பிரமாதிதேவர்கட்கு அருள் செய்தான். 61

ஓரெழு முனிவர் தம்மை யோங்கலுக் கிறைவன் றன்பாற்
பேரருண் முறையாற் றூண்டிப் பெருமணம் பேசுவித்துப்
பாரறு நோன்பின் மிக்க பராபரை யன்பு தேர்ந்து
காரணி கண்டத் தெந்தை கணங்களோ டிமையம் புக்கான்.

பின்னர் சுவாமி ஏழு முனிவர்களை இமயமலைக்கு மலையரசன்பால் பேரருள் முறை யாகச் செலுத்தி, உலகில் பெரிதாகிய திருமணத்தைப் பேசுவித்து, இப்பூமியின்கண் எல்லாப் பற்றினையும் விட்டுத் தவம் செய்யும் அம்பாளின் அன்பு தேர்ந்து, நஞ் சுண்ட கண்டத்தினையுடைய எந்தை பெருமான் சிவகணங்களோடும் இமயமலை சேர்ந்தான். 62

புடையக விமையந் தன்னிற் புவனங்கள் முழுது மீண்ட
வடபுவி தாழ்ந்து தென்பா லுயர்தலும் மலயந் தன்னிற்
கடமுனி தன்னை யேவிக் கவுரியை மணந்து பின்னர்
அடன்மத வேளை நல்கி அநங்கனே யாகச் செய்தான்.

பரந்து அகன்று விளங்கும் இமயமலை இடத்து புவனத்துள்ளார் முழுதும் வந்து சேர்தலினாலே இப்பூமியின் வட பாகமானது தாழ, தென்திசை உயர்ந்தது. உடனே அகத்திய முனிவரை பொதிகை மலைக்கு செல்லுமாறு பணித்து பின்னர் கௌரிநாயகியாரைத் திருமணம் செய்து பின்னர் மன்மதனை உயிரெழுப்பி தோன்றச் செய்து, அவனை ஒருவருக்கும் தென்படாதவாறு உலவும்படி செய்தார். 63

**மன்புனை கயிலை தன்னில் மலைமக ளோடு மீண்டு**
**முன்பென வமர்ந்து நாதன் முழுதுல குயிர்கட் கெல்லாம்**
**இன்பமும் புணர்ப்பும் நல்கி யிமையவர் யாரும் வேண்டத்**
**தன்பெரு நுதற்கட் டீயாற் சரவண பவனைத் தந்தான்.**

மிக உயர்வான மேம்பட்ட கைலைமலை தன்னில் மலைமகளாகிய கௌரி அம்பாளோடும் மீண்டும் முன்போல் அமர்ந்து எமது ஈசன் முழு உலகத்து உயிர்கட்கெல்லாம் இன்பமும் புணர்ப்பும் நல்கி, பின்னர் தேவர்கள் யாவரும் வந்து வேண்டத் தன்னுடைய பெருமையான நெற்றிக் கண்ணினின்றும் தோன்றிய நெருப்பினாலே சரவணபவனைத் தந்தான். 64

**அந்தமில் விளையாட் டுள்ள அறுமுகக் கடவு டன்னைத்**
**தந்திடு மெல்லை யன்னோன் தானையந் தலைவ ராக**
**முந்திய விறல்சேர் மொய்ம்பன் முதலிய விலக்கத் தொன்பான்**
**நந்திதன் கணத்தி னோரை நங்கைபா லுதிப்பச் செய்தான்.**

எல்லையற்ற திருவிளையாட்டைப் புரிந்தருளுகின்ற ஆறுமுகக்கடவுள் தன்னைத் தந்திட்ட நேரத்தில் அவருடைய சேனைத் தலைவராக, மிகவும் மேலான வலிமையுடைய வீரவாகுதேவர் முதலிய இலக்கத்தொன்பது நந்தி கணத்தவர் எனப்படும் வீரர்களை எம்பிராட்டிபால் தோன்றிய ஒன்பது சத்திகளிடத்திருந்தும் சிவபிரான் தோற்றுவித்தருளினார். 65

**அண்ணலங் குமரப் புத்தேள் அலகிலா வாடல் செய்து**
**மண்ணுறு கடலும் வெற்பும் வானமுந் திரிபு செய்து**
**துண்ணெனக் குழவி யேபோற் றோன்றிட வதனை நோக்கி**
**விண்ணவர் யாருஞ் சூழ்ந்து வெஞ்சமர் புரிந்து நின்றார்.**

அண்ணலாகிய குமரக்கடவுள் அளவற்ற பல ஆடல்களைப் புரிந்து மண்ணில் உள்ள கடலையும், மலைகளையும், வான் உலகங்களையும் திரிபுசெய்து மாற்றியமைத்து திடீரென ஒருநாள் குழந்தை போலத் தோன்றிட, அதனைப் பார்த்து தேவர்கள் யாவரும் குமரப் பெருமானை அறியாது சூழ்ந்து வளைந்து கொண்டு கொடிய போரைச் செய்தார்கள். 66

**ஆரமர் செய்து ளாரை யட்டுட னுயிரும் நல்கிப்**
**பேருரு நிலைமை காட்டிப் பெறலருங் காட்சி நல்கி**
**நாரதன் மகத்திற் றோன்றி நடந்ததோர் செச்சை தன்னை**
**ஊர்தியு தாகக் கொண்டே ஊர்ந்தன னெப்பி லாதான்.**

அவ்வாறு போர் செய்தாரை அழித்து உடனே அவருக்கு உயிரும் திரும்பக் கொடுத்து, தனது அருள் நிறைந்த பேருருவதனைக் காட்டிப் பின்னர் பெறுதற்கரிய காட்சியினைக் கொடுத்துப் பின்னர் நாரத முனிவன் யாகத்திலே தோன்றிய ஓர் ஆட்டுக்கடாவைத் தனக்கு வாகனமாகக் கொண்டு ஊர்ந்தருளினன் தனக்கு ஒருவர் ஒப்பிலாத முருகப் பெருமான். 67

மறைமுதற் குடிலை தன்னின் மாண்பொருள் முறைக டாவி
வெறிகமழ் கமலப் புத்தேள் விடைகொடான் மயங்கக் கண்டு
சிறையிடை யவனை வைத்துச் செகமெலா மளித்துத் தாதை
குறையிரந் திடவே விட்டுக் குறுமுனிக் கதனை யீந்தான்.

பின்னர் வேதங்களின் முதலெழுத்தாகிய பிரணவ எழுத்தின் மாட்சிமை மிக்க பொருளை பிரமதேவரிடம் கேட்டு அவர் விடை கொடுக்க முடியாது மயங்கக் கண்டு பிரமதேவரைச் சிறையிலிட்டு வைத்து, இப்பூமி முழுவதையும் தானே படைத்து பின்னர் தந்தையாகிய சிவபிரான் பிரமதேவரைச் சிறை நீக்கும்படி இரந்து வேண்ட, பிரமதேவரைச் சிறை விடுத்து பின்னர் அகத்திய முனிவருக்கு அந்தப் பிரணவத்தின் பொருளை முருகப்பெருமான் உபதேசித்தருளினர். 68

ஆவதோர் காலை யீச னறுமுகப் பரனை நோக்கி
ஏவரு முடிக்க வொண்ணு திருந்தசூர் முதலோர் தம்பால்
மேவினை பொருது வென்று விரிஞ்சனே முதலா வுள்ள
தேவர்த மின்னல் நீக்கிச் செல்லுதி குமர வென்றுன்.

அவ்வாருகிய காலத்து ஈசன் ஆறுமுகசுவாமியை நோக்கியருளி எவராலும் முடிக்க முடியாதபடி அழியா வரங்கொண்டு வாழும் சூரன் முதல் அசுரர் தம்பால் நீர் சென்று போர் செய்து பிரமதேவன் முதலாக உள்ள தேவர்களுடைய இன்னலை நீக்கி அருள்வாயாக எனது குமாரனே! என கூறியருளினர். 69

விராவிய விலக்கத் தொன்பான் வீரரை வெய்ய பூதர்
இராயிர வெள்ளத் தோரை யிகற்படை மான்றே ரோடு
பராபர னுதவித் தூண்டப் பன்னிரு புயத்த னேகித்
தராதலம் புக்கு வெற்பைத் தாரக னேடு செற்றுன்.

அவ்வாருக விரவி எங்கும் சிறக்கின்ற இலக்கத்து ஒன்பது வீரரை, இரண்டாயிரம் வெள்ளம் பூதங்களை, வலிமை மிக்க படைகளோடும், தேர்களோடும் சிவபிரான் உதவி, அசுரர் மேல் போர் செய்யச் செல்லும்படி தூண்டியருள பன்னிரு தோள்களை உடைய எம் முருகப்பிரான் சென்று, இப்பூமியில் வந்தருளிச் சேர்ந்து முதற்கண் கிரவுஞ்ச மலையைத் தாரகாசுரனேடு சேர அழித்தருளினர். 70

பூவினன் முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்தத்
தேவர்தங் கிரியின் வைகித் தென்றிசை நடந்து தாதை
மேவரு மிடங்கள் போற்றி மேதகு சேய்ஞல் நண்ணி
மூவிரு முகத்தன் முக்கண் முன்னவன் படையைப் பெற்றுன்.

தாமரை மலர்மேல் பிரமன் முதல் கடவுளர் யாவரும் வழிபட்டுத் தோத்திரம் செய்ய தேவகிரி என்னும் மலைத்தலத்தில் வீற்றிருந்தருளி பின்னர் தென் திசையாக தேர் மேலாக வழிக்கொண்டு வந்தருளி தந்தையாகிய சிவபிரான் வீற்றிருந்தருளும் இடங்கள் சென்று போற்றி பின்னர் மேன்மையான திருச் சேய்நல்லூர் என்னும் பதிக்கு வந்தருளி ஆறுமுகமுடைய எமது கடவுள், அங்கு மூன்று கண்களையுடைய எப்பொருட்கும் முன்னவராகிய சிவபிரானுடைய பாசுபதம் என்னும் படையைப் பெற்றார். 71

பரனருள் படையைப் பெற்றுப் பராசரன் சிறார்வந் தேத்தத்
திருவருள் புரிந்து சென்று செந்திலின் மேவிச் சூரன்
வரமொடு திருவுஞ் சீரும் வாசவன் குறையும் வானோர்
குரவனை வினவி யன்னோன் கூறவே குமரன் தேர்ந்தான்.

சிவபிரான் அருளிய படையைப் பெற்று பின்னர் பராசர முனிவருடைய மைந்தர் ஆறு பேர் வந்து வணக்கஞ் செய்ய அவர்கட்கு திருவருள் புரிந்து அங்கு நின்றும் சென்று திருச்செந்தூரில் பொருந்தியருளி அங்கு தேவ குருவான வியாழ பகவானிடம் சூராதியருடைய உற்பவம், வரம், செல்வம், சிறப்பு, சீர், இவைகளையும் இந்திர தேவனுடைய குறையையும் கேட்டருளி அவ்வாறு வியாழதேவன் கூறியருள எமது குமரக்கடவுள் அவற்றைத் தேர்ந்தருளினர். 72

அறத்தினை யுன்னி யைய னுடல்சேர் மொய்ம்பன் றன்னை
உறத்தகு மரபிற் றூண்டி யொன்னலன் கருத்தை யோர்ந்து
மறத்தொடு கடலுள் வீர மகேந்திரம் அணுகி யேதன்
புறத்துள தானை யோராற் சூர்கிளை பொன்றச் செற்று.

பின்னர் தருமத்தினை எம் முருகப்பிரான் உன்னி வலிமையுற்ற தோளைக் கொண்ட வீரவாகு தேவரை தூதுவன் என்ற முறையாக சூரன் மேல் விடுத்து, சூரனுடைய கருத்தை எம்பிரான் அறிந்தருளி உணர்ந்தே மிக்க கறுவுகொள் நெஞ்சமோடு வீர மகேந்திரம் சென்று தனது புறமாக சூழ்ந்து வந்த சேனையாலே சூரனின் கிளையாக உள்ள அனைவரையும் பொன்றச் செய்தருளினர். 73

சீயமா முகத்த னென்னுஞ் செருவலான் றனையு மட்டு
மாயையுந் திருவுஞ் சீரும் வரங்களும் பிறவு மாற்றி
ஆயிர விருநா லண்டத் தரசனுஞ் சூரன் றன்னை
ஏயெனு மளவில் வேலா லிருதுணி படுத்து நின்றான்.

சிங்கமுகமுடையவனான போர்வல்ல அசுரனையும் அழித்து, ஆயிரத்தெட்டு அண்டங்கட்கும் அரசனான சூரபன்மனுடைய மாயையையும், வீரச் செல்வத்தையும், சீரையும், வரங்களையும் பிறவற்றையும் மாற்றி, அவனை ஒரு நொடிப்பொழுதிலே தமது வேற்படையால் எம்பிரான் இரு துணியாக பிளந்து நின்றார். 74

துணிபடு சூர ஞேர்பால் சூட்டுவா ரணமா யோர்பால்
பிணிமுக மாகி நிற்பப் பெருந்தகை அவற்றை யூர்தி
அணிபடு துவச மாக்கி அப்பகல் செந்தில் வந்து
மணிசொரி யருவி தூங்கும் வான்பரங் குன்றஞ் சேர்ந்தான்.

துணிபட்ட சூரனுடைய இரு பிளவுகளும் இப்போ சேவலொன்றும் மயிலொன்று மாக இருவடிவங்கொளஉம் பெருந்தகையாகிய எம்பிரான் அவற்றில் மயிலை வாகன மாகவும், சேவலை அழகான கொடியாகவும் ஆகும்படி ஆக்கியருளி, அப்பகலே திருச் செந்தூருக்கு மீண்டு வந்து அங்கு நின்றும் நீங்கி மணிகள் சொரிகின்ற மிக உயர் வான திருப்பரங்குன்றைச் சேர்ந்தார். 75

தெய்வத யானை யென்னுஞ் சீர்கெழு மடந்தை தன்னை
அவ்விடை வதுவை யாற்றி அங்ஙனஞ் சிலநாள் வைகி
மெய்விய னுலகிற் சென்று விண்ணவர்க் கரச ஞக்கி
எவ்வமில் மகுடஞ் சூட்டி இந்திரன் றன்னை வைத்தான்.

திருப்பரங்குன்றத்திலே தெய்வத யானை என்னும் சீர்பெற்ற பெண்ணுகிய எமது அன்னையைத் திருமணம் செய்து அங்ஙனம் சில நாள் வைகி பின்னர் உண்மையான தேவ உலகம் சென்று அங்கு தேவர்க்கு அரசனுகப் பழையபடி இந்திர தேவனுக்கு அழகான முடியைச் சூட்டி தேவ உலக அரசனுக ஆக்கி வைத்தருளினுர். 76

சில்பக லங்கண் மேவிச் சேனையோ டணங்குந் தானும்
மல்லலங் கயிலை யேகி மங்கைபங் குடைய வண்ணல்
மெல்லடி வணங்கிக் கந்த வெற்புறை நகரி னேகி
எல்லையி லருளால் வைகித் தணிகையில் எந்தை வந்தான்.

சில பகல் தேவ உலகத்திலே எம்பெருமான் வீற்றிருந்தருளி சேனையும், தெய்வ நாயகியாரும் தாமுமாக ஓர் பகல் திருக்கைலாய மலைசென்று பெண்ணொருபாகராகிய தமது தந்தையின் திரு மலரடிகளை வணக்கஞ்செய்து பின்னர் எம் முருகப்பெருமான் தமது அன்றும் என்றும் உள்ள உறைவிடமாகிய கந்த வெற்பு எனும் மலைநகரில் மேவி எல்லையற்ற திருவருளோடும் பொலிந்தருளி பின்னர் திருத்தணிகை மலையில் எம் பிரான் வந்தருளினுர். 77

சாரிலி ஞேங்கு தெய்வத் தணிகைமால் வரையின்மீது
வீரம துடைய வேலோன் வீற்றிருந் திடலு மங்கண்
நாரதன் வந்து தாழ்ந்து நவைதவி ரெயின மாதின்
சீரெழில் நலத்தைக் கூற அவள்வயிற் சிந்தை வைத்தான்.

சாரலில், சிறப்பில், அழகில் ஓங்கிய தெய்வீக உறைவிடமான திருத்தணிகை மலையின் மேலாக வீரமதுடைய வேலவர் வீற்றிருந்தருளும்போது நாரதமுனிவன் அங்கு சென்று பெருமானைத் தாழ்ந்து குற்றம் தவிர்ந்த சிறப்புடைய வேடப்பெண்ணாகிய வள்ளியம்மையாரின் சீர் எழில், நலப் பொலிவு யாவும் எடுத்துக் கூறியருள வள்ளி நாயகியம்மையாரிடத்து எம் பிரான் சிந்தை வைத்தார். 78

**வள்ளிமால் வரையிற் போந்து மானிடைப் பிறந்த தெய்வக்**
**கிள்ளையை யடைந்து போற்றிக் கேடில்பல் லுருவங் காட்டிக்**
**கள்ளமோ டொழுகிப் பன்னாட் கவர்ந்தனன் கொணர்ந்து பின்னர்த்**
**தெள்ளுசீர் வேடர் நல்கத் திருமணஞ் செய்து சேர்ந்தான்.**

வள்ளி மலையினிடத்தே எம் பிரான் சென்றருளி மான் வயிற்றிற் பிறந்த தெய்வப் பிள்ளையாகிய வள்ளி நாயகியாரை அடைந்து போற்றுதல்செய்து கேடில்லாத தமது பல அருள் வடிவங்களைக் காட்டி, பல நாளாக அவவோடும் கள்ளொழுக்கம் எனப்படும் தமது அகத்துறை அருட் செயலைக் காண்பித்துப் பின்னர் ஒரு நாள் அவவைக் களவாகக் கூட்டிச் சென்றுவிட, அதை உணர்ந்த வேடர் வேண்டித் திருமணம் செய்து கொடுப்ப வள்ளி நாயகியாரைத் திருமணம் செய்து அவவோடும் அருளால் சேர்ந்தான். 79

**செருத்தணி வரையில் வந்து சிலபகல் வள்ளி தன்னோ**
**டருத்தியின் மேவிப் பின்னர் அவளொடுங் கந்த வெற்பின்**
**வரைத்தனிக் கோயில் புக்கு வானமின் பிரிவு நீக்கிக்**
**கருத்துற இருவ ரோடுங் கலந்துவீற் றிருந்தான் கந்தன்.**

பின்னர் தமது செருவாகிய சிந்தை தணிந்த இடமெனும் திருத்தணிகை மலை மேலாக வள்ளி நாயகியாரோடும் அன்பினால் சிலநாள் வாழ்ந்து பின்னர் வள்ளி நாயகியாரோடு கந்தவெற்பினிடத்துச் சென்றருளி தனது மலைகளிற் சிறந்த கோவிலைச் சேர்ந்து தேவநாயகியாகிய தெய்வநாயகியாருக்கு, தமது பிரிவினால் ஏற்பட்ட அவரின் வருத்தத்தை நீக்கியருளி, கருத்தொன்ற வள்ளி, தெய்வநாயகியார் இருவரோடும் கலந்து எம் ஆறுமுகப்பிரான் வீற்றிருந்தருளினார். 80

**என்றிவை யனைத்துஞ் சூதன் இயம்பலும் முனிவர் கேளாத்**
**துன்றிய மகிழ்வாற் சென்னி துளக்கியிங் கிதனைப் போல**
**ஒன்றொரு கதையுங் கேளேம் உரைத்தனை சுருக்கி யாங்கள்**
**நன்றிதன் அகலங் கேட்க நனிபெருங் காதல் கொண்டேம்,**

என்று இவை அனைத்தையும் சூத முனிவன் எடுத்து இயம்புதலும், இதனை நைமிசாரணியத்திடத்து இருந்த முனிவர் கேட்டருளி எல்லாரும் தமது தலையை மகிழ்வால் அசைத்து, ஆனந்தமாகிச் சொல்லுகிறுர்கள்: சூதமுனிவர் பிரானே! நாம் கேட்ட பலவற்றுள்ளும் இதைப்போல அற்புதமான கதையை இறுகாறும் கேட்டிலோம். இப்போது இதைத் தேவரீர் சுருக்கிச் சொல்லி விட்டீர். ஆகையால் தயைகூர்ந்து இதன் நல்ல விரிவைக் கேட்க மிகவும் பெரிதும் காதல் கொண்டோம். 81

**என்னவே முனிவ ராஞேர் யாவரு மெடுத்துக் கூற**
**மன்னிய வருள்சேர் சூதன் மற்றவ ரார்வம் நோக்கி**
**அன்னவை சுருக்க மின்றி அறைந்தனன் அவ்வா ரூேர்ந்து**
**தொன்னெறி வழாதி யானுய் வல்லவா தொகுத்துச் சொல்வேன்.**

என்று முனிவர் யாவரும் எடுத்துச் சொல்ல, எம்பிரானுடைய கதையின் விரிவு கேட்கும் ஆர்வத்தை உணர்ந்து எமது அருள் சேர்ந்த சூத முனிவன், அம் முனிவர்க்கு சுருக்கமில்லாது எம்பிரானுடைய சரிதையை விரிவாக அன்று சொல்லியருளினுர். அவ்வாறு அதை யானும் உணர்ந்து பழைய அவர் கூறிய நெறி வழுவாமல் யான் அறிந்த அளவில் இப்புராணத்தைக் கூறுகின்றேன். 82

பாயிரப் படலம் முற்றிற்று.

**ஆகத் திருவிருத்தம் - 352.**



சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, யாழ்ப்பாணம். J. 288-72.

113

உ

திருச்சிற்றம்பலம்

முதலாவது

# உற்பத்தி காண்டம்

## 1. திருக்கைலாசப் படலம்

பாசம் நீக்கித்தன் பாற்படு நல்லருள்
ஈசன் நல்கு மியல்பென வெய்தினோர்
தேசு மாற்றிச் சிறந்ததன் மெய்யொளி
வீசு கின்றது வெள்ளியங் குன்றமே.

பாசங்கள் யாவற்றையும் நீங்கும்படியாக தனது அடியார்களுக்கு ஈசன் அருள் செய்து தனது பேரருளைப் பாசங்களினின்றும் நீங்கிய அடியாரிடத்து கொடுத்தல் போலும், இயல்பாக தன்னிடத்துச் சென்று சேர்கின்ற எத்திறத்தாருடைய இயல்பான வடிவங்களின் பிரகாசத்தை, யாவற்றையும் மாற்றிக் கொண்டு சிறப்பான தனது வெண்மையான ஒளியை எஞ்ஞான்றும் வீசிக்கொண்டு நிற்பது திருக்கைலாயமலை.

பாசம் நீக்கி ஈசனருள் செய்யும் இயல்பை மணிவாசகரும் இவ்வண்ணம் சொல்கிறார்.

பாசவேர் அறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா பற்றெனக் கருளி
பூசனை யுவந்து சிந்தையிற் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே. 1

ஆறு சூடிய வாதியம் பண்ணவன்
ஏறு மூரிவெள் ளேறுமக் கண்ணுதல்
நீறு சேர்தரு கோலமும் நித்தனைத்
தேறும் அன்பர்தஞ் சிந்தையும் போன்றதே.

கங்கை நதியை சடைமேல் அணிந்தருளிய சிவபிரான் எழுந்தருளி வருகின்ற வலிமைமிக்க வெள்ளை இடபமும், இன்னும் நெற்றிக் கண்ணினையுடைய பெருமானின் திருநீறு அணிந்து பொலிகின்ற திருமேனிக் கோலமும், இனி எஞ்ஞான்றும் நித்தியப் பொருளாய் விளங்கும் எம் ஈசனையே உணர்ந்து தேறிக்கொண்ட அன்பர்களது சிந்தையையும் போல விளங்குவது திருக்கைலாய மலை.

சிவபிரானுடைய வாகனம் இடபம் வெள்ளை, அவர் திருநீறணிந்த திருமேனி வெள்ளை, அவரை உணர்கின்ற அன்பர் இயல்பாகவே கள்ளம் கபடம் அற்றமையால் அவர்களின் சிந்தையும் வெள்ளை, ஆகவே இவைபோல கைலைமலையும் வெள்ளை.

வெள்ளைக்கில்லை கள்ளமும் கபடும். 2

மோன நன்னிலை முற்றிய பெற்றியர்
ஞான மார்பிழம் பன்ன நலத்ததாய்
ஊனு லாய வுயிர்த்தொகை மாசொரீஇத்
தானெ லாஞ்செறிந் தென்னவுஞ் சான்றதே.

மௌனம் என்னும் நல்நிலை முற்றப்பெற்ற தன்மையுடைய ஞானிகளது ஞான சொரூபமானது எப்படியோ அவ்வாறு நன்மையை யாவருக்கும் பயக்கும்படியான நலமுடைய ஊனுலாகிய உடம்பில் வாழும் உயிர்கட்கெல்லாம் எஞ்ஞான்றும் தொடர்ந்து சேர்ந்து பொலிவெய்தும் குறைகள், மாசுகளை நீக்கிக்கொண்டு தான் எல்லாவிடமும் செறிந்துள்ளது என்னும் நலமும் உடையது கைலைமலை.

ஞான நிலையெய்திய மகான்களை அடைந்தால் அடைவாரின் தீங்குகள் யாவும் நீங்கும். இதே போல கைலைமலையும் அனைத்து உயிர்களின் மாசிருளை நீக்கும்பொருட்டு எங்கும் தனது வெண்மை ஒளியினைப் பரப்பி யாண்டும் செறிந்துள்ளது போலவும் ஆயிற்று.

நன்ருக மூலத்தின் தீயைமூட்டி நற்பொருளை
உண்டு பண்ணி நயந்த பேர்க்கு
அன்ருடு செய்தவினை பிறவித் துன்பம் அறுக்கலாம்
ஞானமெனும் அரத்தினுலே.

எனவரும் திருநாவுக்கரசு சுவாமிகள் வாக்கையும் நோக்குக. 3

கான மார்ந்த கடுக்கைநற் கூவிளைத்
தேன வாம்பொழிற் றிண்சிக ரத்திடை
வான யாறு வருதலின் மாசிலா
ஞான நாயகன் போல நணியதே.

நெருங்கிய காடுபோலும் அடர்ந்த கொன்றை மரமும், நல்ல வில்வமரமும், தேன் சொரியும் சோலைகளும், தனது முடி மீதாக பொருந்தவும், ஆகாய கங்கை இதன் மேலாக பிரவாகித்து ஓடவும், கைலைமலை பொலிதலினுலே இம்மலை கொன்றையும், வில்வமும், கங்கையும் முடிமேல் அணிந்த ஞானநாயகராகிய சிவபிரானைப் போலவும் பொலிந்து காணப்படுகின்றது. 4

தண்ண றுந்துள வாற்புனை தார்முடிப்
பண்ண வன்கண் படுத்திடு பாற்கடல்
கண்ணு தற்குமோர் காமரு பீடமாய்
நண்ணு கின்றது போலும் நலத்ததே.

குளிர்வாக வளர்ந்த துளசிப் பூவினுல் பொலியும் திருமுடியுடைய விஷ்ணுபிரான் யோக நித்திரை புரிந்தருளுகின்ற பாற்கடலானது, நெற்றிக் கண்ணினையுடைய சிவ பெருமானுக்கும் ஒரு அழகான பீடமாக வந்து அமருகின்றது போலவும் திருக்கைலாயமலை வெண்மை ஒளிபரப்பி விளங்குகின்றது. 5

பொதியு மின்னமு தோடு பொருந்துவ
கதிரின் மிக்க கறையறு காட்சிய
மதிய மாயிர கோடி மணந்துதாம்
உதய மானது போன்றதவ் வொண்கிரி.

பொதியப்பட்ட நல்ல இனிமையான அமுதத்தோடு பொருந்துவனவும் ஒளிவிளங்கும் படியாக மிகுந்த ஒளிக் கிரணங்களைப் பரப்பி அதனுல் வெண்மையான நிலா வெளிச்சத்தைத் தருகின்ற மேனியிலே கறுப்பில்லாத பூரண சந்திரர்கள் ஆயிரம் கோடியானவை சேர்ந்து ஒன்ருகத் திரண்டு ஒரு வடிவாகி உதயமானுல் எத்துணைச் சிறப்பாக இருக்குமோ அதுபோலவும் விளங்குகின்றது அந்த அருமையான திருக்கைலாய மலை. 6

நெற்றி மேனிமிர் கண்ணும் நிலாவொளிர்
பொற்ற டம்புய நான்கும் பொருந்துறப்
பெற்றெம் மானரு ளாற்பிரம் பொன்றுகைப்
பற்று நந்தி பரிவொடு காப்பது.

நெற்றிமேல் நிமிர்கின்ற கண்ணும் நிலாவெளிச்சம்போல சோதிவிட்டுப் பிரகாசிக்கும் பொன்போன்ற விசாலித்த நான்கு திருத்தோள்களும் பொருந்தி விளங்க, இடப வாகனராகிய எம்பெருமானுடைய அருளினலே பிரம்பொன்றைத் திருக்கையில் ஏந்தியவாறு நந்தியெம்பெருமான் பரிவோடும் காவல்புரியும் தன்மையுடையது திருக்கைலாய மலை. 7

புரந்த ரன்முத லாகிய புங்கவர்
வரம்பின் மாதவர் மாசறு காட்சியர்
நிரந்த பூத கணவர் நிரந்தரம்
பரிந்து போற்றிப் பயில்வதம் மால்வரை.

தேவஇந்திரன் முதலாகச் சொல்லப்படும் கடவுளர்களும், ஒழுக்க வரம்பினையுடைய கணக்கற்ற முனிவர்களும், குற்றங்கள் கடந்த சிவகாட்சிப் பேறுடையோரும் நிரை நிரையாக நின்று காவல் புரிகின்ற பூத கணங்களும், நித்தலும் உள்ளப் பரிவோடு போற்றி வணங்கும்படியாக விளங்குகின்றது அப்பெரிய திருக்கைலாயமலை. 8

மின்ன ரம்பைய ராடலும் விஞ்சையர்
கின்ன ரம்பயில் பாடலுங் கீழ்த்திசை
மன்ன ஞதியர் வாழ்த்துமவ் வானவர்
இன்னி யங்களும் எங்கணு மார்ப்பது.

மின்னல்போலும் ஒளிகொண்ட மேனியையுடைய தேவப் பெண்களது ஆடலும், விஞ்சையர்களுடைய வீணையோசையோடும் சேர்த்துப் பாடப்பெறுகின்ற பாடலும், கிழக்குத் திக்கிலே உள்ள மன்னவனுகிய இந்திரன் முதல் கடவுளரின் வாழ்த்தும், தேவர்களினது இனிய வாத்தியங்களும் எல்லாப் பக்கமும் ஆர்த்து ஓசை விளங்கும் படியாகவும் உள்ளது கைலைமலை. 9

## வேறு

கீணி லாவுறு முலகெலாம் நீங்கியே கீழ்போய்ச்
சேணி லாவுறு பதமெலா முருவிமீச் சென்று
மாணி லாவுறும் அண்டத்தின் அடிமுடி மருவத்
தாணு வாயுல கிறுதியின் நிற்பதச் சயிலம்.

கீழ்ப்பக்கமாக நிலாவி இருக்கும் உலகங்கள் எல்லாவற்றையும் கடந்து அதிகீழாகப் போயும் அப்பால் மேலாக விளங்கும் உலகங்கள் யாவற்றையும் ஊடுருவி இன்னும், இன்னும் மேலாகப் போயும் மாட்சிமையோடு நிலாவி நிற்கும் எல்லா அண்டங்களின் அடிமுடிகள் மருவும்படியாக ஓர் பெரிய சோதிப் பிழம்பாக நிற்பது அக் கைலாய மலை.

நெடிய விசும்பொடு கண்ணே போற்றி, நீள அகலம் உடையாய் போற்றி, அடியும் முடியும் இகலிற் போற்றி, அங்கு ஒன்று அறியாமை நின்ருய் போற்றி. எனும் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரக் கருத்துக்கள் இங்கு ஒப்பிடற்பாலன. 10

மாடு சூழ்தரு மேருவே யாதியாம் வரைகள்
பாடு சேரினு முலகெலா மழியினும் பரந்து
கூடு மண்டங்கள் குலையினுங் கொன்றைவே ணியன்போல்
கேடி லாமலே அமர்வது கயிலையங் கிரியே.

கைலை மலையின் பக்கராகச் சூழ்கின்ற மகாமேருமலை ஆதியாகச் சொல்லப்பட்ட மலைகள் தானும் அழிந்தாலும், உலகம் எல்லாம் அழியினும், பரந்து எங்கும் கூடிய அண்டங்கள் நிலை குலைந்தாலும், கொன்றை மலர் வேய்ந்த சடையினையுடைய சிவபிரானைப் போல் எக்காலமும் கேடில்லாது அமர்ந்து விளங்குவது கைலாயமலை. 11

நலம்வ ருங்கலை மதியமு மிரவியும் நாகர்
குலம்வ ருந்தனுக் குறையலா மற்றைய கோளும்
அலம ருஞ்சுடர் உடுக்களு மமரரும் பிறரும்
வலம்வ ரும்படி யிருப்பது கயிலைமால் வரையே.

உலகத்து உயிர்களுக்கு நலத்தைத் தருகின்ற நிலாக் கலைகளையுடைய சந்திர தேவனும், சூரியதேவனும், நாகர் குலம் என சொல்லப்பெறும் இராகு, கேதுக்களும் இவர்கள் அல்லாத ஏனைய செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கிரகங்களும், இன்னும் நிலையில்லாது திரிந்து செல்லும் ஒளிகொண்ட நட்சத்திரங்களும், தேவர்களும், பிறரும் வலம்வரும்படியாக இருப்பது கைலாயமாகிய பெரியமலை. 12

ஏற்றம் மேருவே யாதியாம் வரைகள்ஏழ் வகையால்
சாற்றும் நேமிகள் ஆழியங் கிரிபெருஞ் சலதி
நாற்றி சைக்கணும் நொச்சிபோற் சூழ்தர நடுவண்
வீற்றி ருப்பது கயிலையா கியதனி வெற்பு.

எல்லாவற்றிலும் உயர்ந்தது எனச் சொல்லப்படும் மகாமேருமலை முதலாகிய மலைகளும், ஏழு வகையாகச் சொல்லப்படும் ஏழு கடல்கள், சக்கரவாள மலையும், அதனைச் சூழ்ந்த புறவாழிச் சமுத்திரமும்ஆகிய இவைகள் யாவும் நான்கு திக்குகளிலும் மதிலைப் போல சூழ்ந்து நிற்ப அவற்றின் நடுவணாக வீற்றிருப்பது கைலையாகிய தனிமலை. 13

படியெ லாமுண்டும் ஏனமாய்த் தாங்கியும் பண்டோர்
அடியி னுலகப் படுத்தியு மிடந்துமுற் றருளும்
நெடிய மாயனு முலகிறு மெல்லையில் நிமலன்
வடிவ மேயெனக் காணுதற் கரியதவ் வரையே.

இப்பூமி எல்லாவற்றையும் முன்னர் உண்டும், பின்னர் தான் கொண்டருளிய பன்றி வடிவத்தின் கொம்பரிலே இப்பூமியைத் தாங்கியும், முன்னொரு காலத்து தனது ஓர் அடியால் பூமியை அளந்து அதனுள் அடக்கியும், பின்னர் இப்பூமியை இடர்ந்து ஊடுருவிச் சென்றும், இப்பூமியைக் காத்தருளிய நெடிய வடிவுடை நாராயணக்கடவுள் தானும், இந்த உலகமெல்லாம் அழிவுறும் காலத்தும் சிவபிரான் வடிவம் எப்படி ஒருவருக்கும் தென்படாது இருப்பதோ அதே போலத் தாமும் காண முடியாதபடி நிற்பது கைலையாகிய மலை.

எவ்வாறு ஈசனை யாவரும் காணமுடியாதோ அதேபோல உலகைக் காத்தருளிய நாராயணப்பெருமானும், உலகம் அழிவுறும் காலத்தும் அதன் இயல்பு காணமுடியாதபடி இருப்பது கைலைமலை. 14

## வேறு

அன்னதோர் கயிலை நாப்பண் அம்பொனின் சுடர்மேல் கொண்ட
நன்னெடுஞ் சிமயத் தோங்கல் நவையொரீஇ நண்ணிற் றென்னக்
கன்னியங் காப்பு மேவிக் கதிர்மணிக் கற்றை சுற்றப்
பொன்னெடுங் கோயி லொன்று பொலிவொடும் பொருந்திற் றன்றே.

அவ்வாறாகிய சிறப்பும், பெருமையும், தூய்மையும் நிறைந்த கைலைமலை நடுவணாக அழகான பொன்னாலாகிய சுடரைமேற்கொண்ட நல்ல நெடிய இமயமலை தனது குறைகள் நீங்கி பொருந்தியது எனச் சொல்லும்படியாக, நித்திய கன்னிகையாகிய துர்க்காதேவியின் காவல் பூணப்பெற்று, பிரகாசம்கொண்டு ஒளிவீசும் நவ இரத்தினங்களின் ஒளிகள் சூழ்ந்து பிரகாசிக்க, பொன்னாலாகிய நெடிய கோயிலொன்று பொலிவோடும் பொருந்திக் காணப்படுவது.

உலகில் இருப்பது இமயம் என்னும் மலை. இது பொன் மயமானது. இது உலகில் இருத்தலினால் உண்டாகிய தோஷங்களை நீக்கிக் கொண்டு கைலை மலைமேல் நடுவணாக பொருந்தி உற்றது எனும்படியாக, வெள்ளி மயமான கைலை மலைமேல் பொன்னினால் ஆகிய கோயில் ஒன்று பொருந்தி இருந்தது. 15

திணிகதிர் ஆரந் தன்னிற் சிறந்தவச் சிரத்திற் செக்கர்
மணிதனில் முழுநீ லத்தின் மற்றைய வெறுக்கை தன்னில்
பணிபட வருளாற் றூனே பலித்திடு சிகர மாதி
அணியினுக் கணியாய் மல்கும் ஆலயச் சூழ லெங்கும்.

குளிர்மை ஒளியை எங்கும் பரப்பும் முத்தியினுலும், சிறப்புற்ற வச்சிரத்தினுலும், சிவந்த இரத்தினத்தினுலும், முழு அழகுடைய நீல இரத்தினத்தினுலும் இன்னும் ஏனைய இரத்தினங்கள், வைரங்களாலும், இயல்பான பேரழகு பொருந்தி எவருடைய கையாலும் செய்யாதபடி தாஞகவே அருளால் தோன்றி விளங்குகின்ற நல்ல கோபுர சிகரங்கள் பல அழகுக்கு அழகாகப் பொருந்தி விளங்கும்படியாக இம்மலைமேல் பல ஆலயங்கள் சூழ்ந்து அமைந்து விளங்குகின்றன. 16

**என்றுமீ றென்ப தின்றி யிருந்திடுங் கயிலை வெற்பிற்**
**பொன்றிகழ் நகரந் தன்னுட் பொருவிலாக் கோளும் நாளுந்**
**துன்றிய தன்மைத் தென்னத் தூமணிக் கதிர்கள் சூழ**
**மன்றம ருறையு ளொன்று வனப்பொடு வைகிற் றன்றே.**

என்றும் முடிவென்பது இல்லாதிருக்கின்ற கைலாய மலைமேலாக பொருந்திக் காணப்படும் பொன்மயமான ஆலயங்கள் பொருந்திய நகரம், அதன் இடத்து நடுவ ஞக நிகரற்ற ஒளியினையுடைய கிரகங்களும், நட்சத்திரங்களும் சேர்ந்து வந்து பொருந்தியதென்னும் படியாக அழகான நவ இரத்தினங்களின் ஒளிகள் சிறந்து மின் னிச் சூழ அழகான திருச்சபை ஒன்று பொருந்தியது. 17

## வேறு

**சோதி சேருமத் தூமணி மண்டபத்**
**தாதி யான அரியணை யும்பரிற்**
**காத லாகுங் கவுரியொர் பாங்குற**
**வேத நாயகன் வீற்றிருந் தானரோ.**

சோதி சேருகின்ற அந்த தூய்மையான இரத்தின மண்டபத்து ஆதியாய் விளங் குகின்ற அழகான ஓர் சிம்மாசனத்தின் மீது எங்கள் நாயகராகிய சிவபிரானிடத்துக் காதலாகிய கௌரி அம்பாள் ஓர் பக்கராகப் பொருந்தியமர வேதங்களுக்கு நாயக ராகிய உயிர்க்குயிராகிய ஈசன் வீற்றிருந்தருளினுர். 18

**பீடு கொண்ட பெருந்தவப் பெற்றியோர்**
**தேடு கின்ற சிறப்புடைத் தாம்புகழ்**
**நாடு தும்புரு நாரதர் விஞ்சையர்**
**பாடு கின்றனர் பாணியின் பாற்பட.**

பெருமைகொண்ட பெருந்தவத்தினை நித்தலும் செய்கின்ற பெருமையான முனி வர் தேடி ஆராய்கின்ற பொருளாகிய சிவபிரானுடைய சிறப்புடைத்தாகிய புகழி னையே பாடுகின்ற நாட்டம் கொண்ட தும்புருவர்கள், நாரதர், விஞ்சையர் கள் யாவரும் பாடுகின்ருர்கள். எம்பிரானது புகழை இவர்கள் பாடும் தோறும் இசைக்கேற்ற முறை அமையுமாறு பாடுகின்றனர். இவர்கள் இசை இயல்பாகவே இனிமையானது. கந்தருவ ஓசையென யாவராலும் விரும்பி கேட்கப்படுவது. 19

**அதிகன் வேணியி லார்தரு கங்கையை**
**விதிபு ரந்தரன் விண்டுல கத்துள**
**நதிக டாழ்ந்தென நன்னயத் தேவல்செய்**
**கதியி னோர்கள் கவரிகள் வீசினர்.**

எல்லாவற்றையும் கடந்து விளங்கும் சிவபெருமானின் திருச்சடைமேலாக ஆர்ந்து விளங்கிப் பொலியும் கங்கை நீரை பிரமதேவருடைய உலகத்து, விஷ்ணுவினுடைய உலகத்து உள்ள கங்கைகள் வந்து தாழ்ந்தன எனும் படியாக எம்பிரானுக்கு நல்ல புண்ணிய வினைவினாலே ஏவல் செய்யும் பாக்கியம்பெற்ற நற்கதியுடைய தேவாதி தேவர்கள் வெண்சாமரை வீசுகிறார்கள்.

சுவாமியின் பக்கராக இவர்கள் நின்று வெண்சாமரை வீசும் தன்மையானது, அச்சாமரைகள் மேலும் கீழுமாக அசையும்தோறும் காணப்படும் காட்சி சிவபிரானுடைய சடைமேல் இருக்கும் கங்கையை மற்றைய உலகில் இருக்கும் கங்கைகள் வந்து தாழ்ந்தனபோல இருப்பது. 20

**சீல வட்ட முடிப்பிறை தேடுவான்**
**ஞால வட்டத் தெழுதரு நாகர்போல்**
**ஏல வட்ட முகத்தரு கெங்கணும்**
**ஆல வட்ட மசைத்தனர் அன்பினோர்.**

பாம்புக்கு பகை சந்திரன், ஆகவே தமது பகையாகிய சந்திரன் சிவபிரானின் சீலமிக்க வட்டமான திருச்சடைமேல் பொலிகின்றான். அந்தச் சந்திரனைத் தேடி கண்டுகொள்வோம் என பாம்புகள் பூமிமேல் எழுந்து தமது படத்தை விரித்து வால் நுனியின் மேலெழுந்து நின்றால் எப்படியோ அவ்வண்ணமே வட்டவடிவாகி அருளாகி விளங்கும் எம்பிரானாருடைய திருமுகத்தின் பாங்கராக ஆலவட்டம் எனும் விசிறிகளை அசைத்தசைத்து எம்பிரானுக்கு விசிறியவாறு தேவாதி தேவர்கள் காணப்படுகிறார்கள். 21

**ஆதி தன்னரு ளெய்தி அவன்றிருப்**
**பாத தாமரை சூடியப் பண்ணவன்**
**கோதி லாத திருவுருக் கொண்டுளோர்**
**பூத ராதியர் போற்றிமுன் ஈண்டினர்.**

ஆதியாகிய பெருமானைப் பேணி அவருடைய திருவருள் பூண்டு அதனாலே அவரின் பாததாமரைகளை தமது முடிமேற் சூடியருளும் பேறுபெற்றமையால் எம்பிரானுடைய திருவுருவத்தைப் போலும் வடிவுகொண்ட சிவகணங்களாகிய பூதங்கள் யாவும் எம்பிரானை வணங்கியவாறு எம் ஐயர் பெருமானுடைய என்றும் நன்மைதரும் திருச்சந்நிதியிலே பொருந்தி நெருங்கி நின்றார்கள். 22

திருக்கைலாசப் படலம் முற்றிற்று.

**ஆகத் திருவிருத்தம் 374.**

120

## 2. பார்ப்பதிப் படலம்

அன்னுழி உமையவ ளகத்து ளோர்செயல்
உன்னினள் துணுக்கமுற் றெல்லைதா னெழீஇத்
தன்னிக ரில்லவன் தாளி றைஞ்சியே
முன்னுற நின்றிவை மொழிதல் மேயினள்.

அவ்வாறாகப் பொருந்திய நிலையில் எம்பெருமான் இடப்பாகத்து அமர்ந்தருளிய உமையம்மையார் தனது முன் நிகழ்ந்த ஒரு செயலை உன்னி நினைந்தாள். நினைத்த லும் திடுக்குற்று விரைவாக எழுந்து தனக்கு நிகரொருவரிலாத எம்பிரானைத் தாழ்ந்து, அவர் திருவடி மலர் முன்பாக இறைஞ்சினள் அம்பிகை. இறைஞ்சி முன் னாக நின்றவாறு எங்கள் பெருமானை நோக்கி எம் அன்னை ஈதொரு வார்த்தையை எம்பிரானுக்குச் சொல்வாள் ஆயினள். 1

கற்பனை முதலிய கடந்த கண்ணுதல்
தற்பர நினையிகழ் தக்கன் தன்னிடைப்
பற்பகல் வளர்ந்தவன் பயந்த மாதெனச்
சொற்படு நாமமுஞ் சுமந்து ளேனியான்.

கற்பனை முதலிய எத்துணைச் சிந்தனைசக்திக்கும் எட்டாதபடி யாவையும் கடந்து நின்றருளும் நெற்றிக்கண்ணை உடைய பகவானே! தேவரீரை இகழ்ந்து நிந்தனை செய்த பாவியாகிய தக்கன் என்பானின் மகளாகி யான் பற்பல நாட்கள் வளர்ந்துள்ளேன். அவன் மகளாகியமையால் தாட்சாயணி என்னும் பேரும் பூண்டேன். அவ்வாறாகத் தேவரீரை இகழ்ந்தானுடைய மகளாகிய தாட்சாயனி என்னும் பெயரைத் தாங்கி இருப்பது எனக்கு ஓர் பெரும் பாரச்சுமை போல இருக்கின்றது. 2

ஆங்கதோர் பெயரையு மவன்க ணெய்தியே
ஓங்கிநான் வளர்ந்தவிவ் வுடலந் தன்னையுந்
தாங்கினன் மேலவை தரித்தற் கஞ்சினேன்
நீங்குவ னவ்வகை பணித்தி நீயென்றாள்.

ஆனதன்மையினால் தாட்சாயனி என எனக்கு தக்கன்பால் உற்றமையால் உற்ற பெயரையும், தக்கனிடத்தில் மகளாகிச் சென்று மேலோங்கி வளர்ந்த இந்த உடலம் தன்னையும் இவ்வளவு காலமும் தாங்கி விட்டேன். இனிமேலும் இவற்றைத் தரித் திருக்கப் பெரிதும் பயம் எய்தினேன். ஆகையால் இவற்றை யான் நீங்குவன் அவ்வண்ணமே இவ்வுடலையும் என் பெயரையும் நீக்கியிடத் தேவரீர் பணித்தருள் வீராக என எம் அன்னை பிரார்த்தித்தருளினள். 3

மன்னுயி ராகிய மரபு முற்றவும்
முன்னுற அருளிய முதல்வி யன்பினால்
இன்னண மியம்பலு மிதனைத் தேர்ந்திடாத்
தன்னிக ரில்லதோர் தலைவன் கூறுவான்.

உலகில் விளங்கும் மேலான உயிர்களாகிய மரபுகள் யாவற்றையும் முன்னே உதவிய எம்பிராட்டி அன்பினுல் இவ்வாருக எம்பிரானுக்கு எடுத்துச் சொல்லலும்‘ இதனைத் தேர்ந்தருளிய தனக்கு நிகர் பிறரில்லாத எங்கள் பெருமான் எம்பிராட்டிக்குச் செப்பியருளுகின்ருர். 4

பத்திமை யெம்வயிற் பழுத்த பண்பினுற்
சத்தியே நின்னிகர் சகத்தி னில்லைநீ
இத்திறம் முயலுத லெல்லை தீர்ந்தநின்
புத்திரர் வீடுறு பொருட்டுப் போலுமால்.

பார்வதி தேவியே! என்னை இகழ்ந்த தக்கன் மகளாக வளர்ந்த உனது உடலத்தையும். தாட்சாயனி என்னும் பெயரையும் நீக்கிக் கொள்ள வேண்டும் என நீ எம்மை வேண்டிய தன்மை, என்மீது கொண்ட பத்திமையைக் காட்டுகிறது. ஆனமையால் சக்தியே உனது பத்திமை என்னிடத்து பழுத்து முதிர்ந்து நிற்கும் தன்மையினுல், இனி உனக்கு நிகராகப் பிறிது யாரும் இல்லை. இவ்வாருக நீ முயன்று நிற்றலும் உன் புத்திரர்களாகிய உயிர்கள் முத்தி இன்பம் அடையும் பொருட்டாகவே ஆகும் போலும். 5

நற்றிற மேயிது நங்கை சிந்தனை
முற்றிய வேண்டுமேல் மொழிதும் மேருவின்
சுற்றம தாகிய இமையத் தொல்வரைக்
கொற்றவன் புரிவனுற் கொடிய மாதவம்.

அம்மையே! இது ஒரு நல்ல செயல். உனது சிந்தையின் நினைந்தவை முற்றுப் பெற வேண்டுமெனில் அதற்காகிய வழியினை சொல்லுதும். அது யாதெனில் மகா மேரு மலையின் சுற்றம் எனக் கருதப்படும் இமயம் என்னும் மிகப் பழமையான மலைக்கு அரசனுகிய மலை அரசன் இப்போ கொடிய தவம் செய்கின்ருன். 6

ஏதவன் பெறத்தவ மியற்று மென்றியேன்
மாதுனை மகண்மையா மரபிற் போற்றியே
காதலொ டெமக்கருள் கருத்த தாகுமால்
ஆதலிற் குழவியாய் அவன்க ணெய்துநீ.

யாது பலனை விரும்பித் தவம் செய்கிருன் அம்மலை அரசன் என எம்மை நீ கேட்டால் உமையம்மையே உன்னை தனக்கு மகளாகப் பெற்று சிறந்த நன்மரபால் உன்னைப் போற்றி வளர்த்து பின்னர் எமக்கு காதலாக, உன்னை திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்னும் பெருவிருப்பம் ஆகும். ஆனதன்மையின் உமையே நீ குழந்தையாக வடிவு தாங்கி மலையரசன் பால் செல்வாயாக. 7

தளர்ந்துடல் மெலிவுறத் தவஞ்செய் வெற்பினுன்,
இளஞ்சிறு குழவியா யெய்தி மற்றவன்
உளங்களி கூரவாண் டோரைந் தின்றுணை
வளர்ந்தனை புரிதிமேல் மாசில் மாதவம்.

தனது உடலானது தளர்ந்து மெலிவுறும்படி தவஞ்செய்கின்ற மலையரசன்பால் பசுமையான இளஞ் சிறு குழந்தையாக எய்தி அவன்பால் வளர்ந்து சிறந்திருப்பாயாக. அவ்வாறு அருள் நிறைவாக வளர்ந்து அவன் உனது திருவுருவை நோக்கி உள்ளம் களிப்படைந்து, பேராந்தமுற வளர்ந்து ஐந்து வயது நிரம்புகின்ற காலத்து எம்மை நினைந்து, எக்காலத்தும் மாசு இல்லாது சிறக்கின்ற தவத்தைப் புரிவாயாக. 8

அணங்குநீ நோற்றுழி யகிலத் துள்ளதோர்
கணங்களுந் தலைவருங் கணிப்பில் தேவரும்
இணங்கினர் சூழ்தர வெய்தி நின்னையாம்
மணம்புரிந் தேகொடு வருது மீண்டெனு.

தெய்வப் பெண்ணே! நீ அவ்வாறு தவஞ்செய்யும் காலத்து நாம் எல்லா உலகங்களிலும் உற்றுள்ள கணங்களும், தலைவர்களும், அளவிடற்கரிய தேவர்களும் எம்மோடு இணங்கிச் சூழ்ந்துவர இமயத்தினிடைச் சார்ந்து உன்னைத் திருமணம் புரிந்து அழைத்து மீண்டும் இந்தக் கைலை மலை சார்வாம். 9

கடல்விட முண்டிடு கடவு ளித்திறம்
நடைமுறை யருளலும் நன்றெ னுமகிழ்ந்
தடியிணை வணங்கிநின் றன்பிற் போற்றியே
விடையது பெற்றனள் விமலை யேகினுள்.

கடலிலே தோன்றிய நஞ்சை உண்டருளிய எம்பிரான் இத்திறமாக எம்பிராட்டியின் வேண்டுதலுக்கு இயைபான இந்த வழிகளை வகுத்தருளுதலும் எம்பெருமாட்டி அதைக்கேட்டு நன்றென்று எம் ஐயர் பிரானுடைய திருவடி மலர்களில் தாழ்ந்து வணங்கி, எழுந்து அன்பினல் எம் சிவபிரானைப் போற்றி செய்து, எம்பிரானிடத்திலிருந்து இமயமலை செல்வதற்காகிய உத்தரவைப் பெற்றுக் கொண்டு எல்லா உயிர்க்கும் தாயாகிய அம்மையார் புறப்பட்டருளினுள். 10

அல்லலு முவகையு மன்பு மெம்பிரான்
எல்லையி லருளுமா யீண்டி முன்செல
மெல்லியல் உமையவள் வெள்ளி வெற்பொரீஇ
வல்லையின் இமையமால் வரையிற் போயினுள்.

எம்பெருமானை விட்டு நீங்கியமையால் ஏற்பட்டுள்ள அல்லலும் துயரும் அஃதல்லாமல் தாம் நினைத்தபடி தோஷமுற்ற தமது உடலமும் பெயரும் நீங்கவழி வந்ததே என்கின்ற பெரிய உள்ள மகிழ்ச்சியும், எம்பெருமானுடைய அன்பும், கருணையும், எல்லையற்ற அருளுமாக எங்கும் பெருகி ஓங்கி முன்னுகச் செல்லும்படி மெல்லிய இயல்பினையுடைய உமையம்மையார் வெள்ளி மயமான திருக்கைலாய மலையை விட்டு நீங்கியருளி, வெகு விரைவாக இமயமலையினிடத்து போயருளினுள். 11

வள்ளியன் கடகரி வடிவின் வீழ்தரு
துள்ளியம் பனிமழைச் சோனை சூழ்தலால்
எள்ளருந் தன்மைசேர் இமைய மால்வரை
வெள்ளியங் கிரியென விளங்கு கின்றதே.

ஓயாது பெருகுகின்ற மதநீரைச் சொரியும் யானையின் வடிவையொத்து வீழ்கின்ற பெரும் துளிகளைக் கொண்ட பனிமழை சோனையாகப் பொழிந்து சூழ்தலினுல் யாவராலும் இகழாது போற்றும்படியாகிய தன்மை சேர்ந்த இமயம் என்னும் இப் பெரிய மலையானது வெள்ளிமலை எனப்படும் கைலாயமலை போலக் காட்சி தருகிறது.

இங்கே இமயமலைத் தொடரில் ஓயாது பனிமழை பெய்தலால் இமயமலை எக் காலமும் பனியால் மூடப்பட்டு இருக்கும். ஆகவே பனிக்கட்டி உறைந்து காட்சி தரும் தன்மை வெண்மையான கைலைமலை போன்றது என்ருர். 12

எண்டகு மிமையமு மிமைய மேலுறு
கொண்டலு மொன்றியே குலவு காட்சிய
தெண்டிரை மிசையெழு நஞ்சுந் தீயநஞ்
சுண்டிடு மணிமிடற் றிறையு மொக்குமால்

இவ்வாருக பனிமூடியிருப்பத் தோன்றும் வெண்மை ஒளிகொண்ட இமய மலையும் அதன் மேலாகப் படிந்திருக்கின்ற முகிற் கூட்டமும் ஒருங்கே இணைந்து தோன்றுவதை உற்று அவதானித்தால் அது எவ்வாருக காணப்படுவதெனில் பாற்கடலிலே எழுந்த நஞ்சும், அந்தக் கொடிய நஞ்சினை உண்டருளிய நீல நிறங் கொண்டருளிய கண்டத்தையும் உடைய சிவபிரானைப் போலவும் ஒத்துக் காணப்படுவது.

பனி மூடுதலினுல் காணப்படும் இமயமலை பாற்கடலையும், மலைமேல் படிகின்ற முகில்கள் பாற்கடலிலெழுந்த நஞ்சு போலவும் அமைந்தது. ஆனுல் இவை இரண்டுமான மலையும், முகிலும் சேர்ந்த ஒரு வடிவைப் பார்த்தால் நீலகண்டமுடைய மகாதேவனைப் போலவும் அமைகிறது. 13

நீலுறு மழைமுகில் நிலவு மின்னெடு
மேலுற விளங்கிய இமைய வெற்பது
மாலவன் றிருவொடு மருவிக் கண்டுயில்
பாலுறு பன்னகப் பாயல் போன்றதே.

நீல நிறமுடைய கருமுகில்கள் தம்மிடத்து உள்ள மின்னலோடும் பொலிந்து தோன்றுகின்ற இயல்போடும், இம்மலை மேலாகப் படிந்து மின்னி விளங்கும் காட்சியோடும் பொலியும் இமயமலையானது, நாராயணக்கடவுள் மகாலட்சுமி தேவியோடும் பொருந்தி அனந்தன் என்னும் பாம்பின் மேலாக பாற்கடல் மேல் பள்ளி கொண்டருளும் காட்சியைப் போலவும் அமைகிறது.

பாற்கடல் வெள்ளை நிறமுடையது, அதன்மேல் பாம்பின் மீது நீலநிற மேனியை உடைய நாராயணப் பெருமான் மின்னலைப் போல பொன்மயமான மகாலட்சுமிதேவி மார்பிடத்துறைய அமரும் காட்சி பனிப்படலம் மூடிய இமய மலைமேல் முகில் மின்னலோடும் பொலிய இருப்பதால், அவருடைய அனந்த சயனக் காட்சியை ஒத்திருந்தது என்ருர். 14

கரும்புய லார்த்துறு காட்சித் தாகியே
இரும்பனி யிடையரு விமையப் பொன்வரை
சுரும்பின மிசையொடு துவன்றிச் சுற்றிட
அரும்பவி ழாதவெண் கமல மன்னதே.

இன்னமும் கரிய மேகங்கள் இடியோசையோடும் இரைந்து ஆர்த்தபடி இமய மலை மேலாக விளங்குகின்ற காட்சியோடும், ஓயாத பனி வீழ்ச்சியினுல் வெண்மை ஒளிப் பொலிவோடும் சிறக்கின்ற இமய மலை, கரிய தேன் வண்டுகள் ஓயாது இரைந்து வட்டமிட்டுச் சூழ்ந்து முரல, அழகான ஒரு வெள்ளைத் தாமரைப் பூப் பொலிகின்ற காட்சி போலவும் அமைகிறது. 15

**நீடிய மண்மகள் நிதியின் குப்பையைப்**
**பாடுறு தண்ணிலாப் படாம தொன்றினுன்**
**மூடினள் வைத்திடு முறைய தேயெனக்**
**கோடுயர் பனிகொள்பொற் குன்றம் நின்றதே.**

நெடிதாகப் பரந்து விளங்கும் இப் பூமிதேவியானவள் தன்னுடைய தோட்டங்களாகிய செல்வப் பொருள்களையெல்லாம் பக்குவப்படுத்தும் பொருட்டாக ஒரு குளிர்மை வாய்ந்த நிலாவைப் போலும், ஓர் போர்வை வஸ்திரத்தினுல் மூடி, அழகிய ஒரு பொற் பாத்திரத்தில் இட்டு வைத்திருக்கிருள் என்று சொல்லும்படியாகவும் அமைந்துள்ளது. 16

**பொன்னெடுங் கிரியென வீண்டும் புங்கவர்**
**துன்னினர் சூழ்வரென் றுன்னித் தொன்மனு**
**அன்னதை மறைத்தனன் இரதத் தாவியால்**
**என்னவும் நின்றதால் இமையப் பொன்வரை.**

இந்த இமய மலையை, இது பொன்னுகத் தோன்றும் காட்சியினுலே அசுரர்களுக்கு அஞ்சி பொன் மயமான மகாமேரு மலையில் ஓடி ஒளித்துக் கொள்கின்ற தேவர்கள் இந்த இமய மலையும் பொன் பிரகாசமுடையதலாலே இதனையும் மேரு மலையென எண்ணி இங்கும் வந்து கூடுவார்கள், அது தொந்தரவாகும் என எண்ணி எவர்க்கும் முன்னுன மனுச் சக்கரவர்த்தி இதை இரதத்தின் ஆவியினுல் மறைத்து, இமயத்தின் பொன்மயத்தை வெள்ளி மயமாக்கினுனே ஆனபடியால் தான் இது வெண்மையாக தோன்றுகிறது எனச் சொல்லும்படியாகவும் இருக்கிறது. 17

**குடகடல் குணகடல் கூடு ருவகை**
**இடையொரு வாலிதாம் ஏன மெய்தியே**
**தடைபுரி சிறப்பென இமையத் தாழ்வரை**
**நெடுநில வளவையும் நிமிர்ந்து போயதே.**

இன்னும் மேற்கே உள்ள கடலும், கிழக்கே உள்ள கடலும் கூடுருத வகை, இது இரண்டுக்கும் இடையாகக் காவலாக ஒரு வெள்ளைப் பன்றி வந்து நின்று, இரண்டு கடலும் கூடி உலகை அழிக்காதபடி தடை புரிகின்ற சிறந்த செயல்தான் இது என்னும்படியாகவும் இமயமாகிய தாழ்ந்த மலை நெடுநிலத்தின் பெரும் அளவையும் கடந்து நிமிர்ந்து போயது.

விண்ணவர் ததிக்கடல் கடைந்த வெண்ணெயுள்
அண்ணலம் பாற்கட லமுதம் வைத்தெனக்
கண்ணகன் பெரும்பனி கவைஇய வெற்பின்மேல்
உண்ணிறை புனற்றட மொன்று வைகிற்றே.

தேவர்கள் தயிர்க்கடலைக் கடைந்து எடுத்துக் கொண்ட வெண்ணைத் திரட்சியுள்ளே மேலாகிய பாற்கடலைக் கடைந்த அமுதத்தை வைத்தது எனும்படியாக பார்த்த இடமெல்லாம் பரந்து தோன்றும் பனிப்படலம் மூடிய இமயமலைத் தொடரிடத்தின் மேல் உள்ளே நீர் நிறைந்த மானசசரோருவம் என்னும் தடாகம் ஒன்று இருந்தருளியது. 19

அன்னதோர் தடத்திடை அசல மன்னவன்
மன்னிய கௌரிதன் மகண்மை யாகவுந்
தன்னிக ரிலாவரன் றனக்கு நல்கவும்
முன்னுற வருந்தவம் முயன்று வைகினன்.

அவ்வாறாகிய மானச சரோருவம் என்னும் தடாகத்தினிடையே மலை அரசனானவன் உலக முதல்வியாகிய கௌரி அம்பாள் தனது மகளாகவும், பின்னர் அவளை வளர்க்கும் பேறுகொண்டு, பிராட்டி வளர்ந்த பின்னர் தனக்கு நிகரில்லாத சிவபிரானுக்குத் தான் திருமணம் செய்து கொடுக்கும்படியாகவும் முன்னே அரிய தவத்தை முயன்று கொண்டு அந்தத் தடாகத்தின் கரையில் இருந்தருளினன். 20

மெய்த்தவ மியற்றிய வெற்பன் காணிய
அத்தட மலருமோ ரரவிந் தத்தின்மேற்
பைத்ததோர் குழவியின் படிவத் துற்றனள்
எத்திறத் துயிரையு மீன்ற தொன்மையாள்.

இவ்வாறு எந்நிலையிலும் சலிப்புறாது தவஞ் செய்திருக்கின்ற மலையரசன் காணும்படியாக அந்த மானச சரோருவமென்னும் குளத்தில் மலர்ந்து விளங்குகின்ற ஓர் அழகான தாமரை மலர் மேலாக பசுமையான ஓர் அழகிய பெண்குழந்தை வடிவாகத் தோன்றி வீற்றிருந்தருளினள் எத்திறத்து உயிரையும் தாமே பெற்றருளிய எமது தாயானவள்.

உலகத்தின் அனைத்து உயிர்க்கும் தாயானவள், ஒருவன் மகளாகும்படி குழந்தை வடிவாகத் தாமரைப்பூ மேல் அமர்ந்திருந்தருளினள். 21

## வேறு

ஆங்கவட் கண்டு வெற்பன் அடியனேன் பொருட்டா லம்மை
நீங்கினள் போலும் முக்க ணிருமலன் றன்னை யென்னா
ஏங்கினன் றனது நோன்புக் கிரங்கின னிவைக ளீசன்
ஓங்குபே ரருளே யென்னா வுவகையங் கடலுட் பட்டான்.

ஆங்கு அவ்வாறாகிய எம்பிராட்டியைக் கண்டான் மலை அரசன். கண்டபோதே அம்மவோ! அடியேன் பொருட்டாக எமது தாயானவள் மூன்று கண்ணினை உடைய நின்மலப் பொருளாகிய ஈசனை எந்தையை நீங்கி இங்கு வந்துள்ளாள் போலும்

என்றான். தான் செய்த தவத்திற்காக நீங்காத இறைவனை விட்டு பிராட்டி நீங்கினாளே எனப் பெரிதும் துயரமாகி ஏங்கினான். நான் ஏன் அப்படித் தவம் செய்தேன் என நொந்து இரங்கினான். இப்படியும் ஈசனுடைய பேரருள் ஓங்கிப் பெருகியதோ எனக் கூறி எல்லையற்ற ஆனந்தம் என்னும் கடலிலே மூழ்கி, மகிழ்வாலே தன்னையும் மறந்தான். 22

கண்ணுறு போத வாரி கான்றிட வுரோம ராசி
உண்ணிக ழன்பு மிக்குப் புறந்தனி லொழுகிற் றென்ன
வண்ணன்மெய் பொடிப்பத் துள்ளி அடியனே னுய்ந்தே னென்னாத்
துண்ணெனப் பாடி யாடி யமலையைத் தொழுது நின்றான்.

தாமரை மலர்மேல் இருக்கும் குழந்தையான எம்பிராட்டியைக் காணுந்தோறும் கண்களிலிருந்து ஞான மயமான கண்ணீர்த் துளிகள் அரும்பிப் பெருக, உரோமங்கள் யாவும், உள்ளே நிறைந்த அன்பு பொங்கிப் பெருகி மிகுந்து புறத்தேயும் ஒழுகித் தோன்றியது எனும்படியாக பொன் வண்ணமான அவனது மேனி பொடித்து, சிலிர்ப்ப துள்ளினான். அடியேன் நான் உய்ந்தேன் என்றான். திடீரென எழுந்து ஆடினான், பாடினான்: அமலையாய், ஞான முதல்வியாய் இருக்கும் எமது பிராட்டியைத் தொழுதபடி நின்றான். 23

பங்கயத் தவிசின் வைகும் பராபரை தனைத்த னாது
செங்கையி னெடுத்து வல்லே சென்னிமேற் றாங்கி யேகித்
துங்கநல் லிமையத் தண்ணல் தொன்முறை யிருக்கை புக்கு
மங்கல மேனை யென்னு மனைவிகைக் கொடுத்தான் மாதோ.

தாமரை மலர் மேலாக வைகியருளிய பராபரையாகிய எமது தாயை தமது செங்கையால் மலையரசன் எடுத்துக் கொண்டு தனது தலைமேலாக பெருமாட்டியைத் தாங்கிக் கொண்டு சென்று, மிகவும் மேம்பாடான இமயமலை அரசன் தனது தேவியாகிய மேனை என்னும் மங்கலம் நிறைந்த மனைவி கையில், எம் ஈஸ்வரியாகிய குழந்தையைக் கொடுத்தருளினான். 24

கொடுத்தலுந் தொழுது வாங்கிக் கொற்றவ இவணின் பாங்கர்
அடுத்ததங் கெவனோ வென்ன அரசனும் நிகழ்ந்த வெல்லாம்
எடுத்துரை செய்யக் கேளா வீசன தருளோ வென்னா
வடுத்தவிர் கற்பின் மேனை மனமுற மகிழ்ச்சி கொண்டாள்.

மலை அரசன் உலக முதல்வியாகிய பிராட்டியைக் கொடுத்தலும் தொழுது வாங்கினாள் மேனை. வாங்கியபின் கணவனைப் பார்த்து மேனை ''அரசனே! இக்குழந்தை தங்களிடத்து எவ்வாறு வந்தது?'' எனக் கேட்ப, மலையரசன் சொல்வான், ''பெண்ணே! நான் உலக முதல்வியாகிய இவளை எனது மகளாக ஆகும்படி வேண்டித் தவம் கிடந்தேன். தவம் கிடந்தேற்கு எம்பிரான் அருளால் இவள் நான் தவம் செய்திருந்த குளத்தில், தாமரை மலர் மேல் குழந்தையாக இருக்கக் கண்டு, தொழுது, ஆனந்தத்தோடும் கொணர்ந்தேன்'' என நிகழ்ந்தனவெல்லாம் கூறக் கேட்ட எம் மேனை, ''நாதனே! இவள் ஈசனது அருளா? என எல்லையற்ற மகிழ்வாகி, தன் கரத்தில் ஏந்திய எம்பிராட்டியை நோக்கி மனத்தில் பெரிதும் உவகை கொண்டாள். 25

சுரந்தன கொங்கை பாலுந் துண்ணெண வொழுகிற் றெங்கும்
பரந்தன பொடிப்பின் போர்வை பரைதன தருளே யுள்ளம்
நிரந்தன கவலை யாவும் நீங்கின பவமுன் னுள்ள
கரந்தன விமையத் தண்ணல் காதலி தனக்கு மாதோ.

இந்நேரத்து மேனை ஈசன் திருவருளினால் தானே அக்குழந்தையைப் பெற்றவள் போலாகிய தன்மையை எய்தியவளாய் அவளின் தனங்கள் பொங்கிப் பாலைச் சுரந்தன. சுரந்த பால் விறுவிறென வழிந்து பெருகியது. மேனையின் மேனியெல்லாம் உரோமங்கள் சிலிர்த்து பொடித்து, பொடிப்பாகிய போர்வை போர்த்தவள்போல் கூச்செறியப்பட்டது. எல்லா உயிர்கட்கும் தாயாகிய ஈஸ்வரியின் அருள் அவள் உள்ளம் எங்கும் நிறைந்தது. மனக்கவலை யாவும் விட்டு நீங்கின. முன்னால் உள்ள பாவங்கள் தாமாகவேவிட்டு நீங்கின. இவ்வாறாக சொல்லற்கரிய பெரும் பேற்றைப்பெற்று எய்தினாள் மலையரசனின் மனைவியாகிய மேனை. 26

பரிபுரந் தண்டை யம்பொற் பாடகம் பாத சாலம்
விரவிய தொடியே சங்கு வியன்மணிச் சுட்டி யாரம்
அரிகெழு மதாணி பொற்றோ டங்கதம் பிறவுஞ் சாத்தி
வரையுறழ் தனப்பா லார்த்தி வரம்பெறு காப்பு நேர்ந்தாள்.

காற்சிலம்பையும், தண்டையையும், சிறந்த பொன்னாலாகிய பாடகத்தையும், பாதசரத்தையும் செறிந்து பிரகாசிக்கும் கடகக் காப்பையும், வளையல்களையும், மேலான ஒளிகொண்ட இரத்தினங்கள் பதித்திருக்கும் சுட்டியையும், முத்துமாலையையும், மரகதப் பச்சை மணிகள் விளங்குகின்ற நெஞ்சில் அணியும் மாலையையும், பொன்னாலாகிய தோட்டையும், தோள்மேல் அணிகின்ற அங்கதம் என்னும் ஆபரணத்தையும் இவையோடு இன்னும் வேறு வேறுவிதமான பல ஆபரண நகைகளையும் எம்பிராட்டிக்கு சாத்தி மலைபோன்ற தனது தனங்களில் பெருகுகின்ற முலைப்பாலை மேனை எம்பிராட்டிக்கு ஊட்டி வரன் முறையாக தன் குழந்தைக்கு தெய்வக் காப்பணிதல் என்னும் செயலையும் சிறப்புறச் செய்தாள். குழந்தையை தெய்வத்திடமாக காப்பு நேர்தல் ஓர் வழக்கம். 27

வனைதரு பவளங் காலா வயிரமே மருங்கிற் கோலாப்
புனையிரும் பலகை நீலாப் புரிந்தபொற் றொட்டின் மேலா
அனையவ டன்னை யுய்த்து மங்கையிற் கொண்டுந் தன்கோன்
மனமகிழ் திறனாற் போற்றி மதியென வளர்க்க லுற்றாள்.

இயல்பாகப் பொருந்திய செயல்பாடுடன் கூடிய பவளம் கால்களாகவும், வயிரம் பக்கத்திலுள்ள கோலாகவும், நீல மணியைப் பலகையாகவும் பொருத்திச் செய்த ஓர் அழகிய தொட்டில் மேலாக எம்பிராட்டியை கிடத்தி தாலாட்டியும், தமது அழகிய கரங்கள் மேலாகக் கொண்டு தூக்கி ஏந்தி மகிழ்வால் சீராட்டியும் தனது கணவனான மலையரசன் உள்ளம் மகிழும் திறனாக எம்பெருமாட்டியை மேனை வளர்க்கலுற்றாள். 28

மன்னுயிர் புவன மேனை மற்றுள பொருளுக் கெல்லாம்
அன்னையா யுதவி நாளு மவற்றினை வளர்த்து நிற்பாள்
தன்னையும் வளர்ப்பா ருண்டோ வளர்ந்தது சழக்கே யந்தக்
கன்னிதன் னருளின் நீர்மை காட்டினள் போலு மன்றே.

மேலான உயிர்கள் புவனங்கள் மற்றுமுள்ள பொருள்களுக்கெல்லாம் தானே தாயாகி யாவற்றையும் தந்து அதுவல்லாமல் எல்லா உயிர்களையும் நித்தலும் வளர்த்து நிற்கின்ற எம்பிராட்டியை யாவராலும் வளர்க்கவும் முடியுமா, அல்லது வளர்ப்பவர்கள் பிறிதொருவர் உண்டா, இல்லை. பின்னர் எம்பிராட்டி இங்கு மேனை யால் வளர்க்கப் பெற்றுள் என்பது பொருந்தாதே. ஆனல் இவ்வாறு தன்னையேந்தி தாலாட்டி, சீராட்டி மேனை வளர்ப்ப மலையரசன் மகிழ வளரும் தன்மை தான் மேலாகிய கருணை உடையவள் என்கின்ற தனது அருளின் நீர்மையை எம்பிராட்டி காட் டினுள் போலும். 29

இந்தவா றினையர் பாலா யெம்பெரு மாட்டி வைகி
ஐந்தியாண் டகன்ற பின்றை யயன்முதற் றேவர் யார்க்குந்
தந்தையா ரருளை யுன்னித் தவமினிப் புரிவ னென்னுச்
சிந்தியா விமையத் தோங்கற் செம்மலுக் குரைக்க லுற்றுள்.

இந்தவாறு இவர்களிடத்து எம்பெருமாட்டி வைகி பலரும் மகிழ்ந்து சிறந்துபோற்ற வளர்ந்து அவவிற்கு ஐந்து வயசு என்னும் பருவம் கடந்த பின்னர் எம்பிராட்டி பிரமதேவர் முதல் தேவர் யார்க்கும் தந்தையாயிருப்பவராகிய பெருமானது அருளை நினைந்தாள். முன்னே கைலைமலையில் தமக்கு ஈசன் அருள்செய்த கோட்பாட்டையு ணர்ந்து, இனி யான் எம்பெருமானையே நினைந்து தவம்செய்வேன் என எண்ணினுள். எண்ணியவாறே இமயமலை அரசனுக்கு தனது நிலையை எடுத்துச் சொல்வாளாயினுள், இனி எனது வாழ்வின் பேருவது சிவனருளின் நாட்டமே எனத் துணிந்தனள் எம் பிராட்டி. இதனை யோக சுவாமிகளின்,

''சிவனருளை நோக்கென்றுன்'' என்னும் திருவாக்கையும் ஒப்பநோக்க. 30

நாற்பெருந் தடந்தோ ளண்ணல் நலத்தக வரைந்து கொள்வான்
நோற்பனு லினைய வெற்பி னுவலரு மொருசார் வைப்பின்
ஏற்பதோர் கன்னி மாரோ டெனைவிடுத் தருண்மோ வென்னுப்
பார்ப்பதி இயம்ப லோடும் பனிவரை யரசன் சொல்வான்.

நான்கு விசாலித்த தோள்களைக் கொண்ட அண்ணலாகிய எமது ஈசன் எல்லா உலகிற்கும் நன்மையோங்குமாறு நம்மைத் திருமணம் செய்து கொள்ளுமாறு தவம் செய்வேன். ஆகவே இந்த மலையிடத்து ஒருசாரில் அவ்வாறு யான் தவம் செய்வ தற்கு ஏற்றதாகிய கன்னி மாடம் ஒன்றை அமைத்து எனக்கு உற்ற பணி காவல் முதலியவையைச் செய்வதற்கு உற்ற கன்னிமாரோடு என்னைத் தவம் செய்யும்படி விடுத்தருள்வாயாக என்று எல்லா உயிர்க்கும் தாயாகிய பார்ப்பதி சொல்லியருள லோடும் பனிப் படலம் மூடிய மலையரசன் இதைக்கேட்டு சொல்வான்,

பார்ப்பதி = பார்ப்பு + அதி = உயிர்களாகிய குழந்தைகளின் தாய் 31

அன்னைகே ளெம்மின் நீங்கி யருந்தவ மாற்றற் கொத்த
தின்னதோர் பருவ மன்று வியாண்டுமோ ரைந்தே சென்ற
நின்னுடல் பொருதா லீண்டிந் நிலைமையைத் தவிர்தி யென்னக்
கன்னிகை நகைத்துக் கேண்மோ இஃதெனக் கழற லுற்றுள்.

அம்மா எனது தாயே கேள். எம்மை விட்டு நீங்கி நீ அருந்தவம் செய்வதற்கு ஒத்த பருவமல்ல இது. இப்போது உனக்கு வயது ஐந்து தானே சென்றிருக்கிறது. அம்மா! தவம் செய்வதற்கு உன்னுடைய உடல் பொறுது. ஆனபடியால் இப்போதைக்கு இந் நிலைமையைத் தவிர்ப்பாயாக என்ன அப்போது அந்த வார்த்தையை நித்திய கன்னிகையாகிய எம்பிராட்டி கேட்டு நகைத்தாள். நகைத்துவிட்டு தந்தையாகிய மலையரசனை நோக்கி ஈதொரு வார்த்தை சொல்லியருளுகின்றாள். 32

ஈசனே காப்ப னல்லால் யாரையும் பிறராற் றம்மால்
ஆசறப் போற்ற லாகா ததுதுணி வாகு மீண்டுப்
பேசிய திறனு மன்னோன் பேரருள் மறுதி யென்ன
நேசமோ டியைந்திட் டன்னை நினைந்தநோன் பியற்று கென்றான்.

தந்தையே! நன்றாகக் கேள். ஈசன் ஒருவன்தான் எல்லாரையும் காப்பவன். அதுவன்றி பிறராலுமாதல் அல்லது தம்மைத் தம்மாலுமாதல் ஒரு குறைவுமில்லாமல் காக்க முடியாது. இதுவே துணிவாகும். ஈண்டு இவ்விடத்தே நான் தவம் செய்யப் போகிறேன் எனப் பேசிய திறனும் அவனுடைய பேரருள் காண்பாயாக. ஆகவே மறுக்காதே என்று எம்பிராட்டி தந்தைக்கு விளக்கமாகக் கூறியருளுதலும் அதைக் கேட்ட மலையரசன் இதற்கு மேலாக ஒன்றும் பேச இயலாதவனாய் அம்மா! என் தாயே! நீ நினைந்தபடி உனது நோன்பைச் செய்வாயாக எனச் சொல்லியருளினான்.

'சூழ்ச்சி முடிவு துன்பெய்தல்' எனப் பெரியோர்கள் அடிக்கடி சொல்லும் வாக்கியம் ஈண்டு நோக்கற்பாலது. 33

மன்னனு மியைந்து பின்னர் மால்வரை யொருசார் தன்னில்
அன்னமென் னடையி னாளுக் கருந்தவச் சாலை யாற்றித்
தன்னுறு கிளைஞர் தம்பாற் றவத்தினல் வந்த பான்மைக்
கன்னியர் பலரைக் கூவிக் கௌரிபா லாகச் செய்தான்.

மலையரசன் எம்பிராட்டி தவம் செய்வதற்கு இயைவு கொண்டு பின்னர் இமய மலையின் ஒரு சார் தன்னில் அன்னப் பட்சிபோலும் மெல்லிய நடையினை உடைய எம்பிராட்டிக்கு அரிய தவம் செய்யும் தவச் சாலை ஒன்றைச் செய்து பின்னர் தன்னுடைய சுற்றத்தவர்களில் தவத்தினால் வந்து அவதரித்திருந்த கன்னிப் பெண்கள் பலரை அழைத்து கௌரி அம்மையாகிய எம்பிராட்டிபால் ஏவற் பெண்களாகி நின்று அவவுக்குரிய பணிகளைச் செய்யுமாறு அக் கன்னிகைகளுக்குச் சொல்லி அவர்களை எம்பிராட்டிபால் சேர்த்தான். 34

நீலுறு மணிதோய் மேனி நிமலையங் கிமையத் துச்சி
மேலுறு மரசன் றேவி விடையினால் மடவார் பல்லோர்
பாலுறு பணியிற் சூழப் பரமனை யுன்னி யந்தச்
சாலையை யடைந்து மிக்க தவத்தினை யிழைக்க லுற்றாள்.

நீல மணிபோல ஒளியுடைய மேனி கொண்ட எம் ஈஸ்வரி அவ்விடத்து இமய மலையின் உச்சியில் இருக்கின்ற மலையரசன் மனைவியும் தம்மைத் தாயாக வளர்க்

கின்ற பேறுடையவளுமாகிய மேனை என்பாளிடத்துத் தான் தவம் செய்யப்போவ தற்கு விடையினைப் பெற்றுக்கொண்டு தன்னைத் தோழிகளாகிய பல கன்னியர்கள் தன்பால் உற்ற பணிவிடைகளைச் செய்து சூழ்ந்து விளங்க தவச்சாலை சேர்ந்து பரம்பொருளாகிய ஈசனை நினைந்து ஆங்கே மேலாகிய தவத்தினைப் புரிதலுற்ருள். 35

தங்கிய வைக ருேறுந் தாதையுந் தாவில் கற்பின்
மங்கையும் போற்றி யேக மாதுநோற் றிருந்தா ளிப்பால்
அங்கவட் பிரிந்த பின்றை அரும்பெருங் கயிலை மேய
வெங்கடம் பெருமான் செய்த பரிசினை இயம்ப லுற்றேன்.

எம்பிராட்டி தவச்சாலையில் தங்கி இருக்கும் நாட்கள் தோறும் தந்தையாகிய மலையரசனும் மேலாம் கற்பினை உடைய அவன் மனைவி மேனையும் வந்து தவச் சாலை சேர்ந்து அங்கு தவம் செய்திருக்கும் எம் அன்னையைப் பணிந்து போற்றிக் காதலால் பேணி ஏக எங்கள் அம்மை தவம் செய்திருந்தாள். இப்பால் கைலைமலை யில் எம்பிராட்டி ஈசனைப் பிரிந்த பிற்பாடு எம்பெருமான் செய்த செயலாகிய பரிசு களை இங்கு இப்போது முனிவர்களே சொல்லப் போகிறேன். 36

பார்ப்பதிப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 410

# 3. மேருப் படலம்

பன்னருஞ் சிறப்பின் மிக்க பனிவரை யரசன் றன்பாற்
கன்னியம் புதல்வி யாகிக் கெளரிநோற் றிருந்த காலைத்
துன்னிய வவுணர் சூழச் சூரபன் மாவாம் வெய்யோன்
இந்நில வரைப்பின் அண்டத் திறைவனே யாகி யுற்ருன்.

சொல்லரும் சிறப்பின் மிக்க இமயமலையினிடத்து நித்திய கன்னிகையாகிய பார்வதி யம்மையார் மலையரசன் மகளாகித் தவம் செய்திருக்குங்கால் தன்னுேடு கூடவே தோன்றிய அசுரர்கள் சூழும்படியாக சூரபன்மன் என்னும் கொடிய அசுரன் இந்நில வரப்பாகிய பூமிமுதல் சகலஅண்டங்களுக்கும் அரசனுகி ஆண்டு வந்தான். 1

மற்றது போழ்திற் றெல்லை மறைப்பொருள் வடத்தின் பாங்கர்ப்
பெற்றிடு சனக ஞதி முனிவரர் பின்னும் பன்னுள்
அற்றமில் தவஞ்செய் தெந்தை யருளினுற் கயிலை நண்ணி
முற்றுணர் நந்தி போற்று முதனிலை வாயில் புக்கார்.

இவ்வாருக சூரன் உலகெல்லாவற்றிற்கும் அரசனுகி தேவர்களை இந்திரன் மைந் தனை சயந்தனுேடு சிறைப்படுத்தி இந்திரன் முதலியோரைத் துன்பம்செய்த காலத்து முன்னெரு நாள் மிகப் பழமையான வேதத்தின் பொருளையெல்லாம் கல்லால விருட் சத்தின் கீழ் அமர்ந்தருளிய தெட்சணுமூர்த்திபால் கேட்டு உணர்ந்தார்கள், சன

கன், சனற்குமாரன், சனந்தனன், சதானந்தன் என்னும் நான்கு முனிவர்கள் கேட்ட பின்பு பலகாலம் நால்வரும் தவம் செய்தார்கள். இவர்கள் யாவரும் எந்தை பிரானின் அருளினுல் திருக்கைலாய மலையில் சேர்ந்தார்கள். இவர்கள் முழுவதை யும் உணர்கின்ற நந்தியெம்பெருமானுடைய காவல் கொண்ட எம்பிரான் கோவிலின் முதல் வாயிலை அடைந்தார்கள். 2

நோன்மையின் முனிவ ரானோர் நுவலருங் காட்சி நந்தி
கான்முறை வணங்கி நிற்ப அனையவன் கருணை தன்னுல்,
வான்மலி கடவுட் கோயின் மந்திரங் கொண்டு செல்ல
நான்முகன் முதலோர்க் கெய்தா ஞானநா யகனைக் கண்டார்.

அடைந்த இந்த தவத்தில் மேம்பாடுடைய நான்கு முனிவரானோர்களும் சொல லரும் காட்சிப் பேறுடைய நந்தியெம்பெருமான் திருவடி மலர் மீதாக வணங்கி நிற்க அப்போது நந்தியங்கடவுள் கருணை தன்னுல் ஆகாயத்தில் பொலிந்து விளங்கு கின்ற கடவுளின் கோயிலுள்ள மந்திர வடிவான சபைக்கு அழைத்துச் செல்ல அப் போது நால்வரும் நான்கு முகமுடைய பிரமதேவருக்கும் எய்தாத ஞான நாயகரா கிய எம்பிரானைக் கண்டருளினுர்கள். 3

மொழியது தவறல் செல்ல, முற்றுடல் பொடிப்புக் கொள்ள
விழிபுனல் பெருகத் தீசேர் மெழுகென வுள்ளம் விள்ள
அழகிய மறைக்கு மெட்டா ஆதிநா யகனை நோக்கித்
தொழுதன ருவகை பூத்துத் துள்ளினர் துளக்க முற்ருர்.

ஞான முதல்வராகிய எம்பெருமானை நான்கு முனிவர்களும் கண்டபோது அவர் களது மொழியானது தவறலுறவும் அதாவது கருணையங் கடலைக் கண்டபோது நாவானது பேசமுடியாது தவறல் செய்யவும், முழு மேனியெங்கும் உரோமங்கள் பொடித்து கூச்செறிந்தபடியாகவும், கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடவும், நெருப்பில் வைத்த மெழுகுபோல் உள்ளம் உருகிப் பரவசமாகவும், அழகாக எம் பிரானின் புகழ்பேசுகின்ற வேதங்கட்கும் எட்டொணுத எம் ஆதியான ஐயனை நோக்கித் தொழுதார்கள். உள்ளம் மகிழ்வாக மலர்ந்து துள்ளினுர்கள். நின்று மேனி நடுக்கங் கொண்டார்கள். 4

மண்ணவ ரமரர் யாரை வணங்கினு மவைக ளெல்லாம்
நண்ணிய பரமன் ருளி ஞற்பெருந் தவத்தி னோருந்
தண்ணளி நெறியிற் பல்காற் ருழ்ந்தன ரெழுந்து நின்று
பண்ணிசை மறைக டம்மால் துதித்திவை பகர்த லுற்ருர்.

இப்பூமியிலுள்ள மனிதரையோ அல்லது தேவரையோ, வேறு யாரையுமே வணங் கினுலும், அந்த வணக்கங்கள் யாவும் சேருகின்ற புண்ணியப் பொருளாகிய பர மேஸ்வரமூர்த்தியினுடைய திருப்பாதங்களில் நால்வராகிய இந்தப் பெருந் தபோத னர்களும், பேரன்புமுறையாகப் பலகாலும் தாழ்ந்து எழுந்தார்கள். எழுந்து நின்று ண்ணிசை நிறைந்த வேதங்களால் எம்பெருமானைத் துதித்து பரவுவாராயினர். 5

இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத் திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு மலைப்ப விந்நாள்
அருட்பெருங் கடலே எய்த்தே மமைந்தில துணர்வி யாங்கண்
மருட்பெருங் கடலின் நீங்கும் வண்ணமொன் றருடி யென்றார்.

இவ்வாறு வணங்கி தோத்தரித்து பின்னர் எமது ஈசனுக்கு விண்ணப்பஞ் செய்கிறார்கள்: ஐயனே! இருளாய் விளங்குகின்ற பெருங் கடலிலே நடுயாமத்து பயங்கரமாக வீசுகின்ற புயல்காற்றின் வசமாக அதிலே அகப்பட்ட தோணி எவ்வாறு பொங்கி எழும் கடலலையாலும், காற்றாலும் அலையுமோ அதுபோல யாங்களும் பல்வேறு வகையாக பொருள்கொள்ளப்படும் வேதங்களைக்கற்று சந்தேகம் விபரீதம் முதலிய ஐயப்பாட்டினால் எமது மனம் களைத்துவிட்டோம். அருள் நாதனே! எங்கள் உணர்வு இன்னும் அமைதி உறவில்லை. ஆகையால் நாங்கள் இருட் கடலிலே அகப்பட்ட தோணிபோல் மயக்கம் என்னும் எமது கலக்கக் கடலினின்றும் நீங்கும் வண்ணம் தேவரீர் அருள்செய்ய வேண்டுமென பிரார்த்தித்தார்கள். 6

நவையறு தவங்க ளாற்றி நல்லருள் படைத்த தொல்லோர்
இவைபுகன் றிடலு மன்பர்க் கெளிவருங் கருணை வள்ளல்
அவர்முகந் தெரிந்து நுங்கள் அறிவமைந் தடங்கு மாறு
தவலருஞ் சிறப்பின் நன்னூல் சாற்றுது மிருத்தி ரென்றான்.

குற்றங்கள் யாவும் நீங்கி, தவங்கள் பலவற்றைப் புரிந்து அதனால் சிவனருள் எய்தும் பரிபக்குவ நிலையையெய்திய இம்முனிவர் நால்வரும் இவற்றை எம்பிரானிடம் சொல்லியருளி நிற்றலும், அப்போது அன்பராயிருப்பார் யாவர்களும் அறியும்படி எளிதாக தமது அருள்புரியத்தோன்றும் கருணை வள்ளலாகிய ஈசன் அந்த நான்கு முனிவர்கள் முகத்தைப் பார்த்து முனி பிள்ளைகளே உங்கள் அறிவானது அமைந்து அடங்குமாறு கெடுதலில்லாச் சிறப்பினையுடைய ஞானபோதம் என்னும் நூலைச் சொல்லியருளுவோம் நீங்கள் இங்கு இருங்கள் என்றார்.

யாவராலும் அன்பரன்றி அறியொணா மலர்ச் சோதியான். (திருவாசகம்) 7

என்றிவை யருள எந்தை யிணையடி தனாது முன்னர்
நன்றுணர் காட்சி கொள்ளும் நால்வரு மிருந்தார் அங்கட்
சென்றிடு நந்திப் புத்தேள் சிறப்புடை வதன நோக்கிக்
கொன்றையந் தொடையல் வேய்ந்த குழகனென் றியம்பு கின்றான்.

என்று இவற்றை எம்பிரான் அருள்செய்தபோது எம்பிரானுடைய திருவடித் தாமரை முன்பாகத் தாழ்ந்து முனிவர்கள் நால்வரும் திருமுன்னர் இருந்தார்கள். அந்நேரத்து எம்பெருமான் அங்கே முனிவரோடும் சென்ற நந்தியங் கடவுளின் சிறப்பான திருமுகத்தைப் பார்த்தருளி கொன்றை மலர்மாலைச் சடையோடும் தோடணிந்து, பொலிவெய்த வீற்றிருந்தருளும் கடவுள் ஈதொன்று சொல்லி யருள்வாராயினர்: 8

பூங்கணைக் கிழவ னன்றிப் புங்கவர் யார்போந் தாலும்
ஈங்குறத் தருதி யல்லை யீதுனக் கடைத்த தென்ன
ஆங்கது புரிவ னென்னா வமலனை யிறைஞ்சி யங்கண்
நீங்கியக் கணத்தின் நந்தி நெறிமுதல் போற்றல் செய்தான்.

நந்திதேவனே! ஐந்து மலர்ப் பாணங்களையுடைய மன்மதன் மட்டும் அல்லாமல் வேறு எந்தக் கடவுளர் யார் இங்கு வந்தாலும் இங்கே உள்ளே வரவிடுதல் செய்யாதே, ஈது உனக்கிட்ட பணியாகுமென்று எம்பிரான் சொல்லியருள, அது கேட்ட நந்திதேவர் அவ்வண்ணமே சுவாமி செய்கிறேன் என எம்பிரானை நந்திதேவர் வணங்கி அங்கு திருச்சந்நிதி நின்றும் நீங்கி, அக்கணமே நந்தியெம்பெருமான் சிவபெருமானுடைய கோவிலின் முன்புறமுள்ள திருவாய்தல் வந்து யாவரும் உட்புகாதபடி காவலாக இருந்தருளினர். 9

நந்திமுற் கடையைப் போற்ற ஞானநா யகனு மண்ணல்
முந்துறை சனக ஞதி முனிவரர் தொழுது கேட்ப
அந்தமில் ஆக மத்தின் அரும்பதம் மூன்றுங் கூறப்
புந்திய தொடுங்கும் ஞான போதகம் போதி யென்றூர்.

நந்தியம் கடவுள் முதற்கடவாயிலைக் காவல்செய்ய அங்கு ஞானநாயகராகிய எமது அண்ணல் முன்னுக அமர்ந்தருளிய சனகர், சனற்குமாரர், சனுதனர், சதானந்தர் முதல் நான்கு முனி பிள்ளைகளும் கைதொழுதவாறு கேட்டருளும்படி எல்லையற்ற ஆகமங்களின் அரிய பதங்களாகிய சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்று பதங்களையும் கூறியருள, அப்போது அம்முனிவர்கள் எம்பிரானை நோக்கி பகவானே! எமது புத்தியானது ஒடுங்கும்படி ஞான போதத்தினை போதித்தருளும் என வேண்டினர்கள். 10

என்னலும் நகைத்தி யாது மெதிர்மொழி புரிந்தா னல்லன்
பன்னுவ தன்றூல் மற்றிப் பரிசினு லிருத்தல் கண்டீர்
அந்நெறி யாகு மென்றே அனையவர்க் குணர்த்து மாற்றூல்
உன்னரும் பரத்தின் மேலோ னொருசெயல் புரித லுற்றூன்.

என்னலும் எம்பிரான் சிரித்தருளிவிட்டு, அவர் கேட்டதற்கு எதிர் வாக்கியம் சொன்னர் அல்லர். ஏனென்றுல் அவர்கள் கேட்டபடி ஞானபோதம் சொல்லால் சொல்லும் தன்மை அன்று என்னும் தன்மையால் இப்படி இப்பரிசாக இருந்து உணரவேண்டும் என்பதை அம்முனிவர்க்கு உணர்த்தும் பொருட்டாக எமது சிந்தையாலும் நினைக்க முடியாத பெருமான் தாம் ஒரு செயலை அங்கு புரிந்தருளினர். 11

இருவரு முணரா அண்ணல் ஏனவெள் ளெயிறி யாமை
சிரநிரை யநந்த கோடி திளைத்திடும் உரத்திற் சீர்கொள்
கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி
ஒருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி லுற்றுன்.

பிரமதேவர், நாராயணக் கடவுள் ஆகிய இருவரும் இன்னமும் உணரமுடியாத எம்பெருமான் வெள்ளைப் பன்றிக் கொம்பு, ஆமையோடு, இவற்றுடன் தலைமாலைகள் அநந்த கோடி அணியப்பட்டு திளைத்து விளங்குகின்ற தமது மார்பில் திருக்கரத்தைச் சேர்த்து மோனத்தின் குறியாக அமைகின்ற மோன முத்திரை என்னும்படி திருக்கைப் பெருவிரல், சுட்டுவிரல் இரண்டினையும் சேர்த்தபடி ஒரு கணப்பொழுது செயல் யாவையும் இன்றி யோகம் செய்வார்போல அமர்ந்தருளினர். 12

இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு
சனகனே முதலா வுள்ளோர் தவலரும் ஞான போதம்
பனுவலின் அளவன் றென்னும் பான்மையைத் தெரிந்து முக்கட்
புனிதன தருளாற் றத்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார்.

இனையதோர் தன்மையாக எம்பிரான் யோகியாய் அமர்ந்து முனிவர்கட்கு ஞான போதத்தை உணர்த்தக் கண்டபோது சனகன், சனற்குமாரன், சனந்தனன், சதானந்தன் ஆகிய நான்கு தவத்தரும், ஞானபோதமானது சொல்லினால் சொல்லமுடியாதது என்பதைத் தெளிந்தார்களாகி மூன்றுகண்களையுடைய புனிதனாகிய சிவபிரான் அருளால் தங்கள் தங்கள் புத்தியில் ஒடுக்கம் பெற்றார்கள்.

இந்நிலையை அருணகிரியாரும் இப்படி கூறுகிறார்:

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லாது ஒன்றுவந்து வந்து
தாக்கு மனோலயம் தானேத் தரும் எனைத்தன் வசத்தே ஆக்கும்
அறுமுகவா சொல்லொணாது இந்த ஆனந்தமே. 13

தத்தமுள் ளொடுங்கல் பெற்ற தாபத கணத்தர் யாரும்
முத்தொழில் புரியும் மூவா முதல்வனும் முக்கண் மூர்த்தி
மெய்த்தவ வடிவ முன்னி மேவினர் சூழ்ச்சி மேலோன்
சித்திரம் புணர்த்த பாவை செயலற இருக்கு மாபோல்

தங்கள் தங்கள் உள்ளங்கள் ஒடுக்கம்பெற்ற அந்த முனிவர்கள் நால்வரும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களையும் செய்தருளுகின்ற பிறப்பு, இறப்பு கடந்த மூவாத முதல்வனை மூன்று கண்கொண்ட மூர்த்தி தமது முன்பாக அமர்ந்தருளிய உண்மையான யோக வடிவைத் தியானித்தருளியவாறு தாமும் யோகநிலையெய்தி அசைவற்று இருந்தார்கள். அவர்கள் இருந்த தன்மை எவ்வாறெனின் சித்திரத்தில் எழுதிய ஒரு பாவையான செயல் யாவுமற்று இருத்தல் போல அமைந்தது.

ஒரு பொல்லாப்புமில்லை என்பான் உண்மை முழுதுமென்பான்
ஒருவருக்கும் தெரியாதென்பான் — சின்னத்தங்கம்
ஓவியம்போல் இருந்தானடி. (யோகசுவாமிகள்)
உலகமென்றுபேச அறியாத உருவமொன்றிலாத பருவம். (அருணகிரியார்)
இக்கருத்தை மேலுள்ள பாடலோடு ஒப்ப நோக்குக. 14

தற்பரன் இனைய வாற்றாற் றருபத ருணருந் தன்மை
அற்புத ஞான போத மளித்திடுங் கணம தொன்றின்
முற்படு கமலப் புத்தேள் முதலிய அமரர்க் கெல்லாம்
பற்பல யுகங்கள் சென்ற பிறர்க்கினிப் பகர்வ தென்னே.

தானே தானாகிய சிவபிரான் இனையவாற்றால் நான்கு முனிவர்களும் உணரும்படியாக அதி அற்புதமாய் விளைகின்ற ஞான போதத்தினை அம்முனிவர்களுக்கு கொடுத்தருளுகின்ற அந்த ஒரு கணப்பொழுதில் எல்லார்க்கும் முற்பட்டவர்களாகிய

தாமரை மலர் கடவுளாகிய பிரமதேவன் முதல் கடவுளர் யார்க்கும் பற்பல யுக காலமாக அந்த ஒரு கணப் பொழுது ஆகிவிட்டதென்ருல், பிறர்க்கு இனி இவ்வளவு காலமாக இருக்குமென்பதையும் சொல்ல முடியுமோ. 15

**இத்திற ஞானபோத மென் றுதொன் முனிவர்க் கெந்தை**
**கைத்தலங் கொண்டு காட்டுங் கணத்தினில் அமரர்க் கெல்லாம்**
**மெத்துபல் லுகங்கள் சென்ற விழுமிய காஞ்சி தன்னில்**
**அத்தன்மெய் குழைத்த நங்கை அவன்விழி புதைத்த நாட்போல்.**

இத்திறம் இருத்தல் தான் ஞானபோதமென்று மிகப்பழமையான அந்த முனி வர்களுக்கு எல்லாம் எந்தை பெருமான் திருக் கரங் கொண்டு காட்டும் கணத்தினில் தேவர்களுக்கு எல்லாம் எத்தனேயோ பெருந் தொகையான யுகங்களாகிவிட்டன. இக் கால நீடிப்பு எப்படிப் போலும் என்ருல் மேலாகிய உத்தம பதியாகிய காஞ்சி யிலே என்றும் அமர்ந்தருள்பவளாய் நித்திய கன்னியாகி தனது திருமேனியால் இறுக எம்பிரானேத் தழுவி குழைத்தவளாகிய காமாட்சி அம்மை அன்ருெரு காலத்து சிவ பிரானுடைய கண்களே விளேயாட்டாகப் பின்னுல் சென்று பொத்தியபோதுள்ள அந் தக் கணம் எல்லா உலகமும் உயிரும் கொடிய இருளில் மூழ்கிய நாள் போலாயிற்று. அன்று கண்களேப் பொத்திய அந்தக்கணம்போல் இன்று யோகுற்ற கணமும்அமைந்தது.

**காரண முதல்வன் மோனக் காட்சியால் அமர ரெல்லாஞ்**
**சூரர மகளிர் தங்க டுணேமுலேப் போக மின்றி**
**ஆரிடர் நிலேமை தன்னே யடைந்தனர், அளக்கர் சூழ்ந்த**
**பாரிடை உயிருங் காமப் பற்றுவிட் டிருந்த வன்றே.**

அனேத்துச் செயல்களுக்கும் காரணமாயுற்ற முதல்வராகிய சிவபிரான் மோனம் உணர்த்தும் யோகத்தமர்ந்திருக்கின்ற காட்சியினுலே இந்தத் தேவ உலகத்துள்ள தேவர்கள் யாவரும் தங்கள் அழகுடை நாயகிமாரோடு இன்புறுகின்ற முலேப்போகம் முதலியவை மற்றும் இன்ப நிலேகளேப் பெற முடியாது முனிவர்கள் நிலேமையைப் போல ஆனுர்கள். சமுத்திரம் சூழ்ந்த உலகில் வாழ்கின்ற அனேத்து உயிர்களும் காமப்பற்று விட்டு இருந்தன. தேவர் முதல் சகல உயிர்களும் சிற்றின்ப விடயங்களில் ஈடுபட முடியாதவர்களாய் இயல்பாகவே காமஉணர்வு பெறமுடியாது இருந்தார்கள்.

சம்பந்த சுவாமிகள் இதனே இப்படிக் கூறியருள்கிருர்:-

முலேத்தடம்மூழ்கிய போகங்களும் மற்று எவையும் எல்லாம்
விலேத்தலே ஆணவங் கொண்டு எமையாண்ட விரிசடையீர்

(திருநீலகண்டப் பதிகம்) 17

**ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறல் ஞான போதம்**
**ஓரிறை காட்டு முன்னர் உலகெலா மொருப்பா டொன்றி**
**ஈருடன் முயங்கு மார்வ மின்றியே யிருந்த யார்க்குங்**
**காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்ருே.**

பிரமதேவரின் பிள்ளைகளாகிய இந் நால்வர்க்கும் பெறுதற்கு மிகமிக அரிதாகிய இந்த ஞான போதத்தை எம் பெருமான் காட்டியருளிய ஒருகணப் பொழுதின் முன் னேயே உலகத்து உயிர் யாவும் ஒருமைப்பாடாக யாரும் ஆண் பெண் என்ற இரண்டு உடல் ஒன்றாகக் கூடும் சிற்றின்பப் போக உணர்வோ ஆசையோ இன்றி இருந்தார் என்றால் இந்த உலகில் யாவர்க்கும் காரணன் சிவன்தான் என்பது தெளிவாகிற தல்லவோ. 18

பிணைவிழைச் சூழ்தந் துய்ப்பப் பெருமறை விதிவ ழாமல்
அணைவிழச் சடங்கிற் கொண்ட அரிவைய ரோடு தேவர்
இணைவிழைச் சியற்கை கூடா திரங்கினர் கவற்சி யெய்திப்
புணைவிழச் சலதி யாழ்ந்து புலம்புகொள் மாக்க ளேபோல்.

இன்னார் இன்ன பெண்ணை இப்படித் திருமணம் செய்வார் எனும்படியாக விதிக் கப்பட்ட ஊழின் பிரகாரம் ஈருடல் கூடிப்பிணையும் படியாக பெரிய வேதங்களில் சொல்லிய விதிவழாமல் செய்யப்பட்ட கல்யாண மூலமாக பெற்றுக் கொண்ட புதுக் கன்னியரோடு அவரின் நாயகர் தாமும் மனைவியை அணைத்து இன்புறுவோமென ஆர்வத்தோடும் அணைத்தபோது அவர் நினைந்த செயல்கூடாமல் இவ்வளவு பாடுபட்டு ஏன் இந்த கலியாணத்தைச் செய்தேன் என இரங்கி கவலைப்பட்டார்கள். இவர்களின் இந்நிலை எப்படி ஆயிற்றென்றால் கப்பலிலே சென்றவர்கள் கடலிலே தவறி விழுந்து அவதிப்பட்டுத் தத்தளிப்பார் போல தமது மனைவியை இன்புறும் பொருட்டாக அணைத்துக் கொண்டும் அச்செயல் கூடாமையாயின் இருவரும் வேதனைப்பட்டார்கள். இதனை கடலில் விழுந்தோர் அவதி உறுதல்போல அவதி உற்றார் என்றார். 19

வன்முலை யணங்கி னேரும் வானவர் யாருங் காமத்
தன்மையும் புணர்ப்பு மின்றித் தளர்ந்தனர் வறிஞர் தம்பால்
இன்மைகொண் டோர்கள் செல்ல ஈவது கூடா வெல்லைப்
புன்மையொ டிருவர் தாமும் புலம்புறு தன்மை யேபோல்.

இன்னொருவரால் தீண்டப்பெறாத வன் முலையுடைய தேவப் பெண்களும், தேவர் கள் யாரும் காமத் தன்மையும் புணர்ச்சியும் இல்லாமல் ஆண், பெண் இரு சாரா ரும் கவலையுற்றார்கள். அது எவ்வாறாயிற்றென்றால் ஒரு வறியவனிடத்து தானும் ஒரு பொருளுக்கும் வழியில்லாத இன்னொரு வறியவன் சென்று இரங்கி கேட்கின்ற போது அவன் அது தன்னிடத்தில் இல்லாதபடியால் ஐயோ கேட்டாயே இல்லையே என் செய்வேன் என வருத்தத்தோடு சொல்ல கேட்டவனும் ஐயோ உன்னைக் கேட் டேனே என்று தான் கேட்டதற்கு இரங்கி வருத்தத்தோடு புலம்புறும் தன்மை போல ஆணும், பெண்ணுமாகிய இத்தேவர்கள் இருபாலரும் எவராகிலும் ஒருவ ரையொருவர் சிற்றின்பம் நுகரும் பொருட்டாக அணைந்தபோது கைகூடாமல் தங் கள் இயலாமையைப் புலப்படுத்தி கண்ணீர் விட்டழுதார்கள்.

இச்செயலை புதுமணமான தம்பதிகளை வைத்து ஆசிரியர் சொன்ன விகடச்சுவை மிகவும் போற்றற்குரியது. 20

பொற்புருக் குறைவின் றுற்றும் புவனமேல் மகளிர் மைந்தர்
அற்பொடு கலந்து காமத் தரும்பயன் கோட றேற்றார்
தற்பர வடுக ஞாணைத் தன்மையால் அலகை யீட்டம்
நற்புன னீழல் பெற்று நணுகருந் தன்மை யேபோல்.

இப்பூமிமேல் உள்ள மகளிரும், ஆடவர்களும் தங்கள் உருவமானவை மிகுந்த ரூபலாவண்ணியத்தோடு அழகாகப் பொருந்தி இருப்பவும் தாங்கள் அன்போடு புணர்ந்து சிறந்த காம இன்பத்தைப் பெற சிந்தியாதவராயினர்கள். அது எப்படி எனில் பேய்களானவை தாங்கள் விரும்புகின்ற மர நிழலையும், நீர்ச்சாயல் இடங்களையும் பெற்றாலும் காவற் கடவுளான வைரவப் பெருமானின் கட்டளையாலே மரநிழலையும், நீர் நிலைகளையும் சேரமுடியாமல் தடுக்கப்பட்ட தன்மைபோல:

பேய்கள் மர நிழலையும், நீர் நிலைகளையும் விரும்புவன. ஆனால் வைரவக் கடவுள் ஆணையால் அவைகள் அவற்றை அணுக முடியாதவாறுபோல காம இன்பத்தை அனுபவிப்பதற்கு ஏற்ற உடம்பைப் பெற்றிருந்தும் அதை இறைவன் யோக நிலையுற்றமையால் அனுபவிக்க முடியாமல் போயிற்று. 21

மாடக வெழாலை யன்ன பணிமொழி மகளிர் மைந்தர்
கூடின ரிருந்து மின்பங் கொண்டிலர் சிறார்கு ழாமும்
ஆடவர் குழாமும் வாட்கண் அரிவையர் குழாமு மேனைப்
பேடியர் குழாமும் வெவ்வே றுற்றிடு பெற்றி யேபோல்.

யாழிசை போலும் இனிய குரல்கொண்ட பெண்களோடு ஆண்கள் கூடி இருந்தும் தாங்கள் இன்பங் கொண்டார்களில்லை, இவர்களுடைய நிலை சிறுவர்கள் கூட்டமும், ஆடவர் கூட்டமும், பெண்கள் கூட்டமும், மற்றைய ஏனைப் பேடியர்கள் கூட்டமும் வெவ்வேறாகத் தனித்து இருத்தல்போல ஆயினர்கள் இவர்கள்.

உலகில் தனித்தனி பெண்கள் கூட்டமாக இருந்தாலும், ஆண்கள் கூட்டமாக இருந்தாலும் அவ்வாற்றினால் ஏதேனும் சந்தேக நிலைகொள்ளார். ஆணும், பெண்ணும் தனித்திருக்க காணும்போது வேறாக எண்ணுவர், ஆனால் இவ்வாறு ஆணும் பெண்ணுமாக கூடி இருக்கவும் அதை தவறாக எண்ணுதற்கில்லை. ஏனெனில் இயல்பாக அவர்கள் சிந்தை காம உணர்வின் பால் செல்லாதிருந்தமையால். 22

இருந்திட விரிஞ்சன் மாயோன் இருவரு மீசன் றன்பாற்
பொருந்திடு முணர்ச்சி கொண்டு முத்தியிற் புக்க சேயுந்
திருந்துசீர் வசிட்டன் சொல்லாற் சிலையெனப் பன்னாள் நின்ற
அருந்ததி மாதும் போன்றார் ஆடவர் மகளி ரெல்லாம்.

பிரம்ம விஷ்ணுக்களாகிய இரு கடவுளர் இருப்பவும், சிவபிரானிடத்தில் பொருந்திய அன்பினைக் கொண்டு முத்தியிற் சேர்ந்தருளிய சுகப்பிரம ரிஷியும், திருத்தமுற்ற வசிட்ட முனிவன் சொல்லினால் சிலைபோலப் பல நாட்கள் நின்றவளாகிய அருந்ததி என்னும் பெண் போலவும் நின்றார்கள் உலகிலுள்ள ஆடவர்களும் [பெண்களும்]

பூர்வ ஞானத்துடன் பிறந்து இல்லறத்திற் புகாது என்றும் பரம ஞானியாயிருத்தலினல் சுகப் பிரமரிஷியை ஆண்களுக்கும், பெண்ணுகப் பிறந்தும் போக விச்சையின்றி வசிட்ட முனிவன் சொல்லினல் பல காலம் கற்போல அசைவற்றிருந்த அருந்ததியை மகளிர்க்கும் உவமித்தார். 23

ஏமரு புவன மூன்று மினிதருள் கமலக் கண்ணர்
பூமட மாதர் தம்பாற் புணர்கிலர் பொருவில் வேளுங்
காமரு மகளிர் கூட்டங் கருதலன் இவர்போற் சிந்தை
ஆமையி னெடுங்கல் பெற்றுர் ஆசையுள் ளோர்க ளெல்லாம்

இன்பம் பொருந்திய சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்று உலகங்களை இனிதே காத்தருள் செய்கின்ற தாமரைக் கண்ணன் எனப் பெயர் கொண்ட விஷ்ணு மூர்த்தி, மகாலெட்சுமி, பூமிதேவி முதல்வர்பாற் சேர்ந்து புணர முடியாதிருந்தனர். நிகரற்ற காம உணர்வை பிறர்க்கு ஊட்டுகின்ற மன்மதனும் கூட தனது மனைவியாகிய இரதி முதல் பெண்கள்பால் விருப்பங் கொள்ளாதிருந்தான். எது போல எனின் ஆமையானது ஒன்று தட்டியவுடன் நீட்டிய காலையும், தலையையும் ஒடுக்கிக் கொள்வதைப்போல காம இச்சையில் ஆசைப்பட்டாரெல்லாம் இயல்பாகவே அந்த ஆசையினல் ஒடுக்கப்பட்டார். 24

மண்ணகத் துயிர்கண் முற்று மாதிரத் துயிர்கண் முற்றும்
விண்ணகத் துயிர்கண் முற்றும் வேற்றகத் துயிர்கண் முற்றும்
பெண்ணகத் தாண்மை கூடுஞ் சிறுநலம் பிழைத்த ஞானக்
கண்ணகத் திறைவற் கண்டு கடைநின்ற காட்சி யார்போல்.

பூமியிலுள்ள உயிர்கள் யாவும், வெவ்வேறு திக்குகளில் வாழும் உயிர்கள் யாவும், தேவ உலகிலுள்ள உயிர்கள் யாவும், வேறு வேறு உலகங்களிலுமுள்ள உயிர்கள் யாவும் எல்லாம் பெண்ணிடத்து ஆண்மை கூடுகின்ற கூட்டமாகிய சிற்றின்பபோகம் பெறடிமுயாமல் தவறுற்று இருந்தார்கள். இது எதுபோல் எனின் கண்ணில் கண்ணுகக் கலந்து நிற்கும் கடவுளை கண்டு பற்றெல்லாம் நீங்கி நிற்கும் ஞானக் காட்சி உடையவர்போல. 25

நாகமார் சடிலத் தண்ணல் நாற்பெருந் தவரு முய்ய
யோகுசேர் நிலைமை காட்டு மொருகணத் துயிரின் பொம்மல்
வாகைவே டானு நிற்க மையலும் புணர்ப்பு மற்ற
ஆகையால் அகில மெல்லா மவனென்கை தெரிந்த தன்றே.

நாகபாம்போடும் பொலிகின்ற கங்கைச் சடையுடைய எம்பெருமான் நான்கு தபோதனர்களும் உய்யும் பொருட்டாக யோகு சேர்ந்த நிலைமையைக் காட்டுகின்ற ஒரு கணத்தில் உயிரின் கூட்டம் யாவும், எல்லாரையும் மயக்குகின்ற காமக்கடவுளாகிய மன்மதன் கூட இருப்பவும் ஆண் பெண் ஒருவரையொருவர் பார்த்து போகமுறுதலும் சேர்க்கையும் இல்லாமல் இருந்தார்கள். ஆகையால் உலகமெல்லாம் ஈசன் தான் என்பது தெளிவாகியது.

காம இன்பம் ஊட்டுகின்ற அதிவலியுடையவன் மன்மதன். அவன்தானும் இருப்பவும், உயிர்கள் காமப்பற்றுவிட்டு நீங்கின. ஆகையால் எல்லோர்க்கும் தலைவன், ஈசன், சிவம் ஒருவனே என்பது தெளிவாயது. 26

சிலையொடு பகழி வாடத் திருமதிக் குடைசீர் குன்ற
வலிதளர் வெய்தத் தென்றல், மறிகடற் சுறவு தூங்க
அலைபுரி யாணை நீங்கி ஆடன்மா மதனு மாதின்
கலவிய தொழிந்தா னென்னிற் பிறர்செயல் கழறற் பாற்றே.

மன்மதனனவன் தனது காமகாண்டம் என்னும் வில்லோடு மலராகிய அம்புகளும், வாடி அழிவெய்த சந்திரன் என்னும் தனது குடை சீர்குன்ற, தனது வலியானது தளர்வெய்தி தென்றல் என்னும் தேரழிய மறித்து வீசும் கடலிலுள்ள சுறுவென்னும் கொடி தூங்க, எல்லா உயிர்களையும் அலைக்கின்ற தனது போராடலை மன்மதன் பிறர் பால் செய்யமுடியாது நீங்கியது மட்டுமல்ல தானும் தனது தேவியாகிய இரதியைக் கூடும் கலவியை ஒழிந்தான் என்றால் பிறர்செயல் பேசவேண்டுமோ? 27

சாலிகள் வளரு மெல்லை தடம்புனல் வறுமைத் தாக
வாலிது குரல்வாங் காது வருத்தொடு மாய்வ தேபோல்
மேலவ னருளாற் போகம் வெறுத்தலிற் கருமல் கின்றி
ஞாலமன் னுயிர்கள் முற்றும் நாடொறுங் குறைந்த வன்றே.

நெற்பயிர்களானவை வளர்ந்து கதிரீனுகின்ற பருவம் வந்தபோது கீழுள்ள நீர் வற்றி வரண்டுபோக நெற்பயிர் கதிர் ஈனமுடியாது வருந்திப் பழுத்து அழிந்து போவதுபோல மேலாகிய ஈசனருளால் உயிர்கள் போகத்தை வெறுத்தலினாலே உல கத்து உயிர்கள் முழுவதும் நாள்தோறும் குறைந்து குறைந்து வரலாயிற்று. 28

முள்ளரை முளரிப் புத்தேள் முதற்புரி துணையே யன்றித்
தள்ளரு முயிர்கள் பின்னுந் தலைத்தலை மல்கா துற்ற
தெள்ளிதி னுலக மீன்ற தேவியின் றாகி ஈசன்
வெள்ளியங் கயிலை தன்னில் மேவிய மேலை நாட்போல்.

முட்கள் பொருந்திய தண்டினைக் கொண்ட தாமரை மலர்மேல் அமர்ந்த பிரம தேவர் தமது முதற் படைப்பிலே தோன்றிய உயிர்களேயல்லாது எக்காலமும் பெருகு தல் ஒழியாத உயிர்கள் பின்னர் சந்ததிப் பெருக்கம் இல்லாது, தலைமுறை இல்லாது போயிற்று. இது எப்படியென்றால் முன்னொரு காலத்து மிகத் தெளிவாக உலகம் ஈன்ற கௌரியம்பாள் இல்லாது ஈசன் கைலைமலைமேல் தான் தனியே அமர்ந்தருளி யவாறு போலும்.

முன்பொரு காலத்து அம்பாள் இன்றி ஈசன் கைலைமலையில் தனியே இருக்கும் போது பிரமதேவரின் படைப்பு பெருகாது போயிற்று. பின்னர் சுவாமி தனது இடப்பாகத்தை நோக்க அம்பாள் தோன்றினாள், பின்னர் எம்பிராட்டியை ஈசன் தமது இடப்பாகத்தில் பொருந்த வீற்றிருந்தருள பிரமதேவர் படைப்பு அப்போது கைகூடியது. 29

இம்முறை நிகழ நாதன் ஈரிரு தவத்தி னோர்க்கும்
மெய்ம்மைகொ ளுணர்ச்சி காட்டி வீற்றிருந் தருளு மெல்லை
தெம்முயல் சூரன் தீங்கு செய்தலால் மகவான் வானோர்
தம்மொடுந் துறக்கம் விட்டுச் சசியொடுந் தரணி புக்கான்.

இம்முறையாக உலகெங்கணும் நிகழும்படியாக ஈசன் அந்த நான்கு தவத்தினோர்க்கும் உண்மை கொள்ளும் உணர்ச்சியினைத் தானே உணர்த்திக் காட்டியவாறு யோகியாக வீற்றிருந்தருளும் காலத்து கொடுமையே தலைநின்று அதனை முயல்கின்ற சூரனனவன் பெரும் தீங்கினை எல்லார்க்கும் செய்தலால் அதனைப் பொறுக்கொணாத இந்திர தேவனானவன் தேவர் கூட்டத்தோடும் தனது உலகமான தேவ உலகைவிட்டுப் பயந்தோடி வந்து இந்திராணி தேவியோடும் இப்பூமியிடம் வந்துற்றான். 30

மேகமூர் கடவுள் வெள்ளி வெற்பினி லேகி முக்கண்
ஏகநா யகனைக் காணு மெல்லையின் றாக மீண்டு
சோகமோ டம்பொன் மேருத் துன்னியே சூரன் மைந்தன்
மாகநா டழித்துச் சேயைச் சிறைசெய்த வண்ணந் தேர்ந்தான்.

முகிலை வாகனமாக உடைய இந்திரக் கடவுள் வெள்ளிமயமான திருக்கைலாய மலையில் சென்று அங்கு மூன்று கண்ணினையுடைய எம்பிரானைக் காணுவதற்கு சமயம் இல்லாமல் போகவே பெரிதும் துயரங்கொண்டு அழகான பொன் வண்ணமான மேருமலையிடத்துச் சென்று இருக்கும்போது சூரபன்மனுடைய மகன் பானு கோபன் என்பவன் தேவ உலகை அழித்து தனது மைந்தனாகிய சயந்தனைச் சிறைப்படுத்திய வரலாற்றைத் தெரிந்து கொண்டான். 31

தமனிய மேரு வெற்பிற் றன்னுள மொருப்பா டெய்த
நிமலனை யுன்னிப் பன்னாள் நெடுந்தவ முழத்த லோடும்
இமில்விடை மிசைக்கொண் டங்கண் எம்பிரா னேகக் காணாஉ
அமரர்கோன் வணங்கிப் போற்ற அனையவ னருளிச் செய்வான்.

பொன் மயமான மேரு மலையில் இருந்த இந்திரன் தனக்கும் தனது உலகிற்கும் மகனுக்கும் நேர்ந்த கதியை உன்னி தனது உள்ளம் ஒருப்பாடு எய்தும்படி சிவபிரானை நினைந்து பல நாட்களாக பெரிய தவத்தை இயற்றினான். அவ்வாறு இந்திரன் பல நாள் உடலம் வருந்த தவம் செய்தலும் சிவபிரான் அவ்விடத்து பெரிய ஏரியுடைய இடபத்தின் மேலாக தோன்றியருளலோடும் எம்பிரான் வருகையைக் கண்ணுற்ற இந்திரன் வணங்கிப் போற்றுதல் செய்ய சிவபிரான் அருள்செய்கிறார். 32

நொந்தனை யளப்பில் கால நோற்றனை யாற்றல் தீர்ந்தாய்
இந்திர நினக்கு வேண்டிற் றென்னைய தியம்பு கென்ன
அந்தமி லறிவின் மேலோன் அறிகிலன் போலக் கேட்ப
வந்தனை புரிந்து போற்றி மகபதி புகல லுற்றான்

இந்திரனே நீ பல காலமாக நொந்து போனாய். பல நாள் தவம் புரிந்தாய். உனது வலியே நீங்கினாய். ஆகையால் யாது உனக்கு வேண்டும் அதனை விளம்புவாயாக என எல்லையற்ற அறிவின் மேலவராகிய சிவபிரான் அருள்செய்தலோடும் எம்பிரானை இந்திரன் வந்தனைபுரிந்து போற்றி செய்து சொல்லியருள்கிறான். 33

பன்னரும் பழிசேர் சூரன் பருவரற் படுத்திப் பின்னர்
என்னொரு புதல்வன் றன்னே இமையவர் பலரை வாட்டித்
தன்னகர்ச் சிறையிட் டெம்மூர் தழல்கொளீஇத் தவறு செய்தான்
அன்னவன் றன்னே யட்டே அளித்தியா லெம்மை யென்ன.

எம்பிரானே எமது வாயால் சொல்லவும் கூசப்படும் பழியுடையவனுன சூரன் என்பவன் எனது ஒருமகனுகிய சயந்தனேயும் தேவர்கள் பலரையும் வாட்டுதல் செய்து துயருறுத்தி தனது நகராகிய வீரமகேந்திர புரத்து எடுத்துச் சென்று இவர்கள் எல்லோரையும் சிறையிருக்கச் செய்து எங்கள் ஊருக்கு நெருப்பிட்டு கொளுத்தி எரித்து பெரும் தவறுகளே எங்களுக்குச் செய்தான். ஆனமையின் அந்த சூரனே அழித்து எம்மைக் காத்தருள் புரிவீராக என வேண்டினுன் இந்திரன். 34

மெய்ம்மைய தகன்ற தக்கன் வேள்வியி னிருந்த பாவம்
நும்மிடை யிருந்த தற்றல் நோதக வுழத்தீர் மேனுள்
நம்மிடை யொருசேய் வந்து நணுகிவெஞ் சூரைக் காதி
இம்மென வும்மைக் காப்ப னெனப்புகன் றிறைவன் போனுன்

அப்போது இறைவன் சொல்லியருள்கிறுர். இந்திரனே! தேவர்களும் நீயும் உண்மைப் பொருளேவிட்டு நீங்கிய தக்கன் என்பானின் யாகத்து இருந்த பாவம் இன்னமும் உங்களே விட்டு நீங்கவில்லே. அது இருந்தபடியால் நீங்கள் இவ்வளவு துயருற்றீர்கள். ஆனுல் பின்னுல் ஒருநாள் எம்மிடத்து ஒரு குழந்தை தோன்றியருளி கொடிய அசுரரை அழித்து மிக சிறப்பாக உங்களேக் காப்பன் என கூறியருளி எம்பிரான் மறைந்தருளினுர். 35

மறைந்தனன் இறைவ னேக மகபதி யிரக்க மெய்திக்
குறைந்தனன் உணர்வு துன்பங் கூர்ந்தனன் குமர னங்கட்
பிறந்துமைக் காப்ப னென்றே பிரானருள் புரிந்த பெற்றி
சிறந்ததன் மனத்தி லுன்னித் தேறினன் உவகை செய்தான்.

இவ்வாறு இறைவன் மறைந்து செல்ல இந்திரன் பெரிதும் இரக்கங் கொண்டு தனது உணர்வுகள் கூட மங்கப்பெற்று பெரும் துயரங்கொண்டு நின்றுலும் இறைவன் ஒரு குழந்தை நம்பால் தோன்றி உம்மைக் காப்பான் என்னும் பெரும் தன்மையை உணர்ந்தவனுய் பெரிதும் மகிழ்வாகி கவலே யாவும் நீங்கி குழந்தை நாயகர் வருகையை நினேந்து நினேந்து மனத்தினில் பெரிதும் உவகை பூத்தான். 36

மாசறு காட்சி கொண்ட மாதவர்க் கருளி யெங்கோன்
தேசுறு கயிலே யுற்றுன் உமையவ ளிமையஞ் சேர்ந்தாள்
ஆசறு குமரன் அன்னுர்க் கடைவதெத் தன்மை யென்னு
வாசவ னிருந்து நாடி மனமிசைக் கவலே கூர்ந்தான்.

இப்படி இந்திரன் மகிழ்ந்தாலும் உடனே அவன் மனதில் இன்னுமோர் கவலை உதித்தது. அதாவது குற்றமில்லாத நல்ல காட்சிப் பேறுடைய சனகாதி முதல் நால்வர்க்கு ஈசன் அருள்புரிந்தவாறு ஒளி பொருந்திய கைலைமலையில் யோகத்து உற்றரு ளினர். உமையம்மையார் இமயமலையிடத்து மலையரசன் மகளாகி இருக்கிருள். இப் படி இருக்கும்போது அவர்கள் பால் குறைவிலாத நிறைவாகிய பாலன் எவ்வாறு சேர்வது என பெரிதும் சிந்தித்தவாறு மனத்திடத்து கவலைப்பட்டான். 37

மயர்வொடு துறக்க மன்னன் மனோவதி யென்னு மாண்டை
வியனக ரெய்தி யாங்கண் வீற்றிருந் தருளும் பொன்னின்
இயன்முறை மனைவி தன்பால் இல்லினை யிருத்தல் செய்தாங்
கயனுறு கடிமாண் கோயி லடைந்தனன் அமர ரோடும்

இவ்வாறு சொர்க்க நாடாளும் அரசனுகிய இந்திரன் பெரிதும் மன அயர்ச்சி கொண்டு பிரமதேவரின் இருப்பிடமான மனோவதியைச் சேர்ந்து அங்கே வீற்றிருந் தருளும் வியாழ பகவானின் மனைவி இடத்து தனது மனைவியாகிய இந்திராணியைக் காவலாக வைத்துவிட்டு அங்கு மாட்சிமையுடைய பிரமதேவரின் காவலுடைய கோவி லின் பால் தேவர்களோடும் சென்றருளினுன் இந்திரன். 38

இனையதோர் காலை முக்க ணெம்பிரான் ஞானபோதம்
முனிவரர்க் குணர்த்தி வைகும் முறையினுற் படைப்பின் ருகித்
துனியொடு வேதா வைகுந் தொன்முறை யவையை நண்ணி
அனையவன் கழன்முன் ருழூஉ அளப்பில வழுத்தி நின்ருன்.

இவ்வாருகிய காலையில் எம்பெருமான் திருக்கைலாய மலையில் சனகாதி நால்வ ருக்கு ஞானபதத்தினை உணர்த்துதலாலே தனது படைப்புத் தொழில் கைகூடாதொ ழிந்து போதலினுல் பெருங் கவலையெய்தியிருக்கின்ற பிரமதேவரின் திருவடிகள் முன் பாகத் தாழ்ந்து ணங்கி அளவு கடந்த தோத்திரங்களைச் சொல்லி பிரமதேவரை வழுத்தி இந்திரன் நின்ருன். 39

நிற்றலும் மகவான் றன்னை நீடருள் புரிந்து நோக்கிப்
பொற்றனிக் கமல மேய புங்கவர் முதல்வன், வானோர்
கொற்றவ வந்த தென்னை கூறுதி யென்ன லோடுஞ்
சொற்றனன் சூர பன்மன் செய்திடுந் துன்ப மெல்லாம்

இவ்வாறு இந்திரன் வணங்கி நிற்றலும் அவனை பொன்னுலான தனித் தாம ரைமலர் மேலிருக்கும் பிரமதேவர் நீடித்த அருள்புரிந்து பார்த்து தேவர்களுக்கு அரசனே! நீ இங்கு வந்தது என்ன காரணமாக என்பதைச் சொல்வாயாக என பிரம தேவர் கேட்டலும் அப்போது இந்திரன் சூரபன்மன் தனக்குச்செய்த துன்பம் எல்லாவற்றையும் சொல்லி நின்ருன். 40

வெய்யதோர் சூரன் செய்கை விளம்பியே முனிவர்க் கீசன்
ஐயமி லுணர்வு காட்டி யமர்வது முரைத்துத் தான்பின்
செய்யுறு தவங்கண் டன்னுன் அருளிய திறனுஞ் செப்பி
உய்வதோர் பரிச தென்னே உம்பரும் யானு மென்ருன்.

கொடுமையான சூரனுல் தனக்கு நேர்ந்த துன்பமெல்லாவற்றையும் இந்திரன் பிரமதேவருக்கு சொல்லிவிட்டு பின்னரும் இந்திரன் சொல்கிருன் ஐயனே! கேளும் சனகாதி முதல் நான்கு முனிவர்கட்கு சிவபிரான் சந்தேகமில்லாத உணர்வைக் காட்டி யருளியவாறு யோகத்து அமர்ந்தருளுகிருர். ஆனுல் ஈசன் தான்செய்த தவத்தைக் கண்டு தனக்குத் தோற்றியருளி ஈசன்பால் ஒரு குழந்தை தோன்றி எங்கட்கு அருள் செய்வார் எனவும் ஈசன் வரம் அருள் செய்திருக்கிருர் என்று தான் தவஞ் செய்த வரலாறு யாவற்றையும் இந்திரன் கூறிவிட்டு பின்னர் சொல்வான் ஐயனே யானும் தேவர்களும் உய்யும் மார்க்கம் எப்படி, அதை நீர் கூற வேண்டுமென்ருன். 41

என்றலும் மலரோன் கேளா எவர்க்குமே லாகு மீசன்
ஒன்றிய வருளி னேனும் உற்றவர்க் குதவு வோனும்
அன்றியும் முறைசெய் வோனு மாதலின் முனிபோல் வெள்ளிக்
குன்றிடை யெம்மை யாளுங் குறிப்பின்வீற் றிருந்தா னன்றே

என்றலும் இதனை பிரமதேவர் கேட்டு சொல்கிருர். இந்திரனே! எவர்க்கும் மேலானவன் ஈசன், அவர் முற்றிலும் அருளே உடையவர். அவர்பால் தீங்கு எக்காலமும் இல்லை. அதோடு தன்னையடைந்தார்க்கு எதையும் உதவுவார். அஃதல்லாமலும் யாவர்க்கும் அவர் அவரவர் வினைக்கேற்ப முறைசெய்பவர் ஆனமையால் அவர் தபோதனர்க்கு யோகத்தை அருளியவாறு முனிவரே போல் கைலைமலை மேல் வீற்றிருத்தலும் எங்களை ஆட்கொள்ளுவதற்கே அவ்வண்ணம் வீற்றிருக்கிருர் என்பது தெளிவாகிறது. 42

செங்கண்மா ருனும் நானுந் தேடுதற் கரிதாய் நின்ற
எங்கடம் பிராற்கு மேலாய் எண்ணவோர் தேவு முண்டோ
அங்கவன் ஞான போதம் அறிவருக் குணர்த்தி வைகல்
நங்குறை முழுது மாற்றும் நல்லரு ளாகு மன்றே.

இந்திரனே இன்னும் கேள், சிவந்த கண்ணினையுடைய விஷ்ணு மூர்த்தியும் நானும் தேடுவதற்கும் அரிதாய் நின்ற எம்பிரானுக்கு மேலாக எண்ணவோர் கடவுள் உண்டோ? ஆகவே ஞானபோதத்தினை அறிவாளிகளான சனகாதி முதல் நால்வர்க்கும் உணர்த்தி நிற்றல் எங்கள் குறைகள் முழுவதையும் நீக்கியருளும் பொருட்டாகவே என்பதை நீ நினைவாயாக. 43

படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பகவனு ருயிர்க ளெல்லாம்
அடுவதும் வருத்தந் தீர்க்கு மாரரு ளான வாபோல்
கொடியவெஞ் சூரன் றன்னைக் கொண்டெமக் கலக்கண் செய்கை
விடலரும் பவப்பே ருர்த்தி வீடருள் கருணை யன்றே.

அழகாகப் மொலிந்து இலங்கும் இளம்பிறையணிந்த கடையுடைய எம் சிவ மூர்த்தி உயிர்களைச் சங்காரம் செய்தலும், அந்தந்த உயிர்களின் வருத்தம் தீர்க்கும் பேரருள் என்பதை உணர்வாயாக. அதேபோல கொடிய சூரபன்மனைக் கொண்டு எமக்கு அலக்கண் துயரம் செய்வித்தலும் எம்மால் நீக்க முடியாத வினையினை நீக்கி யருளி முத்தியின்பத்தை எமக்கு ஈந்தருளும் கருணையாகும் அன்றே. 44

**பெற்றிடுங் குரவ ரானோர் பிள்ளைகள் தம்பால் நோயொன்**
**றுற்றிடிற் பிறரைக் கொண்டும் உறுதுயர் செய்து தீர்ப்பார்**
**மற்றவர் தம்பா லன்போ வன்கணோ அதுபோல் நம்பாற்**
**பற்றிய பவங்கள் தீர்ப்பான் பரமனு மிவைகள் செய்தான்.**

பிள்ளையைப் பெற்ற தாய் தந்தையர்கள் தங்கள் பிள்ளைகள் பால் நோயொன்று காணப்பெறின் பிறரைக் கொண்டு பிள்ளை கதறக் கதற கசப்பான மருந்தைக்கொடுத்து, ஊசி ஏற்றல், சத்திர வைத்தியம் முதலிய செயல்களைச் செய்வித்தும் நோயைத் தீர்ப்பார்கள். அவ்வாறு அவர்கள் செய்விப்பது மற்றும் தங்கள் குழந்தைபால் அன்போ, கொடுமையோ அதேபோல எம் பரம பிதாவும் சூரனைக் கொண்டு இச் செயல் செய்விக்கிறான். 45

**தெருமரு கின்ற நம்பாற் றீங்கெலாம் நீங்கு மெல்லை**
**ஒருசிறி தணுகிற் றாகு மாதலால் உணர்வின் மேலோன்**
**பரிவொடு நின்பால் வந்து பரிகிவை யருளிப் போனான்**
**இருவினைப் பௌவ வேலை ஏறினம் போலு மன்றே.**

எம்மைத் தீங்கு செய்கின்ற எம்பாலுள்ள தீவினை யாவும் நீங்குகின்ற எல்லை இப்போது ஒரு சிறிது வந்துற்ற தன்மையால் உணர்வெல்லாவற்றிற்கும் மேலோராகிய கடவுள் உள்ளப் பரிவோடும் உன்பால் வந்து இவ்வாறு தம்மிடத்தில் தோன்றும் குழந்தையால் உன் துயர் நீங்குமென பரிவோடு அருள்செய்து போனார். ஆகவே நாம் எல்லாரும் கொடிய பெருவினையின் கடல் நின்றும் கரையேறினோம் ஆனோம். 46

**ஆதலின் இறைவ னேமே லருள்செய்யும் அதற்கி யாமுந்**
**தீதற முயலு மாறு சிறிதுள திவற்றை மாயோற்**
**கோதினம் வேண்டுஞ் செய்கை யொல்லையிற் செய்து மென்னா**
**ஏதமில் கமலப் புத்தேள் இருக்கைவிட் டெழுந்தா னன்றே.**

ஆதலின் கடவுளே நமக்கு இன்னும் அருள் செய்யவேண்டும். அதற்காக அவர் அருள் செய்வார் என்று சும்மா இருத்தல் கூடாது. நாமும் எமது துயரம் நீங்குமாறு முயற்சி செய்தல் சிறிது உள. இவற்றையெல்லாம் நாராயணப்பெருமானுக்கு சொல்லியருளி மேற்கொண்டு நாம் செய்ய வேண்டியதை அவர்பால் கேட்டுத் தெளிந்துகொள்வோம். ஆகவே விஷ்ணு பெருமானிடத்து செல்வோம் புறப்படுவாயாக என சொல்லிவிட்டு பிரமதேவர் தாமும் விஷ்ணு மூர்த்திபால் செல்வதற்குத் தனது இருக்கையைவிட்டு எழுந்தருளினர். 47

## வேறு

அன்ன காலை யதுநன்று நன்றெனத்
துன்னு வானவர் சூழலொ டிந்திரன்
பின்ன ராகப் பெயர்ந்துடன் வந்திடச்
சென்னி நான்கினன் செல்லுதல் மேயினன்.

அவ்வாறாகிய நேரத்து இந்திரன் அது நல்லது அப்படியே செல்வோம் என தன்னோடு சூழ்ந்து வந்த தேவரும் எழுந்து பின்னராகத் தொடர்ந்து வர நான்கு தலைகளைக் கொண்ட பிரமதேவர் தாம் முன் செல்வாராயினர். 48

ஞாலம் யாவையும் நல்கிய புங்கவன்
வாலி தாந்தன் மனோவதி நீங்குறு
மேலை வைகுந்த மென்னும் வியனகர்
ஆல யத்தின் அகன்கடை யேகினன்,

இப்பூமி முதல் சகல உலகங்களையும் படைத்த பிரமதேவர் தாம் விரும்பும் இருப்பிடமான மனோவதியை விட்டு நீங்கியருளி உலகில் மேலாக விளங்குகின்ற வைகுந்தம் எனும் மேலான நகரில் காணப்படும் விஷ்ணு பெருமானின் ஆலயத்தின் அகன்ற முதற் கடைவாய்தலை சேர்ந்தருளினர், தன்னோடு பின் தொடர்ந்த இந்திரன் முதல் தேவரோடும். 49

அங்க வெல்லை யதுகண்டு நேமியுஞ்
சங்கு மேந்திய தானையங் காவலன்
செங்கண் மாயன்முன் சென்றுவிண் ணோருடன்
பங்க யத்தன் படர்ந்தது செப்பினன்.

அவ்வாறு பிரமதேவர் வைகுந்தத்து நாராயணக் கடவுளின் கோவில் வாய்தலைச் சென்று சேர்தலும், அப்போது வாய்தலிலே காவல்கொண்ட சங்கும் சக்கரமும் ஏந்திய விண்டுசேனன் எனும் சேனைக் காவலன் வாயிலில் காப்போன் ஆனமையால் இவர்களைக் கண்ணுற்றபோது உடன் நேரே உள் சென்று நாராயணப் பிரான் திருமுன்பு போய் சொல்வான்; பெருமானே! தேவர்கள் பலருடன் தாமரை மலர் ஆசனராகிய பிரமதேவர் வந்திருக்கிறார் என அங்குற்ற நிலையைக் கூறியருளினன். 50

பணில மேந்திய பண்ணவன் அன்னரைக்
கொணர்தி யாலெனக் கூறி விடுத்துழி
இணையில் காவல னுய்த்திட இந்திரன்
கணமொ டேகினன் காசினி நல்கியோன்.

சங்கைக் கையிலேந்திய கடவுளாகிய நாராயணப் பெருமான் அவர்களை இங்கு கொணர்வீராக என செப்பி விண்டுசேனனை விடுத்தலும் அப்போது இணையற்ற காவலனாகிய விண்டுசேனன் திரும்பச் சென்று பிரமதேவர் இந்திராதிபர் யாவரையும் அழைத்து வந்து விஷ்ணுபெருமான் திருமுன்னர் அழைத்துச் செல்ல இந்திரன் முதல் தேவரோடு சென்றான், பூமியைப் படைத்தோனாகிய பிரமதேவன். 51

பொருவில் மாமுனி புங்கவர் போற்றுதன்
னுருவு கொண்ட வுலப்பறு கண்ணர்கள்
மரபி னேத்த மணிப்பணிப் பீட.மேல்
அரியி ருந்த அவைக்களம் நண்ணினன்.

நிகரற்ற பெரும் முனிவர்களும் தேவர்களும் போற்றும்படியான நாராயணப் பெருமானின் உருவங்கொண்ட அளவற்ற கண்ணர்கள் போற்றும்படியாக முத்தினுல் ஆக்கப்பெற்ற பீடமேலாக நாராயணக் கடவுள் இருந்த சபையை பிரமதேவர் சேர்ந்தார். 52

அன்ன மூர்த்தி அமருல காளுறும்
மன்ன னேடுமவ் வானவர் தம்மொடும்
பன்ன காசனப் பங்கயக் கண்ணவன்
பொன்னின் மாணடி போற்றி வணங்கினன்.

அன்ன வாகனமுடைய அப்பிரமதேவர் தேவருலகாளும் மன்னனுகிய இந்திர னேடும் அத்தேவரோடும் சென்று அனந்தன் என்னும் பாம்பின் மேலாக ஆசனம் கொண்டவரும் தாமரைக் கண்ணர் என்பவருமாகிய நாராயணப் பெருமான் மலரடி மீது பணிந்து நின்றனர் பிரமதேவர் இந்திரன் முதலியோர். 53

தரைய ளந்திடு தாளினன் அவ்வழிக்
கருணை செய்துதன் காதல னுகிய
பிரம னுக்கொரு பீடிகை பெற்றியால்
அருளி யங்கண் அவனை இருத்தினன்.

இப்பூமியை அளந்திடுகின்ற திருவடியினையுடைய நாராயணப் பெருமான் அவ்வழி கருணைசெய்து தனது புத்திரனுகிய பிரமதேவருக்கும் ஒரு ஆசனத்தை முறை யாக இட்டு நல்லருள் செய்து பிரமதேவரை அந்த ஆசனத்தின் மேலாக இருத்தியரு ளினுர். 54

குல்லை மாமுடிக் கொண்டவன் அத்துணை
அல்லி மாம லரண்ணலை நோக்குறீஇ
ஒல்லும் நின்விதி யூறில தாகியே
செல்லு கின்றகொல் என்றலுஞ் செப்புவான்.

துளசிமலர் மாலையை முடிமேல் அணிந்தருளிய நாராயணக் கடவுள் அத்துணை யில் தாமரை மலர் மேலிருந்தருளும் பிரமதேவரை நோக்கியருளி பிரமனே! மகனே! உலகெலாம் இயல்பாகவே நிகழ்ந்துவரும் உனது படைப்புத் தொழில் ஓர் இடையூறுமின்றி நடந்து வருகிறதோ எனக் கேட்டருள பிரமதேவர் சொல்லியருளு கிறுர். 55

கனகன் அச்சுறக் கந்திடை வந்தெழும்
அனக இத்திறங் கேட்க அறிவுடைச்
சனகன் முற்படு தாபதர் நால்வரும்
என்க ருத்திடை முற்பக லெய்தினர்.

பொன்மேனியுடைய இரணியன் அச்சுறும்படியாக அன்று தூணிலே வந்துதோன்றியருளிய நரசிங்கப் பெருமானே! இத்தன்மையைத் தேவரீர் கேட்டருளுக, அறிவு முதிர்ந்த சனகன், சனற்குமாரன், சனதனன், சதானந்தன் என்னும் நான்கு பிள்ளைகள் முன்னொரு நாள் எனது மனத்தினின்றும் தோன்றினர். 56

அறிவின் மிக்க அனையரை நோக்கியான்
பெறுவ தாமிப் பெருந்தொழி லாற்றியீண்
டுறுதி ரென்ன உளத்தது கொண்டிலர்
முறுவல் செய்து மொழிந்தனர் இவ்வுரை.

அவ்வாறாக அறிவின்மிக்க அவர்கள் நால்வரையும் நான் பார்த்தருளிக் கூறினேன். எனது மைந்தர்களே! யான் ஈசன் அருளால் பெற்ற இந்த படைப்புத் தொழிலை நீவிரும் செய்து இவ்விடத்து என்னோடு இருப்பீராக என எனது புதல்வர் நால்வரும் அதை ஏற்காது என்னைப் பார்த்து புன்சிரிப்புக்கொண்டு இந்த வார்த்தையை எனக்குச் சொன்னார்கள். 57

பாச வன்சிறைப் பட்டுப் படைப்பெனப்
பேச லுற்ற பெருந்தளை பூணலம்
ஈசன் மாணடி யெய்துதும் யாமென
மாசில் காட்சியர் வல்விரைந் தேகினர்.

தந்தையே பாசம் என்னும் சிறையிலே நாங்கள் அடைபட்டு படைப்பு எனப்பேசலுற்ற பெரிய விலங்கைப் பூணமாட்டோம். நாங்கள் ஈசனுடைய திருவடி கூடுவோம் எனப் பேசி மாசில்லாத நற்காட்சிப் பேறுடையாராய் அனைவரும் வலுவிரைவாக என்னை விட்டுச் சென்றார்கள். 58

மாத வத்தினை மைந்தர்க ளாற்றலும்
ஆதி நாயகன் அவ்வுழி வந்துமக்
கேது வேண்டிய தென்றலு மெண்ணிலா
வேத வுண்மை விளம்புதி யாலென்றார்.

அவ்வாறு எனது பிள்ளைகள் பெரிய தவத்தினைச் செய்தலும், ஆதியாகிய சிவபிரான் அவ்வழித் தோற்றியருளி உமக்கு ஏது வேண்டியது என்றலும் அப்போது எனது பிள்ளைகள் நால்வரும் பெருமானை பிரார்த்தித்து ஆதி பகவனே அடியேங்கட்கு வேத உண்மையை விளம்புவீராக என்று வேண்டினர்கள். 59

என்ற லோடும் இறையவன் வெள்ளியங்
குன்ற மீதுதென் கோட்டிடை நிற்புறும்
ஒன்ரெு ரானிழல் உற்று மறையெலாம்
நன்று ணர்த்திட நால்வருந் தேர்ந்தனர்.

என்று அவர்கள் கூறியருளலோடும் இறையவன் திருக்கைலாய மலையின் தென்புறத்து நின்றருளுகின்ற ஒரு பெரிய தன்னிகர் பிறிதிலாத ஆல விருட்சத்தின் கீழ் வீற்றிருந்தருளி வேதங்கள் யாவற்றையும் நன்ருக உணர்த்தியிட நால்வரும் தேர்ந்து கொண்டனர். 60

முந்தை வேத முழுது முணர்த்தியே
எந்தை யேக, இருநிலம் போந்துதஞ்
சிந்தை யொன்றும் திறனரி தாதலின்
நொந்து பின்னரும் நோற்றலே மேயினர்.

கல்லால விருட்சத்தின்கீழ் இறைவன் இவ்வாறு அமர்ந்தருளி முனிபிள்ளைகள் நால்வர்க்கும் வேதங்களை உணர்த்திவிட்டு ஈசன் மறைந்தருள அப்போது இப் பிள்ளைகள் பூமியில் வந்து, இப்பூமியில் தமது மனம் அடங்கி ஒன்றும் படியாக முயன்றார்கள். அப்போது அச் செயல் கைகூடாது அரிதாதலும் மனம் நொந்து பின்னருந் தவஞ் செய்தலைப் பொருந்தினர்கள். 61

பின்னும் மைந்தர் பெருந்தவ மாற்றியே
தொன்ன லம்பெறு தூய வுளத்தராய்
என்னை யாளுடை யீச னருளினல்
மன்னும் வெள்ளி வரையிடை யேகினர்.

இவ்வாறு நால்வரும் பின்னரும் பலநாள் பெருந்தவம் ஆற்றுதலும் தவத்தினல் இயல்பான தமது நலம்சேர அப்போது அவர்கள் தூய உள்ளத்தராகி என்னை ஆளுடைய ஈசன் அருளினல் மேலாக மன்னி விளங்கும் திருக்கைலை மலைமேல் சென்ருர்கள். தவத்தின் பேற்றினல் ஆசை வஞ்சனை நீங்கிய தூய உள்ளம் இறைவன்பால் சேர்க்கும் எனும் கருத்தை இங்கே காண்க. 62

ஏகல் பெற்றிடு மக்கட் கினிதுளம்
பாக முற்ற பரிசுணர்ந் தெம்பிரான்
ஆக மத்தின் அரும்பதம் மூன்றையும்
ஓகை பற்றி யுணர்வகை கூறியே.

அவ்வாறு கைலைமலைமேல் தவமேம்பாட்டால் சென்றருளப்பெற்ற எனது பிள்ளைகள் நால்வர்க்கும் உள்ளமானது தூய்மையாகி ஆசை வஞ்சனை கபடங்கள் நீங்கிப் புனிதமான தன்மையை உயிர்க்குயிராகிய எம்பிரான் உணர்ந்தருளி ஆகமங்களின் அரிய பதங்களாகிய சரியை, கிரியை, யோகம் எனும் மூன்றையும் உள்ளப் பெருங் கருணை யானந்தம்பற்றி உணர்வகை கூறினர். சரியை, கிரியை, யோகம் ஆதியன யாவும் உள்ளே விளையும் ஆனந்தந்தைப் பெறுவதானமையால் ஓகைபற்றி உணர்வகை

கூறினர் என்றார். இதனை யோக சுவாமிகளும் உவமை கடந்த இன்பம் எல்லாரி டத்திலும் உண்டு, தவம்செய்வார் தாமறிவர் தப்பார் என அருமையாகக்கூறியுள்ளார் 63

கூனன் மாமதிக் கோடு மிலைச்சிய
வான நாயகன் மற்றவர் காண்டக
ஞான போதம் நவிலருந் தன்மையால்
மோன மேய முதற்குறி காட்டினன்.

கூனிய பிறையை முடிமேல் அணிந்தருளிய பரவெளியுங் கடந்த பெருமான் மற்றும் அவர்கள் காணும்படியாக நான்காவது பதமாகிய ஞானபோதமானது சொல்லரும் தன்மையாக இருப்பதால் ஈசன் அதனை மோனம் பொருந்திய முதற் குறியாகிய ஞான யோகியாகத் தான் ஒருகணம் அமர்ந்தருளி குறியால் உணர்த்தியருளினர்.

அந்த வெல்லை யரனருள் கண்டுதம்
புந்தி யொன்றியப் புங்கவன் தாள்மலர்
சிந்தை செய்து செயலற்று வைகினர்
முந்தி யாப்புறு முத்தளை மூட்டற.

அந்தவெல்லை அப்பிள்ளைகள் நால்வரும் தமது மனமானது ஒருப்பட்டு அங்கு ஞானமூர்த்தியாய் அமர்ந்தருளிய பெருமான் தாள் மலரை மனத்தில் எழுகின்ற அன்போடும் வழிபட்டு தியானித்தருளி செயலற்று வைகினர். முன்னரே அவர்களை இந்நிலையெய்த முடியாதபடி கட்டிப்பிணித்து வைத்திருந்த ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று தலைகளும் கட்டு நீங்கிவிட, 65

வேத நாயகன் மெய்த்தவர்க் கோர்கணம்
போத யோகின் பொருண்மையைக் காட்டுழி
ஓத லாகும் உகம்பல சென்றன
சீத வானதி சேர்ந்ததொன் றுளினே.

வேத நாயகன் மெய்த்தவர்க்கு ஓர்கணம் ஞானபோத நிலையான போதத்தை உணரும் யோகியின் நிலையைக் காட்டும்போது அக்கணமானது எம்மாலும் சொல்லொணுத பல உலகங்களாகச் சென்றுள்ளன, அது முன் கங்கைநதி தோன்றிய அக் காலம்போல. 66

அன்னை தன்னை அகன்றரன் யோகிபோல்
என்ன துஞ்செய வின்றி யிருத்தலான்
முன்னை ஆண்பெண் முயக்கம தின்மையாய்
மன்னு யிர்த்தொகை மல்கலின் றுயதே.

அன்னை தன்னை அகன்று எம்பிரான் யோகிபோல ஏதும் செயல் இன்றி இருத்தலால் முன்னே தோன்றிய ஆணும், பெண்ணும் கூடும் முயற்சி அற்றுப்போய் விட்டதால் உலகத்து உயிர்த் தொகை பெருகல் இல்லாது போய்விட்டது. 67

நவிறல் என்னினி ஞாலம் விசும்புளார்
இவறு காமப் புணர்ச்சிய தின்றியே
கவறல் கொண்டு கலங்கஞ ரெய்தினர்
தவறல் கொண்டது நல்குந் தனிச்செயல்.

நான் இனி வேறு என் சொல்வேன்? பூமியில் வாழ்பவர் அல்லது தேவ உலகில் வாழ்வார் யாவரும் நெருங்கிப் பொருந்தும் காம உணர்ச்சி இல்லாமல் கவலை கொண்டு கலக்கம் கொண்டார்கள். ஆகையால் என் ஐயனே தவறல் கொண்டது எனது படைக்கின்ற எனது தனிச் செயலும். 68

நல்கல் பெற்ற தமியனும் நாமகட்
புல்கல் பெற்ற புணர்ச்சியின் ருகியே
அல்கல் பெற்ற அருந்தவ யோகரின்
ஒல்கல் பெற்றனன் உண்மையி தாகுமால்.

எல்லாவற்றையும் படைக்கின்ற தமியேனும் எனது மனைவியாகிய நாமகள் என்பாளை அணைத்து சேர்கின்ற புணர்ச்சி இல்லாமல் எல்லாவற்றினின்றும் ஒடுக்கம்பெற்ற தபோதனரைப் போல் எனது இந்தச் செயல் செய்ய முடியாதபடி ஒடுக்கப் பெற்றேன் இது உண்மையான வார்த்தை என்றால் என் மனைவியை அணைத்த போதும் கருமம் முடியாதிருக்கிறது. 69

நிற்க இங்கிது நித்தன்வ ரத்தினல்
ஒற்க மில்வள னுண்டிடு வெய்யசூர்
எற்கும் நித்தலு மேவலொன் றிட்டனன்
சொற்க நாட்டில் துயரினை நாட்டினன்.

இது ஒரு புறமிருக்க நித்தனை ஈசன் வரத்தினல் நிகரற்ற செல்வங்களை அனுபவிக்கும்படி பேறுடைய சூரபன்மன் எனக்கும் நித்தலும் ஒரு பணியைச் செய்யும்படி கட்டளையிட்டுள்ளான். அதுவுமல்லாமல் தேவ உலகிற்கு துன்பத்தையே எஞ்ஞான்றும் நாட்டியுள்ளான். 70

தேசு நீங்குறு தேவரை ஈண்டுள
வாச வன்றனை மாதிரத் தோர்களைப்
பாச னத்தொடு பற்றினன் நித்தலுங்
கூச லின்றிக்குற் றேவல்கொண் டானரோ.

தேசு நீங்கிய தேவரை, இதோ என்னோடு வந்த இந்திரனை, திக்கிலே இருக்கும் காவல் தேவர்களை எல்லாரையும் அவரவர்களுடைய பரிவாரங்களோடும் பற்றிப் பிடித்து நித்தலும் ஓயாத கொடிய அடிமை வேலைகளை அவர்கள் செய்யுமாறு கொஞ்சமேனும் கூச்சமில்லாது செய்வித்து எல்லாரையும் தனது குற்றேவல் செய்யும்படி அடிமையாக்கியுள்ளான். 71

நிறைபு ரிந்த நிலவினை வாளரா
மறைபு ரிந்தென வானகத் தோருடன்
இறைபு ரிந்தவிவ் விந்திரன் மைந்தனைச்
சிறைபு ரிந்தனன் தீத்தொழி லாற்றியே.

நிறையான பூரண சந்திரனை இராகுவான பாம்பு தனது படத்தால் மறைத்தருளும் தன்மைபோல தேவர்கள் பலரோடும் தேவர்களை ஆளுகின்ற இந்த இந்திரன் மைந்தனுன சயந்தன் என்பானை எக்காலமும் நீங்காத சிறையில் இட்டு வைத்திருக்கிறான் சூரபன்மன். 72

நிரந்த பல்லுயிர் தங்கட்கு நித்தலும்
அரந்தை மல்க அறிகிலன் போலவே
இருந்த னன்சிவன் என்னினிச் செய்வது
விரைந்து கூறுதி யென்று விளம்பினான்.

இவ்வாறு உயிர்கள் எல்லாவற்றையும் நாள்தோறும் சூரன் துன்பம் செய்யவும் அதைத் தாமறியாதவர்போல எமது ஈசனாகிய சிவபிரான் யோகத்து வீற்றிருந்தருளுகிறார். ஆனமையால் நாம் இனிச் செய்வது என்னவாகுமோ அறியோம். ஆகையால் நாராயணப் பெருமானே, நாம் இனிச் செய்யவேண்டியவற்றை அறிந்து கூறியருள்வீராக என்று பிரமதேவர் விளம்பியருளினார். 73

அரிய தத்துவம் ஐயைந்தின் பேதமும்
மரபின் நாடினர் வாலுணர் வெய்திய
திருவி னாயகன் செங்கம லந்திகழ்
பிரமன் மாமுகம் நோக்கின் பேசுவான்.

அப்போது அரிதான தத்துவங்கள் இருபத்தைந்தின் பேதங்கள் அனைத்தையும் நன்கு மரபால் நாடினோர்கள் உணரப்பெறும் பெரும் பொருளாகிய மகாலெட்சுமி நாயகராகிய நாராயணக் கடவுள் சிவந்த தாமரைமலர் மேல் திகழுகின்ற பிரமதேவர் முகம்நோக்கிப் பேசியருள்கிறார்.

நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம் என வரும் திருப்பிரபந்தப் பாடற் கருத்தை இங்கு ஒப்பநோக்குக. 74

## வேறு

ஆவிக ளனைத்து மாகி அருவமா யுருவ மாகி
மூவகை யியற்கைத் தான மூலகா ரணம தாகுந்
தேவர்க டேவன் யோகின் செயல்முறை காட்டு மென்னில்
ஏவர்கள் காமங் கன்றித் தொன்மைபோ லிருக்கும் நீரார்,

ஆவிகள் அனைத்தும் ஆகியும் வடிவம் இல்லாத அருபியாகியும் வடிவங்கள்கொள்கின்ற ரூபமுடையவராகியும், படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூவகை இயற்கைப்பாடுகளையும் தானே மூலமாகக் கொண்டு எவைக்கும் மூலகாரணமாகின்ற சிவபிரான், தேவாதிதேவன் யோகத்தின் செயல்முறை காட்டுவார் என்றால் பின்னர் இங்கு எந்த இடத்தில் யார் காம உணர்ச்சி கொண்டு முன்போல இருக்கமுடியும்? 75

ஊழ்வினை நெறியால் முன்ன மொருபெரு வேள்வி யாற்றித்
தாழ்வினை யடைந்த தக்கன் றன்புடை யிருந்தோர் தம்பாற்
சூழ்வினை யெச்ச முற்றும் அருத்தியே தொலைத்துத் தொல்லை
வாழ்வினை யருள நாதன் மனத்திடை நினைந்தா னன்றே.

ஊழ்வினை நெறியாலே தக்கன் ஒரு பெரும் யாகத்தைச் செய்து தானே அதனால் தாழ்வினை அடைந்தான். அவன் பக்கராக இருந்தோராகிய உங்கட்கும் அவன் செய்கையால் தீவினை சேர்ந்தது. முன்னர் வீரபத்திர தேவரைக் கொண்டு தண்டித்தும், எஞ்சி இருப்பதை முற்றிலும் நாம் அனுபவிக்கும்படிசெய்தும் அப்பாவத்தைத் தொலைத்த பின்னர்தான் பழைய எமது வாழ்வை அருள நாதன் மனத்திடை நினைந்தான். 76

சூரெனு மவுணற் காற்றல் புரிந்ததுஞ் சுரர்கள் யாருஞ்
சார்வருந் திறத்தால் ஈசன் தவத்தருக் குணர்வு காட்டி
ஆருயிர் எவைக்கு மின்ன லாக்கிய வாறுந் தூக்கிற்
பேரருள் முறையே யன்றிப் பிறிதொரு செயலு மன்றால்.

இப்போது எம்பெருமான் சூரபன்மனுக்கு வலிமையைக் கொடுத்ததும், தேவர்களை அவன் வருத்த தேவர்கள் தங்கள் குறைவிளம்பி வருத்தம் நீங்க ஈசனையடைய முடியாதபடி ஈசன் யோகத்து அமர்ந்திருந்து தபோதனர்க்கு உணர்வு காட்டியவாறு இருந்தபடியால் உயிர்களுக்கு இன்னலை விளைவித்தவாறும், நாம் ஆராய்ந்து பார்த்தால் ஈது இறைவனுடைய பேரருள் முறையேயன்றி பிறிதொரு செயலும் அன்று. 77

முனிவருக் குணர்வு காட்டும் மோனத்தை முதல்வன் நீங்கிப்
பனிவரை அணங்கை மேவில் படைப்பயன் முற்றும் அன்னார்க்
கினியொரு குமரன் தோன்றில் சூர்கிளை யனைத்தும் பொன்றுந்
துனியுறும் உலக மெல்லாந் தொன்மைபோ லுய்யு மாதோ.

முனிவர் நால்வர்கட்கும் உணர்வுகாட்டுகின்ற மோனத்தை முதல்வனான சிவபிரான் நீங்கியருளி பனிப்படலம் மூடிய இமயமலையில் தவம் செய்திருக்கின்ற உமையம்மையாரைத் திருமணமாகக் கூடினால் பிரமதேவரின் படைப்பு கைகூடும், அதோடு இறைவனுக்கும், இறைவிக்கும் இனி ஓர் குழந்தை தோன்றினால் அசுரர் குலம் முழுவதும் அழியும். இப்போது கவலையால் மூழ்கித் துன்புற்ற உலகமெல்லாம் பழமையாக உய்யுமென அறிக. 78

அத்திற முற்று மாறென் றறைகுவன் அகிலந் தன்னில்
எத்திறத் தருமால் கொள்ள வெய்திடுங் காமன் றன்னை
உய்த்திடின் முனிவர் தங்கட் குணர்வுசெய் மோனம் நீங்கிச்
சத்தியை மணந்து சேயைத் தந்திடு மெந்தை யென்றான்.

அத்திறமாக அவர்கள்பால் இச்செயல்கள் கூடும்படி வழியொன்று சொல்லுவேன். அது யாதெனில் உலகத்தில் எத்திறத்தரும் மால் கொள்ளும்படி மலராகிய பாணங்களைச் செலுத்தி மயங்கச்செய்யும் மன்மதனாகிய காமனை அங்கு யோகத்திருந்தருளும் பெருமான்பால் செலுத்தி பாணப்பிரயோகம் அவர்பால் செய்தால் உடனே தபோதனர்க்கு உணர்த்துகின்ற தனது யோகத்தைவிட்டு நீங்கி சக்தியாகிய உமையம்மையைத் திருமணம் செய்து குழந்தையைத் தந்திடுவர் எந்தையாகிய ஈசன் என்றார் விஷ்ணுபிரான். 79

பதுமபீ டிகையோ னன்ன பரிசுதேர்ந் துவகை யெய்தி
இதுசெயல் முறையே எந்தாய் ஏற்றன புகன்றா யென்ன
அதுபொழு தவனை நோக்கி அச்சுதன் அமலன் றன்பால்
மதனனை விளித்து வேண்டி விடுத்திநீ வல்லை யென்றான்.

தாமரை மலர் மேலாசனராகிய பிரமதேவர் இவற்றைக் கேட்டுச் சிந்தித்து, தெளிந்து பெரிதும் மகிழ்வாகி எனது தந்தையே இச்செயல் முறையானது, இப்போது எங்கட்கு ஏற்றதே புகன்றீர் என்று கூறியருள அவற்றை நாராயணக் கடவுள் கேட்டருளி பிரமதேவரைப் பார்த்து உடனேயே மன்மதனை நீ அழைத்து சிவபிரான்பால் சென்று அவனைஇதைச் செய்யும்படி வேண்டி விடுப்பாயாக. இதனை அதி விரைவாகச் செய்யெனக் கூறினார். 80

என்னலும் மலரோ னுள்ளத் திசைவுகொண் டெழுந்து மாயன்
பொன்னடி வணக்கஞ் செய்து விடைகொடு புலவ ரோடும்
மன்னெடு மங்கண் நீங்கி மனோவதி அதன்பாற் சென்று
தன்னக ரடைந்து கஞ்சத் தவிசின்வீற் றிருந்தா னன்றே.

என்று நாராயணக் கடவுள் கூறலும் பிரமதேவர் உள்ளத்து இசைவுகொண்டு சம்மதித்து எழுந்து நாராயணப் பெருமானின் பொன்போலும் பாதத்தை வணக்கஞ் செய்து விடைபெற்றுக்கொண்டு தேவர்களோடும் இந்திரனோடும் அவ்விடத்தைவிட்டு நீங்கி தனது இருப்பிடமாகிய மனோவதியதனிடத்து வந்து சேர்ந்து தனது நகரத்தை அடைந்து தாமரையாகிய தமது சிம்மாசனத்தில் பிரமதேவர் வீற்றிருந்தருளினார். 81

மேருப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 491.

# 4. காமதகனப் படலம்

இந்திரன் வானவர் ஈட்டமொ டேகி
முந்துறு கஞ்ச முகட்டிடை யுற்ருேன்
ஐந்திற ஞகிய ஆசுக வில்வேள்
வந்திடு மாறு மனத்தில் நினைந்தான்.

இந்திரன், தேவர்கள் கூட்டத்தோடும் பிரமதேவர் சென்றருளி முன்னே தோன்றிய தாமரைமலர் மேலிருக்கும் பிரமதேவர் தமது மனோவதி என்னும் உலகைச் சேர்ந்து தமது இருப்பிடத்தமர்ந்து கொண்டு ஐந்து வகையான மலர்ப்பாணங்களை யுடைய வில்லைக் கையிலேந்திய கடவுளாகிய மன்மதனை அங்கு வரும்படி தமது மனத்தால் ஊன்றி நினைந்தார்.

மன்மதனின் ஐந்து வகையான மலர்ப் பாணங்களாவன: தாமரைப்பூ, முல்லைப்பூ, அசோகம்பூ, மாம்பூ, நீலோற்பலப்பூ 1

நினைந்திடு கின்றுழி நீனிற மாயோன்
முனந்தரு கின்ற முரண்டகு வில்வேள்
மனந்தனில் உன்னும் மலர்ப்பக வன்முன்
இனந்தரு சூழலொ டிம்மென வந்தான்.

இவ்வாறு பிரமதேவர் நினைந்திடுகின்றுழி நீலநிறமுடைய விஷ்ணுபிரான் முன் பெற்றருளிய மன்மதனுவன் தனது பரிவாரகங்களுடன் வலிகொண்ட வில்லோடும் தனது மனத்தால் நினைத்த பிரமதேவர் முன்பாக தோன்றியருளினுன். 2

மாமறை யண்ணல்முன் வந்து பராவித்
தாமரை நேர்தரு தாடொழு தென்னை
நீமன மீது நினைந்ததெ னென்னுக்
காமன் வினுவ அயன்கழ லுற்ருன்

பெரிய வேதங்களின் தலைவராகிய பிரமதேவர் முன்பாக வந்து அவரின் தாமரை மலரை ஒத்த திருப்பாதங்களை வணங்கி, ஐயனே! நீர் என்னை உமது மன மிது நினைந்தது யாது காரணத்தின் பொருட்டாக என மன்மதன் வினுவியருள அது கேட்ட பிரமதேவர் சொல்லியருளுகிருர். 3

கங்கை மிலைச்சிய கண்ணுதல், வெற்பின்
மங்கையை மேவநின் வாளிக டூவி
அங்குறை மோனம் அகற்றினை யின்னே
எங்கள் பொருட்டினில் ஏகுதி யென்ருன்.

மன்மதனே கேள்! கங்கையைச் சடைமீதணிந்த கண்ணுதற் கடவுளாகிய சிவபிரான் முன்பாக நீ சென்று அவர் இமய மலையிலிருந்து தவமியற்றும் தாயாகிய

உமையம்மையைத் திருமணம் செய்யும் பொருட்டு உனது மலராகிய அம்புகளை சிவ பிரான்மேல் செலுத்தி அங்கு கைலைமலைமேல் சனகாதி முனிவர்களுக்கு ஞானபதம் உணர்த்தியிருக்கும் மோன யோக நிலையைக் கலைத்து பிராட்டியைத் திருமணம் செய்யும் பொருட்டாக இக்கணமே எங்களுக்காக வேண்டி இச்செயலைச்செய் நீ கைலைமலை மேல் செல்வாயாக என வேண்டி நின்றார். 4

வேதனிவ் வாறு விளம்பிய கூற்றுந்
தீதுறு பொங்கழல் செய்யவள் சேயோன்
காதிடை யேநெறி யாக்கடி திற்போய்
ஏதமி லுள்ள மெரித்ததை யன்றே.

வேதங்களை ஓதும் பிரமதேவருடைய இந்த யமனைப் போலும் கொடிய வார்த்தைகளான நெருப்பு மிக அழகிய வடிவுடைய மகாலெட்சுமியின் புதல்வனான மன்மதனின் செவியின் ஊடாக உட்சென்று எதுவித தீங்கும் இல்லாத மன்மதனுடைய உள்ளத்தைச் சுட்டு எரித்தது.

சிலர் கொடுமையான வார்த்தைகள் பேசும்போது காதில் அவ்வார்த்தைகள் கேட்கும் முன்பே எமது உள்ளத்தில் எரிதல்போன்ற உணர்வு ஏற்படும். அதே போல மன்மதன் உள்ளமும் பிரமதேவரின் கொடிய வார்த்தையால் எரிந்தது. 5

கிட்டி யரன்செயல் கேடுசெ யென்னுங்
கட்டுரை யேவரு காமனு ளெங்குஞ்
சுட்ட தெனிற்பிறை சூடிய வன்மெய்
அட்டிடு கின்றதும் அற்புத மாமோ.

மன்மதனே நீ கிட்டிச்சென்று சிவபிரான் கொண்ட மோன நிலையைக் கலைப்பாயாக உனது மலர் அம்புகளை அவர்மேல் செலுத்தி என்னும் இந்த வார்த்தைகள் அங்கே ஒரு சூதும் அறியாது வந்த மன்மதனுடைய உள்ளத்தை சுட்டது என்றால் பின்னால் பிறையணிந்த சடையுடைய எம்பெருமானின் நெற்றிக் கண்ணானது அவனை சுட்டு சாம்பராக்கும் என்பது அற்புதமோ. அவர் கொண்ட மோன யோகத்தை கலை நீ என்ற சொல்லே மன்மதனின் தீங்கறியா உள்ளத்தைச் சுட்டது. அப்போது அவன் பின்னால் ஈசன் திருமுன்புசென்று மலர்ப் பாணம் விடுத்தபோது அவர் அவனை எரித்தார் என்பது அற்புதமோ என்றார். கொடுமை வார்த்தைகளைப் பேசுதலும் கேட்டலும் இரண்டும் ஆகாது என்பதை இங்கு குறிப்பால் உணர்த்தினர்.

முன்னை வினைப்பிறவி மூதறிவின் மையினால்
கொல்ல நினைந்தனவும் குற்றமும் அற்றொழிய

என்னும் சுந்தரர் தேவாரக் கருத்தும் இங்கு நோக்குக. 6

இத்திற மாமல ரேந்தல் இயம்பக்
கைத்துணை கொண்டிரு கன்னமும் வல்லே
பொத்தியி னைந்து புராந்தகன் நாமஞ்
சித்தச வேளுரை செய்தன னம்மா.

அவ்வாருக மலராசனராகிய பிரமதேவர் சொல்லியதும் தனது இரண்டு கைக ளேயும் கன்னத்திற் பதித்துச் செவிகளைப் பொத்தி. தான் கேட்ட அவ்வார்த்தைகளி ஞலாய பாவந்தீரச் சிவநாமத்தை உடனே மன்மதன் செப்பிக் கொண்டான். 7

ஈட்டுறு பல்பவ மெய்துவ தோர்சொற்
கேட்டன னென்று கிலேசம தாகி
வாட்டிய மென்மலர் போல்அணி மாழ்கிப்
பூட்டுவில் அண்ணல் புகன்றிடு கின்ருன்.

ஐயையோ இப்பிரமதேவர் எவ்வளவோ பிறப்புக்களை நான் சம்பாதிக்கக் கூடிய கொடிய வார்த்தகளை இப்போது கூறிஞரே, நானும் இதைக்கேட்டேனே ஐயகோ சிவனே என மனநொந்து கிலேசமதாகி தீயில் வாட்டிய மெல்லிய பூப்போல உடலம் சோர்ந்து அழகும் மாழ்கி பூட்டிய வில்லேந்திய மன்மதன் இவ்வாறு சொல்கிருன். 8

## வேறு

வன்கண் ணருமா சறுகாட் சியர்பால்
நன்கண் ணுறினுய் யுநலம் புகல்வார்
உண்கண் ணுறின்இத் தவருே தினையால்
என்கண் ணடிகட் கிலேயோ அருளே.

ஐயா பிரமதேவரே கேளும் இங்கு ஓயாது எல்லார்க்கும் துன்பமே செய்கின்ற கொடிய மகாபாவி ஒருவன் உம்போன்ற மேலாகிய உணர்வினையுடைய பெரியோர் பாற் சென்ருல் சென்ற அந்தப் பாவியையும் அந்த கருணைமிக்க மகான் அவன் இனி யாகுதல் உய்யும் பொருட்டாக சில நல்வார்த்தை சொல்வார். அப்படி உலக தருமம் இருப்பவும் அவர்களின் மேலான உமது முன்பு நான் வந்துபோதே எனக்கு இந்த தவருனவார்த்தைகளை ஓதினீர் ஆகையால் ஐயனே! என்மீது கொஞ்சமேனும் உமது அருள் இல்லையோ. 9

வன்னப் புவிமங் கையையமா மலர்மேற்
பொன்னைப் பிறரைப் புணர்வுற் றிடுவான்
கன்னற் சிலைபூங் கணைகொண் டமர்செய்
தென்னத் தனைவென் றிசைகொண் டிலனே.

ஐயனே நான் கரும்புவில்லில் மலர்ப்பாணம்பூட்டி எய்யும் எனது செயலால் எனது தந்தையாகிய விஷ்ணு மூர்த்தியையே அவர் பூமிதேவியை, செந்தாமரைமலர் மேல் தோன்றும் மகாலட்சுமியை தவிர வேறு பெண்களையும் சேரும்படியாக நான் அவரை பாணம் செலுத்தி மயக்கி வென்று பெரும்புகழ் கொள்ளவில்லை. 10

வெள்ளைக் கமலத் தியைமெய் யுறவுந்
தெள்ளூற் றணிசெய் ததிலோத் தமைபால்
உள்ளப் புணர்வுற் றிடவும் முனையான்
பிள்ளைச் சமர்செய் திசைபெற் றிலனே.

வெள்ளைத் தாமரைமலர் மேலிருப்பவளாகிய சரஸ்வதி தேவியைஉமது மெய்யோடு சேரும்படியாக நீர் எந்நாளும் வைத்திருப்பவும் பின்னரும் நீர் படைத்த பெண்ணுகிய திலோத்தமையின் அழகுகண்டு அவள்பால் மோகங்கொண்டு கிளிரூப மெடுத்து அவள் பின்னுல் ஓடிப்போகும்படி ஒரு குழந்தைசெய்யும் விளையாடல்போல உம்மை நான் வெற்றிகொள்ளவில்லையோ? செய்தவன் என்பது உமக்குந்தெரியுமே. 11

சீர்பெற் றிடுசெந் திருவைத் திருமால்
மார்பிற் குடியா யுறவைத் திலனே
கார்பெற் றவிழிக் கலைமங் கையையுன்
ஏர்பெற் றிடுநா விலிருத் திலனே.

இது மட்டன்றி சிறப்புடைய மகாலெட்சுமியை நாராயணர் தனது நெஞ்சிலே எப்போதும் இருத்தி வைப்ப நான் செய்யவில்லையோ அதுமல்லாமல் கூரிய விழியுடைய வாக்குக் கிறைவியாகிய சரஸ்வதி தேவியை உமது நாவிலே நிதமும் வைக்கும்படி செய்யவில்லையோ. 12

தண்ணின் றகுழற் சசியென் றுரைசெய்
பெண்ணின் றலையுற் றிடுபெற் றியலால்
விண்ணின் தலைவற் குளமெய்ம் முழுதுங்
கண்ணென் றிடுபல் குறிகண் டிலனே.

தண்ணீர் போலும் அழகு பொலியும் கூந்தலை உடைய இந்திராணி தேவியைக் கூடும் பேறு பெற்றதோடு அமையாது இந்திரனுனவன் மீண்டும் கௌதம முனிவரின் பத்தினியாகிய அழகுடைய அகலிகை என்னும் பெண் மேலாக ஆசைப்பட்டு அங்கு அவன்பால் சென்று வஞ்சனையால் அவவோடும் கூடி இன்புற்று இடைவேளையில் முனிவன் வரக்கண்டு அதனுல் முனிவனின் சாபம்பெற்று தனது மேனியெல்லாம் ஆயிரம் கண்ணுகிய தன்மை என்னுல் தான் நேர்ந்தது என்பதை அறியீரோ. 13

விசையுற் றிடுசெங் கதிர்மே லவர்கீழ்த்
திசையுற் றவராங் கொருசே யிழைபோல்
இசையுற் றிடுபா கனிடைப் புணரா
வசையுற் றிடுபான் மையமக் கிலனே.

பின்னரும் மன்மதன் சொல்வான்: விசையுற்றுச் செல்கின்ற சூரியதேவனுகிய மேலவனும் கிழக்குத் திக்கினையுடைய இந்திரக் கடவுளுமாக ஆங்கு ஒரு பெண் வடிவங் கொண்ட சூரியன் தேர்ச் சாரதியாகிய அருணனைக் கண்டு மோகித்துக் கூடி மகிழும் படியாக நான் அவர்களை மலர் சொரிந்து மயக்கி அதனுல் பெரும் வசையை சூரியனும் இந்திரனும் பெறும்படி செய்தவனல்லவோ.

முன்னெரு நாள் இந்திர சபையிலே ஊர்வசி நடனம் நடந்தது. அப்போது சூரியன் அங்கு சென்றுர். அவரது தேர்ப்பாகன் அருணன் அங்கு போக விரும்ப சூரியன் நீ போகக் கூடாது என்றுர், இது கேட்ட அருணன் நடனம் பார்க்கும் ஆசையால் ஓர் அழகிய பெண் வடிவங்கொண்டு சபையில் யாவரும் தன்னை அறியாதபடி

பார்த்திருந்தான். அப்போது புதிதாக வந்த அழகிய பெண்ணை இந்திரன் கண்டு மோகித்து அவளைக் கூடினன். பின்னர் சூரியனும் இப்பெண்ணைக் கூடினர். 14

கதனத் தொடுவந் துகலந் தவர்பால்
இதநட் புறுமா மதியென் கணையால்
மதனத் தொடுதே சிகன்மா தையுருப்
புதனைத் தருபான் மையுணர்த் திலனே.

சந்திரன் இயல்பாக அழகுடையவன் அவன் அழகைக் கண்டு மோகித்து அநேக பெண்கள் இயல்பாகவே அணைந்து சேருவர். அப்படி வந்து கூடுவாரோடும் இதமாகச் சேர்கின்ற சந்திரதேவன் இப்படிப் பல அழகிய பெண்கள் வலிதே வந்து தன்னை உறவும் அதோடமையாது தான் கல்வி பயின்ற குருவாகிய வியாழ பகவானின் மனைவி தாரை என்பாளைக் கண்டு மோகித்து அச்சந்திரன் தாரை என்பாளைக் கூடி புதனைப் பிள்ளையாகப் பெறும்படி நான் எனது வலிமையால் செய்யவில்லையோ. 15

முற்றே தின்மறைத் தொகைமூ தறிவால்
கற்றே துமுணர்ந் திடுகாட் சிபெறு
நற்றே வர்கள்யா ரையுநா ரியர்தங்
குற்றே வல்செயும் படிகூட் டிலனே

முன்னே தோன்றிய குற்றம் இல்லாத வேதங்களைக் கற்று அதனுல் சீலம் யாவற்றையுமுணர்கின்ற நல்ல ஞானக் காட்சியைப்பெறுகின்ற நல்ல தேவர்கள் யாவரையும் தங்கள் தங்கள் மனைவிமாரிடத்து இன்பம் நுகரும் பொருட்டாகக் குற்றேவல் செய்யும்படியாக நான் எனது செயலால் செய்யவில்லையோ. 16

மறைதே ரும்வசிட் டன்மரீ சிமிகக்
குறிதா முனியத் திரிகோ தமன்நல்
அறிவால் உயர்கா சிபனு தியராந்
துறவோர் தமதாற் றல்தொலைத் திலனே.

வேதங்களைத் தேர்ந்து உணருகின்ற வசிட்ட முனிவன், மரிசீ முனிவன், மிக்க குறுகிய வடிவமுடைய அகத்திய முனிவன், அத்திரி முனிவன், கௌதம முனிவர் நல்ல அறிவால் உயர்ந்த காசிப முனிவன் ஆதியாகச் சொல்லப்படுகின்ற துறவிகளுடைய தவவலிமையைச் சில சில அழகான பெண்கள் மூலமாக நான் தொலைத்துவிடவில்லையோ. 17

மன்னுன் மரபுற் றிடுமா னவரைப்
பின்னு கியமும் மைகொள்பே தகரை
மின்னுர் கண்மயக் கினில்வீட் டிலனே
என்னு ணைகடந் தவர்யா ருளரே.

முழு உலகங்களிலுமிருக்கின்ற பிராமணர், அரசர், வைசியர்கள், வேளாளர்கள் என்னும் நான்கு வருணத்தாரையும் அநுமலோமர், பிரதிலோமர், சங்கரர் என்னும் பிற்பட்ட மூன்று வருணத்தாருள்ளும் காணப்படும் எந்தவிதமான மனிதரையும் பெண்

கள் மயக்கத்தினுல் நான்விடவில்லையோ, ஆனமையால் எனது ஆணையைக் கடந்தவர் யாவர் இருக்கிருர்கள்.

ஏடவிழ் கோதைமாதர் எழில்கண்டு மயங்காவண்ணம்
தாள் தலைதன்னில் வைத்தசற் குருதாள்கள் வாழ்க.

எனவரும் யோகசுவாமிகள் திருவாக்கை நோக்குக. 18

அறைபெற் றிடுமித் திறமா னவெலாம்
முறைபெற் றிடுமென் னின்முடிந் திடுமோ
பிறைபெற் றிடுகின் றபெருஞ் சடையெம்
மிறைபெற் றிடுசத் தியியற் றிடுமே.

ஐயா, பிரமதேவரே! உமக்கு இதுகாறும் சொன்ன மேம்பாடான எனது திறமைகள் யாவும் என்னுடைய வீரத்தினுல் நான் செய்கிறேன் என சொல்பவனு; இல்லையே! ஆக இந்த செயலுக்கு ஒரு முறை செய்பவனுக நான் இருக்கிறேனே ஒழிய என்னுல் இது முடிகின்றது என நான் சொல்லவில்லை. ஆகையால் இந்த செயல் யாவையும் உண்மையாக நோக்குமிடத்து பிறையணிந்த சடையுடைய சிவபிரானுடைய சக்தி ஒன்றே இயக்கியவாறு இருந்தருள்கிறது. 19

மாலே முதலா கியவா னவர்தம்
பாலே, அடல்வா கைபடைப் பதலால்
மேலே நதிசூ டியமே லவன்மேற்
கோலே வினன்வென் றிடல்கூ டுமதோ.

நாராயணக் கடவுள் முதலாகிய கடவுளரிடத்துத் தான் இத்தன்மையான எனது பாணங்களைச் செலுத்தி வெற்றியடைவதேயல்லாது மற்றும் சடைமேலே இளம் பிறைசூடிய எந்தையாகிய சிவபிரான்பால் நான் மலர்ப்பாணம் செலுத்தி அவரையும் மயக்குதல் முடிந்ததோர் காரியமோ. எனது ஆடல் அவர்பால் வெற்றி உறுமோ. 20

ஐதா கியசீர் கொடவன் முறைசெய்
நொய்தா னவர்போ லநுவன் றனையால்
வெய்தா மழலா கியமே லவன்மேல்
எய்தா லுமென்வா ளிகளெய் திடுமோ.

மிக அற்பமான சீரினை உடையவராய் எம்பிரானுடைய பணி செய்கின்ற மிக நொய்யராகிய ஏனைய கடவுளரைப் போல பிரமதேவரே நீரும் நினைந்து இங்கே இதனைச் சொன்னீர் ஆனுல் நான் அப்பகவான் மேல் எனது மலரம்பை விடுத்தாலும் முழுவதும் நெருப்பாகவே திருமேனி கொண்ட பெருமான் மேல் எனது அம்பு சென்றிடுமோ அவை சாம்பராகப்போகாதா.

"நெருப்பனைய திருமேனி வெண்ணீற்றானை"
(திருநாவுக்கரசர் தேவாரம்)

கையுந் நகையுங் கதிரார் விழியும்
மெய்யுந் தழலாம் விமலன் றனையான்
எய்யும் படிசென் றிடினிவ் வுயிர்கொண்
டுய்யுந் திறமும் உளதோ உரையாய்.

திருக்கையும் சிரிப்பும் ஒளி வடிவான கண்களும், ஒரே நெருப்பாகிய மலபந்த மில்லாத ஞானசொரூபியாகிய பெருமானை நான் மலர் அம்புகொண்டு எய்யும்படி சென்றிடில் எனது இந்த உயிர்கொண்டு உய்யும் திறமும் உளதோ, பிரமனே ஒரு கால் நீர் சொல்லும். 22

பற்றோ டிகலற் றபரம் பொருளை
எற்றோ மயல்செய் குவதீ சனையும்
மற்றோ ரெனநின் னின்மதித் தனையால்
சற்றோ அவனாற் றல்தவிர்த் திடவே.

பற்றும் வெறுப்பும் அற்றிருக்கின்ற பரம்பொருளாகிய ஈசனையா! நான் எப்படி மயக்கம் செய்வேன். ஈசனையும் நீர் மற்றும் தேவர் போலவும் எண்ணி உமது மனத்தில் மதித்தீர் போலும். அவரது மகிமையான ஆற்றல் கொஞ்சமோ. அதை நானும் தவிர்த்திடும்படியும் ஆமோ. 23

சூறா வளிவை கியசூ ழலின்வாய்
ஏறா வொருபூ ளையெதிர்ந் துளதேல்
நீறா டியமெய் யுடைநின் மலன்மேல்
வீறாய் வினையேன் பொரமே வுவனே.

சூறாவளிக் காற்று சுழன்றடித்து வீசிக்கொண்டு இருக்குமிடத்து ஒரு பூளையானது அதை எதிர்ப்பேனெனச் சென்று அதில் சிக்கி அகப்படுமெனின் அது தப்பி வருமே என்றால் நானும் நீறு நிறைவாகிய திருமேனிகொண்ட நின் மலராகிய சிவபிரான் மேல் சென்று வீறோடும் போர்செய்து மீண்டு வருவேன். காற்றின் முன் பூளைவெல் லுமே எனின் நானும் ஈசனை வெல்வேன் என்றான். ஆகவே காற்றினால் பூளைசுழன்று அழியுமே ஒழிய பூளை காற்றை ஒன்றும் செய்யமாட்டாது. அதேபோல ஈசன்முன் சென்றால் நான் அழிவதன்றி வேறில்லையென குறிப்பால் உணர்த்தினான். 24

ஆறுற் றிடுசெஞ் சடையண் ணலுடன்
மாறுற் றவருண் டெனின்மற் றவர்தாம்
ஊறுற் றனரல் லதுளத் துயர்கொண்
டீறுற் றனரல் லதிருந் துளர்யார்.

ஆறுதாங்கிய செய்ய சடையுடைய அப்பன்மேல் மாறுபட்டுப் போர்செய்யும் படி எக்காலத்திலேனும் சென்றார்கள், ஒன்றில் அவர்கள் உள்ளத் துயரங்கொண்டு முடிவானார்கள் அல்லது மேனி ஊறுபட்டு நாசமானார்களே ஒழிய ஒருவராகுதல் உய்ந் தார் எனப் பேசவும் எம்மால் முடியுமோ. 25

இந்நா ரணஞ தியர்யா வர்களும்
அந்நா ளமலன் பணியாற் றிடலும்
உன்ஞ வவர்சிந் தனைமொய்ந் நகையால்
ஒன்னர் புரமட் டதுணர்ந் திலையோ.

இந்த நாராயணக் கடவுளர் யாவரும் முன்னல் ஒரு நாள் ஈசன் பணி செய்ய ஈசன் வைதிகம் என்னும் தேர்மேல் சென்றும் மேருமலையை வில்லாக வளைத்தும் விஷ்ணுவை அம்பாக ஏந்தியும் போர்க்கோலம் கொண்டபடி எய்தியும் ஈசன் ஒரு புன்சிரிப்பால் முப்புரங்களை எரித்தமையை நீர் உணரவில்லையோ.

முப்புரம் அழிக்கும்படி திருக்கையில் படைகொண்டும் சிரிப்பாலேயே முப்புரமெரித்ததை நீர் அறியீரோ என்றான். 26

எந்தாய் அருளென் ஞெரிளங் குமரன்
வந்தா தியையேத் தலும்வை துசினக்
கொந்தா ரழல்போல் வருகூற் றுவனை
அந்தாள் கொடுதைத் ததறிந் திலையோ.

எந்தாய் அருள் செய்வாயாக என மார்க்கண்டேயன் என்னும் இளம் குமரன் வந்து ஆதியாகிய பெருமானை வணங்கி நிற்ப அப்போது அந்தப் பிள்ளை நிலையை உணராது அந்தப் பிள்ளையை வைது சினந்து அப்பிள்ளைமேல் பாசம்வீசிக் கொழுந்துவிட்டெரிகின்ற நெருப்பைப்போல் தோன்றிய இயமனை ஈசன் தமது அழகிய திருப்பாதம்கொண்டு உதைத்தமை அறியாயோ. 27

முன்னைப் பகல்நீ யுமுகுந் தனுமாய்ப்
பன்னகற் கரிதா யபரம் பொருள்யாம்
என்னச் சிவனெய் தியிகழ்ந் தவனைச்
சென்னித் தலைகொண் டதுதேர் கிலையோ.

முன்னொருநாள், பிரமனே! நீயும், நாராயணக் கடவுளும் நீங்களே பரம்பொருள் என மதித்துக் கொண்டு போர் செய்ய அப்போது சிவபிரான் அங்கு எய்தியபோது நாராயணர் கண்டு வணங்கி நிற்ப நீ ஐந்து தலையுடைய செருக்கால் பெருமானை இகழ்ந்தபோது உனது தலையொன்றைக் கொய்து தமது திருக்கரத்தில் பிச்சைப் பாத்திரமாக ஏந்தியது அறியாயோ. 28

அடன்மே வுசலந் தரஞ தியராய்ப்
படிமே லுளதோர் பஃறு னவர்தாம்
முடிவார் அரனே டுமுரண் டிடலுங்
கெடுமா றுபுணர்த் ததுகேட் டிலையோ.

அடங்கொண்ட சலந்தரன் முதலாகச் சொல்லப்பெறும் அசுரர்கள் தாங்கள் முடிவாகும் காலமானது எய்துதலும் அவர் யாவரும் முடியும்படியாக சிவபிரானோடு போர்

செய்ய எத்தனித்தபோது அவர்கள் யாவரும் கெடுமாறு புணர்த்தியதை நீர் உணர வில்லையோ.

சலந்தராசுரனை ஈசன் காலால் கீறிய சக்கரப் படையால் அழித்த சூழ்ச்சி முதலியன பற்றி இங்கே மன்மதன் கூறினன். 29

வீடெய் துறுநின் மகன்வேள் விநிலத்
தூடெய் தினர்யா வருமொப் பில்அரன்
மாடெய் தியவீ ரனின்மா னமொரீஇப்
பாடெய் திற்புன் செயல்பார்த் திலையோ.

முத்தியெய்தும் பேற்றினைக் கொண்ட உனது மகன் தக்கன், ஈசனை, ஏகனை, எந்தையை நிந்தித்து யாகமியற்றியபோது தக்கனுடைய வேள்வி நிலத்தில் கூடியிருந்த எல்லோரும் ஒப்பொருவர் இல்லாத சிவபிரானால் அவரிடத்துத் தோன்றிய வீரபத்திரக் கடவுளாலே தங்கள் மானம் பங்கப்பட்டும் பாடாகித் துயரப்பட்ட அந்த பரிதாபமான செயலை நீரும் அன்று கூடவே இருந்து பார்க்கவில்லையோ. 30

அண்டா தவகந் தையொடா ழியின்வாய்
விண்டா னவரச் சுறமே வுவிடம்
உண்டான் நிகழ்கங் கையையோ ரணுவிற்
கொண்டான் அவன்வன் மைகுறிக் கிலையோ.

எவரும் அண்ட முடியாத வேகத்தோடும் பாற் கடலின் இடத்தே அன்று தோன்றிய ஆலகாலம் என்னும் நஞ்சைக் கண்டு எல்லாத் தேவரும் ஐயோ சிவனே அபயம் என பயந்து ஓடிப்போகும்படி எழுந்த நஞ்சை உண்டருளினன் சிவபிரான். உலகை அழிக்கச் சூழ்ந்த கங்கையைச் சடையில் அணுவடிவாக்கி ஏற்றான் எனவரும் அவனுடைய தன்மைகளை நீர் அறிந்து குறிக்கொள்ளவில்லையோ. 31

தரியா வுளமால் கொடுதன் னிகழும்
அரியோ டுசைம்மா வையடற் புலியை
உரியா மிசைபோர் வையுடுக் கையெனப்
பரியா அரனுற் றதுபார்த் திலையோ.

நாராயணக் கடவுள் நரசிங்க வடிவுகொண்டு இரணியன் என்னும் அசுரனைப் பிளந்து இரத்தம் முழுவதும் குடித்து அதனாலே வெறிகொண்டு சிவபிரானையே மதியாது திரிய அதனால் அவரின் தோலை உரித்து போர்த்தமையும் தாருகாவனத்து முனிவர் ஏவ வந்த புலியை உரித்து தோலை உடுத்தமையும் தாங்கிய வண்ணம் சிவபெருமான் இன்றும் இருப்பதை நீர் பார்த்ததில்லையோ. 32

ஓரார் தனதுண் மையையுள் ளமிசை
யாரா யினுமாற் றவகந் தைபெறின்
வாரா அவர்தம் வலிமாற் றிடுமால்
தேராய் கொல்பரஞ் சுடர்செய் கையதே.

யாவராயிருந்தாலும் சிவபிரான் தானே உண்மைப் பொருள் என்பதை உணராது தங்கள் உள்ளத்திலே தாங்கள்தான் பெரிதென எண்ணி ஆற்றவும் அகந்தை உற்ருல் அப்போது அங்கு ஈசன் வந்து அவ்வாறு அகந்தை உற்ருரின் வலியை மாற்றிடுவர். இதனை நீர் இன்னும் தெளியவில்லையே. பரஞ்சுடராகிய சோதியின் செய்கை அதுதான் காணும் பிரமரே! 33

இறுகின் றகடைப் பகலீ றிலதோர்
கறைதுன் றுமிடற் றிறைகண் ணினும்வீழ்
பொறியோன் றதனுற் பொடிபட் டிடுநீ
அறிகின் றிலையோ அகிலங் களுமே.

எல்லாம் இறக்கின்ற கடைப்பகல் பொழுதில் முடிவில்லாதவரும் நஞ்சுண்ட கண்டம் உடையவரும் சோதியும் ஆகிய பெருமானின் திருக்கண்ணினின்றும் வீழ்கின்ற பொறி ஒன்று தன்னுல் முடிவாகிப் போகின்ற நீர். அறியீரோ எல்லாவற்றையும் மட்டுமல்ல உமது படைப்பாகிய சகலமும் அழிபடுமே! என்ருன் மன்மதன். 34

இப்பெற் றியனு கியவீ சனையென்
கைப்பற் றியவிற் கொடுகந் தமலர்
அப்பிற் பொருகின் றிலன்ஆ ருயிர்மேல்
மெய்ப்பற் றிலரிச் செயல்வேண் டுவரே

இப்பெற்றித்தாகிய ஈசனை என் கையிலே பிடித்த வில்லோடும் வாசனைகொண்ட பூவாகிய அம்போடும் நான் போர்செய்ய ஒருபோதும் செல்லேன்! நான்மாட்டேன்! இதை தனது உயிர்மேல் உண்மைப் பற்று இல்லாதவர் இச்செயலை வேண்டுவார் அல்லது வேருெருவரும் வேண்டார். 35

மேனு ளகிலந் தரமெல் லியலா
ஆனு வருடன் னையளித் தொருபால்
தானு கவிருத் தியதற் பரனை
நானு மயல்செய் வதுநன் றிதுவே.

முன்னெரு காலத்தில் உலகமெல்லாவற்றையும் நீர் படைக்கிற உமது செயல் கைகூடும்படியாக தனது அருள் வடிவாகிய இறைவியைத் தானே தந்து தனது ஒரு பாகத்து அமர்த்தி அருளிய எம்பெருமானை நானு மயல் செல்வது நன்ருயிருக்கிறது உமது வார்த்தை. 36

என்னு மதவேள் இசையா மறுத்திடலும்
பொன்னுர் கமலப் பொகுட்டுத் தலைவந்த
மன்னுன வேதா மனக்கவலை கொண்டுசில்போ
துன்னு நெடிதே உயிரா வுரைக்கின்ருன்.

என்று இவ்வாறு மன்மதனுனவன் சொல்லி தான் சிவபிரானை மலர்ப் பாணங்கள் சொரிந்து மோன நிலைகளைப்பதற்கு செல்லமாட்டேன் என மறுத்து நிற்றலும் அப்போது அவை யாவற்றையும் தாமரை மேலிருக்கும் யார்க்கும் தலைவரான

பிரமதேவர் கேட்டு மனக்கவலைகொண்டு சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தார். அவ்வாறு யோசித்துப் பார்த்துவிட்டு ஒரு பெருமூச்சு விட்டார். விட்டபின் மன்மதனை நோக்கிச் சொல்கிறார். 37

வெண்மை யறிவால் தமைவியக்கும் விண்ணவர்பால்
அண்மை யிலனாகும் அண்ணலியல் கூறினையால்
உண்மை யிதுவாம் உவனைப் பொருவதுவும்
எண்மை யதுவோ எவர்க்கு மரிதன்றே.

அப்பனே, மன்மதனே கேள்! உண்மையறிவின்றி அற்பமான பாசாங்குகளினாலே உலகை மயங்கவைத்துத் தங்களைப் பெரிதும் மதித்துக் கொள்கின்ற தேவர்களுக்கு ஒருபோதும் எட்டாத சிவபெருமானின் இயல்புகளை எனக்கு நீ கூறினாய் நீ சொல்வது முற்றும் உண்மையாகும். சிவபிரானைப் போர்செய்து வெல்லலாம் என நாம் எண்ணவும் முடியுமோ அன்றி இச்செயல் எவர்க்கும் அரிதல்லவோ! 38

அன்ன பரிசே யெனினும் அடைந்தோர்தம்
இன்ன லகற்று மிறையருளால், இக்கருமம்
உன்னின் முடியும் ஒழிந்தோரால் முற்றுவதோ
முன்னின் இதற்கு முதற்கா ரணம்நீகாண்.

அப்படியாக இருந்தாலும் ஈசன் எப்படியானவர்? தன்னை வந்து சார்ந்தார்க்கு எதனையும் கொடுத்தருள்கின்ற கிருபை உடையவர். அடைந்தார் இன்னல் எதனையும் நீக்கும் அருளாளன். ஆனமையால் ஈசன் அருளால் ஈசனை யோக நிலையியினின்றும் நீங்கும்படிசெய்து அம்பாளைத் திருமணம் புரிய செய்வதற்கு உன்னாலே அது முடியும். மற்றையோரால் இச்செயல் ஒருபோதும் கைகூடாது. ஏனெனில் ஆண், பெண் ஆகிய இருவரும் ஒன்று சேரும் திருமணத்திற்கு யாவர்க்கும் நீயே முதற்காரணமாக இருக்கின்றாய் ஆனமையால் உன்னால்தான் இமயமலையில் தவஞ்செய்திருக்கும் பெருமாட்டியைச் சேரும்படி இறைவனையும் நீ தூண்ட முடியும். 39

எல்லார் செயலும் இறைவன் இயற்றுவதே
அல்லா திலையோ ரணுவுமசை யாதெவையும்
நில்லா தருளின்றேல் நீயின் றவன்பாலிற்
செல்லாய் உனது செயலுமவன் செய்கையதே

மன்மதனே இன்னொன்று கேள், எல்லாச் செயலும் இறைவன் தான் செய்கிறார். அவர் அல்லாத நிலையில் ஓர் அணுவும் அசையாது இந்த உலகத்தில் எவையும் அருள் இல்லாவழி நிலைபெறமாட்டாது. ஆகையினாலே நீ இன்று ஈசன்பால் கைலைமலைக்குச் செல்வாயாக. நீ அவ்வாறு செல்கின்ற நிலையில் நீ அங்கு செய்யும் செயலும் ஈசன் செயலாகும் என்பதைத் துணிவாயாக. 40

செம்மாந்து தற்புகழுந் தேவர்குழு வும்மருள
எம்மான் பிறன்போ லிருந்தோர் துரும்புநிறீஇ
அம்மாதன் செய்கை யனைத்துமெனக் காட்டினனே
நம்மாலும் முற்றுஞ் சிலவென்கை நாணன்றே.

முன்பொருகால் அசுரர்களை தாங்கள் வென்றமையால் இறுமாப்புக் கொண்டு தங்களையே புகழுகின்ற தேவர்கள் கூட்டமானவை அதிசயமுறும்படியாக சிவபிரான் ஓர் இயக்க வடிவம்கொண்டு இறுமாப்பால் அசுரரை வென்றவன் யான் யானெனத் தர்கித்து நின்ற தேவர் நடுவே எமது பெருமான் ஓர் துரும்பை நாட்டி இதனை வாளால்வெட்டி வீழ்த்தியவனே அசுரரை வென்முன் என சொன்னுர். சொன்னபோது தேவர்கள் ஒவ்வொருவரும் வாளை உருவி வெட்ட வாள்முரியக்கண்டு ஆச்சரியப்பட்ட போது இயக்கர் மறைந்தார். அதனல் அனைத்துச் செயலும் தனது செய்கை எனக் காட்டினனே எம்பெருமான். ஆகவே நம்மாலும் ஏதேனும் கருமம் முடிவாகும் என்கை எமக்கு வெட்கமல்லவா. 41

பாடு திகழ்பாவை பல்லுயிரு மல்லனவும்
ஆடல்புரி விப்பான் அருவுருவாய் நின்றபரன்
நாடில் அவனையின்றி நம்மாலொன் ருகவற்ரே
ஏட இதனிலைமை இந்நாளு மோர்ந்திலையோ.

இறைவனுடைய ஆட்டத்தால் ஆடப்படுகின்ற பெருமை திகழும் பாவைகளே பல உயிர்களும் அல்லாதனவும். எல்லாவற்றையும் இயங்கும்படி ஆட்டுவிக்கின் ருன் அருவாயும் உருவாயும் நின்ற சிவன். ஆனமையால் நாடி நாம் பார்த்தால் எம்பெருமானை அன்றி நம்மாலும் ஒன்று ஆக முடியுமோ. எட மன்மதனே! இந்த நிலைமை இவ்வளவு நாளும் உனக்குத் தெரியாதோ அல்லது நீ உணரவில்லையோ.

கையம்பு பூட்டிக் கருப்புச் சிலைகோட்டி
எய்யும் படிவழிக் கொண்டேகாய் இறுதியிலா
ஐயன் றனைநீ யதுவும் அவனருள்காண்
மெய்யங் கதற்கேது மேனுளே கண்டனம்யாம்.

ஆகையால் மன்மதனே, உனது கையிலே பிடித்த கரும்பு வில்லைவளைத்து கைக ளிலுள்ள மலர்களாகிய பாணங்களை வளைத்த வில்லிலே பூட்டியவாறு நீ கைலை மலைக்கு எங்கள் ஐயனை எய்யும்படி செல்வாயாக. நீ அப்படிச் செல்வதும் அவனருள் என்பதை உணர்வாயாக. இது முழுவதும் உண்மை, அதற்கு இது இப்படி உன்னல் நடக்க வேண்டுமென்பதை முன்னுளே நான் திருஷ்டியால் கண்டுகொண்டேன். 43

ஈங்கிதுவு மன்றி யெவரேனுந் தம்மடங்காத்
தீங்கு பெறினுதவி செய்யென் றிரந்திடலும்
ஆங்கொருவன் செய்யா ததுமறுத்துத் தன்னுயிரைத்
தாங்கல் உலக நடைதனக்குத் தக்கதுவோ.

இதுவுமல்லாமல் எவரென்ருலும் தம்மை ஒரு துன்பம் வந்து அடைந்தபோது அதை தம்மால் நீக்கமுடியாத வழி இன்னெரு வரைக் கிட்டி அப்பனே எனது துன் பத்தை நீக்குவாயாக என இரந்து வேண்டியபோது, அப்போது கேட்கப்பட்டவன் அதைச் செய்யாது பயந்து, உதவி செய்தால் தனக்கு ஆபத்து வந்திடுமோ என எண்ணி தனது உயிரைத் தாங்கிக் கொண்டு மறுத்துவிட்டு நிற்றல் உலக நடைக்கு இது தக்கதானதொன்ரு நீ சொல்வாயாக. 44

என்னுனு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னுல் முடிவதெனில் தானே முடித்தல்தலே
சொன்னுல் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னுள் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே

எவனெருவனுலும் சரி யாது ஓர் உதவியை எவர்க்காகுதல் தேவைப் படும்போது துயரப்பட்டார் உதவிசெய்யென்று கேட்குமுன்பே தன்னுல் அதுசெய்ய முடியுமானுல் அப்படிச் செய்து கொடுத்தல் தலேயாகும். துயரப்பட்டான் உதவிசெய் என்று கேட்டபோது முடித்து கொடுத்தல் இடையாகும். இரந்து இரந்து கேட்கவும் பலநாள் மறுத்துவிட்டு பின் செய்தல் கடையாகும் என்பதை நீ அறி. 45

ஏவ ரெனினும் இடருற் றனராகி
ஓவில் குறையொன் றுளரே லதுமுடித்தற்
காவி விடினும் அறனே மறுத்துளரேற்
பாவம் அலது பழியும் ஒழியாதே.

எவரேனும் இவ்வுலகில் இடர்ப்பட்டார்களாகி தம்மால் நீக்க முடியாத ஓர் குறை யொன்ருல் துன்பப்பட்டுக் கொண்டார்களாகில் அவ்வாறு துன்பமுற்ருரின் குறையை முடித்துக் கொடுத்தலுக்காக தனது உயிரையே தியாகம் செய்தாலும் அதுதான் தரு மம். அப்படியல்லாமல் அதை மறுத்தால் பாவம். அதுமட்டுமல்ல பழியும் விட்டு நீங்காதே.

இரப்பவர்க்கீய வைத்தார் ஈபவர்க் கருளும் வைத்தார்
கரப்பவர் நங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்.

என்னும் திருநாவுக்கரசர் தேவாரக் கருத்தும் இங்கு ஒப்புநோக்குக.

உய்கை பொருளா வொருவர்க்கு மோருதவி
செய்கை யிலனேற் சிறியோன் கழித்தபகல்
வைகல் அதுவோ வறிதே அவன்வாழ்க்கை
பொய்கை மலர்ந்த கொட்டி போலும் பொலிந்துளதே.

தான் உய்யவேண்டும் அல்லது தப்பவேண்டும் என்பதைப் பொருளாகக் கொண்டு ஒருவர்க்கும் ஒரு உதவியும் செய்யாதவன் வாழ்ந்த வாழ்நாளாது அது நாளல்ல. அவன் வாழ்க்கையும் குளத்தில் மலர்ந்த கொட்டி போலும் என்பதை மன்மதனே நீ உணர்வாய்.

கொட்டிப்பூ குளத்தில் மலர்வது. அல்லி என்றும் சொல்வர் சிலர். அது பொலி வாய் இருக்குமே ஒழிய மணம், குணம் இல்லாது ஒன்றுக்கும் உதவாது. அதே போலவே பிறர்க்கு உதவிசெய்யாதவன் வாழ்க்கையும் கொட்டிமலர் போலு மென்ருர். 47

அந்நா ரணனே டமர்முற் றியமுனியைப்
பொன்ன டருளும் புலவோ ரிறையிரப்ப
வென்னரு மென்பு விருத்ரனுக் காவுதவித்
தன்ன ருயிர்விட்ட தன்மைதனேக் கேட்டிலேயோ.

அன்று ஒருநாள் நாராயணக் கடவுளோடு போர்செய்து வென்ற ததீசிமுனிவரை, விருத்திராசுரனோடு போர்செய்தபோது தோற்று தனது வச்சிரப் படையையும் இழந்த பொன்னுடாகிய தேவ உலகை அரசாளும் இந்திரன் அடைந்து, தனது அவலத்தை முனிவரிடம் சொல்லி தனது துன்பம் நீங்க விருத்திராசுரனைக் கொல்வதற்காக அவர் முதுகெலும்பை வச்சிரப்படையாக்கத் தரவேண்டுமெனக் கேட்டான். கேட்டபோது முனிவர் உணர்ந்து தனது முதுகெலும்பை இந்திரன் வச்சிரப்படையாக்கவேண்டி தனது உயிரை ததீசிமுனிவர்விட்டது அறியாயோ. 48

மேலொன் றுளதோ விளம்ப எவரெவர்க்கும்
மூலந் தலைதெரியா முன்னோன், கடலெழுந்த
ஆலந் தனையுண் டமரர்க் கமுதளித்த
சீலந் தனைநீ சிறிதுந் தெளிந்திலையோ.

இன்னமும் நான் சொல்வதற்கு மேலாக ஒன்று உளதோ யாதெனில் எவரெவர்க்கும் மூலம் தலைதெரியாத முதற்பொருளாகிய சிவபிரான் அன்று பாற்கடலிலே எழுந்த ஆலகாலம் என்னும் நஞ்சைத் தாம் உண்டு தேவர்களுக்கு அமுதத்தையுதவிய சீலம்தனை நீ உணர்ந்தாய் இல்லை. அவர் நஞ்சுண்டமை எதைக் குறிக்கிறது என்பதை நீ இன்னும் சிந்தித்து தெளியவில்லையோ. 49

தேக்குஞ் சலதியிடைத் தீப்போ லெழுந்தவிடந்
தாக்கும் பொழுது தளரே லெனவுரையா
ஊக்கங் கொடுமா லொருகணநின் றேநம்மைக்
காக்கும் படிக்குக் கறுத்தசெயல் கண்டிலையோ.

இன்னமும் தேக்கிய திரைகள் கொண்ட பாற்கடலின் இடத்து நெருப்புப்போல எழுந்த நஞ்சானது எல்லாரையும் தாக்கும்பொழுது அப்போது அவ்விடத்தே பாற்கடலைக் கடைவித்த நாராயணப் பெருமான் பயந்தோட, எத்தனித்த தேவரை நோக்கி அஞ்சாதீர் என உரைத்துவிட்டு விஷ்ணுபிரான் உருக்கத்தோடும் ஒருகணம் நின்று நஞ்சைத் தடுக்கமுயன்றபோது அந்த நஞ்சானது அவர் மேனியைத் தாக்கிக் கறுக்கச் செய்ததை நீ அறியாயோ. எதற்காக அவர் அவ்வண்ணம் நின்று மேனி கருமை கொண்டார்? எம்மைக் காக்கும்படியால் அல்லவோ. 50

ஆரா யினுமொருவர் அன்பிற் றலைப்பட்டுப்
பேரா தரத்தாற் பிறர்க்குதவி செய்வாரேல்
தீராத வெந்துயரிற் சேர்தலே மாய்தலிவை
பாரார் புகழே பயனென்று கொள்வாரே.

ஆராயிருந்தாலும் ஒருவர் அன்பின்பால் பொருந்தி பிறர் துயரங்கொண்டு அத்துயரைத் தணிக்க வேண்டி பெரிய ஆதரவுகொண்டு பிறர்க்கு உதவி செய்யத் தலைப்பட்டால் அப்போது அவர் தான் பிறர்க்கு உதவி செய்யும்போது அதனல் தனக்கு தீராத கொடிய துன்பம் நேர்ந்தாலும் அல்லது சாகவேண்டி வந்தாலும் அதைப் பொருட்படுத்தார் அல்லது இத்தகையான துன்பங்கள் பிறர்க்கு உதவி செய்யும்போது தமக்கு வந்தாலுங் கூட அவற்றைப் பாராது, பிறர்க்கு உதவி செய்தலினல் தமக்கு வரும் புகழையே பார்ப்பார். 51

சூரந் தனில்வலிசேர் சூரபன்மன் ஏவலின்யாம்
ஆருந் துயர்கொண் டழுங்கினேம் அன்னதினித்
தீரும் படிக்குச் சிவனொருசே யைத்தருவான்
ஓரைம் படைசெலுத்த உன்னையாம் வேண்டினமே.

வீரத்தினால் வலியுடைய சூரபன்மன் ஏவலினால் மன்மதனே நாங்கள் ஆரும் மிச்சமில்லாமல் துயரங்கொண்டு அழுங்கியிருக்கின்றோம். அப்படியான சூரனின் துயரம் தீரும்படிக்கு சிவபிரான் ஒரு குழந்தையைத் தந்து உதவும்படியாகவேண்டி உன்னை சிவபிரான்பால் ஐந்து மலர் பாணங்களைச் செலுத்தும்படி உன்னை நாம் வேண்டினோம். 52

ஆதலினால் எங்கள் அலக்கணகற் றும்பொருட்டுச்
சாதல் வரினுந் தவறோ புகழ்செய்வார்
ஏது வரினு மெதிர்செல்வார் எம்பணியிற்
போதி யினிமாறு புகலே லெனவுரைத்தான்.

ஆனமையால் மன்மதனே! எங்களுடைய அலக்கண் யாவையும் அகற்றும் பொருட்டாக சாதல் வந்தாலும் தவறோ இல்லையே. ஒருவர் உலகிலே பெரும் புகழைப் பெற விரும்பினால், தமக்கு எந்த இடையூறுவரினும் அதைப் பொருட்படுத்தாது எதிர் செல்வார்கள். ஆனமையால் மன்மதனே எங்களுக்காக நீ இப்பணியைச் செய்ய கைலைமலைமேல் நீ போ. எனக்கு எதிர் மறுத்து இனியொரு வார்த்தை பேசாதே என பிரமதேவர் உரைத்தார்.
53

பங்க யப்பொ குட்டி ருந்த பகவன் ஈது புகறலும்
ஐங்க ணைக்க ரத்தி னோன ரந்தை யெய்தி யாதியாம்
புங்க வற்கு மாறு கொண்டு பொருகி லேன்இ தன்றியே
இங்கெ னக்க டுத்த தொன்றி யம்பு செய்வல் என்றனன்.

தாமரைப்பூ நடுவனாக வீற்றிருக்கின்ற கடவுளாகிய பிரமதேவர் இந்த வார்த்தையை உரைத்தலும் அதனைக் கேள்வியுற்ற ஐந்து மலர்ப்பாணங்களையுடைய மன்மதன் பயந்து கவலைகொண்டு சொல்கிறான் பெருமானே! பிரமதேவரே! கேளும் நான் மேலாகிய சிவபிரானுக்கு மாறாகப் மலர்ப்பாணம் விடுத்து போர் செய்ய ஒரு போதும் போகமாட்டேன். இந்த ஒரு காரியத்தை விடுத்து நீர் என்னை வேறு எதைச் செய்யச் சொன்னாலும் செய்கிறேன் என்றான் மன்மதன்.
54

என்னும் வேலை அமர ரோடி ருந்த வேதன் முனிவுறா
நன்ன யந்த ழீஇயு ரைத்த நமது சொன்ம றுத்தியால்
அன்ன பான்மை புரியின் உய்தி அல்ல தேலு னக்கியாம்
துன்னு சாப மிடுதும்யாது துணிவு சொல்லு கென்றனன்.

இப்படி மன்மதன் மறுத்துச் சொன்ன வேளையில் தேவர்களோடும் கூடி இருந்த பிரமதேவர் தன்னுடைய வேண்டுதலை மதியாது மறுத்தானே இவன் என கோபங் கொண்டார். மன்மதனை நோக்கியவாறு சொல்கிறார். நான் உன்னை மதித்து நல்ல

நயமான வார்த்தைகளை இதுகாறும் சொல்லி உன்னை வேண்டவும்கூட நீ இப்போது ஒரே வார்த்தையாக மறுத்துவிட்டாய். என் சொல்லுகிறாய் நீ? நான் கேட்டுக் கொண்டபடி கைலைமலைமேல் சென்று சிவபிரான் கொண்ட யோக நிலையை உனது பாணம் போக்கிக் கலைத்தால் உய்வாய் அல்லாதிருந்தால் உனக்கு கொடிய சாபம் இடப்போகிறேன். உன் துணிவு என்ன போகப்போகிறாயோ சாபம் வாங்கப்போகிறாயோ சொல்! என்றார் பிரமதேவர். 55

**வெய்ய சாப மிடுது மென்று வெகுளி யால்மொ ழிந்தகேட்**
**டைய மேனி மதன வேள் அழுங்கி வெய்து யிர்த்தினிச்**
**செய்ய லாவ தென்னெ னத்தெ ரிந்து சிந்தை தேற்றியே**
**வைய கம்ப டைத்த அண்ணல் வதன நோக்கி யுரைசெய்வான்.**

கொடிய சாபம் இடப்போகிறேன் என பிரமன் கோபத்தோடும் மொழிந்த இந்த வார்த்தையை அழகிய மிருதுவான மேனி கொண்ட மன்மதன் கேட்டு, மனம் அழுங்கி பெருமூச்சுவிட்டு ஏங்கி ஐயையோ நான்இனி என்ன செய்வேன்! என மனதில் பெரிதும் அந்தரமுற்று ஆராய்ந்து சிந்தித்து தனது தடுமாறும் சிந்தையைத் தேற்றிப் பின் பூமியைப் படைத்த கடவுளாகிய பிரமன் முகநோக்கி இது ஒரு வார்த்தை சொல்கின்றான். 56

**கேளி தொன்று ரைப்பல் வேத, கேடு சூழும் நினதுவாய்ச்**
**சூளின் மேலை யியல்ப கன்று துன்பு ழந்து படுதலிற்**
**காள கண்டன் முன்பு சென்று கடிய வெய்ய கணைகடூஉய்**
**மாளி னுஞ்சி றந்து தம்ம, மற்றும் உய்ய லாகுமே.**

வேதம் ஓதும் பிரமனே! நன்றாகக் கேள், இந்த ஒரு வார்த்தையை உனக்கு சொல்கிறேன். ஈசன் மேல் போர் செய்ய போ என நீ சொல்லும் சொல் வந்த வாய் எல்லார்க்குமே கேடு தரும். உனது வாயால் கொடிய சாபம் பெற்று எனது மேலான இயல்பகன்று துயரப்படுதலிலும் பார்க்க நஞ்சுண்ட கண்டத்தினையுடைய மகாதேவன் முன்பு யான் சென்று மலர்ப் பாணம்விடுத்து அவரால் நான் மாண்டாலும் கூட அது மிக மிகச் சிறந்தது. அப்படித்தான் நேரினும் கருணைக் கடலாகிய இறைவனால் யான் பின்னர் உய்யவும் கூடும். 57

**செற்ற நீர்மை கொள்ளல் ஐய, செஞ்ச டைப்பி ரானிடத்**
**திற்றை வைகல் அமரி யற்ற ஏகு வேனி யானெனக்**
**கொற்ற வேளு ரைத்த லுங்கு ளிர்ந்த பூவி ருக்கைமேல்**
**உற்ற போதன் மகிழ்சி றந்து ளங்க ளித்து மொழிகுவான்.**

ஆகவே, ஐயா பிரமரே என்னோடு கோபிக்காதீர். செஞ்சடை நிறைந்த பெருமானிடத்தில் இன்றைக்கே போர் செய்ய ஏகுவேன் நான் என மிக உயர்வான சிறப்பினையுடைய மன்மதன் சொலலும் அதைக் குளிர்ந்த தாமரை மலர் மேலிருக்கின்ற பிரமதேவர் கேட்டு மகிழ்வாகி கோபம் ஆறிச் சிறந்து உள்ளம் களித்துச் சொல்கிறார்;

பணிந்த சொல்ல ஞகி நாம்ப ணித்த வாபு ரிந்திடத்
துணிந்த வாறு நன்று நன்று சூலி பாலி னுனேவிடாத்
தணந்தி டேந்தொ டர்ந்து பின்பு சார்து மஞ்சல் போகெஞ
உணர்ந்து கூறி மார வேளே ஓவி லன்பொ டேவினுன்.

மன்மதனே! உன்னே நான் முன் கேட்டபோது திடீரென மறுத்து வெடு வெடனப்பேசி எனது முன்பு சொன்னதை எல்லாம் நான் பொறுத்தேன். அதோடு நீயும் இப்போது எனது வார்த்தையை மதிப்பவனுகி கைலேமலேமேல் போர் செய்ய செல்வேன் என துணிந்தது அது மிக மிக நன்று. உன்னே சிவபிரான்பால் விட்டு நாம் இங்கு சும்மா இருக்கப்போவதில்லே. தொடர்ந்து உனது பின்பாக நாமும் வரு வோம். ஒன்றுக்கும் நீ பயப்படாதே! என மன்மதன் நிலேயாவற்றையும் பிரமதேவர் உணர்ந்து கூறி மன்மதனின்மேல் இப்போது அளவற்ற அன்பாகி அவனே போகும்படி விடுத்தார். 59

ஏவு காலே மதனே வேள்வி யிறைதெ ரிந்து மைந்தயான்
தேவ ரோடு துயரு ழந்து சிறுமை பெற்ற தறிதியே
ஓவில் வாழ்வு தருதி யென்னின் உமைம டந்தை தனேயரன்
மேவு மாறு புரிகெ ஞவி ரைந்து செல்ல நல்கினுன்.

இவ்வாறு மன்மதனே பிரமதேவர் செல்லவிடுகின்றபோது யாகங்களே செய்த இந்திரதேவனுனவன் கிட்டச்சென்று அவனேப் பார்த்து எனது மகனே மன் மதா கேள் நான் இந்த தேவர்களோடும் துயரம் உழந்து பெரும் சிறுமைப்பட்டது நீ அறிவாய். ஆனமையால் எனக்கு மேலான வாழ்வுதருவாய் என்ருல் உமையம்மை யாரை சிவபிரான் மேவுமாறு ஏதோ வகையால் உனது செயலேச் செய்வாயாக எனக் கூறி அப்பா, விரைவாக எனது துயர் நீக்கி வாழ்வு தர சென்று வருவாயாக என விடை கொடுத்தருளினுன். 60

நல்க லுங்க ரங்கள் கூப்பி நான்மு கத்தன் உலகொரீஇ
அல்கு தன்பு ரத்து நண்ணி அவ்வி யற்கை கூறியே
ஒல்கு தேவி யைத்தெ ளித்தொ ருப்ப டுத்தி நறியதேன்
பில்கு வாளி யிட்ட தூணி பின்னி யாத்தி ருக்கினுன்.

இவ்வாறு இந்திரன் விடை கொடுத்தலும் மன்மதன் கைகளேக் கூப்பி வணங்கி நான்கு முகமுடைய பிரமதேவரின் மனேவதி என்னும் நகரை விட்டு நீங்கி சிறந்த தனது மன்மதபுரத்தைச்சேர்ந்து அங்கு தனது மனேவியாகிய இரதிக்கு இந்த பிரம தேவரின் வார்த்தையைக் கூறினுன். கூறியபோது இரதி அதுகேட்டு ஏங்கி இரங்கி ஞள். ஐயையோ இது பொல்லாத கருமமே, என் விளேயுமோ எனப்பயந்து கவலே யுற்ற தனது மனேவியைப் பார்த்து எனது அன்பே கவலேயுருதே எதுவாகிலும் ஈசன் கருணே உடையவர். தீது இல்லாத நன்மை தரும் திருவருள்மலே ஆனமையால் அவர் பால் சென்ருல் தீங்கு வராது. பயப்படாதே என தேற்றினுன். அவளே சம்மதம் கொள்ளுமாறு செய்து உடனே இனிய தேனேச் சொரிகின்ற பூக்களாகிய அம்பின் கூட்டையெடுத்து புற முதுகின்மேல் கட்டிக்கொண்டான். 61

கயக்க ணின்ற பூவின் மிக்க காம காண்டங் கன்னல்வில்
இயக்க மான பார வில்லெ டுத்து மொய்ம்பி லேந்தியே
தயக்க முற்று லாய செய்ய தண்ணென் மாவி ளந்தளிர்
வயக்க டுங்கண் வாள மொன்று மாம ருங்கு ளவத்தரோ.

குளத்தில் தோன்றும் தாமரைப் பூவில் மிக்க அழகு பொருந்திய காம காண்டம் எனப்படும் வில் கரும்பு வில் இயல்பாக பாரமுடைய வில் ஆகியனவற்றை எடுத்து வலியோடும் அதனை கையில் ஏந்தியவாறு, தயங்கியவர் உலாவல் செய்வது போலும் குளிர்ச்சி பொருந்திய செம்மையான மாமரத்தின் இளந் தளிர் எனப்படும் வாள் ஒன்று அது மிக வலியும் பாவிக்கும்போது தவருத வெற்றியும் தருவது அப்படியான வாளைத் தனது பக்கராக அரையில் உள் உறையில் செருகிக்கொண்டான்.

கோகி லங்க ளான வுங்கு ழாங்கொள் வேலை யானவுங்
காக ளங்கண் முரச மாய்க்க றங்க ஓதம் யாவதுஞ்
சீக ரங்க ளாய சைந்து செல்ல மீன கேதன
மாக வும்ப ருலவ வெண்ம திக்கு டைநி ழற்றவே.

குயில்களானவையும் கூட்டமாகிப் பெருகும் சமுத்திரங்களானவையும் காகளம் எனும் குழலாகவும், முரசம் என்னும் மேளமாகவும் சத்தமிடும்படியாக சமுத்திர அலைகளானவை எழுந்து மன்மதனும் வெண்சாமரை வீசிக்கொண்டு செல்ல சுருக் கொடியானது மேலெழுந்து தோன்ற வெள்ளை வடிவாகிய சந்திரனுகிய குடை நிழலைச் செய்து வரும்படியாகவும். 63

பொருவில் கிள்ளை யென்னு மாக்கள் பூண்ட தென்றல் வையமேல்
இரதி யோடு மேறி வேளி ருந்த தொல்லை யுலகினை
அரித கன்று குறிகள் வெய்ய அளவை யின்றி நிகழவே
பரமன் வைகு கயிலை யம்ப ருப்ப தத்தை யணுகினன்.

தனக்கு ஒப்பில்லா அழகுடைய கிளிகள் என்னும் குதிரை பூண்ட தென்றல் என்னும் தேர்மேலாகி மனைவியாகிய இரதியோடும் ஏறிக்கொண்டு மன்மதன் தான் இருக்கின்ற உலகைவிட்டு நீங்கினன். நீங்கும்போதே கவலை உள்ளூறுத்தலினலே தனது உலகைவிட்டு நீங்கிச் செல்லும்போது முன்னே சகுனங்கள் பெரிதும் தீமையாகக் காணப்பட அதனையும் கூடப்பொருட்படுத்தாது மன்மதன் சிவபிரான் இருந்தருளுகின்ற கைலைமலையைச் சார்ந்தான். 64

கயிலை கண்டு தொழுது தேரி ழிந்து காம வேள்தனக்
கயலில் வந்த பரிச னத்தை அவண்நி றுத்தி மாதுடன்
பயிலும் வில்லும் வாளி யும்ப ரித்து வல்லி யத்தினைத்
துயிலு ணர்த்தும் மான்ன னத்து ணிந்து போதல் மேயினன்

கைலைமலையைக் கண்ணுறும்போதே மன்மதன் வணங்கினன். தனது தேரை விட்டு இறங்கினன். தனக்கு அயலாகச் சூழ்ந்துவரும் பரிசனங்களை மன்மதன் அவ்விடத்து நிற்குமாறு நிறுத்திவிட்டு தனது மனைவி இரதியையும் அழைத்துக் கொண்டு

முன்னால் பலர்மேல் செலுத்தி மயக்கும் அம்பையும் வில்லையும் ஏந்தியவாறு நித்திரை செய்கின்ற புலியை எழுப்பச் செல்கின்ற மான் தனக்கு நேர்வதை உணர்ந்தாலும் சந்தர்ப்பவசத்தால் சிக்கி எப்படி ஏங்கினாலும் துணிந்து செல்லுமோ அவ்வாறு மனத் துணிவோடும் கைலைமலைமேல் சேர்ந்தான் மன்மதன். 65

கூறு லாவு மதிமி லைந்த குழகன் வைகு கயிலைமேல்
ஏறி யேத னாது கையி ருந்த கார்மு கம்வளைஇ
மாறில் ஏவு பூட்டி யங்கண் வைகு புள்ளும் மாக்களும்
ஊறி லாதி ருந்த காம முன்னு வித்தல் முன்னினான்.

கீற்றுப்பிறை குலவுகின்ற சடையுடையவனும், தோடணிந்த காது உடையவனு மாகிய எம்பிரானின் கைலைமலைமேல் ஏறினான் மன்மதன். ஏறிச்செல்பவன் தனது கையில் பிடித்த, வளைத்து மாறின்றி மயக்கம் செய்யும் மலரம்புகளைப் பூட்டி அங்கே கைலை மலையில் பொருந்தும் பட்சிகள் மீதும் மிருகங்கள் மீதும் மலரம்புகளை எய்து இது காறும் தீய உணர்வாகிய காமப்பற்று அற்று இருந்த இந்த பறவைகளை விலங்குக ளைக் காம உணர்ச்சி கொள்ளும்படி ஆக்குவேன் என தனது மனதில் முதல் எண்ணினான்.

பொருவில் காம னின்ன தன்மை புந்தி கொண்டு மற்றவன்
விரவு புள்ளின் மீதி னும்வி லங்கின் மீதி னும்மலர்ச்
சரமெ லாம்வி டுப்ப வாதி தனது மந்தி ரத்துமுன்
அருளி னோடி ருந்த நந்தி யடிகள் அன்ன கண்டரோ.

மக்களை மயக்கி காம உணர்வில் ஆக்குவதில் தனக்கு பிறரொருவர் நிகரில்லாத மன்மதன் இவ்வாறு மனதில் எண்ணி மற்றும் அங்கு கைலைமலை அடிவாரத்தில் காணப் படும் பட்சிகளிலும் மிருகங்களிலும் தனது மலர்களாகிய அம்புகளை விடுப்ப அப் போது ஆதியாகிய சிவபிரான் திருக்கோயில் முன்பாக அருளினோடும் காவல்பூண்டி ருந்த நந்தியம்பெருமான் அதனைக் கண்டார். 67

கொம்மெ னச்சி னம்பு ரிந்து கொடிய பூசல் மதனார்
தம்மி யற்கை யாமி தம்ம சரத மென்று நினைவுறா
உம்மெ னத்தெ ழித்து ரப்ப வொலிகொள் புள்வி லங்கின்மேல்
வெம்மை யிற்செ லாது மாரன் விசிகம் விண்ணின் நின்றவே.

கண்டபோதே திடீரெனக் கோபங்கொண்டு என்னே! யார் இந்த மாதிரிச் செய லைச் செய்கிறார் என எண்ணி ஓகோ! கொடிய போர் செய்யும் மன்மதன் தான் இதைச் செய்யவல்லவன் அவன் தான் இப்படி இங்குள்ள பறவையும் மிருகமும் தம் பாட்டில் காம உணர்வு கொள்ளும்படிச் செய்தான்! இது உண்மையென மனதில் எண்ணி உடனே உம்! என உரக்கச் சத்தமிட்டு உரப்பினார். உரப்பலோடும் அந்த மன்மதன் விட்ட அம்புகள் அப்பறவை மிருகம்மேல் செல்லாது யாவும் தடைப்பட்டு வானத்தில் அந்தரத்து நின்றன. 68

நிற்ற லோடு மவ்வி புற்கை நின்று நோக்கி நெடியவேள்
கொற்ற நீடு சூர லொன்று கொண்டு கோபு ரத்தலைத்
தெற்றி மேலி ருந்த நந்தி தேவர் காப்பும் ஆணையும்
முற்று நோக்கி நெடிது யிர்த்து ளந்து ளங்கி விம்மினான்.

அவ்வாறு தான் பறவைகள் மிருகங்கள் மேலாக விடுத்த மலர்ப்பாணங்கள் அந்த ரத்து நின்றமையை மன்மதன் கண்டு திடுக்கிட்டு இந்த இயல்பை நின்று பார்த்தான். அப்போது எம்பெருமானுடைய கைலைமலைக் கோவில் கோபுர வாய்தலில் திருக்கை யிலே பிரம்பு ஒன்று தாங்கியபடி நந்தியம்கடவுள் காக்கின்ற சிறப்பும் அவருடைய ஆணையின் வலிமை முழுவதையும் பார்த்து பெரிதே மூச்சுவிட்டான். நந்தியம்பெரு மானுடைய வலிமையும் காவலையும் ஆணையையும் கண்டு ஏங்கி நடுக்கங்கொண்டான் மன்மதன். 69

விம்மி நந்தி தேவர் முன்வி ரைந்து சென்று தாழ்ந்தெழூஉச்
செம்மை செய்க ருத்த னாய்த்தி கழ்ந்து போற்றெ டுத்தலும்
இம்ம லைக்கண் வந்த தென்னை யெனஅ யன்பு ணர்ப்பெலாம்
மெய்ம்மை யாவு ணர்த்த லும்வி னாவி ஈது ளங்கொள்வான்.

ஏங்கி குழந்தைகள் பயந்து வீரிட்டு அழுவதுபோல விம்மி அழுதவாறு நந்தியம் பெருமான் முன் விரைந்து சென்று தாழ்ந்து எழுந்து செம்மைகொண்ட கருத்துடை யவனாய் திகழ்வாய் போற்றிசெய்தான். நந்தியெம்பெருமான் மன்மதனை நோக்கி நீ இங்குவந்தது எதற்கு எனக் கேட்டார். கேட்டபோது மன்மதன் பிரமதேவர் தாங் கள் யாவரும் சிறப்புறவேண்டி அங்கு தன்னை வஞ்சனையால் ஈசன்முன் பாணப்பிர யோகம் செய்யுமாறு விடுத்தார் என்னும் உண்மையான தனது வரலாறு முழுமையும் சொன்னான். சொன்னதும் நந்தியங்கடவுள் அதுகேட்டு சிந்தித்தருள்கிறார். 70

வேத னாதி யான தேவர் விழும நோய கன்றிடும்
ஏது வால்வி டுத்து ளார்க ளிவனை யீசன் யோகுறும்
போதில் யாவர் வருகி னும்பு காது செய்தி மதனவேள்
சாத லெய்து வான்வ ரிந்த டேலெ னாவி யம்பினான்.

ஓகோ! இது பிரமதேவர் முதல் யாவரும் சூரனால் படுகின்ற தங்கள் துயரம் நீங்கு மாறு விடுத்திருக்கிறார்கள் இந்த மன்மதனை இங்கு. இப்பால் ஈசன்தான் யோகத் தமரும் முன்பாக என்னைப் பார்த்து நந்தியே யாவர்கள் இங்கு வந்தாலும் ஒருவரை யும் உள்ளே நீ விடக்கூடாது மன்மதன் மட்டும் தான் சாகும்படியாக இங்கு வருவான் அவனை தடாது விடுவாயாக என்றருள் செய்தார். 71

புன்மை யாம்ப சுத்த டிந்து புரையில் வேள்வி யாற்றியே
தொன்மை போலெ ழுப்பு மாறு சுருதி சொற்ற வாறுபோல்
மன்ம தன்ற னைப்ப டுத்து மாதை வேட்டு மற்றதன்
பின்மு றைக்கண் நல்க எம்பி ரானி னைந்த னன்கொலாம்.

வேதங்களும் மிக மிருதுவான பசுவைவெட்டி யாக நெருப்பிலேஇட்டு அவிசொ ரிந்து பின்னர் வெட்டிய பசுவை உயிர் எழுப்பி பழைபடியாக வைப்பதை சிறப்பாக எடுத்து கூறி நிற்கும் தன்மைபோல எம்பெருமான் மன்மதனை சங்கரித்து தமது கண் ணுகிய நெருப்பினுல் எரித்து சாம்பராக்கி பின்னர் எழுப்ப எம்பெருமான் நினைந் துள்ளான் போலும். 72

ஆகை யாலி தருள தேயி வன்வ ரத்தும் ஆணையென்
ருேகை யாலு ணர்ந்து வேளை நோக்கி உம்ப ராகுலம்
போகு மாறி யற்றல் செய்த பொருவி லாத கருணைசேர்
ஏக நாய கன்றன் முன்ன ரேகல் வேண்டு மோவென்ருன்

ஆகையால் இந்த மன்மதனின் வரவும் அருளதேயாகும், ஆணையுமேயாகும். என்று மன்மதன் வரலாறெல்லாம் தனது திருஉள்ளத்து ஆனந்த நிலையால் உணர்ந்தார் நந் தியங் கடவுள். பின்னர் மன்மதனை நோக்கி மன்மதனே தேவர்கள் துயரங்கள் யாவற் றையும் போகுமாறு இயற்றல் செய்தருளிய தனக்கு நேரொருவரில்லாத கருணையங் கடலாய் ஏகனுய் நிறைகின்ற சிவபிரான் திருமுன்பு ஏகல் வேண்டுமோ நீ என்ருர் நந்தியங் கடவுள். 73

நந்தி தேவன் இனைய வாறு நவில வேயு ணர்ந்துவேள்
எந்தை கேட்டி யாலி தொன்ற னெக்கொ ரீறு குறுகினும்
அந்தி வேணி யண்ணல் முன்னம் அணுகு மாற மைந்திவண்
வந்த னன்ன தற்கி யைந்த வளமை நல்கு வாயென.

நந்திதேவர் இவ்வாறு கேட்டருளுதலும் அதன் பொருளை உணர்ந்தான் மன்ம தன். எந்தை பெருமானே நந்தியங்கடவுளே கேட்டருள்க ஈது ஒன்றை. எனக்கு முடிவுதான் நேரும்படி வந்தாலும் நான் செக்கர் போலும் மிளிரும் சடையுடைய பெருமான் திருமுன்பு செல்வதற்காக மனம்கொண்டு இங்கு வந்துள்ளேன். அதற் காக அமைகின்ற தகமைகளை தேவரீர் செய்துதர வேண்டுமென மிக இரந்துவேண்டி னுன் நந்தியெம்பெருமானை. 74

இகலு மன்பு மிறையு மின்றி யெவ்வு யிர்க்கு முள்ளதோர்
புகுதி நாடி முறையி னைப்பு ரிந்து சேர்ப வுர்க்குமேல்
தகுதி செய்து கருணை கூர்ச யம்பு முன்பு சார்தியேல்
மிகுதி கொண்ட மேலை வாய்தல் மேவி யேகு கென்றனன்.

அதனைக் கேட்ட நந்தி பகவான் சொல்கிருர் மன்மதனே பற்று வெறுப்பு எனும் தன்மை யாவும் இல்லாதபடி அவரவர்க்கு உற்ற வினை சேரும் தகுதியை நாடி முறை புரிந்து பின்னர் அவர்கள் மேலே சேரும் நிலையை உருவாக்கும் கருணை சேர்ந்த பெரு மான் திருமுன்பு செல்ல வேண்டுமேல் நீ மேற்குப் புறத்திலுள்ள மிக உயர்ச்சி வாய்ந்த வாய்தல் ஊடாக செல்வாயாக எனக் கூறினுர்.

இறைவன் எல்லா உயிர்கட்கும் ஈடேறும்படியாக தகுதி கொண்டு பற்று வெறுப் பின்றி கருணை செய்பவன். கருணையே அவன் வடிவம். அதனை அவரின் திருமுன்பு

செல்ல வேண்டுமானுல் நான் இருக்கும் இந்த வாய்தல் ஊடாகச் செல்லாமல் மேலை வாய்தல் ஊடாகச் செல் எனச் சொல்லியருளினுர் நந்தியங் கடவுள். 75

என்ற லுங்க ரங்கு வித்தி றைஞ்சி மார னேர்புறீஇ
நன்றி லங்கு வேத்தி ரக்கை நந்தி தேவர் விடைதரச்
சென்று மேலை வாயில் சார்ந்து தேவ தேவன் நீற்றழற்
குன்ற மென்ன மோன மோடி ருந்த வெல்லை குறுகினுன்.

என்று நந்தியங்கடவுள் கூறியருளலும் மன்மதன் கேட்டு மகிழ்வாகி அவரைத் தனது கரங்களைக் கூப்பி வணங்கியபோது நீ சென்று வாவென பிரம்பு ஒன்று கையில் ஏந்திய நந்தியங்கடவுள் விடை கொடுப்ப புறப்பட்டு மன்மதன் சென்று மேற்குப் புறத்தேயுள்ள வாய்தல் சார்ந்து அங்கு தேவதேவன் சாம்பல் பொலியும் நெருப்பு மலைபோல மோனத்தோடும் வீற்றிருந்தருளும் எல்லையைக் குறுகிச் சேர்ந்தான். 76

ஒருதனிச் சிம்புள் வேந்தன் உறைந்தது கண்ட சீயக்
குருளையின் அமலன் றன்னைக் கோலமால் புதல்வன் காணு
வெருவரு முளத்த ணுகி வியர்த்துமெய் பனியா வுட்கிப்
பருவர லுழந்து கொண்ட படையொடுங் கடிதில் வீழ்ந்தான்.

இவ்வாறு எம்பிரான் யோகத்து அமர்ந்தருளுகின்ற மௌனநிலையைக் கண்ணுற்ற மன்மதன் எப்படி யாணுன் என்றுல் ஒரு தனியஞன சரபப்பட்சி எனும் அரச பறவை யானது இருப்ப அதைக் கண்ட ஒரு சிங்கக்குட்டி எப்படி பயந்து நடுங்குமோ அப் படியாணுன். ஈசனைக் கண்ட மாத்திரத்தே அவனுடைய உள்ளம் நடுங்கத் தொடங் கியது. மேனி வேர்த்தது. கைகால் உடலம் பதறியது, பெருந்துயரமாகி ஏங்கி அறி விழந்து கையிலே கொண்டபடையோடும் விரைவாகக் கீழே வீழ்ந்தான், 77

எழுதரு மதனு மேகம் இறைவனைக் கண்டே யஞ்சி
விழியிருண் மூடக் கோல வில்லிட்டு வியர்ப்பின் வாரி
மழைபட இடியார்ப் பெய்த மார்புமற் றதுவீழ் கின்ற
தொழின்முறை புதரங் காட்டத் துளங்கிவீழ்ந் திட்ட தன்றே

மன்மதன் வீழ்ந்த தன்மையானது ஒரு மேகம் எழுந்து இருள்வதுபோல இறைவனைக் கண்டு பயந்து கண்களானது இருள்மூட, மேகம் கோலமான வில்லைக் காண்பித் ததுபோல மன்மதன் சோர்ந்து சாய்ந்து வளைய, அவன் மேல் வேர்வை தோன்றுவது இருண்டமேகம் துளியரும்புவது போலாக, மேகம் இடிப்பதுபோல அவன் நெஞ்சு படபடக்க, இடி வீழ்வதுபோல மன்மதன் சாய்ந்து வீழ்ந்தான்.

மன்மதன் இறைவனைகண்டு பயந்து சோர்ந்து வீழ்ந்தது மேகம் இருண்டெழுந்து மழைபொழிய இடிவிழுந்தது போலாயது, 78

அஞ்சிவீழ் குற்ற மாரன் அறிவிலா தவச மாகத்
துஞ்சினன் கொல்லோ வென்னுத் துயருழந் தெடுத்துத் தேவி
கஞ்சநேர் கரத்திற் றுங்கிக் கடிவகை யுய்த்துத்துத் தேற்ற
நெஞ்சமே லுணர்ச்சி கூட இனையவை நினைந்து நைவான்.

பயந்து ஏங்கி வீழ்ந்த மன்மதன் மயங்கி அறிவிழந்து கிடந்தமையைக் கண்ணுற்ற இரதியானவள் பதைபதைத்து எனது நாயகன் இறந்தாரோ என பெரிதும் ஏங்கிய வளாய்த் துயரம் கொண்டு மயங்கிய தனது கணவனைத் தூக்கி தனது தாமரைக்கு ஒப்பாகிய கரத்தில் தாங்கி அவன் மேல் வாசனை பொருந்திய நீரினைத் தெளித்து தேற்றினாள். அப்போது மன்மதன் அறிவு தெளிவாகி உணர்ச்சி கூடலும் இனைய எண்ணங்களை நினைந்து நைகிறான். 79

முறுவலின் எயின்மூன் றட்ட முதல்வனைப் பொருதி யென்றே
நறைமலர் அயனு மேனைத் தேவரும் நாகர் கோனும்
உறுதுய ரகல இங்ஙன் உய்த்தனர் வினையேற் கின்னே
இறுதிவந் தணுகிற் றாகும் இதற்குமோ ரைய முண்டோ.

தமது புன்சிரிப்பினாலே மூன்று புரங்களையும் நீறுக்கிய சிவபிரான் மேல் உனது பாணங்களை விடுத்து போர் செய்வாயாக என வாசனை கொண்ட தாமரை மலர் மேலிருக்கின்ற பிரமன் முதல் தேவர்களும் இந்திரனும் தங்களுக்கு உற்ற துயரம் நீங்கு மாறு பிறிதொன்றையும் சிந்தியாது என்னை இங்கு ஏவினார்கள். நானும் பாவியேன் அவர் வார்த்தையைக் கேட்டு வந்தேன். ஐயையோ எனக்கு இங்கே முடிவு வந்து சேர்ந்தது போலும். இதற்கும் இனிச் சந்தேகம் உண்டோ. 80

எண்டகு குணத்தின் மேலாம் இறையவன் இருந்த வண்ணங்
கண்டலும் வெருவி யாவி காண்கிலன் அவனை யென்கைக்
கொண்டதோர் கணைகள் வாகை கொள்ளுமோ இனைய பான்மை
அண்டரும் அயனும் யாரு மறிகிலர் போலு மன்றே.

எமது எண்ணங்களாலும் அளக்கொணாத மேலாகிய குணத்தினைக் கொண்ட எம் பெருமான் இருந்த யோகநிலையைக் கண்டபோதே ஏற்பட்ட பயத்தினால் எனது உயி ரையே காணமுடியவில்லை. ஆனமையால் எம்பிரானை எனது இந்தக் கையிலிருக்கும் பூவாகிய அம்புகள் வெற்றிகொள்ளுமோ. இந்தத் தன்மையை பிரமனும் தேவரும் யாரும் அறியார்கள் போலும். எம்பிரானுடைய யோக நிலை எவ்வளவு திட்பமுடை யது என நான் நேரில் கண்டேன். ஆனால் பிரமன் முதல் தேவர்கள் காணாதவர்கள் அவர்கள் எங்ஙனம் அறிவர் என்றான். 81

தாக்கினால் வலிபெற் றுள்ள மருத்தின்முன் தனித்த தீபம்
போக்கினால் நிற்ப துண்டோ அனையது போலத் தேவர்
வாக்கினால் மனத்தா லெட்டா வள்ளன்மு னுய்த்தா ரன்னான்
நோக்கினால் இனிச்சில் போதின் நுண்பொடியாவன் போலாம்.

தாக்கி வலிமையோடும் வீசும் புயல்போலும் காற்றின் முன்பாக தனியே ஒரு விளக்கைக் கொண்டு சென்றால் அது நிற்குமோ! இல்லையே அதேபோல தேவர்களும் தங்கள் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டொணாத வள்ளலாகிய எம்பிரான் முன் என்னை இப்போ செலுத்தினார்கள். இப்போ இங்கு எனி நடப்பது என்னவெனில் எம்பெருமா னுடைய பார்வையால் நான் இன்னும் சிறிது நேரத்தில் நுண்ணிய பொடியாகிய சாம்பல் ஆகுவேன். 82

ஏமுற வுலக மெல்லா மீறுசெய் முதல்வன் றன்னைப்
பூமலர் கொண்டி யானே பொருகின்றேன் நகையீ தன்றே
ஆமிது விதியின் செய்கை அதனையார் கடக்க வல்லார்
தாமரை முதல்வற் கேனுந் தள்ளருந் தகைய தன்றே.

உலகம் எல்லாம் ஆறுதல்பெறும் பொருட்டாக அழிவு செய்கின்ற முதற்பொருளாகிய ஈசனை நானு பூவாகிய பாணம்கொண்டு எய்யப்போகிறேன். இது சிரிப்புக்கு இடமல்லவா. ஐயோ ஏன் இச்செயல் எனக்கு வந்தது. அம்மவோ இது விதியின் செய்கை. இதை யார்தான் கடக்க முடியும். எல்லாவற்றையும் விதிக்கின்ற தாமரைப் பூமேல் இருக்கும் பிரமதேவர்க்காயினும் இந்த விதி கடக்க முடியாததொன்று. அது அப்படியானது. 83

ஈங்கிவை யமலன் சூழ்ச்சி யாவதோ முடிவ தோரேன்
தூங்கியான் கிடத்த லொல்லா துண்ணெ னவெழுந்து வில்லும்
வாங்கினன் சரமும் பூட்டி வல்லவா றிழைப்பன் ஐயன்
பாங்குற நின்று மேலே பட்டவா படுக வென்றான்.

ஈங்கு இதெல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்தால் இவையாவும் ஈசன் செயல் என்னவாகி எப்படி முடியுமோ அதை நான் அறியேன். இங்கே நான் துக்கமேலீட்டால் சோம்பி இருத்தல் கூடாது. எனி நான் விரைவாக எழுத்து வில்லை வளைத்து அம்பைப்பூட்டி என்னால் வல்லவாறு செய்வேன். மேற்கொண்டு பட்டவாறு படட்டும் என்றான். இவை யாவும் எண்ணியபோது ஈசன் திருவிளையாடலால் இங்கு என் நிலை இவ்வண்ணம் ஆயதுபோலும் எனத்;தெளிந்தேன். ஆகையால் இனி என் கடமை செய்வேன். மேலே நடப்பது நடக்கும் அது தானே எனக்கும் தெரியாது, ஒருவர்க்கும் தெரியாது என்றான். 84

இனையன பலவு முன்னி யெழுந்துமா மதவே ளிட்ட
தனுவினை யெடுத்து வாங்கித் தண்மலர் விசிகம் பூட்டி
மனைவிதன் னகலால் செல்ல மதிக்குறை தவழ்ந்த சென்னிப்
புனிதன தொருசார் போகிப் பொருவகை முயன்று நின்றான்.

இனிய பல வார்த்தைகளை கூறி மன்மதன் எழுந்தான். கீழே முன்னர் பயத்தால் போட்ட வில்லை இப்போது எடுத்துக் கொண்டான். அதில் மலராகிய அம்புகளைப் பூட்டியபடி அவனின் மனைவி இரதி அவனை விட்டு நீங்காதபடி அருகாகச் செல்ல, இளம்பிறை தவழ்வது போற் பொலியும் திருமுடி கொண்ட புண்ணியப்பொருளாகிய யோகீசுரரின் ஒரு பக்கராகச் சென்று அவர் யோக நிலையைக் கலைப்பதற்காக பூ அம்பு விடுத்து போரிடும் முயற்சி மேற்கொண்டு மன்மதன் நின்றான். 85

மாரவே ளீண்டு நிற்ப மனோவதி நகரின் மேய
ஆரண முதல்வன் றன்னை அமரர்கோன் தொழுது நோக்கிக்
காருறழ் கண்டன் றன்பாற் காமனை விடுத்தி யன்னான்
போரிய லுணர்வான் அங்கட் போதரல் வேண்டு மென்றான்.

மன்மதன் இங்கு இவ்வண்ணமாக நிற்கும் நேரத்து மனோவதி என்னும் நகரின் அமர்ந்தருளும் வேத முதல்வராகிய பிரமதேவரை தேவர்க்கரசனுன இந்திரன் தொழுது பார்த்து சொல்கிறுன். ஐயனே! நீர் நஞ்சுண்ட கண்டத்தையுடைய சிவபிரான்பால் மன்மதனை விடுத்தீர். அந்த மன்மதன் அங்கு என் செய்தான் என்னும் நிலையை யாம் நேரில் அங்கு சென்று அவன் தன் போர் முயற்சிகள் எவ்வாருயிற்று என அறியும் படியாக நாமும் அங்கு கைலைமலைமேல் செல்வோமென கூறினன். 86

சதமகன் இனைய கூறத் தண்மலர்க் கடவு ளோராக்
கதுமென வெழுந்து வானோர் கணத்துட னனையன் போற்றப்
பொதிதரு கயிலை யந்தண் பொருப்பின்மே லொருசார் போகி
மதனியல் தெரிந்து முக்கண் வள்ளலை வழுத்தி நின்ருர்.

நூறு யாகங்களின் பேற்றல் இந்திரபதவி எய்திய இந்திரதேவன் இவ்வாறு கூறுதலும் குளிர்மை வாய்ந்த தாமரை மலர் ஆசனமுடைய பிரமதேவர் கேட்டு நீ சொல்வது நன்று. நாம் அப்படி செய்வோமென விரைவாக எழுந்து புறப்பட்டு தேவர் கூட்டத்தோடும் இந்திரன் சூழ்ந்து பிரமதேவரை வணங்கியவாறு செல்ல அழகு பொதிந்திருக்கும் கைலைமலையைச் சேர்ந்து அதன் ஒரு சாராகப் பொருந்தி மன் மதன் நிலை எவ்வாறு ஆகிறது என உணர்ந்து மூன்று கண்ணுடைய எமது வள்ளலாகிய பெருமானை தோத்திரம் செய்தவாறு இருந்தார். 87

எறிதரு கணிச்சிச் செங்கை யீசன்மே லிலக்கநாடுங்
குறியினர் போல நின்ற கொடுந்தொழில் மாரன் றுஞ்சு
நெறியினர்க் கச்ச முண்டோ நினைத்தது முடிப்ப னென்று
நறுமலர் வாளி ஐந்து நாதன்மேற் செல்லவிட்டான்,

பகைவர் மீது வீசி எறியப்படும் மழுவாயுதத்தை தமது செவ்வொளி பரந்த திருக்கைமேல் ஏந்திய பெருமான் மேலாக, மன்மதன் வளைத்த வில்லில் பூட்டிய மலராகிய அப்புகளை குறி நாடினனுகி நின்ற கொடுந்தொழில் மேற்கொண்ட மன்மதனுனவன் தான் இறப்பேனென ஒரு வகையால் உணர்ந்தும் இறக்கத் துணிந்தார் பயமறியார் என்பதைப் போல தான் நினைத்ததையே முடிப்பேன் என எண்ணங்கொண்டு வாசம்மிக்க மலர்களாகிய ஐந்து அம்புகளையும் எங்கள் நாதன் மேல் செல்லவிட்டான். 88

விட்டவெம் பகழி யைந்தும் வியத்தகு விமலன் மீது
பட்டலுஞ் சிறிதே வேளைப் பார்த்தனன் பார்த்த லோடுங்
கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமற்
சுட்டது கயிலை முற்றுஞ் சூழ்புகை பரவிற் றன்றே,

மன்மதனுல் விடப்பட்ட அம்புகள் ஐந்தும் யாவரும் போற்றும் நிர்மல சொரூபராகிய எம்பெருமான் மீதுபட்டது. பட்டபோது எம்பெருமான் சிறிதே திருக்கண்ணுல் மன்மதனைப் பார்த்தனன். பார்த்தலோடும் எம்பிரானுடைய நெருப்புப் பொதிந்த நெற்றிக் கண்ணனது திடீரென மன்மதனைச் சுட்டது. உடன் கைலைமலை முற்றும் ஒரே புகைமயமாகப் பரவிக்கொண்டது. 89

ஆலையஞ் சிலைவேள் ஆகம் அழல்படக் கயிலை யின்கண்
ஏலவெம் புகையுந் தீயு மெழுதரு மியற்கை நாடின்
மாலயன் முதலோர் யாரு மதித்துழி விரைந்து பாலின்
வேலையின் நடுவு தீய விடமெழுந் தனைய தம்மா.

கரும்பினால் ஆன வில்லேந்திய மன்மதனின் உடலம் ஆனது நெருப்பாக எரிந்து போதலும் அங்கு எரிந்த நெருப்பின் சுவாலையும் புகையும் எழுந்து வருகின்ற இயற்கையை நாடிப் பார்த்தால் அஃது பிரமதேவர் விஷ்ணுபிரான் முதலியோர் யாவரும் தேவர்கள் அமிர்தம்பெற வேண்டிப் பாற்கடலைக் கடைந்தபோது பாற்கடல் நடுவே நெருப்புப் போலும் நஞ்சு எழுந்த தன்மை போலவும் இருந்தது. 90

செறிந்ததீப் புகையின் மாலை செல்லலுங் குணபால் வாய்தல்
உறைந்ததோர் நந்தி தேவன் ஒல்லையி லதனைப் பாரா
இறந்துபா டாயி னன்கொல் ஏகிய மதன னென்னு
அறிந்தரோ உடைந்தார்க் கோதி யொருசெய லறைய லுற்றான்.

எங்கும் செறிகின்ற நெருப்பில் தோன்றிய புகைபடலம் படலமாக செல்லலும் அதுபோதில் கைலைமலைக் கோவிலின் கிழக்குப்புற வாய்தலிலே காவலாக வீற்றிருந் தருளிய நந்தியெம்பெருமான் விரைவாக அதனைப் பார்த்து ஓகோ! இறந்து பாடாயினன் போலும் இங்கு முன் சென்ற மன்மதன் என அறிந்தாராகி அங்கு தம்மோடு துணையாக அடைந்தார்களாகிய கணங்கள் உணருமாறு இதை ஓதிவிட்டு பின் ஒரு வார்த்தையை எல்லாரும் உணருமாறு சொல்லியருள்கின்றார். 91

நுண்ணிய வுணர்வின் மிக்கீர் நுமக்கிது புகல்வன் எங்கோன்
கண்ணுத லுமிழ்ந்த செந்தீக் காமனைப் பொடித்த தன்றால்
அண்ணலை யெய்வ னென்னு அனையவன் றுணிவிற் கூறித்
துண்ணென ஈண்டு வந்த செயற்கையே சுட்ட போலும்.

மிக மிக நுண்ணியதாகிய உணர்வில் மிக்கீர் உங்களுக்கு இதை நான் எடுத்து சொல்லுகிறேன் என்னவெனில் நெற்றியில் கண்ணுடைய எம்பிரானின் கண்ணினின் றும் வந்த நெருப்பு மன்மதனை சுட்டெரித்தது என எண்ண வேண்டாம். பின் எப்படி எனில் அந்த மன்மதனானவன் இங்கே எம்பெருமானை எய்வேன் எனது மலர்ப் பாணத்தை விடுப்பேன் எனத் துணிந்து கூறி இங்கு வந்த செய்கையே அவனைச் சுட்டதுபோலும் என்றார். ஈசன் திருக்கண் அவனைச் சுடவில்லை. அவன் செயலே அவனைச் சுட்டது என்றார். 92

இன்னினி மகிழ்நன் றுஞ்சு மியற்கையை யிரதி நாடி
வன்னிபெய் யலங்கல் போலாய் வயிறலைத் திரங்கி யெங்கோன்
தன்னைவந் திரப்ப வேளைத் தருகுவன் காண்டிர் அந்த
முன்னவன் அணுக்கட் காய முறைபுரி யருளா லென்றான்.

இனிமேல் தனது கணவன் இறந்த செய்கையை இரதிதேவி நாடி நெருப்பிலே போட்ட பூமாலை போலாகி தனது வயிற்றிலே அடித்து மோதிக் கொள்வாள். அழுது அழுது ஏங்கி ஓடிவந்து கருணை வடிவான எம்பிரானை இரப்பாள். அவ்வேளை ஈசன் மன்மதனை மீளவும் உயிர்பெற்றெழும்படி செய்வார். அதனை நீவிரும் காண்பீர். அதாவது அப்பெருமான் எல்லா அணுவிற்கும் கூட முறை செய்து அருள் புரியும் தன்மைபோலும் இது. ஈசன் அருளால் மன்மதன் இன்னமும் உயிர்பெறுவான் என்றார். 93

ஐந்தொகை யாற்றின் மாடே யமலனை நினைந்து நோற்ற
நந்தியந் தேவன் இன்ன நவிலுற மவற்சூழ் கின்ற
அந்தமில் கணத்தோர் கேளா அகிலமுய் பொருட்டா லெங்கோன்
புந்திகொ ளருளின் செய்கை போற்றெடுத் தனரா யுற்றார்.

ஐந்து ஆறுகள் கூடுதலால் திருவையாறு என பெயர் கொண்ட தலத்தின் பாங்கராக நிர்மல சொரூபனாகிய இறைவனை நினைந்து தவம் செய்தருளிய நந்தியங் கடவுள் இவ்வாறு இதனைச் சொல்லியருளலும் அவரை அவ்விடத்து சூழ்ந்திருக்கின்ற கணக் கற்ற சிவகணங்கள் உலகம் யாவும் உய்யும் பொருட்டாக எமது ஈசன் திருவுள்ளத்து அருள் புரிகின்ற அளந்தறிய முடியாத பெருமையை உணர்ந்து போற்றிசெய்து துதிப் பாராயினர்கள். 94

வாவலங் கிள்ளை மான்றேர் மதன்புரி வினையா லன்னான்
வேவரப் புணர்த்து நோக்கி மிகைபடா தவன்சா ரான
தேவியை முடிக்கு மாற்றல் செய்திலன் இகல்பற் றின்றி
மூவரை விடுத்துத் தொன்னாள் முப்புரம் பொடித்த முன்னோன்.

அழகிய கிளிகள் எனும் குதிரை பூண்ட பெருந்தேர்மேல் வரும் மன்மதன் செய்த வினையால் அந்த மன்மதனே வெந்து சாம்பராகும்படி பார்வை செய்தும் அவன் பக்கராக இருந்த இரதியை முடிக்கும்படியாக யாதொன்றும் செய்திலன் எம்பெருமான். எதுபோலும் எனில் கோபம் பற்று என்னும் தன்மை இல்லாமல் முப்புரங்களை முன்பு எரித்துள்ளபோது முப்புரத்து வாழ்ந்த அசுரரைத்தப்ப வைத்து அவர் இருந்த புரத்தைப் பொடியாக்கியவாறு போல. முப்புரங்களில் வாழ்ந்த அசுரர்கள் பலகால் உலகிற்கு தீங்கிழைப்ப அவர் இழைக்கும் தீங்கிற்கு காலாக இருந்த புரங்களைப் பொடியாக்கிவிட்டு அசுரர்களைக் காப்பாற்றியவாறு போல கூட இருந்த இரதி தப்பிப் பிழைக்க வைத்து மன்மதனை மட்டும் ஈசன் எரித்தார். 96

கண்ணழல் சுடுத லோடுங் காமவேள் யாக்கை முற்றுஞ்
சுண்ணம தாகி வீழத் துஞ்சினன் போய பின்னை
அண்ணலம் பகவன் தொல்லை யமைதியின் இருந் தானெல்லாம்
எண்ணிநின் றியற்றும் எங்கோற் கினையதோ அரிது மாதே.

நெற்றிக் கண் சுடுதலோடும் மன்மதன் உடலானது பொடியாக எரிபட்டு வீழ்ந்து இறந்து போதலோடும் அண்ணலாகிய பகவான் பழமையாகிய அமைதியின் மீண்டும் யோகத்தமர்ந்து இருந்தார். எல்லாவற்றையும் தானே எண்ணி நின்று இயற்றுகின்ற எங்கள் கடவுளுக்கு இணைய ஓர் செயல் அரிதோ, இல்லையே! 96

பாடுறு கணவன் செய்கை பார்த்தலு மிரதி யுள்ளங்
கூடின துயரம் வீந்த கொண்டதொல் லுணர்ச்சி, கண்ணீர்
ஓடின வியர்த்த மெய்மூக் குயிர்த்தன வொடுங்கிற் றுவி
வீடினள் இவளு மென்ன விரைந்துகீழ்த் தலத்தின் வீழ்ந்தாள்.

பாடாகி வீழ்ந்து சாம்பராகி தனது கணவன் மாண்ட தன்மையை இரதி பார்த்தாள். இரதி உடனே உள்ளத்து துன்பங் கொண்டாள். அவளுடைய உணர்வெல்லாம் மாண்டது. கண்ணீர் பெருகியது, மேனி வியர்த்தது, மூக்கின்இடமாக பெரியதோர் மூச்சு வந்தது, அதோடு அவள் உயிர் ஒடுங்கியது. இவளும் இறந்தாளோ என்னும்படியாக விரைவாக நில மேலாக கீழே வீழ்ந்தாள். 97

சுரிதரு குடிஞை யாற்றிற் சுழித்தலைப் பட்ட மான்போல்
பருவரல் வாரி நாப்பட் படிந்துபற் றின்றிச் சோரும்
இரதிசில் பொழுதிற் பின்ன ரிறந்ததொல் லுணர்வு தன்பால்
வருதலும், மறித்துச் செங்கை வயிறலைத் திரங்க லுற்றாள்.

நீர் பெருக்கினால் சுழிகொண்டு ஓடும், ஓர் ஆற்றின் சுழியிலே அகப்பட்ட மான் போலாகி, இரதியானவள் பெரிதும் துன்பம்கொண்டு தனது துயரக் கடலுக்கு ஓர் கரைகாண முடியாதவள் போலாகி தனக்கு துணையாகும்படி அந்நிலையில் ஏதும் ஓர் பற்றின்றிச் சோர்பவள் சில பொழுதின் பின் தனது உணர்ச்சி திரும்பவும் கூடப் பெறுதலினால் தனது அருமையான சிவந்த கைகளால் வயிற்றில் மோதி இரங்கிப் புலம்பி அழுவாளாயினாள். 98

செம்பதுமை திருக்குமரா தமியேனுக் காருயிரே திருமால் மைந்தா
சம்பரனுக் கொருபகைவ கன்னல்வரிச் சிலைபிடித்த தடக்கை வீரா
அம்பவளக் குன்றனைய சிவன்விழியால் வெந்துடல மழிவுற் றாயே
உம்பர்கடம் விழியெல்லா முறங்கிற்றோ அயனுரு முவப்புற் றாரோ.

செந்தாமரை மலர் மீதுள்ள மகாலெட்சுமியின் திருக்குமரனே! என்னுடைய ஆருயிரே; திருமால் மைந்தனே! சிவபிரானுக்கு ஒரு பகைவனே! கரும்பாகிய வில்லைக் கையில் பிடித்தவனே! வீரனே! அழகிய பவளமலைபோலும் பெருமான் திரு விழியால் வெந்து உடலம் பொடிபட்டுப் போனாயே அழிவுற்றாயே! ஐயையோ மூடாத கண்கொண்ட தேவர் கண்ணெல்லாம் உறங்கிப் போச்சோ. பிரமதேவரும் இப்போது சந்தோஷப்பட்டாரோ. 99

முன்னாளிற்புர மூன்று மட்டவன்மேற் பொரப்போதன் முறையோவென்று
சொன்னாலுங் கேட்டிலையே அமரர்பணி புரிவதுவே துணிந்திட்டாயே
உன்னாகம் பொடியாகிப் போயினதே இதுகண்டும் உய்வா ருண்டோ
என்னாவி யாகியநீ யிறந்தபின்னும் யான்றனியே யிருப்பதேயோ.

முன்னாளிற் புரமூன்றும் எரித்த பெருமான் மேற்போர் செய்யப் போதல் தகாது முறையோ என்றே நான் பலமுறை சொன்னாலும் நீ கேட்டிலையே. தேவர் பணிபுரிவதுதான் சரி என்று நீ துணிந்தாயே! ஐயையோ உனது மேனி பொடியாகிப்போ

னதுவே இதைக் கண்டு கொண்டும் இனி உய்வார் உண்டோ. என் ஆவியாகிய நீ இறந்தது கண்டும் நான் இன்னும் இங்கு இருப்பதேயோ. 100

மாருகப் பரமன்விழி நின்னுற்ற லிலதாக மற்றுன் மெய்யும்
நீருக விண்டெல்லாம் நெருப்பாகக் கவலைவிண்ணோர் நெஞ்சத்தாக
ஆருத பெருந்துயர மெனக்காக எங்கொளித்தாய் அருவா யேனுங்
கூருயோ வறிந்திருந்தாய் என்கணவா யான்செய்த குறையுண்டோதான்.

எல்லார்க்கும் அருள் செய்யும் ஈசன் திருவிழி உனக்கு மாருகவிளைய உனது வலிமையும் ஆற்றல் இலதாகப்போக, உனது மேனியும் பொடியாக விண்ணெல்லாம் நெருப்பாக கவலைகள் எல்லாம் தேவர் நெஞ்சத்தாக ஆருத பெருந் துயரம் எனக்காக எங்கே ஐயா ஒளித்தாய். ஐயோ நீ அருவாகி மறைந்தாலும் கூருயோ ஏன் பேசாதிருக்கின்ருய் என் கணவனே, அன்பே இதுகாறும் உனக்கு செய்த குறை ஏதேனும் உண்டோ. 101

உம்பர்கடம் பாலேயோ இந்திரனுர் பாலேயோ வுன்னை யுய்த்த
செம்பதுமத் திசைமுகத்தோன் பாலேயோஅரன் செயலைச் சிதைப்ப னென்னு
இப்பரிடை வல்விரைந்து வந்திடுநின் பாலேயோ ஈசன் கண்ணுல்
வெம்பொடியாய் நீயிறந்த இப்பழிதான் எவர்பாலின் மேவிற் றையோ.

தேவர்கள்பாலோ, இந்திரன்பாலோ அல்லது உன்னை இங்கு செலுத்திவிட்ட தாமரை மலர் மேலவராகிய பிரமன்பாலோ அன்றி சிவபிரான் செயலை நான் சிதைப்பேன் எனக் கூறி இங்கு விரைவாக வந்த நின்பாலோ ஈசன் கண்ணுல் நீ இறந்து பொடியாகிய இப்பழி எவர்பால் சாரும்? நீ இறந்தது ஓர் பழி. இப்பழி உன்னை இங்கு செலுத்தியவரைச் சேர்ந்ததோ அல்து அவர்சொன்னுலும் உணராமல் வந்த உன்னைச் சார்ந்ததோ என்றழுதாள். 102

வில்லான்முப் புரமெரித்த பரம்பொருள்யோ கந்தவிர்க்க வேண்டில்விண்ணோர்
எல்லாரு மிறந்தனரோ என்கணவா நீயோதான் இலக்காய் நின்ருய்
கொல்லாது போலவுனைக் கொன்றனரே என்னுயிர்க்குங் கொலை சூழ்ந்தாரே
பொல்லாத பேர்க்குநன்றி செய்வது தம்முயிர் போகும் பொருட்டே யன்றே.

ஐயையோ எனது ஐயாவே! வில்லால் முப்புரம் எரித்த பெருமான் கொண்ட யோகத்தைத் தவிர்க்கவேண்டித் தேவர்கள் எல்லாரும் விரும்பினுரே. அப்படி விரும்பிய அவர் இறந்தாரோ இல்லையே! என் கணவா நீயோ தான் இதற்கு இலக்காகி நின்ருய். தேவர் எல்லாம் உன்னைக் கொல்லாது போலக் கொன்றுவிட்டாரே தமது சூழ்ச்சியால். ஆனமையின் பொல்லாதபேர்க்கு நன்றி செய்வதனுல் தனக்கே கேடுவரும் என்பது இப்போது தெரிகிறதல்லவோ. 103

என்னபவஞ் செய்தனே என்போல்வார் தமக்கென்ன இடர்செய் தேனு
முன்னையுள விதிப்பயனை யறிவேனே இப்படியே முடிந்த தையோ
கன்னல்வாரிச் சிலைபிடித்த காவலவோ தமியேனைக் காத்தி டாயோ
வன்னிவிழி யாவுடைய பெருமானை நோவதற்கு வழக்கொன் றுண்டோ.

என்ன பாவந்தான் நான் செய்தேனோ. என்போன்ற பெண்களுக்கு என்ன இடர் செய்தேனே, இப்போ யான் துன்பப்படுவதற்கு காரணமாக முன்னே செய்த வினை யால் வந்த விதியின் விழைவையறிவேனோ. இப்படி முடிந்ததே ஐயையோ! கரும்பு வில் கைபிடித்த எனது காவலனே! ஐயனே எனியும் தமியேனுக்கு யார் துணை என்னை நீ காத்திடமாட்டாயோ, நெருப்பு மயமாகவே கண்ணுக உடைய எமது பெருமானை நோவதற்கு விதி ஒன்று உண்டோ. 104

பொன்செய்தார் முடிகாணேன் அழகொழுகுந் திருமுகத்துப் பொலிவு காணேன்
மின்செய்பூ ணணிகுலவும் புயங்காணேன் அகன் மார்பின் மேன்மை காணேன்
கொன்செய்பூங் கணைகாணேன் சிலைகாணேன் ஆடல்புரி கோலங்காணேன்
என்செய்வேன் என்கணவா என்னையொழித் தெவ்விடத்தே யிருக்கின்றாயே.

பொன்போல விளங்கும் மாலை அணிந்த உனது முடிகாணேன், அழகு ஒழுகு கின்ற உனது திருமுகத்துப் பொலிவு காணேன். மின்னல் ஒத்து விளங்கும் ஆபர ணங்கள் அணிந்து விளங்கும் உனது தோள்காணேன். அகன்ற நெஞ்சின் மேன்மை காணேன், உயர்வான பூக்களாகிய அம்பு காணேன், உனது வில் காணேன், நீ ஆடல் செய்யும் கோலத்தை நான் காணேன், என் செய்வேன் எனி என் கணவா, என்னைத் தனியே இங்கு விட்டுவிட்டு நீ எவ்விடத்து ஒளித்திருக்கிறாய். 106

அந்நாளி லழற்கடவுள் கரியாக வானவரோ டயன்மால் காணப்
பொன்னாரு மங்கலநாண் பூட்டியெனை மணஞ்செய்து புணர்ந்த காலை
எந்நாளு மினியுன்னைப் பிரியலமென் றேவாய்மை யிசைத்தாய் வேனில்
மன்னவோ மன்னவோ எனைத்தனியே விட்டேகல் வழக்கோ சொல்லாய்.

அன்றொருநாள் அக்கினி தேவன் சாட்சியாக தேவர்களோடு பிரம விஷ்ணுக்கள் காணும்படியாக, பொன்னார்ந்த மங்கலமான தாலியை என்மேல் அணிந்து என்னை மனைவியாக ஏற்று திருமணஞ் செய்து என்னை அணைத்துக் கூடிய காலத்து என் கண்ணே உன்னை ஒரு காலும் பிரியேன் எனக் கூறினாய். இது உண்மை என்றாய். வேனில் காலத்து என் மன்னவனே எனைத் தனியேவிட்டு நீ போதல் வழக்கோ சொல் லாய். 106

போவென்று வரவிட்ட தேவரெல்லாம் பொடியாகிப் போனவுன்னை
வாவென்று கடிதெழுப்ப மாட்டாரோ நின்றாதை வலியனென்பார்
ஓவென்று நானிங்கே யாற்றிடவும் வந்திலனால் உறங்கினானோ
வேவென்று நின்சிரத்தில் விதித்திருந்தால் அவரை யெலாம் வெறுக்கலாமோ.

என் கணவா இங்கே போ என்று உன்னை இங்கு வரச் சொன்னாரே தேவர்கள் அவர் சொல்லால் வந்து நீ பொடிபட்டாயே! இப்போ அவர்கள் வாவென்றுசொல்லி விரைவாக எழுப்பமாட்டாரோ. உனது தகப்பன் விஷ்ணுபிரான் வலிமையுடையா ரென்று சொல்வார்கள். இப்போ நான் ஓவென்று கதறி அழவும் வந்திலனே அவர் நல்ல நித்திரையில் ஆழ்ந்தாரோ. நீ இப்படி வேகக் கடவாய் என்று நினது தலையில் எழுதி இருந்தால் அவரையெல்லாம் நான் வெறுக்கலாமோ. 1[illegible]0

நேயமோடு மறைபயிலுந் திசைமுகனைப் புரந்தரனை நின்னைத் தந்த
மாயவனை முனிவர்களை யாவரையும் நின்கணையான் மருட்டி வென்றாய்
ஆயதுபோல் மதிமுடித்த பரமனையும் நினைந்திவ்வா றழிவுற் றாயே
நீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின் செயலி தன்றே.

நேயத்தோடும் வேதங்களைப் பயில்கின்ற நான்கு முகமுடைய பிரமதேவனை இந்திரனை நின்னைப்பெற்ற மாயவனை மற்றும் தேவரையெல்லாம் நினது அம்பால் மருட்டி மயக்கினையே, எல்லாரையும் வென்றாயே. அவர்களைப் போல சந்திரனை அணிந்த திருச்சடையுடைய பெருமானையும் நீ நினைந்து இவ்வாறு அழிவுற்றாயே. உனது செயலானது நெருப்பாகிய விளக்கத்தின் முன்னால் பறந்து வந்து விளக்கொளி கண்டு மருண்டு மகிழ்வால் பறந்து உலாவி நெருப்பில் பட்டுமாண்ட விட்டில் பூச்சியின் செயல்போலானதே. 108

தண்பனிநீர்ச் சிவிறிகொண்டு விளையாடி மலர்கொய்து தண்கா நண்ணி
எண்படும்பூம் பள்ளிமிசைச் சிறுதென்றல் கவரிகளா யினிது செல்ல
வெண்பளித நறுஞ்சாந்தச் சேறாடி இருவருமாய் விழைந்துகூடிக்
கண்படைகொண் டமர்வாழ்வும் பொய்யாகிக் கனவுகண்ட கதையா யிற்றே.

எனது ஐயா நீயும் நானும் நல்ல நீர் தெறிக்கின்ற சிவிறியைக் கையில் ஏந்தி விளையாடி பூக்கொய்து அழகிய பூஞ்சோலை சேர்ந்து மேலாகிய பூப்பஞ்சணையின்மீது சிறிய தென்றல் காற்றானது வெண்சாமரையாக வீச இனிதுற்று; பச்சைக்கர்ப்பூரம் சேர்ந்த வாசக் கலவையை ஒருவர் மீது ஒருவர் பூசி இருவருமாக ஒருவர்மேல் ஒருவர் விருப்பாகக் கூடி அணைந்து நித்திரைசெய்து வந்த அந்த அழியாத இன்பம் இது என நான் நினைந்த எங்கள் வாழ்க்கையும் கனவு கண்ட கதையாகப் பொய்யாகிப் போனதன்றே. 109

மருகென்றே அவமதித்த தக்கனார் வேள்விசெற்ற வள்ளறன்னைப்
பொருகென்றே தேவரெல்லாம் விடுத்தாரே அவராலே பொடிபட்டாயே
எரிகின்றேன் உனைப்போல ஆறாத பெருந்துயரால் யானு மங்கே
வருகின்றேன் வருகின்றேன் என்னுயிரே யெனப் புலம்பி வருந்து கின்றாள்.

இறைவனை தனது மருமகன் தானே என எண்ணி அவமதித்த தக்கனாருடைய யாகத்தை அழித்த வள்ளலாகிய பெருமானை மலர் அம்பு சொரிந்து போர் செய்து வெல்வாய் என்று தேவரெல்லாம் விடுத்தாரே அவரால் நீயும் பொடிபட்டாயே ஆகவே நானும் நீ எரிந்ததுபோல் எனது ஆறாத உள்ளத் துயரால் நானும் எரிகின்றேன். நானும் எரிந்து உன்னோடு வருகின்றேன், எனது உயிரே இதைப் பார் எனப் புலம்பி இரதி வருந்துகின்றாள். 110

காமதகனப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-601.

186

# 5. மோனநீங்கு படலம்

இரதி இன்னணம் வருந்திடத் தொன்மைபோல் எங்கோமான்
விரத மோனமோடிருத்தலும் முன்னரே விறற்காமன்
கருது முன்பொடி பட்டது கண்டனர் கலங்குற்றார்
சுருதி நன்றுணர் திசைமுகன் முதலிய சுரரெல்லாம்.

இரதியானவள் இவ்வாறு வருத்தமுற்று அழுதவாறு இருப்ப எங்கள் கடவுள் பழமைபோல மௌன விரதத்தராகி யோகிபோல் வீற்றிருத்தலும், இதற்கு முன்பாகத் தாம் இறைவன்பால் செலுத்திய வலியினை உடைய மன்மதனானவன் நினைக்க முன் பொடியாகிப் போனது கண்டார்கள் எல்லாத் தேவரும் வேதங்களை நன்றாக உணர்ந்த பிரமன் இந்திரன் முதல் யாவரும். கண்ட உடனே அவர்கள் கலங்குற்றார்.

சிதலை மெய்த்தொகை வன்மிகத் தெழுந்தெனச் செலக்கண்ணீர்
பதலை யொத்தன அல்லல்கூர்ந் தரற்றிடப் பகுவாய்கள்
விதலை பெற்றுமெய் வியர்ப்புற வுளநனி விதிர்ப்பெய்த
மதலை யிற்றுழி நாய்கர்போல் துயர்க்கடல் மறிகின்றார்.

ஈக்கள் கூட்டம் கறையான் புற்றிடத்து இருந்து எழுதல்போல இவர்களுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருக பறை மேளம் ஒலித்தல்போல இவர்களுடைய வாய்கள் அல்லற்பட்டு உரக்கச் சத்தமிட இவர்கள் மேனி நடுநடுங்கி வேர்வைகொள்ள உள்ளமானது படபடப்ப ஒரு வணிகனானவன் அவனைத் தாங்கிச் சென்ற கப்பல் உடைந்தபோது எப்படிச் சோகமுறுவானோ அப்படிப் புலம்பித் துன்பப்பட்டார்கள், அல்லது தமது குழந்தை இறந்தபோது சோகங் கொண்ட தாய் தந்தையர்போலவும் தேவர்கள் ஆனார்.

2

மையு லாவரு கறைமிடற் றிறையவன் மருங்காக
எய்யும் மாரனை விடுத்தனம் அவனையு மிறச் செய்தான்
பொய்யி றன்னிலை தவிர்ந்திலன் தொன்மையே போலுற்றான்
ஐயகோவினிச் செய்வதென் னேவெனா அயர்கின்றார்.

ஐயய்யோ! நஞ்சு உலாவுதலால் அழகுடன் நீல நிறமுடைய ஈசன் பக்கமாக நாம் மலர் அம்பு எய்யும் மன்மதனை விடுத்தோம். அந்த மன்மதனையும் எங்கடவுள் இறக்கச் செய்தார். பொய்யில்லாத உண்மை வடிவான தனது யோக நிலையை ஈசன் தவிரவில்லை. பழைமை போல யோகத்து வீற்றிருக்கிறார், ஐயகோ நாம் இனி என்னதான் செய்ய முடியும்.

3

பூந்த ருங்கணை மாரனை விழியினாற் பொடிசெய்த
ஆத்த னாற்றலைப் புணர்ப்பினால் நீக்குவ தரிதன்னான்
காத்து நந்துயர் அகற்றிட வேண்டுமேற் கடிதேயாம்
ஏத்தல் செல்வதே கடனென யாவரு மிசைவுற்றார்.

பூவாகிய அம்பினுல் எய்து மயக்கும் மன்மதனை எரித்துப் பொடிசெய்த எங்கள் கடவுளின் ஆற்றலே எமது சூழ்ச்சியால் நீக்குவது அரிது. அவர் எம்மைக் காத்துத் துயரகற்ற வேண்டின் நாம் இனி தாமதம் செய்யாது துதி செய்கின்றதுதான் நல்லது. இதுதான் எமது கடனுகும். என எல்லாத் தேவரும் கூடிப் பேசிக்கொண்டு கும்பிட்டுப் போற்றலே கடனுகும் என்றுர்கள். 4

எகின மூர்பவன் முதலிய கடவுள ரெல்லோரும்
அகன மர்ந்திவை யிசைந்துதொல் கயிலேயி னகநாப்பட்ட
புகல தாயபொன் னகரிடைக் கோபுரப் புறனேகித்
தொகுதி யோடெம திறைவனை ஒல்லெனத் துதிக்கின்றுர்.

அன்னப் பட்சி வாகனமுடைய பிரமதேவன் முதற் சகல கடவுளர்களும் உள்ளத்து உற்றுத் தெளிந்த கொள்கையால் இவ்வாறு பேசி யாவரும் இசைவு கொண்டார்கள். பின்னர் மிகப் பழமையான கைலை மலைமேல் நடுவாக எல்லார்க்கும் புகலிடமாகிய பொன்னுலான திருநகரத்திடைக் கோபுரப் புறத்துச் சென்று கூட்டமாக நின்று இறைவனைத் துதி செய்கின்றுர். 5

நஞ்ச ருந்தியும் நதியினைச் சூடியும் நடுநெற்றித்
துஞ்சும் வெங்கனல் பரித்தும் வலியரைத் தொலைத்திட்டும்
அஞ்ச லென்று முற்காத்தனை இன்றெமக் கருளாயேல்
தஞ்ச மாருளர் தாதையே யல்லது தனயர்க்கே.

ஐயனே, எங்கள் பெருமானே தேவரீர் முன்னர் நஞ்சினை உண்டும், இளம் பிறையை அணிந்தும் உமது நடு நெற்றியில் எல்லாவற்றையும் பொடியாக்கும் அக்கினியைத் தாங்கியும் கொடிய அசுரரைத் தொலைவு செய்திட்டும் அஞ்சாதே என்று முன்னர் எம்மைக் காத்தருளினீர். இன்று சூரனுல் மெலிவுற்ற எம்மை அருள்செய்து காத்தருளாவிட்டால் என் செய்வோம். ஐயனே ஓர் குழந்தைக்கு அதன் தந்தையை விட வேறு யார் தஞ்சமரகுவர். 6

கோளில் அன்பர்கள் இழுக்கிய புரியினுங் குணனுக்கொண்
டாளு மெம்பிரான் நின்னடி அரணமென் றடைந்தேங்கண்
நாளும் வெந்திறற் சூரபன் மாவினுல் நலிவெய்தி
மாளு கின்றதோ சிறிதுமெம் முறுதுயர் மதியாயோ.

குற்றமில்லாத குணங்கொண்ட அன்பர்கள் தவருகிய சில கருமங்களைச் செய்து நின்றுலும் அவற்றைக் குணமெனக் கொண்டு அருள் செய்யும் எம்பெருமானே நினது திருவடிகளை எமக்குக் காப்பாகக் கொண்டு தஞ்சம் புகுந்தோம். நாளும் சூரபன்மன் என்னும் கொடிய அசரன் எம்மை வருத்தத் தாங்க முடியாது வேதனை கொண்டோம். ஐயனே இனியும் நாங்கள் அவனுல் வருத்தப்பட்டு மாண்டுபோகின்றதோ எமது துயரங்களைத் தேவரீர் சிறிதும் மதியீரோ. 7

தைய லைப்பிரீஇ யோகியல் காட்டிடு தனிச்செய்கை
ஐய நிற்கிதோ ரிறைவரை யாகுமால் அதுகாலை
நையு மெங்களுக் கூகம்பல சென்றன நாமெல்லாம்
உய்வ தெப்படி இன்னுநீ புறக்கணித்து றுவாயேல்.

ஐயனே எம்பிராட்டியைப் பிரிந்து தேவரீர் யோகிபோல் இருந்தருளிய இச் செய்கை ஐயனே உமக்கு ஓர் இறைப்பொழுது ஆகும். ஆனால் அவ்வளவு காலமும் எமக்கு பெரிதும் துன்பப்படுகின்ற எத்தனையோ யுகங்கள் சென்றுவிட்டன. நாமெல லாம் உய்வது எப்படி இன்னமும் தேவரீர் எம்மைப் புறக்கணித்தவாறு இருப்பதா னல். 8

நோற்று மாயவன் முதலினோர் யாவரும் நுனதாளைப்
போற்றி யர்ச்சனை புரியவித் திருவெலாப் புரிந்துற்றாய்
தோற்ற மின்றியே ஐந்தொழி லியற்றிய தொல்லோய்நீ
ஆற்று கின்றதோர் தவநிலை எப்பொருட் டளவன்றே.

தவம் செய்தவாறு நாராயணக் கடவுள் முதலியோர் உமது திருவடி மலர்களைப் போற்றி அர்ச்சனைபுரிய இச்செல்வ வாழ்வும் ஆணையும் வலியும் புரிந்தருளினீர். தேவரீர் ஓர் தோற்ற உருவமில்லாது அருபியாகவே நின்று ஐந்தொழில்கள் எனும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியவற்றைப் புரிந்தரு ளும் எல்லார்க்கும் முன்னை பழையோனே தேவரீர் இப்போ புரிந்தருள்கின்ற தவ நிலையானதும் எங்களை ஆட்கொண்டருளும் பொருட்டாகவல்லவோ. 9

எய்த்தி டுஞ்சிறி யேங்களைத் தவறுசூ ரிடர்வாளால்
நித்த லுந்துணித் தீருதி செய்வினை நெறிநேடி
அத்த இங்கினிக் காத்தரு ளல்லதேல் அடுவல்லே
சித்த மென்னுனக் கன்னவா றென்றினைச் செய்வாயே.

சூரனால் வருத்தப்பட்டு களைப்புற்ற எங்களை இன்னமும் அல்லல்தரும் துயரம் என்னும் வாளினால் நீரே வெட்டி அரிவார் போன்று அரியிறீர், ஏதோ நாங்கள் செய்த பாவத்திற்காக இதைச் செய்கின்றீர், ஆனால் நாம் சொல்வது ஒன்றுண்டு. எம்மால் இனி எனிமேலும் தாங்கமாட்டோம், ஆகவே தேவரீரை ஒன்று வேண்டு கின்றோம். எங்களைக் காத்தருள்புரியும் அல்லது எம்மைக் கொன்றுவிடும் உமது சித் தம் எப்படியோ அப்படியே செய்யும் என போற்றெடுத்தார்கள் பிரமன் முதல் தேவர்கள். 10

கங்கை வேணியாய் அம்மையை மணந்தெமைக் கடிகொள்ளத்
திங்கள் வெண்குடை மதனனை விடுத்தனந் தெளிவில்லேம்
அங்க வன்புரம் பொடித்தனை முன்புபோ லமர்ந்துற்றாய்
இங்கி யாந்தளர் கின்றதே இனிச்சிறி திரங்காயோ.

கங்கைச் சடையுடைய கடவுளே, அம்மையாரைத் திருமணஞ் செய்யும்படியாகத் தான் நாங்கள் சந்திரனைக் குடையாகக் கொண்ட மன்மதனை ஏவினோம். அவ்வாறு செய்யும்போது யாங்கள் உள்ளத் தெளிவின்றியே செய்தோம். என் செய்வேம் ஏழை யேம். அவ்வாறாக வந்த மன்மதனின் உடலத்தை எரித்தருளினீர் அதுமட்டுமன்றி முன்புபோல யோகத்தில் அமர்ந்தருளினீர். யாங்கள் இப்படியும் இங்கிருந்து தளர லாமா! எனியாகுதல் தேவரீர் சிறிது இரங்கமாட்டீரோ. 11

ஆர மூல்சின வயப்புலி முதலிய அடன்மாவின்
பேரு ரித்திறந் தரித்தனை சிறுவிதி பெருவேள்வி
வீர னைக்கொடு தடிந்தனை அஃதென மிகவெய்ய
சூர பன்மனைத் தொலைவுசெய் தெந்துயர் தொலைக்கென்றார்.

கொழுந்து விட்டெரிகின்ற நெருப்பைப் போலும் கோபமுடைய புலி வலிகொண்ட யானை முதலிய கொடியோர்களின் பெரிய உரியைத் தரித்துக்கொண்டீர். உப பிரமன் என்னும் தக்கனின் பெரிய யாகத்தை வீரபத்திரக் கடவுளைக் கொண்டு அழித்தீர்: அதேபோல முன் தேவரீர் சங்கரித்த இவர்களிலும் பார்க்கக் கொடுமை வாய்ந்த சூரபன்மனையும் சங்கரித்து எமது துயரைத் தொலையும் என்று போற்றினார்கள் தேவர் கள். 12

முரற்கொள் வண்டுசூழ் சததளப் பண்ணவன் முதலோர்கள்
உருக்க ரக்கென மெய்தளர்ந் திவ்வகை யுளநொந்தே
அரற்றி யேத்தலும் அவர்பவ முடிவதற் கணித்தாக
இரக்க மாய்அரு ணந்தியை நினைந்தனன் இறையோனே.

வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்கின்ற நூறு இதழ் கொண்ட தாமரை மலர் மேலவராகிய பிரமன் முதல் தேவர்கள் யாவரும் உருக்கிய மெழுகுபோல உடல் தளர்ந்து இவ்வாறு உள்ளம் நொந்து அழுது புலம்பி ஏத்துதலும். இப்போது இவர்கள் செய்த பாபமானது முடியுங் காலமானது கிட்டவாகச் சேர்த்தலும் எந்தைபெரு மான் அவர்பால் இரக்கமாய் நந்தியங் கடவுளை அங்குவரும்படி நினைந்தருளினர். 13

எந்தை நந்தியை உன்னலு மவனறிந் திறைவன்முன்
வந்து வந்தனை செய்துகை தொழுதலும் மறைமேலோன்
கந்த மாமலர்க் கடவுளா தியர்தமைக் கடிதெம்முன்
தந்தி டென்றனன் நன்றென முதற்கடை தனில்வந்தான்.

எந்தை பிரான் நினைந்தருளுதலும் நந்தியங் கடவுள் அதனை அறிந்து இறைவன் முன்னாக வந்து வந்தனை செய்து கைதொழுது நிற்றலும், அப்போது வேதங்களும் நாடொணாத எமது பெருமான், நந்தியே தாமரை மலர்மேலிருக்கின்ற பிரமனாதியர் தமை விரைவாக அழைத்து இங்கே தந்திடு என்றலும் நந்திதேவர் நன்றென்று முதற் கடைவாயிலைத் திரும்பச் சென்று சேர்ந்தார். 14

கணங்கள் காப்புறு முதற்கடை குறுகலுங் கண்டேத்தித்
தணங்கொள் பங்கயன் வாசவன் விண்ணவர் தாமெல்லாம்
வணங்க எம்பிரான் உமைத்தரு கென்றனன் வறிதேனும்
அணங்கு கொள்ளலீர் வம்மினோ நீவிரென் றருள்செய்தான்.

பூதகணங்கள் காவல்கொண்ட முதற் கடைவாய்தலில் நந்திதேவர் வந்துசேர்தலும் அவரைக் கண்டு கைதொழுது ஏத்தி விரிந்த இதழ் கொண்ட தாமரையாசனராகிய பிரமன், இந்திரன், தேவர்கள் முதல் யாவரும் வணங்குதலும் நந்தி தேவர் அவரைப் பார்த்து எம்பெருமான் உம்மை அங்கு அழைத்துவரும்படி அருள்செய்தார். ஆகவே வீணாக நீங்கள் பயப்படாதீர் எல்லீரும் வாருங்கள் என்று அருள்செய்தார் நந்தி தேவர். 15

சீர்த்த நந்திவந் திவ்வகை யுரைத்தசொற் செவிதோறும்
வார்த்த பேரமு தாதலும் உவகையின் மதர்ப்பாகிப்
பேர்த்தொர் மாற்றமு முரைத்திலர் பிரமனே முதற்றேவர்
ஆர்த்து நாதனைப் பாடினர் ஆடினர் அலமந்தார்.

சிறப்புவாய்ந்த நந்திதேவர் வந்து இப்படி உரைத்த வார்த்தை அவர்களின் செவியில் அமுதை வார்த்ததுபோல இருத்தலும்; மகிழ்வால் பிரமன் இந்திரன் முதல் தேவர்கள் மதர்ப்புக்கொண்டார்களாய் தங்கள் மகிழ்ச்சி மிகுதியினுலே ஒரு வார்த்தைகூடப் பேசாதவராகி இரைந்து அரகரா என ஆர்த்து ஈசனைப் பாடினர் ஆடினர். செய்வதறியாது அலமந்தார்கள். 16

பெரிது நோயுழந் தருள்பவர் இன்றியே பெருங்காலம்
நிரய முற்றுளோர் தங்களை எடுத்திடும் நிலைத்தன்றே
அருளின் நீர்மையா லுமையரன் விளித்தனன் அனைவீரும்
வருதி ரென்றசொற் பங்கயன் முதலிய வானோர்க்கே.

பெரிதும் துன்பப்பட்டு நோயுற்று தம்மைக் காக்க ஒருவர் இன்றி நரகவேதனை கொண்டார்களை எடுத்து ஆண்டு அருள்செய்து இன்பநிலை கொள்ளவைக்கும் தன்மை போலவேயானது ஈசன் அருளின் நீர்மையால். உங்கள் யாவரையும தமது சந்நிதி வரும்படி அழைத்துள்ளான், அனைவீரும் வருக என்கின்ற வார்த்தையை நந்தியங் கடவுள் பிரமன் முதல் தேவர்களுக்குச் சொல்லிய தன்மை. 17

செய்ய லாவதொன்றின்றியே மகிழ்ச்சியிற் றிளைத்தோராய்
மைய லாகிய பண்ணவர் தங்களை வல்லேகொண்
டையன் முன்னுற வுய்த்தனன் இருவகை யறத்தோரும்
உல்ய வெஞ்சம னுடைதரப் புவியினி லுதிக்கின்றோன்.

தாம் எனி யாது செய்வது என்பதையே அறியாது மகிழ்ச்சியில் திளைத்தோராய் ஆனந்தமயக்கங்கொண்ட தேவர்களை பிரமனை இந்திரனை மிகவிரைவாக அழைத்துக் கொண்டு எம்பிரான் திருமுன்பு சேர்த்தார் நந்தியங் கடவுள். இவர் யாரென்ருல் இல்லறம் துறவறம் எனும் இருவகை அறத்துற்ருர்களும் உய்யவும் கொடிதாய்ப் பரவும் தெய்வமில்லாக் கொள்கை உடைந்து நாசமாகப் பலகாலும் பூமியில் அவதாரம் செய்பவர். 18

வண்டுளர் கமலமேல் மதலை வாசவன்
அண்டர்க ளனைவரும் அன்பொ டேகியே
பண்டுயிர் முழுதருள் பரனைக் கண்களாற்
கண்டனர் வழுத்தினர் கரங்கள் கூப்பினர்.

வண்டுகள் மொய்க்கும் தாமரை மலர் மேலவராகிய பிரமன், இந்திரன் தேவர்கள் அனைவரும் அன்போடு சென்று முன்பு உயிர்கள் அனைத்தையும் தந்தருளிய பெருமானைத் தமது கண்களால் கண்டனர். வணங்கினர். கைகளை உச்சிமேல் சேர்த்தார்கள். 19

விண்மதி படர்சடை வேத கீதனை
அண்மினர் வணங்கினர் அரிமுன் ஆற்றிய
உண்மகிழ் பூசனை யொப்பப் போதநீர்
கண்மல ரதனெடு கழல்கள் சேரவே.

வானத்தில் பொலியும் பிறையணிந்த வேத கீதனை கிட்டினார்கள். வணங்கினார்கள். விஷ்ணுபெருமான் முன்னர் எம்பிரானுக்காகச் செய்தருளிய உள்ளம் மகிழ்கின்ற பூசனைக்கு ஒப்பாக இவர்களுடைய இரண்டு கண்களிலிருந்தும் ஞானமயமெனும் கண்ணீர் பெருகி ஓடும்படியாகவும் கண்களின் பார்வையானது இறைவன் திருவடி மலர் சேரும் படியாகவும் கண்கள் இறைவன் கழல்கள் கண்டு களிகூர்ந்து திருவடியையே காண்பதல்லாது வேறொன்றும் கண்டிலர், ஆகவே கண்கள் நீர்மல்க ஈசன் திருப்பாதமே உற்று நோக்கி நிறைதன்மையால் விஷ்ணு பிரான் சுவபிரான் திருப்பாதமேல் கண் இடந்து அப்பி பூசை செய்த அதுபோல அமைந்தது இதுவும். 20

வணங்கிய பண்ணவர் வல்ல வல்லவா
பணங்கிளர் அரவரைப் பரமற் போற்றலும்
உணங்கிய சிந்தையீர் உமது வேண்டலும்
அணங்குறு நிலைமையும் அறைமி னென்னவே.

வணங்கிய தேவர்கள் வல்லவல்லவாறு படம் பொருந்திய பாம்பை அணிந்த எங்கள் பரமனைப் போற்றலும் அப்போது எம்பிரான் அவரைப் பார்த்தருளி துன்புற்றுச் சோர்ந்த சிந்தை உடையீர் உமக்கு வேண்டியது யாது என்பதையும் உங்கள் கவலைகளையும் இப்போது கூறியருள்வீராக என்றலும். 21

பேருக மளப்பில பெயர்த லின்றியே
சூரன தாணையில் துயர்பட் டாழ்ந்தனங்
காருறழ் கந்தரக் கடவுள் நீயலா
தாருளர் அடியேரம் அலக்கண் நீக்குவார்.

அப்போது பிரமன் முதல் தேவர் சொல்வார். பெருமானே எத்தனையோ பெரிய யுகங்கள் அளவில்லாத காலமாக நாங்கள் யாவரும் சூரபன்மன் என்னும் கொடியவனின் தவிர்க்கமுடியாத துன்பம் தரும் ஆணைக்குக் கீழ்ப்பட்டு நீங்காது உழன்று வருந்தினேம். நஞ்சை உண்டு முன் எம்மைக்காத்த கடவுளே! தேவரீர் அல்லாது வேறு யார் எங்களைக் காப்பவர். எங்கள் துயரம் நீக்க ஐயனே நீர் அல்லாது ஆருளர்! 22

ஆயவெஞ் சூரன தாவி நீக்கவோர்
சேயினை யருளுவான் சிமையமாகிய
மீயுயர் வரையிடை மேவி நோற்றிடும்
மாயையின் முதல்வியை மணத்தல் வேண்டுநீ.

பெருமானே கொடிய சூரனுடைய உயிரை நீக்கும்படியாக ஓர் குழந்தையைத் தந்து அருளும்படி தேவரீர் இமையம் என்னும் மலையில் பொருந்தித் தவஞ்செய்திருக்கின்ற எமது ஆதியாய் விளையும் அருளின் வடிவாகியவளும் சுத்த மாயை அசுத்த மாயை வடிவாகிய

உலகங்கட்கு முதல்வியுமாகிய உமையம்மையாரைத் திருமணம் செய்தருள்வீராக எனவே தேவரீரை இப்போது வேண்டுகின்றோம் என தேவர்கள் கூறினார்கள். 23

என்றிவை கூறியே யாரு மெம்பிரான்
மன்றலந் தாள்மலர் வணங்கிப் போற்றலும்
மின்றிகல் பசுங்கதிர் மிலேச்சும் வேணியான்
நன்றென இசைந்திவை நவிறல் மேயினன்.

என்று இவ்வாறு தேவர்கள் யாவரும் கூறியவாறு எம்பெருமானுடைய பாதகமலங் களில் தாழ்ந்து வணங்கி எழுந்து போற்றியவாறு முன்னிற்றலும், அவ்வேளை ஒளி கொண்டு திகழும் பசிய சந்திரனாகிய பிறையணிந்த சடையுடைய பெருமான், நன்று அவ்வணணமே செய்வோம் என இசைந்து இவற்றைச் சொல்லத் தொடங்கியருளினார் எமது ஐயன். 24

புங்கவர் யாவரும் பொருமல் கொள்ளலீர்
உங்கடம் பொருட்டிலவ் வோங்கல் வைகிய
மங்கையை மணந்து நும் வருத்தம் நீக்குதும்
இங்கினி யாவரு மேகு கென்றனன்.

தேவர்களே யாவரும் நீங்கள் வருத்தம் கொள்ளாதீர்கள். உங்கள் பொருட்டாக இமைய மலையில் தவஞ்செய்திருக்கின்ற உமையம்மையாரைத் திருமணம் செய்து பின்னர் உங்கள் துயரத்தை வருத்தங்களை நான் நீக்குவிக்கிறேன். இங்கு நீங்கள் யாவரும் செல்வீராக என ஈசன் உரைத்தருளினன். 25

முழுதுணர் பரனிது மொழியப் போதனுஞ்
செழுமையில் பொன்னகர்த் தேவும் யாவருந்
தொழுதனர் விடைகொடு துயரஞ் சிந்தியே
விழுமிய மேருவின் மிசைக்கண் ஏகினர்.

எல்லாவற்றையும் உணர்கின்ற யாவர்க்கும் மேலான ஈசன் இவற்றை மொழித லும் பிரமதேவனும் அழகான பொன்னுலகின் அரசனுமான இந்திரனும் மற்றை யாவரும் தொழுதார்கள். எம்பிரான் விடை கொடுப்ப அதனை ஏற்றாராகி இப்போது தங்கள் துயரம் யாவும் சிந்தியே. மிக விருப்பமுடைய மகாமேரு மலையில் யாவரும் சென்று சேர்ந்தார்கள். 26

அன்னார் விடைகொண் டேகியபின் அதுகண் டிரதி யெம்பெருமான்
முன்னா விறைஞ்சிப் போற்றி செய்து முறையோ முறையோ இறையோனே
பொன்னார் கமலத் தயன் முதலோர் புணர்ப்பா லெங்கோன் போந்திங்கே
உன்னல் முடிந்தான் அவன் பிழையை உளங்கொ ளாமல் அருளென்றாள்.

அவர்கள் யாவரும் விடைபெற்றுச் சென்றபின் அதுகண்டாள் இரதி. அவள் இப் போது எம்பெருமான் முன்பாகச் சென்று வணங்கி, தோத்திரம்செய்து, என் ஐயனே இது முறையோ! முறையோ! என அழுது பொன்போலும் தாமரைமலர் மேலிருக் கும் பிரமன் முதல் தேவர் பலரின் சூழ்ச்சியால் எனது நாயகன் இங்கு வந்து உமது கண்

ணுல் பொடிபட்டான். அவனுடைய பிழையை உளங்கொள்ளாமல் தேவரீர் அருள் செய்து அவன் பிழைத்தருள வழிசெய்யும் என வேண்டினுள். 27

இனைய கூறினள் இரதிவேண் டிடுதலும் இணைதீர்ந்த
புனிதன் நல்லரு ளெய்தியே மங்கைநீ புலம்பாய்கேள்
வனைக ருங்குழற் கவுரியை மேவியாம் வரைபோதில்
உனது கேள்வனை அளிக்குதும் போதியென் றுரைசெய்தான்.

இவற்றைக் கூறி இரதி வேண்டிநிற்றலும் அப்போது தனக்கு இணை பிறிதொருவர் இல்லாத பெருமான் நல் அருள் எய்தியே இரதியை நோக்கிப் பெண்ணே நீ புலம்பாதே நான் சொல்வதைக் கேள். அழகாக முடிந்த கரிய கூந்தலையுடைய உமையம்மையா ரைக் கூடி திருமணம் செய்யும் போதில் உனது கணவனை அளிப்போம் நீ செல்வா யாக என பேசியருளினுன் எங்கடவுள். 28

தன்னை யேதனக் கொப்பவன் இரதியைத் தளரேலென்
றின்ன வாறருள் செய்தலும் மகிழ்ந்தடி இறைஞ்சிப்போய்ப்
பொன்னின் மாலிமை யக்கிரி புதந்தொரு புடையுற்றுள்
வன்ன மாமுகில் வரவுபார்த் துறைதரு மயிலேபோல்.

தன்னையே தனக்கு ஒப்பவன் இரதியைப் பார்த்து தளரேல் என்று இன்னதன் மையாக அருள்செய்தலும் மகிழ்ந்து எம்பெருமானின் திருவடி வணங்கிப் போய் பொன்னுலாகிய இமயமலையைச் சார்ந்து ஒரு பக்கராக உற்று இருந்தாள், இரதி அழகான முகிலின் வரவு பார்த்து இருக்கின்ற மயிலைப் போலும். முகிலின் வரவு கண்டால் மயில் இயல்பாக மகிழ்வாகும். ஆகவே இறைவன் திருவாக்குப்படி பொன் மயமான இமயமலைமேல் சென்று வீற்றிருந்தாள் இரதி. தனது கணவன் உயிர் பெற்று எழும் காலம் நோக்கி. 29

தமியளாய் இரதிபோய்த் தானங் குற்றிட
அமரர்க ளாயுளா ரரந்தை தீர்க்கவும்
இமையமால் வரைமிசை யிருந்து நோற்றிடும்
உமைதனை மணப்பவும முதல்வன் உன்னினுன்.

தனித்தவளாய் இரதி சென்று அங்கு தான் உற்றிருத்தலும் தேவர்களாய் உள் ளோர்களது துயரம் தீர்க்கவும், இமையம் என்னும் மலையின் மீது இருந்து தவம்செய் யும் உமையம்மையாரைத் திருமணம் செய்யவும் எல்லார்க்கும் முதல்வராகிய ஈசன் நினைந்தருளினுன். 30

மனந்தனி லித்திறம் மதித்து வானதி
புனைந்தவன் சனகனென் றுரைக்கும் புங்கவன்
சனந்தனன் சனுதனன் சனற்கு மாரனும்
இனந்தரு முனிவரை இனிது நோக்கினன்.

மனந் தனில் இவ்வாறு மதித்தருளிய கங்கைச் சடையுடைய கடவுள் தமது திருமுன்பாக வீற்றிருக்கும் சனகன் என்னும் தலைவனுடன் சனந்தன், சனுதனன், சனற்குமாரன் என்னும் ஒரே இனமாகப் பொருந்திய முனிவர்களை பார்த்தருளி இவ் வாறு சொல்லியருள்கிறுர், 31

நன்னல மைந்தாள் ஞான போதகஞ்
சொன்னடை யன்றது துயர நீங்கியே
இந்நிலை மோனமோ டிருந்து நந்தமை
உன்னுத லேயென உணர வோதினன்.

நல்ல நலம் பொருந்திய பிள்ளைகளே ஞானப்போதம் எனப்படுவது சொல்லால் விளம்பக் கூடிய ஒன்றல்ல, உங்கள் கவலைகளையெல்லாம் நீக்கிவிட்டு எம்மைப்போல் இப்படி இருந்து நம்மைத் தியானித்தலே யாகும் என சனகாதி முதல் நால்வரும் உணரும்படி எம்பிரான் ஓதியருளினன். 32

கட்புலம் இமைத்துணை காட்சி யோகினை
நுட்பம தாகவே நுதலிக் காட்டினேன்
ஒட்பமொ டிவ்வகை உரைப்ப வாற்றவுந்
தெட்பம தடைந்தனர் விதியின் சேயினேர்.

கண்ணில் கண்ணாகும் இறை காட்சியெய்தும் பேரானந்த நிலையினை உணரும் யோகினை அதி நுட்பமாகவே நுனித்து உணர்வில் உணர்வாகிக் காண்பித்தருளிய எம் முன்னனாகிய பெருமான் அவர்கள் உள்ளம் உணரும்படி ஒப்பாக இதனை உரைத்தலும் மிகவும் தெளிவுபெற்றார்கள் பிரமதேவரின் பிள்ளைகளாகிய இந்நால்வரும். 33

அந்தநல் வேலையில் ஆற்றும் நோன்பினோர்
சிந்தைகொ ளன்பொடு சிவன்பொற் றாள்முறை
வந்தனை செய்துநம் மருட்கை நீங்கியே
உய்ந்தனம் யாமென உரைத்துப் போற்றினர்.

அந்த நல்வேளையில் மேலாகிய தவத்தைச் செய்யும் விரதிகளாகிய நால்வரும் சிந்தையில் பொருந்திய அன்பினையுடையவர்களாய் சிவபிரானின் பொற்றாளில் முறையாகத் தாழ்ந்து வணங்கி எழுந்து வந்தனை புரிந்து எம்பிரானே எமது மயக்கம் நீங்கியே உய்ந்தனம் யாமென உவகை கொண்டு உரைத்து போற்றினார்கள். 34

போற்றலு மத்துணைப் புனிதன் இன்னினி
ஏற்றிடு நிட்டையி லிருந்து வீடுறீஇ
மேற்றிகள் எம்பத மேவு வீரெனச்
சாற்றினன் விடுத்தனன் தவத்தி னோர்தமை.

போற்றுதலும் அத்துணை புனிதனாகிய எம்பிரான் அவர்களை நோக்கி யோக நிட்டையிலிருந்து வீடாகிய முத்திப்பதம் பெற்று மேலாகத் திகழும் எம்பதம் சேர் வீராக என உரைத்தருளி அந்த நான்கு தபோதனர்களையும் செல்லுமாறு விடுத்தருளினர் எமது கடவுள். 35

மோன நீங்கு படலம் முற்றும்.

ஆக திருவிருத்தம் 636

# 6. தவங்காண் படலம்

தீதறு முனிமைந்தர் செல்லலும் அதுபோழ்தின்
மாதவ நெறிநிற்கும் மலைமக டனியன்புங்
காதலு மெனைவோர்க்குங் காட்டுத லருளாகிச்
சோதனை புரிவாரில் துண்ணென எழலுற்றான்.

தீதற்ற இந்த முனிவர்களாகிய சனந்தன், சனற்குமாரன், சனந்தனன், சனாதனன் ஆகிய பிள்ளைகள் நால்வரும் ஈசன் அருள்பெற்று சென்றருளிய நேரத்து இப்போ மாதவத்தின் உயர்நெறி நிற்கும் உமையம்மையார் இறைவன்பால் கொண்டிருக்கின்ற அன்பையும் பெருங் காதலையையும் எல்லா உலகத்தார்க்கும் இதுதான் வழியெனக் காட்டுவது திருஉள்ளமாகி அம்பாளின் தவத்தைச் சோதனைபுரியும் ஒருவர்போல திடீரென தாம் ஓர் பிராமண வடிவங்கொண்டு எம்பிரான் எழுந்தருளிச் செல்வாராயினார். வேண்டியவாறு வேடங்கொள்ள வல்லவன் இவ்வாறே தாம் அம்பாளின் தவத்தைச் சோதிப்பார் போன்று ஓர் வடிவங்கொண்டு செல்கிறார். 1

செறிதுவ ருடையாளன் சிகையினன் அணிநீற்றின்
குறியினன் ஒளிர்நூலன் குண்டிகை யசைகையன்
உறைபனி கதிர்போற்று மோலையன் உயர்கோலன்
மறைபயில் முதியோர்போல் வடிவிது கொடுபோனான்.

இவ்வாறு வடிவங்கொண்டு சென்றவன் திருவரையில் பவளம் போன்ற நிறம் எங்கும் செறிந்திருக்கும் ஆடையை அணிந்திருக்கிறான்; நல்லதோர் குடுமி வைத்துளான். திருக்கையிலே குண்டிகை தாங்கியவன், அக்குண்டிகை என்னும் தூக்குச் செம்பு அவர் கை அசைய அக்குண்டிகையும் அசைகிறது. இமயத்தில் செல்கின்றமையால் அங்கு பெய்யும் பனிமழை சூரியவெப்பம் இவைகளைத் தாங்குவதற்காக ஓர் ஓலைக் குடையை கையிலே பிடித்திருக்கிறான். உயர்ந்த ஓர் தண்டு ஒன்று கையில் ஏந்தியவன். வேதங்களை ஓதிவருகின்ற ஓர் பிராமணமுதியவர் போன்று இத்தகைய வடிவத்தைத் தாங்கியவாறு சென்றருளினான். 2

போயினன் இமையத்திற் புவனமொ டுயிர்நல்குந்
தாய்தளர் வொடுநோற்குஞ் சாலையி னிடைசாரத்
தூயவ ரிவரென்றே தோகையர் கடைகாப்போ
ராயவர் பலர்வந்தே அடிதொழு துரைசெய்வார்.

இவ்வாறாகிய கோலத்தோடும் எம்பிரான் இமயத்தில் போயினான். அவ்வாறு கிழப் பிராமண வடிவங் கொண்ட எம்பிரான், இவ்வுலகங்களோடும் உயிர்களைப் படைத்தருளிய எமது தாயானவள் உடலம் தளரும்படியாக இருந்து தவஞ்செய்கின்ற தவச் சாலையைச் சேர்ந்தான். சேர்ந்தபோது எம்பிரானைக் கண்ணுற்றார்கள் எம்பிராட்டியின் தவச்சாலையை புறத்தே காவல்கொண்டு நின்ற சில தோழியர். அவர்கள் எம்பிரானைக் கண்டதும், ஓகோ! இவர் ஓர் தூய முனிவர் போலும் என பல தோழியர் எம்பிரானின் பாதமலர் மீது தாழ்ந்து வணங்கி எமது பெருமானை நோக்கி சொல்லியருள்கின்றார். 3

தளர்நடை முதியீர்இத் தடவரை யிடைசேறல்
எளிதல அடிகேள்வந் தெய்திய தெவனென்ன
வளமலை யரசன்றன் மகள்புரி தவநாடற்
குளமுட னிவண்வந்தேன் உவகையி னுடனென்றான்.

தளர்ந்த நடையோடும் இவ்விடம் எழுந்தருளி வந்த பெரியோய்! இந்த மலையி
னிடத்து உம்போன்ற முனிவர்கள் வந்து சேருதல் எளிதானது அல்ல.
முனிவரே தேவரீர் இவ்வளவு பாடுபட்டு சிரமத்துடன் இங்கு வரவேண்டியது யாது
காரணத்தால்? சொல்லியருள்வீராக என அத்தோழியர் கேட்டலும், அப்போது
எம்பிரான் அவர்களைப் பார்த்தருளி சொல்கிறார். மக்களே! வளம்கொண்ட மலைய
ரசன் மகளாகிய உமையம்மை செய்தருளுகின்ற தவத்தை நான் பார்ப்பதற்கு
மிகுந்த ஆவலுடனும், சந்தோஷத்துடனும் வந்தேன் எனச் சொல்லியருளினார். 4

என்றலு மினிதென்றே இமையவ ளிடைசில்லோர்
சென்றனர் கிழவோன்றன் செயலினை அறைகாலை
ஒன்றிய முதியோரேல் உய்க்குதிர் இவணென்ன
நின்றதொர் பெரியோனை நேரிழை முனமுய்த்தார்.

என்று முதியவராகிய ஐயர் பெருமான் உரைத்தலும் அதனை எம்பிராட்டியினு
டைய தோழியர் கேட்டு ஐயனே நன்று எனச் சொல்லிவிட்டு பின்னர் தவத்தில்
இருந்தருளுகின்ற எம்பிராட்டிபால் அதி விரைவாகச் சென்று எமது முதல்வியை
வணங்கி எங்கள் கிழவர் வருகையின் செயல் கூறுதலும் அந்நேரத்து எம்பிராட்டி
அது கேட்டவளாய் அவர்களைப் பார்த்து, பெண்களே! உண்மையாக அங்கு வந்த கிழ
வர் ஒருமைப்பாடுடைய இறைவன் தியானமுடையவராயின் இங்கே அழைத்து
வாருங்கள் என்றலும் எம்பிராட்டியின் வார்த்தையின்படி தோழியர் திரும்பிவந்து
அங்கே நின்ற பெரியவராகிய எம்பிரானை அழைத்துக்கொண்டு எம்பெருமாட்டி முன்
பாகச் சேர்த்தார்கள். 5

உய்த்தலும் இவரெந்தைக் குறுபரி வினரென்றே
பத்திமை படுபாலாற் பார்ப்பதி தொழலோடும்
மெய்த்துணை யெனநின்ற விசயையொர் தவிசிட்டு
நித்தனை உறைவித்தாள் நிமலையும் அயனின்றாள்.

எம்பிரானை அங்கு அழைத்து வந்து சேர்த்தலும் எங்கள் ஈசனைத் தாய் நோக்கி
னாள். அவருடைய திருவடிவு அவவை முற்றிலும் பரவசப்படச் செய்தலும், நினைக்
கிறார் பிராட்டி இவர் எம்பிரானிடத்து உண்மையான பரிவு உடையார் என எண்ணிய
வளாய் அவரைப் பத்திமையோடும் பார்ப்பதி தொழுதலோடும் உடன் பெருமாட்டி
பக்கராக மெய்த்தோழியாக நின்ற விஜயை என்பாள் ஓர் சிம்மாசனத்தை அங்கு
இட்டு நித்தனைய் நிறைகின்ற எம்பிரானை அதன் மீது இருத்தினாள். எம்பிராட்டி பக்
கராக அயலில் நின்றாள். 6

அப்பொழு துமைதன்னை யாதர வொடுபாராச்
செப்புத லரிதாமுன் றிருநலன் அழிவெய்த
மெய்ப்படு தசையொல்க மிகுதவ முயல்கின்றாய்
எப்பொருள் விழைவுற்றாய் எண்ணிய துரையென்றான்.

அது பொழுதில் உமையம்மையை ஆதரவோடும் ஈசன் பார்த்து அம்மையே
சொல்வதற்கரிதாகிய பேரழகு கொண்ட உனது திருமேனி வாடி நலனெலாம் அழி
வெய்தும்படியாகவும், உனது தசைகள் சுருங்கவும், இவ்வண்ணமாகக் கொடிய தவத்
தைச் செய்கின்றாயே. எப்பொருளை நீ இவ்வாறு தவத்தால் விரும்பினாய்? உனது
எண்ணம் யாது சொல்வாய் எனக் கேட்டருளினான் ஈசன். 7

முடிவி லானிவை யுரைத்தலும் விசயையை முகநோக்கிக்
கொடியி னெல்கிய நுசுப்புடை உமையவள் குறிப்பாலே
கடிதி னீங்கிவர்க் கெதிர்மொழி யீகெனக் கண்காட்ட
அடிய னேற்கிது பணித்தன ளெனஅறிந் தவள்சொல்வாள்.

முடிவு என்பது இல்லாத பெருமான் இவை உரைத்தலும், கொடிபோலும் சிற்றிடை கொண்ட எம்பிராட்டி தாம் நேராக அப்பதிலை சொல்வதற்கு நாணிப்போதும் தனது மெய்காப்புத் தோழியாகிய விஜயை என்பாளைக் கண்ணால் காண்பித்து நீ பதில் சொல்வாயாக என குறிப்பினால் சமிக்கை செய்தலும், அது பொழுது விஜயை அடியேனுக்கு எம்பிராட்டி இதைப் பணித்தனள் போலும் எனத் தோழி விஜயை மகிழ்வாகி குறிப்புணர்ந்து எம்பிரானைப் பார்த்து சொல்கிறாள். 8

மன்னு யிர்க்குயி ராகிய கண்ணுதல் மணஞ்செய்து
தன்னி டத்தினி லிருத்தினன் கொள்வதே தானுன்னிக்
கன்னி மெய்த்தவ மியற்றின ளென்றுகா தலிகூற
முன்ன வர்க்குமுன் னானவன் நகைத்திவை மொழிகின்றான்.

ஐயனே! கன்னியாகிய இவள் எல்லா உயிர்க்கும்உயிராய் நிறைகின்ற நெற்றிக் கண்ணுடைய இறைவன் தன்னைத் திருமணம் செய்து அவரின் இடப்பாகத்தில் தன்னை இருத்தும்படி தியானமாகியே உண்மையான இத்தவத்தைப் புரிந்தனள் என எம்பிராட்டியின் காதல் தோழியாகிய விஜயை கூறுதலும், அப்போது முன்னைப் பொருட்கும் முன்னான கிழவரான ஈசன் சிரித்துவிட்டுச் சொல்கிறார். 9

புவிய ளித்தருள் முதல்வரும் நாடரும் புனிதன்றான்
இவள்த வத்தினுக் கெய்துமோ எய்தினு மினையாளை
அவன்வி ருப்பொடு வரையுமோ உமையவ ளறியாமே
தவமி யற்றினள் எளியனோ சங்கரன் றனக்கம்மா.

தோழி! ஈதென்ன வார்த்தை சொன்னாய்? பூமியைக் காக்கின்ற, படைக்கின்ற தலைவர்களாகிய திருமால் பிரமன் முதல் யாவரும் நாடியும் காண்டற்கரிய புனிதனாகிய சிவபிரான் இவளுடைய தவத்திற்காக திருமுன்பு வருவாரோ? அப்படித்தான் வந்தாலும் சரி இவளை அவர் விருப்பத்தோடு திருமணம் செய்வாரோ? இது என்ன ஒன்றையும் சிந்தியாதது போல உமையம்மை பலதையும் அறியாது தவம் செய்கிறாளே. சங்கரனாகிய ஈசன் அவ்வளவு சுலபமாக எய்தக் கூடியவர் தனக்கென நினைந்தாளா இவள்? 10

அல்லல் பெற்றிட நோற்றிடு பகுதியால் ஆம்பாலொன்
றில்லை யித்துணைப் பெறலரும் பொருளிவட் கெளிதாமோ
பல்ப கல்தன தெழில்நலம் வறிதுபட் டனவன்றோ
ஒல்லை இத்தவம் விடுவதே கடனினி உமைக்கென்றான்.

அல்லற்படும்படி தவம் செய்தலால் ஆகின்ற தன்மை ஒன்றில்லை. இத்துணையாக அன்றும் இன்றும் யாவராலும் எய்த முடியாத பொருள் இவளுக்கு எளிதாமோ? பல பகல் தவம் செய்து இவளுடைய நலமெல்லாம் வாடி வீணே வறிதாகிப் போய் விட்டன. உடலைப்பார் மெலிந்து சீர்குன்றியது. நான் இந்நிலையில் சொல்வதொன்று உண்டு. அதுதான் அதிவிரைவாக உமையம்மை இத்தவம் விடுதலேயாகுமென்றான் எமதுபிரபு. 11

இந்த வாசகங் கேட்டலு மெம்பிராற் கிவரன்பர்
அந்தண் மாமுது குரவரென் றுன்னினன் அறியேனல்
வந்து வெம்மொழி கூறுத லெனச்சின மனங்கொண்டு
நொந்து யிர்த்துநாண் நீக்கியே பொருதுமை நுவல்கின்றாள்.

இந்த வாசகம் கேட்டலும் எம்பெருமாட்டி உடன் கிலேசமாகி நினைகின்றாள்; ஐயையோ! இது என்ன வார்த்தை இவர் பேசுகிறார். நான் இவரை எம்பிரானுக்கு அன்பர், பெரியதோர் முதியவர், தந்தைபோல்வர் என நினைந்தேன். ஆனால் இப்படியானவர் இவர் என்பதை அறியேனால் இங்கே எனது முன்பு நின்று இந்த வார்த்தையா கூறுகிறார் எனச் சினங்கொண்டு மனம் நொந்து பெருமூச்சுவிட்டு இப்போது தனக்குரிய வெட்கத்தை நீக்கியவளாய் உள்ளம் பொருது உமையம்மை கூறுகிறார். முன்னர் இறைவன் கேட்டபோது கன்னிக்குரிய வெட்கம் எனும் நாணத்தால் தோழியைக் கொண்டு பதில் கூறும்படி செய்தவள் ஈசனாகிய கிழவர் இப்படிப் பேசுதலும் அதைத் தாங்காது தானே பேசத் தொடங்குகிறாள். 12

முடிவிலாதுறை பகவனென் வேட்கையை முடியாது
விடுவ னென்னினுந் தவத்தினை விடுவனோ மிகவின்னங்
கடிய நோன்பினை யளப்பில செய்துயிர் கழிப்பேன்நான்
நெடிது மூத்தலின் மயங்கினை பித்தனோ நீயென்றாள்.

ஐயரே கேளும்! முடிவிலாது உறைகின்ற பகவான் எனது விருப்பத்தை முடியாமல் விடுவார் எனினும் எனது தவத்தினை விடுவனோ, இல்லையே! இன்னமும் நான் கொடிய மாதவம் அளவற்றன செய்து அதனாலே எனது உயிரைக் கழிப்பேன். அது எனது உறுதி. அஃது ஒரு புறமிருப்ப நீர் வயது அதிகம் போய் மூப்படைந்த படியால் மயங்கினீர். நீர் என்ன பித்தனோ எனக் கேட்டருளினாள் எமது தாய். 13

ஈட்டு மாருயிர்த் தொகையெலா மளித்தவள் இவைகூற
மீட்டு மோர்புணர்ப் புன்னியே மாதுநீ வெஃகுற்ற
நாட்ட மூன்றுடைப் பிஞ்ஞகன் வளத்தியல் நன்றாய்ந்து
கேட்டி லாய்கொலா முணர்த்துவன் அஃதெனக் கிளக்கின்றான்

எங்கும் பரந்து விளங்கிய உயிர்கள் அனைத்தும் தந்தவளாகிய பெருமாட்டி இவை கூற அதனைக் கேட்ட எம் ஐயர் மீட்டும் ஓர் குறும்புத் திருவிளையாட்டை நினைந்து உமையம்மையைப் பார்த்து, பெண்ணே நான் ஏதோ அறிந்ததைச் சொன்னேன் நீ என்னைப் பித்தன் என்றே சொல்கிறாய். சரி, அஃது இருப்ப அந்த மூன்று கண்களையுடைய சிவபிரானின் வளத்தியலை நீ நன்கு ஆராய்ந்து ஒருவரிடமும் இன்னும் கேட்டறியவில்லைப் போலும். ஆகையால் நான் அவரின் இயல்பு முழுவதும் இப்போது சொல்கிறேன் கவனமாகக் கேள் என பெருமான் உரைத்தருளுகிறார். 14

ஆடை தோல்விடை யேறுவ தணிகல மரவென்பு
கேடில் வெண்டலை மாலிகை கேழலின் மருப்பின்ன
ஓடு கொள்கல மூண்பலி வெய்யநஞ் சுலப்புற்றோர்
காட தேநடம் புரியிடங் கண்ணுதற் கடவுட்கே

உமையம்மையே நீ விரும்புகின்ற கணவனாகிய கண்ணுதற் கடவுளின் இயல்பைக் கேள்; அவரின் ஆடை புலித்தோல். ஏறிவரும் வாகனம் இடபம்.

அவர் அணியும் ஆபரணமாவன பாம்பு, எலும்பு, கேடில்லாத வெண் தலை, தலை மாலைகள், பன்றிக் கொம்பு இவையாகும். அவரின் பிச்சைப் பாத்திரம் மண்டை ஓடு. உணவாகிய பிச்சைதானும், கொடிய நஞ்சு. அவர் கூத்தாடும் இடம் இறந் தாரைச் சுட்டெரிக்கும் சுடுகாடு. 15

வேய்ந்து கொள்வது வெள்ளருக் கறுகுநீர் வியன்கொன்றை
பாந்தள் நொச்சியே மத்தமென் றினையன பலவுண்டால்
சாந்தம் வெண்பொடி சூலமான் மழுத்துடி தழலங்கை
ஏந்து கின்றது பாரிடஞ் சூழ்படை இறையோற்கே.

இதுவன்றியும் சடைமேல் அணிந்து கொள்வது வெள்ளை எருக்கலம்பூ, அறுகு, கங்கை நீர், அழகான கொன்றைப்பூ, பாம்பு, நொச்சி, ஊமத்த மலர் என்று இன்னன்ன பொருட்கள் பலவும் உண்டு. திருமேனியில் அணியும் வாசச்சாந்து திரு நீறு. கையில் ஏந்தியிருப்பது மழுவாயுதம், உடுக்கு, நெருப்பு, சூலம், மான் ஆகி யன. இந்த இறைவனைச் சூழ்ந்திருக்கும் படையானதும் பூதங்களாகும். 16

அன்னை தாதைகேள் வடிவொடு குணங்களி லனையானுக்
கின்ன வாகிய பலவள னுண்டவை எவையுந்தாம்
நின்ன வாகவோ தவம்புரிந் தெய்த்தனை நெடுந்தொல்சீர்
மன்னன் மாமகட் கியைவதே இத்துணை வழக்கென்றான்.

இன்னும் இவருக்கு தாயில்லை, தந்தையில்லை, சுற்றமில்லை, ஒரு குறிப்பான வடிவமில்லை. பலபல வேடமுண்டு, குணமில்லை. எக் குணத்தின் பாலுடையன் இவ னென எவரும் சொல்லொணாது. இவ்வாறாக இந்த ஈசனுக்கு யான் சொல்லிய பல வளங்கள் தானே உண்டு. இப்போது இவருடைய இந்தப் பொருள்கள் யாவும் உனக்காகும் பொருட்டோ நீ தவஞ் செய்கிறாய். நீ யார் என உன்னைத் தெரிந்த னையோ! நீ ஒரு அரசன் மகளல்லவோ, ஆகையால் உனக்கு இப்படியொரு குணம் குறி சற்றும் பொருத்தமில்லாத மணவாளனை நீ தேர்ந்து கொள்ளலாமோ? என்னையே பித்தன் என சொன்னாய்! யாருக்குப் பைத்தியம்? உனக்கு ஒப்பு எவ்வாற்றாலும் இல்லாத ஒருவரை யான் மணவாளனாகத் தேர்ந்துகொள்வேன் எனத் வம் செய்யும் உனக்கோ? அல்லது எனக்கா! இதை நன்கு நீ யோசித்துப் பேசுவாய். ஆகவே மிக மிகக் காலமாகப் பெருமையும் சிறப்பும் கொண்ட லையரசன் மகளாகிய உனக்கு இது பொருத்தமில்லாததொன்றாகுமென கூறினான் எமது பகவான். 17

புரங்கண்மூன் றினையு மட்ட புங்கவன் இனைய கூற
வரங்கண்மே தகைய வெற்பின் மடமயில் கேட்ட லோடுங்
கரங்களாற் செவிகள் பொத்திக் கண்ணுதல் நாமம் போற்றி
இரங்கிவெஞ் சினத்த ளாகி இடருழந் தினைய சொல்வாள்.

முப்புரங்களையும் புன் சிரிப்பால் எரித்தருளிய எமது கடவுள் இத்துணை வார்த்தை யைக் கூறுதலும் அப்போது தவப்பேறுடைய இமயமலையின் செல்வியான மயில்போ லும் சாயலுடைய எமது அம்மை அதனைக் கேட்டதும் உடனே கிலேசமாகி ஐயையோ இப்படியா இவர் பேசுகிறார்! என தனது கைகளைத் தூக்கித் தமது காதைப் பொத் தியவளாய் சிவசிவா எனக் கூறிக்கொண்டு ஈசனைப் போற்றி இத்தகைய வார்த் தையை நானும் கேட்டேனே! இது என்ன அநியாயம்! என இரங்கி மிகுந்த கோப முங் கொண்டு எம்பிரானைப் பார்த்து இந்த வார்த்தை சொல்வாள் அம்மை, 18

கேட்டியால் அந்தணுள கேடிலா வெம்பி ரான்றன்
மாட்டொரு சிறிது மன்பு மனத்திடை நிகழ்ந்த தில்லை
காட்டுறு புள்ளின் சூழல் கவருவான் புதன்மேற் கொண்ட
வேட்டுவன் இயல்போல் மேலோன் வேடநீ கொண்ட தன்மை.

கிழப் பிராமணனே கேட்பாயாக, உன்னைப் பார்க்கும்போது கேடில்லாத நன்மை தரும் திருவருள் மலைபோலும் எம்பிரான் பால் நீ சிறிதேனும் உனது மனத்தில் அன்புடையவன் போல தெரியவில்லை. அன்பில்லாத நீ இந்த மேலாகிய இறைவன் வேடம் எதற்குக் கொண்டாய் என யான் எண்ணுமிடத்து காட்டிலே இருக்கும் பட்சிக் கூட்டத்தைக் கவரும்படியாக வேடனொருவன் புல்லின் பற்றைக்குள் பதுங்கிய இயல்புபோல் இருக்கிறது. 19

நேசமி லாது தக்கன் நிமலனை யிழித்து நின்போற்
பேசிய திறனும் அன்னுன் பெற்றதுங் கேட்டி லாயோ
ஈசனை யிங்ஙன் என்முன் இகழ்ந்தனை இந்நாள் காறும்
ஆசறு மறைக ளேது மாய்ந்திலை போலு மன்றே.

இன்னும் உன்னைப் போல ஈசனிடத்தில் அன்பிலாது தக்கன் என்னும் அந்த பிரம புத்திரனும் ஈசனை இகழ்ந்து பேசிய வரலாறும் அவனுக்கு நேர்ந்த கதியையும் நீ கேட்டிராய் போலும். அந்தத் தக்கனைப் போல எமது ஈசனை என்முன் இகழ்ந்தாய் நீ. ஆகவே இவ்வளவு நாளும் குற்றமில்லாத வேதங்கள் எதையாகிலும் நீ ஆராய்ந்து கற்கவில்லைபோலும் என்றுள். 20

முறைபடு சுருதி யெல்லா மொழியினும் அதுவே சார்வா
உறுகில ராகிப் பொல்லா வொழுக்கமே கொண்டு முக்கண்
இறைவனை யிகழ்ந்து முத்தி யெய்திடா துழல முன்னுள்
மறையவர் பெற்ற சாபம் நின்னையும் மயக்கு ருதோ.

முறையாக ஈசனையே முதல்வன் என வேதங்கள் யாவும் பேசினும் அவ்வாறுகிய வேதங்களைச் சார்ந்து ஒழுகாதபடியாகி மிகவும் பொல்லாத ஒழுக்கமே மேற்கொண்டு மூன்று கண்ணினையுடைய எமது ஈசனை இகழ்ந்து அப்பாவத்தினுல் இன்னமும் முத்தி எய்திடாது உழலும்படியாக இப்பிராமணர் சமுதாயம் அன்று பெற்றதாகிய சாபத் தொடர்பால் வந்த தீமை உன்னையும்கூட மயக்காதோ.

பிராமணுகப் பிறந்தும் வேதமோதும் பாக்கியம் பெற்றும், அவ்வேதங்கள் ஈசனையே முதல்வன் என புகழவும், அதன் வழிச்சாராது உலக இன்பமே பெரிதென மயங்கி உழலும்படி அன்று ததீசி முனிவர் பால் உங்கள் குலம்பெற்ற சாபம் உன்னை விட்டுப் போகுமோ! போகாதே என்றுள், நீர் ஒரு பிராமணன், நீர் ஈசனை எய்தி வாழும் பாக்கியம் மற்றையோரிலும் பார்க்க பிறப்பினுல் கிடைத்திருப்பவும், இறைவனை இகழ்ந்து உலக வழக்கம்பேசி அரசகுமரத்தியான எனக்கு தோதாக இல்லை நான் விரும்பும் எனது கடவுளும் என சொன்னீர். இதுவா உமது கலி நீங்கிய கொள்கை எனக் கேட்டாள் அம்மை. 21

தாதையாய்த் தம்மை நல்கித் தந்தொழிற் குரிய ஞகி
ஆதியாய்த் தங்கட் கின்றி யமைவுருச் சிவனை நீங்கி
ஏதிலார் பக்க மாகி இல்லொழுக் கிறந்தார் போலும்
வேதியர் முறையே செய்தாய் வெறுப்பதென் நின்னை யானே.

வழி

ளுக் உங்கள் குலத்தைத் தோற்றுவித்த தந்தையானவன் சிவபிரான். அதோடு தனது மா பாட்டுக்கு உரியவர்கள் நீங்கள் என்னும் பெருமையும் தந்து இன்னமும் உங்க தருகே அல்லாமல் ஏனையோருக்கு அமையாதவஞகியும் இருக்கிருனே எமது பெரு பிரான். ஆகவே அப்படியான ஒருவரை நீக்கிவிட்டு தாம் மேற்கொண்ட இல்லற இக் மத்தை நீக்கிவிட்டு வேருெரு நிலையை மேற்கொண்டாரைப்போல வாழுகின்ற லில் மணர் முறையையே செய்தாய். உன்னை நான் ஏன் வெறுக்கவேண்டும். உனது குணம் உண்மை வழி நீங்கிய ஒருவரின் செயலாக முடிந்தது. ஆகவே வெறுத்த கூட பிரயோசனமில்லையென நிந்திப்பாள்போல பெருமாட்டி கூறிஞள். 22

ஆயினும் மறையோர் தம்மி னருமறை முறையே வேடம்
தூயன தாங்கி யெங்கோன் தொண்டுசெய் வோரு முண்டால்
நீயவர் தன்மைத் தாயும் நித்தனை யிகழ்ந்தா யென்னில்
தீயவ ருனைப்போ லில்லை அவுணர்தந் திறத்து மாதோ.

போ

செய் அப்படித்தான் பெரும்பாலும் இருந்தாலும், பிராமணர்களுள்ளேயும் உன்னைப் இப் ல் தூய்மையான வேடத்தைத் தாங்கி எம்பிரானுக்கு உண்மையான தொண்டு நீ எ வாரும் சிலர் உண்டு. ஆனல் நீ அவர் தன்மைத்தாக இருப்பினும் எம்பிரானை பிரா பாது இகழ்ந்தாய் என்ருல் உன்னைப்போல தீயவர் வேறு ஒருவரும் இல்லை. ன்ன அசுர குலத்தைச் சார்ந்தாயா உண்மையைச் சொல் என்ருள் எமது ட்டி. 23

வேண்டுதல் வேண்டி டாமை யில்லதோர் விமலன் றன்னை
ஈண்டுநீ இகழ்ந்த வெல்லாம் யாரையு மளிக்கு மன்பு
பூண்டிடு குறிகாண் அற்ருற் புகழ்ச்சியா மன்றி முக்கண்
ஆண்டகை இயற்கை யெல்லா மார்கொலோ அறிய கிற்பார்.

தானு

இரட் வேண்டுதல் அல்லது வேண்டாது விடுதல் ஆகிய இவற்றை இல்லாது எல்லாம் குறினை ஒருவனுன ஈசனை நீ இங்கு இகழ்ந்த உனது செயல் யாவும் எல்லா உயிரையும் கடவு சித்தருளும் அன்பாளனுன எம்பிரானுக்கு அவர் பேரன்புடையவர் என்னும் யான யயே நிலைநாட்டுகின்றது. ஏனெனில் இகழ்ந்த உன்னையும் தந்தவர் எமது அவ்வள். இகழ்வார் புகழ்வார் என்னும் தன்மையின்றி யாவர்க்கும் உய்யும்படி விடுத் கருணையுடையவன் எம்பெருமான். புகழ்ச்சி, இகழ்ச்சி கடந்தவன். ஆகவே புகழ்ச் ாருகிய பெருமானை நீ இகழ்ந்தாய் என உன்னை உடன் துன்புறுத்தாது ஒளிப் துள்ளான் எம்பிரான். இது தான் அவன் கருணை. நீ கூறிய இகழ்ச்சிகள் யாவும் என்ரு சியேயாயின அவனுக்கு. ஆகவே சூரியன், சந்திரன், அக்கினி எனும் மூவகை 'பொருள்களையும் கண்ணுக உடைய பகவானின் செயல் யார்கொலோ அறிவார் ள். வேதங்களும் நாம் அறியோம் என மலையுமே. 24

ஒரு பொல்லாப்புமில்லை நாம் அறியோம்'' யோகசுவாமிகள் வாக்கு.

போதனே முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்த
வேதமி லிறைமை யாற்ற லியாவையும் புரிந்த நாதன்
காதலும் வெறுப்பு மின்றிக் கருணைசெய் நிலைமை யேகாண்
பேதைநீ இகழ்ச்சி யேபோற் பேசிய தன்மை யெல்லாம்.

பிரமதேவன் முதலாக உள்ள தேவர்கள் வழிபட்டு ஏத்தலும் குறைவிலாத வாழ்வாகிய அவரவர் பதங்களுக்கு வேண்டிய தலைமையும் வலியும் யாவற்றையும் அருள் புரிந்தவன் எமது நாதன். அவ்வாறாக அருள்செய்யும்போது விருப்பு வெறுப்பு என்னும் தன்மை இல்லாது கருணையாலே இவற்றைப் புரிகின்ற நிலைமையே நீ காண், மிகப்பேதையாகிய நீ இகழ்ச்சிபோல பேசிய திறங்கள் எல்லாம்.

எமது ஈசனை தோலுடையர், விடையுடையர், நடுமாடச் சுடலையுடையர், பீடுடைய பாம்பு உடையர், மதி உடையர். நகுவெண்டலை உடையர், பொடி பூசுபவர் என நீ இகழ்ச்சிபோலப் பேசினாய். ஆனால் உண்மை உணர்ந்தால் இந்த கோலங்கள் தான் யாவற்றிற்கும் கருணை செய்யும் வடிவம் என்பதை நீ உணராதுவிட்டாய் எனக் கூறினாள். 25

இம்முறை மறைக ளாதி இசைத்தன இனைய வெல்லாஞ்
செம்மைகொ ளுணர்வின் ஆன்றோர் தெளிகுவ ரிறையை யெள்ளும்
வெம்மைகொள் குணத்தாய் நிற்கு விளம்பொணு விளம்பிற் பாவம்
பொய்ம்மறை வேடத் தோடும் போதிநீ புறத்தி லென்றாள்.

இம்முறையாக அந்தணனே! வேதங்கள் முதலிய யாவும் எடுத்து எம்பெருமான் புகழினை இசைத்துப் போற்றி நின்றன. இவைகள் யாவற்றையும் செம்மை கொண்ட சிந்தை உடையார்கள் உணர்ந்து கொள்வார்கள். தெளிந்தும் கொள்வார்கள். ஈசனையே இகழுகின்ற கொடுமையான குணமுள்ள உனக்கு நான் கூறக்கூடாது. நான் இவைகளைச் சொன்னால் கூட பாவம். உலகை மருட்டி ஏமாற்றும்படி நீ கொண்ட வேடத்தோடும் வெளியேஇப்போதே சென்று விடுவாயாக எனக் கூறினாள் எமது பெருமாட்டி. 26

அறத்தினைப் புரிவாள் இவ்வா றறைதலும் அணங்கே ஈங்குன்
திறத்தினி லார்வஞ் செய்து சென்றவென் செயல்கே ளாது
புறத்திடைப் போதி யென்றி புரைவதோ புகுந்த பான்மை
மறைச்சடங் கியற்றி நின்னை வரைந்திடற் காகு மென்றான்.

உலகில் தருமங்களைப் புரியும் அருளுடைய பெருமாட்டி உரைத்தருளுதலும், அப்போது எம்பெருமான் அம்மையைப் பார்த்து பெண்கள் தெய்வமே! நான் இங்கு கூறியது எல்லாம் உனது சிறப்பிற்கும் வாழ்விற்குமாக உன் மீது கொண்ட ஆர்வத்தினால் இங்கே உன்னிடம் நானே தேடிவந்து இவற்றைக் கூறினேன். அப்படி உன் மீது கொண்ட விருப்பால் உனது நன்மைக்காகக் கூறிய என்னைப்பார்த்து நீ வெளியே போய்விடு எனக் கூறினாய் இது சாலவும் பொருத்தமாகுமோ! இப்போது நான் இங்கு வந்த காரணத்தை வெளிப்படையாக சொல்வேன். அதுவென்னென்றால் வேதவிதிப்படி சடங்கு முடித்து உன்னைத் திருமணம் செய்துகொள்ளும் பொருட்டாகும் எனக் கூறியருளினான் எமது ஈசன்.

27

வஞ்சக முதல்வன் சொற்ற வாசகம் இறைவி கேளா
அஞ்செவி பொத்தி யாற்ரு தழுங்கிமெய் பதைப்ப விம்மி
எஞ்சலின் முதியோன் போகான் ஏகுவன் யானே யென்னுப்
பஞ்சடி சேப்ப ஆண்டோர் பாங்கரிற் படர்த லுற்ருள்.

உலகெலாம் தானுக நிறைந்தும் ஒருவரும் அறியமுடியாதபடி அருவாயும் இப்போ தானே தனது திவ்விய தேசோமயமான வடிவத்தைக் காட்டி அருள்செய்ய முடியுமானுலும் இந்த மிக அழகின் மூத்த வடிவத்தோடும் எழுந்தருளி வந்து நின்ற மையால் வஞ்சனை முதல்வர்போல நின்றருளும் எம்பிரானுரின் இந்த திருமண வார்த்தையை எம்பிராட்டி கேட்டுப் பொருளாகி த னது காதுகளைப் பொத்தி, ஐயோ இஃது என்ன கொடுமையென்ருள். அவர் சொன்ன இந்த வார்த்தையைச் சகிக் காதவளாகி துயருளந்து மேனி நடுங்கும்படி விம்மி விம்மி அழுது ஒகோ! இந்த மிக மூப்பால் தடுமாறும் இவர் போகார். ஆனமையில் நானே மெதுவாக இவ் விடத்திலிருந்தும் போவேன் எனத் துணிந்து தமது செம்பஞ்சு தீட்டிய மிருதுவான சிறிய மலரடிகள் வேகமாக நடத்தலினுல் சிவக்கும்படி ஒரு பக்கராகச் செல்வாள் ஆயினுள். 28

படர்ந்தனள் போத லோடும் பனிபடு மிமையம் வைகும்
மடந்தைதன் னியற்கை நோக்கி வரம்பிலா அருண்மீ தூர
அடைந்ததொல் பனவக்கோல மகன்றுமால் விடைமேல் கொண்டு
தொடர்ந்துபல் கணங்கள் போற்றத் தோன்றினன் ருெலைவி லாதோன்

இவ்வாறு எம்பிராட்டி ஒரு பக்கராகச் செல்லுதலும், அப்போது ப னி மூடிய இமயமலையில் இருக்கும் உலக முதல்வியான எமது அன்னையின் திருஉள்ளப் பாங்கை எம்பிரான் உணர்ந்தாராகி எல்லையற்ற பேரருள் பொங்கி எழுமாறு தாம் கொண்ட உத்தமமான பிராமணக் கோலத்தை நீக்கியருளி அழகான மருட்கையோடும் பொலி யும் வெள்ளை இடபத்தின்மேல் எழுந்தருளி தம்மைத் தொடர்ந்து பல பூத கணங்கள் போற்றி வணங்குபடியாகத் தோன்றியருளினுன் தொலைவிலாத உண்மைப் பொருளான எமது ஈசன். 29

தொலைவறு பகவன் வான்மீத் தோன்றலுந் துளங்கி நாணி
மலைமகள் கண்டு பல்கால் வணங்கியஞ் சலியாற் போற்றி
அலகிலா வுணர்வால் எட்டா வாதிநின் மாயை தேறேன்
புலனிலாச் சிறியேன் நின்னை இகழ்ந்தவா பொறுத்தி யென்ருள்.

தொலைவற்ற அருட்சோதியாகிய பெருமான் வெளியே வானத்தில் தோன்று தலும் எம்பிராட்டி கண்டருளினுள். கண்டபோதே திடுக்குற்று நடுங்கினுள், நாணங் கொண்டாள். பலகாலும் எமது உயிர் முதலை இமயம் என்னும் மலைதந்த பிராட்டி வணங்கினுள், அஞ்சலி செய்தாள், போற்றினுள், எந்தவிதமான நுண் ணிய உணர்வாலும் எட்டொணுத ஆதியே! தேவரீரின் மாயையை நான் அறியேன்! நல்லறிவிலாப் பேதைப் பெண்ணுகிய நான் தேவரீரை அறியாது இகழ்ந்தமையைப் பொறுத்தருள்வாய் என வேண்டினுள். 30

நற்றவ மடந்தை கேண்மோ நம்மிடத் தன்பால் நீமுன்
சொற்றன யாவு மீண்டே துதித்தன போலக் கொண்டாம்
௩௧ குற்றமுண் டாயி னன்றே பொறுப்பது கொடிய நோன்பால்
மற்றினி வருந்தன் நாளை மணஞ்செய வருது மென்றான்.

அப்போது எம்பிரான் சொல்லியருள்கிறார் நல்ல தவத்தைச் செய்த உமையே கேட்பாயாக. நீ முன் என்னை உணராது கிழப் பிராமணரான இவர் ஈசனை இகழ் கிறாரே என என்மீது கோபங்கொண்டு சொன்னயாவும் என்மீது உள்ள அன்பாலே தானே சொன்னாய், ஆனமையின் நீ சொல்லிய யாவும் எம்மை நீ துதித்தது போலவே கொண்டோம். குற்றம் இருந்தால் அல்லவோ பொறுப்பது. இவ்வளவு நாளும் நீ கொடிய நோன்பினால் உடலம் நொந்து இனியும் நீ வருந்த வேண்டாம். நாளையே உன்னைத் திருமணம் செய்ய வருவோம் என எமது பெருமான் சொல்லி யருளினார். 31

சிறந்தநின் வதுவை முற்றச் செல்லுது மென்று தொல்லோன்
மறைந்தனன் போத லோடும் மலைமக ளுள்ளந் தன்னில்
நிறைந்திடு மகிழ்ச்சி கொண்டு நித்தனை நினைந்து போற்றி
உறைந்தனன் இதனை வேந்தற் குரைத்திடச் சிலவர் போனார்.

மிகவும் சிறந்த உனது திருமணம் கைகூடி முற்றும்படியாக நாளை நாம் இமய லைக்கு வருகிறோம் என சிவபிரான் கூறி மறைந்து போதலோடும் உமையம்மையார் அது கேட்டு தமது உள்ளம் தன்னில் நிறைந்திருக்கின்ற மகிழ்ச்சி பொங்கி எழுந்து கொள்ள நித்தியப் பொருளாகிய பெருமானை நினைந்து போற்றி அங்கு தவச்சாலையில் எமது அன்னை வீற்றிருந்தருளினாள். இங்கு நிகழ்ந்த அற்புதங்களை எல்லாம் அவதா னித்த தோழிப் பெண்கள் மலை அரசன்பால் இவற்றை எடுத்துச் சொல்லுமாறு விரைந்து போனார்கள். 32

அண்ணல்வந் தருளிச் செய்கை அரசனுக் குரைத்த லோடும்
உண்ணிக ழயர்ச்சி நீங்கி யொல்லைதன் னில்லி னோடு
நண்ணினன் உமையைக் கொண்டு நலங்கொள்தன் நகரத் துய்த்தான்
கண்ணுத லிறைவன் அங்கட் செய்தன கழற லுற்றேன்.

அண்ணலாகிய பெருமான் கிழவராக எழுந்தருளி வந்து அருளிச்செய்த வரலாற்றை மலை அரசனுக்கு எம்பிராட்டியின் தோழியர் எடுத்துச் சொல்லலோடும் மலைஅரசன் அது கேட்டுத் தமது மகளாகிய பார்ப்பதியம்மையார் இளம் பருவத்தே உடலம் நோக தவம் செய்திருப்பதைக் குறித்தும் அப்பால் அவவின் தவத்திற்கு இரங்கி எப்போது பெருமான் தோற்றுவாரோ என்று நெடுநாட்களாக இருந்த தனது உள்ளத்து அயர்ச்சியை இப்போது நீக்கிக்கொண்டவனாய் மிகு விரைவாக செய்தி கேட்ட உடனே தனது மனைவி மேனையோடும் புறப்பட்டுச் சென்று தவச்சாலையைச் சார்ந்து அங்கு எம்பிராட்டியை அழைத்துக்கொண்டு மீண்டும் தனது நகரத்தில் பிராட்டியைச் சேர்த்தான். இப்பால் நெற்றிக் கண் உடைய ஈசன் உமையம்மை திருமணப் பொருட்டால் மேற்கொண்டு அங்கு செய்தமையை இனி முனிவர்களே உங்கட்கு யான் எடுத்துச் சொல்லுகின்றேன் என சூதமுனிவர்பின்னரும் சொல்வார்.

தவங்காண் படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 669

# 7. மணம் பேசு படலம்

பொருடரு மலைக்கொடி புரியும் நோன்புகண்டு
அருள்தனை நல்கிய வாதி நாயகன்
தெருடரு கயிலையிற் சேர்வுற் றேழ்வகை
இருடிகள் தங்களை இதயத் துன்னினுன்.

உலகத்து உயிர் யாவற்றிற்கும் உடம்பு முதல் கண் காது வரை பல கரணங்கள் யாவையும் தந்தருளும் தலைவியாகிய எம்பிராட்டி புரிந்தருளிய தவத்தைக் கண்டு அருளினை அவளுக்கு அருளிய ஆதிநாயகராகிய சிவபிரான் யாவரும் தம்மைத் தியானிப்பார்க்கு தெளிவினை அருள்செய்யும் கயிலைமலையின்கண் சேர்ந்து அங்கு பழமை போல் அமர்ந்தருளி ஏழுவகையர் எனச் சிறந்து சொல்லப்படும் முனிவர்களை அங்கு வருமாறு தமது இதயத்தில் உன்னியருளினுர்.

ஏழு வகையான முனிவர்: அத்திரி, வசிட்டர், ஆங்கீரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாசர், விசுவாமித்திரன். 1

நினைதலுங் கண்ணுதல் நிமல னேழ்பெரு
முனிவரு மன்னதை முன்னி யுள்வெரீஇப்
பனிவரு மெய்யொடு படர்ந்து வல்லையில்
அனையனை இறைஞ்சிநின் றறைதல் மேயினுர்.

எம்பிரான் இவ்வாறு நினைத்தலும், ஏழு வகையான இம்முனிவர்கள் உணர்ந்தருளி உள்ளத்துள் பயமெய்தி நடுக்கம் கொள்கின்ற மேனியோடும் நடந்தருளி இறைவன் திருமுன்பு சென்றருளி யாவர்க்கும் கடவுளாகிய பெருமானை வணங்கி நின்று சொல்லியருள்கிருர். 2

பங்கயன் மான்முதற் பகரும் பண்ணவர்
உங்குன தேவலுக் குரிய ராயுற
எங்களை யுன்னினை யாங்கள் செய்தவம்
அங்கவர் தவத்தினு மதிகம் போலுமால்.

பெருமானே! பிரமன், நாராயணக் கடவுளர் முதல் யாவரும் தேவரீருடைய ஏவலுக்குரியராயிருக்க எங்களை நினைத்தருளினீர். ஆகையால் அடியேங்கள் செய்ததுவே அந்த பிரமதேவர் முதல் யாவரும் செய்த தவத்திலும் பார்க்க மேலாயது போலும். 3

எந்தையெம் பெருமநீ யெம்மை வம்மென
முந்துறு கருணையின் முன்னிற் றுதலின்
உய்ந்தனம், அடியரே முடைய தீப்பவஞ்
சிந்தினம் இனியொரு தீதுண் டாகுமோ.

எந்தையே! எம்பெருமானே, தேவரீர் எம்மை வாருங்கள் சந்நிதி முன்பாக என நினைந்தருளினீர். இது தேவரீருடைய அநாதியாகிய கருணையாகும். அவ்வாருக எங்களை நினைந்தருளியமையால் தேவரீர் சித்தத்து எம்மைக் கொண்டமையால் அடியேங்கள் உய்ந்தோம். அடியேமுடைய தீமை பயக்கும் பாவம் யாவும் சிந்தப்பெற்ருேம். இதுவன்றி எமக்கு இனியும் ஒரு தீமை உண்டாகுமோ! 4

தந்தது உன்னைக் கொண்டது என் தன்னை (மாணிக்கவாசகர்)

ஒருதலை யைந்தொழி லுலப்பு ருவகை
புரிதரு பகவநம் புன்மை நீக்குவான்
கருணையொ டுன்னினை கடிதிற் செய்பணி
அருளுதி யென்றனர் ஆற்றும் நோன்பினோர்.

சர்வ உலகம் எங்குமாய் விரிந்து நின்று படைப்பவன், காப்பவன், அழிப்பவன்' மறைப்பவன், அருள்பவன் ஆகி, ஒருவனுகிய நீயே எங்கும் இருந்து அறியப்படாத ஐந்து தொழிலையும் இயற்றுவாய். எம் பகவானே! எமது அற்ப நிலைகளைக் கருணை யோடு நீக்குவான்வேண்டி நினைந்தருளினீர்! விரைவாக நாம் செய்ய வேண்டிய பணி விடை யாதெனக் கூறியருள்வீராக என வேண்டினுர்கள் எஞ்ஞான்றும் தவத்தையே புரியும் இம் முனிவர்கள். 5

அமலனம் முனிவர் மாற்றங் கேட்டலு மவரை நோக்கி
இமையமே லிறைவன் றன்பா லேகியே எமக்கிவ் வைகல்
உமைதனை வதுவை நீரா லுதவுவான் வினவி வல்லே
நமதுமுன் வம்மி னென்னு நன்றருள் புரிந்தா னன்றே

அவ்வாறுகிய நேரத்தில் எமது கடவுள் அம்முனிவருடைய வார்த்தையை கேட்டதும் அவர்களை நோக்கி இன்று நீர் இமயமலையில் சென்று அரசனைக் கண்டு எமக்கு இன்று உமையம்மையாரை திருமண முறையாக மலையரசன் கன்னிகாதானம் செய்து கொடுப்பானு எனக் கேட்டு அவன் கருத்தறிந்து எமது முன்வருவீராக என நல்லரு ளோடும் கூறியருளினுர் எம்பகவான். 6

நாயக னருளக் கேளா நன்றென இறைஞ்சி யேகி
ஏயதொன் முனிவர் யாரும் இமையமே லிறைமுன் நண்ண
ஆயவன் மனைவி யோடு மடைந்தெதிர் கொண்டு தாழ்ந்து
நேயமொ டருச்சித் தேத்தி நின்றிது புகலு கின்றான்.

நாயகன் ஆகிய பெருமான் இவ்வகை அருள்செய்யக் கேட்ட அம்முனிவர் எழுவ ரும் நன்று எம் ஐயனே என வணங்கி கைலைமலையைவிட்டு, அந்த ஏழு முனிவரும் நீங்கி யாவரும் கூடி இமயமலை அரசன்பால் வந்து சேர்தலும், அந்நேரத்து மலையரசன் முனிவர் வருகையைக் கேள்வியுற்றவனுய் தனது மனைவியோடும் ஏழு முனிவரையும் அடைந்து வரவேற்று தாழ்ந்து வணங்கி உள்ளன்பால் அருச்சனை புரிந்து, வழிபாடு செய்து முன்னின்று இதைப் புகல்கின்றான். 7

படியறு நுந்தாள் ஈண்டுப் படுதலால் இமைய மேருத்
தடவரை யதனில் தூய்தாய்த் தலைமையும் பெற்ற தன்றே
நெடியவென் பவமு மின்னே நீங்கின நீவி ரெல்லாம்
அடியனேன் றன்பால் வந்த நிமித்தமென் னறையு மென்றான்·

முனிவர் பெருமக்களே! பூமியில் படாது செல்லும் இருடிகளாகிய உங்கள் பாதங் கள் இப்போது எமது மலையில் இங்குபடுதலால் இந்த இமயம் என்னும் மலையானது மகாமேருமலையிலும் பார்க்க தூய்மையானது மட்டுமன்றித் தலைமையும் பெற்றுக் கொண்டது. நீங்காது என்னைத் தொடருகின்ற பாவமும் இன்றோடு நீங்கியது.

நீவிரெல்லாரும் அடியேன்பால் வந்த நிமித்தம் யாது அதைச் சொல்லியருள் வீராக என வேண்டினுன். 8

அங்கது வினவு மெல்லை அருந்தவ ரகில மீன்ற
மங்கையை வதுவை செய்வான் மன்னுயிர்க் குயிராய் நின்ற
சங்கரன் நினைந்துன் ஞேடு சாற்றுதற் கெம்மை உய்த்தான்
இங்கிதெம் வரலா றென்ன இசைவுகொண் டிறைவன் சொல்வான்.

அவ்வாறு மலையரசன் கேட்கும் எல்லையில் அரிய தபோதனர்கள் சொல்வார்கள் அகில உலகமெல்லாம் ஈன்றருளிய மாதாவான உமை என்னும் கன்னியைத் திருமணம் செய்யுமாறு பொருந்திய பல உயிர்க்கும் உயிராகி நின்ற சங்கரன் நினைந்தருளி உன்னேடும் இந்த திருவார்த்தையைச் சொல்லுதற்கு எம்மைச் செலுத்தினன். இது தான் எங்களது வரவின் வரலாருகும் என முனிவர்கள் கூறியருளலும் மலையரசன் உடன் இசைவாகி இதனைச் சொல்வான். 9

துன்னிய வுயிர்கள் யாவுந் தொல்லுல கனைத்து மீன்ற
கன்னிகை யுமையா டன்னைக் கடிமண முறையின் நல்கி
என்னையு மடிமையாக ஈகுவன் இறைவற் கென்ன
மன்னவன் அயலே நின்ற மனைவியீ துரைக்க லுற்ருள்.

பெருகிவளரும் உயிர் யாவையும், உலகம் யாவையும் ஈன்ற கன்னியாகிய எங்கள் உமையை எம்பிராற்கு நான் திருமண முறையால் கொடுப்பதோடு என்னையும் எம்பிராற்கு அடியனுகக் கொடுத்தருள்வேன் எனலும் பக்கராக இதனைக் கேட்டு நின்ற அவன் மனைவியாகிய மேனை என்பாள் இதனைச் சொல்வாளாயினுள். 10

மலரயன் புதல்வன் தன்னேர் மடந்தையை மணத்தின் நல்க
அலைபுனற் சடிலத் தண்ணல் அவன்றலை கொண்டான் என்பர்
நிலைமையங் கதனை யுன்னி நெஞ்சக மஞ்சு மெங்கள்
குலமகள் தனைய வற்குக் கொடுத்திட லெவனே வென்ருள்.

பிரம தேவரின் புதல்வனுன தக்கன் என்பான் தன்னுடைய மகளாகிய தாட்சாயினி என்னும் பெண்ணைத் திருமணமுறையாகக் கொடுப்ப, அவனை ஏற்ற பின்பு அலைகின்ற திரைகொண்ட கங்கையாற்றைச் சடைமேல் உடைய பகவான் அத் தக்கன் என்பானின் தலையை வெட்டினர் எனச் சொல்வார்கள். இந்த நிலைமையை நினைக்கின்றபோது எனது நெஞ்சம் அஞ்சுகின்றது. ஆகவே எங்கள் குலக்கொழுந்தாகிய பெருமாட்டியை எப்படி இப்படியான ஒருவருக்கு நாம் கொடுக்கலாமென்று மேனை கூறினுள். 11

என்றலு மவளை நோக்கி எழுமுனி வோருஞ் சொல்வார்
ஒன்று நீ யிரங்கல், வாழி, யொப்பிலா முதல்வன் செய்கை
நன்று தேர்ந் திலையால், தக்கன் நலத்தகும் அவியை மாற்றி
அன்றுதன் இகழ்த லாலே அவன்றலை முடிவு செய்தான்.

என்று மேனை கூறுதலும், ஏழு முனிவர்களும் அதனைக் கேட்டுச் சொல்வார்கள். பெண்ணே ஒன்றுக்கும் நீ ஏங்கிக் கவலைப்படாதே! நீ வாழ்வாய். ஈசன் தனக்கொருவர் ஒப்பில்லாதவன், கருணையுடையவன், முதன்மையானவன். அவன் செய்கை முழுவதும் நீ உணர்ந்தாயில்லை. தக்கன் இறைவனுக்குக் கொடுபடவேண்டிய நல மான அவிப்பாகத்தை நீக்கிவிட்டு அவரை இகழ்ந்தான். அங்ஙனம் செய்தலாலே அந்த தக்கனுடைய தலையை ஈசன் முடிவுசெய்தார். 12

அடைந்துள்ளோர்க் கருளுமாறும் அல்லவர் தமக்குத் தண்டம்
படுந்துணை தெரிந்து கூட்டும் பான்மையும் பரமன் செய்கை
மடந்தையித் தன்மை யாரும் மனப்படுத் துணர்வ ரீதே
திடம்பட வுணர்தி வேறு சிந்தனை செய்யே லென்றார்.

தன்னை அடைந்தார்க்கு அருள் செய்தலும் அல்லாத கொடியர்களுக்கு ஏற்ற தண்டனையை தெரிந்து தண்டித்து அவர்களுக்கு இச்செயலைச் செய்வித்து அவர்களை அனுபவிக்க வைத்தலும் பரமனை பகவானின் செய்கையாகும். பெண்ணே! இச் செய்கையை யாவரும் தமது மனதிலே தெளிந்து கொள்வார்கள். இதுதான் உண்மையென நீ திடம்பட உணர்வாயாக. வேறு எதனையும் சிந்தியாதே என அம் முனிவர் கூறுவாராயினர்.

ஈசனை அடைந்தோர் தான் உய்வார், அல்லாதார் வினையின் பிரகாரம் தண்டிக்கப்படுவர். தக்கன் தனக்கு மேம்பாட்டை உதவிய பெருமானை நிந்தித்து இகழ்ந்த படியால் தண்டிக்கப்பட்டான் என்பதை நீ உணர். என்றும் ஈசனையடைந்தார்க்கு வினைப்பெருக்கம் தேய்ந்து, அழிந்து, மாய்தலில் உய்வார்கள் எனவும் கூறினர். 13

இயலுறு முனிவோர்கள் இவைமொழி தலுமோரா
மயலறு வரையண்ணல் வாய்மையி தெனலோடும்
அயலுறு மனைமேனை யஞ்சினள் அமலன்றன்
செயலிது வுணராதே செப்பினன் இவையென்றே.

இயல்பான தபோதனர்களாகிய முனிவர் இவ்வாறு கூறுதலும் அதனைக்கேட்டு உணர்ந்த மயக்கமில்லாத மலையரசன் இது முழுவதும் உண்மையெனலோடும் அவன் பக்கராக நின்ற மேனையென்பாள் கேட்டு ஐயையோ அறியாதே அருளுடைய பெருமானை நான் பொல்லாங்கும் உடையரோ என எண்ணினேனே! எனப் பெரிதும் பயந்து நான் முன்னர் இதை ஏன் இப்படிச் சொன்னேன் எனத் துயரமானுள். 14

உண்ணலி வொடுமேனை உவர்மல ரடிதாழுஉப்
பெண்ணறி வெவையேனும் பேதமை வழியன்றோ
அண்ணறன் அருணீர்மை யணுவது மறிகில்லேன்
புண்ணிய முனிவீரென் புன்மொழி பொறுமென்றாள்.

இவ்வாறு உள்ளம் நலிவாகி மேனை என்பாள் தம் முன்னல் இருந்தருளும் முனிவர்களது மலர்போலும் பாதங்களில் தாழ்ந்து பெருமக்களே! பெண்ணின் அறிவானது எப்போதும் பேதமை உடைய வழியில் தான் முன் செல்லும். அதே போல அண்ணலாகிய பெருமானின் அருள் தன்மையை யான் முன்பு ஒருபோதும் அறிந்திலேன். ஆகையால் புண்ணியமுடைய முனிவர்களே எனது புன்மையான வார்த்தைகளை பொறுத்தருள்வீராக என வேண்டினள். 15

பணிவுட னிவைமேனை பகர்தலும் அவடன்பாற்
கணிதமி லருள்செய்யக் காவல னதுகாணா
இணைதவிர் முனிவீர்காள் இவளுரை கருதன்மின்
மணமியல் இறையோனை வரமொழி குதிரென்றான்.

மிகப் பணிவோடு மேனை இந்த வார்த்தைகளைப் பேசுதலும் அப்போது அவளிடத்து முனிவர்கள் கணக்கில்லாத நல்ல அருள்நோக்கம் செய்ய, அதுபோது மலையரசன்

அதனைக் கண்டு சொல்கிறுன். தனக்கென இணையற்ற முனிவர்களே! இவள் வார்த்தை யில் நீங்கள் அக்கறை கொள்ளல் வேண்டாம். திருமணஞ் செய்யும் பொருட்டாக இங்கு எழுந்தருளும்படி இறைவனை வேண்டிச் சொல்வீராக என மொழிந்தான். 16

பனிபடு வரையண்ணல் பகர்மொழி யதுகேளா
மனமிக மகிழ்வாகி மற்றவர் தமையங்கண்
இனிமையொ டுறநல்கி யெழுவரும் அவணீங்கித்
தனைநிகர் பிறிதில்லாத் தண்கயி லையில்வந்தார்.

குளிர்மை மிக்க பனி மூடிய மலை யரசன் சொன்ன வார்த்தைகளை ஏழு முனிவர் களும் கேட்டுத் தங்களது மனம் மிகவும் மகிழ்வாகி அவர்கள் அங்கு மலையரசனை இனிமையோடும் பொருந்தி வாழுமாறு அவ்விடத்து நிறுத்திவிட்டு இமய மலையை விட்டு ஏழு முனிவரும் நீங்கி தனக்கு நிகர் பிறிதில்லாத குளிர்மை வாய்ந்ததும் தண்ணளி உடையதுமான கைலை மலையைச் சார்ந்தார்கள். 17

வந்தெழு முனிவோரும் மாநக ரிடைசாரா
நந்திகண் முறையுய்ப்ப நாதனை நணுகுற்றே
அந்தமில் அளியோடு மவனடி தொழுதேத்தி
எந்தையை இதுகேளென் றியாவது முரைசெய்தார்.

ஏழு முனிவரும் வந்து திருக்கைலை மலைமேல் உள்ள நகரினைச் சார்ந்து நந்தி யெம் பெருமான் முறையாக எம்பிரான் சந்நிதி முன்பாகச் சேர்த்தருள நாதனுகிய பெருமானை நணுகுற்று முடிவில்லாது பெருகும் மகிழ்வொடும் திருவடி மலரினை தொழுது ஏத்தி எந்தைபிரானே இதைக் கேட்டருள்வீராக என யாவற்றையும் எடுத்துச் சொன்னுர்கள். 18

வரைமிசை யரசாள்வோன் மணவினை யிசைவெல்லாம்
உரைசெய, வருள்செய்தே யும்பரின் முனிகாள்நீர்
புரிதரு செயலாற்றப் போகுதி ரெனலோடும்
அரனடி தொழுதேத்தி அவர்பதம் அணுகுற்றுர்.

இமய மலையில் ஆள்பவனுன மலையரசன் எம்பிராட்டியைத் திருமணம் செய் தற்கு இசைந்துள்ளான் எனும் வார்த்தையை எம்பிரானுக்கு உரைத்து அம்முனிவர் நிற்றலும், அப்போது சிவபிரான் அவர்மேல் கிருபையான அருள் புரிந்து மேலாகிய பதங்களில் வாழும் முனிவர்களே! நீங்கள் புரியும் பணியைச் செய்யப் போவீர்களாக என்று எம்பெருமான் அருள் செய்தலோடும், அப்போது அவர்கள் சிவபிரான் திரு வடிகளை தொழுது வணங்கி, தங்கள் பதங்களில் சேர்ந்தார்கள். 19

எங்குறை தீர்ந்ததென் றெழுத வத்தருந்
தங்கடம் பதத்திடைத் தணப்பின் றெய்தினுர்
இங்கிது நின்றிட இமைய மேலிறை
அங்கினிச் செய்தவா றறியக் கூறுவாம்.

எங்கள் குறை யாவும் நீங்கின என ஏழு தபோதனர்களும் தங்களது பதங்களிடை குறைவின்றி ஏகினுர்கள். இங்கு இது நிற்ப, இமயமலை மேலிருக்கும் மலையரசனுனவன் அங்கு திருமணத்தின் பொருட்டாக என்ன, என்ன செயல்களை மேற்கொண்டான் என்னும் செயல் முறையை யான் இங்கு இனி எடுத்துச் சொல்கிறேன். 20

மணம் பேசு படலம் முற்றிற்று

**ஆகத் திருவித்தம் 689**

# 8. வரைபுனை படலம்

கண்ணுதல் உமைதவங் கண்டு நின்னையாம்
மண்ணவர் புகழ்வகை மணத்து மென்றதும்
விண்ணெழு முனிவரின் வினவி விட்டதும்
எண்ணினன் மகிழ்ந்தனன் இமையத் தண்ணலே.

நெற்றியில் கண்கொண்ட சிவபிரான் உமையம்மையாரின் தவத்தைக் கண்டு, உமையே! நின்னை யான் பூமியிலுள்ளார் யாரும் புகழும்படி திருமணம் செய்வோம் என்றதையும், விண்ணிலே வாழுகின்ற ஏழு முனிவர்களை திருமணத்தின் பொருட்டாகத் தன்னிடம் வினவி வரும்படி விட்டதையும் எண்ணினன் மலையரசன். பெரிதும் அவன் உள்ளம் மகிழ்வாகிறன். 1

கணிதமி லுயிரெலாங் கலந்து மற்றவை
உணர்வுதொ றிருந்தவற் கொருதன் கன்னியை
மணமுறை புரிதிறம் மதித்துத் தேவர்தம்
பணிபுரி தச்சனைப் பரிவொ டுன்னினன்.

கணக்கற்ற உயிர்கள் எல்லாம் கலந்து அவ்வுயிர் தோறும் இருந்தருள்கின்ற எம்பிரானுக்கு தனது ஒரு மகளாகிய கன்னிகையைத் திருமணம் செய்யும் திறத்தை எண்ணி மதித்து, அதற்காகப் பல செயல்களையும் செய்ய வேண்டி முதற்கண் தேவர்களின் பணியைச் செய்கின்ற தேவதச்சனை தனது மனத்தில் நினைந்தான், 2

உன்னிய போதினி லும்பர் கம்மியன்
மன்னவன் எதிருற வந்து கைதொழு
தென்னைகொல் கருதினை யாது செய்பணி
அன்னதை மொழிகென அறைதல் மேயினன்.

இவ்வாறு மலையரசன் தேவதச்சனை நினைத்தபோது அவன் வந்து மலையரசன் முன்பாக நின்று கைகூப்பித்தொழுது அரசே! என்ன நினைந்துள்ளீர்? யாது நான் செய்ய வேண்டிய பணி என்பதையெல்லாம் சொல்வாயாக என்றனும் மலையரசன் சொல்வானயினன். 3

என்னையாள் கண்ணுத லிறைவற் கியான்பெறும்
அன்னையாம் உமைதனை யளிப்பன் இவ்வரைக்
கன்னிமா நகரெலாங் கவின்சி றந்திடப்
பொன்னினு டாமெனப் புனைதி யாலென்றான்.

என்னை ஆளுடைய பெருமானாகிய சிவபிரானுக்கு யான் பெற்ற அன்னையாகிய உமையம்மையாரைத் திருமணம் செய்து கொடுப்பேன், ஆகவே இந்த மலையிடத்து உள்ள கன்னிமா நகர்கள் யாவும் பேரழகு பொலிந்து சிறந்து ஒளி விளங்கும்படி தேவ உலகுபோல் அழகுபடுத்துவாய் என மலையரசன் கூறினன். 4

அப்பொழு தத்தினில் அடுக்கன் மேலையோன்
செப்பிய வாசகஞ் செவிக்கொண் டுள்ளமேன்
மெய்ப்பெரு மகிழ்ச்சியை மேவி யந்நகர்
ஒப்பனை செய்திட வுன்னி னனரோ.

அவ்வாறாகிய நேரத்து மலைகட்கெல்லாம் அரசன் சொல்லிய வார்த்தையைக் கேட்டு மகிழ்வாகி தேவ தச்சன் அளவு கடந்த அழிவற்ற அளவிலா ஆனந்தம் கொண்டு அந்த கன்னியாகிய உமையம்மை வீற்றிருந்தபடியால் கன்னிநகர் என்னும் நகரத்தை அலங்கரித்து ஒப்பனை கொள்ளத் தொடங்கினான். 5

நீடுறு தருநிரை நிமிருங் கால்களாய்ப்
பாடுறு கழிகளாய்ப் பரம்பும் பல்பணை
மூடுற அதன்மிசை முகில்க ளெங்கணும்
பீடுறு பந்தர்போற் பிறங்கும் வெற்பின்மேல்.

நீண்டு வளர்ந்தோங்கிய மரங்கள் நிமிர்ந்த பலகால்களாகவும் தூண்களாகவும் பக்கராகச் செறிந்த பல கொம்பர்கள் பாய்ச்சு மரங்களாகி அதன்மேலாக முகில்கள் படிதலினாலே நல்லதோர் பந்தர் போலும் காட்சி தரும் இமயம் என்னும் மலை இடத்து. 6

மலையுறழ் கோபுர மன்றஞ் சூளிகை
நிலைகெழு செய்யதேர் நிழற்று மண்டபம்
பலவுடன் நறுமலர்ப் பந்தர் அன்னவை
தொலைவறும் ஆவணந் தோறும் நல்கினான்.

மலையை ஒத்த கோபுரங்கள், மன்றங்கள், சூளிகைகள், செப்பமாகிய நிலைகொண்ட தேர்கள் முதலியன தங்கும்படி நிழல் தரும் மண்டபங்கள், இவைபோலும் பல மண்டபங்களையும் வாசம் கமழும் பூம்பந்தர்கள் ஆகியன பலவற்றையும், பல பல வீதியெல்லாம் பொருந்தும்படி உண்டு பண்ணி வைத்தான், 7

நீக்கமில் கதலிகை நெடிய கேதனம்
மேக்குயர் காவண மிசைத்தந் துள்ளிடை
ஆக்குறு கம்பல மணிசெய் தாயிடைத்
தூக்கினன் கவரியுஞ் சுடர்கொள் மாலையும்.

இடைவெளியின்றி நெருங்கிய துகிற் கொடிகளையும், நெடிய பெரிய கொடிகளையும் மேலே பொருந்தும்படியாக அழகான நடைப்பந்தர்களை அமைத்தான். அமைத்து அப்பந்தர் உள்ளே அழகிய வஸ்திரங்களாலாகிய மேற்கட்டியை (வெள்ளை கட்டல்) கட்டி அமைத்து அதன்மேல் நல்ல கவரிமாலைகளையும் ஒளிகொண்ட முத்துமாலைகளையும் தூக்கினான். 8

குரகத முகம்புரை குலைகள் தூங்கிய
மரகத வொளிபடு வாழை, பூகநல்
நிரைகெழு தன்மையின் நிறுவிப் பூந்துணர்
விரைகெழு தோரணம் விசும்பின் நாற்றினான்.

குதிரையின் முகம்போன்று வடிவமைந்த வாழைக் குலைகள் தூங்கி மரகதப் பச்சை போலும் அழகிய வாழைகள், கமுக மரங்கள், ஆகியவற்றை நிரை நிரையான தன்மையில் அமைத்து நாட்டி பூவின் தாதுக்கள் பொலியவும் வாசனை வீசும்படியும் ஆகிய தோரணங்களை மேலே தூக்கினான். 9

ஒண்ணிதி இயக்கர்கோ னுறையு ளானதும்
விண்ணவர் தொழுதிட வீற்றி ருந்திடும்
அண்ணறன் கோயிலு மாக வீதிகள்
எண்ணருந் திருவுற எழில்ப டுத்தினன்.

சிறந்த செல்வத்தினை உடைய குபேரனது மாளிகையும் தேவர்கள் தொழும்படி யாக அரசனாக இருக்கின்ற இந்திரனுடைய உறையுளான மாளிகையும், இங்குதான் உள்ளனவோ இவ்வீதிகள் பக்கராக எனும்படி அழகிய மாளிகைகள் இருமருங்கும் பொருந்தும் வீதிகள் எண்ணற்ற சிறப்போடும் பொலிய உண்டு பண்ணினன். 10

ஒருபுறத் தினைஇனி யுமைக்கு நல்குவோன்
இருபுறத் தினும்வரு மெண்ணில் தேவருந்
தருபுறப் பொருளெலாஞ் சாரச் சாலைகள்
திரிபுறத் திரிபுறச் செய்த மைத்தனன்.

தமது ஒரு பாகத்தை இனி உமையம்மையாருக்குக் கொடுத்தருளும் சிவபிரான் மணவாளராக எழுந்தருளி இங்கு வரும்போது அவர் இரு புறமும் சூழ்ந்து வரும் எண்ணற்ற தேவரும் கொண்டுவருகின்ற காணிக்கைப் பொருள்கள் யாவற்றையும் அடக்கிவைக்குமாறு அழகியசாலைகளை வெவ்வேறுவகையாக அமையும்படி செய்துவைத் தான். அப்பொருள்களை வைப்பதற்கு பண்டகசாலைகளை வெவ்வேறு பொருள்களுக்கேற்ப அழகிய விதம் விதமான வடிவங்களில் செய்தான். 11

ஆயிரப் பத்தென அறையும் யோசனை
போயதோ ரளவையிற் புரிசை யொன்றினைக்
கோயிலி னொருபுடை குயிற்றிக் கோபுரம்
வாயில்கள் நான்கினு மரபின் நல்கினன்,

பதினாயிரம் யோசனை வரையும் நீண்ட பரப்புடையதாகிய ஓர் அளவிலே மலை யரசன் அரண்மனையின் ஓர் புறமாக ஓர் மதிலை நாட்டி அந்த மதிலிலே நான்கு திக்கிலும் நான்கு வாயிலைச் செய்து அங்கு சிற்ப நூன்முறைப்படி நான்கு பெரிய கோபுரங்களை அமைத்தான். 12

அங்கதன் நடுவுற அகன்ப ரப்பினின்
மங்கல மணஞ்செய வதுவைச் சாலையைச்
செங்கன கத்தினால் திகழச் செய்தனன்
கங்கையஞ் சடையினான் கயிலைக் கோயில்போல்.

அந்த மதில் எல்லையின் நடுவிலே பொருந்தும்படி மிக விசாலமாக அமையும் படியான பரப்பிலே மங்கலம் பொருந்தும்படி திருமணஞ் செய்யும்படியான திருக்கல்யாணமண்டபம் ஒன்றைச் செம்பொன்னினால் செய்தான். இதனைப் பார்த்தால் கங்கை நதியைச் சடைமீதணிந்தருளிய சிவபிரானின் கைலைமலைக் கோயில்தான் இது என்று சொல்லும்படியாக. 13

சாலையின் நிலத்திடைச் சந்த மான்மதம்
மேலுறு நாவிநீர் விரவிப் பூசியே
கோலமென் மலர்கடூஉய்க் குறுகும் வானவர்க்
கேலுறு பலதவி சிருப்பச் செய்தனன்.

அத்திருமணச்சாலையின் நிலத்தின்கண்ணே சந்தனமும் கஸ்தூரியும் மேன்மை பொருந்திய புனுகும் இவற்றைப் பனிநீருடன் கலந்து மெழுகி அழகிய கோலமுடைய மிருதுவான பூக்களை அதன்மேல் தூவி அங்கு வரும் தேவர்களுக்கேற்ற பல சிம் மாசனங்களை அவர்கள் அமரும்படி வைத்தான். 14

வானவில் மணிமுகில் வனச மாமலர்
நீனிறம் விரிதரு நெய்தல் சண்பகம்
ஏனைய நிறங்களால் எண்ணில் வேதிகை
ஆனவை புரிந்தனன் அயனும் நாணவே.

இந்திரவில்லும், கரிய மேகமும், அழகிய தாமரைப்பூவும், நீலநிறம் விரிந்து பொலியும் நெய்தல் பூவும், சண்பகப் பூவும் ஆகிய இப்பூக்களின் நிறங்களும் இன்னும் வேறு நிறங்களினாலுமாகிய எண்ணற்ற வேதிகைகளை செய்து வைத்தான்; இக்காரியங் களிலே மிகவும் திறமைசாலி எனும் பிரமதேவரும் பார்த்து நாணும்படியாக. 15

கண்ணடி பூந்தொடை கவரி பஃறுகின்
மண்ணிய செழுமணி மாலை தூங்குறப்
பண்ணுறு வித்தனன் பரமன் பால்வரும்
விண்ணவர் விழியெலாம் விருந்து கொள்ளவே.

கண்ணாடிகளையும், பூமாலைகளையும், வெண்சாமரைகளையும் பலவகையான வஸ்தி ரங்களினால் செய்த குஞ்சங்களையும், இயல்பான ஒளி பொருந்திய இரத்தினங்களினால் ஆகிய மாலைகளையும் தூக்கி செப்பனுக அமைத்தான். இந்த சோடனை வேலைப்பாடு கள் யாவும் சிவபிரானது பக்கத்தில் வருகின்ற தேவர்களுக்கு எல்லாம் விருந்தா கும்படியாக. 16

தேவரு முனிவருந் திருவ னார்களும்
பாவையின் உயிருறு பண்பி னாக்கியே
மேவரு கவரிதார் வீணை யேந்தியே
ஏவலர் தொழின்முறை இயற்ற நல்கினான்.

தேவர்களையும், முனிவர்களையும், மகா இலக்குமியைப் போன்ற பேரழகினை உடைய பெண்களையும் பாவை வடிவத்திலே செய்து அவைகள் உயிரோடு பொருந் தும் தன்மைபோல ஆக்கி இவைகள் யாவும் தங்கள் கைகளிலே கிடைத்தற்கரிய சாமரைகளையும் மாலைகளையும் வீணைகளையும் தாங்கியவாறு ஏவலார் செய்யும் தொழில் முறைபோல் சொன்னதை கேட்டதை செய்யும்படியாகவும் ஆக்கினான். 17

பெண்ணிய லாரெனப் பிறங்கும் பாவைகள்
தண்ணுமை முதலிய தாக்கித் தண்டியல்
பண்ணொடு களிநடம் பயிலு வித்தனன்
விண்ணவர் அரம்பையர் யாரும் வெஃகவே.

பெண்கள் வடிவங்கள்போல இயங்கும் பாவைகள் தங்கள் கைகளிலே மத்தளம் முதலிய மேளங்களைத்தாங்கி அடித்து யாழில் உண்டாகின்ற பண் ஓசையோடு ஆனந்த நடனம், பாடல் முதலியவற்றையும் புரியும்படி செய்துவைத்தான். உயிர்ப் பொருள் எனப்படும் இப்பாவைகளின் கூத்து முதலியனவற்றைப் பார்த்து தேவ நாட்டியப் பெண்களாகிய அரம்பை, திலோத்தமை முதலியோர் ஆசை கொள்ளும்படியாக. 18

நெருங்கிய கிளிமயில் நேமி தண்புருப்
பொருங்கரி அரிபரி பொருநர் வானுளோர்
ஒருங்குடன் மணிகளா லோவி யப்பட
அருங்கடி யிருக்கையுள் அமர நல்கினன்,

நெருக்கமாக செறிந்திருக்கும் கிளிகளை, மயிலை, சக்கரவாகப் பட்சிகளை, அழகிய குளிர்மையான புருக்களை ஒன்றோடொன்று போர் செய்யும் தன்மையான யானைகளை, சிங்கங்களை, குதிரைகளை, கூத்தாடிகளை, தேவர்களை, இவையாவும் ஒன்று சேர்ந்து காட்சி தரும் சித்திரங்களாக நல்ல முத்து மணிகளினால் பதித்து திருக்கல்யாண மண்டபத்தை அமைத்தான். 19

குறைதவிர் நிலைமையாற் குயிற்றுஞ் சாலையுள்
நிறைதரு மிந்திர நீலத் தாலொரு
திறலரி யணையினைச் சிறப்பிற் செய்தனன்
இறைவனு மிறைவியும் இனிது மேவவே.

வேண்டிய வனப்புக்கள் சிறிதாயினும் குறைவில்லாத நிலைமையால் செய்து வைத்த திருக்கல்யாண மண்டபத்து சிவபிரானும் பார்வதி அம்மையும் இனிதே அமர்ந்திருக்கும்படியாக இந்திர நீலம் என்னும் இரத்தினத்தினால் ஓர் அழகிய, வலியைக்கொண்ட சிங்கங்கள் சுமக்கும் ஓர் சிம்மாசனத்தைச் சிறப்பாகச் செய்தான். 20

குண்டமும் வேதிகை வகையுங் கோதில்சீர்
மண்டல மானதும் வகுத்து வேள்விசெய்
பண்டம தானதும் படுத்திப் பண்ணவர்
எண்டொகை மங்கலம் இருத்தி னனரோ.

ஓம குண்டத்தையும், வேதிகையின் வகுப்புக்களையும் குற்றமற்ற சிறப்புப் பொருந்திய மண்டலங்களையும் இருக்கவேண்டிய இடங்களில் வகுத்து அமைத்து திருமணச் சடங்கிற்கு ஏற்ற பண்டங்களானவையும் உண்டாக்கி வருவித்து தேவர்களுடைய எட்டுவிதமான மங்கலப் பொருள்களையும் இருக்கவேண்டிய இடத்தில் அமைத்தான்.

ஓமகுண்டம் நடுவணாகவும் மற்றும் வேதிகைகள் சிறுக பெரிதாக வகைப்படுத்தி அமைத்தும், மண்டலங்கள் எனும் நவக்கிரக மண்டலங்களை அமைத்தும் ஓமச் சடங்கிற்கு வேண்டிய நெய் சமித்து, தருப்பை முதலிய பண்டங்களை அமைத்தும், தேவமங்கலப் பொருள்களான கண்ணாடி, இடபம், தீபம், யீவற்சம், இரட்டைச் சாமரை, சங்கு, சுவஸ்திகம், பூரணகும்பம் என்னும் எட்டு பொருள்களையும் எங்கெங்கு அவை வைக்கப்படவேண்டுமோ ஆங்காங்கே வைத்தான் 21

கண்டெறு கதிர்மதிக் காந்தங் காஞ்சனம்
ஒண்டுகிர் நித்தில மொளிறு வச்சிரம்
முண்டக வெயின்மணி முதல்வெ றுக்கையால்
மண்டப மெண்ணில மருங்கின் நல்கினன்,

கண்களை ஒளி மழுங்கச் செய்கின்ற சூரிய காந்தம், சந்திர காந்தம் என்னும் இரத்தினக் கற்களும், பொன்னும், ஒளிபொருந்திய பவளமும், முத்தும், பிரகாசிக்கின்ற வைர இரத்தினமும், பதுமராகம் என்னும் இரத்தினமும் முதலாகிய இரத்தினப் பொருட்களால் மண்டபங்கள் எண்ணற்றனவற்றை இத்திருக்கல்யாண மண்டபத்தின் பக்கராக அமைத்தான், 22

காவிகண் மலர்தரு கயங்க ளோர்பல
ஓவறு முற்பல வோடை யோர்பல
பூவியல் வாரிசப் பொய்கை யோர்பல
வாவிக ளோர்பல மருங்கில் ஆக்கினன்.

நீலோற்பல மலர்கள் மலரும் குளங்கள் பலவும், எக்காலத்திலும் தவறாது மலர்கின்ற செங்கழுநீர் பூக்கள் மலரும் ஓடைகள் பலவும் தாமரைமலர் நிறைந்த தடாகங்கள் பலவாகவும் நல்ல வேறு வேறு குளங்கள் பலவாகவும் அமைத்து வைத்தான். 23

பாசடை மரகதம் பளிங்கு வச்சிரங்
காசறு நன்மணி கனக மன்னதால்
தேசுறு நளிமலர் செறிந்த பூந்தடம்
வாசவன் கண்டுள மருளத் தந்தனன்.

மரகதப் பச்சை எனும் இரத்தினத்தால் பச்சை இலைகளையும், படிகம், வைரம், குற்றமற்ற மாணிக்கம், பொன் இவை ஆதியவற்றால் ஒளிபொருந்திய வடிவான குளிர்ந்த பூவும் பொருந்திக் காணப்படும் குளங்கள் பலவற்றை இந்திர தேவனும் கண்டு உள்ளம் ஆசைப்படும் வண்ணம் தேவஉலக குளங்களிலும் சிறந்து விளங்கச் செய்தான். 24

கற்பகஞ் சந்தகில் கதலி பூகமே
பொற்புறு வருக்கைமாப் புன்னை யாதிய
பற்பல மணிகளாற் படுத்தி அன்னவை
நற்பயன் வழங்கவும் நல்கி னனரோ.

கற்பகவிருட்சமும், சந்தன மரமும், அகில் மரமும், வாழை மரமும், பொற்பமைந்த பலாமரமும், மாமரமும், புன்னை மரமும் ஆதியன பற்பல மணிகளினாலே அமைத்து அவை யாவும் நல்ல காய் கனியாகிய தமது பொருட்களை காய்த்து பயன் வழங்குகின்ற நிலையிலும் தேவதச்சன் ஆக்கினான். 25

இன்னவா றளப்பில இமைய வர்க்கெலாம்
முன்னுறு கம்மியன் முன்னிச் செய்தலும்
பொன்னியல் இமகிரிப் புரத்து மேவிய
மன்னவன் கண்டவை மகிழ்ச்சி எய்தினன்.

இன்னவாறு அளவுகடந்த பொருள்களை இமையவர்க்கு எல்லாம் முன்னவனான தேவதச்சன் மனதால் நினைந்து உண்டாக்கலும், இந்தச் சிறப்பை எல்லாம் பொன் மயமான இமயம் என்னும் மலையில் அரசாளும் தலைவனான மலையரசன் கண்டு அளவற்ற மகிழ்ச்சி எய்தினான். 26

சீதரன் அயன்முதற் றேவர் மாத்தொகை
மாதவ முனிவரர் மடந்தை மாரொடு
காதலின் உமைமணங் காண வந்திடத்
தூதரை யெங்கணுந் தூண்டி னனரோ.

இவ்வாறு கலியாணக் கோலத்திற்காக மலைநகரை மிகவும் அழகு பொலியும்படி சிறப்பித்திருக்கும் தேவதச்சன் செயலைக்கண்டு மகிழ்வாகிய மலையரசன் இப்பால் தங்கள் மனைவிமாரோடு காதலோடும் உமையம்மையார் திருமணத்தைக் காணவரும்படி விஷ்ணுமூர்த்தி பிரமதேவர் முதலாகவுள்ள தேவர் தொகையையும் மாபெரும் தவம் செய்யும் முனிவர் தொகையையும் அழைக்கும்படியாக எல்லாரிடத்தும் எப்பக்கராகவும் தூதுவரைத் தூண்டினன். 27

ஒற்றர்தம் முறைதெரிந் தும்பர் யாவருங்
குற்றமில் முனிவருங் குன்ற வில்லினல்
பற்றவர் புரமடு பரமற் போற்றியே
மற்றவன் றன்னெடு வருது மென்றனர்.

தூதுவர் சென்று இவ்வாறு யாவருக்கும் எடுத்து மொழிதலும் அதைத் தெரிந்துகொண்ட தேவர்கள் யாவரும் குற்றமில்லாத முனிவர்யாவரும் தூதுவரைப் பார்த்து நீங்கள் மலையரசனிடம் நாம் எல்லாம் பகைவராகிய முப்புரத்து அசுரரின் புரங்களை மேருமலை என்னும் வில்லால் எரித்தருளிய சிவபிரானை கைலைமலைமேல் சென்று சேர்ந்து அவரைப் போற்றி செய்து அவரோடும் இமயத்திற்கு வருகின்றோம் என்பதை அறிவியுங்கள் என்றார்கள். 28

வெற்றிகொள் வயப்புலீ மிசையு யர்த்திடுங்
கொற்றவை யாமளை குழீஇய காளிகள்
சுற்றுறும் எழுநதி இமையத் தொல்கிரி
உற்றனர் தொழுதனர் உமைமுன் நண்ணினர்.

வெற்றி பொருந்திய சிங்கக்கொடியை மேலுயர்த்திய துர்க்காதேவியும், யாமளையும், கூட்டமாகிய காளிகளும் சூழ்ந்து உலாவுகின்ற ஏழு ஆறுகளான கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி ஆகியன தெய்வப்பெண் வடிவங்கொண்டு இமயம் என்னும் மலையில் கைகள் கூப்பியபடியே வந்து அம்மையாரைத் தொழுது எம்பிராட்டி திருமுன் நண்ணினர்கள். 29

செந்திரு நாமகள் சீர்பெ றுஞ்சசி
பந்தமில் தாபத பன்னி யாயுளார்
அந்தமில் அணங்கினர் யாரு மவ்வரை
வந்தனர் அவரவர் மகிழ்நர் ஏவலால்.

மகாலெட்சுமி, சரசுவதி, சிறப்புப்பெறும் இந்திராணி, பந்தங்களின் நீங்கிய முனிவர்கள் பத்தினிகளும் ஆகிய இவர்கள் கணக்கற்றவர்களாய் பேரழகு உடையராய் யாவரும் அந்த இமயமலைமேல் வந்தார்கள் தங்களது கணவன்மாரின் ஏவல்படி. 30

பங்கய மிசைவரு பாவை யேமுதல்
நங்கையர் யாவரும் நற்ற வத்தினல்
அங்கநொந் துறைதரும் அம்மை தாடொழா
மங்கல வதுவையின் வனப்புச் செய்தனர்.

தாமரை மலர்மேல் வரும் மகாலட்சுமி முதல் சகல தேவப் பெண்கள் யாவரும் கூடி நல்ல தவத்தைச் செய்ததினலே தனது உடல்வாடி நொந்துபோய் இருக்கும் எம்பெருமாட்டி பாதங்களை அன்போடுவணங்கி அவருக்கு மங்கலம் நிறையும் திருமணக் கோலத்திற்கேற்கும் வனப்புகள் யாவற்றையும் செய்தனர். 31

நெறிதரு தவத்துரு நீக்கிக் காமருக்
குறையுள தாகிய உமைதன் மெய்யினைக்
குறைதவிர் நிலைமையிற் கோலஞ் செய்தனர்
இறைவனை வழிபடும் இயல்பி ஞரென.

அழகுக்கு ஓர் உறைவிடம் ஆகிய உமையம்மையாரின் நெறியினை தரும் தவக் கோலத்தை நீக்கி அவரின் உடம்பினை குறையாவும் நீங்கிய நிலைமையில் அழகான பெண்கோலமாக அமையும்படி சிறப்புச்செய்து அலங்கரித்தனர். இச்செயல் அவர்கள் புரியுங்கால் எல்லாம் வல்ல ஈசனை வழிபாடு செய்வாரைப் போலவே பிராட்டியை அலங்கரித்தனர். பிராட்டியை அலங்கரித்தலானது சிவ வழிபாடு செய்வார் போலாயிற்று. தேவமாதர்கள் பார்வதி அம்மையாரது தவக்கோலத்தை நீக்கி மங்கல அபிஷேகம் செய்து கூந்தல் ஒற்றி பட்டாடை அணிந்து தலைக்கோலம் முதல் பல ஆபரணங்களை அணிந்து பின்னர் எம்பிராட்டியின் இயற்கை அழகுடைய வடிவத்திற்கு மேலும் அழகுபடுத்திய தமது செயல் நிறைவைக்கண்டு பணிந்தார்கள். 32

மேதகு பொலஞ்சுடர் மேரு மந்தரம்
ஆதிய வாகிய அலகில் சுற்றமும்
ஓதருங் கடல்களும் உரக வேந்தரும்
மாதிர யானையும் பிறவும் வந்தவே.

உயர்ச்சி பொருந்திய பொன் ஒளியுடைய மேருமலை, மந்தரமலை ஆகிய அளவு கடந்த இமயமலையும் சுற்றங்களும் சொல்லுதற்கரிய சமுத்திரங்களும் நாக அரசர்களும் திக்கு யானைகளும் ஏனையவைகளும் எம்பிராட்டியின் திருமணக் காட்சியின் பொருட்டு அங்கு வந்தன. 33

ஈங்கிது காலை தன்னில் இமகிரி புரக்கு மன்னன்
பாங்குறு தமர்க ளோடும் பரிவொடுஞ் சென்று வெள்ளி
ஓங்கலில் நந்தி யுய்ப்ப உயிர்க்குயி ரான அண்ணல்
பூங்கழல் வணங்கி நின்றுங் கினையன புகல லுற்றுன்.

இச்சமயத்தில் இமயமலையை அரசாளுகின்ற மலையரசன் தனக்கு உரிமையான சுற்றத்தாரோடு கைலைமலைமேல் போய் அங்கு திருநந்திதேவர் அவனை உள்ளே விடுதற்கு சிவபிரானுடைய அருளைப் பெற்று உட்செல்லுமாறுவிட ஆன்மாக்களாகிய அனைத்திற்கும் பரமான்மாவாய் நீக்கமற நிறைகின்ற பெருமான் பூங்கழலடியில் வணங்கி முன்நின்று இதனை மலையரசன் எடுத்துச் சொல்வான். 34

ஆதியி னுலக மெல்லா மளித்தடு மன்னை தன்னைக்
காதலின் வதுவை செய்யக் கருதினை கணித நூலோர்
ஓதுபங் குனியின் திங்கள் உத்தரம் இன்றே யாகும்
ஈதுநன் முகூர்த்தம் எந்தாய் இமையமேல் வருதி யென்றுன்.

ஆதியில் உலகமெல்லாம் தந்தருளிய தாயாகிய பார்ப்பதியம்மையைக் காதலாகித் திருமணம் செய்யத் தேவரீர் திருவுள்ளம் கொண்டீர். அவ்வாறு திருமணத்திற்கு கணிதநூலோர்களாகிய சோதிடர்களால் திறம்பாடு உடைமுகூர்த்தம் இதுதான் என சொல்லப்படும் பங்குனி மாசத்து உத்தர நட்சத்திரம் இன்றேயாகும். இது நல்ல முகூர்த்தம். எந்தை பிரானே! இமயமலை மேல் பிராட்டியைத் திருமணம் செய்யும் பொருட்டு எழுந்தருளி வருவீராக என வேண்டினுன். 35

அல்லுறழ் கண்டத் தெந்தை யரசனைநோக்கி யின்னே
எல்லையில் கணங்கள் சூழ இமையமேல் வருதும் முன்னஞ்
செல்லுதி யென்ற லோடுந் திருவடி வணங்கிப் போற்றி
வல்லையின் மீண்டு போய்த்தன் வளநகர் இருக்கை புக்கான்.

அப்போது நஞ்சைக் கண்டத்திலே தரித்த எந்தை பெருமான் மலையரசனை நோக்கி, மலையரசனே! இப்பொழுதே எல்லை காணமுடியாத பூதகணங்கள் சூழும்படியாக யாம் இமயமலையில் வருவோம். நீ முன்னுகச் செல்வாயாக என்று கூறியருளலோடும் மலையரசன் எம்பிரான் திருவடி மலர்களை வணங்கிப் போற்றிசெய்து அதிவிரைவாக இருப்பிடமான இமயத்தைச் சார்ந்த வளம்பொருந்திய நகருக்குச் சென்றுன். 36

வரைபுனை படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-725.

# 9. கணங்கள் செல் படலம்

அந்த வேலையிற் கயிலையில் எம்பிரா னருளால்
நந்தி தேவரை விளித்துநம் மணச் செயல் நாட
முந்து சீருடை யுருத்திர கணங்கள்மான் முதலோர்
இந்தி ராதியர் யாரையுந் தருதியென் றிசைத்தான்.

அந்த வேளையில் கைலைமலையில் வீற்றிருந்தருளும் எம்பெருமான் நந்திதேவரை அருளால் அழைத்து நோக்கி நம்முடைய திருமணச்செயலை நாடித் தரிசிக்க முந்திய சீருடைய உருத்திர கணங்களையும் விஷ்ணு மூர்த்தி பிரமன் முதல் இந்திராதியர் யாவரையும் இங்கு வரவழைத்து தந்திடுவாயாக என இசைத்தார். 1

இன்ன லின்பமின் றாகிய பரமன்ஈ துரைப்ப
நன்ன யப்புட னிசைந்துபின் நந்தியெம் பெருமான்
அன்னர் யாவரும் மணப்பொருட் டுற்றிட அகத்துள்
உன்னல் செய்தனன் அவரெலா மவ்வகை யுணர்ந்தார்.

இன்பம் துன்பம் ஆகிய எவையும் தனக்கில்லாத பகவான் ஈதை உரைப்ப நந்தி தேவர் நல்ல நயமான உள்ளத்தோடும் இசைவுகொண்டு அங்கு யாவரும் திருமணம் தரிசிக்கும்பொருட்டாக கைலைமலை சேரும்படி தமது உள்ளத்து நினைந்தருளினர். அவ்வாறு நந்தியெம்பெருமான் நினைந்தருளுதலும் அந்த உருத்திரமூர்த்திகள் முதல் விஷ்ணுமூர்த்தி பிரமன் முதல் இந்திராதியர் யாவரும் நந்தியெம்பெருமான் தம்மை நினைந்தமையை தாங்கள் உணர்ந்தனர். 2

உலக முய்ந்திட் டெம்பிரான் மணம் புரியுண்மை
புலன தாதலும் அவனருண் முறையினைப் போற்றி
மலியும் விம்மிதம் பத்திமை பெருமிதம் மகிழ்ச்சி
பலவும் உந்திடக் கயிலையை முன்னியே படர்வார்.

உலகம் உய்ந்திடும்படி எம்பெருமான் திருமணம் புரியும் உண்மை தமது உள்ளப் புலன்களில் தெளிவாகுதலும் ஈசன் அருண்முறையை நினைந்து போற்றிசெய்து உள்ளத்து விம்மித நீரராகி பத்திமைகொண்டு தங்களையும் அழைத்தமைக்காகப் பெருமிதங்கொண்டு மகிழ்வான பல மேம்பாடு நிலைகள் பெருகி அவர்களை மேற்செல்லுமாறு தூண்ட யாவரும் கைலையையே எண்ணியவாறு மெதுவாக வந்து சேர்வாராயினர். 3

பாலத் தீப்பொழி விழியுடைப் பஞ்சவத் திரனே
மூலத் தீப்புரை விடைப்பெருங் கேதுவே முதலாஞ்
சூலத் தீக்கரத் தாயிர கோடியோர் சூழக்
காலத் தீப்பெயர் உருத்திரன் வந்தனன் கடிதில்.

அக்கினிப் பொறியைச் சிந்துகின்ற நெற்றிக் கண்ணுடைய பஞ்சவத்திரன் எனும் உருத்திரனும் வடவாமுகாக்கினியை ஒத்த பெரிய இடபகேது எனும் உருத்திர மூர்த்தியும் முதலாகச் சொல்லப்படுகின்ற கொடிய சூலப்படையை கையிலே ஏந்திய ஆயிரங் கோடி உருத்திரர் தம்மைச் சூழும்படியாக காலாக்கினி உருத்திரமூர்த்தி அதிவிரைவாக கைலைமலையில் வந்தான். 4

சுழல லுற்றிடு சூறையும் வடவையுந் தொலைய
முழுது யிர்த்தொகை அலமர வுயிர்க்குமொய்ம் புடையோர்
எழுப திற்றிரு கோடிபா ரிடத்தொகை யீண்ட
மழுவ லத்தின னுயகூர் மாண்டனும் வந்தான்.

சுழன்று அடித்து வீசும் சூறுவளிக்காற்றும் வடவாமுகாக்கினியும் தொலையவும் உலகில் உள்ள முழு உயிர்த்தொகையும் அலமந்து ஏங்க மூச்சுவிடும் வலியுடைய நூற்றி நாற்பது கோடி பூதங்கள் தன்னைச் சூழ மழுவாயுதத்தை வலக்கையிலேந்திய கூர் மாண்ட உருத்திர மூர்த்தியும் வந்தான். 5

நீடு பாதலத் துறைபவர் நெற்றியங் கண்ணர்
பீடு தங்கிய பல்வகை நிறத்தவர் பெரியர்
கோடி கோடியா முருத்திர கணத்தவர் குழுவோடு
ஆட கேசனு முருத்திரன் கயிலையில் அடைந்தான்.

நெடிய பாதாளத்து உலகில் வசிப்பவர்களும், நெற்றியில் கண் உடையவரும், பெருமை தங்கிய பல நிறத்தை உடையவரும், பெரிய வடிவினை உடையரும் ஆகிய கோடியாம் உருத்திர கணங்கள் சூழ்ந்து வரும்படி ஆடகேசன் என்னும் பெயருடைய உருத்திரமூர்த்தி கைலைமலையை அடைந்தான். 6

கோர மிக்குயர் நூறுபத் தாயிர கோடி
சார தத்தொகை சூழ்தரச் சதுர்முகன் முதலோர்
ஆரு மச்சுறச் சரபமாய் வந்தருள் புரிந்த
வீர பத்திர வுருத்திரன் வந்தனன் விரைவில்.

கோரம் மிக்கதாய உக்கிரம் கொண்ட சிறந்த பத்து இலக்கம் கோடி பூத கணங்கள் சூழும்படியாக பிரமதேவன் முதலோர் யாரும் அஞ்சும்படியாக முன்னொரு கால் சரபப் பட்சி வடிவு கொண்டுவந்து தேவர்கட்கு அருள் புரிந்த வீரபத்திர உருத்திர மூர்த்தியும் விரைவாக வந்தருளினர். 7

விண்டு காங்குறு முலகுயிர் முழுதுமோர் விரலிற்
கொண்டு தாங்குறு குறட்படை கோடிநூ றீண்டப்
பண்டு தாங்கலந் தரியரன் இருவரும் பயந்த
செண்டு தாங்குகைம் மேலையோன் மால்வரை சென்றான்.

விஷ்ணு மூர்த்தியினல் பரிபாலிக்கப்படுகின்ற உலகு உயிர் முழுவதையும் ஒரு விரலிலே ஏந்திக்கொண்டு தாங்கும்படியான குறள் வடிவினையுடைய பூத கணங்கள் நூறுகோடி சூழ்ந்து வர முன்பொருநாள் சிவபிரானும், மோகினி வடிவுகொண்ட விஷ்ணு மூர்த்தியும் கலந்த போது தோன்றிய அரிகர புத்திரன் என்னும் ஐயனரும் செண்டினை கையிலே ஏந்தியபடியாக சிவபிரானது கைலைமலை சேர்ந்தார். 8

முந்தை நான்முகன் விதிபெறுன் மயங்கலும் முக்கட்
டந்தை யேவலால் ஆங்கவன் நெற்றியந் தலத்தின்
வந்து தோன்றிநல் லருள் செய்து வாலுணர் வளித்த
ஐந்து மாறுமா முருத்திரர் தாமும்வந் தடைந்தார்.

முன்னாள் ஒரு பிரமன் தனது படைப்பு சரிவராது மயங்கலும் அவரது துயர நிலை நீங்கும்படி தந்தையாகிய சிவபிரான் ஏவலால் பிரமதேவரின் நெற்றித் தலத்திலே தோன்றி அவருக்கு படைப்பு கூடுமாறு அருள் செய்து, அப்பிரமனுக்கு நல்லுணர்வு கொடுத்த பதினொரு உருத்திரரும் கைலையில் வந்தார். 9

இத்தி றத்தரா முருத்திரர் அல்லதை யேனை
மெத்து பல்புவ னங்களு மளித்தவண் மேவி
நித்தன் அன்புறும் உருத்திர கணங்களும் நெறிசேர்
புத்தி யட்டக முதல்வரும் வந்தனர் பொருப்பில்.

இத்திறத்தவாகிய உருத்திரர்களல்லாது ஏனைய அநேக உலகங்களை காவல் பூண்டு அங்கு பொருந்தி இரட்சிக்கின்ற நித்தராகிய சிவபிரான் அன்புறுகின்ற உருத்திர மூர்த்திகளும் நெறி சேர்ந்து ஒழுகுகின்ற புத்தி அட்டக முதல்வர் ஆகும் எட்டு உருத்திர மூர்த்திகளும் வந்தனர்.

புத்தி அட்டக முதல்வரானவர்கள்: புத்தி தத்துவத்திலுள்ள சூக்கும புவனங்கள் எனும் பைசாசம், இராட்சசம், யாஷ்சம், காந்தருவம், மகேந்திரம், சௌமியம், பிராசேசுவரம், பிராமம் எனும் எட்டுப் புவனங்களாம். இவர்கள் பெயர்கள்: அநந்தன், சூர்குமன், சிவோத்தமன், ஏகநேத்திரன், ஏகருத்திரன், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டன், சிகண்டி என்பவர்கள்.

அநாசிருதை முதல் காலாக்கினி ஈறுக உள்ள இருநூற்றி இருபத்தி நான்கு புவனங்களுள் முன்சொல்லப்பட்ட உருத்திரமூர்த்தி ஒழிந்த மற்றையோர் எல்லாரும் வந்தார்கள். 10

தொட்ட தெண்கடல் யாவையுந் துகளினால் தூர்க்கும்
எட்டு நூறெனுங் கோடிபா ரிடத்தொகை யீண்டக்
கட்டு செஞ்சடைப் பவர்முத லாகவே கழறும்
அட்ட மூர்த்திகள் தாங்களும் ஒருங்குடன் அடைந்தார்.

சகரால் தோண்டப்பட்ட தெள்ளிய சமுத்திரங்கள் யாவற்றையும் தமது கால் தூசினால் அடைத்து மூடிவிடுகின்ற எண்ணூறு கோடி பூதங்கள் சூழ கட்டப்பட்ட சிவந்த சடையை உடைய பவன், சருவன், ஈசானன், பசுபதி, பீமன், மகாதேவன், உக்கிரன், உருத்திரன், எனும் எட்டு மூர்த்திகளும் ஒருங்குசேர உடன்வந்தார்கள். 11

ஏறு கொண்டிடு தெழிப்பினர் எம்பிரான் விழிநீர்
நாறு கொண்டுள கலத்தொடு பொடிபுனை நலத்தோர்
நூறு கொண்டிடு கோடிபூ தத்தொடு நொடிப்பின்
வீறு கொண்டகுண் டோதரன் போந்தனன் வெற்பில்.

இடி இடித்தாற்போல சத்தமிடுகின்றவர்களும் எம்பிரானுடைய திருவிழியின் நிகரானது என்னும் பெருமை உடைய உருத்திராக்கத்தையும் திருநீற்றையும் அணிகின்ற நலம் உடையவரும் ஆகிய நூறுகோடி என்னும் தொகைப்பட்ட பூதத் தொகையோடு வீறு கொண்ட குண்டோதரன் என்னும் பூத சேனாதிபதியும் கைலை மலைமேல் வந்தான்.

உருத்திராக்க வரலாறு: முன்னொரு காலத்தில் இரும்பு, பொன், வெள்ளி என்னும் மதில் கொண்டு அந்தரத்துத் திரிந்து தேவர்களைத் துன்புறுத்துகிறார்கள் மூன்று அசுரர்கள். ஆனால் அசுரர்கள் மூவரும் சிவபிரானிடத்து அன்புடையவர்கள். அசுர

ரால் இடுக்கண்பட்ட தேவர்கள் சிவபிரானை சரண் அடைந்து அந்த அசுரரைச் சங்க
ரிக்கும்படி வேண்ட அப்போது எம்பிரான் அடைக்கலம் புகுந்தோரைக் காத்தல்
வேண்டும். ஆனால் நம்மேல் அன்புவைத்த அசுரரைக் கொல்லுதலும் தவறாகும் எனத்
திருவுளத்து எண்ணி மௌனமாகி ஆயிரந்தேவ வருஷம்காறும் தமது மூன்று திருக்
கண்களையும் மலர்த்தியபடி விழித்திருப்ப அப்போது எம்பிரான் திருக்கண்ணினின்றும்
கண்ணீர் பெருகியது. அந்த நீரிலிருந்து உருத்திராக்க மணிகள் தோன்றின. ஆகவே
அவைகள் இறைவன் கருணைக்கு அடையாளமானவை. உருத்திராக்கத்தை அடையா
ளம் எனவும் பெரியோர்கள் சொல்வர். 13

அண்டம் யாவையும் உயிர்த்தொகை யனைத்தையும் அழித்துப்
பண்டு போலவே தந்திட வல்லதோர் பரிசு
கொண்ட சாரதர் நூற்றிரு கோடியோர் குழுமக்
**கண்ட கன்னனும் பினாகியும் வந்தனர் கயிலை.**

அண்டங்கள் யாவற்றையும் உயிர்த்தொகை அனைத்தினையும் அழித்து பின்னர்
முன்போலவே படைத்து உண்டாக்க வல்லதோர் அருள் தன்மைகொண்ட இருநூறு
கோடி பூதங்கள் குழுமிக்கூடிவர, கண்ட கன்னன், பினாகி என்கின்ற பூதசேனாதிபதி
யரும் வந்தனர் கயிலையில். 13

ஆன னங்களோ ராயிரம் இராயிரம் அங்கை
மேனி வந்தபொன் மால்வரை புரைநிற மேவித்
தானை வீரர் நூற்றைம்பது கோடியோர் சாரப்
**பானு கம்பனுந் தலைவன்ஒண் கயிலையிற் படர்ந்தான்.**

ஆயிரம் முகங்களையும் அழகிய இரண்டாயிரங் கைகளையும் உடையவனாய் மேலே
வளர்ந்து ஓங்கிய பொன்மலையை ஒத்த நிறம் மேவிக்கொண்டு பூதசேனைவீரர் நூற்றி
ஐம்பது கோடியோர் சூழும்படியாக பானுகம்பன் என்னும் பூதசேனாதிபதியும் கயிலை
யில் எம்பிரானைத் தியானித்தவாறு வந்தான். 14

தங்கள் சீர்த்தியே மதித்திடு கடவுளர் தலையும்
பங்கி யாகிய கேசமும் படைகளும் பறித்துத்
துங்க மெய்திய கணங்கள் பல் கோடியோர் சூழச்
**சங்கு கன்னன்வந் திறுத்தனன் தடவரை தன்னில்.**

தங்கள் சிறப்பையே மதிக்கும் கடவுளர்களையும் அவரின் தலைமீதுள்ள உயிரினை
யும் கையிலுள்ள படைகளையும் பறித்து அதனால் உயர்ச்சியைப் பெற்ற பலகோடி
பூதகணங்கள் சூழ்ந்து வரும்படியாக சங்கு கன்னன் என்னும் பூதசேனாதிபதியும் வந்
தனன் திருக்கைலாசமலைமேல். 15

**காள கண்டனுந் தண்டியும் நீலனுங் கரனும்**
வாள்வ யம்பெறு விச்சுவ மாலியும் மற்றும்
ஆளி மொய்ம்பின ராயபல் பூதரும் அனந்தம்
நீளி ருங்கடற் றானையோ டணைந்தனர் நெறியால்.

காளகண்டன், தண்டி, நீலன், கரன், வாட்போரில் வெற்றி கொண்ட விச்சுவ
மாலி ஆகியவரும் சிங்கவலியை உடையவரும், பருத்ததோள் கொண்ட பல பூதரும்
அவரவரோடு அநந்தமாகிய பெரிய நீண்ட கடல்போன்ற பூதசேனையோடும் வந்த
னர் நெறியாகக் கைலைமலைமேல். 16

கூற்றின் மொய்ம்பினைக் கடந்திடு சாரதக் குழுவோர்
நூற்று முப்பது கோடியோர் சூழ்ந்திட நொய்தின்
மாற்ற லார்புரம் அட்டவன் தாளிணை வழிபட்
டேற்ற மிக்கஈ சானன்அக் கயிலையில் இறுத்தான்.

இயமதேவனுடைய வலிமையையும் வென்றிட வல்ல பூதங்கள் நூற்றிமுப்பது கோடியோர் சூழ்ந்திடும்படி விரைவாக வழிக்கொண்டு பகைவர்களது முப்புரங்களை யும் அழித்த சிவபிரான் திருவடி வழிபட்டவாறு ஏற்றம் மிக்க ஈசான உருத்திர மூர்த்தியும் கையிலைமலையில் வந்து சேர்ந்தருளினன். 17

எகின மாகிய மால்அயன் வாசவன் இமையோர்
புகலு மாதிரங் காவலர் கதிர்மதி புறக்கோள்
மிகைய தாரகை அன்னைகள் வசுக்கள்வே றுள்ளார்
மகிழும் விஞ்சையர் முனிவரர் யாவரும் வந்தார்.

முன்பு ஒருகால் வேதங்களை வெளிப்படுத்தற்பொருட்டு அன்னப்பட்சி உருவு கொண்ட விஷ்ணுமூர்த்தியும், பிரமதேவரும், இந்திர தேவனும், தேவர்களும் எவ ராலும் கூறப்படுகின்ற எட்டு திக்குப்பாலகர்கள் ஆகிய இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, ஈசானன் என்பவரும் சூரியனும் சந்திரனும் செவ்வாய் புதன், சுக்கிரன், வியாழன், சனி முதலிய கிரகங்களும் மேன்மையுடைய அசுவினி, பரணி, கார்த்திகை முதல் இருபத்தேழு நட்சத்திரங்களும் பிராமி, மகேஸ்வரி. கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டி, எனும் ஏழு மாதர்களும், அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரண், துருபன், பிரத்தியூசன், பிர பாசன் எனும் எட்டு வசுக்களும் ஆகிய யாவரும் வந்தார். 18

வாலி தாகிய மறைகள்ஆ கமங்கள்மந் திரங்கள்
ஞால மாதிய பூதங்கள் உலகங்கள் நகர்கள்
கால மானவை ஏனைய பொருளெலாங் கடவுட்
கோல மெய்திவந் திறுத்தன கயிலையிற் குறுகி.

தூய்மையினையுடைய நான்கு வேதங்கள் தேவ வடிவாயும், இருபத்தெட்டு ஆக மங்களும், ஏழு கோடி எனும் மந்திரங்களும், பூமியும், நீரும், காற்றும், ஆகாயமும் ஆகிய பூதங்களும் மேல் ஏழு, கீழ் ஏழு எனச் சொல்லப்படும் பதினறு உலகங்களும்' உலகங்களில் உள்ள நகரங்களும், காலங்களும் பிற பொருள்களும் ஆகிய எல்லாம் தேவவடிவங்களைக் கொண்டு திருக்கயிலாச மலையில் அணுகி வந்து தங்கின. 19

காலம் என்பது:—வருடம், அயனம், சட்சம், மாசம், பருவம் முதலியன.

இந்த வாற்றினுற் கயிலையில் யாவரும் யாவும்
வந்த தன்மையை நோக்கியே ஆற்றவு மகிழ்ந்து
நந்தி யுள்புகுந் தமலனுக் கித்திறம் நவில
முந்தை அன்னவர் யாரையுந் தருகென மொழிந்தான்.

திருக்கைலாச மலையில் உயிர்ப்பொருளாகிய உருத்திரமூர்த்தி முதல் யாவரும் சடப்பொருட்கள் எனும் வேதங்கள், காலங்கள் ஆகிய எல்லா உயர்திணைப் பொருட் களும், அஃறிணைப் பொருட்களும் தான் நினைத்தவாறே வந்து சேர்ந்தமையை நந்தி யெம் கடவுள் பார்த்து பெரிதும் மகிழ்வாகி எம்பிரான் கோயில் உள்புகுந்து சிவ பிரானுக்கு இத்திறத்தை எடுத்து சொல்லி நிற்ப அது கேட்டருளிய முழுமுதற் கட வுளாகிய எம்பெருமான் அங்கு வந்தோர் யாவரையும் ஈண்டு அழைத்து வருக என திருவாய் மலர்ந்தருளினர். 20

புராரி யித்திறம் மொழிதலுஞ் சிலாதஞர் புதல்வன்
ஓராய்மு தற்கடை குறுகியே உருத்திர கணங்கள்
முராரி யாதியாம் விண்ணவர் முனிவரெல் லோரும்
விராவு நீர்மையிற் சென்றிடக் கோயிலுள் விடுத்தான்.

முப்புரங்களையும் எரித்தருளிய சிவபிரான் இத்திறம் மொழிதலும் அப்போது சிலாதன முனிவருடைய மகஞகிய நந்தியெம் பெருமான் முதற் கடைவாய்தலில் வந்து உருத்திரகணங்களும் விஷ்ணுமூர்த்தி பிரமன் முதல் தேவர்கள் முனிவர்கள் எல்லோரும் ஒழுங்கானமுறையில் செல்லுமாறு எம்பிரான் கோயிலினுள் விடுத்தருளினர். 21

விடுத்த காலையில் அரியணை மீமிசை விளங்கிக்
கடுத்த யங்கிய கண்டன்வீற் றிருப்பது காணூஉ
அடுத்த வன்புடன் யாவரும் இறைஞ்சியே அவன்சீர்
எடுத்து நீடநின் றேத்தியே அணுகினர் இமைப்பில்

இவ்வாறு திருநந்திதேவர் விடுத்த காலையில் சிம்மாசனத்தின்மீது விளங்கியவாறு நஞ்சுதங்கிய கண்டத்தை உடைய எமது ஐயர் இருத்தலை எல்லாரும் கண்டாராய் உள்ளத்து பெருகுகின்ற ஆனந்தமயமான அன்புடன் யாவரும் இறைஞ்சி அப்பனுடைய சிறப்புக்களை எடுத்து எடுத்து நெடுநேரமாக நின்று துதித்து விரைவாக இமைப்பொழுதில் பெருமானை வந்து சேர்ந்தார்கள். 22

நீண்ட சீருருத் திரர்தமை நிறைந்தபல் கணத்தை
ஈண்டு தேவரை முனிவரை வீற்றுவீற் றிசையா
ஆண்டு தன்விரற் சுட்டியே ஆதிநா யகற்குக்
காண்டல் செய்துநின் றேத்தினன் வேத்திரக் கரத்தோன்.

மிகுந்த சிறப்புப்பொருந்திய உருத்திரமூர்த்திகளை நெருங்கி சேர்கின்ற தேவர்களை முனிவர்களை வெவ்வேருக அவரது பெயரினைச் சொல்லி அவ்விடத்து தனது விரலைச் சுட்டியவாறு ஆதியாகிய நாயகருக்கு அவரவர்களைக் காண்பித்து எம்பிரானுக்கு அவ்விடத்து வந்தாரை எல்லாம் அறிமுகம் செய்து ஒவ்வோர்காலும் வணக்கம் செய்தார் பிரம்பைக் கையில் ஏந்திய நந்தியம் கடவுள். 23

ஆர முற்பெயர் அண்ணல்கூர் மாண்டன்ஆ டகத்தோன்
வீர பத்திரன் முதலுருத் திரகண மேத்தப்
பாரி டத்தவர் யாவரு மெம்பிரான் பாங்கிற்
சேர லுற்றுநின் றேத்தினர் பணிந்தசிந் தையராய்.

காலாக்கினி உருத்திரமூர்த்தியான அண்ணலும், கூர்மாண்டர், ஆடகேசர், வீரபத்திரப்பெருமான் ஆதிய முதன்மையான உருத்திரரும் மேன்மைபூண்ட பூதகணங்களும் யாவரும் எம்பிரான் பக்கராக வந்து வந்து சேரலுற்ருர்கள், எம்பிரானை வணங்கியவாறு பணிவுகொண்ட சிந்தையுடையவர்களாய். 24

அன்ன காலையில் நான்முகன் எம்பிரான் அணிவான்
உன்னி யேமுடி முதலிய பல்கல னுதவிப்
பொன்னி னுயதோர் பீடிகை யிற்கொடு போந்து
முன்ன ராகவைத் திறைஞ்சியே இத்திறம் மொழிவான்.

அன்ன காலையில் நான்கு முகங்களை உடைய பிரமதேவர் எம்பெருமான் அணியும்படியாக தமது மனத்தால் நினைந்து எம்பிரான் மணவாளக்கோலம் கொள்ளும் பொருட்டு அணியும் அலங்கார அணிகலன்களான திருமுடி ஆபரண வகை யாவை

யையும் தாம் உண்டாக்கி பொன்னிற் செய்த ஓர் பீடத்தின்மேல் இப்பொருள்களை வைத்து அதனைக்கொண்டு சுவாமி திருமுன்பு சென்று முன்னராக வைத்து வணங்கி இத்தன்மையாக பிரமதேவர் சொல்லியருள்கிறுர். 25

ஐய கேளுனக் கில்லையாற் பற்றிகல் அடியேம்
உய்யு மாறிவண் மணஞ்செய வுன்னினை உன்பால்
மையல் மாசுணப் பணியெலா மாற்றிமற் றிந்தச்
செய்ய பேரணி அணிந்தரு ளென்று செப்பினனே.

''ஐயனே கேட்பீராக உமக்கு விருப்பு வெறுப்பு இல்லை ஆயினும் அடியேங்கள் உய்யுமாறு இவ்விடத்து தேவரீர் திருமணம்செய நினைந்தீர் ஆகவே ஐயனே உன் பால் இப்போ அணிந்திருக்கும் மயக்கத்தைத் தருகின்ற பாம்பாகிய அணிகலன்களை மாற்றி இந்தச் செம்மைவாய்ந்த ஆபரணம் முடி இவைகளை அணிந்தருள்வீராக'' என்று வணக்கத்தோடு சொன்னுன். 26

பங்க யாசனன் குறையிரந் தினையன பகர
அங்கண் மூரல்செய் தன்புடன் நீயளித் திடலால்
இங்கு நாமிவை அணிந்தென மகிழ்ந்தன மென்னுச்
செங்கை யாலணி கலத்தினைத் தொட்டருள் செய்தான்.

இவ்வாறு தாமரை மலர்மேல் ஆசனராகிய பிரமதேவர் குறைஇரந்து இனையன சொல்ல அதைக்கேட்டருளிய எம்பிரான் புன்சிரிப்புக் கொண்டருளி பிரமனே நீ அன்புடன் எமக்குக் கொடுத்தருளியபடியால் நாம் இவற்றை அணிந்தனம்! மகிழ்ந் தனம் எனத் தமது செய்கையால் அந்த அணிகலன்களைத் தொட்டு அருள் செய்தார் எங்கள் கடவுள். 27

பிரமன் அன்புகண் டிவ்வகை யருள்செய்த பின்னர்
ஒருதன் மெய்யணி பணிகளே யணிகளா யுறுவான்
திருவுளங்கொள அவ்வகை யாகிய செகத்தை
அருள்பு ரிந்திடு பராபரற் கிச்செயல் அரிதோ.

இவ்வாறு அருள்செய்த பின்னர் எம் பிரமதேவரின் அன்பான செயலைக்கண்டு பெருமான் தமது ஒப்பற்ற திருமேனிமேல் பொலியும் நாக பாம்புகள் மண்டை ஓட்டு மாலைகள் ஆகிய யாவும் இப்போ அளவிடற்கரும் அழகுடை ஒளிகொண்ட இரத்தின ஆபரணமாக மாறும்வகை திருவுளங்கொள அவ்வாறுக அப்பாம்பு என்பு யாவும் திடீ ரென பேரழகுடை ஆபரணங்களாக மாறின. இந்த உலகம் முதல் யாவையும் தோற்றுமாறு அருள் தருகின்ற முதல்வருக்கு ஈதோர் அரிதாமோ. 28

கண்டி யாவரு மற்புத மடைந்துகை தொழலும்
வண்டு லாங்குழற் கவுரிபா லேகுவான் மனத்திற்
கொண்டு பாங்குறை தலைவருக் குணர்த்தியே குறிப்பாற்
பண்டு மாலயற் கரியவன் எழுந்தனன் படர.

இவ்வாறு இறைவன் திருமேனி மணவாளனுகக் கலியாண சுந்தரக் கோலத்தை யாவரும்கண்டு அற்புதராகி கைகூப்பி வணங்கித்தொழலும் எமது ஐயர் வண்டுகள் மொய்க்கின்ற பூச்சூடிய கூந்தலை உடைய கௌரி அம்மையார்பால் ஏகுவதற்கு மனத் தில் கொண்டு பக்கராக வணங்கி நிற்கும் உருத்திரகணத் தலைவருக்கு தனது கருத்தை குறிப்பால் உணர்த்தி முன்னர் பிரமவிஷ்ணுக்களுக்கும் நாடற்கரிய பக வான் அம்பாளைத் திருமணம் செய்யும்பொருட்டாக இமயமலைசார எழுந்தார்.

கணங்கள் செல் படலம் முற்றிற்று

# 10. திருக் கல்யாணப் படலம்

[எல்லா உயிர்க்கும் உயிராகிய ஈசன் எல்லார்க்கும் தாயாகிய அருள் முதல்வியாகிய அம்மையைத் திருமணம் செய்தலால் திருக்கல்யாணப் படலம் என ஆயிற்று.]

நாற்ற டம்புயக் கண்ணுதல் நந்தியெம் பெருமான்
போற்றி முன்செல அமரரும் முனிவரும் புகழ
வேற்ற தும்புரு நாரதர் விஞ்சையர் யாரும்
பாற்றி யக்கமும் நீழலு மாமெனப் பாட.

நான்கு விசாலித்த தோள்களையும் நெற்றிக்கண்ணையும் உடைய நந்தியெம் பெருமான் சுவாமி புறப்படவும் சுவாமியைப் போற்றியவாறு முன்னே சென்றார். தேவர்களும் முனிவர்களும் எம்பெருமான் புகழ்களை பாடித் துதித்தார்கள். இசைக்கு ஏற்றமான சிறப்பினை உடைய தும்புருவர், நாரதர், விஞ்சையர்கள் ஆகிய யாவரும் பருந்து பறந்து செல்லும்போது அதன் நீழல் எவ்வண்ணம் தொடருமோ அதேபோல சுருதி ஓசை அமைதி ஆகிய இவை ஒருவர் செயலோடு ஒருவர் செயல் பிரிவில்லாதபடி பாடி வரலாயினர். 1

சொன்ம றைத்தொகை ஆகம முதலிய துதிப்பப்
பொன்மை பெற்றதன் கோநகர் நீங்கியே பொற்றாள்
வன்மை பெற்ற குண் டோதரன் மொய்ம்பிடை வைத்துச்
சின்ம யத்தனி மால்விடை ஏறினன் சிவனே.

சொல் வடிவில் ஓதப்படும் தொகையான வேதங்கள் ஆகமங்கள் தாமாகவே எழுந்து துதித்து வரும்படியாகவும் பொன் மயமான தனது கைலைமலைக் கோவில் நகரத்தை மணவாளராகிய எம்பிரான் விட்டு நீங்கியருளி வாய்த்தலில் சேர்ந்தருளி தமது மிருதுவான திவ்விய பொற்பாதத்தை வலிமை பெற்ற குண்டோதரன் என்னும் பூத சேனாதிபதியின் தோளிலே வைத்து ஞான வடிவங் கொண்ட தனியான இடபத்தின் மேலாக ஏறியருளிக் கொண்டார் சிவபிரான். 2

விடையின் மீமிசைத் தோன்றியே யெம்பிரான் விளங்கப்
புடையின் வந்தவ ரல்லது திருநகர்ப் புறத்துக்
கடையின் நின்றவர் யாவருங் கண்டுகண் களியா
அடைய வேபணிந் தேத்தினர் அளக்கரின் ஆர்த்தார்.

இடப வாகனத்தின் மேலாக அழகு பொலியும் கோலத்துடன் எம்பிரான் தோன்றியருள அதனைக் கண்டு எம்பிரானைப் புடை சூழ்ந்தவர்களும் மற்றும் திருநகர்ப் புறத்து வெளியே நின்றார்களுமாகிய எல்லாரும் கண்டு கண்களித்து சிந்தை மலர்ந்து எம்பிரானைப் பணிந்து ஏத்தி அளவற்ற ஆனந்தமயத்தால் சமுத்திரம் இரைவது போல ஆர்த்தார். 3

நந்தி மேல்கொண்டு நந்திமே வுறுதலும் நந்தித்
தந்தி மாமுகத் தவுணர்கோன் அலமரத் தடிந்தோன்
ஐந்து நூற்றெழு கோடிபூ தப்படை யணுக
வந்து வந்தனை செய்துமுன் போயினன் மாதோ.

இடப வாகனத்தின் மேற்கொண்டு எல்லார்க்கும் முதல்வராகிய சிவபிரான் மேவி வரலும் அப்போது துயர் புரியும் யானை முகம் உடைய கயமுகாசுரன் என்னும் அசுரன் அலமந்து ஏங்க அவனைக் கொன்றருளிய யானைமுகம் உடைய விநாயகப் பெருமான் அவ்விடத்து ஐந்நூற்று ஏழு கோடி பூத கணங்கள் தன்னைச் சூழும்படி எழுந்தருளி வந்து தந்தையாகிய பெருமானை வந்தனை செய்துவிட்டு முன்னாகச் சென்றருளினர். 4

கதிருஞ் சோமனுங் கவிகையுஞ் சீகரங் காலும்
உததி யண்ணல்சாந் தாற்றியும் உம்பர்தங் கோமான்
புதிய கால்செயும் வட்டமு மெடுத்தனர் புடைபோய்
முதிரும் ஆர்வமோ டப்பணி புரிந்தனர் முறையால்.

இவ்வாறாகிய நேரத்து சூரிய தேவனும் சந்திர தேவனும் எம்பிராற்கு குடையைப் பிடித்தார்கள். வாயு பகவான் வெண்சாமரை வீசினர். சமுத்திரராசனாகிய வருண பகவான் பூந்தாது மகரந்தம் முதலிய நிறைந்த சந்தனத்திவலைகளை தெளித்தும் தேவர்க்கரசனான இந்திரன் புதிதாகிய காற்றைத் தரும் ஆலவட்டம் வீசியும் இவ்வாறு எம்பிரான் பாங்கராக உள்ளத்து முதிர்ந்த ஆர்வத்தோடும் இப்பணிகளை முறையாகவே மேற்கொண்டு வரலாயினர். 5

பேரி கொக்கரை சல்லிகை கரடிகை பீலி
சாரி கைத்துடி தண்ணுமை குடமுழாத் தடாரி
போரி யற்படு காகளம் வயிர்முதற் புகலுஞ்
சீரி யத்தொகை இயம்பினர் பாரிடத் திறலோர்.

பேரிகையும், கொக்கரை என்னும் வாத்தியமும், சல்லாரியும், கரடிகையும், பீலியும், இருபுறமும் வட்டமாகிய உடுக்கும், மத்தளமும், குடமுழாவும், தடாரியும், போர்க்களத்து முழக்கம் போல் ஓசைபடு காகளம் என்னும் வாத்தியமும், கொம்பு வாத்தியமும் ஆகச் சொல்லப்படும் இந்த வாத்தியங்களை அநேக பூதவீரர்கள் ஏந்தி பெரு முழக்கம் செய்தார்கள். 6

அத்தன் ஏவலால் உருத்திரர் குழுவுமா லயனும்
மெய்த்த வம்புரி முனிவரும் ஏனைவிண் ணவரும்
மொய்த்த தேரொடு மானமாப் புள்ளிவை முதலாந்
தத்த மூர்திமேல் கொண்டனர் செய்பணி தவாதோர்.

அப்போது எங்கள் பெருமானுடைய ஏவலின்படி உருத்திரருடைய கூட்டமும் நாராயணக் கடவுளும் பிரமதேவரும் போலியின்றி உண்மையான தவத்தைச் செய்யும் முனிவரும் இன்னும் மற்றைய தேவர்களும் ஆகிய இவர்களெல்லாம் அங்கு மொய்த்து வரிசைப்பட நின்ற தேர்மீதும் புஷ்பக விமானங்கள் மீதும் பட்சிகளான வாகனங்கள் மீதும் எவையெவை தமக்கு உற்ற வாகனமாக அமைந்தனவோ அவைகள்மீது தாங்கள் ஏறிக் கொண்டார்கள். ஆனால் இந்த வாகனங்களில் அமர்ந்தாலும் தாம்தாம் செய்யும் பணிகளைத் தவறாது புரிவாராயினர். 7

தாழ்ந்து தன்பணி புரியுமத் தலைவருந் தவத்தாற்
காழ்ந்த நெஞ்சுடைப் பூதரு மேனைய கணமுஞ்
சூழ்ந்து சென்றிடக் கயிலையை அகன் றுதொல் லுலகம்
வாழ்ந்தி டும்படி யேகினன் இமையமால் வரைமேல்.

எம்பெருமானைத் தாழ்ந்து வணங்கித் தம்பணி புரிகின்ற தலைவர்களும், தவத்தினால் திடமான சித்தங்கொண்ட பூதர்களும், ஏனைய கணங்களாய் உள்ளாரும் எம்பிரானைச் சூழ்ந்து வணங்கி வரும்படியாக சிவபிரான் திருக்கைலாய மலையை விட்டு நீங்கி தொன்மையான இந்த உலகமும், உயிரும் வாழ்ந்திடும்படி இமயமலையில் சேர்ந்தருளினர். 8

வார்ப்பெ ரும்பணை யாதிய வரம்பில்பல் லியத்தின்
ஆர்ப்பு மெங்கணும் வெள்ளிடை யின்றியே யகல்வான்
தூர்ப்பின் ஈண்டிய தானையின் ஓதையுஞ் சுரர்கள்
ஆர்ப்பும் வாழ்த்தொலி அரவமும் புணரியுண் டெழுமால்.

வார்பூட்டப்பட்ட பலவகையான வாத்தியங்களின் ஆர்ப்பும் எங்கும் வெள்ளிடை இன்றி வானமெல்லாம் மூடி அடைத்ததுபோலச் சூழ்ந்து பரந்த பூதச்சேனையின் ஆரவாரிப்பும், தேவர்களுடைய ஆரவாரிப்பும், வாழ்த்தோசையும் எல்லாமாகத் திரண்டு சமுத்திர ஓசையையும் விழுங்கி மேற்கொண்டு எழும். 9

அனைய தன்மையி லாதியம் பண்ணவன்
பனிகொள் வெற்பிற் படரஅம் மன்னவன்
இனிய கேளொ டெதிர்கொடு தாழ்ந்துதன்
புனித மாநக ரிற்கொடு போயினன்.

இவ்வாறாகிய சிறந்த தன்மையில் எல்லாவற்றிற்கும் ஆதியாகிய பகவான் பனிப்படலம் சூழும் இமயமலையிடத்து போதலோடும் எம்பிரான் வருகையை உணர்ந்துகொண்ட மலையரசனானவன் தனது இனிய சுற்றத்தோடும் புறப்பட்டுவந்து எம்பிரான் முன்னர் சென்று தாழ்ந்து வணங்கி எம் ஈசனை வரவேற்று அழைத்துக்கொண்டு எக்காலமும் புனிதம் நிறைந்த தனது நகரிற் கொண்டு சென்றான். 10

போத லோடும் புனிதன் வரத்தினைக்
காத லாற்கண்டு கண்களிப் பாகியே
ஆதம் எய்திநின் றஞ்சலித் தேத்தியே
வீதி யாவும் விழாவயர்ந் திட்டவே.

இவ்வாறு எம்பிரானை மலையரசன் அழைத்துச் செல்ல, எம்பிரான் அங்கு போதலோடும் புனிதனாகிய எமது பெருமானின் அற்புதக் கோலம் நிறைந்த அழகிய மணவாளக் கோலத்தை மலைநகருள்ளார் கண்டு கண்களித்து, அவரின் ஆனந்த சொரூபத்தை கண்களாற் பருகி இன்புற்று, அளவிறந்த மகிழ்ச்சிகொண்டு கைகளைக் கூப்பித் தொழுது வணங்கி அங்குள்ள வீதியில் உள்ளார் யாவரும் பெருவிழாக் கொண்டாடினார்கள். 11

மிண்டி நின்றிடும் வீதியின் மாதரார்
அண்டர் நாயகன் அற்புதப் பேருருக்
கண்டு தாழ்ந்து கரைதவிர் காதலாந்
தெண்டி ரைப்படிந் தார்செயல் வேறிலார்.

எம்பிரானுடைய திருமேனி வனப்பைப் பார்க்கப் பார்க்க, பரவசமும் தெவிட்டாத ஆசையும் மேற்படலால், மீண்டும் மீண்டும் பெருமானை நோக்கும் விருப்பமாகிய வராய் அவ்வீதியில் வாழும் பெண்கள் யாவரும் தேவர்கள் நாயகரானவரின் அற்புதப் பேருரு கண்டு, தாழ்ந்து அளவு கடந்த காதலாகிக் கரைகாணாத காதல் என்னும் சமுத்திரத்து படிந்தார்போல் ஆயினர். ஆகையால் இறைவன்பால் வைத்த காதலால் வேறொரு செயல் அறியாராயினார்கள், காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி (சம்பந்தர்) 12

நிறைத்த பூண்களும் நேர்ந்தபொன் னுடையும்
நறைத்த சாந்தமும் நாண்மலர்க் கண்ணியும்
பிறைத்தி ருச்சடைப் பிஞ்ஞகன் பேரெழில்
மறைத்த தென்று மனந்தளர் வார்சிலர்.

இவ்வாறாகிய நிலையில் சில பெண்கள் எம்பிரான் திருமேனிப் பொலிவையும் அதன் வனப்பையும் உற்று நோக்கி அம்மவோ! காணக் காண ஆனந்தம் பெருக்கும், பிறைச்

சடைமீது அணிந்த எமது ஐயருடைய இயல்பான மேனி அழகை, அவர் அணிந்திருக்கும் நிறைந்த ஆபரணங்களும் அதற்கு ஒப்ப நேர்ந்த பொன்னுடையும், வாசனை கொண்ட சாந்துப் பூச்சும், இன்றலர்ந்த கண்ணியான கொன்றைப் பூவும் ஆகிய இவை மறைத்துவிட்டனவே. இவர் திருவுருவின் சீரையும் சிறப்பையும் உணரவிடாது தடுத்தனவே இந்த அணிகள் என மனம் தளர்வார். 13

உய்யு மாறென் உவர்தமைக் காண்டலும்
வெய்ய காமக் கனல்சுட வேவுறுந்
தைய லார்கள் தனுவுறு நீறுகொல்
ஐய ராகத் தணிந்ததென் பார்சிலர்,

அம்மவோ! நாங்கள் எவ்வாறு இனி உய்யலாம்? இப்பகவானை நாங்கள் கண்ட போதே காமம் என்னும் கொடிய வெப்புச் சுட, அதனால் நாமே வெந்துபோகிறோம். இது உண்மை எப்படியெனில் இவ்வண்ணம் இவரை முன்கண்ட பெண்கள் இவர்மீது கொண்ட அன்பின் பெருக்காகிய காமப் பற்றும் நெருப்பு அவரைச் சுட்டெரிக்க அந்த எரிந்த சாம்பற் பொடியைத்தான் இவர் மேனிமீது பூசி உள்ளார் போலும். 14

எழாலை யன்னசொல் ஏந்திழை மாதரார்
குழாம கன்று குழகனைச் சேர்தலுங்
கழாலு கின்றபல் காழுடை மேகலை
விழாதி றைஞ்சினர் மெல்லிய லார்சிலர்.

யாழின் இசையை ஒத்த சொற்பயில்கின்ற சில பெண்கள் கூட்டத்தைவிட்டு நீங்கி அகன்று மெதுவாக இறைவன் மீதுள்ள காதலால் இறைவனைச் சேர்தலும், அக் காதலால், தங்கள் உடலம் உருகி அன்பு மயமாய் செயல்,கோலம் யாவும் வேறுபடுதலினாலே தங்கள் அரையில் பூட்டியுள்ள மேகலாபரணம் கழன்று கழன்று தொந்தரவு செய்ய, அப்போது இறைவனை நோக்கி ஐயனே! எமது இன்பமே! உம்மைக் கண்டு பருகி ஆனந்தமுற அரையில் சாத்திய எமது மேகலை என்னும் ஆபரணம் விழாதிருக்க அருள் செய்யும் என வேண்டி இறைஞ்சினர். 15

அல்லி சேர்தரும் அம்புய மீமிசை
வல்லி யன்னவர் வான்துகில் சோர்வுறு
மெல்ல வீழ்தலும் மின்னிடை யார்க்கெலாம்
இல்லை யோபுனை யென் றுரைப்பார் சிலர்.

அகத்தே இதழ் உடைய செந்தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் மகாலெட்சுமியை ஒத்த அழகிய சில பெண்கள் தங்கள் தங்கள் மேனிமேல் சாத்திய உயர்வான பட்டாடைகள் சோரப்பட்டு, மெல்லவே அவர்கள் உணர்வுறுவகை வீழ்தலும் அவர்கள். ஐயையோ மின்போலும் சிற்றிடை உடைய எமக்கெல்லாம் இனிமேல் உடையாகியது இல்லையோ என்பார்கள்.

இரந்து இரந்து உருகும்படி அவர்களை பரவசப்படச் செய்கிறது எம்பிரானுடைய சோதிவடிவம். ஆகவே அவ்வாறு அன்பினால் அவர்களது உடலம் உயிர் ஆனந்தப் பட்டு கசிந்து உருகிட முன் அறியாத இனிய அருள் நிலை கைகூடுதலால் தங்கள் மேனி மேல் அணிந்த அழகிய பட்டாடை முதலியன நழுவின தன்மை அறியாது மயங்கிஆடை கழன்றதை தற்செயலாக உணர்ந்து ஐயையோ இனி எம் மானத்தைக் காக்கவும் உடையில்லையோ என்பார்கள். 16

வாசம் வீழ்தலும் வந்துவந் தில்லிடைத்
தூசு டுத்தில மென்றோர் துகில்புனைந்
தாசை யோடுசென் றன்னதும் வீட்டியே
ஊசல் போன்றனர் ஒண்டொடி மார்சிலர்,

தாம் அணிந்த வஸ்திரம் இவ்வாறு நழுவி வீழ்தலும், திரும்பத் திரும்ப தமது இல்லம் சேர்ந்து அம்மாடி! என்ன நாங்கள் சேலை உடுக்கவில்லையோ! என்ன இது என்று, இறைவன் மேலுள்ள மயக்கம் மேலும் மேலும் உந்தி எழுதலால், வேறோர் சேலையை அணிந்து வந்து ஆசையோடு திரும்ப ஓடிவந்தும், அச்சேலையையும் வீழ்த்தி விட்டு பின்னர் வெட்கி திரும்பி ஓடி வேறு சேலை அணிதலும், திரும்பவும் கண்டவுடன் அவை வீழ்தலும் பின்னர் திரும்பலும் இப்படியான செயலினலே ஊஞ்சல்போல அங்கும் இங்கும் அலைவாராயினர் சில பெண்கள். 17

மாண்ட சாயன் மடந்தைய ரேதனை
வேண்டி மால்கொடு வீடுறும் வேலையில்
ஈண்டு போற்று கெனவுமெண் ணுததோ
ஆண்ட கைக்கிய லாகுமென் பார்சிலர்.

மாட்சிமை கொண்ட பேரழகின் மிக்க பெண்கள் தாங்களாக வேண்டி பகவானைத் தம்மோடு அன்பினல் கலந்துவிடுமென நாணம் முதலிய அகன்று வேண்டி நின்று தங்கள் நிறை, சாயல், குணம், உடலம் இவை யாவும் காம உணர்வால் அழிவெய்தி னும் ஈசன் அவ்வாறு செய்யாதிருப்பதைக் கண்டு ஐயனே நீர் ஆண்டகை அல்லவோ! ஆனமையின் எங்களைக் கூடி இன்பந் தந்து காப்பாற்றும் என வேண்டினும் அருள் செய்கின்றீர் இல்லை. பெண்களாகிய நாம் வலிந்து வேண்டினும் அருள் செய்யாதிருப் பது எக்காரணம் என சொல்வார் சிலர்.

கடலே அனைய ஆனந்தம் கண்டார் எல்லாம் கலந்து உண்ண
இடரே பெருக்கி ஏசற்று இங்கு இருத்தல் அழகோ உடையானே. (மணிவாசகர்)

இங்கு வரும் பாடல்கள் யாவும் இறைவனேடு அனுபவிக்கப்படுகின்ற பேரின்ப நிலையை சிற்றின்ப நிலையிலும் வைத்து பேசுகிறார் ஆசிரியர். இக்கருத்துக்களை எங்கள் நாயன் மார்கள் மிக அழகாகச் சொல்லியுள்ளார்கள்.

கரு அடிய பசுங்கால் வெண்குருகே ஒண்கழி நாராய்
ஒரு அடியாள் இரந்தாள் என்று ஒருநாட்சென்று உரையீரே என சம்பந்த சுவாமிகளும்
சலப்பாடே இனி ஒருநாள் காண்பேனகில்
தன் ஆகத்து என் ஆகம் ஒடுங்கும் வண்ணம்
உலைப்பாடே படத்தழுவி போகல் ஒட்டேன் என திருநாவுக்கரசு சுவாமிகளும்
கண்டார் காதலிக்கும் கணநாத என சுந்தரமூர்த்தி சுவாமிகளும்
ஊடி ஊடி உடையாயொடு கலந்து உள் உருகிப் பெருகி நெக்கு
என மணிவாசகரும் கூறும் பதங்களின் விரிவான கருத்துக்கள் இப்பாடலில் அமைந்தன.

கரும்பு நேர்மொழிக் காரிகை மாதரார்
விரும்பி வேண்டவு மேவலர் போலுமால்
அரும்பொன் மேனியெம் மண்ணலுக் குள்ளமும்
இரும்பு கொல்லென் றியம்பிடு வார்சிலர்.

கரும்பைநேர் ஒத்த தித்திப்பாகிய வார்த்தையைப் பேசும் அழகிய பெண்கள் விரும்பி இவரை வேண்டவும் எங்களது பகைவர் எமைப் புறக்கணிப்பதுபோல எம்மைக் கலந்து இன்புற வையாது செல்கிறார் தோழீ! பாரடி இவர் மேனியை, அருமையான பொன்மேனியாக இருக்கிறதே. எம் ஐயனுக்கு மேனி பொன்னுனல் போல உள்ளமும் இரும்பாகிவிட்டது போலும் என்று இயம்பிடுவார் சிலர்.

நாம் இவர்மேல் காதலாகி ஆற்ருது எமது உள்ள விருப்பால் எமது நாணம் நீக்கி, இவரை எம்மைக் கூடும்படி கும்பிட்டு விரும்பி பெண்களாகிய நாம் வேண்டுதலும், இவ் வாறு மெல்லிய இயல்புடைய இவர்கள் உள்ளம் நலிவாகி இரக்கின்றுரே எனவுணராது செல்கிறுரே, இவர் உள்ளம் இரும்போ; பிறர் துயரம் கண்டுஇரங்காதோ எனப் பேசுவர்.

நெருக்கு பூண்முலை நேரிழை யார்க்குமால்
பெருக்கி னூரவர் பேதுற லோர்கிலார்
உரைப்ப தென்கொல் உயிர்க்குயி ராகியே
இருக்கு மிங்கிவர் என்றுரைப் பார்சிலர்.

தமது முலைகளை நெருக்கும்படி பூண்கள் அணிந்த பெண்கள் யாவர்க்கும் இவர் மையலைச் செய்து பெருக்கினர். இதைச் செய்த இவர் மயக்க நாம் மயங்கி துன்புற்றோம். எமது பேதுறல் ஆகிய கலவிநாட்ட துன்பத்தை மட்டும் எம்மைக் கலந்து நீக்காது செல்கிறாரே. நாங்கள் எவ்வகையாக உரைப்போம் இவர் செயலை. எமது உயிர்க்கு உயிராய் இருக்கிறாரே எம்மிடம், ஆகையால் எம்மிடம் இங்கு உள்ளார் உங்கும் உள்ளார், ஆகையில் இதனை என்னென்போம் எனப் பேசுவார் சிலர்,

ஊனே புகுந்த உனை உணர்ந்தே உருகிப் பெருகும் உள்ளத்தை
கோனே அருளும் காலந்தான் கொடியேற்கு என்று கூடுவதே (மணிவாசகர்)

திருகு வார்சடைச் செய்யனை நோக்கிநின்
றுருகு வார்சிலர் உள்ளுற வெம்பியே
கருகு வார்சிலர் காதலி மாரொடும்
பெருகு காதலைப் பேசுகின் றார்சிலர்.

திரட்சியாய் பொருந்திய சடையினை உடைய செம்மேனிச் செல்வனை நோக்கிய படி நின்று உள்ளம் உருகுவார் சில பெண்கள். சிலர் உள்ளம் வெம்பி ஆசை மிகுதியால் மேனி வாடுவார். சிலர் தமது தோழியரோடும் இவர்மேல்கொண்ட தமது காதலைப் பேசிநிற்பர். 21

வேறு ளார்மெய் விளர்ப்பினை நோக்கியே
ஈறி லாரை இவரணைந் தார்கொலோ
நீறு மெய்யின் நிலவிய தென்றவர்ச்
சீறி யேயிகல் செய்திடு வார்சிலர்.

எம்பிரான்மீது கொண்ட காதலினால் தொழுது இரங்கி மயங்கிச் சோரும் சில பெண்கள் மேலுள்ள வெளுப்பை உற்று நோக்கி அம்மவோ முடிவிலாது அருள் பொலியத் தோன்றும் இவரை இப்பெண்கள் கூடி மகிழ்ந்துள்ளார் போலும் என, அவர் கிட்டச் சென்று உம்மேனியில் நீறு பிரண்டு வெளிக்காணப்படுகிறதே. ஆகையால் நீங்கள் இரகசியமாக எமது பெருமானைக் கூடினீர்போலும் என ஒன்றும் அறியாத பேதையரோடும் கோபித்து கலகமிடுவார் சில பெண்கள். 22

கட்டு செஞ்சடைக் கான்மிசை யூர்தர
விட்ட வெண்மதி மெல்லிய லார்தமைச்
சுட்ட தம்ம சுமப்பதென் நீரெனக்
கிட்டி நின்று கிளத்திடு வார்சிலர்.

அழகாக நெருங்கிய பூங்கானம்போல கட்டிய செஞ்சடைமீது ஊர்வதுபோல நீர் அணிந்துள்ள இளம் பிறையே நாம் காணக் காண எம்மைச் சுடுகின்றது. பேரருளாளராகிய நீர் எம்மைச் சுடும் பொருளை ஏனோ சுமந்தீர் சொல்லுவீராக! என எம்பெருமானைக் கிட்டிநின்று கேட்கிறார்கள் சில பெண்கள். 23

கஞ்ச மேலய னாதிக் கடவுளர்
தஞ்ச மென்று சரண்புக வுண்டதோர்
நஞ்சின் வெய்யகொல் நங்கையர் கொங்கைமேல்
துஞ்சு கின்ற துயிலதென் பார்சிலர்.

ஐயனே நாம் விரும்பி வந்து உம்மை வேண்டவும் எம்மைப் பாராமுகம் செய்கிறீர். எம் உயிர்ப் பொருளே உமக்கு ஏன்தானோ இச்செய்கை? நீரோ முன்னர் உமது திருவடிகளே தஞ்சம் என வந்து சரண்புகுந்த தாமரை மலர் மேலாய பிரமன் முதற் கடவுளர் யாவரும் தம்மைக் கொல்லும்படி எழுந்த நஞ்சினின்றும், தம்மைக் காக்க வேண்டும் எனப் பிரார்த்திப்ப கொடிய அந்த நஞ்சை உண்டீர். அவ்வண்ணம் எல்லாத் தீமைகளையும் தாங்கும் நீர், நாம் உம்மை வலிந்து இரந்து வேண்டி எம்மை அணைந்து எம்முடைய கொங்கைகள் மேல் துயில்வீராக. என்றாலும் நீர் என்ன எம் கொங்கை மேல் அணைந்து துயில்வது அந்த கொடிய நஞ்சிலும் இச்செயல் கொடிது என எண்ணினீரோ என்பார் சிலர். 24

பின்ன ருள்ள பெருந்தொழி லாற்றுவான்
துன்னு வீரெனில் தொல்குழு ஆடவர்
நன்ன லத்தொடு நண்ணுமின் னுரையே
இன்னல் செய்வதென் என்றுரைப் பார்சிலர்.

நீர் பின்னால் உள்ள பெரிய தொழிலாகிய அருள்முதல்வியாகிய எம்பெருமாட்டியை திருமணம் செய்யும் பேரருள் கொண்டு செல்வீராயின் உமது பக்கராக வருகின்ற பல ஆடவர் கூட்டமாக நல்ல நலப்பாட்டோடும் நண்ணிவர, பின்னர் மின்னலை ஒத்த வடிவுடைய பெண்களைமட்டும் இன்னலுக்கு ஆக்குகின்றீரே! ஏன் ஐயா இப்படிச் செய்கிறீர் என உரைப்பார் சில பெண்கள்.
பின்னர் உள்ள பெருஞ்செயல் என்பதை சர்வசங்காரத் தொழில் என்றும் கூறுவர்சிலர்.

சாற்றி யிங்கினி யாவதென் தையல்மீர்
ஏற்றின் மேவினர் எம்மை மணந்திட
மாற்றி லாத மலைமகள் போலயாம்
நோற்றி லேமென நொந்துயிர்ப் பார்சிலர்.

எங்கள் தோழிகளே கேளுங்களடி, நாம்தாம் இவரைப் பார்த்து பலசொல்லி ஆவது என்ன? ஒன்றுமில்லையே! உண்மையாக இவர் எங்களையும் திருமணம் செய்யும்படி மாறுபாடிலாத உறுதியோடும், தவம்செய்த உமையம்மைபோல நாங்களும் தவம்செய்திலோம். ஆகவே தவத்தைச் செய்திட அருள்தந்திடும். பகவானை நொந்து என்ன ஆவது? எம்மையே நொந்துகொள்வோம், அவ்வண்ணம் தவம் செய்யாது விட்டதற்காக என்பர் சிலர். 26

தேவர் உய்யத் திருமணஞ் செய்திட
மேவு கின்றவர், மெல்லியல் மங்கையர்
ஆவி கொள்ள அமைந்தனர், இத்திறம்
ஏவர் செய்வ ரெனஉரைப் பார்சிலர்.

தேவர்கள் யாவரும் உய்யும் பொருட்டாக உமையம்மையாரைத் திருமணம் செய்திட எழுந்தருளி வரும் இவர் மெல்லிய இயல்புடைய பெண்களாகிய எம்முடைய உயிரை வாட்டி, வதையாது வதைக்கின்ற நிலையில் அமைந்துள்ளார். தேவர்கட்காக அருள்செய்ய வருவார்க்கு இங்கு எம்மை வருத்துதல் அருளுக்குப் பொருத்தமாமோ என உரைப்பார் சிலர். 27

மையல் வேழம் வயப்புலி போல்வரும்
வெய்யர் தம்மை மெலிவிப்ப தன்றியே
நொய்ய மான்புரை நோக்கியர்க் குந்துயர்
செய்யு மோவெனச் செப்புகின் றார்சிலர்.

மையல் புரியும் கயாசூரன் என்னும் யானை, வலிகொண்ட புலிமுகாசூரன் என்னும் புலி இவைபோல் வருகின்ற கொடியர்களாகிய அசுரர்களைத் தேவரீர் மெலிவித்தல்

பொருத்தமாகும். ஏனெனில் அவர்கள் கொடுமை உடையார்கள். அவ்வாறாக கொடுமையுடையவர்களை மெலியச் செய்வதை விடுத்து எம்போன்ற ஒருவர்க்கும் தீங்கில்லா மிக நொய்ய மானை ஒத்த பார்வையுடைய பெண்களாகிய எங்களுக்குத் துயரை எமது பகவானே செய்யலாமோ? ஏனோ இவ்வண்ணம் செய்வது, சொல்லியருள்வீராக. என சில பெண்கள் கூறுவாராயினர். 28

நங்கள் கொற்றவன் நற்றவத் தாற்பெறு
மங்கை பாலின் மணப்பொருட் டேகினர்
இங்கெ மக்கினி மைத்திறஞ் செய்கலார்
சங்க ரர்க்குத் தகாதிதென் பார்சிலர்.

எங்கள் அரசனின் நற்தவத்தாற் பெற்ற மகளாகிய பார்ப்பதி அம்மையைத் திருமணம் செய்யும் பொருட்டால் வரும் இவர் இங்கு எமக்குமட்டும் இன்பந் தரும் செயலினைச் செய்யாது செல்கிறார். இவர் நாமந்தான், சங்கரன் என்பார்கள். அப்பெயரே எல்லார்க்கும் இன்பம் தருபவன் எனப் பொருள்படும் அப்படி இருப்பவும் இவர் இவ்வண்ணம் செய்தலால் இவர்க்கு இப்பெயர் தகாதேடீ தோழி! என்பார் சிலர்.

பேதை நீரவர் பேரிளம் பெண்மையோர்
ஆதி யந்தத் தணங்கினர் இன்னணம்
வீதி தோறும் விரவியத் தாருக
மாத ராரினும் மாதர்பெற் றாரரோ.

பேதை, பெதும்பை. மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்னும் ஏழுவகையாகச் சொல்லப்படும் இப்பெண்கள் இவ்வாறாக வீதி தோறும் நின்று நின்று எம்பிரானைக் கண்டு கண்டு களித்து மயங்கி காம உணர்வுகொண்டு அன்று தாருக வனத்தில் உள்ள முனிவர் மனைவிகள் எம்பிரானுடைய பிட்சாடன வேடத்தைக் கண்டு மயங்கிய நிலையிலும் பார்க்க மிகு மயக்கங்கொண்டு நின்றார்கள். 30

பண்டை வேதன் பதத்தினும் பேரெழில்
கொண்டு நின்றவக் கோநகர் வீதியின்
அண்டம் வெஃக அணிபடுத் திட்டவை
கண்டு போந்தனன் கண்ணுத லண்ணலே.

எல்லார்க்கும் மிகப் பழையோனாகிய பிரமதேவர் உலகத்திலும் பார்க்க மிக அழகு கொண்டுநின்ற அந்தப் பெரிய நகர் வீதியில் மேல் உள்ள அண்டத்திருப்பார் ஆரும் விரும்பும்படியாக அலங்கரித்துள்ளவைகளை எல்லாம் பார்த்தருளிப் போயினார் நெற்றியில் கண்கொண்ட எமது பெருமான். 31

செய்ய தான செழுங்கம லாசனத்
தையல் காமுறத் தக்கன வீதிகள்
பைய நீங்கிப் பராபரை யாகிய
ஐயை கோயில் அணித்தென நண்ணினான்.

செம்மையாக உள்ள செந்தாமரை மேலுள்ள மகாலெட்சுமியும் ஆசை கொள்ளும்படியான பல பல அழகுடைய வீதிகள் யாவற்றையும் எம்பெருமான் மெல்ல மெல்ல கடந்து நீங்கியருளி எல்லார்க்கும் தாயாகிய எம்பெருமாட்டி வீற்றிருக்கும் கோவில் அணித்தாக உள்ளது எனும்படியான இடத்தில் எம்பிரான் சேர்ந்தருளினார்.

வேந்தன் ஏவலின் வேதங்கள் இன்றுகா
றாய்ந்து நாடற் கரியவெம் மண்ணல்முன்
பூந்த டம்புனல் பூரித்த பல்குடம்
ஏந்தி வந்தனர் மாதவர் எண்ணிலார்.

மலையரசனுடைய ஏவலின்படி வேதங்கள் இன்றுவரையும் ஆராய்ந்து நாடற்கரிய எங்கள் அண்ணலாகிய பெருமான் முன்பாக எண்ணற்ற முனிவர்கள் தங்கள் கைகளிலே நல்ல நீர் நிறைந்த பல குடங்களை ஏந்தியவாறு வந்தார்கள். சுவாமி எழுந்தருளி வரும்போது வரவேற்கும்படி முனிவர் பலர் நீர் நிறைந்த குடங்களை ஏந்தி வந்தமை எம்பிரான்மீது தெர்ப்பையால் தொட்டு நீர் புரோட்சித்தற் பொருட்டாகும்.

இருவ கைப்படு மெண்வகை மங்கலப்
பொருண்மை முற்றவும் பூவையர் பற்பல
வரிசை யிற்கொடு வந்தெதிர் எய்தினர்
அரிய யற்கரி தாகிய அண்ணல்முன்.

இதன்பின்னர் தேவர்கட்குரிய மங்கலப் பொருள்களாகிய எட்டும், அரசர்க்குரிய மங்கலப் பொருள்களாகிய எட்டும் ஆகப் பதினறு என்னும் தொகை உடைய மங்கலப் பொருள்கள் முற்றையும் பற்பல பெண்கள் வரிசைக்கிரமமாக ஏந்தி வந்து பிரம விஷ்ணுக்களுக்கும் நாடரிய பகவான் முன்பாக நின்று இந்த மங்கலப் பொருள்களை காண்பித்து எதிர் ஏற்றார்கள்,

தேவமங்கலப் பொருள்கள்: கண்ணடி, இடபம், தீபம், ஸ்ரீவற்சம். இரட்டைச் சாமரை, சங்கு, சுவஸ்திகம், கும்பம்.

அரச மங்கலப்பொருள்கள்:- கொடி, முரசு, கண்ணடி, குடம் மணி, தீபம், அங்குசம், கவரி. 34

அறுகு நிம்பம் அடிசில் அரிசனஞ்
சிறுகும் ஐயவி செம்பஞ்சின் வித்திவை
குறுகு தண்புனற் கொள்கல மேந்தியே
மறுகில் வந்தனர் மங்கையர் எண்ணிலார்.

அறுகு, வேப்பிலை, அன்னம், வெண்கடுகு, செம்பஞ்சின், வித்து ஆகிய இவைகள் வைத்திருக்கும் சொற்பமான நீர்கொண்ட ஆராத்தி தட்டத்தை ஏந்தியபடி எண்ணற்ற அழகிய பெண்கள் வீதியில் வந்தார்கள். 35

நெருக்கு பூண்முலை நேரிழை யாரவர்
பொருக்கெ னவெதிர் போந்துயிர் யாவினும்
இருக்கும் ஆதி யிறைவனை யேத்தியே
தருக்கொ டேநின்று தந்தொழி லாற்றினர்.

நெருங்கிய பூண்களை முலைமேல் தரித்து பேரழகோடும் பொருத்தி, நிறைந்த ஆபரணத்தை அணிந்து வந்த ஆராத்தித் தட்டம் ஏந்திய இப்பெண்கள் விறுவிறென்று எதிர் சென்று உயிர் யாவற்றிலும் இருக்கின்ற ஆதியாகிய சிவபெருமானை வணங்கி துதித்து முன்னின்று பெரும் மகிழ்வோடு தங்கள் ஆராத்தி தட்டத்தை மும்முறை சுற்றி தாங்கள் செய்யவேண்டிய தொழிலை இயற்றினர்கள். 36

எங்கள் நாதன் எதிருற எண்ணிலா
மங்கை மார்சுடர் மன்னிய தட்டைகள்
செங்கை யிற்கொடு சென்று வலன்வளைஇ
அங்கண் மும்முறை அன்பொடு சுற்றினர்.

பின்னர் எங்கள் நாயகன் எதிராக எண்ணில்லாத அழகுடைய பெண்கள் சுடர் ஒளிகொண்ட தீபத்தட்டுகளை தங்கள் அழகிய சிவந்த கைகளிலே ஏந்திக்கொண்டு சென்று எம்பிரான் திருமுன்பு அத்தீபத்தட்டுகளை வலமாக மும்முறை அன்போடு சுற்றி காண்பித்தார்கள். 37

ஆன காலை அருமணச் சாலைமுன்
ஞான நாயகன் நட்பொடு நண்ணியே
வானு லாய மழவிடை நீங்கினன்
யான மீதினின் றியாரும் இழிந்திட.

அவ்வாறாகிய நேரத்து மிக அருமைப்பாடுகொண்ட திருமணச்சாலை முன்பாக ஞான நாயகனாகிய எங்கள் பெருமான் பெரும் கருணையோடு புகுந்தருளி தாம் ஏறி வந்தருளிய வானத்தையளாவும் பெரிய தரும தேவதையாகிய இடப வாகனத்தினின்றும் நீங்கியருளினான். அப்போது எம்பிரானை சூழவந்த அனைவரும் தாங்கள் ஏறி வந்த தங்களது வாகனங்களில் நின்றும் உடனே இறங்கியருள, ஈசன் திருமணச் சாலையின் வாயிலை சார்ந்து மிகப்பெரிய தனது இடபத்தினின்றும் நீங்கியருளும் அதே நேரத்தில் அனைவரும் தங்கள் வாகனங்களில் நின்றும் தாங்களும் இறங்கியருளினார்.

விடையி ழிந்துழி மேனைவிண் ணாட்டவர்
மடமின் னாரொடு வந்து பராபரன்
அடிகண் மீதினில் ஆன்பொழி பால்கொடு
கடிதின் ஆட்டினள் கைதொழு தேகினள்.

எம்பெருமான் இடபவாகனத்தில் நின்றும் இறங்கியருளிய நேரத்து மலையரசன் மனைவியான மேனை என்பாள் தேவ நாட்டுத் தெய்வப் பெண்களோடும் அவ்விடத்து தமது பசு பொழிந்த பாலை நல்லதோர் பொற்கலத்து ஏந்தி வந்து உள்ளப்பரிவோடும் அப்பாலால் எம்பெருமானுடைய பாதகமலங்களை விரைவாக திருமஞ்சனம் ஆட்டினாள். எம்பெருமானுடைய பாதத்தைத் திருமஞ்சனமாட்டும் போது பரிவும் விரைவும் பொருந்த ஆட்டி முன்னின்று கைகூப்பித் தொழுது அப்பால் செல்வாளாயினாள். 39

நாதன் அவ்வழி நந்திக ளுய்த்திடும்
பாது கைக்கட் பதமலர் சேர்த்தியே
போதன் மாதவன் பொற்கரந் தந்திடக்
கோதில் மாமணக் கோயிலுள் எய்தினன்.

எம்பெருமான் அந்நேரத்து நந்தியங்கடவுள் திருமுன்பாக வைத்த பாதுகை (மிதிப்பொருள்) மேலாக தமது திருப்பாதத்தைச் சேர்த்து நடந்தருளும்போது எம் பெருமானுடைய திருக்கரத்தை பிரமதேவர் ஒருபக்கராகவும் நாராயணக் கடவுள் இன்னொருபக்கராகவும் அழைத்துக்கொண்டு வரும்படியாக சோதிவிட்டுப் பிரகாசிக் கும் பொலிவாகிய திருமணக் கோயிலினுள் சென்றருளினார். 40

பல்லிய மியம்ப வானோர் பரவவிஞ் சையர்கள் பாட
ஒல்லெனக் கணங்க ளார்ப்ப உருத்திரர் யாருஞ் சூழ
மெல்லெனச் செல்லும் அண்ணல் விரிஞ்சனும் மாலும் வேண்ட
மல்லலங் கோயி லுள்ள வனப்பெலாம் நோக்க லுற்றான்.

பலவாத்தியங்கள் முழங்கும்படியாகவும் தேவர்கள் வணங்கி வரும்படியாகவும் விஞ்சையர்கள் பாடல்களைப் பாடும்படியாகவும் ஒல்லென்று பூதகணங்கள் ஆரவாரிக் கவும் உருத்திரமூர்த்திகள் யாவரும் சூழ்ந்து வரவும் மெதுவாகச் சென்றருளும் அண் ணல் பக்கராக நின்று அழைத்துவரும் பிரம தேவரும் நாராயணக் கடவுளும் வேண்டி ஐயனே இங்கு திருமணச் சாலையின் சிறப்பு அலங்காரமெல்லாம் நோக்குவீராக என் னலும் எம்பிரானார் அவ்வலங்கார வனப்புகள் வளங்கள் எல்லாம் பார்க்கலுற்றார்.

உலாவுறு சுரும்பு மூசா ஒண்மலர்ச் சோலை வாவி
நிலாவுறழ் புனல்சே ரோடை நெடுந்தடம் நிறம்வே றுகிக்
குலாவுமண் டபங்க ளின்ன கொண்டியல் வனப்புக் காட்டிச்
சிலாதனன் மதலை கூறச் சென்றுசென் றிறைவன் கண்டான்.

உலாவிவரும் வண்டுகள் மொய்யாதபடி மலரும் பூக்கள் நிரம்பிய சோலைகளையும், குளங்களையும், நீந்தி விளையாடற்கு ஏற்ப நிலா வெளிச்சத்தைப் போன்று அமைந்த நீரோடைகள், விசாலித்த பெரிய குளங்கள், நிறங்கள் மாறி மாறிக் காணப்படும் ஒளியுடைய மண்டபங்கள் இவ்வாறுக அமைந்த சிறந்த வனப்புக்களை நந்தியம்கடவுள் காட்டி, அவை இயல்பினை எடுத்துச் சொல்ல யாவற்றையும் இறைவன் கண்டான்.

கண்டலுந் தம்போல் தங்கள் காமர்விண் ணகரந் தானும்
மண்டல வரைப்பின் வந்து வைகிய தாங்கொ லென்னு
அண்டர்கள் வாவி கேணி அகன்புனல் குடைந்துங் காமர்
தண்டலை யாடல் செய்துந் தலைத்தலை திரிதந் துற்றார்.

இவ்வாறுக இறைவன் யாவற்றையும் கண்டு செல்லும்போது எம்பிரானுடன் கூடவந்த தேவர்கள் யாவரும் தங்களுடைய அழகிய தேவ உலகம்தானும் தாங்கள் இங்குவந்து சேர்ந்தமைபோல வந்திருப்பதோ என அமையும்படி அழகுடன் பொலிவதைக்கண்டு மகிழ்ந்து எல்லாத் தேவரும் அங்குள்ள குளங்கள், கேணி, அகன்ற நீரோடைகள் யாவிலும் இறங்கி மூழ்கி மகிழ்ந்தும் அழகிய சோலைகளில் விளையாடியும் தலைத்தலை கூட்டமாக திரிந்து மகிழ்வாராயினர். 43

நந்தியத் தேவு காட்ட நல்வனப் பனைத்தும் நோக்கிக்
கந்தமென் போது வேய்ந்த கடிமணச் சாலை தன்னில்
இந்திர நீலத் திட்ட எழில்நலத் தவிசி னும்பர்
வந்துவீற் றிருந்தான் எல்லா மறைகட்கும் மறையாய் நின்றுன்.

நந்திதேவர் காண்பித்தருள எமது இறைவன் அங்குள்ள நல்ல வனப்புகள் அனைத்தும் நோக்கியவாறு போந்தருளி வாசம் கமழுகின்ற பூக்களால் வேய்ந்து கூரை அமைத்த முற்றிலும் வாசனையாகவே திகழும் அழகிய திருக்கல்யாண மண்டபத்து வந்து இந்திரநீலம் என்னும் இரத்தினத்தாலான சிம்மாசனத்தின் மீது வீற்றிருந்தருளினுன் எல்லா வேதங்கட்கும் மூலப் பொருளாய் அறியப்படாது நின்றவன். வேதங்களை தந்தவன் அவன்; ஆனுல் அவையாலும் அறியப்படாதவன். அவன் பக்கராகத் தோன்றியும் வேதம் அவனை அறியாது மலைந்து ஐயா எங்குற்றுய் எனத்தேடி இன்னம் அலையும்.

வீற்றிருந் தருளு மெல்லை வீரபத் திரன்தீப் பேரோன்
ஆற்றல்கொள் கூர்மாண் டேசன் ஆடகன் ஐயன் ஏனோர்
போற்றிசெய் அயனே மாலே புரந்தரன் முனிவர் தேவர்
ஏற்றிடு தவிசு தோறும் இருந்தனர் இறைவற் சூழ.

எம்பிரான் வீற்றிருந்தருளுகின்ற எல்லையில் வீரபத்திரன் என்னும் பெயருடைய கடவுள், வலிமைகொண்ட கூர்மாண்ட உருத்திரக்கடவுள் ஆதிய ஏனைய உருத்திர மூர்த்திகளும் பூதசேனுதிபதியரும் எம்பிரானைப் போற்றி செய்தார்கள். பிரமதேவர் நாராயணக்கடவுள் இந்திரன் ஆதிய கடவுளர் யாவரும் சிம்மாசனத்து எழுந்தருளி இருக்கும் பெருவாழ்வை வணங்கி அவர் அவருக்கு ஏற்ற ஆசனங்கள் முன்னராக அமைந்துள்ளன மீது யாவரும் எம்பெருமானைச் சூழ வீற்றிருந்தார்கள். 45

அமையப்படும் அப்பொழு தத்தினில் ஆதி யண்ணல்
விமலத்திரு மாமணங் காணுற மேலை யண்டச்
சுமையுற்றிடும் எப்புவ னத்தருந் தொக்க நீரால்
இமையச்சயி லந்துளங் குற்ற திடுக்கண் எய்தி.

இவ்வாருக எம்பிரான் திருமணச்சாலையில் தங்கியருளிய அந்நேரத்து ஆதியாகிய பகவானின் ஞானமயமான திருமணத்தைக் கண்டு தரிசிக்கும்படியாக மேலாகிய அண்ட புவனங்களில் உள்ள சுமையாகிய யாவரும் வந்து சேர்ந்துள்ளார்கள். அவ்வாருக யாவரும் யாவும் இமயமலையிலே தொகுதியாகச் சேர்தலினுலே அவர்கள் யாவரின் சுமையையும் தாங்கமுடியாதபடி இமயமலையானது நடுக்குற்றது பெரிதும் துன்பம் கொண்டு. 46

பொன்பா லிமையந் துளங்குற்றுழிப் போற்று சேடன்
தன்பால் அவனி யெனலாந் துலைத்தட்டி ரண்டின்
வன்பால தான வடபா லதுதாழ மற்றைத்
தென்பால தாற்ற உயர்ந்திட்டது தேவர் உட்க.

பொன்போல் மிளிரும் இமயமலை இவ்வாறு பாரச்சுமை தாங்காது நடுங்குதலும் உலகை நழுவிச் செல்லாதபடி தாங்குகின்ற ஆதிசேடன் என்னும் பாம்பின் தலைமேல் தாங்கிய உலகமெல்லாம் ஆகிய தராசுபோலும் தட்டில் (ஆதிசேடன் தராசின் தண்டாகவும் உலகம் தராசின் தட்டாகவும் அமைந்தது என்ருல்) ஒரு தட்டில் பாரம் ஏறுதலும் அது தாழ்ந்து மற்றைய தட்டு உயர்தல்போல இமயமலையாகிய பூமியின் வடக்குப் புறமானது தாழ தெற்குப் புறமானது உயர்ந்துகொண்டது. இச்செய்கை திடீரென மேற்படுதலும் தேவர் யாவரும் அதுகண்டு ஏங்கிஞர்கள். 47

ஓங்குற் றதுதென் புவியாதலும் உம்ப ரெல்லாம்
ஏங்குற் றனர்மண் ணுலகோர்கள் இடுக்க ணுற்றுத்
தீங்குற் றனவோ எமக்கென்று தியக்க முற்ருர்
பாங்குற் றிடுதொன் முனிவோரும் பரிய லுற்ருர்.

தெற்குப் பக்கமானது மேலோங்குதலும் தேவர் எல்லாரும் ஏங்குற்றனர், பூமியில் உள்ளார் யாவரும் செவ்வனே சுவாசித்தல் முதலிய செயல் செய்ய முடியாதபடி இடுக்கட்பட்டு தீங்குற்றதோ; இனிமேல் வாழமுடியாதோ எமக்கு என்று தியக்கமுற்ருர்கள். இப்போ பக்கத்திற் பொருந்திய முனிவோரும் வருந்தல் உற்ருர்கள். 48

இன்னே ரெவருஞ் சிவனேயென் றிரங்க லோடும்
முன்னேனு மன்ன செயல்கண்டு முறுவ லெய்தி
அன்னேர் குறைநீத் திடநந்தியை நோக்கி ஆழி
தன்னேர் கரத்திற் செறித்தானைத் தருதி யென்ருன்.

இவ்வாருக இவர்கள் எல்லோரும் வருந்தி சிவனே அபயம் என்று இரங்கலோடும் முன்னவராகிய எமது பெருமான் அதுசெயல் கண்டு புன்சிரிப்புக் கொண்டருளி அவ்விடத்து வருந்துவாரின் குறைநீக்கும்படியாக நந்திதேவரை நோக்கியருளி, நீ சமுத்திரங்கள் எல்லாவற்றையும் தனது உள்ளங் கையில் அடக்கிய வலியை உடைய அகத்திய முனிவனை இங்கே அழைத்து வருவாய் எனத் திருவாய் மலர்ந்தருளினர். 49

என்றா னதுகாலையில் நந்தி யிறைஞ்சி யேகிக்
குன்றாத கும்ப முனிவன்றனைக் கூவ அங்கட்
சென்றான் அவனைக் கொடுபோய்ச்சிவன் முன்ன ருய்ப்ப
மன்றார் கழல்கள் பணிந்தான் மலையத்து வள்ளல்.

அவ்வாறு இறைவன் சொல்லியருளலும், அதுகாலை நந்தி தேவர் எம்பிரானை வணங்கி அவரின் பணியின் படியே திருமணப் பந்தர் இடத்துப் பொருந்திய முனிவர் கூட்டத்தின் உட்சென்று, அகத்தியனே சந்நிதி வருக எனக் கூவி அழைத்தலும், அப் பேரோசை கேட்ட அகத்திய முனிவர் வருதலும், அவரை அழைத்துச்சென்றுசிவபிரான் திருமுன்பாக நந்திதேவர் சேர்த்தலும், அங்கு சேர்ந்த அகத்திய முனிவர் கனகசபையாகிய மன்றிலே நின்றாடும் பெருமானின் திவ்விய பாதங்களை வணங்கியருளினார். 50

தாழுந் தவத்தோன் றனைக்கண்ணுதற் சாமி நோக்கித்
தாழுங் குறியோய் இவண்யாவருஞ் சார்த லாலே
தாழும் புவிதக் கிணமுத்தரஞ் சால ஓங்கத்
தாழுஞ் சுவர்க்க நிலனுந் நனிதாழு மன்றே.

எம்பிரான் திருமுன்பு தாழ்ந்து வணங்கிய. பெரிதும் தவப்பேறுடைய அகத்திய முனிவனை நெற்றியில் கண்கொண்ட சுவாமி நோக்கியருளி, மிகத்தாழ்ந்து வணங்கிய குறியோய்! அகத்திய முனிவனே கேள், இவ்விடத்து யாவரும் சார்தலால் மேலே உள்ள ஏழு உலகங்களில் மிகவும் தாழ்ந்த பூமியாகிய இதில் தென்பாகமானது மிக உயரவும், வடபக்கமானது மிகவும் ஓங்கியுள்ளது. இதனால் சுவர்க்கம் முதலான ஏனைய உலகங்களும் சீர்குன்றித் தாழ்வாகிவிடும். 51

தெருமந் துழலுந் தரைமன்னுயிர் செய்த தொல்லைக்
கருமந் தனைவிட் டயர்வெய்திக் கலங்குகின்ற
பெருமந் தரமே முதலாய பிறங்கல் யாவும்
அருமந்த மேரு வரையுந்தவ றாகு மம்மா.

இயங்கித் திரிகின்ற உலகத்துள்ள மேலான ஆன்மாக்கள் யாவும் தங்களுடைய கருமங்களை விடுவித்துவிட்டு அயர்ச்சிகொண்டு கலங்கித் திரிகின்றன. பெரியதாகிய மந்தர மலை முதலாகிய மலையும் இன்னும் வேறு மலைகளும், அதுமட்டுமல்லாது அருமந்த சிறப்பினையுடைய மகாமேரு மலையும்கூட நிலைதவறிவிடும். உலக உயிர்கள் வேதனைப் படுவதன்றி மலை முதலிய பொருள்களுங் கூட உலக சமநிலை மாறுபடலால் தவறாகும் என்றார் சிவபிரான். 52

ஆனான் முனிகேள் ஒருநீயிவ் வசலம் நீங்கித்
தேனார் மருத வளமேயதென் னாடுநண்ணி
வானார் பொதிய மலைமேவுதி வைய மெல்லாம்
மேனா ளெனவே நிகராகி விளங்கு மென்றான்.

எது எப்படி ஆனாலும் அகத்தியனே! நான் சொல்வதைக் கேள். நீ ஒருவன்மட்டும் இந்த இமய மலையை இப்போதே விட்டு நீங்கிச் சென்று தேன் பொழியும் சோலை கொண்ட மருதநிலங்களின் வனத்தில் ஓங்குகின்ற தமிழ்நாடாகிய தென்னாட்டிற்குச் சென்று அங்கு உள்ள வானத்தை எட்டும்படி வளர்ந்திருக்கும் பொதியம் என்னும் மலையை நண்ணி, அங்கு தங்குவாயெனில், இந்த உலகமெல்லாம் முன்னைநாட் போலவே சமமாக நிற்கும் என சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினார். 53

பிறையொன்று வேணிப் பரனிங்கிது பேச லோடும்
அறையொன்று தீஞ்சொற் றமிழ்மாமுனி அச்ச மெய்திக்
குறையொன் றியான்செய் துளனேகொடி யேனை ஈண்டே
உறையென் றிலேசே ணிடைச்செல்ல வுரைத்தி எந்தாய்.

இளம்பிறை ஒன்றிய திருச்சடை உடைய பரமனாகிய சிவபிரான் இங்ஙனம் மொழிந்தருளலும், அதனைக் கேட்டருளிய வேதத்தை ஒத்த இனிய தமிழ்ச் சொற்களை உலகிற்குகந்தருளிநின்ற அகத்திய முனிவர் பெரிதும் அச்சங்கொண்டு, எம்பிரானைப் பணிந்தருளி, ஐயனே! தேவரீருக்கு அடியேன் குறையேதும் புரிந்ததுண்டோ? இல்லையே, ஆனமையால் அடியேனை யாது காரணத்தாலோ தேவரீருடைய இவ்விடை நிகழும் திருமணத்தைக் கண்குளிரக் கண்டு களிக்காதபடி மிகதூரத்தே சென்றிருப்பாயாக என என்னைப் பார்த்துச் சொல்லியருளினீர். குறையொன்று யான் ஏதும் செய்ததுண்டோ எனக் கேட்டருளினான். 54

என்னக் குறிய முனிவன்றனை எந்தை நோக்கி
உன்னைப் பொருவும் முனிவோர் உலகத்தி லுண்டோ
அன்னத் தவனும் உனைநேர்கிலன் ஆத லால்நீ
முன்னிற் றெவையுந் தவறின்றி முடித்தி மன்னோ.

என்று இவ்வாறு குறுகிய அழகிய தவவேடம் பொலியும் அகத்திய முனிவன் பணிவோடு பேசி நிற்றலும், அப்போது அகத்திய முனிவனை எந்தைபிரான் பார்த்தருளி சொல்கிறார். அகத்தியனே, உன்னையொத்த பெருந்தவமுடைய முனிவர் இவ்வுலகத்து உண்டோ? அன்ன வாகனத்தையுடைய பிரமதேவரும் உனை நேர்கிலர். ஆகையால் எதை நினைந்தாயோ அதையெல்லாம் தவறின்றி நீ நிறைவேற்றி முடிப்பாய்.

வேறுற்றிடு தொன்முனி வோர்களின் விண்ணு ளோரின்
ஈறுற்றிடு மோவிது செய்கை எவர்க்கும் மேலாம்
பேறுற்ற நின்னால் முடிவாகும் பெயரு கென்று
கூறுற் றிடலும் முனியீது குறித்து ரைப்பான்.

உன்னை நீங்கி வேறாக உள்ள மிகப் பழமையான முனிவர்களில், விண்ணுலகிலுள்ள தேவர்களில் அல்லது மற்றையோர் யாவரினாகுதல் இந்தச் செய்கை முடியுமோ, ஆகாதே, அவர்கள் எல்லாரிலும் பார்க்கத் தவப்பேற்றை உடைய உன்னால்தான் இச்செய்கை கைகூடும். ஆகையால் இப்போது அகத்திய முனிவனே, பொதியமலைநோக்கிப் புறப்படுவாயாக என எம்பிரான் கூறியருளலும், அகத்திய முனிவன் அதனைக்கேட்டு இஃது ஒன்றைக் குறித்து உரைப்பானாயினான். 56

வான்செய்த மேனி நெடுமான் மகவேள்வி மன்னன்
தேன்செய்த கஞ்சத் தயனிற்கவிச் செய்கை தீயேன்
தான்செய் திடவே பணித்திட்டனை தன்மை யீதேல்
நான்செய் ததுவே தவம்போலும் நலத்த தெந்தாய்.

பெருமானே! வானளவும் நீண்ட அற்புத மேனி உடைய நெடிய நாராயணக் கடவுளும் யாகங்களினால் தலைமைப்பாடு அடைந்த இந்திர தேவனும், தேன்சொரியும் தாமரை மலரை ஆசனமுடைய பிரமதேவரும் இவ்விடத்து நிற்க எளிய வாழ்க்கை உடைய அடியேனை இதைச் செய்வாயாகஎனப் பணித்தருளினீர். உமது திருவுளம்

இப்படியாகில் நான் செய்ததுவே மேலான நலமுடைய தவம்போலும் என்றூர் அகத்திய முனிவர். 57

ஈங்கிப் பணியை யளித்தாயெனில் எந்தை யுன்றன்
பாங்குற்ற புத்தேள் மணக்காட்சி பணிந்தி டாமல்
நீங்கற் கரிதாங் கவல்கின்றதென் னெஞ்ச மென்ன
ஓங்கற் கயிலைத் தனிநாயகன் ஓத லுற்றுன்.

பெருமானே ஈங்கு எனக்கு இப்பணியைக் கொடுத்தீர் ஆயின், எந்தையே தேவரீரது பாங்கராகப் பொருந்தும் அம்மையும் அப்பனுமாய் விளேகின்ற தெய்வீகத் திருமணக் காட்சி கண்டு பணியாமல் இவ்விடம் விட்டு நீங்க மிக அரிதாகும். தனிமையாக என் நெஞ்சம் பெரிதும் கவலைகொள்கிறதே என்று அகத்திய முனிவர் கூறியருளலும் அப்போது திருக்கைலாய மலையில் வீற்றிருந்தருளும் தனிமுதல்வரான சிவபிரான் இந்த வார்த்தை அகத்திய முனிவருக்கு ஓதலுற்றுர். 58

சிந்தைய தழுங்க லின்றித் தென்மலைச் சேறி அங்கண்
வந்துநம் வதுவைக் காட்சி வழங்குதும் மகிழ்ந்து காண்டி
நந்தமை யுன்னி யாங்கே நாள்சில இருத்தி பின்னர்
முந்தையி லெமது பாங்கர் வருதியால் முனிவ என்றுன்.

அகத்தியமுனிவனே! உனது மனமானது கவலைப்படாமல் தென்திசையில் உள்ள பொதியம் என்னும் மலையில் சார்வாயாக. அங்கு நீ தங்கி இருக்கும்போது நாம் அவ்விடத்து உனது முன்பு தோன்றி இங்கே நிகழுகின்ற திருமணக்காட்சி முழுவதும் நீ அங்கே காணும்படி காட்டியருள்வோம். நீ மகிழ்வோடும் அதனை அங்கே காண். அங்கு நீ என்னைத் தியானித்தவாறு சிலநாள் தங்கியிருப்பாயாக. பின்னர் எல்லாத் தோற்றத்திற்கும் மூல இடமாகிய எனது பாங்காக நீ வந்து சேர்ந்துகொள்வாய் என சிவபிரான் உரைத்தருளினுர். 59

என்றிவை அமலன் செப்ப இசைதரு புலத்தனுகி
மன்றமர் கழல்க டம்மைப் பன்முறை வணக்கஞ் செய்து
நின்றுகை தொழுது போற்றி நெடிதுயிர்த் தரிதின் நீங்கித்
தென்றிசை யெல்லை நோக்கிச் சிறுமுனி கடிது போனுன்.

என்று இவ்வாறு நிர்மல ஞான வடிவினராகிய இறைவன் மொழிந்தருளுதலும் இப்போ அகத்திய முனிவன்பால் முன்னுற்ற கவலை யாவும் நீங்கி கனகசபையிலே நிறைந்து நடனமாடுகின்ற திருவடிகள் முன்பாகப் பலகாலும் வணக்கம் செய்து திருமுன் நின்று கைதொழுது போற்றி, நெடிதும் பலகால் பெருமூச்செறிந்து நீங்க முடியாத அருமைப் பாட்டோடும், விட்டு நீங்கி தென்திசையின் எல்லையை நோக்கியவாறு குறுகிய வடிவினையுடைய அகத்திய முனிவன் சென்றருளினுன். 60

கிற்புறு மாயை வல்ல கிரவுஞ்ச வரையும் விந்த
வெற்பதும் வன்மை சிந்த வில்வல னெடுவா தாவி
கற்பனை யகன்று மாயக் காவிரி நீத்தத் தோடு
முற்பகல் படர்ந்த தென்ன முனிவரன் தென்பாற் போனுன்.

தன்னிடத்துச் சேர்ந்தாரை அகப்படுத்தித் துயருறுத்தும் மாயை வல்ல கிரவுஞ்சம் என்னும் மலையும் விந்த மலையும் தங்கள் வலிமைகெட்டழியும்படியாகவும் வில்வலன்

வாதாவி எனும் இரு அசுரரும் முனிவர்களை வஞ்சித்துக் கொன்று உண்ணுகின்ற அவர் களின் தீய கொடிய செயல்கள் அகன்று மாழும்படியாக காவிரி என்னும் ஆற்றுநீரைக் கையில் உள்ள கமண்டலத்தில் ஏந்தியவாறு முன்பு தெற்கு நோக்கி வந்த அத்தன்மை போல அகத்திய முனிவன் தென்திசைபால் போயருளினர். 61

மறைபுகல் வேள்வி யாற்று மாவலி வலிகொள் காட்சிக்
குறியவன் துணையாய் மற்றோர் குறளுமுன் டாங்கொ லென்ன
நெறியெதிர் அவுணர் தம்முள் ஒருசிலர் நில்லா தோடச்
சிறுமுனி வானம் நீந்திச் சிமையமா மலயம் புக்கான்.

வேதங்களில் சொல்லப்படும் யாகத்தைச் செய்கின்ற மாவலி என்னும் அசுரனு டைய வலியை அடக்கிய காட்சி உடைய வாமனன் என்னும் மிகக்குறுகிய வடிவினை உடைய அவருக்கும் இன்னுமோர் துணையான சகோதரரும் உண்டோ. இவ் உலகில் என்னும்படியாக அகத்திய முனிவர் எழுந்தருளி வரும் மார்க்கத்திலே நேர்வந்த அசுரர் சிலர் குறுகிய வடிவுடைய இவரைக்கண்டு ஏங்கி நில்லாது ஓடும்படியாக சிறியவடிவினை உடைய அகத்தியமுனிவன் ஆகாய மார்க்கமாகச் சென்று பொதியம் என்னும் மலையில் சேர்ந்தார். 62

முண்டகன் வலிகொண் டுற்ற மூவெயில் அழிப்பான் முன்னி
அண்டரும் புவன முற்று மாகிய கொடிஞ்சி மான்றேர்
பண்டொரு பதத்தா லூன்றிப் பாதலத் திட்ட அண்ணல்
கொண்டதொல் லுருவ முன்னிக் குறுமுனி அங்கண் உற்றான்.

பிரமதேவரின் வலியை நீக்கிவிட்ட இரும்பு, பொன், வெள்ளி என்னும் முப்பு ரங்களையும் அழிக்கும்படியாகச் சிவபிரான் திருவுளங்கொண்டு அளவுகாண முடியாத புவனங்கள் முழுவதும் ஆகிய கூம்பினை உடைய குதிரை பூட்டிய தேர்மேலாக எழுந் தருளுவார்போன்று அத்தேரின் மீதாக ஒரு பாதத்தால் ஊன்றி பாதாளத்து இட்ட அண்ணலாகிய சிவபிரான்கொண்ட மிகப் பழைய உருவத்தை தியானித்தவாறு அகத் திய முனிவன் சென்றருளினன். 63

பொதியம தென்னும் வெற்பிற் புனிதமா முனிவன் வைகத்
துதியுறு வடபாற் றென்பாற் புவனியோர் துலைபோ லொப்ப
அதுபொழு துயிர்க ளானோர் அணங்கொரீஇ அரனை யேத்தி
மதிமகிழ்ந் தமர்ந்தார் தொல்லை வதுவையின் செய்கை சொல்வாம்.

பொதியமலை என்னும் மலையினிடத்து அகத்தியமுனிவன் வீற்றிருந்தருளுதலும் பலராலும் புகழப்படுகின்ற பூமியின் வடபாரிசம் தென் பாரிசம் என்னும் இருபகுதி களும் ஓர் தராசின் சமநிலைபோல் தாழ்வு இலாது சமமாகவே நின்றது. அப் போது உயிர்கள் யாவும் தங்கள் கவலை நீங்கி சிவபிரானைத் துதித்து மனமானது பூரித்து மகிழ்ந்து அமர்ந்தார்கள். இப்பால் மிகமுன்பு நடந்தருளிய திருமணத்தின் செய்கை சொல்வாம். 64

கதுமென மலயந் தன்னிற் கடமுனி சேற லோடு
முதுமைகொ ளிமையம்புக்க முனிவருஞ் சுரருந் தேர்ந்து
மதிமலி சடையெம் மண்ணல் வரம்பில்பே ரருளும் அன்னேன்
பதமுறை வழிபட் டோர்தம் பான்மையும் பரவ லுற்றார்.

மிகவிரைவாக பொதியமலையில் குடத்தின்கண் தோன்றியமையால் குடமுனி எனப் புகழ்கொண்ட அகத்திய முனிவன் சேருதலோடும் பழமைகொண்ட இமயம் என்னும் மலையில் இருந்தருள்கின்ற முனிவரும் தேவரும் இதனை உணர்ந்து இளம்பிறை பொலியும் சடையுடைய சிவபெருமானின் எல்லை காணமுடியாத பேரருளையும் அவரது பாதாரவிந்தங்களை வழிபட்டோர்களது மேம்பாட்டையும் நினைந்து போற்றி வணங்கினார்கள்,

நிலைதவறிச் தாழ்ந்து சரிந்த வடபகுதியையும் உயர்ந்த தென்பகுதியையும் அகத்திய முனிவன் தென்பகுதியில் சேர்ந்து அமர்ந்தபோதே தெற்கும் வடக்கும் சரிசமமாகிப் பழமை போல ஆனது. அகத்திய முனிவனின் சிவத்தியானப் பேறும் சிவபிரானது அருளும் ஆனமையால் தேவர் முனிவர் எல்லாம் இவற்றை உணர்ந்து போற்றி செய்தார்கள். 65

**அங்கது பொழுது தன்னில் அரசன திசைவால் எங்கள்**
**சங்கரி ஐயை காப்பச் சசியென்பாள் அடைப்பை ஏந்தக்**
**கங்கைகள் கவரி வீசக் காளிகள் கவிகை பற்றப்**
**பங்கய மான்கை பற்றிப் பாரதி பரவ வந்தாள்.**

அங்கதுவாகிய நேரத்தில் மலையரசன் உடைய இசைவின்படி எங்கள் தாயாகிய சங்கரி உலகிற்கு ஒரு கன்னியான அழகு சொல்ல முடியாத அருட்கோலத்தோடும், தான் இருந்த இடத்தைவிட்டு எழுந்தருளித் திருமணச்சாலையைச் சேர வந்தருளும் பொழுது பிராட்டியாருக்கு மெய்க்காப்புத் தோழியாக துர்க்காதேவி உடன்வர இந்திராணிதேவி அடைப்பையைத் தாங்கி ஏந்திவர, கங்காதேவி முதல் பல கன்னியர் வெண்சாமரை வீசவும், காளிகள் வெண்கொற்றக் குடையைப் பிடித்து வரவும், மகாலட்சுமி தேவியின் கையில் பற்றியவாறு சரஸ்வதிதேவி துதித்து வணங்கியபடி வரும்படியாக பெருமாட்டி வந்தாள். 66

**வந்திடு முலகை ஈன்றாள் வதுவையஞ் சாலை நண்ணி**
**அந்தமொ டாதியில்லான் அடிகளை வணங்க முன்னோன்**
**முந்துறு தவிசின் றன்பான் முற்றிழை யிருத்தி யென்ன**
**இந்திரை முதலோர் யாரு மேத்திட இருந்தா ளன்றே.**

இவ்வாறு சிறப்புடன் வந்திடுகின்ற உலகை ஈன்றவளாகிய பார்வதி அம்மையார் திருமணச்சாலையைச் சார்ந்து அவ்விடத்து இந்திர நீலமணியினால் ஆக்கப்பட்ட சிம்மாசனத்தில் வீற்றிருந்தருளும் அந்தமும் ஆதியும் இல்லாத சோதியாகிய பெருமான் திருமலர்ப்பாதங்களில் தாழ்ந்து வணங்கலும் அப்போது எம்பெருமாட்டியை முன்னவராகிய ஈசன் பார்த்தருளி சொல்வார். தெய்வீக அமைப்பான சிறந்த ஆபரணங்களை உடைய உமையே! எமது பக்கராக இச்சிம்மாசனத்தின் மீது வீற்றிருப்பாயாக எனலும் எம்பிராட்டி அங்கு சூழ்ந்து வந்த மகாலெட்சுமி தேவியார் யாவரும் வணங்கும்படி வீற்றிருந்தருளினர். 67

**இருந்திடு மெல்லை தன்னில் ஏலவார் குழலி யென்னுங்**
**கருந்தடங் கண்ணி ஞாளைக் கண்ணுதற் பராப ரற்கு**
**விரைந்தருள் செய்ய வுன்னி வேந்தன திசைவான் மேனை**
**பெருந்தடம் புனலுஞ் சந்து மலர்களும் பிறவுந் தந்தாள்.**

எம்பிராட்டி இவ்வாறு இருந்திடுகின்றகாலை இயற்கை வாசனையுடன் சாந்தணிந்து பொலிந்து விளங்கும் கூந்தலை உடையவளாயும் கருமையான கண்களை உடைய

வளாயும் இருந்தருள்கின்ற பார்ப்பதியம்மையாரை விரைவாக ஈசனுக்கு கன்னிகா தானமாகக் கொடுக்கும்படி நினைந்த மலையரசன் தனது மனைவியான மேனை என் பாளை கன்னிகாதானம் செய்யுமுன் பாத பூசைக்குவேண்டிய திரவியங்களோடும் வரு மாறு பணித்தலும் அரசன் ஏவுதலின்படி மேனையானவள் பெருமை வாய்ந்த தூய நீரும் சந்தனமும் பூக்களும் தூபதீபாதிகளும் பிறவும் கொண்டு வந்து சேர்த் தருளினாள். 68

தருதலு மிமையத் தண்ணல் தாழ்ந்தன ளிருந்து தேவி
சிரகநீர் விடுப்ப ஆதி திருவடி விளக்கிச் சாந்தம்
விரைமலர் புனைந்து நின்ற வியன்கடன் பலவுஞ் செய்து
பொருவரு மகிழ்ச்சி யொடு பூசனை புரிந்தான் மாதோ.

இவ்வாறு மேனை என்பாள் திரவியங்களைத் தருதலும் இமயமலை அரசனானவன் சுவாமி திருமுன்பு தாழ்ந்து இருந்துகொண்டு மேனை தனது திருக்கரத் திலே பொற்பாத்திரத்து தூய நீரால் எம்பிரானுடைய பாதத்தை அபிஷேகம் செய்ய ஆதியாகிய பெருமானின் திருவடிகளை மலையரசன் தனது கைகளால் பற்றி விளக்கினான். பின்னர் சந்தனம் அணிந்தான், பூக்களைச் சூட்டினான். செய்யவேண் டிய விதிமுறைகள் யாவற்றையும் செய்தான். எம்பிரான் திருவடி தீண்டிப் பூசை செய்யும் பேற்றால் பெருமகிழ்ச்சி கொண்டு பாதபூசனையைப் புரிந்தருளினான். 69

பூசனை புரிந்த பின்னர்ப் புவனமீன் றாடன் கையைப்
பாசம தகன்ற தொல்சீர்ப் பரஞ்சுடர் கரத்துள் வைத்து
நேசமொ டளித்தே னென்ன நெடுமறை மனுக்கள் கூறி
வாசநல் லுதக முய்த்தான் மருகனென் றவனை யுன்னி.

இவ்வாறு பூசனை புரிந்த பிற்பாடு புவனங்கள் யாவற்றையும் ஈன்ற கன்னியாகிய பார்வதி தேவியாரின் திருக்கரத்தை தனது கையால் எடுத்து பாசங்களில் நின்றும் நீங்கி அநாதி மலமுத்த சித்துருவாகிய பரஞ்சுடர்வடிவினரான சிவபிரான் திருக்க ரத்து வைத்தருளி பெருமானே எனது உள்ளன்போடு பிராட்டியை உமக்கு கொடுத் தருளினேன் என்ற நெடிய பெரு வேதவாக்கியங்களை ஓதி வாசம் பொருந்திய நீரைத் தாரைவார்த்து கொடுத்தான் சகல உலகிற்கும், தனக்கும் தலைவரான பெரு மானைத் தனக்கு மருகன் என நினைந்து. 70

எங்குள பொருளுங் கோளு மீதலுந் தானே யாகுஞ்
சங்கரன் உலக மெல்லாந் தந்திடுங் கன்னி தன்னை
மங்கல முறையாற் கொண்டான் மலைமகன் கொடுப்ப வென்றால்
அங்கவன் அருளின் நீர்மை யாரறிந் துரைக்கற் பாலார்.

எங்கும் உள்ள பொருள்களும் அப்பொருளை பிறர்க்கு உதவியோனும் அவைக ளில் நிறைவும் இன்பமும் யாவும் தானேயாகி தனக்குள்ளும் தானேயாகி பரமசுக மாய் இருந்தருளும் சங்கரன் உலகம் எல்லாவற்றையும் தந்தருளுகின்ற கன்னியான உமையம்மையாரை மங்கலம் நிறையும் திருமணமுறையால் மலைஅரசன் கொடுப்ப தான் ஏற்றுக்கொண்டார் என்னில் பெருமானுடைய அருளின் பெருமையை யார் தான் அறிந்து உரைக்கற்பாலார். 71

ஆனதோ ரமையந் தன்னில் ஆடினர் அமரர் மாதர்
கானம திசைத்தார் சித்தர் கந்தரு வத்த ரானோர்
ஏனைய விருவர் தாமு மேழிசைக் கீதஞ் செய்தார்
வானவர் முனிவர் யாரும் மறைகளை யறைய லுற்றார்.

அவ்வாறாகிய சமயந்தன்னில் தேவநடனமாதர் ஆடினர்; சித்தர் கந்தருவத்தர் ஆதியோர் தேவகானம் எனும் இசைப்பாடலைப் பாடினர்; மற்றைய இருவராகிய தும்புருவர், நாரதர் ஆகியர் ஏழு சுரங்களையும் உடைய கீதங்களை யாழில் அமைத்து இசைத்தார்கள். தேவர்களும் முனிவர்களும் வேதமந்திரங்களை உரக்க ஓதினர்கள். 72

அல்லியங் கமலந் தன்னில் அரிவையும் புண்டரீக
வல்லியும் மற்று ளோரும் மங்கலம் பாட லுற்றார்
சல்லரி திமிலை காளந் தண்ணுமை சங்க மாதிப்
பல்லிய மியம்பிச் சூழ்ந்து பாரிடத் தொகையோர் ஆர்த்தார்.

செந்தாமரை மலரில் இருக்கின்ற மகாலெட்சுமி தேவியும் வெண்டாமரை மலரில் இருக்கும் சரஸ்வதிதேவியும் இன்னும் மற்று அங்கு கூடிய ஏனைய தேவமாதர்களும் இனிய ஓசையுடன் மங்கலம் பாடல் உற்றார்கள். சல்லாரி, திமிலை, காகளம், மத்தளம், சங்கு ஆகிய இந்த வாத்தியங்களைக் கைகளில் ஏந்தியவாறு அவற்றை முழக்கம் செய்தபடி எம்பெருமானைச் சூழ்ந்து பூதத்தொகையானோர் யாவரும் ஆர்த்தார்கள்.

அதுபொழு திமையத் தண்ணல் ஆபொழிந் திட்ட தீம்பால்
கதலிமாப் பலவின் தீய கனிவகை நெய்தே னாதி
மதுரமாஞ் சுவையின் வர்க்கம் வரம்பில வீற்று வீற்று
நிதிகொள்பா சனத்தி லிட்டு நிருமலன் முன்ன ருய்த்தான்.

அதுபோதில் இமயமலைக்கு அரசனான மலையரசன் என்பான் தனது தூய பசுவானது பொழிந்த இனிய பாலையும் கதலி வாழைப்பழமும் மாம்பழமும் பலாமரத்தின் இனிய பழங்களையும் நெய்யையும் தேனையும் இன்னும் வேறு சுவைமிக்க இனிய பழவகை முதல் பதார்த்தங்களையும் அளவுபடுத்திச் சொல்லொணாத ஏராளமான இப்பொருட்களை பொன்னாலான தாம்பாளம் ஒன்றில் வைத்து நிர்மல சொரூபியாகிய பெருமான் திருமுன்பு வைத்தனன். 74

மறைநெறி யினைய வெல்லாம் மலைமக னுய்த்து மற்றெம்
மிறையிவை நுகர்தல் வேண்டு மெனத்தொழ இனிதே யென்னாக்
கறைமிடற் றணிந்த மேலோன் கரத்தினால் அவற்றைத் தொட்டாங்
குறுபெருங் கருணை செய்தே உவந்தனங் கோடி யென்றான்.

வேதத்தில் எம்பிரானுக்கென நிவேதிக்கப்படவேண்டிய விதிப்பிரகாரம் யாவற்றையும் மலையரசன் சுவாமி - அம்பாள் திருமுன்னர் வைத்து முன்னின்று எம் இறைவா! இதனைத் திருவமுது செய்வீராக எனத் தொழுது நிற்றலும் அவ்வேளை எம்பிரான் இது நன்று எனக் கூறியருளி நஞ்சைத் திருக்கண்டத்தே அணிந்த பெருமான் தமது திருக்கரத்தினால் அவற்றைத் தொட்டு மேலாகிய பெருங்கருணையை மலையரசனிடத்துக் காண்பித்தருளி ''மலையரசனே, இவற்றை உவப்போடு ஏற்றருளினோம். நீ இதை இனி உன்பால் வைத்திருப்பாயாக'' எனத் திருவாய் மலர்ந்தருளினார். 75

தொன்மைகொ ளருளின் நீரால் துய்த்தன வாகத் தொட்ட
நின்மல வுணவை மன்னன் நேயமோ டங்கண் மாற்றி
இன்மலர் கந்தந் தீர்த்த மிவற்றொடு மொருசா ருய்ப்ப
நன்மகிழ் வோடு வேதா நாயகற் குரைக்க லுற்றான்.

மிகப் பழமையான அருளின் நீர்மையால் ஈசன் தான் ஏற்றுக்கொண்டதாகத் திருக்கரத்தால் தொட்டருளியமையின் மலபந்தம் நீங்கப்பெற்று யாவர்க்கும் ஈறில்

லாப் புண்ணிய விளைவை உண்டாக்க வல்ல நிர்மலமாகிய அப்பிரசாதப் பொருளை மலையரசனானவன் உள்ள அன்போடு அவ்விடத்து சந்நிதியினின்றும் நீக்கியருளி முன்னே தான் எம்பிரான் பாதபூசை செய்யும்போது பெற்றுக்கொண்ட பாத தீர்த்தம், வாசச் சந்தனம், பூக்கள் ஆகிய இவைகள் யாவற்றோடும் பக்கராக ஒருசாரில் சேர்ப்ப அப்பொழுது திருக்கல்யாணக் காட்சியால் நன் மகிழ்வாகிய பிரமதேவர் அளவற்ற மகிழ்வுடன் நாயகராகிய பெருமானுக்கு உரைக்கலுற்றார். 76

படங்கிளர் சேடன் தாங்கும் பார்விசும் புறையும் நீரார்
அடங்கலும் மணஞ்செய் போதத் தவ்வவர்க் கடுத்த தாற்றி
நடந்திடு மொழுக்கம் எந்தை நடத்திடல் வேண்டும் மன்றற்
சடங்கினி யுளது முற்றத் தண்ணளி புரிதி யென்றான்.

''பெருமானே! ஆதிசேடன் என்னும் ஆயிரந் தலையுடைய பாம்பின் படத்தின் மீது தாங்கப்படுகின்ற உலகில் உள்ளார் யாவரும் எவ்விடத்திலும் தாம் திருமணம் செய்யும்போது அவ்வவர்க்கு அமைந்த நியமங்களைப் புரிந்து திருமணஞ் செய்யும் ஒழுக்க முறையான செயலையும் தேவரீர் இப்போது நடத்திடல் வேண்டும். அதுதான் வேதவிதிப்படி உள்ள ஓமச் சடங்கு அதுவும் முற்றும்படியாக தேவரீர் மேலான உமது கிருபையைச் செய்வீராக'' என்றார் பிரம தேவர். 77

என்னலு முறுவல் செய்தே இறையருள் புரிய வேதன்
வன்னியு மதற்கு வேண்டும் பொருள்களும் மரபிற் றந்து
பொன்னொடு புகரும் ஏனை முனிவரும் புடையிற் சூழத்
தன்னிக ரில்லா மன்றற் சடங்கெலா மியற்றல் செய்தான்.

என்று பிரமதேவர் பேசி நிற்றலும் எம்பிரான் அதுகேட்டுச் சிரித்தருளியவாறு அவ்வாறு பிரமதேவர் விரும்பியவாறே நடப்ப அருள்புரிதலும் அப்போது பிரமதேவர் அக்கினியையும் அதற்கு வேண்டிய ஏனைய பொருள்களையும் முறையாகவே உண்டு பண்ணி தேவகுருவாகிய வியாழ பகவானும் அசுரகுருவாகிய சுக்கிர பகவானும் மற்றுள்ள முனிவரும் பிரமதேவரைத் துணையாகச் சூழ தனக்கு நிகர் பிறிதில்லாத மேலாகிய செயலாகிய திருமணத்திற்கு உற்ற ஓமச் சடங்கு எல்லாம் உவந்து செய்தார். 78

அந்தணர் கரண மெல்லா மாற்றியே முடிந்த பின்னர்த்
தந்தையுந் தாயுமாகி உலகெலாந் தந்தோர் தம்மை
முந்துற அயனும் பின்னர் முகுந்தனு மதற்குப் பின்னர்
இந்திரன் முனிவர் வானோர் யாவரும் இறைஞ்ச லுற்றார்.

அறவாணர்களான பெரியோர்களுக்கு ஏற்ற சடங்குகள் யாவும் அங்கு நிகழப்பட்ட பின்னர், தந்தையும் தாயுமாகி உலகம் யாவற்றையும் தந்தவராகிய சிவபிரானையும் கௌரி அம்பாளையும் முதலில் பிரமதேவரும் பின்னர் நாராயணக் கடவுளும் அதற்குப் பின்னர் இந்திரதேவன், முனிவர்கள், தேவர்கள் யாவரும் வணக்கம் செய்தார்கள். 79

அரனுடன் உமையா டன்னை யாங்கவர் பணித லோடும்
உருகெழு நிலையுட் கொண்ட உருத்திரத் தலைவ ரேனோர்
பரிசனர் கணங்கள் யாரும் பணிந்தனர் அதன்பின் னாகக்
கிரியுறை யிறைவன் மைந்தன் கேளொடு வணக்கஞ் செய்தான்.

எல்லார்க்கும் முதல்வராகிய சிவபிரானோடும் உமையம்மையாரை அங்கு சூழுமி யிருந்தார் யாவரும் பணிதலோடும் உக்கிரமான நிலையுட்கொண்டவராகிய உருத்திரத் தலைவர்களும், அவரின் பரிசனங்களாகிய ஏனைய உருத்திரர்களும், பூதகணங்களும்

பணிந்தார்கள், அதன்பின்னராக இமய மலையை அரசாளுகின்ற மலையரசனும் அவன் மகனும் மற்றும் அங்குள்ள அவர்கள் சுற்றத்தாரும் கூடி எம்பிராட்டியையும் பகவானை யும் வணங்கினர்கள். 80

தமதுமுன் பணிகின் றோர்கள் தமக்கெலா மீசன் றானும்
உமையும்நல் லருளைச் செய்ய வோர்ந்திது பதமென் றுன்னி
இமகிரி புரந்த வண்ணல் ஈண்டுறை நீரர்க் கெல்லாம்
அமலன துணவு மற்றும் அளிப்பனென் றகத்துட் கொண்டான்.

சிவபெருமான் தனதுமுன் பணிகின்றோர்கள் தமக்கு எல்லாம் ஈசன்றானும் உமையம்மையாரும் நல்லருளைச் செய்ய இத்தன்மையை எல்லாம் உற்று உணர்ந்து கொண்ட மலையரசன் இதுதான் எம்பெருமானுடைய பிரசாதப் பொருள்களை இவர் கட்கு பரிமாறுவதற்கு உகந்த காலமாகும் எனத் துணிந்து இவ்விடத்து உறைவார் அனைவர்க்கும் எம்பெருமானுக்கு நிவேதிக்கப்பட்ட பிரசாதப் பொருளை பகிர்ந்தளிக்க உள்ளமாயினன். 81

ஆய்ந்திடு மறைகள் போற்று மாதிதன் தீர்த்தம் போது
சாந்தமொ டவிகள் தம்மைச் சதுர்முகன் முதல்வா னோர்க்கும்
வாய்ந்திடு முனிவர் யார்க்கும் மற்றுளார் தமக்கும் மன்னன்
ஈந்திட வவற்றை அன்னோ ரியாவரும் அணிந்துட் கொண்டார்.

இன்னும் இறைவனை எத்தன்மை உடையான் என ஆராய்கின்ற வேதங்கள் போற்றுதலைச் செய்யும் சிவபெருமானுடைய பாத அருச்சனைப் பூக்களும் சந்தனமும் நைவேத்திய உணவும் ஆகியவற்றை அணிந்து அருந்தும் பெருவாய்ப்பினை உடைய முனிவர் யாவர்க்கும் மற்று அங்கு உளார் யாவர்க்கும் மலையரசன் கொடுப்ப அப்போது அவர்கள் யாவரும் எம்பிரானுடைய பாத அர்ச்சனைப் பிரசாதங்களாகிய சந்தனம் பூ இவற்றை அணிந்து தீர்த்தம் நைவேத்தியம் இவற்றை உட்கொண்டார்கள்.

ஆலமா மிடற்றோற் கான அமலமாம் பொருளை யேற்றுச்
சீலமோ டணிந்துட் கொண்டு சிந்தையுள் மகிழ்ந்து நந்தம்
மூலமாம் வினைகட் கின்றே முடிபொருங் குற்ற தென்றார்.
மேலவர் அன்று பெற்ற வியப்பினை விளம்ப லாமோ.

நஞ்சு உண்ட திருக்கண்டத்தை உடைய சிவபெருமானுக்காக நிவேதிக்கப்பட்டமையால் மிகவும் தூய்மையாக்கப்பட்ட இந்தப் பொருள்களை மிகப் பணிவோடும் அன்பினால் ஏற்று சீலத்தோடும் அணிந்து உட்கொண்டு யாவரும் அவர்கள் சிந்தையுள் மகிழ்வாகி தங்களிடத்தே மூலமாக நின்று நையப்பண்ணி வேதனைதரும் வினைகட்கெல்லாம் இன்றே ஒழுங்காக முடிவு சேர்ந்துள்ளது; இயல்பாக பிறவியால் வருங் கேடுகள் எம்மைச் சாராது என யாவரும் சொன்னர். அவர்கள் அற்றைத் தினத்தில் பெற்ற பெருமிதத்தைச் சொல்லலாமோ? முடியாது.

திருநீறு சந்தனமும் தீர்த்தம் பரிமாறுகிறுர்
செங்கமல மடமாதே — கிளியே
சேவித்து வேண்டியணி. — யோக சுவாமிகள் 83

அனையதோர் காலை தன்னில் அமலமாம் பொருள்க டம்மைப்
பனிவரை யிறைவன் றானும் பன்னியுந் தமரு ளாரும்
எனைவரு மருந்தி மேற்கொண் டெல்லையில் இன்ப முற்றார்
வினைவலி யொருவி மேலாம் வீடுபே றடைந்து ளார்போல்

அவ்வாறாகிய காலைதன்னில் அமலமாகிய தூய்மையான அப்பொருள்களை எல்லாம் பனிமூடிய முடியுடைய மலைஅரசன் தானும் அவனது சுற்றத்தாரும் எல்லாரும் அருந்தி மேற்கொண்டு அணிந்தும் இதைச் செய்தலினாலே முடிவிலாது இன்பம் பெற்றார். அவர்கள் நிலைமை யாதாயிற்றென்றால் வினைவலியெல்லாம் விட்டு நீங்கி மேலாகிய வீடுபேற்றை அடைந்தார்போல. 84

தன்னுறு கணவன் துஞ்சத்தாபத நிலை ளாகிய
இன்னலை யடைந்தாங் குற்ற இரதியவ் வெல்லை வந்து
மன்னுயிர் முழுது மீன்ற மங்கையை மணந்த வள்ளல்
பொன்னடி வணங்கித் தீயேன் புன்கணைத் தவிர்த்தி யென்றாள்.

இப்பால் தனக்கு உற்ற கணவன் இறப்ப அதனால் கவலையுறும் தாபத நிலையளாகி இன்னலை அடைந்து அங்கு எம்பெருமான் பணியால் வந்திருந்த இரதி என்பாள் அவ் வேளையில் எம்பிரான் திருமுன்பாக வந்து மேலாகிய உயிர்கள் யாவற்றையும் ஈன்றவள் ஆகிய உமையம்மையாரைத் திருமணம் செய்தருளும் கோலத்துடன் பொலிந்த எம் பெருமானுடைய பொன்னான திருவடிகளை வணங்கி தீமை உடையவளாகிய பேதையேனுக்கு உற்ற பெருங்கவலையைத் தொலைப்பாயாக பெருமானே என்றாள்.

சீருறு கணவன் இல்லாள் செப்பிய மாற்றங் கேளா
ஆருயிர் முழுதும் நின்றே யனைத்தையு முணர்ந்து கூட்டும்
பேரரு ளுடைய நாதன் பேதுறல் மடந்தை யென்னா
மாரன்வந் துதிக்கும் வண்ணம் மனத்திடை நினைந்தா னன்றே.

தனக்கு எக்காலமும் கிடைக்கமுடியாத ஓர் உத்தம அன்பான கணவன் இறந்தமையாலே கவலைகொண்டு வருந்திய இரதி என்பாள் சொன்ன வார்த்தையை எம்பிரான் கேட்டருளி எல்லா உயிர்தோறும் நின்று அவரவர் பக்குவநிலையை உணர்ந்து கூட்டுகின்ற பேரருள் உடைய பகவான் ஆதலின் வணங்கி வேண்டுகின்ற இரதியை நோக்கி பெண்ணே பேதுறல் கொள்ளாதே எனச் செப்பிவிட்டு மன்மதன் வந்து தோற்றும் வண்ணம் தனது மனத்திடை நினைத்தருளினார். 86

நினைதரு மெல்லை தன்னில் நெடியமான் முதலாவுள்ள
அனைவரு மருட்கை யெய்த அழுங்கிய இரதி நோக்கி
மனமகிழ் சிறந்து கார்காண் மஞ்ஞையிற் களிப்ப அங்கட்
குனிசிலை கொண்ட மாரன் கொம்மெனத் தோன்றினானே.

எம்பிரான் நினைந்தருளும் எல்லையில் நெடிய வடிவினை உடைய விஷ்ணுபெருமான் பிரமதேவர் முதலாய் அங்கு உள்ள அனைவரும் அதிசய வெருட்சிகொள்ள இரதியானவள் மேகத்தைக் கண்ட மயில் போலாக அவ்விடத்து முன்னர் நெற்றிக் கண்ணால் பொடியாகிய மன்மதன் என்னும் கடவுள் திடீரென எம்பிரான்முன் தோன்றியருளினான். 87

முன்பொடு தோன்று மாரன் முதல்வியோ டிருந்த நாதன்
பொன்புனை கமலத் தாள்முன் போந்தனன் தாழ்ந்து போற்றி
என்பிழை பொறுத்தி யென்ன யாமுனை முனியின் அன்றோ
பின்பது தணிவ துள்ளம் பேதுறல் மைந்த என்றான்.

முன்பாகத் தோன்றியருளிய மன்மதன் முதல்வியோடும் இருந்த நாதனுடைய பொன்னாலான தாமரை மலர் செவ்வி எத்துணைத்தோ அதே போலத் திருவோங்கிய

சுவாமி திருவடிகளில் முன்பாகச் சென்று தாழ்ந்து வணங்கி பெருமானே என் ஐயா என்பிழை யாவும் பொறுப்பாய் என்னலும் அப்போது இறைவன் சொல்கிறுர் மன் மதனே முன்பு உன்னை நான் கோபித்தாலன்றே கோபம் தணியவேண்டும். ஆகை யினுல் உன் மீது கோபமேயில்லை. அதனுல் நீ பேதுறல் வேண்டாம் எனத்திருவாய் மலர்ந்தருளினுர்.

இதனுல் போலும் மாணிவாசகரும் திருவாசகத்தில்
மாயப்பிறவி உன்வசமே வைத்திட்டிருக்கும் அதுவல்லால்
ஆயக்கடவேன் ஏனுேதான் என்னதோ இங்கு அதிகாரம். எனக் கூறுகிறுர். 88

எரிபுனை நமது நோக்கால் இறந்தநின் னுடலம் நீருய்
விரைவொடு போயிற் றன்றே வேண்டினள் இரதி யன்னுட்
குருவமா யிருத்தி ஏனை உம்பரோ டிம்பர்க் கெல்லாம்
அருவினை யாகி யுன்றன் அரசியல் புரிதி என்றுன்.

அக்கினி மயமான எனது பார்வையால் உனது உடலம் இறந்து நீருய் விரைவாகப் போயிற்று. ஆனமையால் உனது மனைவி உன்னை இரந்து வேண்டினுள். ஆகவே உன்னை வேண்டிய உனது மனைவிக்கு உருவமாக இருப்பாயாக. மற்று உள்ள மேலுலக வா சி களான தேவர்களோடு மண் உலகத்துள்ள யாவர்க்கும் நீ ஒருவருக்கும் தோன்றுத அருபியாக இருந்து உனது அரசாட்சியை புரிவாயாக என எங்கடவுள் ஐயர் பெரு மான் அருள் செய்தார். 89

செய்வினை முறையால் ஈசன் சித்தசற் கினைய கூறி
அவ்வவன் அரசுஞ் சீரு மாணையும் வலியும் நல்கி
மைவிழி யிரதி யோடு மன்னுதொல் புரத்துச் செல்ல
மெய்விடை யுதவ அன்னுேர் விரைந்துடன் தொழுது போனுர்,

யாவர்க்கும் அருள் செய்யும் தமது உலக அருள் காரணத்தால் ஈசன் எவரு டைய நன்ருகிய சித்தத்தையும் அவரை அறியாதபடி புகுந்து மயக்குதலினுலே சித்தசன் என்னும் தன்மையான மன்மதனுக்கு ஈசன் இனைய வார்த்தையைக் கூறி அங்கு அவரவருக்கு உரிய அரசும் சீரும் ஆணையும் பிறவும் நல்கி மைதீட்டிய கண் உடைய இரதியோடும் கூடி மன்மதபுரத்திற்குச் செல்லுமாறு அழியாத அநுமதியைக் கொடுத் தலும் அப்போது இரதியும் மன்மதனும் எம்பிரான் திருவடி மலர்மேல் தாழ்ந்து வணங்கி அதிவிரைவாகப் புறப்பட்டுச் சென்றுர். 90

இரதியும் மதனு மேக இந்திர நீலத் திட்ட
அரியணை யிருந்த நாதன் அம்மையோ டிழிந்து தன்னேர்
திருவுரு வுடைய மேலோர் தேவர்மா முனிவ ரேனுேர்
பரவனர் செல்லப் பூதர் பல்லியந் தெழிப்பச் சென்றுன்.

இரதியும் மன்மதனும் சென்ற பிற்பாடு இந்திரநீலம் என்னும் மணியால் ஆக்கப் பட்ட சிம்மாசனத்திருந்தருளிய எம்பிரானும் கௌரியம்மாளும் இறங்கியருளி தனக்கு ஒப்பாகிய திரு உருவத்தைப் பெற்றுக் கொண்டருளிய உருத்திரமூர்த்திகள், தேவர்கள், முனிவர்கள் இன்னும் ஏனையோர் எம்பிரானை வணங்கியவாறு செல்லும்படியும் பூத கணங்கள் வாத்தியங்களை முழக்கி வரும்படியும் புறப்பட்டு சென்றருளினுர். 91

மன்னுயிர்க் குயிராய் நின்றேன் மால்விடை யேறி மாதைத்
தன்னெரு பாங்கிற் கொண்டு தழீஇக்கொடு நடத்தி வானேர்
தொன்னிலை யமைந்து செல்லத் துவன்றியே கணங்கள் சுற்றப்
பொன்னிய லிமையந் தீர்த்து வெள்ளியம் பொருப்பில் வந்தான்.

உயர்வாகிய உயிர்கட்கு உயிராய் நின்றவராகிய எங்கடவுள், இறைவன் மீதே நாட்டமுள்ள தருமதேவதை என்னும் இடப வாகனத்தின் மீது எழுந்தருளி உலக முதல்வியாகிய எம்பிராட்டியை தன்னொரு பாகத்து அமர்த்தி தழுவி அணைத்தவாறு இடப வாகனத்தை நடத்தி தேவர்கள் யாவரும் முன்பு சுவாமி இங்கு வரும் காலை அவரோடு எப்படி தம், தம் வாகனத்து ஏறி வந்தனரோ அதேபோல இப்போது உருத்திரர், பிரமர், விஷ்ணு, தேவர், முனிவர் யாவரும் தங்களுக்குரிய வாகனங்களில் எழுந்து வரவும் மலையரசனும் வணங்கியவாறு தொடரவும் பொன்மயமான இமய மலையில் நின்றும் நீங்கியருளி வெள்ளி மயமான கைலாய மலைமேல் போயருளினர். 92

அன்னதோர் காலை மாலை அயனைவெற் பரசை வேள்வி
மன்னனை அமரர் தம்மை முனிவரை மாத ரார்கள்
என்னவர் தமையுந் தத்த மிடந்தொறு மேகும் வண்ணம்
முன்னுற விடுத்தா னென்ப மூலமும் முடிவு மில்லோன்.

அவ்வாறாகிய நேரத்து திருக்கயிலாய மலைமேற் செம்பொற் கோவிலைச் சேரும் முன்பாக சுவாமி தம்மைச் சூழ்ந்து வந்த நாராயணக்கடவுளை, பிரமதேவரை, மலையரசனை, முனிவரை, மஹாலெட்சுமி, சரஸ்வதி இந்திராணி முதல் தேவபத்தினிகள் யாவரையும் அவரவர் இடங்களுக்குச் செல்லுமாறு பணித்தருளினர் தனக்கு மூலமும் முடிவும் இல்லாத தனிப்பொருளாகிய சிவபிரான் எனப்படுபவர். 93

அடுகன லவன்கூர் மாண்டன் ஆடகன் ஐயன் சிம்புள்
வடிவின ஞதி யான வரம்பிலா உருத்தி ரர்க்குங்
கடகரி முகத்தி னற்குங் கணங்களில் தலைமை யோர்க்கும்
விடையினை யுதவி ஐயன் வியன்பெருங் கோயில் புக்கான்.

அப்பால் யாவற்றையும் சங்கரிக்கும், அக்கினி வடிவினனாகிய காலாக்கினி உருத்திரமூர்த்தி, கூர்மாண்ட உருத்திரமூர்த்தி, ஆடகேச உருத்திரமூர்த்தி, சரபப்பட்சி வடிவுகொண்டு முன்பு அருள்புரிந்த வீரபத்திர உருத்திரமூர்த்தி ஆதியாகச் சொல்லப்பட்ட உருத்திரமூர்த்திகளுக்கும், மதம் பொழியும் யானை முகமும் அருள் நிறைவாகிய திருக்கண்ணை உடைய விநாயகப் பெருமானுக்கும் செல்லுமாறு அநுமதியைக் கொடுத்தருளி அப்பால் இறைவியோடும் எமது பகவான் செம்பொன் மயமான தனது திருக்கோயிலில் புகுந்தருளினர். 94

ஏறெனுங் கடவுள் மீதில் இம்மென இழிந்து தன்னேர்
கூறுடை முதல்வி யோடுங் கோநகர் நடுவ ணெய்தி
ஆறணி சடையெம் மண்ணல் அரியணைப் பீட மீதில்
வீறொடு தொன்மை யேபோல் வீற்றிருந் தருளி னனே.

அங்கு சென்றருளி இடபம் என்னும் தரும தேவதையான கடவுள் மீதில் நின்றும் அதி விரைவாக இறங்கியருளி தன்னுடைய ஒருபாதி வடிவமாக ஒன்றிய பிராட்டியோடும் தனது செம்பொற் கோயில் நகரின் நடுவணுக எய்தி கங்கை நதியணிந்த சடையுடைய எம் அண்ணலாகிய சிவபிரான் சிங்கங்கள் சுமந்தருளும் சிம்மாசனத்தின் மீது உலகருள் கருணையால் வீறுகொண்டு வீற்றிருந்தருளினர். 95

அன்பினர்க் கெளிவந் துள்ள ஆதியம் பரமன் மாது
தன்புடை யாகச் சீயத் தவிசின் வீற்றிருத்த லோடுந்
துன்பகன் றிருபா லாகித் துவன்றிய உயிர்க ளெல்லாம்
இன்பொடு போக மாற்றி இனிதமர் வுற்ற வன்றே.

அன்பினர்களாகிய அடியார்களுக்கு எளிதாக வெளிவந்துள்ள எப்பொருட்கும் ஆதியாகிய பெருமான் உமையம்மையாகிய அருள் முதல்வியெனும் பெண் தன் பக்கராக அமர சிங்க ஆசனத்து அமர்ந்திருத்தலோடும் ஆண் பெண் ஆகிய இரு பகுதி

யினரும் ஒருவரோடொருவர் கூடி அநுபவிக்கின்ற இன்பநிலை முன்னர் சுவாமி யோக நிலையில் அமைந்த நிலையில் பெறமுடியாதபடி வேதனை உற்றூர் யாவரும் இப்போ ஈசன் அம்பாளோடு கூடி இருத்தலால் தங்கள் தங்கள் துணைவிகளாகிய பெண்களோடு கூடி இன்பமுற்று புத்திரபாக்கியம், சம்பத்து, சிறப்பு, மகிழ்வு, இன்பம் யாவும் பெற்று இனிது அமர்ந்திருந்தார்கள்.

இத் திருக்கல்யாணம் காணும் தவப்பேறு மேலான ஒன்று, இந்த அருமைப் பாட்டினை உணர்ந்து பட்டினத்தாரும் தமது 'கோயில் நான்மணி மாலை' என்னும் பாடல் ஒன்றிலே வேண்டுகிறூர். பெருமானே! நினது திருமணத்தைத் தரிசித்திருந்த தேவர் பலர் உம்மைத் துதித்தார்கள். உமது ஆயிரம் நாமம் சொல்லி அவ்வாறுகத் திருமணம் தரிசித்து பணிந்து நின்று உமக்கு அறுகினைச் சாத்தி தாங்கள் திருமணம் தரிசிக்க வந்த தமர் என எழுதிய அத்திருவேட்டிலே என் பெயரையும் எழுதும்படி பிரார்த்திக்கின்றேன் எனக் கூறுகிறூர்.

இப்பாடல் பின்வருமாறு;

உரையின் வரையும் பொருளின் அளவும்
இருவகைப் பட்ட எல்லையும் கடந்து
தம்மை மறந்து நின்னை நினைப்பவர்
செம்மை மனத்தினும் தில்லைமன் றினும்நடம்
ஆடும் அம்பல வாண நீடு
குன்றக் கோமான் தன்திருப் பாவையை
நீல மேனி மால்திருத் தங்கையைத்
திருமணம் புணர்ந்த ஞான்று பெருமநின்
தாதவிழ் கொன்றைத் தாரும் ஏதமில்
வீர வெள்விடைக் கொடியும் போரில்
தழங்கும் தமருகப் பறையும் முழங்கொலித்
தெய்வக் கங்கை ஆறும் பொய்தீர்
விரையாக் கலியெனும் ஆணையும் நிரைநிரை
ஆயிரம் வகுத்த மாயிரு மருப்பின்
வெண்ணிறச் செங்கண் வேழமும் பண்ணியல்
வைதிகப் புரவியும் வான நாடும்
மையறு கனக மேருமால் வரையும்
செய்வயல் தில்லை யாகிய தொல்பெரும் பதியுமென்று
ஒருபதி னுயிரந் திருநெடு நாமமும்
உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள்
அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின்
தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவன் நின்னருள்
ஆணை வைப்பிற் காணுெ அணுவும்
வானுற நிமிர்ந்து காட்டும்
கானில்வால் நுளம்பும் கருடனு தலினே. —கோயில் நான்மணிமாலை, பா-4

திருக்கல்யாணப் படலம் முற்றிற்று

**ஆகத் திருவிருத்தம் 850**

சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, 450, கே. கே. எஸ். வீதி, யாழ்ப்பாணம் 319-73.

251

உ

# 11. திரு அவதாரப் படலம்

பற்பக லினைய வாற்றாற் படர்தலும் பின்னோர் வைகல்
முற்படும் அயன்மால் வேள்வி முதலவன் திசைகாப் பாளர்
சொற்படு முனிவர் வானோர் யாவருந் தொல்லை மேரு
வெற்பினிற் குழுமிச் சூரால் மிகமெலிந் திரங்கிச் சொல்வார்.

பற்பகல் இனைய தன்மையாக எம்பிரான் போகமார்த்த பூண்முலையாளோடும் பொருந்தி வீற்றிருந்தருளலும் பின்னால் ஓர்நாள் எல்லார்க்கும் முற்பட்ட பிரமதேவர், நாராயணக் கடவுள், யாகங்களைப் புரிந்து அதனால் மேம்பாடுற்ற தேவர் முதல்வனான இந்திரன், திக்கினைக் காவல் செய்யும் அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன் முதலியோர், மேலாகச் சொல்லப்படும் முனிவர், தேவர்கள் ஆகிய யாவரும் சூரபன்மன் என்பானால் அடிமைகளாக்கப்பட்டு அவன் பணியால் மிகவும் மெலிந்து இரங்கி துன்புற்று எல்லாருமாக பொன்மயமான முன்னை மேருமலையில் கூடி இரக்கத்துடன் இனைய வார்த்தைகளைச் சொன்னார். 1

உலகினை அவுணர்க் கீந்தே யோகிபோல் வைகி நம்பால்
மெலிவினைப் படுத்தி யாம்போய் வேண்டலும் இரக்க மெய்தி
மலைமக டன்னை வேட்டான் மைந்தனைத் தந்து நம்மைத்
தலையளி புரியான் வாளா இருப்பதென் தாணு வானோன்.

''எமது பெருமான் உலக அரசாட்சியை அசுரர்களிடத்து கொடுத்து அவர்கள் அட்டூழியம் புரிய தாம் அறியார் போல் யோகத்திருப்ப நாம் அசுரர் செய்யும் இன்னல் தாங்காது மெலியப்பட பின்னர் யாம் சென்று பெருமானை வேண்டலும் எம்பால் இரக்கமெய்தி மலையரசன் புத்திரியாகிய பார்வதி அம்மையாரைத் திருமணம் செய்துங்கூட தம்பால் ஓர் குழந்தையைத் தோற்றச்செய்து அப்பெருமானால் எமது இன்னல் நீக்கித் தலையளியான மேம்பாட்டைத் தராதபடி இன்னமும் வீணே காலம் போக்கி சோதியான கொழுந்தாய் தோன்றிய பெருமான் ஏன் இருக்கின்றார்'' எனப் பேசினர். 2

இவறலு மிகலு மின்றி யார்க்குமோர் பெற்றித் தாகி
அவரவர் வினைகள் நாடி அதற்படு பொருளை நல்குஞ்
சிவனையாம் வெறுத்தல் குற்றஞ் சிறந்தநோன் பியற்றி டாதே
தவறுசெய் தனமென் றெம்மை நோவதே தக்க தென்றார்.

பின்னரும் இவர்கள் சொல்வார், ''சிவபிரான் பகைமை, அன்பு என்னும் தன்மை இரண்டும் எவர்பாலினும் இல்லாமல் யார்க்கும் ஓர் தன்மையான பெற்றிமை கொண்டு அவரவர்களின் வினைகளை நாடியறிந்து அதற்குரிய பொருளை ஈபவன் ஆனமையால் அவ்வாறாகிய சிவனை யாம் வெறுத்தல் குற்றமாகும். எங்கள் இப்போதுள்ள தீங்குகள் எம்மைச் சாராதிருக்கும்படி நாம் தவம் செய்திருக்கவேண்டும். இத் தவக் குறைவால் நாம் படும் துயரத்திற்கு முற்றிலும் காரணமான எங்களை நாங்கள் நொந்துகொள்வதே தக்கது'' என்றார்கள். 3

ஆயினு மவன்ருள் போற்றி அடையின்நன் கனைத்து மாகுந்
தீயன வகலு மீது திண்ணமாம் அதனுல் இன்னுங்
காய்கதிர் மதிசூழ் கின்ற கயிலையங் கிரியின் முக்கண்
நாயகற் கிதனைக் கூற நாமெலாம் போது மென்ருர்.

''எது எப்படியாயினும் சிவபிரான் திருவடிகளைப் போற்றிசெய்து சரண் அடைந்தால் எல்லாவித நன்மைகளும் சேரும். தீயனவாகிய யாவும் நீங்கும். இதுவே துணிபு ஆகும். ஆனபடியால் இன்னமும் நாங்கள் காய்கின்ற கிரணங்களை உடைய சூரியன், சந்திரன் இவர்கள் வலம் வரும் கைலையாகிய மலையைச் சார்ந்து அங்கு வீற்றிருக்கும் முக்கண் மூர்த்தியாகிய சிவபிரானுக்கு எங்கள் துயரினைச் சொல்ல நாம் எல்லோரும் திருக்கைலாய மலைக்குப் போவோம்'' என்றனர். 4

போதர விசைந்த காலைப் பொன்னலர் கமலப் புத்தேள்
மேதகு பரமன் செய்கை வினவியே ஏகல் வேண்டுந்
தூதுவ ஞெருவன் றன்னைத் தூண்டிமுன் னறிது மென்றே
ஊதையங் கடவு டன்னை நோக்கியீ துரைக்க லுற்ருன்.

அவ்வாறு எல்லாரும் பேசி போவதற்கு இசைவுகொண்ட நேரத்து பொன் மலரும் தாமரை மலர்மேல் இருப்பிடம் கொண்ட பிரமதேவர் இவற்றைக் கேட்டுச் சொல்வார், ''எம்மில் யார்க்கும் மேலான சிவபிரான் செய்கை எவ்வாறு இப்போ இருப்பது என வினுவிக் கொண்டு பின் நிலையறிந்துதான், யாம் அங்கு செல்லல் வேண்டும். ஆகையால் தூதுவன் ஒருவனை நாம் முன் கைலாயமலைமேல் செலுத்தி அங்குள்ள நிலையை முதலில் அறிவோம்'' எனக் கூறி முன்பாக நின்ற வாயு பகவானை நோக்கி இதைச் சொல்லலானுர் பிரம தேவர். 5

வடவரை யதனில் மூன்று மாண்குவ டெறிந்து வெளவி
உடல்சின வரவ முட்க உததியி லுய்த்த மைந்த
படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பண்ணவன் செயலை வெள்ளிக்
கடிவரை நகரத் தெய்திக் கண்டனை மீடி யென்ருன்.

''வாயு தேவனே! நீ வடக்கே உள்ள மேருமலையின் குடுமியாகிய அதன் மூன்று சிகரங்களையும் உன் வலியால் தூக்கி எறிந்து அப்பால் இட்டு உடலில் சினமுடைய ஆதிசேடன் என்னும் பாம்பும் ஏங்கும்படி வலி செய்தவன். ஆகவே இத்தகைய வீர மைந்தனே! நீ படர்கின்ற போலும் அழகுடைப் பிறையணிந்த சடையுடைய சிவபிரான் செயல் யாது என கைலாய மலைமேல் உள்ள அவரது நகரத்திற் சென்று நேரிற் கண்டறிந்து வருவாயாக'' என்ருர் பிரம தேவர். 6

பல்லிதழ் வனச மேலோன் இனையன பகர நோன்ருள்
வில்லுடை மதன வேளை விழித்தடு கடவுள் முன்னஞ்
செல்லுவ தரிது செல்லில் தீமையே பயக்கு மென்பால்
ஒல்லுவ தன்றிச் செய்கை உள்ளமும் வெருவு மென்ருன்.

வரிசையான இதழ் கொண்ட தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமதேவர் இவ்வாறு கூற அதனை வாயு தேவன் கேட்டுச் சொல்வான், ''ஐயனே! மிக வலி கொண்டவனும் வில்லை உடையவனுமாகிய மன்மதனைப் பார்வையால் உற்று நோக்கி

எரித்தருளிய கடவுளாகிய சிவபிரான் முன்னர் செல்லுவது மிக அரிது. சென்றால் தீமையே பயக்கும். என்னால் முடியக்கூடிய கருமம் அன்று இது. இதை நினைத்தால் எனது உள்ளமும் வெருவி அஞ்சும்'' என்றான் வாயு பகவான். 7

கூற்றிது நிகழ்ந்த வேலைக் கோகன தத்து மேலோன்
காற்றினுக் கரசை நோக்கிக் கம்பலை கொள்ளேல் யாண்டும்
ஊற்றமொ டுலவல் செய்யு மொருவனை நீயே யன்றி
வீற்றொரு தேவருண்டோ மேலிது புரிதற் பாலோர்.

இந்த வார்த்தை பேசப்பட்டபோது தாமரை மலர் மேலவரான பிரம தேவர் காற்றினுக்கு அரசனைப் பார்த்து, ''வாயு பகவானே! பயப்படாதே. எல்லா இடத்தும் இயல்பாகச் செறிந்து நின்று உலாவல் செய்யும் ஒருவரான உன்னையன்றி வேறு ஒரு தேவர் இங்கே உளரோ இந்தக் கருமத்தைச் செய்யக்கூடியவர்.'' 8

உற்றுழி உதவி செய்வோர் உலப்புறு தெவையும் ஈவோர்
அற்றமில் தவத்தா றுற்றோர் அமர்புரி வீர ராவோர்
மற்றொரு பொருளும் வெஃகார் வருத்தமு மோரார் ஆவி
இற்றிட வரினும் எண்ணார் இனிதென மகிழ்வ ரன்றே.

பிரமதேவர் பின்னரும் சொல்வார், ''வாயுதேவனே கேள். ஒருவர்க்கு உதவி தேவையானபோது உதவி செய்வோரும், இல்லை என்னாமல் இரந்து கேட்போருக்கு உலோபித் தன்மையற்று கொடுப்போரும், குற்றம் நீங்கிய தவ வழிச் செல்வோரும், போர் புரியும் வீரர் ஆனவரும் ஆகிய இவர்கள் யாவரும் தாம் மேற்கொண்ட இந்த இந்த செயலையே அன்றி பொன்னைக் குவித்தாலும் வேறு ஆசையூட்டும் எப்பொருளைக் கொடுத்தாலும் பிறிதை விரும்பார். தாம் பிறர்க்கு உதவி செய்தலில் அல்லது பொருள் கொடுத்தலில், தவ வாழ்க்கையில், போரில் தமக்கு எத்துணைத் துன்பங்கள் உயிரே போகும்படி வந்தாலுங்கூட அதைப் பொருட்படுத்தார்கள். அப்படியான துயரம் தமது சேவையிற் காணப்படினும் அது இனிது என மகிழ்வார்.'' 9

ஆதலின் எங்கட் கெல்லாம் ஆற்றிடு முதவிக்காகப்
போதியால் ஐயவென்று புகழ்ச்சியால் இனைய பல்வே
றேதிடு பொருண்மை கூற இசைந்தனன் எழுந்து தீயின்
காதலன் விடைகொண் டேகிக் கயிலைமால் வரையிற் சென்றான்.

''ஆனமையால் ஐயனே! எங்கட்கெல்லாம் செய்யப்பட வேண்டிய இந்த உதவிக்காக நீ மறுக்காது போவாயாக'' என்று பிரமதேவர் வாயுதேவனைப் புகழ்ந்து இனைய வார்த்தைகள் கொண்டு உதவி செய்வாரின் மேம்பாடான பெருமையை எடுத்துச் சொல்லலும் அதுகேட்ட வாயுதேவன் இசைவுகொண்டு எழுந்து பிரமதேவரிடம் திருக்கைலாய மலை செல்வதற்கு விடைபெற்றுக்கொண்டு சென்று திருக்கைலாய மலையைச் சேர்ந்தான். 10

குன்றதன் புடையில் வீழுங் குரைபுன லாற்றின் ஆடி
மன்றலங் காமர் காவின் மலர் மணம் அளாவி வாரித்
தென்றியா யசைந்து மெல்லச் சினகரம் புகுது மெல்லை
நின்றதோர் நந்தி காணுஉ வுரப்பினன் நெடிது சீறி.

கைலாய மலைப்புற மலைக்குன்றுகளின் வழிந்தோடும் அருவியாற்றில் வாயுதேவன் நீராடி பின்னர் அழகான நறுமணம் கொண்ட பூஞ்சோலையின் வாசனையோடும் அளாவி வாரிக்கொண்டு தென்றற் காற்ருக மெல்லென அசைந்துகொண்டு மெதுவாகத் திருக் கைலாய மலைமேல் உள்ள செம்பொற் கோயிலின் வாசலில் நுழையும் எல்லையில் அங்கு காவலாக நின்ற நந்தியெம்பெருமான் கண்டு அதி உக்கிரத்தோடும் கோபித்துச் சீறி உரப்பினர். 11

பொற்பிரம் பொன்று பற்றிப் பொலன்முதற் கடையைப் போற்றி
நிற்புறும் ஆணை வள்ளல் நெடுஞ்சினத் துரப்பலோடுங்
கற்பொழி யெழிலி கான்ற கனையொலி கேட்ட பாம்பின்
முற்படர் கின்ற காலோன் மொய்ம்பிலன் வெருவி வீழ்ந்தான்.

திருக்கையிலே பொன்னினுல் செய்த பிரம்பொன்றைப் பிடித்தபடி சிவபிரானது கோவிலின் அழகான முதல் வாய்தலில் காவல் புரிந்திட்டருளும் அளவற்ற ஆணை வலிகொண்ட அருள் வள்ளலான நந்திதேவர் கோபத்தோடு உரப்பலும் அது கேட்டு மெதுவாக உள்ளே ஏகிய வாயு தேவன் ஏங்கித் திடுக்குற்று கல்லைப்போல் மழை பொழியும் மேக முழக்கம் கேட்ட பாம்புபோல் வலியிழந்து கீழே விழுந்தான், 12

ஒல்லென வீழ்வுறும் உயிர்ப்பின் காவலன்
எல்லையில் அச்சமொ டிரங்கி யேயெழீஇத்
தொல்லையின் உருக்கொடு தோன்றி நந்திதன்
மல்லலங் சழல்களை வணங்கிக் கூறுவான்.

திடுக்குற்று அங்கு வீழ்ந்த சுவாசங்களுக்கெல்லாம் அதி தெய்வமான வாயு பக வான் அளவற்ற பயம் கொண்டவனுய் இரங்கித் துன்பப்பட்டு ஒருவாறு எழுந்து தனது பழைய சுபாவ வடிவத்தைக் கொண்டு தோன்றி அவ்விடத்து காவல்கொண்ட நந்திதேவருடைய அருள்தரும் அழகிய திருப்பாதத்து வணங்கிக் கூறுவான். 13

மாலயன் மகபதி வானு ளோரெலாம்
ஆலமர் கடவுளை யடைதல் முன்னிநீ
காலைய தறிந்தனை கடிது செல்கென
மேலுரை செய்தனர் வினையி னேனுடன்.

"ஐயனே, நந்தி பகவானே! தாமரை மலராசனராகிய பிரமதேவர் மற்றும் தேவர்கள் எல்லாரும் கல்லால விருட்சத்தின் கீழிருந்து அறமுரைக்கும் கடவுளான சிவபிரானை அடையும்படி நினைந்து எம்பிரான் இருக்கும் காலநிலை எவ்வாறு என அறிய நீ விரைவாகச் சென்று அறிந்து வாவென்ன வினையேனேடும் சொன்னர்கள்."

கறுத்திடு மிடறுடைக் கடவு ளாடலைக்
குறிக்கரி தஞ்சுவல் குறுக என்றியான்
மறுத்தனன் அனையர்தம் வருத்தங் கூறியே
ஒறுத் தெனை விடுத்தன ருடைய வன்மையால்.

"அப்போது நான் அவர்களைப் பார்த்து கறுத்த நஞ்சு தங்கிய கண்டத்தை உடைய கடவுளின் ஆட்சி இப்படியானது, இவ்வண்ணமுடையது எனக் குறித்து அறிய முடியாது. ஆகவே அங்கு செல்ல நான் அஞ்சுகிறேன் என மறுத்தேன். அப்

போது அவர்கள் தங்கள் துயரங்களை எல்லாம் சொல்லி என்னை துயருறுத்தி நீ செல்லத்தான் வேண்டுமென வற்புறுத்தினர் தங்களது வலிமையால்.'' 15

ஆதலின் அடியனேன் அஞ்சி யஞ்சியே
மேதகு தென்றியாய் மெல்ல வந்தனன்
ஓதிட நினைத்திலன் உனக்கு மற்றிது
பேதமை உணர்வினேன் பிழைபொ றுத்திநீ.

''ஆனமையால் யான் வேறொரு வகையும் அறியாது மிகவும் பயந்து பயந்து தென்றல் காற்றாகி மெல்ல மெல்ல வந்துள்ளேன். அவ்வாறு வருகின்ற எனது செயலை தேவரீரோடும் சொல்ல நினைந்திலேன். நான் மிகவும் அறிவு குறைந்தவன். ஆகை யால் பேதையாகிய எனது பிழையைத் தேவரீர் பொறுத்தருள்வீராக.'' 16

தானவர் தொழவரு தகையில் சூரனால்
மானம தொருவியே வருத்துற் றேய்ந்தனன்
ஆனதொன் றுணர்கிலேன் அறிவு மாழ்கினேன்
ஏனைய தேவரு மினைய நீரரே.

''அசுரர் யாவரும் தொழும்படி வந்து அரசாளும், பெரும் தகைமை இல்லாத கொடிய சூரபன்மனால் ஏவப்படும் அடிமை வேலை செய்து மானமழிந்து மதிகெட்டு எனது நல்நிலை யாவும் ஒயப்பெற்றேன். இவ்வாறான என் நிலை எது; எது என் னால் ஆனதான முதற் கருமம் என்றுகூட தெளிவு கொள்ளாதபடி எனது அறிவு மங்கினேன். அங்குள்ள மற்றைய தேவர்களும் என் நிலைபோல்தான் ஆயினார்கள்.''

அறைதரு கணத்தரு ளாதி யாகிய
இறைவநின் முனிவினுக் கிலக்குற் றாரிலை
சிறியவென் பொருட்டினாற் சீற்றங் கோடியோ
பொறைபுரிந் தருளெனப் போற்றி வேண்டினான்.

''யாவராலும் புகழ்ந்து போற்றப்படுகின்ற சிவகணங்கட்கெல்லாம் ஆதியாகிய கடவுளே! நந்தி பகவானே! தேவரீரது கோபத்திற்கு இலக்காகி எதிர் நின்றார் யாரும் இல்லை. ஆகவே மிகச் சிறிய என்பொருட்டினால் தேவரீர் கோபம் கொள்ள லாமோ? என் பிழையைப் பொறுத்து உமது கோபத்தையும் தணித்தருள்வீராக'' என வாயுபகவான் போற்றி செய்து வேண்டினான். 18

ஆண்டகை நந்தியெம் மடிகள் அவ்வழி
மூண்டெழு தன்பெரு முனிவு தீர்ந்தியாம்
ஈண்டுநின் னுயிர்தனை யீதும் நிற்கலை
மீண்டனை போகென விடைதந் தேவினான்.

ஆண்டகை பொருந்திய குருமூர்த்தியாகிய எங்கள் நந்தி தேவர் அது கேட்டருளி அவ்வகையாக கோபத்தினின்றும் தணிவாகி வாயு தேவனை நோக்கி சொல்வார், ''வாயுவே! உனது உயிரை இன்று தப்ப விட்டுள்ளேன். மேலும் ஒரு கணம் இங்கு நில்லாது உடன் மீண்டு போவாயாக'' என விடை கொடுத்துச் செல்லுமாறு வாயு தேவனை ஏவினார் நந்திதேவர். 19

சீரிய நந்தியந் தேவன் ஏவலும்
மாருதன் அவனடி வணங்கி வல்லையின்
நேரறு கயிலையின் நீங்கி நீடுபொன்
மேருவில் விண்ணவர் குழுவை மேவினன்.

சீரும் சிறப்புமுடைய நந்தி தேவர் இவ்வாறு விடைகொடுத்து செல்ல விடுத்த லும் வாயுதேவன் நந்திதேவருடைய மலர்போலும் பாதத்தை வணங்கி அதி விரைவாக தனக்கு நிகர் பிறிதில்லாத திருக்கைலாய மலை நின்றும் நீங்கி எஞ்ஞான்றும் நெடிதோங்கும் பொன்மயமான மகா மேருமலையைச் சேர்ந்து அங்கு கூடி வாயு தேவன் செயலை அறியும்படி ஆவலுடன் இருந்த தேவர் கூட்டத்தை அடைந்தான்.''

மேவரு காலினன் விரிஞ்சன் மாயவன்
பூவடி வந்தனை புரிந்து நந்திதன்
காவலின் வன்மையும் நிகழ்ந்த காரியம்
யாவதும் முறைபட இயம்பி னனரோ.

அவ்வாறு வந்து சேர்ந்த வாயுதேவன் பிரமதேவர் நாராயணக் கடவுள் ஆகியவரின் பூப்போலும் பாதங்களை வந்தனை புரிந்து முன்நின்று அங்கு தான் திருக்கைலாய மலை சென்றதும் அங்கு நந்தி தேவருடைய காவலின் வலிமையையும், எந்நிலையிலும் எவராயினும் அதைக் கடக்க முடியாத அவரது ஆணையையும் தனக்கு அங்கு நேர்ந்த சங்கடங்களையும், காரியங்கள் யாவற்றையும் முறையாக எடுத்து ஓதி நின்றார்.

காற்றுரை வினவியே கமலக் கண்ணனும்
நாற்றிசை முகத்தனும் நாகர் செம்மலுஞ்
சாற்றருந் துன்பினர் தம்மி லோர்ந்திடாத்
தேற்றமோ டினையன செப்பல் மேயினர்.

வாயு தேவனுடைய இந்த வார்த்தையைக் கேட்டதும் தாமரைக் கண்ணர் என்னும் விஷ்ணு மூர்த்தியும், நான்கு திக்கிலும் முகம் உடைய பிரமதேவரும், தேவர் அரசனை இந்திரனும் சொல்லுதற்கரிய துயரம் கொண்டு தாங்களாகவே சிந்தித்துத் தெளிந்து இந்த வார்த்தைகளை யாவரும் பேசத் தொடங்குவார்கள். 22

எந்தைதன் செய்கையோர்ந் தேகு நீயென
வெந்திறல் மருத்தினை விடுத்தும் ஆங்கவன்
நந்திதன் னணையால் நடுக்க முற்றிவண்
வந்தனன் அச்சுறு மனத்த னகியே.

''நாங்கள் எந்தை ஈசனை சிவபிரான் செய்கை இப்போது யாதாய் இருக்குமென சென்று பார்த்து வரும்படி நீ செல்வாயாகவென மிக வலியுடைய வாயுதேவனை அனுப்பினேம். அவன் நந்தியெம்பெருமானுடைய காவல் ஆணையைக் கண்ட போதே நடுக்கமுற்று இவ்விடத்தே திரும்பி வந்துள்ளான். அவன் நிலையைப்பார்க்கும் போது பெரிதும் அச்சம் கொண்ட மனத்தை உடையவனாகவே காணப்படுகிறான்.''

மன்னிய கைலைமால் வரையின் யாமெலாம்
இன்னினி யேகியே ஈசன் றன்முனம்
உன்னருங் காலமொ டுற்ற நங்குறை
பன்னுதல் துணிபெனப் பலருங் கூறினர்.

ஆகையால் சிறப்புற்று ஓங்கிய திருக்கைலாய மலைமேல் நாங்கள் யாபேரும் இனிச் சென்று அங்கு ஈசன் திருமுன்பு சேர்வதற்கு எம்மால் எண்ணமுடியாத எவ்வளவு காலம் சென்றாலும் செல்லட்டும் அவ்வளவு காலமும் நாம் அங்கிருந்து என்றோ ஒரு நாள் அவரை அடைந்து எங்களுக்கு உற்ற குறையை எம்பெருமானுக்கு சொல்லு தலே துணிபு'' என பல தேவரும் ஏகமனதாகச் சொன்னார்கள். 24

இவ்வகை யவரெலாம் இசைந்து செம்பொனின்
மெய்வரை நீங்கியே வெள்ளி வெற்பினில்
தெய்வதக் கோயின்முன் சென்று நந்தியை
அவ்விடை தொழுதிவை அறைதல் மேயினர்.

இவ்வகை அவர்கள் எல்லாரும் உரைசெய்து தீர்மானமாகி இசைந்து போதற் குத் துணிந்து உடன் உண்மையான பொன்னாலான மேருமலையை விட்டு எல்லாரும் நீங்கிச்சென்று வெள்ளி மயமான திருக்கைலாய மலைமேல் சேர்ந்து. விளங்கும் தெய்வ மயமான செம்பொற் கோயில் முன் சென்று அங்கு திருவாய்தலில் காவல் கொண்டி ருந்தருளும் நந்தியெம்பெருமானை அவ்விடத்து தொழுது வணங்கி திருமுன் நின்று எல்லாரும் சொல்வாராயினர். 25

நந்தியந் தேவுகேள் நங்கள்பால் துன்பெலாஞ்
சிந்தைசெய் திடுதியத் தேவதே வற்கியாம்
வந்தவா றேதியே வல்லைநீ எமையவன்
முந்துறக் காட்டெனா முகமனோ டுரைசெய்தார்.

''நந்தியந்தேவனே! எம்வார்த்தையை கேட்டருள்வீராக! நங்கள்பால் சேர்ந் துள்ள துன்பம் யாவற்றையும் தேவரீரும் சிந்தனை செய்திடுவீராக! அங்கு வீற்றிருந்த ருளும் தேவாதி தேவனான சிவபிரானுக்கு யாம் இங்கு வந்துற்ற வரலாறெல்லாம் தேவரீர் சென்று எம்பிரானுக்கு ஓதியருளி அதிவிரைவாக எங்களையெல்லாம் அவர் திருமுன்பு சென்று காட்டுவீராக'' என பல முகமன் வார்த்தைகளைச் சொல்லி குறை களையும் எடுத்து விளம்பி தம்மைச் சுவாமி திருமுன்பு சேர்க்கும்படி நந்தி தேவரை வேண்டினார்கள் பிரமவிஷ்ணு தேவர்கள் யாவரும். 26

மற்றிவா றுரைசெயும் வானவத் தொகையினை
நிற்றிரால் என்றவண் நிறுவியே உறையுள்போய்க்
கற்றைவார் சடைமுடிக் கண்ணுதற் கடவுடன்
பொற்றடந் தாள்களைத் தொழுதனன் புகலுவான்.

மற்று இவ்வாறு இரந்து வேண்டிப் பேசி நின்ற தேவர்கள் கூட்டத்தை நந்தியங் கடவுள் கண்ணுற்று சொல்வார், ''நீங்கள் யாவரும் இங்கு நில்லுங்கள். யான் சென்று சுவாமிக்கு விண்ணப்பித்து வருவேன்'' என அவர்களை அங்கு நிற்பாட்டிப் பின்னர் தான் சுவாமியினுடைய கோயிலுட்சென்று கற்றையாகிய திருச்சடை முடியும் நெற் றிக் கண்ணும் கொண்ட எம்பெருமானை அணுகி அவரின் திவ்விய மலர்போன்ற திரு வடிகளைத் தொழுது வணங்கி முன்நின்று நந்தியெந்தேவர் சொல்லுகிறார். 27

அண்ணலே உனதுபொன் னடிகளைக் காணிய
விண்ணுளோர் யாவரும் வேந்தன்மா லயனொடு
நண்ணினர் என்றலும் நந்தியைத் தெரிகுறீஇத்
தண்ணிலா வேணியான் தருதியென் றருள்செய்தான்.

''அண்ணலே, சிவபிரானே! தேவரீரது பொன்னுன மலரடிகளைக் கண்டு தரிசிக்கும் படியாக விண்ணுடு பொருந்திய தேவர்கள் பலரும் பிரமன் நாராயணக் கடவுள் ஆதியருடன், இங்கு வந்து திருக்கோபுர வாய்தல் முன்னுக சேர்ந்துள்ளார்கள்'', என நந்தியெம்பெருமான் சொல்லி நிற்றலும் அப்போது எம்பெருமான் கருணையாகி நந்தியங்கடவுளை நோக்கி குளிர்மைவாய்ந்த நிலாவைத் தரும் பிறை சூடிய சடையுடைய சிவபிரான் '' அங்கு நிற்பார் யாவரையும் இங்கு அழைத்து வந்து சேர்ப்பாய்'' என அருளால் மொழிந்தருளினுர். 28

அருள்புரிந் திடுதலும் ஆதியம் பண்ணவன்
திருமலர்த் தாள்களைச் சென்னியிற் சூடியே
விரைவுடன் மீண்டுரு வேதன்மா லாதியாஞ்
சுரரெலாம் வம்மெனத் தூயவன் கூவினுன்.

சிவபிரான் இவ்வாறு அருள் புரிந்திடுதலும் ஆதியெம் கடவுளாகிய பெருமானின் திருவடி மலரில் நந்தியெம்பெருமான் தாழ்ந்து தமது தலையிற் சேரும்படி வணங்கி எழுந்து விரைவாக சந்நிதிநின்றும் மீண்டு பிரமதேவன் விஷ்ணுபகவான் முதலாகிய தேவரெல்லாம் குழுமி இருந்த இடம் சேர்ந்து ''எல்லீரும் வாருங்கள்'' என தூயவாழ் வினை உடைய நந்திதேவர் கூவி அழைத்தார். கூவி அழைத்தலாவது சுவாமி அருள் எய்தி அவர்களை வரும்படி உத்தரவு கொடுத்த நேரம் மகிழ்வாகி திரும்ப கோவில் வாசலில் காத்து நின்ற தேவர்களை சத்தமிட்டு ''வாருங்கள் யாவரும்'' என்ருர். 29

கூவியே அருடலுங் கொண்டல்பே ரொலியினுல்
தாவிலா மகிழ்வுறுஞ் சாதகத் தன்மையாய்ப்
பூவினு யகன்முதற் புகலும்வா னவரெலாந்
தேவதே வன்முனஞ் செல்வதே மேயினுர்.

நந்திதேவர் கூவி அருள் செய்தலும் மேகத்தின் பேரோசை கேட்டபொழுது மழை இனிவரும் என குறையாத மகிழ்வுறும் சாதகப் பட்சியின் தன்மைபோல் பெரிதும் மகிழ்வாகி தாமரை மலரில் இருக்கும் பிரமதேவன் முதலாகச் சொல்லப் பெறும் எல்லாக் கடவுளரும் தேவாதி தேவனுகிய சிவபிரான் திருமுன்பு பத்திமை அன்பு இவற்ருேடும் செல்வாராயினர். 30

அம்மையோர் பங்குற அரியணைக் கண்ணுறும்
எம்மையாள் இறைவன்முன் னெய்தியே ஆங்கவன்
செம்மைசேர் தாள்களைச் சென்னியால் தாழ்ந்தெழீஇப்
பொய்ம்மைதீர் அன்பினுல் இனையவா போற்றுவார்.

அவ்வாறு செல்லும் அவர்கள் நேரே காணும்படி அம்மையார் ஒருபக்கராக சிம் மாசனத்தின்மேல் வீற்றிருந்தருளும் எம்மை ஆளும் பெருமான் திருமுன்பு யாவரும் சென்று அங்கு அவருடைய கண் களிகூரவைக்கும் செம்மை சேர்ந்த திருவடிகளைத் தலையால் தாழ்ந்து வணங்கி எழுந்து நின்று பொய்தீர்ந்த அன்பினுல் பிரமவிஷ்ணு முதல் எல்லாத் தேவரும் இனையவாறு போற்றுவார் ஆயினர். 31

நோக்கினும் நுழைகிலே னுவலு கின்றதோர்
வாக்கினும் அமைகிலே மதிப்ப வொண்கிலே
நீக்கரும் நிலேமையின் நிற்றி எந்தைநீ
ஆக்கிய மாயமீ தறிகி லேமரோ.

''பெருமானே! தேவரீரை எமது கண்ணால் பார்ப்பினும் எம் பார்வைக்கு அகப்பட்டீர் இல்லை. சொல்லப்பெறும் எம் வாக்கினாலும் சொல்வதற்கும் வாக்காக அமைகின்றீர் இல்லை. இவ்வண்ணம்தான் உடையீர் என எமது கற்பனையால் மதிப்போம் எனினும் அதற்கும் கற்பனையையும் கடந்து நிற்கிறீர். ஆனால் எம்மோடு உடனாகி ஊனாகி உயிராகி உயிர்தோறும் ஆகி எங்கும் நீக்கமற நிற்கிறீர். எந்தைபிரானே நீர் ஆக்கிய மாயத்தை நாம் அறியோம் அல்லவோ!'' 32

**இருமையு மொருமையும் இரண்டு மொன்றிய**
**ஒருமையு மன்றென உலகம் யாவையும்**
**பெருமையின் இயற்றிய பெரும நின்செயல்**
**அருமறை யானவும் அறிதற் பாலவோ.**

''அம்பாளும் நீரும் என இருவராகி ஒருவரே ஆகிய நீர் பொருந்தி இருப்பவும் அல்லாமல் உலகம் யாவையையும் உமது பெருங்கருணையால் இயற்றி அருளிய பெருமானே! ஒருவனான ஏகனாய், சக்தியும் சிவமுமாய், பரையாகி ஓங்கிய சுடருக்கு உள்ளொளியாய் எங்கும் நிறைவாய், அப்பாலுக் கப்பாலாய் அகில முழுதும் நிறைந்தும் உயிர்கள் எல்லாம் ஆகியும் ஆகாமலும் இருக்கின்ற உமது செயலை அரிய வேதங்களும் அறிய முடியுமோ!'' 33

**உருவொடு தொழில்பெய ரொன்று மின்றியே**
**பரவிய நீயவை பரித்து நிற்பது**
**விரவிய வுயிர்க்கெலாம் வீடு தந்திடுங்**
**கருணைய தேயலாற் கருமம் யாவதே.**

''ஐயனே! தேவரீருக்கு உருவம் இல்லை; பெயர் இல்லை; தொழில் இல்லை. இவையாவும் இல்லாமல் எங்கும் பரவி எல்லாவற்றையும் இயக்கியும் தாங்கியும் நிற்கிறீர். இவ்வண்ணமாகத் தேவரீர் செய்வது யாது காரணம் என நாம் தெளியுங்கால் எங்கும் வாழ்கின்ற உயிர்கட்கெல்லாம் பேரின்பமாகிய முத்தியைத் தந்தருளுகின்ற கருணையே அன்றி வேறுகருமம் யாதாகும்?''

**கடையவனேனைக் கருணையினால் கலந்து ஆண்டு கொண்ட**
**விடையவனே......** (மணிவாசகர்) 34

**அவ்வுயிர் யாவுநின் னருளி லாவழிச்**
**செய்வினை புரிகில சிறிதும் ஆதலால்**
**வெவ்விய நயப்பொடு வெறுப்பி லாதநீ**
**எவ்வகை யோவுல கியற்றுந் தன்மையே.**

''அவ்வாறு உம்மால் ஆக்கப்பட்ட அந்த உயிர்கள் யாவும் தேவரீரின் அருள் இல்லாவழி எச்செயலினையும் செய்யமாட்டா. ஆதலால் குரூரமான விருப்பம், வெறுப்பு ஆகிய இவை யாவும் இன்றி இருக்கும் நீர் எவ்வாறோ இந்த உலகை நடத்தி இயக்கி வருகிறீர்.''

முன்னாகி எப்பொருட்கும் முதலாகி மூவாத கருணையோடும் ஈசன், உலகம், உயிர்கள் அனைத்தையும் இயக்காது இயக்கி நிற்பவன். அவ்வாறு தொழிற்படும் எமது பகவான் உயிர்ப்பொருளாகிய நாம் செயல்களை மேற்கொள்ளுங்கால் விருப்பு, வெறுப்பு,

மகிழ்ச்சி, துன்பம் இத்தனையோடும் கலந்து செயற்படுவதுபோல் அல்லாது விருப்பும் வெறுப்பும் இல்லாது எவ்வாறோ இதனை நடத்துகிறீர் என்றார். இதனை யோகசுவாமிகளும் ''உயிரெலாம் ஆகியும் ஆகாத நின்பெருமை பயிலப்படும் விதமோ'' என்கிறார். ஆகவே ஈசன் விரும்பியும் விரும்பாமலும், கலந்தும் கலவாமலும், அறிந்தும் அறியாமலும் உலகை நடத்துகிறார். இதனை ஞானிகள் அறியுங்கால் 'காணுமல் கண்டு பாடாமல்பாடி பணியாமல் பணிந்து' என்பார்கள். 35

முன்னதின் முன்னென மொழிது மேயெனிற்
பின்னதின் பின்னுமாப் பேச நிற்றியால்
அன்னவை யேயெனில் ஒழிந்த தல்லையோ
என்னென நின்னையாம் ஏத்து கின்றதே.

''முன்னைப் பொருட்கெல்லாம் முன்னனவன் எனப் பேசுவோமானல் பின்னதின் பின்னதாகவும் உம்மையே பேசும்படியாக தேவரீர் நிற்கிறீர். ஆகவே முன்னனது என்றால் முடியவில்லையே; பின்னனவர் எனினும் முதலில்லையே ஆனதினால் தேவரீர் எந்நிலையிலும் ஒழிந்ததில்லையோ; என்னவண்ணம் எப்படியாக நாம் உம்மை ஏத்துகின்றது;''

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானகப் பெற்ற உன் சீரடியோம்

என்னும் மாணிக்கவாசக சுவாமிகளின் வாக்கை ஒப்பநோக்குக. 36

புல்லிய புரம்பொடித் ததுவுங் காமனை
ஒல்லென எரித்ததும் உனக்குச் சீர்த்தியோ
எல்லையில் விதிமுத லெனைத்தும் ஈண்டுநின்
நல்லருள் ஆணையே நடாத்து மென்கையால்.

''பெருமானே மிகக் கேவலமாகச் செயற்பட்ட முப்புரங்களை பொடி செய்த வரலாறும் மன்மதனை நோக்கியபொழுதே எரித்ததுவும் உமக்கு ஓர் பெரும் புகழோ! அல்லவே, ஏனெனில் உலகம் உயிர் எல்லாவற்றையும் படைக்கின்ற பிரமதேவரின் படைப்பு நாராயணரின் காவல் முதல் யாவும் தேவரீரின் நல்ல அருள் ஆணையே நடத்திவரும் என்றமையால், யாவையுந் தரும் பகவானே நீர் முப்புரம் எரித்ததும் மன்மதனைக் கொழுத்தியதும் புகழோ, இல்லையே'' என்றார்கள். 37

எங்களை முன்னரே இயல்பின் ஈந்தனை
எங்களை இவ்வர சியற்று வித்தனை
எங்களொ டொருவனென் றிருத்தி நின்செயல்
எங்களின் அறிவரி தென்று போற்றினர்.

''எங்களைத் தேவரீர்தான் முன்னரே இயல்பாக படைத்தீர்; எங்களை இந்த அரசாட்சி நிலையிலே வைத்தருளி இவற்றை இயற்றுவித்தீர்; அதோடு எங்களில் ஒருவனக உடன் இருக்கிறீர். ஆகவே உமது செயல் யாவும் நீர் எம்முடன் கூட இருக்கிறீராகிலும் அறியமுடியாது இருக்கிறதே!'' என்று எல்லாத் தேவரும் போற்றி செய்தார்கள். 38

அவ்வகை அமர ரெல்லாம் அன்புசெய் தேத்து மெல்லை
மைவரு மிடற்றுப் புத்தேள் மற்றவர் வதன நோக்கி
நொவ்வுற லெய்திச் சிந்தை நுணங்கினீர் நுங்கட் கின்னே
எவ்வர மெனினும் ஈதும் வேண்டிய திசைத்தி ரென்றான்.

அவ்வகையாகத் தேவர்கள் யாவரும் அன்பு செய்து துதித்து நின்ற நேரத்து மைபோலும் கரியகண்டத்தை உடைய கடவுள் அங்கு அத்தேவரின் திருமுகத்தைப் பார்த்து அருள் செய்கிறார். ''தேவர்களே! நீங்கள் யாவரும் தளர்வுகொண்டு சிந்தை நொந்திருக்கிறீர்கள். உங்களுக்கு இப்போது நாம் எவ்வரம் கேட்டாலும் கொடுப்போம். வேண்டிய வரத்தைக் கேளுங்கள்'' என சிவபிரான் திருவாய் மலர்ந்தருளினர். 39

என்றலும் அமரர் சொல்வார் யாமெலா மிந்நாள் காறும்
வன்றிறல் அவுணர் தம்மால் வருந்தினம் அதனை நீங்கி
நன்றிகொள் தொல்லை ஆக்கம் நண்ணுவா னுக நின்பால்
ஒன்றொரு வரம்வேண் டுற்றும் அதனியல் புரைத்துமன்றே.

என்றலும் தேவர்கள் யாவரும் சொல்வார்கள், ''ஐயனே! நாங்கள் இந்நாள் வரையும் மிகவும் வலியுடைய சூரன்தன்னல் மிகவும் வருந்தித் துயருற்ரேம். அதனை நாங்கள் நீங்கி இழந்த எமது பழைய நன்னிலை யதனை நாம் நண்ணும்படியாக தேவ ரீரிடத்து ஒரேயொரு வரம் வேண்டுகின்றேம். அதன் இயல்பை தேவரீருக்கு இப்போ சொல்லப்போகிறேம்'' என்றார்கள். 40

மும்மையின் உயிர்கள் பெற்ற முகிழ்முலைக் கன்னியாகும்
அம்மையை மணந்த தன்மை ஆங்கவள் இடமா ஈங்கோர்
செம்மலை யளித்தற் கன்றே தீவினைக் கடற்பட் டுள்ள
எம்மையாளு வதற் கேதுக் காட்டிய இயற்கை யல்லால்.

''சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் உலகங்களை ஈன்றவளாகிய அபரஞானம், பரஞானம் என்னும் பால் முகிழ்க்கும் முலைகளை உடைய நித்திய கன்னிகையாகிய அம்மையாரைத் திருமணம் செய்த தன்மை அவளிடமாக இவ்விடத்து தலைமையான குழந்தையைத் தந்து உதவி இதனல் தீவினை என்னும் கடல் பட்ட எம்மையெல்லாம் ஆளுவதற்கு ஏதுவை காட்டிய இயற்கையையே அல்லாமல் எம்பிரானே வேறு என்னுகும். தேவரீர் திருமணம் செய்தது உமக்காக அல்ல, எம்மையெல்லாம் ஆண்டு கொள்ளும் பொருட்டாகும்'' என்றார்கள். 41

ஆதியும் நடுவு மீறும் அருவமு முருவு மொப்பும்
ஏதுவும் வரவும் போக்கும் இன்பமுந் துன்புமின்றி
வேதமுங் கடந்து நின்ற விமலஓர் குமரன் றன்னை
நீதரல் வேண்டும் நின்பால் நின்னையே நிகர்க்க வென்றார்.

ஆதியும் நடுவும் முடிவும் அருவமும் உருவமும் ஒப்பும் ஏதுவான காரணங்களும் வரவும் போக்கும் இன்பமும் துன்பமும் இவையாவும் இல்லாமல் வேதமும் கடந்து நின்ற விமலனே, சிவபிரானே! ஓர் குமரன் தன்னை நீர் இப்போ தந்தருளல் வேண்டும். தேவரீரையே முற்றிலும் அந்த குமரன் நிகர்த்திருக்கும்படியாக என்று பிரார்த்தித்தார்கள். 42

வந்திக்கு மலரோ ஞதி வானவர் உரைத்தல் கேளாப்
புந்திக்குள் இடர்செய் யற்க புதல்வனைத் தருது மென்ன
அந்திக்கு நிகர்மெய் யண்ணல் அருள்புரிந் தறிஞ ராயோர்
சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுகம் ஆறுங் கொண்டான்.

இவ்வாறு பிரார்த்தித்து நின்ற தாமரை மலர் மேலவரான பிரமதேவர் முதல் அங்கு நின்ற அனைத்துக் கடவுளர் சொன்ன வார்த்தையைக் கேட்டு ஈசன் சொல்வார் ''தேவர்களே உங்கள் மனதில் கவலை கொள்ளல் வேண்டாம். ஓர் புதல்வனை இப்போது தருகின்றேம்'' என்று அந்திக்காலத்து செக்கர்வானத்தை ஒத்த செம்மேனிச் செல்வ ராகிய சிவபிரான் அருள் செய்து உடன் அறிவாளிகள் தம்மைத் தியானிக்கின்ற சொரூபமான மிகப் பழைமையான தனது திருமுகங்கள் ஆறும் கொண்டார். *43*

நிற்புறும் அமரர் யாரும் நெஞ்சுதுண் ணென்ன நீடும்
அற்புத நீரராகி அருள்முறை யுன்னிப் போற்றச்
சிற்பரன் முன்கொண் டுள்ள திருமுகம் ஆறு தன்னில்
பொற்புறு நுதற்கண் டோறும் பொறிதனித் தனிவந் தான்.

அவ்விடத்து நிற்கின்ற தேவர்கள் யாவரும் தங்கள் நெஞ்சம் துண்ணெனும்படி திடுக்குற்று ஓயாது பெருகும் அற்புதமும் அதிசயமும் கொண்டு சுவாமி திடீரெனக் கோலம்மாறி ஆறுமுகத்தோடும் பொலியும் கண்கொள்ளாக் கவின் காட்சி கண்டு கை கூப்பித்தொழுது சுவாமியினுடைய அருண் முறையை உன்னிப்போற்றி செய்ய அப்போது ஞானசொரூபரான எமது பகவான் தான் கொண்டுள்ள ஆறு திருமுகம் தன்னில் பொற் புடன் பிரகாசிக்கும் ஆறு நெற்றிக்கண்ணி னின்றும் ஒவ்வொன்றுக வெளிவந்த ஆறு அக்கினிப் பொறிகளைத் தந்தான். *44*

ஆவதோர் காலை ஈசன் அறுமுக நுதற்கண் மாட்டே
மூவிரு பொறிகள் தோன்றி முளரியான் முதலா வுள்ளோர்
ஏவரும் அணுகல் செல்லா எல்லைதீர் வெம்மைத் தாகிப்
பூவுல கண்ட முற்றும் பொள்ளெனப் பராய வன்றே.

அவ்வாருகியகாலை ஈசனுடைய நெற்றிக்கண்மாட்டிருந்து ஆறு பொறிகள் தோன்றி அங்கு எம்பிரானைச் சூழ்ந்து வணங்கிய அற்புதநீரரான தேவர் பிரமன் விஷ்ணு யாவரும் கிட்ட அணுக முடியாதபடி அளவு கடந்த வெப்ப முடையதாய் பூவுலகம் அண்டங்கள் எங்கும் திடீரென ஒரே அக்கினி மயமாகப் பரவிக்கொண்டது. *45*

மாதண்டங் குலவு நேமி வால்வளை வயிர வொள்வாள்
கோதண்டம் பரித்தோன் வேதாக் குறித்துணர் வரிய சோதி
வேதண்டம் பரவிற் றென்ன மேதினி சூழ்ந்து விண்போய்
மூதண்டங் காறுஞ் சென்ற முதல்வன்கண் ணுதலிற் செந்தீ.

பெரிய தண்டாயுதம், சக்கரம், பாஞ்சன்யம் என்னும் வெள்ளைச் சங்கு, சக்கரம் வயிரமான கூர்மையான வாள், சார்ங்கம் என்னும் வில் ஆகிய ஐந்து ஆயுதங்களையும் தாங்கிய விஷ்ணுமூர்த்தியும் வேதக்கடவுளாகிய பிரமதேவரும் ஆகிய இவர்கள் இன் றும் என்றும் குறித்து உணர்வரிய சோதி அன்று அவர்கள் போர் செய்தபோது நடுவணே தோன்றி எல்லா அண்டமும் நெருப்பு பரவி மேற்போன தன்மைபோல

இப்போ இந்த ஆறு அக்கினிப் பொறிகளும் பரந்து மேல் விண்ணெலாம் சென்று அறிதற்கரிய அப்பால் உள்ள பெரிய அண்டங்கள்காறும் முதல்வனுன சிவபிரான் கண்ணினின்றும் தோன்றிய செவ்வொளி உடைய அக்கினியானது பரவியது. 46

மங்கையோர் பங்குடை வள்ளல் ஏந்திய
செங்கனல் ஊழியிற் செறிவ தாமென
அங்கவன் விழிபொழி அனலம் யாவையும்
எங்குள வுலகமும் ஈண்ட லுற்றவே.

உமையம்மையாரை பாகமாக உடைய அருள் வள்ளலாகிய சிவபிரான் திருக்கையில் ஏந்திய சிவந்த அக்கினியானது ஊழிமுடிவாகிய காலத்து அகில உலகம் எல்லாம் செறிந்து பரந்து பற்றிக்கொள்வதுபோல அங்கு அப்பெருமான் திருநெற்றியில் காணும் கண்ணில் தோன்றிய அக்கினியானது இப்போ எங்கும் உள்ள உலகமும் பரவி ஈண்டலுற்றது. 47

ஆங்கனந் தழலெழ அகில முற்றுமாய்
ஓங்கிய கால்களும் உலைவுற் றோய்ந்தன
வாங்கிய திரைக்கடல் வறந்த தாயிடைத்
தீங்கனல் வடவையும் செருக்கு நீங்கிற்றால்.

அவ்வாருகத் தோன்றிய இந்த அக்கினி எழுதலும் அகில உலகம் முழுதுமாக ஓங்கி நிறைந்த வாயுக்களும் காற்றும் உலைவுற்று ஓய்ந்து போயது. திரைக்கடல் திரைகளை வீசாது உள்வாங்கிக்கொண்டது மட்டுமல்லாமல் வற்றியும் போயது. அவ்விடத்து உள்ள தீமைபுரியும் வடவாமுகாக்கினி என்பதும் தனது செருக்கை நீங்கிக் கொண்டது. காற்று வேகமுடையது, வேகம் கட்டுப்படுத்த இயலாத அதுவே தன் வேகம் அடங்கி ஒய்ந்தது. வடவாமுகாக்கினி மிக பொல்லாங்குடையது சமுத்திர நீரில் மறைந்திருந்து காலம் பார்த்து உலகை அழிப்பது. பெரும் செருக்குடையது ஆக இந்த அக்கினி தோன்ற இவையாவும் தம்செயல் நீங்கி அடங்கியன. 48

பக்கன பாரகம் பதலை முற்றுற
நெக்கன பணிகள்மெய் நெளித்து நீங்கிய
திக்கயம் அரற்றியே தியக்க முற்றன
தொக்கன உயிர்த்தொகை துளக்க முற்றவே.

பூமி வெடித்தது மலைகள் யாவும் நெக்கிப்போயின. பாம்புகள் மேனியை நெளித்துக்கொண்டு இடம் விட்டு நீங்கின. திக்கு யானைகள் முழுவதும் அரற்றித் தியக்க முற்றன. தொகுதியாகப் பரந்த உயிர்கள் யாவும் துளக்கம் உற்று நடுக்கமுற்றன. 49

காரண மில்லவன் கண்ணிற் கான் றதீப்
பேரருள் புரிந்திடப் பிறந்த பான்மையால்
ஓருயிர் தன்னையும் ஒழிவு செய்தில
ஆரையும் எவற்றையும் அச்சஞ் செய்தவே.

தனக்கோர் மூலகாரணமில்லாதவன் திருக்கண்ணில் நின்றும் போந்த நெருப்பானது உலகிற்குப் பேரருள் புரிந்திடப் பிறந்த தன்மையால் இவ்வாறு எல்லா கொடும் பொருளின் பெருமையையும் அடக்கினுலும் ஓர் உயிருக்காதல் ஒரு தீங்கும் செய்யவில்லை:

அன்னதன் வெம்மைகண்டு அமலன் பாங்குறை
கன்னியும் வியர்த்தனள் கலங்கி யேயெழீஇப்
பொன்னடி நூபுரம் புலம்பித் தாக்குறத்
தன்னதோ ருறையுளேச் சார ஓடினுள்.

அவ்வாருக அந்த நெருப்பின் வெப்பத்தைக் கண்ணுற்று நிர்மல சோதிவடிவான ஈசன் பாங்கிருந்த கன்னியான அம்பாளும் மேனி வியர்த்தாள்; கலக்கமுற்றுள். சுவாமி பாகத்தைவிட்டு எழுந்தாள். தம்முடைய பொன்னன திருவடியில் அணிந்த சிலம்புகள் புலம்பி ஒன்றேடொன்று தாக்கும்படி அதிவேகமாக தனது ஒப்பற்ற இருப்பிடத்தை சாரும்படி ஓடினுள். அக்கினி வெப்பம் தாங்காது வேகமாக ஓடினுள் எம்பிராட்டி என்ற மையின் அந்த அக்கினியின் வேகம் சொல்லப்பட்டது. 51

முண்டக ளுதியா முன்னர் நின்றுள
அண்டர்கள் யாருமவ் வழல்கண் டஞ்சியே
விண்டனர் தலைத்தலை வெருவி யோடினர்
பண்டெழு விடத்தினுற் பட்ட பான்மைபோல்.

தாமரை மலரில் இருக்கும் பிரமதேவர் ஆதியாகிய முன்னர் நின்றுள தேவர்கள் யாவரும் அந்த அக்கினி கண்டு அஞ்சி அவ்விடத்தை விட்டு ஓட்டம்பிடித்தார்கள். ஓடும்போது ஒருவர்பின் ஒருவராக ஓடாதபடி தலைத்தலை சிதறி ஓடினர்கள். அவர் கள் சென்றதன்மை முன் பாற்கடல் கடையும்போது எழுந்த நஞ்சினுல் உற்ற அவ தியில் பட்ட அதே தன்மைபோல் ஆனர்கள். 52

தீங்கனல் அடர்தலுஞ் செம்பொற் கோயிலின்
யாங்கணு மாகியே இரிந்த பண்ணவர்
வீங்கிய வுயிர்ப்பொடு மீண்டும் எந்தைதன்
பாங்கரில் வந்தனர் பரியும் நெஞ்சினர்

நெருப்பைப்போலும் உஷ்ணமான அக்கினி எங்கும் அடர்தலும் சிவபிரானுடைய செம்பொற் கோயிலில் யாங்கணுமாகி ஓடிய தேவரெல்லாம் வேகமாக விரைந்து வரும் மூச்சோடு ஓடியும் ஓடிக்களைத்து மீண்டும் எல்லாரும் எம்பிரான் பக்கராக வந்தனர். பரிதவிக்கின்ற நெஞ்சத்தோடும் ஓடிக்களைத்து மூச்செடுக்க திரும்பவும் சுவாமி பாங்கராக பரிதவித்து வந்தனர் தேவர்கள். 53

வலைத்தலை மானென வன்னி சூழ்ந்துழித்
தலைத்தலை இரிந்துளோர் தம்மின் மீள்குறு
நலத்தகு கண்ணுதல் நாதற் சேர்ந்தனர்
கலத்தலை அகன்றிடாக் காகம் போலவே.

வலையில் சிக்கிய மான் வலையினுள் திமிறிப் பரிதவித்தல் போல நெருப்பானது எங்கும் சூழ்ந்துள்ளபோது தலைத் தலையாகச் சிதறி ஓடினர் யாவரும் தம்மில் தாம் இப்போ மீளவும் வந்து வந்து தீதில்லா நன்மைத் திருவருட் பொருளான கண்ணு தல் நாதனைச் சேர்ந்தனர். அது எவ்வாறெனில் நடுக் கடலிலே செல்லும் ஓர் கப் பல் பாய்மரத்தில் வீற்றிருந்த காகத்திற்கு கப்பல் பாய்மரமன்றி வேறுகதி இல்லாத வாறுபோல அக்கினி கண்டு பயந்து வேறெங்கும் ஓடினுலும் ஈசன் திருமுன்பு திரும் பவும் வந்துள்ளார். 54

தோற்றிய நுதல்விழிச் சுடரின் சூழ்வினுக்
காற்றல ராகியே அடைந்த வானவர்
நாற்றடம் புயமுடை ஞான நாயகற்
போற்றிசெய் தினையன புகல்வ தாயினர்.

எம்பிரான்பால் தோன்றிய ஆறு திருமுகங்களின் நெற்றியின் உற்ற கண்ணில் நின்றும் போந்த சுடரின் சூழ்ந்து பரந்த செயலைக் கண்டு பரிந்து ஆற்ருது ஓடிய தேவரெல்லாம் திரும்பவும் எம்பிரானை அடைந்து நான்கு விசாலித்த தோள்களோடும் ஆறுமுகத்தோடும் பொலியும் ஞானநாயகரான பெருமானைப் போற்றி செய்து இந்தவாறு சொல்வாராயினர். 55

வெந்திற லவுணரை வீட்டு தற்கொரு
மைந்தனை அருள்கென வந்து வேண்டினேம்
அந்தமில் அழலைநீ யருடல் செய்தனை
எந்தையே எங்ஙனம் யாங்க ளுய்வதே.

"பெருமானே கொடிய செயல் புரியும் அசுரரை அடக்க ஒரு மைந்தனை அருள் வீராக எனத் தேவரீரை வந்து வேண்டினேம். ஆனல் அதற்குப் பதிலாக எல்லை யற்ற அழலையல்லவோ அருள் செய்துள்ளீர் இதன் நிலை இதுவாயின் துயரம் நீங்கும் படி வழிகேட்ப நீர் துயரம் ஆக்கும் வழியே தந்துள்ளீர் போலும், ஆகையின் ஐயாவே! எந்தைபிரானே! நாங்கள் எங்ஙனம் உய்வோம்?" 56

பங்குறை உமையவள் பாணி யின்வரு
கங்கையெவ் வுலகமுங் கலந்த தாமென
இங்குநின் னுதல்விழி யிருந்து நீங்கிய
பொங்கழ லெங்கணும் பொள்ளென் றீண்டிய.

உமது பக்கராக உறைகின்ற உமையம்மையாரின் திருக்கை விரல்களில் நின்றும் போந்த கங்கை நதியானது எல்லா உலகமும் பரந்து கொண்டதுபோல இங்கு தேவ ரீரின் நெற்றிக் கண்ணினின்றும் நீங்கிப் போந்த பொங்கி எழும் அக்கினிப் பிழம் பானது எங்கணும் பொள்ளென ஈண்டிப் பரந்து நெருங்கிக்கொண்டது". 57

கற்றையஞ் சுடர்பொழி கனல்க ளின்றொகை
சுற்றியெவ் வுலகமுந் துவன்ற லுற்றவால்
மற்றொரு கணத்தவை மாற்றி டாயெனின்
முற்றுயிர்த் தொகையையும் முடிவு செய்யுமால்.

"கற்றையாக பரந்த சுடர் பொழிந்த அக்கினிக் கொழுந்துகள் தொகை எல்லா உலகமும் சுற்றி எந்த எந்த உலகமும் பற்றிக்கொண்டு எல்லாவற்றையும் துவன்றிக் கருக் கத் தொடங்கியது. ஆனமையின் ஐயனே இனி இதை அடுத்தகணமே தேவரீர் மாற் றிடாவிடில் இந்த அக்கினியானது முழு உயிர்த் தொகையையும் முடிவு செய்யுமால்".

விஞ்சிய பேரழல் வெம்மை யாற்றலா
தஞ்சினம் இரிந்தயாம் ஐய நின்னிரு
செஞ்சரண் அடைந்தனம் தெரியின் நீயலால்
தஞ்சம துளதுகொல் எம்மைத் தாங்கவே.

''எங்கும் மிஞ்சிப் பரந்த பெரிய அழல் ஆனதின் வெம்மையை நாம் தாங்காது அஞ்சினேம்; ஓடினேம் அவ்வாறு ஓடிய யாம் ஐயனே தேவரீருடைய செஞ்சரணுகிய திருவடிகள் இரண்டும் எமக்குத் தஞ்சமாக அடைந்துகொண்டோம். ஏனென்றால் எல்லாவற்றையும் உற்று உணர்கின்றபோது தேவரீர் அல்லாது வேறுயாரேனும் எமக்கு தஞ்சமாக இருக்கின்றுரோ எம்மைத் தாங்கிக்கொள்ளும் பொருட்டாக இல்லையே.'' 59

மலக்குறு மனத்தினேம் வருத்த முற்றவும்
உலக்குற நீக்குநீ யொல்லை எம்மிடை
அலக்கண தியற்றுதி யாயின் அன்னதை
விலக்குறு நீரினர் வேறி யாவரே.

''மயக்கமான மலப்பற்றுடைய மனத்தினேம் வருத்தங்கள் முழுவதும் அற்றுப் போமாறு மாற்றுபவன் நீ ஒருவனே. அவ்வாறிருப்பவும் தேவரீர் இப்போது துன்பம் நீங்க குழந்தையை அருளும்படி வேண்டிய யாம் துயருறும்படி எம்மிடை மீண்டும் விரைவுடன் அக்கினியைத் தந்து அலக்கண் செய்தால் அதை விலக்கும் தன்மை கொண்டார் வேறுயாவர். எம்துயர் நீங்க உம்மையன்றி வேறு ஒருவரும் இல்லை. எமது துயரம் சொல்ல சிவனே சோதியே உன்னை அன்றி ஒருவரில்லை. அப்படி இருப்ப நீரே இந்த நெருப்பைத்தந்து துயருறுத்தினல் பின் ஆரோடு நோவோம் ஆர்க்கெடுத்துரைப்போம்'' என்றுர்கள். 60

நிறைமுடிப் பணிமிசை நிலனும் வானமும்
இறைமுடிக் கின்றவிவ் வெரியை நீக்கியே
பிறைமுடிக் கொண்டிடு பெரும எம்முடைக்
குறைமுடித் தருளெனக் கூறி வேண்டினர்.

''நிறைந்த ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடன் என்னும் பாம்பின் மேலாக உள்ள பூமியும் வானமும் ஒரு இமைப்பொழுதில் முடிக்கும்படி பரந்து நிற்கின்ற இந்த அக்கினியை நீக்கியே பிறையை முடிமீது அணிந்த கருணை உடைய பெருமானே! எம்முடைய இந்தக் குறையை முடித்தருள்வீராக என கைகூப்பி வேண்டினர்கள் தேவர்கள். 61

அஞ்சலி னவர்புகழ் அண்ண லாதியோர்
அஞ்சலி செய்திவை யறைந்து வேண்டலும்
அஞ்சலி லஞ்சடை யணிந்த நாயகன்
அஞ்சலிர் என்றுகை அமைத்துக் கூறினன்.

பாஞ்சராத்திர மதத்தோர் புகழ்ந்து போற்றும் விஷ்ணுபிரான் பிரமன் முதல் தேவர்கள் யாவரும் கைகளைக் கூப்பியவாறு அஞ்சலித்து நின்றனர் இவை சொல்லிப் போற்றி வேண்டலும் அப்போது அழகிய கங்கையைச் சடைமேல் அணிந்தருளிய ஆதியான நாயகராகிய சிவபிரான் தேவர்களைப் பார்த்து அஞ்சாதீர் எனத் திருக்கைகளால் அமைத்துக் காண்பித்து கூறியருளினர்''. 62

பொன்மலை வில்லினன் புதிதின் வந்திடு
தன்முகம் ஐந்தையுங் கரந்து தாவில்சீர்
நன்முக மொன்றுடு நண்ணி யத்துணைத்
தொன்மையின் இயற்கையாய்த் தோன்றி வைகினன்.

பொன்னுலான மகா மேருமலையை வில்லாக உடைய பெருமான் தனது புதிதாகத் தோன்றிய ஐந்து திருமுகங்களையும் மறைத்து நீக்கி குறைவற்ற சிறப்புடைய தனது நன்மையான முகம் ஒன்றோடு பொருந்தி அத்துணையான நேரத்தில் பழைமையான தமது திருக்கோல இயற்கையில் அமைந்து தோன்றினர். தேவர்கள் வேண்ட 'அஞ்சாதீர்' எனச் சொல்லி பழைய வடிவான ஒரு முகத்தோடும் சுவாமி வீற்றிருந்தார். 63

**தன்னருள் நிலைமையாற் சண்மு கத்திடை**
**நன்னுதல் விழிகளின் நல்கு தீப்பொறி**
**இந்நில வரைப்புவான் ஈண்டல் உற்றவை**
**முன்னுற வரும்வகை முதல்வன் முன்னினுன்.**

சிவபிரான் தனது அருள் நிலையால் கொண்ட ஆறுமுகங்களின் நெற்றிக் கண்கள் தந்த இந்தத் தீப்பொறிகள் உலக நிலவரைப்புகள், வானம் எல்லாம் பரம்பி பெருகி உற்றவைகள் யாவும் உருச்சுருங்கி தமது திருமுன் வருமாறு சிந்தித்தருளினர். நெற்றிக் கண்ணினின்றும் தோன்றி எங்கும் பரந்த பொறிகளை, இப்போது பரந்து செறியாது அங்கு தமது முன்பு உருச்சுருங்கி வந்து சேருமாறு சுவாமி நினைந்தருளினர். 64

**அந்தியம் பெருநிறத் தமலன் அவ்வகை**
**சிந்தைகொண் டிடுவழிச் செறிந்த பேரழன்**
**முந்தையின் வெம்பொறி மூவி ரண்டவாய்**
**வந்துமுன் குறுகலும் மகிழ்ந்து நோக்கினன்.**

மாலையில் தோன்றும் செக்கர்போலும் பெருநிறத்தினை உடைய சிவபிரான் அவ்வகையாக ஆறு அக்கினிப் பொறிகளும் திருமுன்பு வருமாறு சிந்தை கொண்டிடும் அவ்வேளையில் எங்கும் செறிந்த பேரழல் ஆனது முன்போல ஆறு அக்கினிப் பொறிகளாய் அழகுடன் வந்து சுவாமிமுன் குறுகுதலும் அவற்றைச் சிவபிரான் மகிழ்வோடும் நோக்கியருளினர். 65

**ஆதகு காலையில் அமரர் தங்களுள்**
**ஓதகு செயலிலா உலவைத் தேவையும்**
**மூதகு தீயையும் முகத்தை நோக்குறு**
**மேதகு கருணையால் விமலன் கூறுவான்.**

அவ்வாருகிய காலத்து அங்கு கூடிநின்ற தேவர்களுள் ஓயுஞ் செயல் இல்லாத வாயு தேவனையும், பழைமையான அக்கினி தேவனையும், முகத்தை நேரிட்டுப் பார்த்தவாறு தேவாதி தேவனான சிவபிரான் மேலான கருணையால் இவற்றை அவர்களுக்குச் சொல்வார். 66

**நீங்களிச் சுடர்களை நெறியிற் றுங்கியே**
**வீங்குநீர்க் கங்கையில் விடுத்திர் அன்னவை**
**ஆங்கவள் சரவணம் அமர வுய்க்குமால்**
**ஈங்கிது நும்பணி யென்றி யம்பினன்.**

"நீங்கள் இருவீரும் இந்த ஆறு சுடர்களையும் நெறியாகத் தாங்கிக்கொண்டு சென்று பரந்து பெருகும் நீரினைக்கொண்ட கங்கையாற்றில் விடுவீராக. அவ்வாறு கங்கை இப் பொறிகளைத் தாங்கிச்சென்று சரவணப்பொய்கையிலே ஆறு சுடர்களும்

அமரும்படி சேர்க்கும். ஈங்கு இப்போது உம்முடைய பணி இதுவாகும்'' என எமது ஐயன் கூறியருளினன். 67

கூற்றுயி ருண்டதாட் குழகன் இவ்வகை
சாற்றிய துணர்தலுந் தாழ்ந்து மும்முறை
போற்றினர் நடுங்கினர் புலம்பு நெஞ்சினர்
காற்றெடு கனலிவை கழறல் மேயினர்.

இயமன் உயிரை நீக்கிய சேவடியினை உடைய குண்டலம் பொருந்திய திருச் செவியினை உடைய பெருமான் சொல்லியருளிய வார்த்தையை வாயுதேவனும் அக் கினிதேவனும் கேட்டு உணர்தலும் உடன் பெருமான் திருமுன்னர் மும்முறை தாழ்ந்து வணங்கி போற்றிசெய்து நடுக்கம் உடையராய் புலம்பி ஏங்கும் நெஞ்சினை உடைய ராய் காற்றாகிய வாயுதேவனும் கனலான அக்கினிதேவனும் சொல்லத் தொடங்கு கிறார். 68

ஒருநொடி யளவையின் உலகம் யாவுமாய்ப்
பெருகிய இத்தழல் பெரும நின்னுடைத்
திருவருள் நிலைமையாற் சிறுகிற் றாதலால்
அரிதரி தடியரேம் ஆற்ற லாகுமோ.

''பெருமானே! ஒரு நொடிப்பொழுதின் அளவையில் உலகம் யாவுமாய் பெருகிய இத் தழலைக் கண்டு பயந்து நாம் உம்மை வேண்ட அப்போது தேவரீருடைய திரு வருள் நிலைமையால் இது குறுகி இங்கு சேர்ந்தது. ஆதலால் ஐயையோ, அரிது, அரிது இதை எம்மால் தாங்கிக்கொண்டு கங்கையில் சேர்த்தல். அடியேங்கள் இதைத் தாங்கவும் வல்லமை உடையமோ?'' 69

ஈற்றினை யுலகினுக் கிழைக்கு நின்கணே
தோற்றிய கனலினைச் சுமத்தற் கோர்கணம்
ஆற்றலை யுடையரோ அவனி கேள்வனும்
நாற்றிசை முகமுடை நளினத் தேவுமே.

''உலகெல்லாவற்றையும் முடிவு செய்கின்ற தேவரீரின் திருக்கண்ணிலே தோற் றிய இந்தச் சுடரினை நாம் சுமந்து செல்லமுடியாது என்பதுமட்டுமல்ல இதை ஒரு கணம் சுமத்தற்கு வல்லமை உடையரோ இங்கு எம்முடன் உற்ற பூமி தேவியின் நாயகரான விஷ்ணுமூர்த்தியும் நான்கு திக்கிற்கும் நான்கு தலையை உடைய தாமரை மலர்க் கடவுளான பிரமதேவரும்?'' 70

பண்டெழு விடத்தினிற் பரந்த தீச்சுடர்
கண்டலும் நின்றிலங் கவலுற் றோடினம்
அண்டவும் வெருவுதும் அவற்றை யாந்தலைக்
கொண்டனம் ஏகுதல் கூடற் பாலதோ.

''முன்புள்ள காலத்தில் பாற்கடலில் எழுந்த நஞ்சான நெருப்பை நாம் கண்ட லும் நின்ற இடம் தெரியாது கவலை கொண்டு பயந்து ஓடினோம். அவ்வாறான இயல் புடைய யாம் இச்சுடர்ப் பொறிகளைக் கண்டதும் பயந்து அஞ்சுவோம். ஆகையால் நாம் அவற்றை எம் தலைமீது தாங்கிக்கொண்டு போகவும் அது கைகூடும்படியான ஒன்றோ'' என்றார் தேவர்கள். 71

அப்பெருங் கனலினை அடைதற் குன்னினும்
வெப்புறும் எமதுளம், வியர்க்கும் யாக்கையும்
எப்பரி சேந்துவம் யாங்கள் என்றலுந்
துப்புறழ் படர்சடைப் பகவன் சொல்லுவான்.

''பெருமானே! அப்பெருங் கனலான ஆறு சுடர்களின் கிட்டச் செல்ல நாம் நினைத்தாலும் எமது உள்ளம் வெப்புறும்; எமது மேனி உடல் வேர்க்கும் என்றால் அந்தச் சோதிச்சுடர்களை எப்பரிசாக நாம் ஏந்திச் செல்லமுடியும்'' என்று அக்கினி தேவனும் வாயுபகவானும் கூறுதலும் பவளம்போன்று படர்ந்து விளங்கும் திருச் சடை உடைய பகவான் சொல்லியருளுவான். 72

ஒன்றொரு நொடியினின் உலக முற்றுமாய்த்
துன்றிய இச்சுடர் சுமந்து கங்கையிற்
சென்றிட நுங்கள்பால் திண்மை யெய்துக
என்றலும் நன்றென இசைந்து போற்றினர்.

''அக்கினிதேவனே! வாயுதேவனே! கேளுங்கள். ஒரு நொடிப்பொழுதினிலே உல கம் முழுவதுமாகப் பரந்த இந்த ஆறு தீச் சுடரையும் சுமந்துகொண்டு கங்கையாற்றில் இடுவதற்கு உங்கள்பால் திண்மை எய்துக'' என எம்பிரான் மொழிந்தருளலும் அது கேட்ட வாயுவும் அக்கினி தேவனும் அது நன்று என இசைவுகொண்டு எம்பெரு மானைப் போற்றி செய்தார்கள். 73

மற்றது தெரிதலும் மால யன்முதற்
சொற்றிடும் அமரர்கள் துளக்கம் நீங்குறு
இற்றது கொல்லெம தின்னல் இன்றெனு
உற்றனர் உவகையை யுடலம் விம்மினர்.

மற்றும் இந்த விபரங்கள் யாவையும் தெரிந்துகொண்ட விஷ்ணுமூர்த்தியும் பிரம தேவரும் இந்திரனும் ஆகச் சொல்லப்படுகின்ற தேவர்கள் யாவரும் இப்போது முன்னே தாம்கொண்ட நடுக்கம் பயம் எல்லாம் நீங்கியவராய் இன்றோடு எமது இன்னல் யாவும் நீங்கினவே, என்று பெருமகிழ்வு எய்தி அதனாலே தங்கள் உடலம் பூரித்து நின்றார்கள். 74

ஆங்கனம் அவர்தமை ஆதி நோக்கியித்
தீங்கனல் சரவணஞ் செறிந்தொர் செம்மலாய்
ஓங்குபு சூர்கிளைக் கொழிவு செய்யுமால்
ஈங்கினி யாவரும் ஏகு வீரென்றான்.

அவ்வாறு மகிழ்வாகிய விஷ்ணுமூர்த்தி முதல் தேவர் யாவரையும் ஆதியான பெருமான் பார்த்தருளி சொல்வார், ''நீங்கள் யாவரும் இவர் பின்னால் செல்லுங்கள். இந்த ஆறு அக்கினிச் சுடர்களையும் கங்காநதி சரவணப்பொய்கையில் சேர்த்துவிடலும் அங்கு ஆறு சுடரும் செழித்து மேலோங்கிய ஓர் குழந்தையாகி வளர்ந்து பின்னர் அசுரர் கிளை ஒழியும்படியாக மாய்வுசெய்யும். எல்லீரும் செல்லுங்கள்'' என அருள் செய்தார். 75

இறையவன் இனையன இயம்ப உய்ந்தனங்
குறையிலம் இனியெனக் கூறிக் கஞ்சமேல்
உறைபவ னாதியாம் உம்பர் அன்னவன்
அறைகழ லடிதொழு தங்கண் நீங்கினர்.

இறையவன் இனையதன்மையாகச் சொல்லியருள அதைக்கேட்ட பிரமவிஷ்ணு இந்திரன் முதல் தேவரெல்லாம், ''ஐயனே! நாம் எல்லாம் உய்ந்தோம், குறையிலோம்'' எனக் கூறித் தொழுது திருப்பாதம் முன்னாக வணங்கி அவ்விடத்தை விட்டு தாமரைமலர் மேலவரான பிரமா முதல் தேவர் யாவரும் நீங்கினர். 76

முன்னுற மாருதன் முதல்வன் றாள்களை
வன்னியந் தேவொடு வணங்கி யேயெழீஇ
அன்னவன் அருளினாற் சுடர்கள் ஆறையுஞ்
சென்னியின் மேற்கொடு சேறல் மேயினான்.

இவர்கள் புறப்படுதலும் வாயுபகவான் முன்னாக எழுந்து சிவபிரான் திருப்பாதத்தில் அக்கினிதேவனுடன் தானும் தாழ்ந்து தரிசித்துவிட்டு சிவபெருமான் அருளினால் ஆறுசுடர்களையும் தலைமீது சுமந்துகொண்டு செல்வான் ஆயினன். 77

அரனுறு கடிநகர் அதனைத் தீர்ந்தொராய்
எரிகெழு சுடர்முடி யேந்தி மாருதன்
வருதலும் அயன்முதல் வானு ளோரெலாங்
கருதரு மகிழ்வொடு கண்டு கூறுவார்.

அகன்றதும், பெருங்காவலை உடையதுமான நகரத்தை விட்டு நீங்கி வெளியாகி ஆறு அக்கினிச்சுடர்களையும் தனது முடிமீது தாங்கியவாறு வாயுதேவன் வருதலும் இந்நிலையை பிரமதேவன் முதல் தேவர்கள் எல்லாரும் நினைக்க முடியாத பெருமகிழ்ச்சியாகிக் கண்டு யாவரும் சேர்ந்து பேசிக்கொள்வார். 78

செந்தழல் மேனியன் தீயின் வண்ணமாத்
தந்தனன் குமரனைத் தனது கண்ணினால்
உய்ந்திட யாமெலாம் உலகின் முன்னரே
வந்திடும் வீரனும் மதலை மானவே.

''சிவந்த நெருப்புத் தணல்போலும் மேனியைக்கொண்ட சிவபிரான் நெருப்பின் வடிவாகவே எம்மை இரட்சிக்க ஓர் குழந்தையைத் தனது நெற்றிக் கண்ணில் நின்றும் தந்திருக்கிறார். இந்த ஆறு அக்கினிச் சுடர்களும் இனி யாம் எல்லாம் உய்ந்திடும் படியாக ஓர் குழந்தை வடிவாக இவ்வுலகத்து வரப்போகின்றது''. 79

தொன்னிலை யாம்பெறச் சூரன் பாடுற
இன்னமுஞ் சில்பகல் இருத்த லால்அரன்
தன்னிகர் திருமகன் சரவ ணத்திடை
மன்னுபு குழவியாய் வளர நல்கினான்.

''நாங்கள் எமது பழைய உயர்வான பதங்களைப் பெறும்படியாக, சூரன் அழிந்து போக இன்னமும் சில நாட்கள் இருப்பதால் எங்கள் சிவபிரான் தனக்கு நிகரில்லாத

திருக்குமாரனை அவர் முன்னர் தோற்றுவியாது சரவணப் பொய்கையிடத்துத் தோன்றி குழந்தையாய் வளரும்படி செய்திருக்கிறார்.'' 80

போற்றலர் புரமடு புனித நாயகன்
ஆற்றிடு செய்கைகள் அருளின் நீர்மையால்
ஏற்றதோர் சான்றிவண் எரியைத் தந்ததுஞ்
சாற்றருங் கருணையிற் றலைமை யானதே.

''தம்மை வணங்காதாரின் முப்புரங்களையும் அழிவுசெய்த சிவபிரான் செய்யும் செயல் யாவும் அருளின் தன்மை வாய்ந்தது. அதற்கு இப்போ இங்கு நிகழும் செயலே பெரிதும் சான்றாகும். இப்போது நாம் திடுக்கிடும்படி ஆறு அக்கினிப் பொறிகளைத் தந்ததும் சொல்லற்கரிய கருணையின்பாலுடையது எனவே சொல்லவேண்டும்.'' 81

என்றிவை பற்பல இயம்பி இன்னினிப்
பொன்றினர் அவுணர்கள் புலம்பு நங்குறை
நன்றிவண் முடிந்தது நாமும் அத்தடஞ்
சென்றிடு வாமெனச் செப்பி னாரரோ.

என்று இவ்வாறு பலபல வார்த்தைகளைச் சொன்னார்கள் தேவர்கள். சொல்லிப் பின்னரும் சொல்வார், ''இனி அசுரர் யாவரும் அழிந்தார்கள். அசுரர் எம்மை வருத்தம் செய்யப் புலம்புகின்ற எங்களது குறையும் இன்றோடு முடிந்தது. ஆகையால் நாங்கள் யாவரும் சரவணப் பொய்கை என்னும் தடாகத்தின் பக்கராகச் செல்வோம்'' என்றார்கள். 82

உருப்பம தாகிய ஒளிறு தீஞ்சுடர்
தரிப்பதோர் மருத்துவன் றம்முன் சென்றிடத்
திருப்பயில் மான்முதற் றேவர் வெள்ளியம்
பருப்பதம் ஒருவியே படர்தல் மேயினர்.

வெப்பம் உடையதாய் பிரகாசிக்கின்ற இந்த அழகிய ஆறு அக்கினிச் சுடர்களையும் தாங்கிச் சுமந்து செல்லும் வாயுதேவன் முன்சென்றிட மகாலெட்சுமியை மார்பிலே தாங்கிய விஷ்ணுமூர்த்தி, பிரமன் முதலாகிய எல்லாத் தேவரும் அற்புத சீலராய் வெள்ளிநிறமான திருக்கைலாய மலையை விட்டு நீங்கி பின்னால் சூழ்ந்து வருவாராயினர். 83

இறத்தலுங் கன்னலொன் றெரியின் தீஞ்சுடர்
பொறுத்திடல் அரிதெனப் புலம்பிக் காலினோன்
மறுத்தவிர் பிறைமுடி வரதன் ஆணையால்
திறற்படு வன்னிதன் சென்னி சேர்த்தினான்

வாயுதேவன் சுமந்துகொண்டு ஒரு நாழிகை (24 நிமிஷம்) வரையும் வந்தான். பின்னால் அவனால் அந்த ஆறு அக்கினிச் சுடர்களையும் தாங்கமுடியாது போய்விட புலம்பி அழுது மறுவின்றி விளங்கும் பிறைமுடியை உடைய சிவபிரான் ஆணையின் படி வலிமையுடைய அக்கினிதேவனின் முடிமேல் ஆறு அக்கினிச் சுடரையும் சேர்த்தான். 84

சேர்த்தலும் ஒருபதந் தீயின் பண்ணவன்
வேர்த்துடல் புழுங்குற மெலிவில் தாங்கியே
பேர்த்தொரு பதமிடப் பெருது வல்லேபோய்
ஆர்த்திடு கங்கையின் அகத்துய்த் தானரோ.

அவ்வாறு வாயுதேவன் அக்கினிதேவன்மேற் சுமத்தியபொழுது அக்கினிதேவன் ஆறு சுடரையும் தாங்கிய நேரம் உடலம் வேர்த்து, புழுங்கி, மெலிந்து அதைத் தானும் ஒரு நாழிகை நேரம் வரையும் சுமந்து பின்னுல் ஓர் அடிகூட எடுத்துவைக்க இயலாதவனுகி விரைவாகச் சென்று ஆரவாரத்தோடும் பெருகிப் பாய்ந்தோடும் கங்கை ஆற்றில் ஆறு சுடரையும் சேர்த்தான். 85

கூர்சுடப் பண்ணவன் கொடுவந் துய்த்திடும்
ஆர்சுடர்த் தொகுதிவந் தடைய மூவெயில்
ஊர்சுடச் சிவந்தகண் ணெருவன் துப்புறழ்
வார்சடைக் கரந்தென வறந்த கங்கைநீர்.

அவ்வாருகி கூரிய சுடர் ஒளி உடைய அக்கினி தேவன் ஆறுசுடரையும் கொண்டு வந்து கங்கையாற்றுள் சேர்த்திடுமெல்லேயில் ஆறு சுடரின் வெப்பத்தால் கங்கை யாறே முழுவதும் வற்றி வரண்டு போயது. அது எவ்வாறு என்றுல் மூன்று புரங்க ளேயும் சுட்டு எரிக்கும்படியாகச் சிவந்த கண்கொண்ட ஒருவனுன சிவபிரானின் பவளம் போலும் நிறம் உடைய திருச்சடையில் கங்கையாறு முன்னர்கொண்ட வடிவம் நீங்கி மறைந்ததுபோல.

ஆறு அக்கினிச் சுடரும் கங்கையில் சேர்தலும் கங்கை ஆருனது எவ்வாறு சிவ பிரான் சடையில் மறைந்ததோ அவ்வாறு தன்னிலே கெட்டு வற்றி வறண்டது. 86

அரனருள் முறையினே யறிந்து கங்கைதன்
சிரமிசை யேந்தியே சென்றெர் கன்னலிற்
சரவண மெனுந்தடந் தன்னிற் சேர்த்தனள்
மரையித ழாயிடை மல்குற் ருலென.

சிவபிரானுடைய அருண்முறையை கங்கையானவள் அறிந்து ஆறு சுடர்ப் பொறி களேயும் சிரமேல் தாங்கி ஒரு நாழிகை நேரத்தில் சரவணப்பொய்கை இடத்து கொண்டு சென்று சேர்த்தாள். ஆறு அக்கினிச் சுடரும் அழகோடு சேர்க்கப்பட்டதன்மை செந் தாமரைப்பூவின் இதழ்கள் அங்கு சேர்க்கப்பட்ட தன்மைபோல விளங்கியது. 87

ஆவயின் காறும்வந் தரிய யன்முதல்
தேவர்கள் உவகையால் தெரிந்து சூழ்ந்தனர்
மேவர அணியதாம் விளேவு நாடியே
காவல்கொள் நிரப்புடைக் காத லோரென.

அவ்வாருகிய நேரத்து விஷ்ணுமூர்த்தி பிரமதேவன் முதல் தேவர்கள் யாவரும் இதனேத் தெரிந்தாராய் மிக மகிழ்ச்சியோடு வந்து சரவணப்பொய்கையை வளேந்து சூழ்ந்து கொண்டார்கள். எப்படிப்போலும் எனில் வறியவனுன ஒருவன் தான் விளேவு செய்த வேளாண்மையானது விளேந்து வரும் காலத்தை மிக்க ஆவலோடு எதிர் நோக்கி நிற்கும் வண்ணம்போல சூழ்ந்துகொண்டார்கள் தேவர்கள்.

மிக வறியவனுன வேளாண்மை செய்பவன் தனது விளைவுகளை ''எப்போது விளையும், என் வறுமை தீர்ந்து நான் நன்மை எய்த'' என நோக்கி நிற்பதுபோல தங்கள் உயர்வு எல்லாம் நீக்கப்பட்டு அடிமைகளான தேவர்கள் சரவணப் பொய்கையை மிகக் காதலோடும் வளைந்து ஆறு சுடர்களும் குழந்தை வடிவாகி வருவதை எதிர் பார்த்து நின்ருர்கள். 88

**ஆரணன் விண்ணகம் அச்சு தன்புவி**
**வாரணன் முதலிய மாதி ரத்துளோர்**
**ஏரண வமரர்கள் எண்டிக் காகியே**
**சீரணி சரவணஞ் சேர்ந்து போற்றினர்.**

இவ்வாருகக் காதல்கொண்ட பிரமா, விஷ்ணு ஆகிய கடவுளர்கள் எல்லாரும் சரவணப்பொய்கையைக் காவல் கொள்கிருர்கள். எவ்வாறெனில் வேதமோதும் பிரம தேவர் மேல்வானத்திலும், விஷ்ணுபெருமான் பூமியிலும், இந்திரதேவன் அக்கினி, யமன் முதலிய திக்குப்பாலகர்களும் அழகிய உருவம் உடைய ஏனைய தேவர்கள் எட்டுத்திக்கிலும் ஆக சூழ்ந்து சிறப்பும் சீரும் பொருந்தி அழகுடன் பொலியும் சரவணப் பொய்கையை காவல் கொண்டனர். 89

**கங்கையு மொல்கப் புக்க கடுங்கனற் கடவுட் சோதி**
**அங்கிரு மூன்று முன்னர் அம்மைவாழ் இமையச் சாரற்**
**தங்கிய கமலம் பூத்த சரவணம் புகலும் முக்கட்**
**புங்கவன் அருளால் தொன்மை போன்றது வறத்த லின்றி.**

கங்கை ஆறும் வற்றும்படியாக அதன் இடத்துச் சேர்ந்த கடவுட் சோதியான ஆறு சுடர்ப்பொறிகளும் முன்னர் உமையம்மை வாழ்ந்து தவம் செய்திருந்த இமயமலைச் சாரலில் தங்கி இருக்கும் இந்த தாமரைப்பூக்கள் மலர்ந்த சரவணப்பொய்கை இடத்து சேர்தலும் மூன்று கண்கொண்ட சிவபிரான் அருளினுலே கங்கை ஆற்றைப்போல் வற்றிப் போகாது தனது பழைய நிலைபோல நீர் நிரம்பியவாறு சரவணப்பொய்கை இருந்தது.

**விண்ணிடை யிழிந்த காலின் மேவரு கனலில் தோன்றும்**
**வண்ணவொண் கமலஞ் செய்ய முளரியை மாற தாகத்**
**தண்ணளி யோடு நல்கித் தரித்தெனச் சரவ ணப்பேர்க்**
**கண்ணகன் பொய்கை ஈசன் கட்டழல் மிசைக் கொண்டன்றே.**

ஆகாயத்தினின்றும் உதித்த காற்றினின்றும் தோன்றிய அக்கினியில் உற்பவித்து விளங்குகின்ற நீரானது இப்போது தனது தோற்ற நிலையை மாற்றிக்கொண்டு சிவந்த அக்கினியை இரக்கத்தோடும் படைத்துள்ளது என்னும்படியாக சரவணம் என்னும் பெயருடைய அகன்ற பொய்கையானது சிவபிரானுடைய நெற்றிக் கண்ணினின்றும் வந்த அழகான ஆறு அக்கினிச் சுடர்களையும் தாங்கி ஏற்றுக்கொண்டது.

ஆகாயத்திலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து பூமியும் தோன்றுவது உலக அமைப்பாகும். ஆனமையால் இதை இங்கு மேலே கூறினர். 91

**அருவமு முருவு மாகி அநாதியாய்ப் பலவா யொன்ருய்ப்**
**பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்**
**கருணைகூர் முகங்களாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே**
**ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலக முய்ய.**

அவ்வாறுய நேரத்து தென்படாதது, வடிவமில்லாதது எனப்படும் அருபியாகியும் தென்படுவது, வடிவம் உடையது எனும் உருவம் ஆகியும் ஆதியென்றும் அதற்கும் முன்பான அநாதியாகியும் பலவாகியும் பின்னர் ஒன்றாகியும் பிரமம் எனும்படி என்றும் நின்ற சோதியாகிய பிழம்பே திருமேனியாகவும் கருணை கூர்ந்து விளங்கும் ஆறு முகங்களும் கைகள் பன்னிரண்டும் கொண்ட ஒருவனுன அழகிய முருகன் வந்து சரவணப்பொய்கையில் உதித்தான் இந்த உலகம் உய்யும்படியாக. அநாதி—முன்பு என்னும் முதல் தேடற்கரியது. அருவம்—வடிவம் இல்லாதது, ஆனுல் உள்ளது எனும் படி நின்றமையின் இது இப்போது மட்டும் அல்லாது எப்பவோ உள்ளதாகிய பிரமம், சோதிமயம் திருமேனியாக அமைய பன்னிரு கரங்களும் ஆறு கருணை பொழியும் முகமும்கொண்ட ஒருவனுன குழந்தை வடிவாகிச் சரவணப்பொய்கையில் முருகன் திருவவதாரம் செய்தார். 92

தோன்றல்வந் திடலும் விண்பா துந்துபி கறங்கலுற்ற
ஆன்றதொல் மறைக ளெல்லாம் ஆர்த்தன அயனும் மாலும்
வான்றிகழ் மகத்தின் தேவும் முனிவரும் மலர்கள் தூவி
ஏன்றெமை யருளுகென்றே ஏத்திசை எடுத்துச் சூழ்ந்தார்,

எமது தோன்றுத் துணையான முருகன் வந்து அவதாரமாதலும் ஆகாயத்துத் தேவதுந்துபிகள் முழங்கின. உலகில் வேதம் எனும் பழமையான அவைகள் எல்லாம் ஆர்த்து நின்றன. பிரமதேவரும், விஷ்ணுபிரானும், இந்திரனும், தேவர்களும், முனிவர்களும் தங்கரங்கள் நிறைய பூக்களை ஏந்திச் சொரிந்து வணங்கி, முருகா ''எம்மை எல்லாம் உமது அடியாராக ஏற்று காப்பாற்றி அருள்வாயாக'' எனப் போற்றி செய்த வாறு எம்பெருமானைச் சூழ்ந்து கொண்டார்கள். 93

ஏவர்தம் பாலு மின்றி யெல்லைதீர் அமலற் குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவ ணத்தண் பொய்கையில் வைகும் ஐயன்
ஆவிகள் அருளு மாற்றுல் அறுமுகங் கொண்டா னன்றே.

மற்று எவர்தம்பாலு இல்லாமல் சிவபிரானிடத்து மட்டுமே உள்ள ஆறு குணங்கள் என்னும் முற்றறிவு, வரம்பில் இன்பம், பேரருள் உடைமை, வரம்பில் ஆற்றல், ஞானமயம், பாசநீக்கம் ஆகிய இவையே தமது மகனுக்கு ஆறு திருமுகங்களாக அமைந்தது என்னும்படியாக ஒரே தாமரைப்பூ மயமாக விளங்கும் சரவணப்பொய்கையில் தாமரை மலர்மீது வீற்றிருந்தருளும் எம் ஐயன் உலகத்து உயிர்களுக்கு அருள் புரிந்து இரட்சித்தருளும் பொருட்டாக ஆறு திருமுகம் கொண்டார்.

சிவபிரான் உலகை உயிர்களை அருள்வதற்கு எனக்கொண்ட ஆறு குணங்கள் அவை தொழில்படும் வகையாகத் திருமகனுரின் ஆறுமுகமாக அமைந்தது. ஆகவே சிவபிரான் வேறு இவர் வேறு என்பதல்லாமல் அவரே இவரானுர் என்பதாகிறது.

இதனை குமரகுருபர சுவாமிகளும் இப்படிச் சொல்கிறுர்:

வெவ் அசுரர் போற்றி இசைக்கும் வெஞ்சூரனைத் தடிந்து
தெவ்வர் உயிர் சிந்தும் திருமுகமும்
எவ் உயிர்க்கும் ஊழ்வினையை மாற்றி
உலவாத பேரின்ப வாழ்வுதரும் செய்ய மலர்முகமும்
சூழ்வோர் வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள்
யாவும் முடிக்கும் கமல முகமும்... 94

விடுத்து அகலாப் பாசஇருள் சுரந்து பல்கதிரிற்
சோதிவிடும் வாச மலர்வதன மண்டலமும் நேயமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும் மோக மளிக்கும் முழுமதியும்
தாகமுடன் வந்தடியிற் சூழ்ந்தோர் மகிழ வரம் பலவும்
தந்து அருளும் தெய்வமுகத் தாமரையும். 94

**மல்லலம் புவனத் துள்ள மன்னுயிர்க் கணங்கட் கெல்லாம்**
**ஒல்லையின் மகிழ்ச்சி யெய்தி உவகையின் குறிப்புண் டான**
**தொல்லையில் அவுணனுகுஞ் சூரனே முதலா வுள்ள**
**எல்லவர் தமக்கும் மாயும் இருங்குறிப் புற்ற அந்நாள்.**

வளப்பம் பொருந்திய அழகிய உலகத்தில் உள்ள அனைத்துக்கும் மேலான நற்கொள்கையுடைய உயிர்கட்கு எல்லாம் விரைவாக அவர்களை அறியாத ஓர் மகிழ்ச்சி தோன்றி வருங்காலத்து பெரும் சிறப்பு எதிர்நோக்கி உள்ளது என்னும் குறிப்புகள் தென்பட்டன. இது ஒரு புறமாக மிகப் பழமையான காலம் தொட்டு உலக உயிர்களை வதைத்து துன்புறுத்திய கொடிய சூரன் முதலாகிய அசுரர்கள் எல்லார்க்கும் மாய்ந்து அழிந்து போகும் குறிகள் தென்பட்டன அந்த நாளில். 95

**மறைகளின் முடிவால் வாக்கான் மனத்தினுல் அளக்கொ ணுமல்**
**நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடும் நிமல மூர்த்தி**
**அறுமுக வுருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தின்**
**வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந் தருளி னுனே.**

வேதங்களின் முடிவான ஆராய்வாலும் வாக்காகிய சொல்லினுலும் அல்லது நினைப்புறும் மனத்தினுலும் அளக்க முடியாதபடி குறைவிலா நிறைவாகி எவ்விடத்துமாகி நின்றிடுகின்ற நின்மல சோதியான மூர்த்தியான ஈசனே ஆறுமுக உருவத்தோடும் தோன்றி அருள் பெருகிச் சொரியும்படியாக சரவணப்பொய்கையில் உள்ள வாசனை கமழுகின்ற தாமரை மலர்மேல் வீற்றிருந்தருளினுன். 96

**பாங்குறு தருச்சூழ் காலாப் பஃறழைச் சினைமென் கொம்பர்**
**நீங்கறப் புடைபோய் வானின் நிரந்தன பந்தராகத்**
**தூங்கிய பழனுங் காயுந் துணர்களும் அகத்துட் டுன்ன**
**ஆங்கதன் நடுவட் பொய்கை அணிநிழல் அமர்ந்தான் ஐயன்.**

அந்த சரவணப் பொய்கையின் பக்கங்களில் பொருந்தி இருக்கின்ற மரங்கள் எங்கள் முருகப்பிரான் வீற்றிருந்தருளுவதற்கு அமைத்த பூம்பந்தரில் நாட்டிய தூண்களாகவும், பலதழைகளைக்கொண்டு சூழ்ந்து ஆகாயத்தில் இடைவெளி தோன்ருத நெடிய மரக்கொம்பர்கள் நிரையான பந்தல் ஆகவும், மரங்களின் கொம்பரில் தூக்கியது போலும் காணப்படும் காய்கள், பூக்கள், பழங்கள் யாவும் பந்தரினை அழகுபடுத்தும் பொருள்களாகப் பொருந்த அங்கு அதன் நடுவராக 'சரவணப்பொய்கைத் தாமரைமலரிலே இயற்கையான இம்மரப் பந்தர் நீழலிலே அமர்ந்திருந்தான் எம் ஐயன். 97

முடிபொறு தசையும் நாகர் முதியகால் பலகை வையந்
தொடர்கரை மரனே வானந் தூங்குபன் ஞணந் தெண்ணீர்த்
தடமலர் பாய லாகச் சரவண மஞ்ச மீதில்
அடைதரு மைந்தன் மென்கால் அசைப்பவீற் றிருந்தா னன்றே.

தலையினல் சுமக்க முடியாமல் அசைவனபோலக் காணப்படும் ஆதிசேடன் முதல் நாகங்கள் எம்பெருமான் வீற்றிருப்பதற்கு அமைந்த மஞ்சத்தின் கால்களாகவும், பூமி மஞ்சப் பலகையாகவும், கரையின் கண்ணே நிரைப்பட்டு நிற்கின்ற மரங்களே மஞ் சத்தை ஆகாயத்தில் தூக்கிய கயிறுபோலாகவும், தெள்ளிய சரவணப்பொய்கை நீர் மேல் மலர்ந்த தாமரை மலர்கள் பூம்பாயலாகவும் இவ்வாறு இயல்பாக அமைந்த இயற்கை வனப்போடும் பொலியும் சரவணப்பொய்கை மீதுள்ள தாமரை மலர் மேல் எம் ஐயன் மெல்லிய காற்று அங்கு வீசி அசைப்ப வீற்றிருந்தருளினனே. 98

எண்பெரு நாகர் சேடன் ஏந்தெழில் அரிமா ஞகத்
தண்பொலி புனற்பூம் பொய்கை தவிசுரு வாக நாள்கோள்
விண்படர் விதானமாக வேலையந் தலைவன் காலை
ஒண்பகல் ஆடி காட்ட உமைமகன் அங்கண் உற்ருன்.

எட்டுத்திக்கு நாகங்களும் ஆதிசேடனும் சிம்மாசனத்தைச் சுமக்கின்ற சிங்கங்க ளாக அமைவதுபோலத் தோன்றவும், குளிர்ச்சி பொருந்திய நீர் பரந்த சரவணப் பொய்கையின் மலர்ந்த தோற்றம் சிங்கத்தின்மேல் தோன்றும் தவிசின் உருவமாக அமையவும், நட்சத்திரங்களும் கிரகங்களும் மேலே கட்டி இருக்கின்ற விதானம் (வெள்ளை) ஆக அமையவும், சமுத்திர இராசஞன வருணபகவான் காலையில் தோன் றும் சூரியன் என்னும் ஒளிபொருந்திய கண்ணுடியை தோற்றமாகிய பிள்ளைக்கு மங் கலமுண்டாகும்படி காட்டுவதுபோல் அமைய எமது ஆறுமுகமுடைய பகவான் அவ் விடத்து அருளோடும் வீற்றிருந்தருளினர். 99

தரணியின் நடுவண் வைகுஞ் சரவணப் பொய்கை தன்னில்
விரைசெறி கமலப் போதில் வீற்றிருந் தருளுஞ் செவ்வேள்
பெருவடி வமைந்த மாயன் பிறங்கிய மனத்தில் தண்ணென்
றெரிசுடர் விளக்கத் துச்சி இருந்திடும் ஈசன் போன்ருன்.

பூமியின் நடுவே தங்கிய சரவணப்பொய்கையில் மலர்ந்த நறுமணம் கமழும் தாமரைப்பூ ஒன்றில் வீற்றிருந்தருளும் செம்மேனிச் செல்வராகிய முருகப்பெருமான் வீற்றிருந்தருளும் தன்மையானது எவ்வாறெனில் பெருவடிவம் கொண்டு நீண்ட நாராயணக் கடவுளின் பெருமை பிறங்கிய மனத்தில் தண்ணென்று எரி கின்ற விளக்கின் உச்சியில் பிரகாசிக்கும் ஞானத்தீபச் சுடராகிய சிவபிரான் போன்ருர். 100

பெருந்தரை நடுவணுகிப் பிறங்கிய சரவ ணத்தில்
இருந்தனிக் கமல மொன்றில் குமரவேள் இருந்த பான்மை
திருந்துநல் லண்டப் புத்தேள் சிந்தையாம் புண்ட ரீக
புரந்தனில் விரும்பித் தாதை வைகிய இயற்கை போலும்.

பெரிய இப்பூமியின் நடுவணுகப் பொருந்தி விளங்கும் சரவணப்பொய்கை என்னும் தடத்தின் நடுவே விளங்கும் ஒப்பற்ற தனியான தாமரைமலர் மேலாக எமது குமரன் இருந்தருளும் பான்மையானது திருந்திய நல்ல அண்டங்களின் முதல்வன் என்னும் பிரமதேவரது சிந்தை என்னும் இருதய கமலத்தின்மீது தந்தையாகிய சிவபிரான் வீற்றிருந்தருள்வது போலவும் அமைந்தது. 101

பாசிலை பரவித் துள்ளி படுவன உடுவைப் பாக
வீசுசை வலங்கா ராக வேறு சூழ் கமல மெல்லாம்
மாசறு பகலோ ராக அவற்றிடை மலர்ந்த கஞ்சந்
தேசுடை இரவி யாகச் சிவனெனச் சேய்அங் குற்ருன்.

சரவணப்பொய்கையில் உள்ள பசிய தாமரை இலைகளில் நீர்த் துளிகள்பட்டு நிற்கும் காட்சி நட்சத்திரங்கள் போலவும் அசைகின்ற பாசிகள் கருமையான மேகமாகவும், சுவாமி இருந்த பூவை விடுத்து வேருகப் பக்கத்து நிற்கும் தாமரைப் பூவெல்லாம் ஒளிதரும் வேறு சூரியர் போலாகவும், இதன் நடுவே சுவாமி இருக்கும் பூவானது சிவசூரிய மூர்த்தியாக, அச்சிவசூரிய மூர்த்தியின் நடுவே விளங்கும் சிவபிரானைப் போல, சிவகுமாரர் தாமரை மலர்மேல் இருந்தருளினர். சூரியர் பலர் பல பல அண்டங்களில் உள்ளார்கள் எனினும் எல்லார்க்கும் மேலான சூரியனே சிவசூரிய நாராயணமூர்த்தி எனப் பேசப்படுபவர். இவரிடத்து ஒளிக்கு ஒளி கொடுக்கின்ற ஒரு வராகச் சிவபிரான் வீற்றிருப்பார். அவ்வாறு இயற்கையாக அமைந்த சரவணப் பொய்கையில் முருகப்பெருமான் தாமரை மலர்மேல் ஒளிக்கு ஒளியாகி இருந்தார். 102

மாலயன் எழிலி மேலோன் வானவ ரேனோர் யாரும்
பாலுற மரனு மாவும் பறவையும் பிறவுஞ் சூழ
ஏலுறு குமரன் கஞ்சத் திருந்தது பரமன் ஆதிக்
காலையின் உயிர்கள் நல்கிக் கமலமேல் இருத்தல் போலும்.

நாராயணக் கடவுளும், பிரமதேவரும், முகில் வாகனம் உடைய இந்திரனும், தேவர்களும், முனிவர்களும், இன்னும் ஏனையவர்கள் யாவரும் பக்கராக நிற்ப மரங்களும் விலங்குகளும், பறவைகளும் பிறவும் சூழ மிக அற்புதப் பொலிவோடும் முருகப்பெருமான் தாமரை மலர்மீது இருந்ததன்மை பரம்பொருளான சிவபிரான் எல்லாவற்றிற்கும் ஆதியில் பிரமவிஷ்ணு முதல் யாவரையும் படைத்து தாமரை மலரில் வீற்றிருந்தது போலாகும். 103

சலங்கிளர் தரங்கத் தெய்வச் சரவணக் கமலப் போதில்
நலங்கிளர் குமரன் சேர்தல் நான்முகற் சிறைமேல் வீட்டிப்
புலங்கிளர் உயிர்கள் நல்கப் பொருந்துநற் பகலின் முன்னர்
இலங்கெழிற் பதும பீடத் தேறிய இயற்கை போலும்.

நீர் மிகுந்த திரைமோதுகின்ற தெய்வீகத்தன்மையான சரவணப்பொய்கையிடத்து எல்லா நன்மைகளும் தோன்றும் குமாரக்கடவுள் வீற்றிருந்தருளல் எப்படி எனில் நான்கு முகங்களை உடைய பிரமதேவரைக் குட்டி சிறையிடத்து அடைத்து வைத்து பின்னர் தானே சகல புவனங்களில் உள்ள உயிர்களைப் படைக்கும் அந் நாளுக்கு முன்பாக பிரமதேவர் உலகைப் படைக்கும்போது எப்படி தாமரைமலர்

மேல் இருப்பாரோ அதேபோல தானும் பிரமனின் படைப்புத் தொழில் மேற் கொள்ள முன்பே இப்போது நல்ல நிறங்கொண்ட தாமரையானபீடத்து அமர்ந்தனர் என்னும் இயற்கைபோலவும் இவர் காட்சி ஆயிற்று. **104**

**முண்டக மொன்றில் வைகும் முருகனைச் சுற்றிச் செங்கேழ்**
**வண்டுளர் கமலக் காடு வான்புனற் றடத்தின் நிற்றல்**
**அண்டர்கள் முதல்வ ஓர்பால் அன்றியெம் மெல்லாம் வீடங்**
**கொண்டருள் முறையி னென்று நோற்றிடுங் கொள்கைத் தன்றே.**

அழகிய தாமரைமலர் ஒன்றில் வீற்றிருந்தருளும் முருகனைச்சுற்றி செம்மையான சிவப்பு நிறங்கொண்ட தாமரைமலர்கள் எல்லாம் பூத்து மலர்ந்து நிற்கும் காட்சி எவ்வாறுபோலும் எனில் அம்மலர்கள் ''தேவர்களுக்கு முதல்வனுகியவரே! தேவரீர் இப்போது ஒரேயொரு தாமரை மலர்மீது மட்டும் இருந்தருள்கிறீர். அது கூடாது, யாங்களும் தாமரைப் பூக்கள்; ஆகவே எங்கள் எல்லார் பேரிலும் தேவரீர் அமர்ந் தருளுவீராக'' என கேட்டு தவம் செய்து நிற்றல்போலும். **105**

**அணங்குசெய் தோற்றத் துப்பின் அவிர்சுடர்க் குமரற் சூழ**
**மணங்கிளர் கமலக் காடு மலர்ந்தன அவனைச் சேர்வான்**
**தணங்கெழு புனலிற் புக்குத் தபனன் மேல் நாட்டஞ் சேர்த்தி**
**நுணங்கிடை மடவார் பல்லோர் நோற்றவண் நிற்றல் போலும்.**

காண்பார் உள்ளங் காதலால் பரவசமாகும்படி அருள் நிறைந்த திருக்கோலமுடைய சோதி சொரூபரான குமாரக் கடவுளைச்சூழ மணம் பொருந்தி எழுந்த தாமரை மலர்கள் காடுபோலச் செறிந்து மேலான சரவணப்பொய்கையில் பூத்து நின்ற தன்மையானது எவ்வாறெனில் எம்பெருமானைச் சேரும்படியாக சிறிய இடையினைக் கொண்ட தெய்வப்பெண்கள் பல்லோர் குளிர்ச்சி பொருந்திய நீரிலே சேர்ந்து சூரிய பகவானை அண்ணாந்து நோக்கிய வண்ணம் தவம் செய்யும் தன்மைபோல விளங்கியது. **106**

**ஒண்ணகை யுயிர்க்குஞ் சங்க மொருசில கமலம் வைகத்**
**தண்ணுறு நறவைப் பலரூட் டாமரை பரித்துச் சூழ்தல்**
**அண்ணலம் பொய்கை தற்சேர் அறுமுகப் பிள்ளை துய்ப்ப**
**எண்ணெயுஞ் சங்குஞ் சூழ இட்டது போலுமன்றே.**

ஒளியைப் பரப்புகின்ற சங்குகள் ஒரு சில தாமரைப்பூ மேலாக மெதுவாக ஏறிக் கிடக்கின்றன. அச்சங்கு பூவின் நடுவே கிடப்ப அதனைச் சூழ தாமரைப்பூவில் உள்ள தேன் செறிந்து காணப்படுகிறது. இதனை தாமரைப்பூ இதழால் தாங்கிக்கொண்டு நிற்கிறது, இத்தன்மையானது தன்னைச் சேரும்படி வந்த ஐயருக்கு மேலான சரவணப்பொய்கை ஏற்றுக்கொள்ளும்படி எண்ணெயும் சங்கும் அவரைச்சூழ வைத்துள்ளதுபோலவும் உள்ளது.

எம்மையெல்லாம் காத்தருள்புரிந்து ஈடேற்றுமாறு தாமரைமலர்மேல் கிருபையோடும் ஆறுமுகம்கொண்டு குழந்தையாய்த் தோன்றி நிற்கிறார் முருகன். ஆகவே பகவானை, தன்னந்தனியே இருப்பவரை இயற்கைப் பொலிவோடும் அமைந்த காட்சிகளுடன் ஆசிரியர் அவரை அலங்கார வர்ணனைகளால் போற்றி உபசரிப்பது அற்புதமும் ஆனந்தமும் நிறையும் ஒன்றாகும். **107**

ஆரமும் வனசத் தோடும் அணிமக ரந்தச் சேறும்
வேரியம் பூந்தண் தேனும் முறைமுறை வீசிக் கையாற்
சேரவே கொண்டு மேலோன் திருவடி திளைப்ப உய்த்தல்
வாரியந் தடாகம் அன்பால் வழிபடும் வண்ணம் போலும்.

முத்துக்களையும், தாமரை இதழ்களையும் அழகிய, தாமரைப்பூவின் மகரந்தப்பொடியான குழம்பையும் சுகந்தத்தை உடைய மலரின் குளிர்ந்த தேனையும், திரையாகிய கையினல் ஒருசேர வாரிக்கொண்டு மேலாகிய முருகப்பெருமானின் திருப்பாதத்தில் திருமஞ்சனம் ஆட்டுவதுபோல் வீசுதல் அந்த சரவணப்பொய்கையானது முருகப் பெருமானை அன்பினுல் வழிபடும் தன்மைபோல ஆயிற்று.

முத்தையும், பூவையும், மகரந்தப்பொடியையும், தேனையும் திரைகள்வாரி பெருமான் திருவடி மேலாக நனையும்படி வீசிநிற்றல் அன்பால் வழிபடும் தன்மைபோலும். 108

பங்கயச் செம்மற் போது பதன ழிந் தவிழ்ந்து பாங்கர்
அங்குள இலைமேல் வீழ அவைபுறத் தசையும் நீர்மை
சங்கரன் குமரற் சூழச் சரவணப் பசும்பூந் தட்டில்
துங்கநல் விளக்க மாட்டித் திரைக்கையாற் சுலவல் போலும்.

தாமரை மலரில் உள்ள இதழ்கள் பதம் அழிந்து சொரிந்து பக்கராக அங்கு உள்ள தாமரை இலைமேலாக வீழ அவைகள் இலைகள்மேல் பொருந்தி திரையாய் இலைகள் புறத்துச் சூழ்ந்து அசைகின்றதன்மை சங்கரனை சிவபிரான் திருக்குமாரரைச் சூழ சரவணப்பொய்கையானது பசுமையான பூந் தட்டிலே விளக்கை ஏற்றி திரைகள் என்னும் கையினல் வலமாக சுழற்றுவதுபோலவும் அமைந்துள்ளது. 109

காசுறழ் பதுமப் போது களாசிய தாக மீச்செல்
பாசடை கவிகை யாகப் பலநனை விளக்க மாக
வீசிகள் கவரி யாக மிழற்றுபுள் ளியம தாக
மாசறு பொய்கை சேய்க்கு வளம்பட ஒழுகிற் றன்றே.

மாணிக்க இரத்தினத்தைப் போன்ற தாமரைப்பூவானது காளாஞ்சியாகவும், தண்டு நீண்டு மேலாக வளர்ந்திருக்கின்ற பசிய இலைகள் அழகான குடைகள் ஆகவும், பலதாமரைப் பூ மொட்டுக்கள் விளக்குகள் ஆகவும், திரைகள் சாமரையாகவும், பட்சிகளினுடைய ஒலிகள் வாத்திய ஓசையாகவும், இவ்வாருன செய்கைகளால் சரவணப் பொய்கையானது மணங்கமழ் தெய்வத்து இளநலத்துடன் பொலியும் பெருமானுக்கு வளமான பூசை, விழா முதலியன செய்வதுபோல ஒழுகியது. 110

அழல்நிவந் தன்ன கஞ்சத் தகல்தடத் திரைகள் நாப்பண்
உழிபட ராது சூழ்போந் துலவுவ தானை நீரால்
விழுமிய குமரன் பொய்கை வெளியுரு தமர ரிட்ட
எழினிகள் புடையே மென்கால் எறிதலின் இரட்டல் போலும்.

நெருப்பை ஒத்த தாமரை மலரின் நிறையும் அகன்ற சரவணப்பொய்கை இடத்து எழுகின்ற திரைகள் நடுவில் செல்லாது கரையோரமாக வீசி உலாவி நிற்றல் மேலாகி எத்துணையாலும் கிடைத்தற்கரிய குமாரக்கடவுள் வெளியே தோன்ருதபடி தேவர்கள் அழகான வெள்ளை வஸ்திரங்கொண்டு திரையிட்டு மறைப்ப அந்த திரைச் சீலையை

காற்று அசைப்ப அது படபடத்து அசையும் தன்மையாக திரைகளும் பெருகி உலவி நிற்கிறதுபோலும். 111

கொன்படை சேவலாகும் எகினமோர் கோடி ஈசன்
தன்பெருங் குமரற் சூழத் தடத்தினில் மிழற்றல் எந்தை
பொன் பிறழ் பதுமன் செய்கை புரியுநாள் ஊர்தி யாவல்
என்புடை யிருத்தி யென்றே தமித்தமி இரத்தல் போலும்.

பெருமைபொருந்திய ஒரு கோடிக்கணக்கான ஆண் அன்னங்கள் ஈசனுடைய பெருங் குமாரனைச் சூழ சரவணத் தடாகத்து கீச்சிட்டு ஒலித்து நிற்றல் எவ்வாறு போலுமெனில் அவைகள் பெருமானைப் பார்த்து ''ஐயனே தேவரீர் பின்னுல் பிரம தேவரைக் குட்டி சிறையிருத்தி நீரே படைப்புத் தொழில் மேற்கொள்ளும் ஞான்று நாங்கள் தேவரீருக்கு வாகனமாவோம். ஆகவே இன்றே எம்மீது அமர்ந்தருள் வீராக'' என பிரார்த்திப்பதுபோலும். 112

வளஞ்செறி இனைய பாலால் வான்சர வணமாம் பொய்கைத்
தளஞ்செறி பதுமமொன்றில் சராசரம் யாவும் காப்பான்
உளஞ்செறி கருணை யெய்தி ஒப்பிலாக் குமர மூர்த்தி
இளஞ்சிறு மதலை போல இனிதுவீற் றிருந்தான் மன்னே.

இயற்கை வளம் செறிந்த இனையதன்மையால் மேலான சரவணப்பொய்கை யானது விசாலித்து இதழ் நெருங்கி அகன்ற தாமரைமலர் ஒன்றின் மேலாக நிற்ப னவும், சஞ்சாரம் செய்வனவும் ஆகிய அனைத்து உயிரையும் காக்கும்படியான திரு வுள்ளக் கருணையோடும், தனக்கு வேறு ஒருவர் ஒப்பு இல்லாத குமரமூர்த்தி இள மையான சிறு குழந்தைபோல இனிதே வீற்றிருந்தருளினுர். உலகருள் கருணையா கவே திருவுள்ளமாகி வீற்றிருந்தருளினுர் எம் கடவுள்.

ஒப்பிலாதன உவமனில் இறந்தன ஒண் மலர்த்திருப் பாதத்து அப்பன் (மணிவாசகர்)

தீர்த்திகைக் கங்கை தன்னில் திகழ்சர வணத்தில் வந்த
மூர்த்திகைக் குழவி யேபோல் முதற்புரி யாடல் நோக்கி
ஆர்த்திகை யுருத உள்ளத் தரிமுதல் அமரர் யாருங்
கார்த்திகைத் தெரிவை மாரை விளித்திவை கழற லுற்ருர்.

தீர்த்தங்களில் மேலானதாய்க் கருதப்படும் கங்கையாற்றிலும் சிறந்து விளங் கும் சரவணப்பொய்கையில் தோற்றிய மூர்த்தியான எம்பெருமான் ஓர் கைக் குழந்தைபோல முதலில் செய்யும் கை அசைப்பு, புன்சிரிப்பு இவை போன்ற அற்புத ஆடலை நோக்கி நோக்கி அற்புதமும் மகிழ்வும் நிறைதலினுலே மனக்கவலை என்பதை எத்துணையேனும் அறியாத உள்ளத்தைக் கொண்ட நாராய ணப் பெருமான் பிரமதேவர் முதல் தேவர்கள் யாவருங் கார்த்திகைப் பெண்கள் ஆறு பேரையும் கூவி அழைத்துச் சொல்கின்ருர்கள். 114

சாற்றருஞ் சரவ ணத்தில் சண்முகத் தொருவனுகி
வீற்றிருந் தருளு கின்ற விமலனோர் குழவி போலத்
தோற்றினன் அவனுக் குங்கள் துணைமுலை அமுத மூட்டிப்
போற்றுதிர் நாளு மென்ன நன்றெனப் புகன்று வந்தார்.

''எம்மால் சொல்லமுடியாத தூய்மை உடைய சரவணப்பொய்கையிலே ஆறுமுகம் உடைய ஒருவனுகி வீற்றிருந்தருளுகின்ற எமது கடவுள் ஒரு குழந்தை வடிவாகித் தோன்றினர். ஆதலாலே அவருக்கு நீங்கள் உங்களுடைய இரு தனங்களின்றும் ஊறும் பாலான அமுதத்தை ஊட்டி போற்றுவீராக நாள்தோறும்'' என்று பிரம விஷ்ணுக்கள் தேவர் எல்லாரும் சொன்ன நேரத்தில் அந்த கார்த்திகைப் பெண்கள் ஆறு பேரும் தேவர்களை நோக்கி ''அது நன்றுகும்'' எனச் சொல்லி வந்தார்கள். 115

**மறுவறும் ஆர லாகும் மாதர்மூ விருவர் தாமும்**
**நிறைதரு சரவ ணத்தின் நிமலனை அடைந்து போற்ற**
**உறுநர்கள் தமக்கு வேண்டிற் றுதவுவோன் ஆத லாலே**
**அறுமுக வொருவன் வேருய் அறுசிறுர் உருவம் கொண்டான்.**

குற்றம் நீங்கிய கொள்கை நிரம்பிய கார்த்திகைப் பெண்களாகும் ஆறுபேரும் நிறைவான உள்ளத்தோடும் நீர் நிறைந்த சரவணப்பொய்கையில் பூவினில் அமர்ந்தருளிய இறைவனை அடைந்து போற்றி வணங்கி நிற்றலும் ஆறு பெண்கள் தான் ஒருவனுக இருப்பானை வளர்த்தெடுக்கும் தாய்மாராகி வந்திருப்பதால் எம்பெருமான் தன்னையடைவார் தமக்கு யாது வேண்டினும் அதனைக் கொடுப்பதே அவன் கருணை ஆதலினுல் ஆறுமுகமும் பன்னிருகைகளோடும் ஒரு வடிவான குழந்தையாக இருந்தவன் இப்போ ஆறு கார்த்திகைப் பெண்களும் தம்மை வளர்த்தெடுக்கும் படியாக ஆறு சிறு குழந்தைகளான வெவ்வேறு உருவங் கொண்டான். 116

**ஆறுரு வாதலோடும் அறுவரும் மகிழ்ந்து வேறு**
**வேறுதா மெடுத்துத் தத்தம் வியத்தகு துணைமென் கொங்கை**
**ஊறுபா லமுதம் அன்னேற் குதவலும் முறுவல் செய்து**
**மாறிலா அருளால் ஆற்ற வருந்தினன் போல வுண்டான்.**

ஆறு அழகிய குழந்தைகளின் உருவம் ஆதலோடும் ஆறு தாய்மாரும் பெருமகிழ்வாகி வேறுவேருக ஒவ்வோர் குழந்தையையும் எடுத்து மார்போடு அணைத்து தங்கள் தங்கள் இடத்தில் ஊறுகின்ற பாலாகிய அமுதத்தை ஆறு குழந்தைகளுக்கும் ஊட்டியருள அப்போது எமது கடவுள் தாய்மாரை நோக்கி புன்சிரிப்புக்கொண்டு மாறுபாடில்லாத தனது நல்லருளால் பால் குடிப்பதற்கு பெரிதும் தவனம் கொண்டார்போல உண்டருளினர். 117

**உண்டபின் அறுவ ராகும் ஒருபெரு முதல்வன் றன்னைத்**
**தண்டழை பொதுளும் நீபத் தண்ணிழற் பொய்கை தன்னில்**
**வண்டயி லுருத கஞ்ச மாமலர்ப் பள்ளி சேர்த்திக்**
**கண்டுயில் செய்வித் தேத்தக் கருணையால் இனைய செய்வான்.**

திருமுலைப்பால் உண்டபின் ஆறு பேராக இருக்கும் ஒப்பற்ற தன்னந்தனியான குமரனை குளிர்மையான பசிய இலைகள் பரந்து நெருங்கிய கடப்ப மர நீழலில் அமைந்த இந்தச் சரவணப் பொய்கையில் வண்டுகள் மொய்த்து அறியாத தாமரை மலர்ப் படுக்கையான பாயலில் சேர்த்து அணைத்துக் கண்துயிலும்படி ஆக்குமாறு தாலாட்டுப் பாடித் துதிப்ப அப்போது எங்கள் ஐயர் கருணையால் இனைய ஆடல்களைப் புரிவாராயினர். 118

துயிலவோ ருருவம் துஞ்சித் துண்ணென எழுந்து மென்சொற்
பயிலவோ ருருவம் யாய்தன் பயோதரம் பவள வாய்வைத்
தயிலவோ ருருவம் நக்காங் கமரவோ ருருவம் ஆடல்
இயலவோ ருருவம் வாளா இரங்கவோ ருருவஞ் செய்தான்.

ஓர் உருவம் நித்திரையாகிறது; ஓர் உருவம் திடுக்கிட்டுத் துண்ணென எழுந்து இனிய மொழியைப் பேச முயல்கிறது; தாயின் முலேயிற் பவளத் திருவாய் வைத்துப் பால் உண்கிறது ஓர் உருவம்; ஓர் உருவம் சிரித்தபடி இருக்கிறது; ஓர் உருவம் கூத்தாடுகிறது; ஓர் உருவம் ஓயாது அழுதவண்ணம் இருக்கின்றது 116

ஒருருத் தவழ மெல்ல ஒருருத் தளர்ந்து செல்ல
ஒருரு நிற்றல் செல்லா தொய்யென எழுந்து வீழ
ஒருரு இருக்கப் பொய்கை ஒருரு வுழக்கிச் சூழ
ஒருருத் தாய்கண் வைக ஒருவனே புரித லுற்றுன்.

ஓர் உருவம் தவழ்கிறது; ஓர் உருவம் மெல்லத் தள்ளாடி நடக்கின்றது. ஓர் உருவம் எழுந்து நிற்கப் பார்த்தபோது முடியாமல் திடீரென விழுகின்றது. ஓர் உருவம் இருக்கின்றது; ஓர் உருவம் சரவணப் பொய்கையில் உழக்கியபடி கரையில் சூழ்ந்து வருகிறது; ஓர் உருவம் தாயின் மடிமீது இருக்கிறது, இப்படி ஒருவனே பலப்பல வேடமாகி நின்றுன். 120

ஆடவோ ருருவம் செங்கை அறையவோ ருருவம் நின்று
பாடவோ ருருவம் நாடிப் பார்க்கவோ ருருவம் ஆங்கண்
ஓடவோ ருருவம் ஓர்பால் ஒளிக்கவோ ருருவம் யாண்டுந்
தேடவோ ருருவ மாகச் சிவன் மகன் புரித லுற்றுன்.

ஓர் உருவம் கூத்தாட, ஓர் உருவம் சிவந்த கையால் தாளம்போட, ஓர் உருவம் நின்று இந்த ஆடலேப் பார்க்க, ஓர் உருவம் ஆங்கே ஓட, ஓர் உருவம் ஓடி ஒளித்து நிற்ப, ஓர் உருவம் ஒளித்தவரை எங்குந் தேடித் திரிய, ஆகிய இந்த அற்புத உருவங்களாகச் சிவன் மகன் திருவிளேயாடல் புரிதல் உற்றுன். 121

இத்திறம் இருமூன் றுன யாக்கையுங் கணம தொன்றில்
பத்துநூ றுய பேதப் படும்வகை பரமாய் நின்ற
உத்தம குமரன் றுன்எவ் வுயிர்தோறும் ஆட லேபோல்
வித்தக விளேயாட் டின்ன மாயையால் விரைந்து செய்தான்.

இத்திறமாக ஆறு வடிவங்களும் ஒரு கணப்பொழுதிலே ஆயிரமான, வேறுவேறு பேதப்படும் வகையான திருவிளேயாட்டை எப்பொருட்கும் பரமாய் மேலாய் நின்ற உத்தமமான குமரன் தானே எல்லா உயிர் தோறும் நிறைந்து ஆடலேபோல் வித்தக விளேயாடல் ஆகிய இவைகளே இன்ன தன்மையான மாயையின் செய்கையாக விரைவிற் செய்தான். 122

சிற்பர ஞகி வந்த செய்யவேள் ஆடற் றன்மை
பற்பல திறமும் நாடிப் பங்கயத் தயனு மாலுஞ்
சொற்படு மகத்தின் தேவும் முனிவருஞ் சுரரும் யாரும்
அற்புத மகிழ்ச்சி கொண்டாங் கின்னவா றறைத லுற்றுர்.

ஞான குருமணியாய் வந்தருளிய செம்மை அழகு நிறையும் முருகப் பிரானின் ஆடற்றன்மையின் பற்பல திறத்தையும் நாடிப் பார்த்தார்கள் தாமரை மலராசன ராகிய பிரமதேவரும், நாராயணக் கடவுளும், யாவராலும் புகழப்படும் யாகத்தின் தேவனுன இந்திரனும், முனிவரும், தேவரும் முதலாகிய யாவரும். இவர்கள் யாவ ரும் அற்புத மகிழ்ச்சிகொண்டு இனிய வார்த்தைகளைச் சொல்லலுற்றுர்கள். 123

**சேயிவன் ஒருவ னேபல் சிறுருருக் கொண்டு நம்முன்**
**ஏயெனு மளவை தன்னில் எண்ணில்பே தத்த ருகும்**
**ஆயினிக் குமரன் ஆடல் அறிவரி தெமக்கும் எல்லா**
**மாயமு மியற்ற வல்லன் வரம்பிலா அறிவன் மாதோ.**

''குழந்தையாகிய இவன் ஒருவனே பல சிறுவர்களின் உருவத்தைத் தான் கொண்டு நமது முன்பாக 'ஏ' என்ற சொல் அளவு காலத்தினும் விரைவாக எண் ணிக் காண முடியாத பல பேதமான வடிவுகளைக் கொண்டான். ஆ! இனி எங்கள் குமரன் ஆடல் எமக்கும் அறிய முடியாததாகும். இவர் எல்லா மாயமும் இயற்ற வல்லவர். எல்லே காணமுடியாத அறிவு சொருபமாய் உள்ளார்.
அறிவுக் கறிவாகி அப்பாலுக் கப்பாலாய்ச் செறியும் முருகன் (யோகர் சுவாமிகள்) 124

**கைப் பயில் குழவி போலக் காட்டிய கடவுள் செய்யும்**
**இப்பெரு மாயை போல யாவரும் புரிதல் தேற்றுர்**
**செப்பியன் வேறி யாமுஞ் செய்ததொன் றில்லை அன்னுன்**
**ஒப்பறு பரனே ஆம்என் றுரைசெய்து தொழுது நின்றுர்.**

''ஓர் கைக்குழந்தை எனும்படியாக எம்முன் தமது உருவைக் காட்டிய கடவுள் செய்யும் இந்த பெரும் மாயத் திருவிளையாட்டைச் செய்ய வேறு யாவருமே அறிய வும் மாட்டார்; நினைக்கவும் மாட்டார். நாம் இனி வேறு என் சொல்வோம். நாமும் ஒன்றும் செய்ததில்லை. இப்பகவான் ஒப்பு உவமை கடந்த பரம்பொருள்தான்'' எனச் சொல்லி யாவரும் வணங்கி நின்றுர். 125

**அழலெனும் மீன வர்க்கத் தறுவருங் குமரன் ஆடல்**
**முழுவது நோக்கி நோக்கி முதிருமற் புதநீ ரெய்திக்**
**குழவிக ளென்றே உள்ளங் கோடல்விட் டகலா தஞ்சி**
**வழிபடு கடவு ளோரில் போற்றினர் மனங்கொள் அன்பால்.**

நெருப்பின் வண்ணம் பொருந்திய கார்த்திகை நட்சத்திரத்தின் பேரால் விளங்கும் கார்த்திகைப் பெண்கள் ஆறுபேரும் குமாரக் கடவுளின் அற்புத ஆடல் முழுவதை யும் நோக்கி முதிர்கின்ற அற்புதம் கொண்டார்களாகி அவரைக் குழந்தைதானே என நினையும் நினைப்பைவிடுத்து அவரை விட்டு அகலாது மிக பயபக்தியோடும் தாங் கள் வழிபாடுசெய்யும் கடவுளர்களைப்போல் போற்றுவாராய் மனங்கொண்ட அன்பி னுல் வளர்த்து வரலாயினுர்கள். 126

**அம்புயம் உறளுஞ் செங்கேழ் அறுமுகம் படைத்த கோல**
**நம்பிதன் வரவு தன்னை நவின்றனம் இனிமேல் அங்கண்**
**எம்பெரு முதல்வி தன்பால் இலக்கத்தொன் பதின்மர் செவ்வேள்**
**தம்பிய ராகி வந்த தன்மையை விளம்ப லுற்றும்.**

''அழகிய செந்தாமரை மலரின் திவ்வியம் ஒத்த ஆறுமுகம் படைத்த கோலம் உடைய தலைவரான முருகப் பெருமானின் வரவை முனிவர்களே யான் சொன்னேன். இனிமேல் அங்கு எம்பெரு முதல்வியான உமையம்மையார் இடத்து நின்றும் இலக்கத்து ஒன்பது வீரர்கள் முருகப்பெருமானுடைய தம்பியர் என்னும்படி வந்த தன்மையை விளம்பல் உற்றேன்'' என சூதமுனிவர் நைமிசாரணியத்து முனிவர்க்கு மீண்டும் சொல்லுகிறார். 127

திரு அவதாரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-977.

# 12. துணைவர் வரு படலம்

நஞ்ச யின்றவன் நெற்றிநாட் டத்தினுல் நல்கும்
வெஞ்சு டர்ப்பொறி வெம்மையை ஆற்றலள் விமலை
செஞ்சி லம்படி தாக்கலின் நவமணி சிதற
அஞ்சி யோடினள் இத்திற முணர்ந்தனள் அகத்துள்.

நஞ்சினை உண்டு கண்டத்திலே தரித்து வைத்தவரும் நெற்றியில் கண் உடையவரு மான சிவபிரான் தமது நெற்றிக் கண்ணினின்றும் தோற்றுவித்த ஆறு வெப்பமான சுடர்ப் பொறிகளும் வருதலும் அவற்றின் வெப்பத்தைத் தாங்கமுடியாமல் உமையம்மை சிவபிரான் பாகமாக அமர்ந்து இருத்தலையே விடுத்து பயத்துடன் அப்பால் தனது சிவந்த மிருதுவான பாதங்களில் அணிந்த சிலம்புகள் வேகமாக ஓடுதலினுலே ஒன்றுடன் ஒன்று தாக்குண்டு அவற்றுள் இருந்த நவஇரத்தினங்கள் சிதறிப் போகும்படி ஓடினுள். ஓடிச்சென்றவள் இத்திறம் தனது உள்ளத்து உணர்ந்தாள். 1

மாய வன்முதல் அமரர்கள் ஈசனை வணங்கி
நீயோர் மைந்தனைத் தருகென நெற்றிநாட் டத்தால்
ஆய வன்சுடர் உதவியோர் மதலையாய் அமர்வான்
ஏயி னுன்சர வணத்தெனத் தெரிந்தனள் இறைவி.

''மாயவரான விஷ்ணுமூர்த்தி முதல் தேவர்கள் ஈசனை வணங்கி ''பெருமானே நீர் ஓர் மைந்தனைத் தருவீராக'' என எம்பிரான் நெற்றியில் இருக்கும் கண்ணினுல் இப்போது கொடிய வெப்பமான ஆறு சுடர்ப்பொறிகளை உதவி அந்த ஆறு சுடர்ப்பொறிகளும் ஒரு குழந்தைவடிவாகி அமரும்பொருட்டு சரவணப்பொய்கையிடத்து அந்த ஆறு சுடர்ப்பொறிகளையும் கொண்டு செல்லும்படி விடுத்துள்ளார்'' எனத் தன்னுடைய திருவுள்ளத்து தெளிவாயினுள் எங்கள் இறைவியான உமை அம்மை. 2

அன்ன தற்பினர் உமையவள் எனதுபால் அமலன்
தன்ன ருட்பெறு மதலைதோன் றுவகை தடுத்த
பொன்ன கர்க்கிறை விரிஞ்சன்மால் முதலபுத் தேளிர்
பன்னி யர்க்கெலாம் புதல்வரின் றுகெனப் பகர்ந்தாள்.

அவ்வாறு இவைகளை எம்பிராட்டி உணர்ந்து அதன் பின்னராக சொல்வாள் ''என்பாலாக சிவபிரான் தனது அருள் வடிவான குழந்தையைத் தோன்றுவதை தடுத்த சொர்க்கநாட்டு அரசனான இந்திரன், பிரமதேவர், நாராயணக் கடவுள் முதலான கடவுளரின் மனைவிமார்க்கு எல்லாம் புதல்வர்கள் இல்லாமல் போகக் கடவது'' என அங்கு கூறியருளினாள் எமது தாயான உமை. 3

இமைய மாமகள் இத்திறம் புகன்று மீண்டேகிச்
சமயம் யாவையும் நிறுவிய கண்ணுதற் றலைவன்
அமல மாந்திரு முன்னர்வந் தரிக்குமுன் னரிதாங்
கமல மார்அடி கண்டனள் பணிந்துகண் களித்தாள்.

இமயமலை அரசன் புத்திரியான உமையம்மை இத்திறம் சொல்லிவிட்டு திரும்பிச் சென்று, பல்வேறு சமயங்கள் யாவையையும் இவ் உலகத்து நிறுவிவைத்த நெற்றிக்கண் உடைய தலைவரான ஈசனுடைய மலபந்தம் இல்லாத சந்நிதி முன்பு வந்தனள். விஷ்ணுபெருமானால் தேடியும் காண்டற்கரிய தாமரைமலர் ஒத்த திருவடிகளை கண் குளிரக்கண்டு பணிந்தாள் உமையம்மை. 4

உம்பர் யாவருங் குறையிரந் திடலுநீ யுதவுஞ்
செம்பொ றித்தொகை யாற்றலும் வெம்மையுந் தெரிந்து
வெம்பி முற்றுடல் பதைப்புற அகன் றிவண் மீண்டேன்
எம்பெ ருந்தகை அவ்வழல் நீக்கலா லென்றாள்.

எம்பிராட்டி பெருமானைப் பார்த்துச் சொல்வாள், ''பகவானே! தேவர்கள் யாவரும் வந்து தங்கள் குறைகளை உம்மிடம் சொல்லி இரந்து வேண்டுதல் செய்ய நீர் முன் உதவிய சிவந்த ஆறு அக்கினிப் பொறிகளின் வலியையும் வெப்பத்தையும் தெரிந்து அடியாள் உடலம் வெம்பி பதைப்புறும்படி அகன்று சென்று இப்போது இங்கு எம்பெருந்தகையான தேவரீர் அந்த அக்கினிப் பொறிகளை நீக்கியமையால் திரும்பவும் வந்துள்ளேன்'' என ஈஸ்வரி கூறியருளினாள். 5

கன்னி இங்ஙனம் பகர்தலும் கருணைசெய் தருளித்
தன்னி டத்தினில் இருத்தினன் இருந்திடு தையல்
முன்னம் ஓடலிற் சிதறுநூ புரமணி முழுதும்
என்னை யாளுடை நாயகன் முன்னிலங் கினவால்.

எம்பிரான் உடன் அமர்ந்தாலும் நித்திய கன்னிகை ஆகிய ஈஸ்வரி இத்திறம் பகர்தலும் எம்பெருமான் அவள்மேல் கருணை செய்தருளி பின்னரும் எம்பிராட்டியைத் தமது இடப்பாகத்து இருத்தினார். அவ்வாறு இருந்திடுகின்ற ஈஸ்வரி முன்னர் சுடர்ப் பொறிகளைக் கண்டு பயந்து ஓடியபோது சிதறுண்ட சிலம்பில் உள்ள நவ இரத்தினங்கள் முழுவதும் எம்மை ஆளுடைய சிவபிரான் திருமுன்னர் பிரகாசித்து இலங்கி நின்றன. 6

தளிரின் மெல்லடிப் பரிபுர மாயின தணந்து
மிளிரு மந்நவ மணிகளின் ஆணையால் விமலை
ஒளிரு நல்லுருத் தோன்றின ஐம்முகத் தொருவன்
தெளிரு முச்சுடர் அகத்திடை யமர்ந்திடுஞ் செயல்போல்.

தளிர்போலும் மிருதுவான மெல்லிய திருவடியினில் அணிந்த சிலம்புகளில் நின்றும் சிதறுண்டு வீழ்ந்து மிளிருகின்ற அந்த ஒன்பது இரத்தினங்களில் எல்லாவற்றையும் ஆக்குகின்ற ஆணையின்படி நிர்மல சொரூபியான அம்பாளின் அழகிய பிரகாசமுடைய உருவங்கள் தோன்றின. அது எதுபோலும் எனில் ஐந்து திருமுகங்களை உடைய ஒருவரான சிவபிரான் அக்கினி, சந்திரன், சூரியன் என்னும் மூன்று சுடர்களின் அகத்தே பொருந்தி இருத்தல் போல. 7

எண்ணி லாநவ மணிகளின் உமையுரு வெனைத்துங்
கண்ணி னுற்றெரிந் தருளினல் வம்மெனக் கழற
அண்ண லோர்வகை மணிக்கொரு சத்திக ளாக
நண்ணி னூர்நவ சத்திகள் அமரர் நற் றவத்தால்.

எண்ணில்லா அழகுடைய ஒன்பது இரத்தினங்களில் உமையம்மையாரின் உருத் தெரிதலும் அதனை சிவபிரான் தமது கண்ணினால் நோக்கி அருள் நீர்மையால் ''இங்கு வாருங்கள்'' என அந்த உருவங்களை கூப்பிட்டபோது அழகான ஒன்பது வகையான இரத்தினங்களில் நின்றும் ஒவ்வொரு இரத்தினத்திற்கு ஒரு சத்தியாக ஒன்பது சத்திகள் தோன்றினார்கள் தேவர்கள் செய்த நல்ல தவப்பேறினால். 8

பருப்ப தக்கொடி புரைநவ சத்திகள் பரமன்
திருப்ப தத்திடை வணங்கிநின் றவனிடைச் சிந்தை
விருப்பம் வைத்தலும் முனிவர்தம் மகளிற்போல் விரைவில்
கருப்ப முற்றனர் யாவதும் உமையவள் கண்டாள்.

இமயமலையில் திருஅவதாரம் செய்த பூங்கொடிபோலும் அழகுடைய பார்வதி அம்மையாரை ஒத்து இப்போ தோன்றிய ஒன்பது சத்திகளும் சிவபிரானுடைய திருப்பாதத்து தாழ்ந்து வணங்கி நின்று அவரிடத்து விருப்பம் வைத்தலும் உடனே அவர்கள் முனிவர் பத்தினிகளானவர், எவ்வாறு கணவன்மாருடன் உடல் உறவு இன்றி பார்வையால் கருக்கொள்வாரோ அதேபோல இந்த ஒன்பது சத்திகளும் கருப்பம் கொள்ளலும் இவை யாவற்றையும் உமையம்மையார் கண்டார். 9

முனம்பு ரிந்துல களித்தவள் அனையர்பால் முதிருஞ்
சினம்பு ரிந்திவண் எமக்குமா றாகிய திறத்தால்
கனம்பு ரிந்தஇக் கருப்பமோ டிருத்திர் பல்காலம்
இனம்பு ரிந்தநீர் யாவரு மென்றுசூள் இசைத்தாள்.

முன்னே உலகம் யாவையையும் தானே உண்டாக்கித் தந்தவளான உமையம்மை அவ்வாறு ஈசன்மேல் மனம்போக்கி கருக்கொண்ட ஒன்பது தனது வடிவான சத்திகளின்பால் மிகவும் கோபங்கொண்டு ''ஒரே இனமான நீங்கள் எல்லாரும் எனக்கு மாறாகிய இந்த நிலைமையை அடைந்த திறத்தால் கனம் பொருந்திய இந்தக் கருவோடும் பலகாலம் இப்படியே இருப்பீராக'' என்ற சாப வார்த்தையைச் சொன்னாள் பெருமாட்டி. 10

ஆவ தெல்லையில் நடுக்கமுற் றஞ்சியே அங்கண்
மேவு மாதர்மெய் வியர்த்தனர் அவ்வியர்ப் பதனில்
தேவ தேவன தருளினல் தினகரத் திரள்போல்
ஒவி லாவிறல் வீரர்கள் இலக்கர்வந் துதித்தார்.

இவ்வாறாக ஈஸ்வரி சாபமிட்ட எல்லையில் அங்கு நின்ற ஒன்பது சத்திகளும் அது கேட்டு நடுங்கி அஞ்சிப் பயமுற்று தங்கள் மேனி வியர்த்தார்கள். அப்போது அவர் களது வியர்வையினின்றும் தேவாதி தேவனுடைய நல்ல அருளினால் சூரியர்களின் திரட்சிகள்போன்ற பிரகாசமுடைய குறைவிலாத வலிமைகொண்ட வீரர்கள் ஓர் இலக்கம் பேர் வந்து உதயமானார்கள். 11

**வடுத்த னைப்பொருங் கண்ணினர் வியர்ப்பினில் வந்தாங்**
**கடுத்த மானவர் ஓரிலக் கத்தரும் அசனி**
**கடுத்த சொல்லினர் பொற்றுகி லுடையினர் கரத்தில்**
**எடுத்த வாளினர் பலகைய ராகிஈண் டினரால்.**

அம்பினால் ஏற்பட்ட புண்ணின் வடுப்போலும் அழகிய நீண்ட கண்களை உடைய ஒன்பது சக்திகளின் வியர்ப்பினில் வந்து அங்கு தோன்றி நின்ற ஓர் இலக்கம் வீர ரும் இடியேற்று முழக்கம் போலும் தொனி உடன் பேசும் சொல்லுடையர், பொன் பட்டாடை அணிந்துள்ளனர், கைகளிலே வாளை எடுத்துள்ளார், பல கைகளை உடையாராகி எல்லோரும் நெருங்கி வந்தார்கள். 12

**அனையர் யாவரும் ஈசனை யடைந்தனர் அன்புற்**
**றினிய வாகிய அமலன்நா மங்களை யேத்தி**
**வனைக ருங்கழல் வணங்கிமுன் நிற்றலும் மற்றப்**
**புனித நாயகன் அவர்தமை நோக்கியே புகல்வான்.**

இவ்வாறு இவர்கள் யாவரும் ஈசனை அடைந்து பெருமான்பால் அன்புற்று அவ ரது இனிதாகிய நாமங்களைப் புகன்று போற்றி சிலம்பணிந்த ஐயன் திருவடிகள் முன்பு வணங்கி நிற்றலும் மற்று அந்நேரம் புனிதராகிய சிவபிரான் அவ்வாறு வணங்கி நிற்கும் ஓர் இலக்கம் வீரரையும் பார்த்து அருளி சொல்கின்றார். 13

**மைந்தர் கேண்மினோ நீவிர்கள் யாவரும் வயத்தால்**
**இந்தி ராதியர் பகைவரை அடுவதற் கெமது**
**கந்த வேள்படை யாகுதிர் என்னவே கழறி**
**முந்து பேரருள் புரிந்தனன் யாவர்க்கும் முதல்வன்.**

''எனது பிள்ளைகளே! கேளுங்கள் நீங்கள் எல்லாரும் தனது வலிமையாலே இந்தி ரன் முதலான தேவர்களுடைய பகைவராகிய சூரன், சிங்கன், தாரகன் முதல் அசு ரர்கிளைகளை எல்லாம் அழிவு செய்வதற்கென தோன்றி சரவணப்பொய்கையில் இப் போது இருக்கும் எனது மைந்தனுன கந்தவேளின் படைகளாக இருப்பீராக'' என எம்பிரான் சொல்லியருளி அவர்கட்கு மேலான அருளைப் புரிந்தருளினார் யாவர்க்கும் முதல்வரான சிவபிரான். 14

**இன்ப நீருடன் இவையருள் புரிதலும் இலக்கம்**
**நன்பெ ருந்திறல் மைந்தர்க ளாயினோர் நாளும்**
**அன்பு மேதகு பரிசன ராகியே அமலன்**
**முன்பு நீங்கலா தொழுகினர் செய்பணி முறையால்.**

இன்ப நீர்மையோடும் சிவபிரான் இவற்றை அருள் செய்தலும் அதனைப் பெற் றுக்கொண்ட நன்மை பயக்கும் வலிமைகொண்ட பிள்ளைகளான ஓர் இலக்கம் வீர

ரும் நாள்தோறும் முருகப்பிரான் மீது பேரன்பு உடைய பரிசனர்களாகிய வண்ணம் சிவபிரான் திருச்சந்நிதி முன்பு விட்டு நீங்காது ஒழுகிவரலாயினர் தாங்கள் தாங்கள் செய்கின்ற பணிவிடைகளில் நின்றும் தவறுதல் இல்லாதவர்களாய். 15

மாற்ற ருஞ்சினத் தம்மைமுன் கொடுமொழி வழங்கத்
தோற்று நன்மணி யுருவமாந் தோகையர் துளங்கிப்
போற்றி வந்தனை செய்துபின் அவள்பணி புரிந்தே
ஆற்று தொல்கருப் பத்துடன் பற்பகல் அமர்ந்தார்

யாவராலும் மாற்ற முடியாத பெருஞ் சினம்கொண்டு அம்பாள் முன்னம் கொடிய சாபத்தை இடுதலும், தாங்கள் தாங்கள் தோன்றிய ஒன்பது வகையான இரத்தினங்களின் அதே அதே நிறத்தோடும் காணப்படுகின்ற இந்த ஒன்பது சத்திகளும் பெரிதும் நடுநடுங்கிப் போற்றி செய்து எம்பிராட்டியை வந்தனை புரிந்து பின்னர் அம்பாளின் பணிவிடைகளைப் புரிந்தவாறு தங்கள் வயிற்றில் நிரம்பிய கருவோடும் பல பல நாட்கள் அமர்ந்திருந்தார்கள். 16

இகலு மாமணி மகளிர்தங் கருவினுள் இறைவற்
புகழும் நந்தியங் கணத்தவர் குழவியாய்ப் போந்து
நிகரில் காளைய ராகிவீற் றிருந்தனர் நெறிசேர்
சுகன்ள னும்படி பரமனை முன்னியே தொழுது.

எம்பிராட்டியின் வடிவாகவே வலியுடைய ஒன்பது இரத்தினங்களினின்றும் தோன்றிய சத்திகளின் கருவினுள்ளே இறைவனைப் புகழ்ந்து போற்றியிசைத்து வாழ்கின்ற நந்திகணத்தவர்கள் குழந்தை வடிவாகப் புகுந்து நிகரற்ற இளைஞர்களாக வளர்ந்து அக்கருவினிலே தங்கி இருந்தார்கள். சிவபிரானைத் தியானித்து தொழுதவாறு இருந்த இவர்கள் செயல் எதுபோலும் என்னில் நன்நெறிகொண்ட சுகப்பிரமரிஷியானவர் தாய் வயிற்றில் இருக்கும் காலத்து சிவத்தியானமுடையவராகி வீற்றிருந்தவாறு போல. 17

அரத னங்களில் தோன்றிய மங்கையர் அகட்டிற்
கருவின் வந்திடு ஆடவர் ஈசனைக் கருதிப்
புரியும் யோகுட னிருத்தலின் ஆற்றரும் பொறையாய்ப்
பரம தாதலும் உமையுடன் பரமனைப் பணிந்தார்.

இரத்தினங்களில் தோன்றிய ஒன்பது சத்திகளின் வயிற்றிலே கருவில் வந்துற்ற நந்திகணத்தைச் சேர்ந்த ஒன்பது ஆடவர்களும் ஈசனைத் தியானித்தவாறு தாங்கள் செய்யும் யோகுடன் இருத்தலினாலே அவர்களைக் கருவிலே தாங்கும் தாய்மாராகிய ஒன்பது சத்திகட்கும் தாங்கமுடியாத பெரும் சுமையாகப் பாரமாதலும் அதனால் மெலிந்து தமது துயரம் நீங்குமாறு உமையம்மையாருடன் சிவபிரானைப் பணிந்தருளினார்கள். 18

இருவர் தம்மையும் பணிந்தவர் இன்றுகா றினைய
கருவின் நொந்தனம் இன்னினி யாம்பரிக் கல்லேம்
அருள்பு ரிந்திடு மென் றலும் ஆதியங் கடவுள்
பரிவி னால்உமை திருமுகம் நோக்கியே பகர்வான்.

உலக முதல்வரான சிவபிரானையும் கௌரிநாயகியையும் ஒன்பது சத்திகளும் பணிந்து நின்று அவர்கள் சொல்வார்கள் ''அம்மையே, அப்பனே! இன்றுவரைக்கும் இவ்வாறாக எங்களை வருத்திய பாரமான கருவினைச் சுமந்து நொந்துபோனோம். இனி மேல் யாம் இதைத் தாங்கமாட்டோம். இக்கருவை நீக்குமாறு அருள்புரிந்திடுக'' என்றலும் ஆதியான கடவுள் பரிவான தமது கருணையினால் உமை அம்மையாரின் திருமுகம் நோக்கியே பகர்வார். 19

ஏல வார்குழற் கவுரிநின் செய்யதா ளிடையிற்
சாலு நூபுரத் துதித்தவர் உனதுசா பத்தாற்
சூலி னான்மிக மெலிந்தனர் பற்பகல் சுமந்தார்
பால ரைப்பெற இனியருள் புரிகெனப் பணித்தான்.

''வாசம் கமழும் கூந்தலை உடைய கௌரியே! நினது செம்மையான திருவடியிடத்து சால்புடன் பொருந்திய சிலம்பிடத்து இருந்த நவரத்தினங்களில் நின்றும் உதித்த இவர்கள் உனது சாபத்தினால் கருச் சுமையால் மிகவும் மெலிந்து போயினர். பல நாட்கள்வரை இதனை சுமந்துள்ளார்கள். ஆகவே இவர்கள் தங்கள் பாலரைப் பெறும்படியாக இனி நீ அருள் செய்வாயாக'' என எமது ஐயர் பெருமான் பணித்தருளினார் அம்பாளை. 20

இறைவன் இங்கிது பணித்தலும் நன்றென இசையா
முறுவல் செய்துமை மாதரை நோக்கிமொய்ம் பினரைப்
பெறுதி ரால்இனி யென்றலும் அவர் வயிற் பெயரா
துறையும் யோகுடை வீரர்கள் இத்திறம் உணர்ந்தார்.

இறைவன் இங்கு இவ்வாறு பணித்தலும் எம்பிராட்டி அதனைக் கேட்டாளாய் ''ஐயனே! அது நன்று'' என இசைந்து புன்சிரிப்புக்கொண்டு தம்மை வணங்கிய அந்த ஒன்பது சத்திகளின் முகத்தைப் பார்த்து ''வலிமை உடைய உமது புதல்வரைப் பெறுதிரால் இனி'' என்றலும் உடனே அவர்கள் வயிற்றில் தங்கியிருந்து யோகத் தமர்ந்த ஒன்பது வீரரும் உணர்ந்து கொண்டார்கள். சர்வஉலகச் செயல் யாவும் இறைவியின் கருணையே ஆதலின் அவவை எம்பிரான் இந்த ஒன்பது சத்திகளின் கருவை அவர்கள் பெறும் பொருட்டு அம்பாளை அருள் செய்யுமாறு பணிப்ப அஃதின் வழி ஈஸ்வரி அருளலும் அதை கருவாய்க் கிடந்து யோகத்திருந்த ஒன்பது நந்திகணத்தில் தோன்றிய வீரரும் உணர்ந்து கொண்டார்கள். 21

மறத்த லில்லதோ ருணர்வுடை வீரர்கள் மற்றித்
திறத்தை நாடியே யோகுவிட் டுளமகிழ் சிறப்ப
இறத்தல் நீங்கிய பரம்பொருள் அருள் முறை இறைஞ்சிப்
பிறத்த லுன்னியே முயன்றனர் ஆயிடைப் பெயர்வார்,

எம்பெருமானை மறவாமை மனம்கொண்ட யோகுடைய ஒன்பது வீரர்களும் மற்று இங்கு அம்பாள் அருள் செய்த திறத்தை நாடியே யோகை விடுத்து உளம் மகிழ்வாகி சிறப்ப இறப்பைக் கடந்துள்ள பரமான பொருளான சிவபிரானின் அருள் முறையை உணர்ந்து அன்பாகி வணங்கி தாம் பிறக்கும் பொருட்டாக உளங் கொண்டு அதனால் தங்கள் தாய்மாரின் கருவிலிருந்தும் பெயர்ந்து பூமியில் தோற்றுவதற்கு முயன்றனர்: 22

பரிபு ரந்தனின் முன்வரு மங்கையர் பரைதன்
கருணை கொண்டசொற் கேட்டலுங் கவற்சியை அகன்று
விரைவின் மேலவர் பதம் பணிந் தேத்தியே விடைகொண்
டொருவி மைந்தரை அளித்தனர் யாவரு மொருசார்.

எம்பெருமாட்டியின் சிலம்பின் நின்றும் உற்பவித்த பெண்கள் அம்பாள் அருள் செய்த கருணையான சொல்லைக் கேட்டலும் தங்கள் மனக்கவலையை விடுத்து நீங்கி விரைவாக அங்கு எல்லார்க்கும் மேலவரான சிவபிரானையும் கௌரி அம்பாளையும் வணங்கி இப்போ தங்கள் குழந்தைகள் பிரசவமாகும் குறிகள் தென்படுதலால் விரைவாக அந்த இடத்தின் நின்றும் நீங்கி வேறு ஓர் புறமான இடத்தில் சென்று தங்கள் பிள்ளைகளைப் பெற்றெடுத்தார்கள். 23

நந்தி தன்கண முதல்வர் களாகியே நணியோர்
பந்த நீங்கியே சனித்தனர் ஒன்றிலாப் பதின்மர்
எந்தை யாரருள் பெயர்கொடே இருநில வரைப்பில்
சுந்த ரன்விடை முகத்தவன் றேன்றிய வாபோல்.

நந்திகணத்தில் முதல்வராகியே அங்கு தாய்மார் வயிற்றில் தங்கி இருந்த ஒன்பது வீரரும் தங்களது முன் நிலையாகிய பந்தங்கள் இல்லாத அதே தன்மையோடும் எந்தைபெருமானுல் அவர்களுக்கு சூட்டி அருளிய திருநாமங்களுடன் வந்து தோன்றினுர்கள். அது எப்படிப்போலும் எனில் ஆலாலசுந்தரர் என்பார் பூமியில் சடையனுர் என்னும் பிராமணருக்கு புத்திரனுக இசைஞானி அம்மையாரின் திருவயிற்றில் எப்படி பந்தங்கள் நீங்கிய முன்னை இயல்போடு அவதரித்து பாசங்களில் நின்றும் நீங்கியமையால் இறைவனுல் ஆட்கொள்ளப்பெற்றவாறு போலவும் இடபத்தின் முகமுடைய நந்தியெம்பெருமான் சிலாதன முனிவரின் மகனுக அவதரித்த அதே நேரத்திலும் பந்தம் நீங்கிய இயல்புடன் கணங்கட்கு தலைமையான பதத்தைப் பெற்றும் விளங்கும்படியாக இருந்தமையால் இவர்கள் பிறக்கும்போதே அருளால் பாசநீக்கம் பெற்று அவதரித்த அதே தன்மைபோல ஒன்பது வீரரும் இயல்பாகவே பாசநீக்கம் பெற்று அவதரித்தனர்.

ஒரு தாய் வயிற்றில் உற்பவமாகும் எந்த உயிரும் பூமியில் சென்மம் எடுத்தால் அது பாசத்தொடர்புடன் பிறக்கும். அது பொது விதி. ஆனுல் இங்கு இவர்கள் அவ்வாறு ஏனையோரைப்போல் பிறந்தாலும் பாசநீங்கி அவதரித்தனர் ஈசனருள் கைகூடுதலால்.

பேர ஆகுவை யுடையவன் இள வல்பே ரருளால்
சூர வாகுலம் வானவர் பெருவகை தொலைப்பான்
ஏர வாகுறிஞ் செம்மணிப் பாவைதன் னிடத்தில்
வீர வாகுவந் துதித்தனன் உலகெலாம் வியப்ப.

பெரிய எலியை வாகனமாக உடைய விநாயகப்பெருமான் மகிழும் தம்பியாகிய முருகப்பெருமானின் பேரருளினுல் சூரர்களால் செய்யப்படும் கொடும் துயரங்களை இனிமேலும் தேவர் கூட்டம் பெருது தொலைத்து விடும்படியாக அழகிய சிவந்த வண்ணமுடைய இரத்தினத்தினிடம் தோன்றிய செம்மணி என்னும் அம்மையாரது திருவயிற்றின்கண்ணினின்றும் வீரவாகுதேவர் வந்து உதித்தனர் உலகெலாம் வியக்கும்படியாக.

ஒன்பது சத்திகளும் எம்பிராட்டியின் சிலம்பில் உள்ள ஒன்பது இரத்தினங்களில் நின்றும் தோன்றியவர்கள். இவர்கள் அந்த அந்த இரத்தினங்களின் பெயரும் வடிவமும் கொண்டனர். ஆகவே நவரத்தினங்களில் முதன்மையான சிகப்பு மணியில் இருந்து தோன்றிய அம்மைக்கு செம்மணி என பெயரிடப்பட்டது. இதுபோல ஏனைய சத்திகளையும் பெயரிடுவதைக் காண்க. 25

**விரள வல்லியார் தந்திசூ ரரிவியன் படையாங்**
**கரள வல்லிருள் அகற்றுவான் எழுந்தவெண் கதிர்போல்**
**திரள வல்வினை அனையபூண் முலையுடைத் தெய்வத்**
**தரள வல்லிபால் தோன்றினன் வீரகே சரியே.**

மிகப்பெரிதாகி நீண்ட கொம்புகளைக்கொண்ட யானைமுகமுடைய தாரகனும், சிங்கனும், சூரனும் ஆகியோரின் வலிமை உடைய படையாகும் அசுரர்கள் என்னும் கொடிய இருளை அகற்றிவிடும்படி எழுந்த வெள்ளிய கிரணங்களைக்கொண்ட சூரியனைப்போன்று திரண்ட கொடிய வினையை ஒத்து விளங்கும் பூணினை அணிந்த முலை உடைய தெய்வீகமான முத்து என்னும் பெயருடைய அம்மைபால் தோன்றினர் வீரகேசரி என்னும் பெயருடைய வீரர். 26

**மக்கள் வானவர்க் கருந்துயர் புரியும்வல் லவுணர்**
**தொக்க வீரமா மகேந்திரப் பெருவளந் தொலையச்**
**செக்கர் நூபுரப் புட்பரா கத்திபாற் சிறப்பால்**
**தக்க வீரமா மகேந்திரன் வந்தவ தரித்தான்.**

மக்களுக்கும் தேவர்களுக்கும் கொடுந் துயரினைப் புரிகின்ற வலிமையான அசுரர் யாவரும் தொகுதியாகச் சூழ்ந்து வாழ்கின்ற வீர மகேந்திரபுரம் என்னும் அசுரருடைய தலைநகரத்தின் பெரிய வளம் யாவும் தொலையும்படியும் செக்கர்வானைப்போலும் மேனி கொண்டவளும் சிலம்பின் நின்றும் தோன்றியவளும் ஆகிய புட்பராகம் என்னும் அம்மையாரிடத்தில் இருந்து சிறப்புற்று உலகம் வாழும்படி தகுதி செய்யும் வல்லமைவாய்ந்த வீரமாமகேந்திரன் வந்து அவதாரம் செய்தான். 27

**ஆத வத்தனிக் கடவுளும் வடவையா ரழலுஞ்**
**சீத ளப்புது மதியமும் வெள்குறத் திகழ்கோ**
**மேத கத்தமர் பாவைபால் விண்ணவர் புரியும்**
**மாத வத்தினல் வீரமா மகேச்சுரன் வந்தான்.**

சூரியதேவனாகிய தனிக்கடவுளும், வடவை என்னும் நெருப்பின் கொடூர வெப்ப அழலும், குளிர்மை பொருந்தி புதுக்கலையோடு விளங்கும் சந்திரனும் ஆகிய இவர்கள் நாணமுறும்படியாக திகழ்ந்து ஒளிகொண்ட மேனி உடைய இரத்தினமாகிய கோமேதகம் என்னும் நாமமுடைய அம்மையாரிடமிருந்து தேவர்கள் புரியும் தவத்தினல் வீரமாமகேச்சுரன் வந்து உதயமானன்.

உலகிற் பெரியார்கள், தபோதனர்கள், நீதியுடன் அரசாளும் அரசர்கள் யாவரும் உலக மக்கள் செய்யும் தவத்தினலேயே தோற்றுவர். இந்த ஒரு மகா உண்மையை கச்சியப்பர் ''விண்ணவர் புரியும் மாதவத்தினல்'' எனும் பதத்தூடு விளக்கி வைக்கிருர். தவத்தின் அடிப்படை தருமம். அதன் அங்கம் நீதி. அதுமட்டுமல்லாது சால்பும்

எனச் சொல்வார்கள். உலக மக்கள் இந்தப் பொருள்களை கடைப்பிடிக்குங்கால் எல்லாம் சுபீட்சமாகவே நிறையும். அல்லாமல் மக்கள் வேடிக்கை கேளிக்கைகளில் மனம் போக்கி தருமம், அன்பு, நீதி இவைகளை விடுத்து பொய், களவு, ஏமாற்றல், பணத்தாசை கொண்டு வாழ்க்கை நடத்தினுல் உலகில் துஷ்டர்களே பெருகுவார்கள். அவர்களால் நல்லோர்களுக்கு கேடும் துஷ்டர்களுக்கு அநுக்கிரகமுந்தான் பெருகும். இந்த உண்மை உலகில் வாழ்கின்ற எச்சமயத்தார்க்கும் எல்லா வருண மக்கட்கும் பொதுவானதாகும். ஆகவே தான் நன்மையுற வேண்டினும் உலகம் நன்மையுற வேண்டினும் உலகில் நாம் செய்யவேண்டிய சிறந்த கருமம் தவம் ஒன்றேயாகும். 28

தான மாநிலத் தேவர்கள் மகிழ்வுறத் தகுவ
ரான பேரெலா முடிவுற அறந்தலை யெடுப்பக்
கானல் சேர்வயி டூரிய மின்னிடைக் கழற்கால்
மான வீரமா புரந்தரன் என்பவன் வந்தான்.

தருமம் ஓங்கும் மேலாகிய இப்பூமியிலே தேவர்கள் மகிழ்வுறும்படியாக, கொடுமை புரிந்த அசுரர்கள் அனைவரும் முடிவுற, தருமம் தலையெடுப்ப கானல் வெப்ப ஒளி கொண்ட வைடூரியம் என்னும் அம்மையாரிடத்திருந்து சிலம்பு அணிந்த சேவடியுடன் வீரமானம் கொள்ளும் வீரமாபுரந்தரன் என்பான் வந்தான். 29

சூர ராக்கமுந் துணைவர்தம் மாக்கமுஞ் சூழ்ந்
தீர ராக்கமும் வானவ ரேக்கமுஞ் சிதைய
வார ராக்கமழ் கொன்றைவே ணியன்அரு ளதனுல்
வீர ராக்கதன் வந்தனன் வயிரமெல் லியல்பால்.

சூரர்களது செல்வமும் அவர்களின் துணைவர்களின் செல்வமும் அதிகாரம் முதலிய யாவும் தொலையவும் அவர்களைச் சூழ்ந்து பற்றி வாழ்ந்த மற்றைய தீரர், கொடிய அசுரர்களுடைய ஆயுள், ஆக்கம் எல்லாம் முடிவுற தேவர்கள் ஏங்கிப் பயந்து திரியும் துயரமும் கெட்டழிய படமுடைய நாசபாம்புடன் வாசம் கமழும் கொன்றை மலர்மாலை அணிந்த சடையுடை அப்பன் அருளினுல் வைரம் என்னும் இரத்தினத்தில் தோன்றிய அம்மையாரிடத்திருந்து வீரராக்கதன் வந்து அவதரித்தனன். 30

கரக தத்தனி மால்வரை எடுத்தொரு கணத்தில்
புரக தத்தினை இழைத்தவன் அருளினுற் புணரிக்
குரக தத்திடைப் பைங்கனல் கொம்மென எழல்போல்
மரக தத்திபால் வீரமார்த் தாண்டன் வந்தனனே.

வலிமைகொண்ட தமது திருக்கரத்து மிக வலியாக ஒருகாலமும் வளையாத வில் போல் வைரமான மகாமேரு மலையை எடுத்து அதனை ஒரு கணப்பொழுதில் வளைத்து முப்புரங்களையும் எரித்த பெருமானுரின் அருளினுல் சமுத்திரத்தினின்றும் குதிரையின் முகத்திலே வடவாமுகாக்கினி திடீரெனத் தோன்றும் இயல்பேபோல் மரகதமணியில் தோன்றிய அம்மையாரிடத்திருந்து வீரமார்த்தாண்டன் வந்து அவதரித்தான். 31

மையல் மாக்கரி வாம்பரி விரவிய மணித்தேர்
வெய்ய தானவர் பஃறுரைகை இமைப்பினில் விளிய
மொய்யி னுர்த்தடு மானவன் பவளமா மொழிப்பேர்த்
தையல் தன்வயின் வலியவீ ராந்தகன் சனித்தான்.

மத மிகுதியால் மயங்கும் பெரிய யானைகளையும், தாவிப் பாயும் குதிரைகளையும் நெருக்கமான அநேக தேர்களையும் கொண்ட அசுரர்கள் பற்பல தொகையாக அழிந்து போகும்படியாக உரப்பி ஆரவாரிக்கின்ற வீரனை வலியுடைய வீராந்தகன் என்ப வர் பவளம் என்னும் பெயரினையுடைய அம்மையாரிடத்தினின்றும் வந்தார். வீராந்தகன் என்பவர் வீரர் + அந்தகன் என்பதால் இவர் போடும் சத்தத்திலேயே எத்தனையோ அசுரர் இறப்பர் என்றார். 32

கந்து தித்திடும் வியன்நர மடங்கலுங் கடலின்
முந்து தித்திடும் ஆலமும் வடவையும் முரண
நந்து தித்தநற் களமணிப் பாவைநற் றவத்தால்
வந்து தித்தனன் வீரதீ ரப்பெயர் வலியோன்.

இரணியன் என்னும் அசுரனைக் கொல்ல வேண்டித் தூணிலே உதித்திட்ட மிக்க வலிமை கொண்ட நரசிங்க மூர்த்தியும் பாற்கடலின்கண் முன்னே தோன்றிய ஆல காலம் என்னும் நஞ்சும், வடவாமுகாக்கினி என்னும் கொடிய நெருப்பும் ஆகிய எல் லாம் ஒன்றான தன்மைபோல சங்கு உற்பவித்தலை ஒத்த களமணி (இந்திர நீலம்) என் னும் பெயர் கொண்ட அம்மையாரின் நல்ல தவத்தால் வந்து உதித்தனன் வீரதீரன் என்னும் பெயருடைய வலிமைகொண்ட வீரர். 33

இந்த வீரரோன் பதின்மரும் ஈசன தருளால்
தந்தம் அன்னையர் நிறங்கொடே பொலந்துகில் தாங்கி
வந்து பற்பகல் வளர்தரும் உறுப்பொடு மடவார்
உந்தி யின்வழி நான்முகத் தண்ணல்போல் உதித்தார்.

இவ்வாறாகிய வீரர்கள் ஒன்பது பேரான வீரவாகு தேவர், வீரகேசரி, வீரமா மகேந்திரன், வீரமாமகேச்சுரன், வீரமாபுரந்தரன், வீரராக்கதன், வீரமார்த்தாண்டன், வீராந்தகன், வீரதீரன் என்பார்கள் யாவரும் ஈசனது அருளினால் தாங்கள் தத்தம் தாய்மாரின் நிறங்களையே கொண்டு அழகான பொன்னாலான பட்டாடைகளை அணிந் தவர்களாய் பலநாள் வளர்ந்து கருவுள் இருந்தமையால் குழந்தைகள் போலல்லாது அழகாக வளர்ந்த உறுப்புக்கள் உடைய வாலிபம் உடையராய் இந்தப் பெண்களின் தொப்பூளின் வழியாக வந்து தோன்றினார்கள். இது எவ்வாறுபோலும் எனில் நான்கு முகமுடைய பிரமதேவர் விஷ்ணுபிரானின் உந்தியில் தோன்றும் தாமரை மலரில் தோன்றியவாறுபோலாகும்.

ஒன்பது வகையான இரத்தினங்களானவற்றிலிருந்து அந்தந்த நிறங்க ளைக் கொண்டே சத்திகள் ஒன்பதுபேரும் தோன்றி அவ்வத் தாய்மாரின் நிறங்கொண்டே ஒன்பது வீரருந் திகழ்ந்தார்கள். இவர்கள் நிறங்கள் பின்வருமாறு ஆகும். வீரவாகு தேவர் செந்தாமரை நிறமும், வீரகேசரி பால் நிறமும், வீரமாமகேந் திரர் பொன்னிறமும், வீரமாமகேச்சுரர் கத்தரிப் பூ (மஞ்சளும் சிகப்பும் கலந்த) நிற மும், வீரமாபுரந்தரர் வெண்நீலமும் பச்சையும் கலந்த நிறமும், வீரராக்கதன் இந் திரவில்லின் நிறமும், வீரமார்த்தாண்டர் பச்சை நிறமும், வீராந்தகர் முருக்கம்பூப் போலச் சிவந்த நிறமும், வீரதீரர் காயாம்பூப்போலக் கருநீல நிறமுங் கொண்டு தோன்றினர். 34

உதிதருமத் திறல்வீரர் அரியணைமேல் அம்மையுட னுறைந்த நாதன்
பதமலர்கள் பணிந்தெழலும் அவர்க்கண்டு பார்ப்பதியை பரிவால் நோக்கி
மதியுடையர் திறலுடையர் மானவருங் கலத்தினர் நம் மைந்தர் இன்னோர்
புதியரலர் நந்திதனிக் கணத்தவரென் றுன்சுருதிப் பொருளாய் நின்றான்.

இவ்வாறு உதித்திட்ட இந்த திறமையான வலிகொண்ட வீரர் ஒன்பது பேரும் சென்று சிம்மாசனத்தின் மேலாக வீற்றிருந்தருளிய எமது அம்மையான உமையுடன் அமர்ந்த நாயகராகிய பெருமானின் பாதமலரில் பணிந்து எழுந்து முன்னிற்றலும் அவர்களை எம்பிரான் கண்டு பார்வதி அம்மையாரைப் பரிவோடும் பார்த்தருளி சொல்கிறார், ''இவர்கள் யாவரும் மதிநுட்பமுடையவர்; திறல் உடையவர்; மிக்க அழகிய அருமைப்பாடுடைய ஆபரணங்களை உடைய எங்களது பிள்ளைகளாவர். இவர்கள் புதிதாகத் தோன்றியவரல்லர். முன்புதொட்டு நந்திகணத்தில் உள்ளார்கள்'' எனக் கூறினார் வேதங்களின் பொருளாய் நின்ற சிவபிரான். 35

தேவியது கேட்டு மைந்தர்க் கருள்புரிய அவர்க்கெல்லாஞ் சிவன் வெவ்வேறு
தாவில்சுடர் வாளுதவி வியர்ப்பில்வரும் ஓரிலக்கந் தனய ரோடு
நீவிர்களு மொன்றிநுங்கட் கிறையவனு கியசேயை நீங்க லின்றி
ஏவலவன் பணித்தனசெய் தொழுகுதிரென் றான் அவரும் இசைந்து தாழ்ந்தார்

தேவி அந்த வார்த்தைகளைக் கேட்டருளி அப்பிள்ளைகள் ஒன்பது பேருக்கும் அருள் புரிதலும் இவர்களுக்கெல்லாம் சிவபிரான் வெவ்வேறு ஒளியுடைய வாள்களை உண்டாக்கி அவர்கள் கையிலே கொடுத்தருளி அவர்களை நோக்கி சொல்வார், ''பிள்ளைகளே! உங்களது தாய்மாரின் வியர்வையினின்றும் முன்தோன்றிய ஓர் இலக்கம் தொகையுடைய பிள்ளைகளோடு நீவிரும் சேர்ந்து உங்கட்கு எல்லாம் தலைவனாகிய எமது திருக்குமாரனை நீங்கல் இல்லாமல் அவனுடைய ஏவற் பணிகளைச் செய்து ஒழுகி வருவீராக'' எனச் சொல்லியருளினார் சிவபிரான். அப்போது அவர்களும் அதற்கு இசைவாகித் தாழ்ந்து வணங்கினார்கள். 36

ஒன்பானும் இலக்கத்தோர் ஓரிலக்கத் தோர்தம்மோ டொன்றிப் புல்லி
அன்பாகி எம்பெருமான் சினகரத்தை அகலாமல் அங்கண் வைக
மென்பானல் புரையும்விழிச் சத்திகளொன் பதின்மர்களும் விமலக்கன்னி
தன்பாலை யிகவாமல் அவள்பணித்த தொழில் புரிந்து சார்தலுற்றார்.

இப்படியாக ஒன்பது என்னும் தொகைப்பட்ட இந்த சிறந்த வீரர்கள் யாவரும் ஈசன் ஆணைப்படியே ஒரு இலக்கம் தொகையாகிய முன் தோன்றிய வீரரை அடைந்து அவரை உடல் வேறாக இருந்தாலும் உயிரால் ஒருவர்போல் ஒன்றிப் புல்லித்தழுவி அன்பு கூர்ந்து எம்பெருமானுடைய கோயிலைவிட்டு அகலாமல் அங்கண் இருப்ப மென்மையான பால்போலும் அழகிய கண்கொண்ட சத்திகள் ஒன்பதுபேர்களும் நிர்மல சொரூபியாகிய நித்திய கன்னிகையான அம்பாளை ஒருபொழுதும் விட்டு நீங்காமல் அவள் பணித்த ஏவல் தொழில்கள் யாவும் புரிந்து எம்பெருமாட்டியை சார்ந்து ஒழுகல் உற்றார். 37

துணைவர் வரு படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் 1014

295

## 13. சரவணப் படலம்

ஏற்ற மானவர் ஒன்றெழி பதின்மரோ டிலக்கர்
தோற்ற மெய்திய தன்மையை இத்துணை சொற்றும்
ஆற்றல் சேர்புனற் சரவணத் தடந்தனில் அறுவர்
போற்ற வைகினேன் கயிலையிற் புகுந்தமை புகல்வாம்.

வீரம் எனப் புகலும் வார்த்தைக்கு ஏற்றவர் இவர்தான் எனப்படும் ஒன்று நீங்கிய பத்துப்பேரான (என்றமையால் ஒன்பது) வீரவாகு தேவர் முதலியரோடு இலக்கம் வீரரும் தோற்றமாகிய தன்மையை இதுகாறும் உங்கட்கு எடுத்துச் சொன்னேம், இனிமேல் ஆற்றல் சகலமும் பொருந்திய சரவணப் பொய்கையிடத்து கார்த்திகைப் பெண்களான ஆறு தாய்மார் போற்றும்படியாக வீற்றிருந்தருளிய எங்கள் கடவுள் திருக்கைலாய மலையில் எழுந்தருளி வந்த வரலாற்றைச் சொல்வோம். 1

தருப்ப மிக்குளார் காணுறுத் தாவில்சீர் வெள்ளிப்
பொருப்பி லுற்றிடு பரம்பொருள் கருணையாற் பொறைகூர்
கருப்ப மற்றுயிர் முழுவதுந் தந்திடுங் கன்னிப்
பருப்ப தக்கொடிக் கவ்வழி இனையன பகர்வான்.

தன்னையே அதிகம் மதித்துள்ள அகந்தை மிக்குடையார் எவராலும் அறியப்படாததும், குறைவில்லாத சீர் கொண்டதும், வெள்ளி மயமானதும் ஆகிய திருக்கைலாச மலையில் வீற்றிருக்கின்ற பரம்பொருளான சிவபிரான் தமது பாகத்து அமர்ந்து கருணையாலே மிகவும் பொறுமையோடும் எல்லா உயிர் வர்க்கங்களையும் கருவாகித் தாங்கி பின்னர் உலகில் தந்திடுகின்றவளும் அப்படி உயிர்களைப் பெற்றுலும் பெருதாள் போல நித்திய கன்னிகையாய் இருப்பவளும், இமயம் என்னும் மலையிடத்து தோன்றிக் கொடிபோலும் சாயலினை உடையவளுமாகிய எமது உமையம்மையாரை அவ்வழியாக நோக்கியே இந்த வார்த்தைகளை வகுத்துச் சொல்வார். 2

பொம்ம லுற்றிடு நான்முக னாதியோர் புந்தி
விம்ம லற்றிட முந்துநம் விழியிடைத் தோன்றிச்
செம்ம லர்ப்பெருஞ் சரவணத் திருந்தநின் சேயை
இம்ம லைக்கணே உய்க்குதும் வருகென இசைத்தான்.

''அசுரர் கொடுமையால் மனம் வேதனைகொண்ட நான்கு முகமுடைய பிரமதேவர், நாராயணர், இந்திரன் முதல் தேவர் யாவரும் தமது துயரம் நீங்கி இன்பமுறும் பொருட்டாக முன்னே எனது நெற்றிக் கண்ணிடத்துத் தோன்றி நல்ல தாமரை மலர்கள் மலர்ந்து விளங்கும் சரவணப் பொய்கையிடத்து இருந்த உன்னுடைய குமரனை இந்த மலையின்கண்ணே கொண்டு வந்து சேர்ப்போம் வருவாயாக'' என இசைத்தருளினர் சிவபிரான்.

''எனது நெற்றிக் கண்ணில் தோன்றினலும் உனது குழந்தையாவன் அவன்'' என ஈசன் சொல்லியருளினன். இதனை நக்கீர தேவரும்

''இழையணி சிறப்பிற் பழையோள் குழவி'' எனப் போற்றுவார். 3

செம்புலி யதளினன் செப்பிற் றேர்தலும்
அம்பிகை யுவகையோ டன்பு கொண்டெழீஇ
நம்பெரு மதலையை நாங்கொண் டேகுதும்
எம்பெரு முதல்வநீ யெழுதி யாலென்றாள்.

சிவந்த கண்ணுடைய புலியின் தோலை உடுத்த பெருமான் சொன்ன வார்த்தையை எம்பிராட்டி உணர்ந்தாளாய் உடன் பெரிதும் மகிழ்வாகி அன்புகொண்டு எழுந்து பெருமானைப் பார்த்து ''எம்பெரு முதல்வனே, ஐயனே! நம்முடைய பெரிய பிள்ளையை நாம் இங்கு கொண்டுவரும்படி செல்வோமாக, தேவரீர் எழுந்தருளுவீராக'' என்றாள். நம்பெரு மதலை:- இதனை நக்கீரதேவர் 'அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக'' என்பார். 4

கொம்மைவெம் முலையினால் குறிப டுத்திய
அம்மையீ துரைத்துழி அருளி னாலெழா
மைம்மலி மிடறுடை வான நாயகன்
இம்மென அவளொடும் ஏற தேறினான்.

கொம்மெனப் பொங்கும் முலையினால் காஞ்சியில் மாமர நிழலில் தோன்றிய பெருமான் திருமேனிமேல் குறியிட்டு வைத்த அம்மை இவ்வாறு பேசுதலும் அந்நேரத்து நீலநிறங்கொண்ட கண்டத்தை உடைய எம்பெருமான் அருளாகி எழுந்து இம்மென விரைவாக இடப வாகனத்து ஏறியருளினார் உமையம்மையார் உடனாக. 5

நந்தியின் எருத்தமேல் நங்கை யாளொடு
நந்திவந் திடுதலும் நாக மேலுளார்
நந்திய வினைத்தொகை நந்திற் றென்றிடா
நந்திதன் கணத்தொடு நண்ணிப் போற்றினார்.

இடப வாகனத்தின் முதுகின் மேலாகி உமையம்மையாரொடும் சிவபிரான் எழுந்தருளி வந்திடுதலும் அந்நேரத்து தேவ உலக வாசிகளான தேவர்கள், முனிவர்கள் யாவரும் களிகூர்ந்து ''எம்பெருமானையும் எம்பெருமாட்டியையும் தரிசிக்கும் பேறு உடையோம். இன்றோடு எம்மைப் பீடித்த வினை போயிற்று'' என்று கைகூப்பித் தொழுதவாறு நந்திதேவர் முதலாக உள்ள ஏனைய கணங்களுடன் எம்பெருமானை அடைந்து போற்றிசெய்தார்கள். 6

அந்தமில் விடத்தினை யடக்கு கையுடைச்
சுந்தர னாதியாந் தொல்க ணத்தினோர்
எந்தைதன் உருவுகொண் டிருந்த மேலவர்
வந்திரு மருங்குமாய் வழுத்தி ஈண்டினார்.

அவ்வேளை எல்லையில்லாமல் எங்கும் பரந்து உலகத்து உயிர் யாவையையும் அழிக்கும்படி எழுந்த ஆலகாலம் என்னும் நஞ்சினை அவ்வாறு பரவாதபடி அடக்கிய கையினை உடைய ஆலாலசுந்தரர் முதல் மிகப் பழமையான கணத்தினோரும், எம்பெருமானுடைய வடிவம் பெற்றுள்ள சிவகணங்களும் ஆகிய இவர்கள் யாவரும் எம்பெருமானுடைய இருபக்கராகவும் வந்து நெருங்கிச் சூழ்ந்து தோத்திரம் சொல்லிக் கும்பிட்டவாறு வளைந்துகொண்டார்கள். 7

ஆன்முக நந்தியெம் மடிகள் உய்த்திடத்
தேன்முக நறுமலர் சிதறிச் செங்கையால்
கான்முறை வணங்கியே கமலக் கண்ணவன்
நான்முகன் மகபதி பிறரும் நண்ணினார்.

இடப முகத்தினை உடைய நந்தியெம்பெருமான் எம்பிரானைக் குறுகும்படி வழி காட்டிச் செலுத்தி நிற்ப அவ்வேளையில் கைகளிலே தேன் சொரியும் மலர்களை தமது சிவந்த கைகளிலே ஏந்தியவாறு சுவாமி - அம்பாள் திருமுன் சென்று கைகளில் ஏந்தி வந்த பூக்களை ஐயர் பெருமானுடைய பாதத்துச் சொரிந்து வணக்கம்செய்து தாமரை மலருக்குப் பதிலாக கண் ஒன்றால் சிவபிரானை அர்ச்சித்தமையின் கமலக் கண்ணன் என்னும் பெயர் கொண்ட நாராயணக் கடவுள், பிரமதேவர், இந்திரன் யாவரும் எம்பெருமானைச் சேர்ந்துகொண்டார்கள். 8

சல்லரி வயிர்துடி தடாரி சச்சரி
கல்லென இரங்குறு கரடி காகளஞ்
செல்லுறழ் பேரிகை திமிலை யாதியாம்
பல்லியம் இயம்பின பாரி டங்களே.

அந்நேரத்து அநேக பூதகணங்கள் தங்கள் கைகளிலே சல்லாரியும், ஊதுகொம்பும், உடுக்கையும், தடாரியும், சச்சரியும், கல்லென்று சத்தமிட்டு ஓசை தரும் கரடிகையும், காகளம், இடியேறுபோல சத்தம் தொனிக்கும் பேரிகை மேளம், திமிலை, முதலான வாத்தியங்களை ஏந்தி முழக்கி இசைத்து நின்றன. 9

வேத நான்குங் குடிலையும் வேறுள
பேத மாய கலைகளும் பேரிசை
நாத மோடு நணுகின விஞ்சையர்
கீதம் யாவும் இசைத்துக் கெழுமினர்.

வேதங்கள் நான்கும், பிரணவமும், வேறு வேறு பேதங்களாகிய கலைகளும் பெரிய ஓசையுடைய நாதங்களோடும் தாமாகவே ஓதியவாறு எம்பெருமானையும் பிராட்டியையும் சூழ்ந்து கொண்டன. அப்போது விஞ்சையர்கள் கீதங்கள் யாவற்றையும் தமது கைகளில் கொண்ட யாழ்களில் இசைத்துப் பாடியவாறு பக்கராக நெருங்கினர்கள்.

வள்ளல் வேணியின் மாமதி ஈண்டியே
பிள்ளை வெண்பிறை யைப்படர் பேரராக்
கொள்ளு மென்று குறித்தது போற்றல்போல்
வெள்ளி வெண்குடை வெய்யவர் ஏந்தினர்.

வெப்பம் தரும் கிரணங்களைக் கொண்ட சூரியர்கள் மிக அழகிய சந்திரவட்டக் குடையை ஏந்திப் பிடித்தார்கள். அக்குடையானது சுவாமியின் திருச்சடைமேற் பொலிந்துள்ளது எதுபோலும் என்றால் பெருமானுடைய திருச்சடைமேல் இருக்கும் தனது குழந்தையைப் போலும் இளம் பிறையை பக்கராகச் சடைமேல் இருக்கின்ற நாகபாம்பு கௌவிப் பிடித்துவிடுமென்பதற்காக தாயாகிய சந்திரன் தான் அதைத் தடை செய்வதற்காக மேல்வந்து நிற்பதுபோலும் அமைந்துள்ளது. 11

சகர ரென்னுந் தலைவர்கள் தம்வழிப்
பகிர தப்பெயர்ப் பார்த்திபன் வேண்டலும்
நிகரி லோன்அருள் நீத்தத் தொழுக்கெனப்
புகரில் சாமரம் பூதர்கள் வீசினர்.

சமுத்திரங்களைத் தோண்டியமையால் சகரர் என்னும் நாமம் பெற்ற தனது முதாதைகளின் எலும்புகளில் சிவபெருமானுடைய சடைமேல் பொலியும் கங்கை நீர்

படுமேயானல் அவர்கள் முத்தி எய்துவார்கள் என எண்ணி பகீரதன் என்னும் அரசன் சிவபிரானைக் குறித்து தவம் செய்து கங்கை நதியை வேண்டுதலும் அந்நேரம் நிக ரில்லாத பெருமான் கங்கையை பூமிமேல் செல்லுமாறு அருள்செய்ய கங்கையாற் றின் நீர் எப்படி பூமியில் பெருகி வந்ததோ அதேபோலக் காட்சி பெறும்படி நிக ரற்ற வெண்சாமரைகளைப் பூதர்கள் வீசினர்கள். 12

சீறு மால்கரி சீயம் வயப்புலி
ஏறு பூட்கை இரலையெண் கேமுதல்
வேறு கொண்ட வியன்முகச் சாரதர்
நூறு கோடியர் நொய்தெனச் சுற்றினர்.

சீறும் மதம்பொழியும் யானைமுகம், சிங்கமுகம், வலிமையுடைய புலிமுகம், இடப முகம், யாளிமுகம், கலைமான்முகம், கரடிமுகம், முதலாக வேறு வேறு முகங்களை உடைய இந்த நூறு கோடி பூதங்கள் அதிவிரைவோடு வந்து எம்பிரானைச் சூழ்ந்து கொண்டனர். 13

இமிலு டைப்பல ஏற்றிருங் கேதனந்
திமில விண்புனல் நக்கிச் சிதறுவ
அமல னைத்தொழு தாற்றுமெய் யன்பினல்
கமலம் உய்த்திடுங் காட்சியர் போன்றவே.

பெரிய ஏரியைக்கொண்ட பல இடபம் எழுதிய கொடிகள் மேலே பிடிக்கப் பட்டபோது அவையாவும் நிமிர்ந்து மேல் உலகில் உள்ள நீரை தாம் நக்கி உறிஞ்சி பின்னர் காற்றால் அசைவுறும்பொழுது உறிஞ்சிய நீரை படபடத்தலினலே சிதறச் செய்தன. அது எதுபோலும் என்றல் நிர்மலசோதி வடிவான எம்பெருமானைத் தொழுது வணங்கும் மெய்யன்பினல் தாமரைப் பூக்களைச்சொரிந்து வழிபாடு செய்கின்ற அன்பர்கள் போல காட்சிபெறும்படி அமைந்தது. எம்பெருமானை பூச்சொரிந்து ஆவ லுடன் வணங்குவார்போல் கொடிகள் மேலுலகில் உள்ள நீரை உயரநிற்றலினலே உறிஞ்சி பின்னர் சிதறச் சொரிந்தன. 14

அன்ன காலை அகிலமும் ஈன்றருள்
கன்னி தன்னெடு காமர்வெள் ளேற்றின்மேல்
மன்னி வைகு மதிமுடி வானவன்
தன்ன தாலயத் தைத்தணந் தேகினன்.

அவ்வாறகிய நேரத்து அகில உலகமும் ஈன்று எல்லா உயிரும் வாழும்படி அருள் பவளும் எல்லாவற்றையும் பெற்றலும் தான் நித்திய கன்னியாகவே இருக்கின்ற பிராட்டியாருடன் மிக அழகாகப் பிரகாசிக்கும் வெள்ளை இடபத்தின் மேலாக பொருந்தி இருக்கின்ற சந்திரனை அணிந்த முடியை உடைய தேவநாயகரான எமது பெருமான் தனது திருக்கைலாய மலைக்கோயிலை விடுத்து நீங்கி சரவணப்பொய் கையை நோக்கிப் புறப்பட்டுச் சென்றருளினர். 15

தன்ன தாலயம் நீங்கியே கயிலையைத் தணந்து
பொன்னின் நீடிய இமையமால் வரைப்புறத் தேகி
அன்ன மாடுறுஞ் சரவணப் பொய்கையை யடைந்தான்
என்னை யாளுடை நாயகன் இறைவியுந் தானும்.

தனது ஆலயத்தைச் சிவபிரான் நீங்கியருளி கைலாயமலேயைக் கடந்து பொன் ஞல் பெருகும் ஒளிபரந்த இமயம் என்னும் மலேச்சாரலின் புறத்துச் சென்றருளி அன்னப்பட்சிகள் விளேயாடி ஆடுகின்ற சரவணப்பொய்கையை என்னே முற்றிலும் ஆள்கின்ற பெருமானும் இறைவியும் அடைந்தார்கள். 16

பிறையு லாஞ்சடைத் தேவனும் அவன்றனேப் பிரியா
துறையும் மாதுமோ ரறுவகை உருவுகொண் டுற்ற
சிறுவன் நீர்மையை நோக்கியே திருவருள் செய்து
நிறையும் வான்புனற் பொய்கையங் கரையிடை நின்ஞர்.

இளம்பிறை உலாவி விளங்கும்படி சிறந்த சடையை உடைய சிவபிரானும் அவரைப் பிரியாது இடதுபாகத்து உறைகின்ற மாதாவாகியவளும் சரவணப்பொய்கையை அடைந்தபோது அங்கு ஆறு சிறு குழந்தை வடிவாகி ஆடல்கொண்டு அங்கு உற்ற தமது சிறுவனின் நீர்மையைக்கண்டு திருவருள் புரிந்தவாறு உளங்களிப்பெய்தி நிறைந்து விளங்கும் பெருந் தீர்த்தங்கொண்ட சரவணப்பொய்கையின் கரையிடை நின்றருளி ஞர்கள். 17

முண்ட கச்சர வணந்தனில் மூவிரு வடிவங்
கொண்டு லாவிவீற் றிருந்திடும் ஒருபெருங் குமரன்
அண்டர் நாயகன் தன்னுடன் அகிலமீன் றுளேக்
கண்டு மாமுக மலர்ந்தனன் தனதுளங் களித்தான்.

தாமரை மலர்கள் மலர்ந்து விளங்கும் சரவணப்பொய்கையில் ஆறு வடிவங் கொண்டு உலாவி வீற்றிருந்திடும் ஒப்பற்ற ஒருபெருங்குமரன் தேவர்கட்கு நாயகராகிய தந்தையாகிய சிவபிரானுடன் எல்லா உலகங்களேயும் ஈன்ருளாகிய தாயாகிய பெருமாட்டியைக் கண்டு தனது பெருமுகம் மலர்ந்தருளிஞர்; அவருடைய உள்ளம் பெரிதுங் களிப்படைந்தார். 18

அந்த வேலேயிற் கவுரியை நோக்கியெம் மையன்
இந்த நின்மகன் றனேக்கொடு வருகென இயம்பச்
சுந்த ரங்கெழு விடையினுந் துண்ணென இழிந்து
சிந்தை கொண்டபே ராதரந் தன்னெடுஞ் சென்ருள்.

அந்த வேளேயில் எமது ஐயன் கௌரி அம்பாளே நோக்கி ''அம்மையே! இங்கே இருக்கும் இந்த உனது மகனே இங்கு கொண்டுவருவாயாக'' என இயம்புதலும் அப்போது உமையம்மையார் சுந்தரமான அழகுடைய இடபவாகனத்தின் நின்றும் திடீரென இறங்கியருளி மனத்தின்கண் நிறைகின்ற பெரிய ஆதரவுடன் சரவணப்பொய்கையில் அமர்ந்தருளிய எமது குழந்தை முதல்வரைக் கூட்டிச்சென்ருள் எமது அம்மை. 19

சரவ ணந்தனில் தனதுசேய் ஆறுருத் தனேயும்
இருக ரங்களால் அன்புடன் எடுத்தனள் புல்லித்
திருமு கங்களோ ராறுபன் னிருபுயஞ் சேர்ந்த
உருவம் ஒன்றெனச் செய்தனள் உலகமீன் றுடையாள்.

அவ்வாறு சென்ற அம்மை சரவணப்பொய்கையிலே ஆறு குழந்தை வடிவாய் ஆனல் ஒருவராய் இருக்கும் நிலேயைக் காண்கின்ற இறைவியின் உள்ளமே ஆதரவினல்

கனிந்து களிப்புறும்படி நிலவி நின்ற குழந்தையின் ஆறு வடிவங்களை தனது இரண்டு கைகளாலும் அன்புடன் எடுத்து மகிழ்வால் இறுகத்தழுவினுள். தழுவிய வண்ண மாகவே ஆறு உருவத்தையும் ஒன்றுக்கி ஆறுமுகம் பன்னிரண்டு கைகளும் கொண்ட ஓர் அழகிய உருவமாகச் செய்தருளினுள். அவள் யாரெனில் உலகம் யாவற்றையும் தன்னிடத்திருந்தே தோற்றுவித்தருளிய பெருமாட்டி. 20

எந்தை சத்திகள் உயிரெலாம் ஒடுங்குறு மெல்லை
முந்து போலவொன் ருகியே கூடிய முறைபோல்
அந்த மில்லதோர் மூவிரு வடிவுமொன் ருகிக்
கந்தன் என்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்.

இது எதுபோல எனில் எந்தைபெருமானின் சத்திகள் யாவும் உயிர்கள் எல்லாம் ஒடுங்கும் பிரளய எல்லையில் முன்புபோல ஒன்றுகியே கூடி விளங்கும் தன்மையேபோல் எல்லையற்று விளங்கும் ஆறுவடிவும் ஒன்றுகிக் கந்தன் என்ற பெயரைப் பெற்றுக்கொண்டருளினுன் கௌரி அம்பாளின் குமரன். ஆறு குழந்தை வடிவமும் எல்லையற்றது. அது பல பல வேடமாக விளங்கு வது. அதை எவ்வளவு தொகையென்ருே அல்லது எவ்வளவு நீள அகலம் உடைய தென்ருே அறியப்படாதது. எவ்வாறு உலக முதல்வஞன ஒரு பெருங் கடவுள் உல கைப் படைத்து தோற்றுவிக்குங்கால் ஒன்றுன தான் பின்னர் பல்வேறு சத்திகளாகிப் பரந்து அவைமூலமாக உயிர்களைத் தோற்றுவிப்பார். அதை மணிவாசகரும் ''ஒன் றுய் பரந்து எழுந்து எத்தனையோ கவடு விட்டு'' என்று சொல்வார். பின்னர் உலக ஒடுக்க காலத்து ஈசன் உயிர்கள் ஒடுங்கும்போது அவைகள் சத்திகளில் ஒடுங்க இந்த சத்திகள் ஈசனிடத்து ஒன்றுக ஒடுங்கும். இதை மணிவாசகர் ''சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றுய்'' எனவும் கூறுகிருர். ஆகவே இத்தன்மையே போலத்தான் ஆறுகத்தோன்றிய ஆறு உருவும் மீளவும் ஒன்றுகத் தோன்றி ஆதி யோடு அந்தம் ஆகிய நலன் தரும் ஆறுமுகமும் பன்னிரண்டுகையும் கொண்டு உலகை உய்விக்கும் ஓர் உருவமானுன் எங்கள் ஐயன். 21

முன்பு புல்லிய குமரவேள் முடிதொறும் உயிர்த்து
மின்பி றங்கிய புறந்தனை நீவலும் விமலை
தன்பெ ருந்தனஞ் சுரந்துபால் சொரிந்தன தலையாம்
அன்பெ னப்படு கின்றதித் தன்மையே அன்ருே.

முன்புதான் இறுக அணைத்துப் புல்லிய முருகப்பெருமான் திருமுடிமேல் பல காலும் அம்பிகை முத்தமிட்டு ஐயனின் மின்னல்போலும் ஒளிகொண்ட மேனியின் முதுகினைத் தடவலும் அப்போது நின்மல சொரூபியான அம்பாளின் அபரஞானம் பரஞானம் என்னும் பருத்த முலைகள் சுரந்து பால் சொரிந்தன. ஆனமையால் இப் படி குமரப் பெருமானைத் தனது கைகளால் தடவியபோதே பால் சொரியப் பெறுத லினுல் இச்செயல்தான் தலையாய அன்பு என்று சொல்லப்படுவ தொன்ருகும் அல்லவோ. 22

ஆதி நாயகன் கருணையாய் அமலமாய்ப் பரம
போத நீரதாய் இருந்ததன் கொங்கையிற் பொழிபால்
ஏதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதல் மாமகற் கன்பினுல் அருத்தினுள் கவுரி.

ஆதியாய் முன்னமே தோன்றி முளைத்த சிவபிரானின் கருணையாய், மலப்பற்று இல்லாததாய், மேலாகிய ஞானமயமாய், இருந்தருளுகின்ற தனது முலைகளிடத்து நின்றும் தாமாகவே அன்புமிகுதியால் சொரிந்தபாலை எம்பெருமாட்டி குறைவொன் றும் இல்லாத ஒரு மேலான இரத்தினக் கிண்ணத்தில் ஏற்று தனது காதல் நிறைந்த பெருமகனுற்கு அன்பினுல் ஊட்டியருளினுள் கௌரியம்மை. 23

**கொங்கை யூறுபால் அருத்தியே குமரனைக் கொடுசென்**
**றெங்கள் நாயகன் முன்னரே இறைஞ்சுவித் திடலும்**
**அங்கை யாலவன் றனைஎடுத் தகலமேல் அணைத்து**
**பொங்கு பேரருள் நீர்மையா லிருத்தினன் புடையில்.**

தனது முலைகள் சுரந்த பாலை குமரநாயகற்கு ஊட்டி அவர் உண்டபின்னர் குமரனை எடுத்துச்சென்று எங்கள் நாயகராகிய சிவபிரான் முன்பாக, சுவாமியை தந்தை யார்க்கு வணக்கம் செய்வித்திடலும் அப்போது தாம்பெற்றருளிய மைந்தர் வணங் குதலைக் கண்ணுற்ற கடவுள் மகிழ்வாகி தனது அழகிய கைகளால் திருமகனுரை எடுத்து தமது மார்போடு அணைத்து அந்நேரத்து தமது திருக்குமாரன்மீது பொங்கி எழுகின்ற பேரருள் நீர்மையால் தமது பக்கத்திருத்தினர் எமது குமரக்கடவுளை. ஈசன் தனது குமரனை அன்பால் அணைத்து மகிழ்ந்து அருள்கொண்டு தனது பக்கத்து இருத்தியது முற்றிலும் தமது மகனுரின் அருமை கண்ணுற்றேயாம். இவ்வாறு இறை வன் மகிழ்ந்த வரலாறுபற்றி நாயன்மாரும் இப்படிச் சொல்லிப் புகழ்கின்றுர்கள்:

பெற்றும் உகந்தது கந்தனையே (சம்பந்தர்)
பெரும்பலமது உடை அசுரன் தாரகனை பொருது
பொன்றுவித்த பொருளினை முன்படைத்து உகந்த புனிதன் (சுந்தரர்) 24

**அருத்தி தத்திடு குமரவேள் ஒருபுடை அமரப்**
**பெருத்த மன்னுயிர் யாவையும் முன்னரே பெற்ற**
**ஒருத்தி தன்னையுங் கையினு லொய்யென வாங்கி**
**இருத்தி னுன்தன திடந்தனில் எம்மையாள் இறைவன்.**

எம்பிரானுக்கு மகிழ்வும் அன்பும் தந்திட்ட குமரப் பெருமான் சிவபிரான்பால் ஒரு பக்கராக இருப்ப பின்னர் பெருத்த மேலான பல உயிர்களையும் முன்னரே பெருது பெற்றருளிய ஒருத்தி ஆகிய கௌரிஅம்பாளையும் கையினுல் அணைத்துத் தனது இடப் பாகத்தில் இருத்தினுன் எம்மை ஆளுடைய ஈசனுகிய சிவபிரான். சிவபிரானுடைய விருப்பு வெறுப்பு நீங்கிய சிந்தையையே மனம் மகிழும்படி செய்யும் திருக்கோலத் தோடும் பொலிகின்றுர் குழந்தைவடிவாகி ஆறுமுகத்தோடும் பொலியும் கடவுள், ஆகவே அவரின் அருட்கோலம் பெருமை சொல்லினும் அடங்காது. இதற்கு மேற் பாட்டின் உரையில் தரப்பட்ட நாயன்மார்கள் வாக்குகள் சான்றுகும். 25

**ஏல வார்குழல் இறைவிக்கும் எம்பிரான் றனக்கும்**
**பால னுகிய குமரவேள் நடுவுறும் பான்மை**
**ஞால மேலுறும் இரவொடு பகலுக்கும் நடுவாய்**
**மாலை யானதொன் றழிவின்றி வைகுமா றெக்கும்.**

நறுமணம் கமழும் கூந்தலை உடைய எம்பிராட்டிக்கும் எம்பிரானுக்கும் நடுவணுக குழந்தையான குமரக்கடவுள் இருந்திடும் பான்மை எப்படிப்போலுமெனில் இர

வுக்கும் பகலுக்கும் நடுவில் மாலை வேளை இருப்பதுபோலாகியது. இரவு கருமை உடையது. அம்பாள் நீல நிறமுடையவள் ஆனமையால் அம்பாளை இரவிற்கும், சிவபிரான் சோதிமயமானவர் அதனால் அவரைப் பகலுக்கும் முருகப்பிரான் காண்பார் கண்கள் களிகூரும் செவ்வொளி கொண்டவர் ஆனமையால் இவரை தந்தை தாய்க்கு நடுவணாக இருக்கும்போது இரவுக்கும் பகலுக்கும் இடையில் மாலைப்பொழுது தோன்றுவதுபோல என்றார். 26

விடையுற்றிடு பரமற்குமவ் விமலைக்கும் விறற்சேய்
இடையுற்றது கண்டார்அயன் மகவான்முத லிமையோர்
கடையுற்றிடு கடலாமெனக் கல்லென்றிரைத் தணுகாப்
புடையுற்றனர் எதிருற்றனர் புறனுற்றனர் புகழ்வார்.

இடப வாகனத்தில் எழுந்தருளி வீற்றிருக்கும் பரம்பொருளான சிவபிரானுக்கும் நிர்மல வடிவான உமையம்மையாருக்கும் நடுவணாக எல்லாவலிமையுங்கொண்ட முருகப்பிரான் அருளோடும் இருப்பதைக் கண்டார் பிரமதேவர், இந்திரன் முதலாகிய தேவர்கள் யாவரும். அப்போது கடைசியான பிரளய காலத்து பொங்கி எழுகின்ற கடல்போல இரைந்து அற்புத வசத்தராகி யாவரும் கிட்டே நெருங்கிச் சூழ்ந்து வளைந்து நிற்பாரும், முன்நிற்பாரும், பின்நிற்பாரும் ஆகியே கருணையங்கடலாகி காண முடியாத அற்புதக்கோலம் கொண்டு ஆறுமுகங்களோடும் பொலிந்து விளங்கும் எம்பெருமானைப் புகழ்கின்றார்கள். 27

காமாரிதன் விழிதந்திடு கழிகாதல ஒழியாத்
தோமாரியல் புளனாகிய சூரன்கொடுந் தொழிலால்
யாமாரினும் இழுக்குற்றனம் எமையாள்இனி யென்னாப்
பூமாரிகள் பொழிந்தார்பணிந் தெழுந்தாசிகள் புகன்றார்.

''மன்மதனை எரித்த பகவானுடைய நெற்றிக்கண் தந்திட்ட நீங்கமுடியாத காதலனே! ஐயனே! ஒழியாது எங்களைத் துயரம் செய்யும் சூரன் கொடுந்தொழிலால் யாங்கள் ஆற்றவொண்ணா இழுக்குற்றனம். அவர்கள் வேதனையை இனியும் நாம் தாங்க மாட்டோம் எங்களை இனி ஆண்டுகொள்வீராக'' என்று பூக்களைக் கையில் ஏந்தியவராய் மழை சொரிந்தாற்போல மேலே தூவிச் சொரிந்தார்கள்; வீழ்ந்து பணிந்தார்கள்; எழுந்து முன்நின்று பல ஆசிகளைப் புகன்றார்கள்.

காமாரிதன் விழி:- தீமைபுரியும் மன்மதனை எரித்து முத்தி இன்பம் உதவும் பிள்ளையைத் தந்திட்டது எனும் கருத்தும் தோன்ற இவ்வண்ணம் கூறினார். 28

வாரற்புத முறவீங்கிய வன்னத்தன முருந்தின்
மூரற்பவ ளச்சேயிதழ் முழுமாமதி வதனத்
தாரற்பெயர் பெறுமங்கையர் அதுகாலையில் அரன்முன்
பேரற்பொடு பணிந்தேயெழப் பெருந்தண்ணளி புரிந்தான்.

பூட்டியவார் கட்டறும்படி வீங்கி காதலால் பொங்கும் அழகிய முலையும், முல்லைப் பூப்போலும் பல்லும், பவளம்போலும் சிவந்த இதழும், பூரண சந்திரனைப் போலும் அழகிய முகமும் கொண்டு விளங்கும் கார்த்திகை நட்சத்திரத்தின் பெயரால் நிலவுகின்ற ஆறு கார்த்திகைப் பெண்களும் அந்த வேளையில் சிவபிரான் முன் பெருகும் அன்போடும் பணிந்து எழுந்து நிற்றலும் அவர்களுக்கு மேலான கருணை நிரம்பிய அருளினைப் புரிந்தருளினார் சிவபிரான். 29

**கந்தன்றனை நீர்போற்றிய கடனால்இவன் உங்கள்**
**மைந்தன்எனும் பெயராகுக மகிழ்வால்எவ ரேனும்**
**நுந்தம்பக லிடைஇன்னவன் நோன்றாள்வழி படுவோர்**
**தந்தங்குறை முடித்தேபரந் தனைநல்குவம் என்றான்.**

பின்னர் சிவபிரான் அவர்களை நோக்கிச் சொல்கிறார்: ''எமது மைந்தனான கந்தனை நீங்கள் போற்றி வளர்த்து வந்த தன்மையால் இவனுக்கு உங்கள் மைந்தன் எனும் தன்மையாக கார்த்திகேயன் என்னும் பெயர் ஆகட்டும். யாரேனும் இவ் உலகில் உள்ளார் இவனது வலிமையான திருவடிகளை உங்களுடைய நாளான கார்த்திகை வரும் நாளில் பெரிதும் மகிழ்வால் வழிபாடு செய்தால் அவ்வாறு வழிபாடு செய்வோருக்கு உற்ற குறையாவும் நீக்கி மேலாம் பரமான முத்தி இன்பத்தையும் யாம் கொடுத்தருள்வோம்'' என்றருள்செய்தார். 30

**என்றுவருள் புரிகின்றுழி இமையத்தவள் சேயைத்**
**தன்றாரரு ளொடுசென்றெதிர் தழுவித்தனத் திழிபால்**
**பொன்னார்மணி வள்ளத்துமுன் பூரித்தருத் திடவே**
**அன்னாள்முலை அமுதுக்கவை யாறொத்தொழு கினவே.**

என்று ஈசன் அக்கார்த்திகைப் பெண்களுக்கு தனது திருக்குமாரன்மேல் கொண்டருளிய பேரன்பினால் அருள் செய்து நிற்றலும் இமயம் என்னும் மலையில் தோன்றிய உமையம்மையார் தனது குழந்தையான முருகனைப் பெருகும் அன்பும் அருளும் நிறையும்படி கிட்டி அணைத்து தனது தனத்து இழிந்து சொரியும் பாலை பொன்னார்ந்த இரத்தின வள்ளத்தில் ஏற்று உள்ளம் பூரித்து அவனுக்கு ஊட்டுதலும் அப்போது அம்பாளுக்கு எமது பகவானான குழந்தைமேல் எழும் அன்பு பொங்கிப் பெருகுதலினாலே அவளினுடைய முலைகள் அவருக்கு அமுது ஊட்டும்படி ஆற்றைப்போல் பால் சொரிந்தன. 31

**வானார்சுர நதிபோற்சர வணத்தூடவை புகலுந்**
**தூநான்மறை கரைகண்டவன் முதல்வந்திடு துணைவ**
**ராறுஅறு சிறுவோர்தமை அளித்தோன்சபித் திடலால்**
**மீனாயவண் வதிகின்றவர் புகும்பாலினை மிசைந்தார்.**

இவ்வாறு முலைகளில் இருந்தும் சொரிந்தபால் ஆகாயத்திலிருந்து இழிந்துவரும் கங்கையை ஒத்து சரவணப்பொய்கை இடத்து வழிந்து பெருகி ஓடலும் அதுபோதில் தூய்மையான வேதங்களின் கரைகளின் எல்லையைக்கண்டு அதனை நான்காக வகுத்து அமைத்த வியாச முனிவரின் தமையன் (மூத்தவர்) எனும்படியாகிய பராசர முனிவரின் பிள்ளைகளான ஆறுபேரும் சரவணப்பொய்கையிடத்து தந்தையார் கொடுத்த சாபத்தினால் மீனாக வதிந்து இருந்து ஆறுபேரும் அப்பொய்கை இடத்து புகுகின்ற பாலினைத் தாங்கள் உண்டருளினார்கள். (இவர்கள் மீனான வரலாறு பின்புசொல்லப்படும்) 32

**கயிலைக்கிறை யவள்மெய்த்தன கலசத்தினும் உகுபால்**
**அயிலுற்றிடு பொழுதத்தினில் அறலிற்புடை பெயரும்**
**அயிலைத்தனு வொருவித்தவ வடிவுற்றெழு தருவார்**
**துயிலுற்றுணர் பவரொத்தனர் மயலற்றிடு தொடர்பால்.**

திருக்கைலாய மலைக்கு இறைவியான அம்பாளின் அழிவிலா உண்மை வடிவான அபரஞானம், பரஞானம் என்னும் தனங்களில் நின்றும் பெருகுகின்ற பாலை தாங்கள் அறியாதவாறு மீனாய் இருந்த ஆறு பிள்ளைகளும் உண்டருளியபொழுதினில் துள்ளிப் பாய்ந்து ஓடித்திரிகின்ற மயக்கம்பொருந்திய மீன்வடிவத்தை விட்டு நீங்கி தவவடிவம் தாங்கி எழுந்துகொண்டனர். இவர்கள் நித்திரை செய்துவிட்டு பின்னர் உணர்ந்தெழுவார்போல எழுந்தார்கள் தங்கள் மயக்கம் நீங்கிய தொடர்பால்.

பராசரமுனிவரின் பிள்ளைகள் மீனான வரலாறு:- பராசரமுனிவரின் பிள்ளைகளான இவர்கள் அறுவரும் சிறுபிள்ளைகளாயிருக்கும்போது தந்தையார் சரவணப்பொய்கையை அடைந்து தவம் செய்தார் அப்போது ஆறு சிறுவர்களும் குழந்தைகளாய் இருந்தமையால் என்ன தீங்கையும் செய்யும்போது உணர்வு இல்லாத விளையாட்டுப் பருவத்தால் பொய்கையில் உள்ள மீன்களைப்பிடித்து ஓர் தண்டில் கோர்த்து விளையாடியதை அவ்விடம் வந்த தந்தை பராசரர் கண்ணுற்று இவர்களை மீனாகும்படி சபித்து பின்னர் அம்பாளின் திருமுலைப்பால் உண்ணுங்கால் இப்பாவம் தொலையும் எனச் சாபவிமோசனமும் சொன்னமை முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சியாகும், 33

அன்னாரறு வருமாயெழுந் தகன்பொய்கைவிட் டமலன்
முன்னாய்வணங் கினர்போற்றலும் முனிமைந்தர்கள் பரங்கோ
டென்னாவுரை பெறுகுன்றிடை இருந்தேதவம் புரிமின்
சின்னாள்மிசை இவன்வந்தருள் செயுமென் றருள்செய்தான்.

இவ்வாறாக மீன் உருவம் நீங்கப்பெற்ற பராசர முனிவரின் பிள்ளைகள் ஆறு பேரும் பழையபடி தவவடிவுகொண்டு எழுந்து அகன்ற சரவணப்பொய்கையை விட்டு நீங்கி நிர்மலசோதியான சிவபிரான் முன்னாகி நின்று வணங்கினராய் போற்றி செய்தலும் அப்போது சிவபிரான் அவர்களைப்பார்த்து ''முனிமைந்தர்களே! நீங்கள் திருப்பரங்குன்றம் என்னும் மலையிடத்து சென்று தவம்புரிந்திருங்கள். சில நாள் கழிந்தபின் எனது மைந்தன் அங்குவந்து உமக்கு அருள் செய்வான்'' என்று அருள்புரிந்தார். 34

நன்றாலெனத் தொழுதன்னவர் நாதன்விடை பெற்றே
சென்றார்உடு மடவாரொடு திருமாலயன் முதலா
நின்றார்தமக் கருள்செய்தவர் நிலயம்புக அருளிப்
பொன்றாழ்சடை யினன்வெள்ளியம் பொருப்பின்றலை புக்கான்.

இவ்வாறு எம்பிரான் கூறுதலும் ஆறுமுனிபிள்ளைகளும் நன்று இதுவாகுமென எம்பிரானைத் தொழுது வணங்கி விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள். கார்த்திகைப் பெண்களுக்கும் நாராயணக்கடவுள் பிரமதேவர் முதலாக அங்கு நின்றார் யாவருக்கும் அருள்புரிந்து எம்பெருமான் அவர்களது இருப்பிடங்களுக்கு செல்லுமாறு விடைகொடுத்துவிட்டு, பொன் வாழ்வதுபோல விளங்கும் திருச்சடையுடைய பெருமான் வெள்ளிமயமான திருக்கைலாய மலையின்மேல் விளங்கும் தமது கோயில் புகுந்தார். 35

அடையார்புர மெரிசெய்திடும் அமலன்கயி லையிற்போய்
விடையூர்தியின் இழிந்தேதனி விறற்சேயொடும் வெற்பின்
மடவாளொடு நடவாப்பொலன் மாமந்திரத் தவையின்
இடையாரரி யணைமீமிசை இருந்தான்அருள் புரிந்தே.

தன்னை உணர்ந்து அடையாத முப்புரங்களையும் சிரிப்பினால் எரித்தருளிய சிவபிரான் திருக்கைலாயமலை சென்று வாய்தலில் தனது இடப வாகனத்தினின்றும் இறங்கியருளி தனது வலிமையான திருக்குமாரனோடும், இமயமலை தந்த பிராட்டியோடும் நடந்தருளி மந்திர சபையைச் சேர்ந்து பேரழகு நிறைந்த இரத்தினங்களால் அமையப்பெற்ற சிம்மாசனத்தின் மீது அருள் நிறைவாகி வீற்றிருந்தருளினார். 36

**சேயோனெனும் முன்னோன்றனைச் சிலம்பின்வரும் ஒன்பான்**
**மாயோர்உத வியமைந்தரும் மற்றுள்ளஇ லக்கத்**
**தூயோர்களுந் தொழுதேமலர் தூவிப்பணிந் தேத்தி**
**ஆயோர்தம துயிரேயென அவனைக்குறித் தணைந்தார்.**

இப்போ ஆறுமுகமும் பன்னிருதிருப்புயமும் கொண்ட குழந்தை வடிவானாலும் யாவரும் அறியமுடியாத பழம் பொருளான பெருமானை எம்பிராட்டியின் சிலம்பில் நின்றும் தோன்றிய ஒன்பது பெண்களிடத்து தோன்றிய வீரவாகு தேவர் முதலிய ஒன்பது வீரரும் மற்றும் ஓர் இலக்கம் வீரரும் கண்ணுற்று கைகூப்பித் தொழுது, மலர்தூவி எங்கள் குழந்தை நாயகரைப் பணிந்து போற்றி அவர்கள் யாவரும் முருகனை தங்கள் உயிர் என மதித்து அவரையே தமது இலட்சியமாக வைத்து மகிழ்வாகி இன்புற்றனர். 37

சரவணப் படலம் முற்றிற்று.

**ஆகத் திருவிருத்தம்-1051**

# 14 திருவிளையாட்டுப் படலம்

**அனந்தரம தாகஉமை யம்மையொடு பெம்மான்**
**நனந்தலையில் வைகிய நலங்கொள் குமரேசன்**
**இனங்கொடு தொடர்ந்தஇளை யாரொடு மெழுந்தே**
**மனங்கொளருள் நீர்மைதனின் ஆடலை மதித்தான்.**

எஞ்ஞான்றும் விட்டு நீங்காத நிலைமையாக உமையம்மையாரொடு சிவபிரான் திருமடி மீதும் வீற்றிருந்தருளிய எல்லா நலங்களையும் தரும் எமது கந்தக் கடவுள் தனது இனத்தவர் எனக் கருதப்படும் வீரவாகு தேவர் முதலாகச் சொல்லப்பெறும் தமது திருஅவதாரத்துடன் தொடர்ந்து தோன்றிய இலக்கத்து ஒன்பது பேராகும் துணைவர்களோடும் எழுந்தருளி தமது மனத்தில் பொருந்திய அருள்மயமான பேரின்ப விளைவு தரும் திருவிளையாட்டைப் புரியுமாறு எண்ணங்கொண்டருளினார். 1

**தட்டைஞெகி ழுங்கழல் சதங்கைகள் சிலம்பக்**
**கட்டழகு மேயஅரை ஞாண்மணி கறங்க**
**வட்டமணி குண்டல மதாணிநுதல் வீர**
**பட்டிகைமி னக்குமரன் ஆடல்பயில் கின்றான்.**

தமது திருப்பாதத்து அணியப்பெற்ற தண்டை, சிலம்பு, வீரக்கழல், சதங்கைகள் ஆகியன ஒலிக்கவும் பேரழகு பொருந்திய பெருமானின் திருவரையில் அணியப்பெற்ற அரைஞாண் மணிக்கோர்வைகள் ஒலிக்கவும் வட்டவடிவாகப் பொருந்திய

காதணியும் பதக்கமும் திருநெற்றியில் அணியப்பெற்ற வீரபட்டமும் ஒளிரும்படியாக அழகிய இளமையின் செவ்வி எஞ்ஞான்றும் குன்றாத கோலத்துடன் குமரன் ஆடல் பயில்கின்றான்.

தண்டையணி வெண்டையங் கிண்கிணி சதங்கையும்
தண்கழல் சிலம்புடன் கொஞ்சவே (அருணகிரியார்) 2

மன்றுதொறு லாவுமலர் வாவிதொ றுலாவுந்
துன்றுசிறு தென்றல்தவழ் சோலைதொ றுலாவும்
என்றுமுல வாதுலவும் யாறுதொ றுலாவுங்
குன்றுதொறு லாவுமுறை யுங்குமர வேளே.

இவ்வாறு ஆடலை மேற்கொண்ட குமரவேள் சபைகள் எங்கும் உலாவுவார்; மலர்கள் நிரம்பிய குளங்கள் தோறும் உலாவுவார்; கரந்து வீசுகின்ற தென்றற் காற்று உலவும் சோலைதொறும் உலாவுவார்; எஞ்ஞான்றும் குறையாது பாய்கின்ற ஆறுகள் தோறும் உலாவுவார்; மலைகள் எங்கும் உலாவுவார்; அம் மலைத்தலமே தமக்கு விருப்பமான உறைவிடமாக உறைந்தருளுவார். 3

குளத்தினுல வும்நதி குறைந்திடு துருத்திக்
களத்தினுல வும்நிரைகொள் கந்துடை நிலைத்தாந்
தளத்தினுல வும்பனவர் சாலையுல வும்மென்
னுளத்தினுல வும்சிவன் உமைக்கினிய மைந்தன்.

குளத்திலே உலாவுவார்; ஆற்று நீர் குறைதலினால் தோன்றுகின்ற மணல்மேடாகிய இடங்களில் உலாவுவார்; பசுக்கள் தம் சொறி தீர்க்கும்படியாக நீரருந்தி பின்னர் உராய்கின்ற ஆவுரோஞ்சிக் கல் இருக்கின்ற இடத்தில் உலாவுவார்; அறவோர்களுடைய சாலைகளில் உலாவுவார்; அடியேனுடைய உள்ளத்திலும் உலாவுவார் சிவபிரானுக்கும் உமையம்மையாருக்கும் எஞ்ஞான்றும் இனிமை தரும் செல்வக் குழந்தையாகிய எமது குமரப் பெருமான். 4

இந்துமுடி முன்னவன் இடந்தொறு முலாவும்
தந்தையுடன் தாயமர் தலங்களி னுலாவும்
கந்தமலர் நீபமுறை கண்டொறு முலாவும்
செந்தமிழ் வடாதுகலை சேர்ந்துழி யுலாவும்.

சந்திரனை அணிந்த சடைமுடியுடைய முன்னைப் பழம்பொருட்கும் முன்னவரான சிவபிரான் வீற்றிருக்கும் இடந்தொறும் உலாவும் பிதாவாகிய சிவபிரானுடன் மாதாவாகிய உமாதேவியார் வீற்றிருக்குந் தலங்கள் தோறும் உலாவுவார்; வாசம் கமழுகின்ற மலர் மலரும் கடப்ப மரம் பொருந்திய இடங்கள்தோறும் உலாவுவார்; செம்மை தரும் இனிய தமிழ் மொழியும் வடகலையான ஆரியமும் வழங்குமிடங்களில் உலாவுவார். 5

மண்ணிடை யுலாவும்நெடு மாதிர முலாவும்
எண்ணிடை யுறாதகடல் எங்கணு முலாவும்
விண்ணிடை யுலாவும்மதி வெய்யவன் உடுக்கோள்
கண்ணிடை யுலாவும்இறை கண்ணில்வரு மண்ணல்;

சிவபிரானது நெற்றிக்கண்ணினின்றும் தோற்றியருளிய முருகக் கடவுள் பூவுலகத்தில் உலாவுவார்; நெடிது பரந்து விளங்கும் திக்குகளில் உலாவுவார்; எண்ணிக்கையில் அல்லது மதிப்பில் அளவு படாத சமுத்திரத்தில் உலாவுவார்; வானத்தில் உலாவுவார்; சந்திரன் சூரியன் முதலிய ஒளிக் கிரகங்களில் ஒளியாகி உலாவுவார்; சூரிய ஒளி கடவுளே என்பதை மணிவாசகரும் 'பரிதி வாழ் ஒளியாய் உன் பாதமே அல்லால்' எனக் கூறுகின்றார். 6

கந்தருவர் சித்தர்கரு டத்தொகைய ரேனோர்
தந்தமுல காதிய தலந்தொறு முலாவும்
இந்திரன் இருந்ததொல் லிடந்தனில் உலாவும்
உந்துதவர் வைகுமுல கந்தொறு முலாவும்.

கந்தருவர்களுடைய உலகம், சித்தர்களுடைய உலகம், கருடர் உலகம், ஏனைய தேவர், அசுரர், தைத்திரியர், கின்னரர், கிம்புருடர், இயக்கர், விஞ்சையர், இராக்கதர், சாரணர், பூதர், பைசாசர், தாராகணர், நாகர், ஆகிய பதினெண்வகை கணத்தவர் உலகெங்கும் உலாவுவார்; இந்திரன் இருந்த பழமையான சுவர்க்க லோகத்து இடந்தொறும் உலாவுவார்; அதனினும் மேம்பட்ட முனிவர் வைகும் தவ உலகத்து உலாவுவார். 7

அங்கமல நான்முகன் அரும்பத முலாவும்
மங்கலம் நிறைந்ததிரு மால்பத முலாவும்
எங்கள்பெரு மாட்டிதன் இரும்பத முலாவும்
திங்கள்முடி மேற்புனை சிவன்பத முலாவும்.

அழகிய தாமரைப் பூவில் இருக்கின்ற பிரம தேவரின் உலகம் தோறும் உலாவுவார்; சர்வ மங்கலமும் நிறையப் பெற்ற நாராயணக் கடவுளின் வைகுந்தத்தில் உலாவுவார்; எங்கள் பெருமாட்டியாகிய உமாதேவி அம்மையாரின் உலகத்து உலாவுவார்; அப்பால் விளங்கும் இளம்பிறையணிந்த சடைமுடியுடைய சிவபிரான் உலகத்துலாவுவார்.

'ஓங்கும் பரைக்கு உள் ஒளியாகித் தூங்கும் சுடரைச் சிவமென்றுணர்ந்து' என்றபடி சிவபிரானது உலகமும் சத்தியாகிய அம்பாள் உலகமும் ஒன்றோடொன்று தொடர்பானும் வேறும் எனும் கருத்தால் போலும் வேறாகச் சொன்னார். 8

இப்புவியில் அண்டநிரை யெங்கணு முலாவும்
அப்புவழ லூதைவெளி அண்டமு முலாவும்
ஒப்பில்புவ னங்கள்பிற வுள்ளவு முலாவுஞ்
செப்பரிய ஓர்பரசி வன்றனது மைந்தன்.

இப்பூமியில் அண்டங்களின் நிரைகள் எங்கணும் உலாவுவார்; நீர்வடிவான அண்டங்கள், காற்று வடிவான அண்டங்கள், நெருப்பு வடிவான அண்டங்கள், ஆகாய வடிவான அண்டங்கள், எங்கும் உலாவுவார்; உவமைகாட்ட முடியாத வேறு வேறு நுண்ணிய அண்டங்கள் எங்கும் உலாவுவார் எம்மால் சொல்லற்கரியதாய் விளங்கும் ஒருவனான பரம்பொருளாகும் சிவபிரானது திருக்குமாரர். 9

இருமூவகை வதனத்தொடும் இளையோனெனத் திரியும்
ஒருமாமுக னொடுசென்றிடும் உயர்காளையி னுலவும்
பெருமாமறை யவரேயென முனிவோரெனப் பெயருந்
தெரிவார்கணை மறவீரரில் திரிதந்திடுஞ் செவ்வேள்.

ஆறு திவ்விய வெவ்வேறு வகையான நலன்களைத் தருகின்ற முகங்களொடு குழந்தையைப் போலத் திரிவார்; ஒரு பெரிய முகத்துடன் சென்றருளுவார்; உயர்ந்த இளைஞராகவும் உலாவுவார்; பெரிய வேதங்களை ஓதி அதன் வழி ஒழுகுகின்ற பிராமணரைப் போலவும் முனிவர்களைப் போலவும் தோன்றி வருவார்; தெரிந்த கூரிய அம்புகளை ஏந்திய கொடுஞ் செயல் புரியும் வீரர் போலவும் திரிவார் சொல்லற்கரியதும் நாடற்கரியதுமான செவ்வொளி பரந்த மேனி உடைய முருகக்கடவுள். 10

காலிற்செலும் பரியிற்செலும் கரியிற்செலும் கடுந்தேர்
மேலிற்செலும் தனியாளியின் மிசையிற்செலும் தகரின்
பாலிற்செலும் மானத்திடை பரிவிற்செலும் விண்ணின்
மாலிற்செலும் பொருசூரொடு மலையச்செலும் வலியோன்.

தமது காலால் நடந்து வருவார்; குதிரைமீது ஏறிவருவார்; யானைமீது ஏறிச் செல்வார்; வேகமாக செல்லும் தேர்மேல் வருவார்; தனியான சிங்கத்தின்மேல் வருவார்; ஆட்டுக்கடாவின்மேல் வருவார்; விமானத்தின்மீது பரிவோடும் வருவார்; ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற மேகத்திலும் தோன்றி வருவார் உலகை போரினாலே துயரப் படுத்திய சூரனோடு போர் செய்யும்படி செல்பவராகிய மிக வலியுடைய முருகப் பெருமான். 11

பாடின்படு மணியார்த்திடும் பணைமென்குழல் இசைக்கும்
கோடங்கொலி புரிவித்திடும் குரல்வீணைகள் பயிலும்
ஈடொன்றிய சிறுபல்லிய மெறியும்மெவ ரெவரும்
நாடும்படி பாடுங்களி நடனஞ்செயும் முருகன்.

இனிய ஓசை தருகின்ற மணியை அடிப்பார்; பருத்த மென்மையான தோலாற் செய்த முரசப்பறையை முழக்குவார்; கொம்பு வாத்தியத்தை ஊதி இசைப்பார்; குரல், துத்தம், கைக்கிளை என்னும் இசைவகையாதியை உடைய வீணைகளை வாசிப்பார்; பெருமை ஒருங்கே உடைய சிறு வெவ்வேறு வகையான வாத்தியங்களான மத்தளம், உடுக்கு முதலியவற்றை அடிப்பார்; எவரும் ஆவலோடு நாடிப்பார்த்து மகிழும்படி பாடுவார், ஆனந்தக் கூத்தாடுவார் முருகன். 12

இன்னேபல வுருவங்கொடி யாண்டுங்கும ரேசன்
நன்னேயமொ டாடுற்றுழி நனிநாடினள் வியவா
முன்னேயுல கினையீன் றவள் முடிவின் றுறை முதல்வன்
பொன்னேர்கழ லிணைதாழ்ந்தனள் போற்றிப்புகல் கின்றாள்.

இவ்வாறு பற்பல வேடங்கொண்டு தான் ஒருவனாகி எங்கும் செறிந்து முருகக் கடவுள் எல்லார்க்கும் நன்மைதரும் அன்பால் ஆடல் புரிந்தபொழுது அதை மிகவும் அவதானத்துடன் நோக்கி வியப்படைந்தாள் உலகம் முழுவதையும் முன்னே தோற்றுவித்தருளிய உமையம்மையார். அவ்வாறு பெரும் அற்புதம் அடைந்தாராக எஞ்ஞான்றும் முடிவில்லாது இருக்கின்ற நாயகராகிய சிவபிரானின் பொன்னார்ந்த சேவடிகளில் தாழ்ந்து வணங்கி போற்றி செய்து அம்பாள் சொல்கிறார்;

கூடுற்றநங் குமரன்சிறு குழவிப்பரு வத்தே
ஆடற்றெழி லெனக்கற்புத மாகும்மவன் போல்வார்
நேடிற்பிற ரிலேமாயையின் நினேநேர்தரு மனேயான்
பீடுற்றிடு நெறிதன்னேயெம் பெருமான்மொழி கென்ருள்.

''இப்போதுதான் குழந்தை வடிவாகி ஆறு உருவும் ஒன்ருகிக் கூடுற்ற நமது மைந்தன் இந்தச் சிறு குழந்தை வடிவத்தே செய்யும் ஆடற் தொழிலே நோக்குங்கால் அதி அற்புதமும் பரவசமுமாக விளகின்றது. ஆராயுங்கால் அவனேப்போல் பிறர் ஒருவர் இல்லாதவண்ணம் தனியான வலியுடன் விளங்குகின்ருர். செய்யும் மாய விளையாடல்களிலே தங்களேயே ஒப்பாகி நிற்கின்ருர். இவ்வண்ணம் பெருமையாகி விளங்கும்படி எமது மைந்தன் நிலவும் நெறி எவர்க்கும் நாடொணுததாகின்றது. ஆனமையின் எமது ஐயனே எம் மைந்தனின் பெருமையான சிறப்புக்களே எல்லாம் எடுத்துக் கூறியருள்வீராக'' என்ருள். 14

அல்லார்குழ லவள் இன்னணம் அறியார்களின் வினவ
ஒல்லார்புர மடுகண்ணுதல் உன்றன்மகன் இயல்பை
எல்லாவுயிர் களுமுய்ந்திட எமைநீகட வினேயால்
நல்லாய்இது கேண்மோவென அருளாலிவை நவில்வான்.

இருள்போலும் கருமையான கூந்தலினே உடைய உமையம்மையார் இவ்வாறு தான் எதையும் அறியாத ஒருத்திபோலக் கேட்டருள அப்போது பகைமையால் உலகை வருத்திய முப்புரத்தினே அழித்த நெற்றிக்கண் கொண்ட சிவபிரான் ''உமையே! உன்னுடைய மகன் இயல்பை நீ எல்லா உயிர்களும் அறிந்து உய்ந்திடும்படி எம்மைக் கேட்டாய். நல்லவளே! நன்ருக இதனேக் கேட்பாயாக'' என அருளிஞல் இவற்றை எம்பிரான் கூறியருள்கிருர். 15

ஈங்கனம் நமது கண்ணின் எய்திய குமரன் கங்கை
தாங்கினள் கொண்டு சென்று சரவணத் திடுத லாலே
காங்கெயன் எனப்பேர் பெற்ருன் காமர்பூஞ் சரவ ணத்தின்
பாங்கரில் வருத லாலே சரவண பவன்என் ருனுன்.

''ஈங்கு எனது நெற்றிக்கண்ணிலே ஆறு அக்கினிப் பொறிகளாய் வந்துதித்த குமரனே கங்கை தாங்கிச் சென்று சரவணப் பொய்கையில் இடுதலால் எமது மைந்தன் காங்கேயன் என்று ஒரு பெயர் பெற்ருன். அழகிய தாமரைப் பூக்கள் மலரும் சரவணப் பொய்கையில் ஆறு அக்கினிப் பொறிகளும் பாங்கான திருவருள் பொழியும் குழந்தை வடிவாகித் தோன்றியமையால் **சரவண பவன்** எனும் நாமத்துடன் விளங்குகிருன்.'' 16

தாயென ஆரல் போந்து தனங்கொள்பால் அருத்த லாலே
ஏயதோர் கார்த்தி கேயன் என்றெரு தொல்பேர் பெற்ருன்
சேயவன் வடிவ மாறுந் திரட்டிநீ யொன்ருச் செய்தாய்
ஆயத ஞலே கந்த னுமெனு நாமம் பெற்ருன்.

இவனே வளர்க்கும் தாய்மார் எனும்படியாக ஆறு கார்த்திகைப் பெண்களும் சென்று தாங்கள் பெற்ற பிள்ளேகள் எனும்படி தமது முலேகளில் ஊறிய அமுத

மான பாலை ஊட்டுதலினலே கார்த்திகேயன் எனும் ஒரு மிகப் பழமையான பெய ரினைப் பெற்றுக்கொண்டான். குழந்தை உருவுடன் ஆருக விளங்கிய அவனை நீ ஒன் ருகத் திரட்டி ஓர் உருவாகச் செய்தமையாலே கந்தன் என்னும் நாமம்பெற்ருன்.''

நன்முகம் இருமூன் றுண்டால் நமக்கவை தாமே கந்தன்
தன்முக மாகி யுற்ற தாரகப் பிரம மாகி
முன்மொழி கின்ற நந்தம் மூவிரண் டெழுத்து மொன்றுய்
உன்மகன் நாமத் தோரா றெழுத்தென உற்ற வன்றே.

''எனக்கு ஆறு முகங்கள் உண்டு. அவை தான் எனது மைந்தனுக்கும் ஆறு முகமாகி உற்றன. அவையன்றி தாரகப் பிரமமாகி எல்லா எழுத்துக்கும் முன்னல் மொழியப் படுகின்ற 'ஓம்' எனும் எழுத்தோடு எனது நாமமாகச் சொல்லப்படுகின்ற 'நமசிவாய' என்னும் ஐந்து எழுத்தும் சேர்த்து உனது மகனை முருகனின் ஓர் ஆறெழுத்தும் சரவணபவ எனப் பொருந்திக்கொண்டது. *18*

ஆதலின் நமது சத்தி அறுமுகன் அவனும் யாமும்
பேதக மன்ருல் நம்போற் பிரிவிலன் யாண்டும் நின்ருன்
ஏதமில் குழவி போல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்.

''ஆதலினல் எனது சத்தியே ஆறுமுகமுடைய எனது மகனுகும். அவனும் யானும் வேருனவர்களல்லர்; ஒருவரே. நம்மைப்போல அவனும் பிரிவில்லாது எங் கும் நின்ருன். ஒரு குறைவும் இல்லாத குழந்தையே போலானுலும் எல்லாவற்றை யும் உணர்ந்துள்ளான். தன்னை வந்தனை செய்வார் எல்லாருக்கும் இங்கு வாழும் துணையும் சிறப்பும் அதோடு இழிவில்லாத முத்தி எனும் பேரின்பத்தையும் கொடுக்க வல்லான்.'' *19*

மேலினி யனைய செவ்வேள் விரிஞ்சனைச் சுருதிக் கெல்லாம்
மூலம தாகி நின்ற மொழிப்பொருள் வினவி அன்னுன்
மாலுறச் சென்னி தாக்கி வன்சிறைப் படுத்தித் தானே
ஞாலமன் னுயிரை யெல்லா நல்கியே நண்ணும் பன்னுள்.

''மேலும் இனி எமது மைந்தன் பிரமதேவனை வேதத்துக்கெல்லாம் மூல எழுத்தாகி நின்ற 'ஓம்' என்னும் மொழிக்குப் பொருள் கேட்பார். பிரமதேவன் அதை அறியாது மயங்குவான். அப்போது அவன் தலையில் குட்டி அவனை கொடிய சிறையிலே அடைத்து பின்னர் தானே உலகம் உயிர்கள் யாவற்றையும் பலகாலமாக படைத்துத் திருவிளை யாடல் புரிந்தருள்வான் எமது மைந்தன்.'' 2

தாரகன் றன்னைச் சீயத் தடம்பெரு முகத்தி ஞனைச்
சூரபன் மாவை ஏனை யவுணரைத் தொலைவு செய்தே
ஆரணன் மகவான் ஏனை யமரர்கள் இடுக்கண் நீக்கிப்
பேரருள் புரிவன் நின்சேய் பின்னர்நீ காண்டி யென்ருன்.

''பெரும் பலமுடைய தாரகாசுரனை, சிங்கமுகத்தின் வடிவுடைய பெருந்தலை உடைய சிங்கமுகாசுரனை, சூரபன்மன் என்பானை, ஏனைய அசுரரைத் தொலைவு செய்து பின்பாக வேதம் ஓதும் பிரமதேவன், இந்திரதேவன், ஏனைய தேவர்கள் இடுக்கண்

நீக்கி பேரருள் புரிவான் அம்மையே! நினது மகன். இதையெல்லாம் நீ பின்பு காண் பாயாக'' என எம்பெருமாட்டிக்கு ஈசன் எங்கள் குழந்தை நாயகரான முருகப் பெருமானின் அற்புதம் நிறைந்த பெருமைகளை எடுத்து ஓதியருளினர். 21

**என்றலும் இளையோன் செய்கை எம்பெரு மாட்டி கேளா**
**நன்றென மகிழ்ச்சி கொண்டு நணுகலும் உலக மெல்லாஞ்**
**சென்றரு ளாடல் செய்யுந் திருத்தகு குமரன் பின்னர்**
**ஒன்றொரு விளையாட் டுள்ளத் துன்னியே புரித லுற்றான்.**

என்று இவ்வாறு ஈசன் மொழிந்து அருள் செய்தலும் அப்போது எம்பெருமாட்டி அதனைக் கேட்டவளாய், ''பெருமானே! மிகவும் நல்லது'' என்று மகிழ்ச்சி கொண்டு தமது குழந்தை வடிவின் பெருமையால் அகில உலகமும் பரவசப்படும்படியும் இதுவே அல்லாது விருப்பு வெறுப்பு அற்று இருக்கும் ஈசனாகிய சிவபிரானையே மகிழ்விக்கும் படியாக உள்ள தனது மைந்தனை அணைக்கும் படியாக கிட்டிச் செல்லலும் அப்போது உலகம் எங்கும் தான் ஒருவனே பரந்து சென்று ஆடல் செய்யும் திருவோங்கிய குமரன் பின்னர் தாம் ஒரு விளையாட்டை மகிழ்வால் உள்ளத்து உன்னியே செய்வாராயினர்.

குழந்தையின் அழகைக் கண்டு அதன்மீது ஆசை மீதூரப்பெற்ற தாய் அணைத்துத் தூக்கி முத்தமிடச் செல்லும்போது அதனை அறிந்த குழந்தை செல்வச் சிரிப்புக்கொண்டு அப்பாலும் ஓடி விளையாடல் ஆன இயல்புபோல் எங்கள் கடவுளான முருகன் பெருமையை ஈசன் கூறக்கேட்ட பெருமாட்டி நன்று என்று மகிழ்ந்து அவரை அணுகலும் அவர் அப்போது வேறு ஓர் ஆடலை மதித்து மேலும் செய்யத் தொடங்குவாராயினர். 22

**குலகிரி யனைத்து மோர்பாற் கூட்டிடும் அவற்றைப் பின்னர்த்**
**தலைதடு மாற்ற மாகத் தரையிடை நிறுவும் எல்லா**
**அலைகடல் தனையும் ஒன்றா ஆக்குறும் ஆழி வெற்பைப்**
**பிலனுற அழுத்துங் கங்கைப் பெருநதி யடைக்கு மன்றே.**

சிருங்கம், மாலியவான், இமயம், சுவேதம், நிதசம், ஏமகூடம், நீலகிரி, கந்த மாதநம் ஆகிய. திக்குகளில் பரந்து இருக்கும் மலைகள் அனைத்தையும் ஓரிடத்து கூட்டுவார், அவற்றைப் பின்னர் தலைகீழாகத் தூக்கி பூமியில் வைப்பார். எல்லா அலைபொருந்திய வேறுவேறான கடல்களையும் ஒன்றாக்குவார். சக்கரவாளம் என்னும் மலையை பாதளத்தூடு அழுத்தி அமுக்குவார் கங்காநதி பெருக்கெடுக்காதவாறு அதைத் தடுத்து நிறுத்துவார்.

உலகம் அண்டங்கள் அனைத்திற்கும் ஒருவனான சிவனே தந்தை, உமையம்மையே தாய், கண்ணால் காணக்கூடிய பூமி முதல் சகல அண்டமும் அப்பால் உள்ள கண் ஒளிக்கும் எட்டாத வேறு வேறு அண்டங்களும் எல்லாம் இவர்கள் உண்டாக்கிய இவர்களின் சொந்தப் பொருள்கள். ஆகவே இவர்கள் குமரன், நாம் எமது இல்லத்திலே வாழுங்கால் எமது குழந்தைகள் எமது வீடு முற்றம், வளவு, வாய்க்கால், வேறு இடங்களில் உள்ள பொருட்களை மாற்றி அமைத்து எறிந்து உடைத்து விளையாடி மகிழ்வதுபோலவே அம்மை அப்பன் மகிழும் செல்வக் குழந்தையும் உலகம் அண்டங்களின் நிலையிலே குறும்புத்தனங்களை மகிழ்வாலும் அருளாலும் செய்தருளி விளையாடுவாராயினர். ஆகவே இப்படலத்திற்கே திருவிளையாட்டுப்படலம் எனப் பொதுப் படையாகப் பேசப்பட்டது, 23

இருள்கெழு பிலத்துள் வைகும் எண்டொகைப் பணியும் பற்றிப்
பொருள்கெழு மேரு வாதி அடுக்கலிற் பூட்டி வீக்கி
அருள்கெழு குமர வள்ளல் ஆவிகட் கூறின் ருக
உருள்கெழு சிறுதே ராக்கொண் டொல்லென உருட்டிச் செல்லும்.

இருள் மயமான பாதாள பிலத்து உள்ளே இருக்கும் எட்டு வகையான அநந்தன், வாசுகி, தக்கன். கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், கங்காபாலன். குளிகன் என்னும் நாகபாம்புகளைப் பற்றித் தமது திருக்கையால் பிடித்து பொன் ஒளி பரக்கும் மேருமலையாதியான பெரிய மலைகளைத் தூக்கி அவற்ருேடு இந்த பாம்புகளை தேரில் கயிற்றை மாட்டுவது போல மாட்டிப் பிணித்துக் கட்டி இந்த மலைகளை உருண்டோடும் சில்லுடைய சிறுதேராகக் கொண்டு வேகமாக உருட்டி விளையாடுவார். ஆனல் இப்படி பெரிய மலைகளை உருட்டி விளையாடும்போது உலகத்து எந்த ஒரு சிறிய உயிருக்கேனும் ஏதேனும் தீங்கில்லாமல் தீதில்லாத திருவருள் மலையான முருகன் விளையாடல் புரிவார். 24

ஆசையங் கரிகள் தம்மை அங்கைகொண் டொன்ருே டொன்று
பூசல்செய் விக்கும் வானிற் போந்திடுங் கங்கை நீரால்
காய்சின வடவை மாற்றுங் கவின்சிறைக் கலுழ ஞேடு
வாசுகி தன்னைப் பற்றி மாறிகல் விளைக்கு மன்றே.

திக்குகளில் நின்று பூமியைத் தாங்கிக் காவல் செய்கின்ற எட்டு திக்கு யானைகளான ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சனம், புட்பநந்தம், சார்வபூமம், சுப்பிரதீகம் முதலிய திக்கு யானைகளைப்பற்றிப் பிடித்து ஒன்ருேடொன்று சண்டையிடும்படி செய்விப்பார். தேவஉலகத்திலே பெருக்கெடுத்தோடும் கங்கை நீரை ஏந்தி பெருங் கோபங்கொண்டுள்ள வடவாமுகாக்கினியை அவித்து மாற்றுவார், அழகான சிறகினை உடைய கருடப்பட்சியோடு வாசுகி என்னும் பாம்பைப்பற்றி கருடனுக்கு பயந்து இருக்கும் அப் பாம்பைக் கருடனேடு போர்புரியும்படியாகப் போர் செய்விப்பார். 25

பாதல நிலய துள்ள புயங்கரைப் படியிற் சேர்த்திப்
பூதல நேமி யெல்லாம் புகுந்திடப் பிலத்தி னுய்க்கும்
ஆதவ முதல்வன் றன்னை அவிர்மதிப் பதத்தி லோச்சுஞ்
சீதள மதியை வெய்யோன் செல்நெறிப் படுத்துச் செல்லும்.

பாதாளத்தில் உள்ள பாம்புகளைப் பூமியிலே சேர்த்துவிட்டு பூமியில் உள்ள மலைகள் எல்லாம் கீழேபோகும்படி பாதாளத்து அமுத்துவார், குளிர்ச்சி பொருந்திய சந்திர தேவனை சூரிய தேவனின் மார்க்கத்தில் செலுத்துவார். 26

எண்டிசை புரந்த தேவர் இருந்ததொல் பதங்க ளெல்லாம்
பண்டுள திறத்தின் நீங்கப் பறித்தனன் பிறழ வைக்குங்
கொண்டலி னிருந்த மின்னின் குழுவுடன் உருமுப் பற்றி
வண்டின முருத செந்தண் மாலைசெய் தணியுமன்றே.

எட்டுத் திக்கையும் காவல் பூண்டு அரசு செலுத்தும் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் திக்குப் பாலகர்களின் உலகங்

கள் எல்லாவற்றையும் அவைகள் இருந்த இடத்தினின்றும் பறித்தெடுத்து இருந்த இடம் விட்டுநீங்க மாற்றி அமைப்பார். மேகத்தில் இருந்த மின்னலின் கூட்டத்தோடு இடியேறுகளையும் தமது திருக்கையால் பிடித்து வண்டுகள் மொய்க்காத தாமரைப் பூவால் ஆன மாலைபோலச் செய்து தமது திருமேனிமேல் அணிவார். 27

**வெய்யவர் மதிகோள் ஏனோர் விண்படர் விமானந் தேர்கள்**
**மொய்யுறப் பிணித்த பாசம் முழுவதுந் துருவ னென்போன்**
**கையுறு மவற்றில் வேண்டுங் கயிற்றினை இடைக்கண் ஈர்ந்து**
**வையகந் திசைமீச் செல்ல வானியில் விடுக்கு மைந்தன்.**

சூரியர், சந்திரர். கிரகங்கள், ஏனையோர் யாவும் அந்தரத்தே உலாவி விளங்குமாறு துருவன் என்போன் வடக்கே இருந்து இவர்கள் ஊர்ந்து செல்லும் தேர்களை, விமானங்களை ஈர்ப்புச் சத்தி என்னும் பாசத்தால் கட்டி வைத்திருப்பான். அவ்வாறு துருவன் வைத்திருக்கும் கயிற்றை எமது பெருமான் இடையிலே பிடித்து இழுத்து அறுத்து பூமி மண்டலம், திக்குகள், சூரிய சந்திர கிரகங்கள் எல்லாம் தங்கள் பாசம் அற்ற தொடர்பால் செல்லுமாறு விடுத்தார். 28

**வடுத்தவிர் விசும்பிற் செல்லும் வார்சிலை யிரண்டும் பற்றி**
**உடுத்திரள் பலகோ ளின்ன உண்டையாக் கொண்டு வானோர்**
**முடித்தலை யுரந்தோள் கண்ட முகம்படக் குறியா வெய்தே**
**அடற்றனு விஞ்சை காட்டும் ஆறிரு தடந்தோள் அண்ணல்.**

குற்றம் நீங்கிய ஆகாயத்தில் செல்கின்ற இந்திரவில் இரண்டையும் தமது திருக்கையால் பற்றிப்பிடித்து நட்சத்திரக் கூட்டங்களையும், அநேகமாகிய கிரகங்களையும் இன்னும் இவைபோன்ற பிறவற்றையும் உருண்டையாகக் கொண்டு தேவர்களுடைய முடியுடைய தலை, நெஞ்சு, தோள், கழுத்து, முகம் இவைகளிற் படும்படியாக வில்லில் உருண்டைகளை மாட்டி எய்து தன் வில்வித்தையின் திறமையைக் காட்டுவார் பன்னிரண்டு தோள்களையுடைய எமது பகவான். 29

**இத்திறம் உலகந் தன்னில் இம்பரோ டும்பர் அஞ்சிச்**
**சித்தமெய் தளர்த லன்றிச் சிதைவுறு வகைமை தேர்ந்து**
**வித்தக வெண்ணி லாடல் வியப்பொடு புரிந்தான் ஆவி**
**முத்தர்தம் விழியின் அன்றி முன்னுரு நிமல மூர்த்தி.**

இத்திறமாக உலகம் தன்னில் இப்பூவுலக வாசிகளான மனிதர் முதலியவரும் அந்தர உலகவாசிகளான தேவர் முதலிய கணங்கள் யாவரும் அஞ்சி தங்கள் உள்ளமும் உடலும் தளர்வதேயல்லாமல் ஒருவரும் சிதைவாகிப் போகாதவண்ணம் தமது எல்லாம் உணரும் உணர்வால் உணர்ந்து தமது வித்தகமான திருவிளையாட்டை யாவரும் வியந்து அற்புதமடையுமாறு புரிந்தான். அவன் யாரெனில் ஜீவன் முத்தர் எனப்படும் முனிவோர் கண்களுக்கேயன்றி மற்றும் யாவருக்கும் முன்னுகத் தென்படாத விமல மூர்த்தியான சிவசுப்பிரமணியப் பெருமான்.

உலகப் பற்றுக்களை அறவே நீக்கி தம்மையும் மறந்து தானும் ஒன்றின்றியாகிய மேலாம் வாழ்வுடைய பெரியோர்கள் ஜீவன் முத்தர் எனப்படுவர். 30

ஆயது காலை ஞாலத் தவுணர்கள் அதனை நோக்கி
ஏயிது செய்தார் யாரே யென்றுவிம் மிதராய் எங்கள்
நாயகன் வடிவந் தன்னை நனிபெரும் பவத்துட் டங்குந்
தீயவ ராத லாலே கண்டிலர் தியக்க முற்றார்.

இவ்வாறாகியகாலைதன்னில் அசுரர்கள் இதனை நோக்கி "ஏ! இது செய்தார் யாவர்" என்று மிகவும் கலக்கம் அடைந்து இவ்வாறு திருவிளையாடலால் மாறு பட்ட விளைவுகளைச் செய்தருளுகின்ற எங்கள் நாயகன் வடிவம் தன்னை தாங்கள் பெரும் பாவங்களைப் புரிந்து தீவினை வசமாகிய வண்ணம் கொண்டமையால் காண முடியாதவராகி பின் எவ்வண்ணமோ இதன் விளைவுகள் என ஏங்கித் தியங்குகி ன்றார் அசுரர்.

சிலபகல் பின்னும் வைகுந் திறத்தியல் ஆயுள் கொண்டெ
உலகினில் அவுணர் யாரும் உறைதலின் அவர்க்குத் தன்மெய்
நிலைமைகாட் டாது செவ்வேள் நிலாவலும் நேடி யன்னோர்
மலரயன் தெரியா அண்ணல் மாயமே இனைய தென்றார்.

இன்னும் சிலநாள் வாழ்வுமட்டுமே என்ற திறத்தியல் நிலைமையால் இந்த அசு ரர்கள் வாழ்கிறார்கள். ஆனமையின், அவர்களுக்கு தனது மெய் ஒளி படைத்த திருமேனியைக் காண்பித்து ஆடல் புரிந்தோன் தான் என்பதை முருகக் கடவுள் காட்டாது ஆடல் புரிதலும் அதனால் உண்மை உணராத அசுரர் எல்லாம் இந்த விளைவுகளைச் சிந்தித்து ஆராய்ந்து இஃது பிரமவிஷ்ணுக்கள் நாடிக் காணாத சிவபிரான் ஆடலரான மாயமே இது எனச் சொன்னார்கள். 32

ஆயதோர் குமரன் செய்கை அவனியின் மாக்கள் காணாத்
தீயன முறையால் வெங்கோல் செலுத்திய அவுண ரெல்லாம்
மாய்வது திண்ணம் போலும் மற்றதற் கேது வாக
மேயின விம்மி தங்கொல் இதுவென வெருவ லுற்றார்.

அவ்வாறு திருவிளையாடல் புரியும் குமரக் கடவுளின் செய்கையை இப்பூவுலக மக்கள் யாவரும் நோக்கிச் சொல்வார், "ஓகோ! தீயமுறையால் கோல் செலுத்தி உயிர்களை வாட்டி வதைக்கும் கொடிய அசுரர் எல்லாரும் இனி மாய்ந்து போவது திண்ணம்போலும். ஏனென்றால் இதற்கு ஏற்பத்தான் இந்த உலகத்து நிலைமைகள் இருந்தாற்போல் திடீரென மாறும் செய்கைகளான விபரீதங்கள் நிகழ்கின்றன" எனச் சொல்லிப் பெரிதும் பயங்கொண்டார்கள்.
33

புவனியின் மாக்க ளின்ன புகறலுந் திசைகாப் பாளர்
தவனனே மதிய மேனோர் சண்முகன் செய்கை நாடி
அவனுரு வதனைக் காணார் அவுணர்தம் வினையு மன்றால்
எவரிது செய்தார் கொல்லென் றிரங்கினர் யாருங்கூடி.

பூமியில் உள்ள மனித குலம் இவைபோன்ற வார்த்தைகளை எம்பிரான் திருவிளை யாடலால் ஏற்படும் மாறுபாடான விளைவுகள் பற்றிப் பேசுதலும் திக்குக் காப்பா ளர்களாகிய இந்திரன், அக்கினி முதலியோரும் சூரிய சந்திரரும் மற்றும் ஏனையோ ரும் சண்முகக் கடவுளின் செய்கைகளை நாடிப்பார்த்தும் ஆனால் அதனைச் செய்வா னின் வடிவத்தைக் காணாதாராகி "இச்செயலைச் செய்தார் யாவர்? ஒருகால் அசுரர்

களாகுமோ என்றால் இல்லை. அவர்கள் ஏன் இதைச் செய்வார்கள்? செய்யார்களே! பின்னர் யார் இதைச் செய்தாராகும்'' என எல்லாத் தேவரும் கூடி இரங்கி ஏங்கிச் சிந்தை கவலை கொண்டனர். 34

தேருறு மனைய தேவர் தேவர்கோன் சிலவ ரோடு
மேருவி லிருந்தான் போலும் வேதனும் அங்கண் வைகும்
ஆருமங் கவர்பா லேகி அறைகுது மென்று தேறிச்
சூரர்கோன் றனக்கும் அஞ்சித் துயரொடு பெயர்த லுற்றார்.

இவ்வாறு கூடிப்பேசி யாவர் இது செய்தார் என யோசித்து சிந்தித்த தேவர்கள் ''எங்கள் அரசனான இந்திரபகவான் மகாமேரு மலையில் சிலதேவருடன் இருந்தான் போலும். அதோடு பிரமதேவரும் அங்கு இருந்தார் அவனுடனாக. ஆகவே நாங்கள் யாவரும் அவர்பாலாகச் சென்று அவர்களிடம் இதைச் சொல்வோம்'' என்று மனதைத் தேற்றிக்கொண்டு தாங்கள் அங்குபோவது தெரிந்தால் சூரனால் பெரும் ஆபத்து நேரும் என்பதை முன்கூட்டியே உணர்ந்தவர் ஆனமையால் சூரபன்மனுக்குப் பயந்து பயந்து பெருங் கவலையுடன் புறப்பட்டுச் செல்லல் உற்றார். 35

வடவரை யும்பர் தன்னில் வானவ ரானோ ரேகி
அடைதரு கின்ற காலை ஆறுமா முகங்கொண் டுள்ள
கடவுள்செய் யாடல் நோக்கி அவனுருக் காணா னாகி
இடருறு மனத்தி னோடும் இருந்தஇந் திரனைக் கண்டார்.

வடக்கே உள்ள மகாமேரு மலையின் உச்சிக்குத் தேவர்கள் யாவரும் சென்று அடைகின்றகாலையில் ஆறு பேரருள் வடிவான முகங்கொண்டுற்ற கடவுள் செய்கின்ற ஆடலை மட்டும் கண்டு ஆனால் அவரின் உருவத்தைக் காணாதவனாகி தானும் இப்படியெல்லாம் ஏன் விளைகிறது; யார் இதனைச் செய்தார் என்னும் வகையறியாமையால் பெரும் இடர்கொண்ட மனத்துயரத்துடன் இருந்த தங்கள் தலைவனான இந்திர தேவனைக் கண்டார்கள். 36

அரிதிரு முன்ன ரெய்தி அடிதொழு தங்கண் வைகி
விரிகட லுலகின் வானின் மேவுதொன் னிலைமை யாவுந்
திரிபுற வெவரோ செய்தார் தெரிந்திலம் அவரை ஈது
புரிகலர் அவுணர் போலும் புகுந்தஇப் புணர்ப்பென் னென்றார்.

இந்திரன் முன்பாக அத் தேவர்கள் யாபேரும் எய்தி அடி தொழுது அங்கண் இருந்து விரிந்த கடல் சூழ்ந்த உலகில் வான உலகங்களில் மேவிய பழைய நிலைமை யாவும் திரிபுறும்படி எவரோ செய்தார் இந்த மாயைகளை. யாவர் செய்கிறார் என்பதை எங்களால் ஆராய்ந்து அறியமுடியவில்லை. ஆனால் அசுரர் இதைச் செய்வாரோ என்றால் செய்யமாட்டார் போலும். ஆகையாலே இப்படியான விபரீதம் புகுந்தது என்ன காரணமாமோ'' என்றார்கள். 37

வானவர் இறைவன் அன்னோர் மாற்றமங் கதனைக் கேளா
யானுமிப் பரிசு நாடி யிருந்தனன் இறையுந் தேரேன்
ஆனதை யுணர வேண்டின் அனைவரு மேகி அம்பொன்
மேனிகொள் கமலத் தோனை வினவுதும் எழுதி ரென்றான்.

தேவர்கட்கு அரசனுன இந்திரன் இத்தேவர்கள் வார்த்தையைக்கேட்டு நானும் இத்தன்மைகளை நாடி இருந்தனன். கொஞ்சமும் இதனை அறியேன். ஆனமையால் இது எப்படியெல்லாம் நடக்கிறது என்பதை உணரவேண்டின் அனைவரும் நாங்கள் சென்று அழகியபொன்மேனி கொண்ட பிரம தேவரை வினவுவோம் ''எல்லீரும் எழுந்து வாருங்கள்'' என்றான். 38

எழுதிரென் றுரைத்த லோடும் இந்திரன் முதலா வுள்ளோர்
விழியிடைத் தெரிய அன்னோர் மெய்த்தவம் புரிந்த நீரால்
அழிவற வுலகி லாடும் அறுமுகன் வதன மொன்றில்
குழவிய தென்ன அன்ன குன்றிடைத் தோன்றி னுனல்.

''எழுங்கள் போவோம் என்று இந்திரதேவன் உரைத்தலோடும் இந்திரன்முதலாக உள்ளோர் தங்கள் கண்ணால் காணும்படியாக அவர்கள் யாவரும் உண்மையான தவம் செய்த படியால் அழிவு இல்லாதபடி உலகில் ஆடல் புரிகின்ற ஆறுமுகமுடைய பகவான் ஒரு முகமுடைய குழந்தை வடிவாகி இந்திரன் முதலியோர் காணும்படி யாக அவர்கள் இருந்த மேருமலையில் தோன்றினர். 39

வாட்டமொ டமரர் கொண்ட மயக்கறத் தனது செய்கை
காட்டிய வந்தோன் மேருக் கனவரை யசைத்துக் கஞ்சத்
தோட்டிதழ் கொய்து சிந்துந் துணையென உயர்ந்த செம்பொற்
கோட்டினைப் பறித்து வீசிக் குலவினன் குழவி யேபோல்.

வாட்டத்துடன் தேவர்படும் துயரம் நீங்கத் தனது செய்கையைக் காட்டும்படி வந்த கடவுள் மேருவென்ற கனமான மலையை தனது சிறுகரங்களால் அசைத்து தாம ரைப் பூவின் தோடாகிய இதழ்களைப்பிய்த்துப் போடும் ஒருகுழந்தையின் செய்கை போல எமது அருட் குழந்தையும் தனது கையால் அசைத்த மலையின் பொன்மய மான முடி ஒன்றைப் பிய்த்தெடுத்து வீசி எறிந்து குலாவி விளையாடினுன். 40

தோன்றிய குமரன் றன்னைச் சுரபதி சுரரா யுள்ளோர்
ஆன்றதோர் திசைகாப் பாளர் அனைவருந் தெரிகுற் றன்னோ
வான்தரை திரிபு செய்தோன் மற்றிவ னுகு மென்னுக்
கான்திரி அரியை நேரும் விலங்கெனக் கலங்கிச் சொல்வார்.

இவ்வாறு தோன்றிய குமரக்கடவுளைத் தேவர்கட்கு அதிபதியான இந்திரன், தேவர்களாயுள்ளோர் அனைவரும், மாட்சிமை உடைய திக்கின் காவலர்கள் யாவரும் காணலுற்றூராய் சொல்வார்கள், ''அம்மவோ! வானம் பூமிமுதல் யாவும் மாறடையும் படி செய்தோன் இங்கு உள்ள இவன்தானுகும் எனச்சொல்லிக் காட்டிலே திரியும் சிங்கத்தைக்கண்ட வேறு மிருகங்கள்போலக் கலங்கி ஏங்கிச் சொல்வார்: 41

நொய்தாங் குழவி யெனக்கொள்கிலம் நோன்மை நாடின்
வெய்தாம் அவுணக் குழுவோரினும் வெய்யன் யாரும்
எய்தாத மாயம் உளனுல்இவன் றன்னை வெம்போர்
செய்தாடல் கொள்வம் இவனென்று தெரிந்து சூழ்ந்தார்.

''இவனைப் பார்த்தால் மிக நொய்த இயல்பினைக்கொண்ட குழந்தை போலத் தோன்றினுலும் அவ்வண்ணம் நாம் எண்ணிவிடல் கூடாது. ஏனென்றுல் இவன் வலிமை

நாடின் மிக்க வலியுடைய அசுரரிலும் மிகக் கொடியன். யாரும் அடைய முடியாத மாய இயல்புகள் அனைத்தும் இவன் பெற்றுள்ளான். ஆகையால் இவ்விடத்து இவனைத் தப்பவிடாது நாம் எல்லோரும் பெரும் போரினைச் செய்து வெற்றி கொள்வோம்'' என எல்லோரும் தெரிந்துகொண்டு எம்பிரானை வளைந்து சூழ்ந்து கொண்டார்கள். 42

சூழுற்ற வெல்லை இமையோர்க்கிறை தொல்லை நாளில்
காழுற்ற தந்தம் அறவேகி வெண் காட்டில் ஈசன்
கேழுற்ற தாள்அர்ச் சனைசெய்து கிடைத்துவைகும்
வேழத்தை உன்ன அதுவந்தது மேரு வின்பால்.

இவ்வாறு காக்கும் கருணைக் கடலான முருகனை யாவரும் வளைந்து கொண்டபோது தேவர்கட்கு இறையான இந்திரன் முன்னாளிலே பானுகோபன் என்னும் அசுரனோடு போர்செய்த நாளில், தனது கொம்புகள் நாலும் இழந்து அதனால் திருவெண்காட்டில் ஈசனின் பெருமையான திருவடிமலர்களை அர்ச்சனை புரிந்து அதனால் இழந்த தந்தம் நான்கும் மீளவும் முளைக்கப் பெற்று இருந்த ஐராவதம் என்னும் யானையை நினைத்தலும் உடன் அது மகா மேரு மலையில் வந்தது. 43

தந்தங்கள் பெற்று வருகின்ற தனிக்க ளிற்றின்
கந்தந் தனில்போந் தடல்வச்சிரங் காமர் ஒள்வாள்
குந்தஞ் சிலைகொண் டிகல்வெஞ்சமர்க் கோல மெய்தி
மைந்தன் றனைவா னவரோடும் வளைந்து கொண்டான்.

இறைவன் அருளால் தன் தந்தங்கள் மீளவும் முளைக்கப்பெற்று வருகின்ற தனியான ஐராவதம் என்னும் யானையின் பிடரியின் மீது இந்திரன் ஏறிக்கொண்டு வலியுடைய வச்சிராயுதம், அழகிய பிரகாசமுடைய வாள், குந்தாயுதம், வில்லு, இவற்றை ஏந்திக்கொண்டு கொடிய போர்க்கோலமெய்தி எல்லார்க்கும் அருள்புரியும் குழந்தைநாயகரான பெருமானை போர்க் கோலமெய்திய ஏனைய தேவரொடும் வளைந்துகொண்டான். 44

வன்னிச் சுடர்கால் விசையோடு மரீஇய பாங்கிற்
பன்னற் படுகுன் றவைசூழ்தரு பான்மை யேபோல்
உன்னற் கரிய குமரேசனை உம்பர் கோனும்
இன்னற் படுவா னவரும்மிகல் செய்ய வுற்றார்.

பிரகாசமுடைய சுவாலையுடன் விசையாக எரியும் பெருநெருப்பின் பக்கராகப் பஞ்சால் செய்த மலைகள் சேரும் தகைமை ஒப்ப எம்மால் நினைத்தற்கும் அரிய குமரேசனை எதிர்த்து இந்திரனும் இன்னல்கொண்டு வாடும் தேவர்கள் யாவரும் வீர வார்த்தைகளைப் பேசி உக்கிரத்தோடும் போர்செய்யத் தொடங்கல் உற்றார். 45

தண்ணார் கமலத் துணைமாதரைத் தன்னி ரண்டு
கண்ணா வுடைய உமையாள்தரு கந்தன் வானோர்
நண்ணா ரெனச்சூழ் வதுநோக்கி நகைத்தி யாதும்
எண்ணாது முன்போல் தனதாடல் இழைத்த வேலை.

தண்ணளி உடைய தாமரைமலர்மேல் இருப்பிடங்கொண்ட பெண்கள் இருவரான மகாலட்சுமி, சரஸ்வதிதேவி இருவரையும் தனது இரண்டுகண்களாக உடைய எங்கள்

உமையம்மை தரும் மைந்தரான கந்தக்கடவுள் தேவர்கள் யாவரும் தன்னைப் பகைவன் என நினைத்து போர்செய்யும்படியாக சூழ்வது நோக்கி புன்சிரிப்புக் கொண்டு யாதுமே எண்ணுதவர்போல அக்கறையில்லாதவர்போல தனது ஆடலான மலை முடிகளை பிய்த்து எறியும் செயலைச்செய்யும் நேரத்தில். 46

எட்டே யொருபான் படைதம்முள் எறிவ வெல்லாந்
தொட்டே கடவுட் படைதன்னெடுந் தூர்த்த லோடும்
மட்டேறு போதிற் படுகின்றுழி வச்சி ரத்தை
விட்டே தெழித்தான் குமரன்மிசை வேள்வி வேந்தன்.

இந்திரதேவன் அதுகண்டு தனது கையில் ஏந்திய பதினெட்டு வகையான படைகளான வில், வாள், அம்பு, வேல், ஈட்டி, சக்கரம், கதை, சுழல்வாள், மழு, உலக்கை கப்பணம், வளைதடி, தோமரம், சூலம், கலப்பை, குந்தம், கழுமுள் முதலிய படைகளை எம்பிரான்மேல் தொடுத்துவிடுவனவெல்லாம் விடுத்துபின்னர் தேவப்படைகளான இந்திராஸ்திரம், சூரியாஸ்திரம், பிரமாஸ்திரம் முதலியனவும் விடுத்தலோடும் அவை யாவும் எம்பிரான்மீது தேன்சொரியும் மலர்கள்போலச் சென்று படுதலோடும் அதைக்கண்டுமுணராத இந்திரன் கோபம் மீண்டும்மிகுதலினுல் தனது வச்சிராயுதத்தை குமரக்கடவுள்மீது விடுத்து உரக்கக் கத்தினுன். 47

வயிரத் தனிவெம் படையெந்தைதன் மார்பு நண்ணி
அயிரிற் றுகளாய் விளிவாக அதனை நோக்கித்
துயரத் தழுங்க இமையோரிறை தொல்லை வேழஞ்
செயிருற் றியம்பி முருகேசன்முன் சென்ற தன்றே.

இந்திரன் எறிந்த வைரமான வச்சிராயுதமானது எந்தைபெருமானின் நெஞ்சைச் சேர்தலும் அது நுண்ணிய மணல்போல துகளாகி அழிந்து போதலும் அதனை நோக்கிய இந்திரதேவன் துயருற்று அழுங்கி கவலை மிகுதியால் வேதனை உறலும் அப்போது அவன் ஏறிவந்த பழைய வாகனமான ஐராவதம் என்னும் யானையானது கோபங் கொண்டு பேரோசையுடன் முழங்கிக் கொண்டு முருகக்கடவுள் முன்பாகச் சென்றது. 48

செல்லுங் கரிகண் டுமையாள் மகன் சிந்தை யாலோர்
வில்லுங் கணைகள் பலவும் விரைவோடு நல்கி
ஒல்லென் றிடநா ணெலிசெய்துயர் சாபம் வாங்கி
எல்லொன்று கோலொன் றதன்நெற்றியுள் ஏக வுய்த்தான்.

இவ்வாறு முழங்கி வேகத்துடன் வரும் ஐராவத யானையைக் கண்டு உமையம்மையார் பாலகரான எமது பெருமான் உடனே தனது சிந்தையாலே ஒரு வில்லும் அம்புகள் பலவும் விரைவாக உண்டாக்கிப் பின்னர் அந்தவில்லை எடுத்து ஒல்லெனத் துரிதத்துடன் நாணேசை செய்து வளைத்து அதில் சூரிய ஒளி போன்ற கூர்மையான ஓர் அம்பைப் பூட்டி அதனை நோக்கிவரும் யானையின் நெற்றியில் சென்று ஊடுருவும்படி விடுத்தார். 49

அக்கா லையில்வேள் செலுத்துங்கணை அண்டர் தம்மின்
மிக்கான் அயிரா வதநெற்றியுள் மேவி வல்லே
புக்காவி கொண்டு புறம் போதப் புலம்பி வீழா
மைக்கார் முகில்அச் சுறவேயது மாண்டதன்றே.

அக்காலையில் முருகப்பெருமான் விடுத்த அம்பு தேவர்கள் யாவரினும் வலிமை மிக்க வனும் அரசனுமான இந்திரனின் வேகமான ஐராவதத்தின் நெற்றியுள் புகுந்து ஊடுருவி பின்புறமாகச் சென்று அதன் உயிரையும் அம்பு நீக்கிச் செல்வலும் அந்நேரம் ஐராவதயானை 'அம்மவோ' எனப்புலம்பி நிலத்தில் வீழ்ந்தது. இருண்ட முகிலும் நடுங் கும்படி ஐராவதம் புரண்டு இறந்து பாடாகியது. 50

**தன்னேர் களிறு மடிவெய்தலுந் தான வேந்தன்**
**அன்னே வெனவே இரங்கா அயல்போகி நின்று**
**மின்னே டுறழ்தன் சிலைதன்னை வெகுண்டு வாங்க**
**முன்னேன் மதலை யொருகோலவன் மொய்ம்பி லெய்தான்.**

தன்னுடைய ஒரே ஒரு வலிமை மிகுந்த பட்டத்து யானையான ஐராவதம் வீழ்ந்து இறந்த தன்மைகண்ட இந்திரன் ''அம்மவோ எனது யானை போயிற்றே'' என இரங்கி அழுது அந்த இடத்தை விட்டு அயலேபோய் நின்று தனது மின்னலுடன் போட்டியிடும் வகையில் ஒளிகொண்ட வில் ஒன்றினை மிகு கோபத்துடன் எடுத்து வளைத் தலும் அப்போது எல்லோருக்கும் முன்னவரான சிவபிரான் திருக்குமாரரான முருகக் கடவுள் ஓர் அம்பினை இந்திரன் தோளின் மேல் விடுத்தருளினர். 5-

**கோலொன்று விண்ணேர்க் கிறைமேல்கும ரேசன் உய்ப்ப**
**மாலொன்று நெஞ்சன் வருந்திப்பெரு வன்மை சிந்திக்**
**காலொன்று சாபத் தொழில்நீத்தனன் கையி லுற்ற**
**வேலொன் றதனைக் கடிதேகுகன் மீது விட்டான்.**

ஓர் அம்பினை தேவர்களுக்கு அரசனை இந்திரன்மேல் எம் குமரக்கடவுள் விடுத் தலும் அப்போது அந்த அம்பு தான் யாரோடு போர் செய்கின்றுன் என்னும் தன்மையைத் தெளிவுறுவண்ணம் மயங்கும் உள்ளத்தினனை இந்திரன் தோள்மேல் படுதலும் வருத்தமுற்றுனாய் தனது பெருவன்மை யாவும் நீங்கப்பெற்று வளைத்து எடுத்து எம்பிரான்மேல் அம்புவிடும்படி ஏந்திய வில்லில் மீண்டும் அம்பு தொடுக்கும் தனது செயல் சோர்வாதலும் அதனை விடுத்துவிட்டு ஆத்திரமிகுந்து ஒரு வேலாயு தத்தை எடுத்து முருகப்பிரான் மீது இந்திரன் விடுத்தான். 52

**குந்தப் படையோர் சிறுபுற்படு கொள்கை யேபோல்**
**வந்துற் றிடஅற் புதமெய்தினர் மற்றை வானேர்**
**கந்தக் கடவுள் சிலையிற்கணை யொன்று பூட்டித்**
**தந்திக் கிறைவன் தடம்பொன்முடி தள்ளி ஆர்த்தான்.**

அப்போது இந்திரன் விடுத்த வேலாயுதம் ஆனது ஒரு புல்லைப்போல தேய்ந்து வலியிழந்துபோய் வந்து பெருமானைச் சேர்தலும் அப்போது தேவர்கள் அனைவரும் அதனைக் கண்ணுற்று அற்புத மெய்தினர். அப்போது கந்தக்கடவுள் தனது வில்லிலே ஓர் அம்பைப் பூட்டி செலுத்தி இந்திரன் சிரசில் அணிந்த முடியைத் தள்ளி வீழ்த்தி உக்கிரமாகச் சத்தமிட்டு ஆரவாரித்தார்.

**துவசந் தனையோர் கணைகொண்டு துணித்து மார்பிற்**
**கவசந் தனையோர் கணையால்துகள் கண்டு விண்ணேன்**
**அவசம் படஏழ் கணைதூண்டினன் ஆழி வேண்டிச்**
**சிவசங் கரஎன் றரிபோற்றிய செம்மல் மைந்தன்.**

பின்னர் இந்திரதேவனுடைய கொடியை ஓர் அம்பால் துணித்து அழித்து, அவனுடைய மார்பில் அணிந்த கவசத்தை ஓர் அம்பினல் பொடியாக்கி தேவர்கள் எல்லோரும் களைத்து அவசமாகி மயங்கும்படி ஏழு அம்புகளைத் தூண்டிச் செலுத்தினர். அவர் யாரெனில் சிவனே சங்கரனே எனும் நாமம் சொல்லி விஷ்ணுபெருமான் துதித்து சக்கரப்படை பெற்ற சிவபிரான் திருக்குமாரர். சிவனே சங்கரனே எனத்துதித்து வேண்டிய விஷ்ணுமூர்த்திக்கு அருள் செய்த தந்தையின் மைந்தன் இவனும் அடியார் துயரமும் அசுரர் கொடுமையும் அகற்றும் கருணையன் எனும் மேம்பாடு பெற இவ்வண்ணம் சொல்லினர் போலும். 54

தீங்கா கியவோ ரெழுவாளியுஞ் செல்ல மார்பின்
ஆங்கார மிக்க மகவான் அயர்வாகி வீழ்ந்தான்
ஓங்கார மேலைப் பொருள்மைந்தனை உம்ப ரேனோர்
பாங்காய் வளைந்து பொருதார்படு கின்ற தோரார்.

தீங்கு செய்யும் தன்மையான ஏழு அம்புகளும் சென்று தனது நெஞ்சிலே அகப்படுதலும் அகங்காரமிக்க இந்திரன் அயர்வாகி வீழ்ந்தான். அப்போது ஓங்காரத்து உள் ஒளிக்கும் ஒளியாய் நிலவும் உண்மைப் பொருளான பெருமானை தேவர்கள் யாவரும் பாங்காக வளைந்து கொண்டார்கள். ''ஆங்காரமும் ஒடுங்கார் அடங்கார், பரமானந்தத்தே தேங்கார் நினைப்பும் அருர் தினைப்போது அளவும் ஓங்காரத்து உள் ஒளிக்குள்ளே முருகன் உருவம் கண்டு தூங்கார்'' எனும் அருணகிரியார் வாக்கு இங்கு இப்பாடற் கருத்துடன் ஒப்பு நோக்கத்தக்கது. 55

இவ்வா றமரர் பொருமெல்லையில் ஈசன் மைந்தன்
கைவார் சிலையைக் குனித்தேகணை நான்கு தூண்டி
மெய்வா ரிதிகட் கிறைவன்றனை வீட்டி மற்றும்
ஐவா ளியினல் சமன் ஆற்றல் அடக்கி னுனல்.

இவ்வாறு தேவர்கள் பெருமானேடு போர் செய்யும் எல்லையில் ஈசன் குமரன் கையில் ஏந்திய வில்லை வளைத்து நான்கு அம்புகளை அதில் பூட்டிச் செலுத்தி அழிவற்ற சமுத்திர அரசனன வருணதேவனை நிலத்தில் வீழ்த்தி பின்பு ஐந்து அம்புகளை விடுத்து இயமதேவனின் வலியை அடக்கினர். 56

ஓரம் பதனுல் மதிதன்னையும் ஒன்றி ரண்டு
கூரம் பதனுற் கதிர்தன்னையும் கோதில் மைந்தன்
ஈரம் பதனுல் அனிலத்தையும் மேவு மூன்ருல்
வீரம் பகர்ந்த கனலோனையும் வீட்டி நின்ருன்.

ஓர் அம்பினலே சந்திரனை நிலத்தில் வீழ்த்தி இன்னும் ஒன்றின் பின் இரண்டு அம்பு விடுத்து சூரியபகவானையும், இரண்டு அம்புகளால் வாயுபகவானையும் பின்னர் மூன்று அம்பு விடுத்து வீரம் பேசி நின்று போர் செய்த அக்கினி தேவனையும் நிலத்திலே வீழ்த்தினர் குறைவிலா நிறைவான குமரன். 57

நின்ருர் எவருங் குமரேசன் நிலைமை நோக்கி
இன்ரு ரையுமற் றிவனேயடு மென்று தேறி
ஒன்ருன சிம்புள் விறல்கண்டரி யுட்கி யோடிச்
சென்ரு லெனவே இரிந்தோடினர் சிந்தை விம்மி.

இவ்வாறு இவர் எல்லாரையும் அம்பை விடுத்துக் கீழே வீழ்த்திவிடலும் அப்போது அங்கு நின்றார்கள் எல்லாரும் குழந்தை வடிவாகிய ஈசன் நிலைமையினை நோக்கி 'ஐயகோ! இக்குழந்தை இன்று எல்லாரையும் கொன்று வலி எய்துவான்' என்று தெரிந்தாராய் ஒரு தனியான சரபப்பட்சியின் வலிமையைக் கண்டவுடன் பயந்து பின்வாங்கும் சிங்கத்தைப்போலவே எல்லாத் தேவரும் சிந்தை விம்மியவாறு பயத்துடன் ஓடினார்கள் 58

**ஓடுஞ் சுரர்கள் திறநோக்கி உதிக்கும் வெய்யோன்**
**நீடுங் கதிர்கள் நிலவைத்துரக் கின்ற தேபோல்**
**ஆடுங் குமரன் அவரைத்துரந் தண்டர் முன்னர்**
**வீடுங் களத்தி னிடையேதனி மேவி நின்றான்.**

ஓடுகின்ற தேவர்களின் திறத்தை எமது கடவுள் நோக்கி, சூரியனின் உதய காலத்து அவன் நீண்ட ஒளிக்கிரணங்களான கதிர்கள் நிலா வெளிச்சத்துடன் பிரகாசித்த சந்திரனின் கிரணங்களைத் துரத்திக் கலைப்பதுபோல அங்கே திருவிளையாடல் புரியும் குமரன் அவர்களைக் கலைத்து தேவர்கள் யாவரும் வீழ்ந்து கிடக்கின்ற போர்க்களத்துத் தனியே தான் ஒருவனாகப் பொருந்தி நின்றான். 59

**ஒல்லா தவரிற் பொருதேசில உம்பர் வீழ**
**நில்லா துடைந்து சிலதேவர்கள் நீங்க நேரில்**
**வில்லா ளியாகித் தனிநின்று விசாகன் மேனாள்**
**எல்லா ரையும்அட் டுலவும்தனி ஈசன் ஒத்தான்.**

பகைவரைப் போலப் போர் செய்து சில தேவர் வீழ்ந்துவிட அங்கே நிற்க முடியாது பயந்து புறங்கொடுத்தோடி சில தேவர் நீங்கிவிட தனக்கு வேறொருவர் நேரில்லாத வில் வன்மை உடையார் போன்று எம்பிரான் அங்கு நிற்கும் தன்மையில் சங்காரகாலத்து எல்லாரையும் அழித்து தான் தனியே நிற்கும் பிதாவான ஈசனை ஒத்திருந்தார் எம் ஐயர் பெருமான். 60

**சுரர்கள் யாருந் தொலைந்திட வென்றுதான்**
**ஒருவ னாகி உமைமகன் மேவுழி**
**அருளின் நாரதன் அச்செயல் கண்டுவான்**
**குருவை யெய்திப் புகுந்தன கூறினான்.**

தேவர்கள் யாவரும் ஓடித் தொலைவாகவும் ஓடாதார் வீழ்ந்து கிடப்பவும் தான் ஒருவன் மட்டுமே அங்கு நிற்பவராகி உமையம்மை பாலர் நின்ற நேரத்து அருள் நிலை கொண்ட நாரத முனிவன் அச்செயலைக் கண்டு தேவர்கள் குருவான வியாழ பகவானை அணுகி இங்கு புகுந்த வரலாறுகள் யாவுங் கூறினான்: 61

**நற்ற வம்புரி நாரதன் கூற்றினை**
**அற்ற மில்லுணர் அந்தணன் கேட்டெழீஇ**
**இற்ற தேகொல் இமையவர் வாழ்வெனாச்**
**சொற்று வல்லை துயருழந் தேகினான்.**

நன்மைதரும் தவம் செய்கின்ற நாரத முனிவன் கூறிய வார்த்தைகளை குற்றம் பொருந்தாத உணர்வுடன் கூடிய வியாழ பகவான் கேட்டு உடன் எழுந்து "ஐயோ

அழிந்ததோ தேவர் வாழ்வு'' எனச் சொல்லி பெருந்துயரம் கொண்டு விரைவாகச் சென்றருளினர். 62

ஆதி பன்மதி அண்டர் தமக்கிறை
மாதி ரத்தவர் மால்கரி தன்னுடன்
சாதல் கொண்ட சமர்க்களந் தன்னிடைப்
போதல் மேயினன் பொன்னெனும் பேரினுன்.

சூரியன், சந்திரன், தேவர் அரசனுன இந்திரன், திக்குப் பாலகரான அக்கினி, யமன், வருணன். வாயு, குபேரன் முதலியோருடன் சாதல் கொண்ட போர்க்களத்தினிடத்தில் போய்ச் சேர்ந்தான் பொன்னவன் என்னும் பெயரினை உடைய வியாழதேவன். 63

ஆவி யின்றி அவர்மரி குற்றது
தேவ ராசான் தெரிந்து படருருத்
தாவி லேர்கெழு சண்முகன் அவ்விடை
மேவி யாடும் வியப்பினை நோக்கினுன்.

இவ்வாருகப் போர்க்களமெய்திய தேவகுருவான வியாழபகவான் தேவர்கள் யாவரும் தங்கள் உயிர் நீங்கப்பெற்று அங்கு இறந்து கிடப்பதை நோக்கித் தெரிந்து பெருந் துயரம்கொண்டு நின்றநேரம் ஆறுமுகமுடைய பெருமான் குறைவிலா நலமுடைய பேரழகு கொண்ட குழந்தை வடிவோடும் விளையாடும் அற்புத நிலையினை வியப்போடு பார்த்தருளினுன். 64

முழுது ணர்ந்திடு மொய்சுடர்ப் பொன்னவன்
எழுதொ ணுத எழில்நலந் தாங்கியோர்
குழவி தன்னுருக் கொண்ட குமரனைத்
தொழுது நின்று துதித்திது சொல்லுவான்.

முழுதும் உணர்ந்திடுகின்ற மொய்த்துப் பரந்து எழுகின்ற பொன் ஒளி பரந்த திருமேனி உடைய வியாழபகவான் எம்மால் இவ்வண்ணம் உடையவன் என எழுத ஒண்ணுத எழில் நலம் தாங்கியவாறு ஒரு குழந்தை உருவம் கொண்ட குமரனைத் தொழுது நின்று துதித்து இதனைச் சொல்லுவான் எம்பிரானுக்கு. 65

கரியரி முகத்தினன் கடிய சூரனென்
றுரைபெறு தானவர் ஒறுப்ப அல்கலும்
பருவரல் உழந்துதன் பதிவிட் டிப்பெரு
வரையிடை மகபதி மறைந்து வைகினுன்.

தேவர் குருவான வியாழபகவான் சொல்லுவார் ''பெருமானே! யானை முகமுடைய தாரகாசுரன், சிங்கமுகாசுரன் கடுஞ் செயல்கொண்ட சூரபன்மன் என்று எல்லாராலும் புகழப்படுகின்ற அசுரர் நாள்தோறும் துயரம் செய்து அடிமையாக்கி வேதனையுறுத்த அதனுல் நித்தலும் துன்பம் அனுபவித்துத் திரிந்து ஆற்றுமல் தன்னுடைய நாட்டை விட்டு இந்திரதேவன் இந்தப் பெரிய மேருமலையினிடத்து ஒளித்திருந்தான்.''

அன்னவன் நின்னடி அடைந்து நிற்கொடே
துன்னலர் தமதுயிர் தொலைத்துத் தொன்மைபோல்
தன்னர செய்தவுந் தலைவனுகவும்
உன்னினன் பிறிதுவே றென்றும் உன்னலான்.

''அவ்வாறுக இங்கு இருந்த இந்திரன் தேவரீருடைய திருவடிகளை அடைந்து உம்மைக் கொண்டே பகைவருடைய வலிமை யாவையும் தொலைத்து பழமைபோல இழந்த தனது அரசையும் நாட்டையும் அடையவும் தலைவனுகவும் நினைந்தருளினுன்; வேறு எதனையும் அவன் நினையவில்லை அப்பனே.' 67

பற்பகல் அருந்தவம் பயின்று வாடினன்
தற்பர சரவணத் தடத்திற் போந்தவுன்
உற்பவம் நோக்கியே உவகை பூத்தனன்
சொற்படு துயரெலாந் தொலைத்து ளானென.

''இந்த இந்திர தேவன் பல நாட்களாக அரிய தவத்தைச் செய்து மேனிவாடி இருக்கிறுன். ஐயனே! ஆதிப் பரம்பொருளே! தேவரீர் சரவணப்பொய்கையில் தோன்றிய உமது உற்பவத்தை கண்குளிரக் கண்டு மனம் குளிர்ந்து உவகையால் பூரித்து நின்றுன், தன்னிடத்து இதுகாறும் உள்ள துயரம் எல்லாவற்றையும் தொலைத்து விட்டவனுகி.'' 68

கோடலும் மராத்தொடு குரவுஞ் செச்சையுஞ்
சூடிய குமரநின் ரெழும்பு செய்திட
நேடுறும் இந்திரன் நீயித் தன்மையின்
ஆடல்செய் திடுவதை அறிகிலா னரோ.

''செங்காந்தட் பூவையும், கடப்பம் பூவையும், குராம் பூவையும், வெட்சிப் பூவையும் சூடிய குமரக் கடவுளே! தேவரீருடைய தொண்டு செய்யும் பாக்கியம் என்று தான் கைகூடுமோ என காலம் நோக்கி இருந்த இந்திரன் நீர் இவ்வாறு இத்தன்மையாக விளையாடல் புரியும் உமது கருணை நிறைந்த இச்செயலை ஒரு போதும் அறியமாட்டான்.'' 69

நாரணன் முதலினேர் நாடிக் காணெணு
ஆரண முதல்வனும் உமையும் அன்னவர்
சீரரு ளடைந்தனர் சிலரும் அல்லதை
யாருன தாடலை அறியும் நீரினர்.

'ஆகவே நாராயணர் முதலாகச் சொல்லப்பெறும் கடவுளர் யாரும் என்றும் நாடிக்காணெணு வகை நிற்கின்ற வேதங்கட்கு முதலான சிவபிரானும் உமையம்மையாரும், சிவபிரான் அம்பாள் இவர்களின் சிறப்பான அருளைப் பெற்றுக்கொண்டு விளங்கும்பேறுடைய சிவனடியார் சிலரும் அன்றி வேறுயார்தான் உமது ஆடலை, திருவிளையாட்டை அறியும் நீர்மை உடையார். தேவரீரது ஆடலை எவரும் அறியார், ஆனல் அறியும் தன்மைஉடையார் சிவபிரானும் அம்பாளும் அவரருள் பெற்ற சில அடியவரும்தான்'' என வியாழபகவான் கூறினுர். 70

பற்றிய தொடர்பையும் உயிரை யும்பகுத்
திற்றென வுணர்கிலம் ஏதந் தீர்கிலஞ்
சிற்றுணர் வுடையதோர் சிறியம் யாமெலாம்
உற்றுன தாடலை உணர வல்லமோ.

''எம்பிரானே எம்மைப்பற்றிய பாசங்களான தொடர்புகளின் இயல்பையும் உமது உடலில் நிற்கும் உயிரையும் இன்னும் இது இவ்வண்ணம் எனப்பகுத்து வேருக்கி அறிகின்ருேமில்லே. எங்களுடைய தீங்குபயக்கும் செயல்களே விடுகின்ருேமில்லே அப்படியாக இன்னும் சிறு உணர்ச்சி கொண்டு அவன் இவன் என்று பேசி அதிலே இன்பப்பட்டு மயங்கும் தன்மை உடையோம். ஆகவே சிறுஉணர்ச்சி கொண்டு கோபம், குரோதம், லோபம், ஆசை முதலியவற்ருல் உழல்கின்ற சிறியோர்கள் நாங்கள் எவ்வாறு இந்த எங்களின் சிறுநிலேயோடு உனது ஆடலே உணரமுடியும்.''

இறைவன் அருளே நாடி அறிவின் உலக பந்த பாசங்களின் நின்றும் நீங்கிய போதுதான் அது கைகூடும். ஆகவே நாங்கள் உலக பந்தங்களில் அகப்பட்டுத் தடுமாறும் உணர்வோடுதான் இருப்போம். அவ்வாறு இருக்கும் நாம் எவ்வாறு அதனே விடுத்து உமது அருள் ஆடலே அறிவோம் என்ருர் வியாழபகவான். 71

ஆதலால் வானவர்க் கரசன் ஆற்றவும்
ஓதிதான் இன்மையால் உன்றன் ஆடலேத்
தீதெனு வுன்னிவெஞ் செருவி ழைத்தனன்
நீதிசேர் தண்டமே நீபு ரிந்தனே.

ஆனதன்மையால் தேவர்கட்கு அரசனுன இந்திரன் மிகவும் ஞானம் இல்லாத தன்மையாலே உந்தன் ஆடலின் அற்புதத்தை உணராது அதைத் தீதென்று எண்ணி கொடிய போரை உம்மோடு புரிந்தான். ஆனல் அவனுடைய அந்தச் செயலுக்கு முற்றிலும் நீதியான தண்டனேயைத் தேவரீரே செய்துள்ளீர். 72

மற்றுள தேவரும் மலேந்து தம்முயிர்
அற்றனர் அவர்களும் அறிவி லாமையால்
பெற்றிடுங் குரவரே பிழைத்த மைந்தரைச்
செற்றிடின் எவரருள் செய்யற் பாலினேர்.

''இந்திரனேப்போல மற்று இங்கு உள்ள தேவர்களும் உம்மோடு போர் செய்து தங்கள் உயிர்கள் நீங்கப்பெற்ருர்கள் எவ்வாறெனில் தங்களுடைய அறிவில்லாமையால். ஆகவே பகவானே பிள்ளேகளேப்பெற்ற தாய் தந்தையரே அப்பிள்ளேகளில் அன்பு நீங்கி பிழை செய்த தமது பிள்ளேகளேக் கொல்வாரேயானுல் இனி யார்தான் வேறு அப்பிள்ளேகள் மீது இரக்கங்கொண்டு ஆதரவு செய்யும் தன்மை உடையார்.'' 73

சின்மய மாகிய செம்மல் சிம்புளாம்
பொன்மலி சிறையுடைப் புள்ளின் நாயகன்
வன்மைகொள் விலங்கினே மாற்ற லல்லது
மின்மினி தனேயடல் விசய மாகுமோ.

''ஞானச் சுடராய் நின்ற தலேவா! ஒரு சரபப் பட்சியானது பொன்னுலான அழகிய சிறகுகளோடும் பொலிந்து எல்லாப் பறவை முதல் அனேத்துக்கும் நாயகமாக இருப்பது. அவ்வாருன சரபப்பட்சி வலியோடும் பொருந்தி ஏனே உயிர்களே வதைக்கும் சிங்கம் புலி முதலிய மிருகங்களே கொல்வதை விடுத்து ஒன்றும் அறியாத மின்மினிப் பூச்சியையும் கொன்ருல் அந்தச் சரபப் பட்சிக்கு ஒரு வெற்றி ஆமோ? ஆகாதே.'' 74

ஒறுத்திடும் அவுணர்க ளொழிய வேரொடும்
அறுத்தருள் உணர்விலா அளியர் உன்னடி
மறுத்தலில் அன்பினர் மற்றின் னேர்பிழை
பொறுத்தருள் கருணையாற் புணரி போன்றுளாய்.

''ஆகவே எம்பிரானே! எல்லாரையும் ஒறுத்துத் துயரம் செய்கின்ற சூரன் முதல் அசுரர் அனைவரையும் ஒழித்து வேரோடும் அறுத்து உலகை அவர் வசமிருந்து காப்பாற்றியருள். இப்போ இங்கு இறந்து பாடாகிக் கிடக்கின்ற உணர்வில்லாத இந்திரன் முதல் தேவர்கள் யாவரும் ஏழைகள்; துயரம் இல்லாத நல்லவர்கள்; இவர்கள் யாவரும் எக்காலமும் உம்மீது மறவாத அன்பினை உடையவர்கள்; ஆகவே தேவரீர் இந்த ஒரு பிழையை மட்டும் பொறுத்தருள்வீராக கருணையால் சமுத்திரம் போல்பவரே.'' 'மாறிலா மாக்கருணை வெள்ளமே'' (மணிவாசகர்) 75

பரமுற வணிகரைப் பரித்துப் பல்வளந்
தருகலங் கவிழ்ந்திடச் சாய்த்து மற்றவர்
ஒருதலை விளிதல்போல் உன்னிற் பெற்றிடுந்
திருவினர் பொருதுனைச் செருவில் துஞ்சினர்.

''பல வணிகரையும் அவர்க்குச் செல்வந் தரும் பொருளையும் ஏற்றிக்கொண்டு சென்ற பாரம் பொருந்திய ஒரு கப்பல் கவிழ்ந்து கடலிலே சாய்ந்தபோது அதில் உள்ள வணிகரும் பொருளும் கடலில் ஆழ்ந்து இறத்தல்போல தேவரீரிடத்து பெறும் பெரும்பேறுகளுடன் வாழ்வு அடையும்படி இருந்த இந்த இந்திரன் முதல் தேவர் யாவரும் உம்மோடு போர்செய்து போரில் இறந்தார்கள்.'' 76

தொழுதகு நின்னடித் தொண்ட ராற்றிய
பிழையது கொள்ளலை பெரும சிந்தையுள்
அழிதரு மினையவர் அறிவு பெற்றிவண்
எழுவகை யருளென இறைஞ்சிக் கூறினன்.

''ஆகவே யாவராலும் தொழப்படுகின்ற தேவரீரின் திருவடித் தொண்டர் ஆற்றிய பிழையைத் தேவரீர் திருவுள்ளத்துட் கொள்ளாதீர் பெருமானே! தங்கள் மனங்களின் அறியாமையால் அழிவுற்ற இவர்கள் அறிவு பெற்று இவ்விடத்து எழும் வண்ணம் அருள் செய்வீராக எம்பிரானே'' என வியாழ பகவான் இறைஞ்சிக் கூறினன். 77

பொன்னவன் இன்னன புகன்று வேண்டிட
முன்னவர் முன்னவன் முறுவல் செய்துவான்
மன்னவ னாதியர் மால்க ளிற்றொடும்
அந்நிலை எழும்வகை அருள்செய் தானரோ.

வியாழ பகவான் இந்த வார்த்தைகளைச் சொல்லி வேண்டிக்கொள்ள அப்போது முன்னவர் எனும் முன்தோன்றிய பழையவர்க்கும் மிக முன்னான பொருளான பகவான் அதனைக் கேட்டு புன்முறுவல்கொண்டு தேவர் அரசனான இந்திரன் முதலியோர் மயங்கி, வீழ்ந்த ஐராவதம் என்னும் யானையோடும் அந்நிலையே உயிர்பெற்று எழும் வகையாக அருள் புரிந்தார் 87

அந்தியின் வனப்புடைய மெய்க்குகன் எழுப்புதலும் அன்ன பொழுதே
இந்திரனும் மாதிர வரைப்பினரும் வானவரும் யாவரு மெழாஅச்
சிந்தைதனில் மெய்யுணர்வு தோன்றுதலும் முன்புரி செய்கை யுணராக்
கந்தனொடு கொல்சமர் புரிந்ததென உன்னினர் கலங்கி யெவரும்.

அந்திக் காலத்திற் தோன்றும் செக்கரைப்போலும் அழகிய செவ்வொளி பரந்த அழிவிலா உண்மைப் பொருளான முருகக் கடவுள் இறந்தார் எல்லாரையும் 'எழுங்கள்' என எழுப்புதலும் அந்நேரத்திலே இந்திரனும் திக்குப் பாலகரான அக்கினி, யமன், வருணன், வாயு முதலியோரும் தேவர்கள் யாவரும் உயிர்பெற்றெழுந்தபோது அவர்கட்கு இப்போது உண்மையுணர்வு தோன்றுதலும் தாங்கள் முன்பு புரிந்த தமது செயலினை உணர்ந்து ''ஐயையோ, நாங்கள் எல்லோரும் கந்தப் பெருமானுடனா போர் செய்தனம்'' என எல்லாரும் நினைந்து பெரிதும் மனக்கலக்கமுற்றார்கள். 79

கலங்கினர் இரங்கினர் கலுழ்ந்தனர் புலர்ந்தனர் கவன்ற னர்உளம்
மலங்கினர் விடந்தனை அயின்றவ ரெனும்படி மயர்ந்த னலிசேர்
உலங்கென உலைந்தனர் ஒடுங்கினர் நடுங்கினர் உரந்த னையிழந்
திலங்கெழில் முகம்பொலி விகந்தனர் பொருந்தமை யிகழ்ந்த னர்களே

எல்லாரும் கலங்கினர்; இரங்கினர்; கண்ணீர் சொரிய அழுதார்கள்; வாடினர்கள்; மனக்கவலை கொண்டார்கள்; உள்ளம் வேதனை கொண்டார்கள்; நஞ்சை உண்டவர் இவர் எனும்படி பதை பதைத்தார்கள்; நெருப்பைச் சேர்ந்த கொக்கு எனும்படி உலைந்து ஒடுங்கினர்; நடுங்கினர்; வலியை எல்லாம் இழந்து அழகான தங்கள் முகங்கள் எல்லாம் பொலிவு இழந்த னர்; போர் செய்த தங்களையே இகழ்ந்தார்கள். 80

துஞ்சியெழும் அன்னவர்கள் ஏழுலகு முன்னுதவு சுந்த ரிதரும்
மஞ்சனரு ளோடுவிளை யாடுவது காண்டலும் வணங்கி யனையான்
செஞ்சரண் இரண்டினையு முச்சிகொடு மோயினர் சிறந்த லர்துணைக்
கஞ்சமல ரிற்பல நிறங்கொள்அரி யின்தொகை கவைஇய தெனவே

இறந்து பின்னர் உயிர்பெற்று எழுந்த இவர்கள் யாவரும் ஏழு உலகையும் முன்னர் உதவுகின்ற சுந்தரியான உமையம்மை தந்தருளும் பாலகரான முருகப்பிரான் அருளோடும் விளையாடல் புரியும் தகைமையினை நோக்கி காண்டலும் கைகூப்பி வணங்கி ஐயனுடைய செம்மை வாய்ந்த பாதங்கள் இரண்டினையும் தமது உச்சி தோயும்படியாக வீழ்ந்து வணங்கிச் சூழ நிலத்திலே கிடந்தார்கள். அது எப்படி எனில் தாமரை மலரில் பலநிறங் கொண்ட வண்டின் தொகையானது பொருந்தி இருக்கும் தன்மைபோல ஆயிற்று. 81

கந்தநம ஐந்துமுகர் தந்தமுரு கேசநம கங்கை யுமைதன்
மைந்தநம பன்னிரு புயத்தநம நீபமலர் மாலை புனையுந்
தந்தைநம ஆறுமுக வாதிநம சோதிநம தற்ப ரமதாம்
எந்தைநம என்றுமிளை யோய்நம குமாரநம என்றுதொழுதார்.

அவ்வாறு குழந்தை வடிவாகி அருள் நிறைந்து விளையாடிய எமது பெருமான் சரண கமல பாதத்து வீழ்ந்து வணங்கியவர்கள் பயபக்தியுடன் கந்தநம; ஐம்முகமுடைய சிவ

பிரான் தந்த குமரா நம; கங்காதேவி உமாதேவி பாலா நம; பன்னிருதோளை உடையாய் நம; கடம்பமலர் மாலை புனையும் தந்தையே நம; ஆறுமுகமுடைய ஆதி நம; சோதி நம; ஞானவடிவான எந்தையே நம; என்றும் இளையோய் நம; குமரா நம என்று தோத்திர மந்திரம் சொல்லித் தொழுதார்கள். 82

பொருந்துதலை யன்புடன் எழுந்தவர்கள் இவ்வகை புகழ்ந்து மனமேல்
அரந்தைகொடு மெய்ந்நடு நடுங்குதலும் அன்னதை அறிந்து குமரன்
வருந்தலிர் வருந்தலி ரெனக்கருணை செய்திடலும் மற்ற வர்கடாம்
பெருந்துயரு மச்சமு மகன்றுதொழு தேயினைய பேசி னர்களால்.

உயிர்பெற்று எழும்போதே எம்பிரானிடத்துத் தானுக விளையும் தலையாய அன்புடன் பொருந்திய இவர்கள் இவ்வாறு எம்பிரான் மலரடி பற்றிநின்று தொழுது புகழ்ந்து மனத்திற் கவலையோடும் மேனி நடுங்கி நிற்றலும் அன்னதை உணர்ந்த குமரன் ''வருந்தலிர்! வருந்தலிர்!!'' என எம்பெருமான் கருணையால் அபயம் அளித்து நிற்றலும் மற்று இவர்கள் எல்லாரும் பெருந்துயரமும் அச்சமும் நீங்கப்பெற்று தொழுது வணங்கி இனைய வார்த்தைகளைப் பேசிக்கொள்கிருர்கள். 83

ஆயவமு தத்தினெடு நஞ்சளவி யுண்குநரை யவ்வி டமலாற்
தூயவமு தோவுயிர் தொலைக்குமது போலுனது தொல்ல ருளினுல்
ஏயதிரு வெய்திட விருந்தனமுன் னேடம ரியற்றி யதனு
நீயெமை முடித்தியலை யன்னதவ றெம்முயிரை நீக்கி யதரோ.

''உண்ணுதற்கு ஏற்ற அமுதத்தோடு உண்ணத் தகாத நஞ்சை அளாவி உண்கின்றவர்களை ஐயனே, அந்த அமுதோ அல்லது அந்த நஞ்சோ தொலைவு செய்து சாகவைக்கும்? நஞ்சுதானே. பகவானே! அத்தன்மைபோல உமது பழமையான நல்ல அருளினுல் மேலான செல்வம் வாழ்வு, சிறப்பு அனைத்தையும் அடைய இருந்த நாங்கள் உம்மோடு போர் செய்துள்ளோம் எமது அகந்தையால். அதனுலே நீர் எம்மைக் கொன்றீர் எனச்சொல்ல முடியாது. உம்மை அறியாது நாம் செய்த தவறு எம்மை முடித்துள்ளது. 84

பண்டுபர மன்றனை யிகழ்ந்தவன் மகத்திலிடு பாக மதியாம்
உண்டபவ மின்னமு முடிந்தில வதன்றியு முனைப்பொ ருதுநேர்
கொண்டிகல் புரிந்தனம் அளப்பில்பவம் வந்தகும ரேச எமைநீ
தண்டமுறை செய்தவை தொலைத்தனை உளத்துடைய தண்ண ளியினுல்.

முற்காலத்தில் சிவபிரானை இகழ்ந்தவனுன தக்கன் யாகத்தில் இடப்பெற்ற அவிப்பாகத்தை நாம் உண்ட பாவம் இன்னமும் அநுபவித்து முடிந்ததில்லை. அஃது அல்லாமலும் தேவரீரை எதிர்த்துப் போர்செய்துள்ளோம். அதனுல் அளவு கடந்த பாவம் இப்போது எமக்கு வந்துள்ளது. அவ்வாருகப் பெருகிவந்த இப்பாவத்தை குமரேசா! நீ தண்டமுறை செய்து அவை தொலைத்தனை உம்முடைய உள்ளத்தே கொண்ட தண்மை வாய்ந்த கிருபையால்.'' 85

ஆதலின் எமக்கடிகள் செய்தவரு ளுக்குநிக ராற்று வதுதான்
ஏதுளது மற்றெமை உனக்கடிய ராகவிவ ணீது மெனினும்
ஆதிபர மாகிய உனக்கடியம் யாம்புதி தளிப்ப தெவனே
தாதையர் பெறச்சிறுவர் தங்களை யவர்க்கருள்கை தக்க பரிசோ.

''ஆதலினால் எமது குருபரனே தேவரீர் எமக்கு இப்போது செய்துள்ள அருளுக்கு நிகராக நாம் கைம்மாறாகச் செய்யும் செயல்தான் ஏதுளது? இங்கு எம்மை முற்றிலும் உமக்கு அடியாராகக் கொடுப்போம் என்றாலும் ஆதிப்பரம் பொருளான தேவரீர் நீர். பிறப்பும் இறப்பும் அனைத்தும் கடந்த உமக்கு நாம் என்றும் அடியவர் தாமே. உம்மில் இருந்தே உற்பவித்த நாம் பின்னர் யாம் வேறாகநின்று ஆதியாக உள்ள இத்தொடர்பை புதிதாக எவ்விதம் வகுக்க முடியும்? தந்தை தாய் பிள்ளையைப் பெற, பின் அந்தப் பிள்ளைகள் தங்கள் தகப்பன் தாயைப் பார்த்து 'எங்களை உங்களது பிள்ளைகளாக ஏற்றுக்கொள்ளுங்கள்' என்று கொடுக்கலாமோ? இதுதகுதியான செய்கை யாகுமோ? 86

அன்னதெனி னுந்தெளிவில் பேதையடி யேம்பிழை யனைத்து முளமே
உன்னலை பொறுத்தியென வேகுமர வேளவை யுணர்ந்து நமைநீர்
முன்னமொரு சேயென நினைந்து பொருதீர்நமது மொய்ம்பு முயர்வு
மின்னுமுண ரும்படி தெரித்துமென வோருருவ மெய்தி னனரோ.

''அவ்வாறாயினும் தெளிவில்லாத பேதைகளான அடியேங்கள் பிழைகள் அனைத்தை யும் உனது உள்ளத்தின் மேல் உன்னாதே எங்கள் ஐயாவே! பொறுத்தருள்வாய் பெருமானே!'' என இரந்து தேவர் வேண்டலும் அப்போது குமரக் கடவுள் அவை உணர்ந்து அவர்களைப் பார்த்துச் சொல்வார், ''தேவர்களே! நீவிர் எம்மை ஒரு குழந்தை என்று நினைத்துப் போர் செய்தீர். நமது வலியும் உயர்வும் இன்னமும் உங்கட்கு உணரும்படி காட்டுவோம்'' எனக்கூறி உடன் எம்பிரான் ஒரு பெரிய உருவத்தை எய்தினர். 87

எண்டிசையு மீரெழு திறத்துலகு மெண்கிரியு மேழு கடலுந்
தெண்டிரையு நேமிவரை யும்பிறவும் வேறுதிரி பாகி யுளசீர்
அண்டநிரை யானவு மனைத்துயிரு மெப்பொருளு மாகி யயனும்
விண்டுமர னுஞ்செறிய வோருருவு கொண்டனன் விறற்கு மரனே.

எட்டுத் திக்குகளும், மேலும் கீழுமாகிய பதினான்கு வகையான உலகமும், எட்டு மலைகளும், ஏழு கடல்களும், தெள்ளிய நீர்கொண்ட புறவாழிச் சமுத்திரமும், சக்கரவாள மலையும், பிறபொருள்களும், வெவ்வேறான வடிவங்களில் விளங்கும் சிறப்பான அண்டங்களும், அனைத்து உயிர்களும், எல்லாப் பொருள்களும் தானேயாய் விளங்கி, பிரமன், விஷ்ணு, சிவபிரான் யாவரும் தன்னிடத்துச் செறியும்படியான இந்தப் பெரிய வடிவத்தைக் கொண்டருளினர். 88

மண்ணளவு பாதல மெலாஞ்சரண மாதிர வரைப்பு மிகுதோள்
விண்ணள வெலாமுடிகள் பேரொளி யெலாநயன மெய்ந் நடுவெலாம்
பண்ணளவு வேதமணி வாயுணர்வெ லாஞ்செவிகள் பக்க மயன்மா
வெண்ணளவு சிந்தையுமை யைந்தொழிலு நல்கியரு ளீச னுயிரே.

இவ்வாறு இந்த வடிவத்திற்கு கீழேயுள்ள ஏழு உலகங்களின் மேல் விளங்கும் இந்தப் பூமிவரையும் உள்ள உலகங்கள் எல்லாம் திருப்பாதமாகவும், எட்டுத் திக்கின் எல்லைவரையும் மிகுந்த மலைகள் தோள்களாகவும், மேலுலகம் ஏழுக்கும் அப்பாலான வெளியான இடம் முடிகளாகவும், சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய இவையாவும் கண்களாகவும், இந்த மேல் வெளிக்கும் பூமியின் மேற் பரப்பிற்கும் இடையான இட

மெல்லாம் எம்பிரானின் திருமேனியாகவும், இசைபொருந்திய வேதங்கள் அழகிய வாயாகவும், அனைத்து உயிர்களின் உணர்வெல்லாம் தமக்குக் காதுகளாகவும், பிரம தேவரும் விஷ்ணுமூர்த்தியும் இடம் வலம் ஆன இருபக்கங்களாகவும், உமையம்மை யார் கருதும் தன்மை அமைந்த மனமாகவும், படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் என்னும் ஐந்து தொழில்களைப் புரியும் சிவபிரான் ஆன்மாவா கவும் நின்ற முறையில் இவ்வுருவம் அமைந்தது. 89

**ஆனதொரு பேருருவு கொண்டுகும ரேசனுற வண்டர் பதியு**
**மேலையரு மற்புதமி தற்புதமி தென்று தொழு தெல்ல வருமாய்**
**வானமிசை நோக்கினர்கண் மெய்வடிவம் யாவையும் வனப்பு முணரார்**
**சானுவள வாவரிது கண்டனர் புகழ்ந்தினைய சாற்றி னர்களால்.**

இவ்வாருக ஆன ஒரு பேருருக் கொண்டு எமது ஈசனுகிய முருகன் தோன்ற தேவர் தலைவனுன இந்திரனும் மற்றும் அங்கு நின்ற தேவர் யாவரும், இது அற்புதம், அற்புதம் இஃதென்று தொழுது எல்லாருமாய் வானத்தின் மேலாக நோக்கினுர்கள். ஆனுல் அப்பன் கொண்ட வடிவத்தின் அழகையும் வனப்பையும் தெரிந்து உணர முடி யாதவராகி எம்பிரானுடைய முழங்கால்வரையும் அரிதில் ஒருவாறு பார்த்துத் தெரிந்து வியந்து புகழ்ந்து இதனைச் சொல்வாராகினுர்கள். 90

**சேணலம் வந்த சோதிச் சிற்பர முதல்வ வெம்முன்**
**மாணல முறநீ கொண்ட வான்பெருங் கோலந் தன்னைக்**
**காணல மடியோங் காணக் காட்டிடல் வேண்டு மென்ன**
**நீணலங் கொண்டு நின்ற நெடுந்தகை யதனைக் கேளா.**

"ஆகாய மனைத்தும் பரவி ஒரே சோதிமயமாகக் காணப்படும் ஞானமுதல்வா! தேவரீர் பேரழகு பொருந்தும்படியாக எம் முன்கொண்ட இந்த அற்புதமான உயர்ந்த வடிவத்தை நாம் காணமுடியாது நின்றேம். அடியோம் காணும்படியாகத் தேவரீர் முழுவதும் காட்டியருள வேண்டும்" என்று வேண்டியருளவும் நெடிதாகப் பரந்து யார்க்கும் நன்மையே புரியும்படியாக நின்ற நெடுந்தகை அதனைக் கேட்டருளினுர். 91

**கருணைசெய் தொளிகண் மிக்க கண்ணவர்க் கருளிச் செவ்வேள்**
**அருணமார் பரிதிப் புத்தே ளனந்தகோ டிகள்சேர்ந் தென்னத்**
**தருணவில் வீசி நின்ற தனதுரு முற்றுங் காட்ட**
**விரணிய வரைக்க ணின்ற விந்திரன் முதலோர் கண்டார்.**

எம்பிரான் இவ்வாறு கருணை செய்தருளி ஒளிகள் மிக்க கண்களை இப்போது தேவர்கட்கு கொடுத்தருளவும் தேவர்கள் யாவரும் அப்போது ஒளி உடைய கண்களைப் பெற்றுக்கொண்டார்களாகி அதன் உதவியால் இப்போது ஒளி உடைய சூரியர்கள் அனந்த கோடியோர் திரண்டு ஒன்று சேர்ந்தது எனும்படியாகப் பேரொளி பரப்பி நின்ற தமது உருவம் முற்றும் காட்ட அப்போது பொன்மயமான மேருமலையில் நின்ற இந்திரன் முதலோர் யாவரும் இதனைக் கண்டார்கள். 92

**அடிமுதன் முடியின்காறு மறுமுக னுருவ மெல்லாங்**
**கடிதவ னருளா னேக்கிக் கணிப்பிலா வண்ட முற்று**
**முடிவறு முயிர்கள் யாவும் மூவருந் தேவர் யாரும்**
**வடிவினி லிருப்பக் கண்டு வணங்கியே வழுத்திச் சொல்வார்.**

ஆறுமுகங்களை உடைய பெருமான் இப்போது கொண்ட சோதிமயமான பெரிய திரு உருவத்தின் திருவடிமுதல் திருமுடியின்வரை அதி விரைவாக ஈசன் கொடுந்த நல்ல அருளினல் காணப்பெற்று கணக்கற்ற அண்டங்கள் முழுவதும், முடிவற்ற உயிர்கள் யாவும், பிரமதேவரும், விஷ்ணுமூர்த்தியும், சிவபிரானும், தேவர் யாவரும் அவருடைய வடிவில் இருப்பக் கண்டு கைகூப்பி வணங்கித் துதித்துச் சொல்வார்களாயினர். 93

அம்புவி முதலாம் பல்பே ரண்டமு மங்கங் குள்ள
உம்பரு முயிர்கள் யாவும் உயிரலாப் பொருளு மாலுஞ்
செம்பது மத்தி னேனுஞ் சிவனெடுஞ் செறிதல் கண்டோம்
எம்பெரு மானின் மெய்யோ வகிலமு மிருப்ப தம்மா.

''ஆறுமுகமுடைய அப்பனே! அழகிய இப்பூமி முதலாகிய பலபெரிய அண்டங்களும் அங்கங்குள்ள தேவரும் உயிர்கள் யாவும், உயிர்கள் அல்லாத சடப்பொருளும், நாராயணக்கடவுளும், தாமரை மலரில் இருக்கின்ற பிரமதேவரும், சிவபிரானேடும் ஒருங்கே செறிந்து உமது வடிவத்தில் இருப்பக்கண்டோம். தேவரீரின் மேனியோ எல்லா இடமும் இருப்பது. அம்மா! நீரல்லாது வேறு ஏதும் பொருள் இங்கு காணேம்.'' 94

அறிகில மிந்நாள்காறு மகிலமு நீயே யாகி
உறைதரு தன்மை நீவந் துணர்த்தலி னுணர்ந்தா மன்றே
பிறவொரு பொருளுங் காணேம் பெருமநின் வடிவ மன்றிச்
சிறியம்யா முனது தோற்றந் தெரிந்திட வல்ல மோதான்.

''ஐயனே! நாம் இவ்வளவு நாளும் எல்லா உலகமும் நீயே ஆனய் என்பதை அறியாது இருந்தோம். ஆனல் அவ்வாறு அகிலமுமாய்த் தேவரீர் உறைகின்ற தன்மையை நீர் வந்து இப்போது எமக்குக் காட்டியருள நாம் உணர்ந்து கொண்டோம். தேவரீருடைய வடிவை விடுத்து வேருக வேறு ஒரு பொருளும் காணேம். ஆகையாலே அந்த உணர்வினைக்கொண்ட சிறியம் யாம் உனது தோற்றம் தெளிந்திட முடியுமோ? அல்லது அது எங்களால் இயலுமோ? 95

முண்டக னொருவன் துஞ்ச முராரிபே ருருவாய் நேமிக்
கண்டுயி லகந்தை நீங்கக் கண்ணுதற் பகவ னெல்லா
வண்டமு மணிப்பூ ணர மாகவே யாங்கோர் மேனி
கொண்டன னென்னுந் தன்மை குமரநின் வடிவிற் கண்டேம்.

''தாமரை மலரில் இருக்கும் பிரமதேவன் ஒருவன் இறப்ப அப்போது விஷ்ணுபிரான் தான் ஓர் பெரிய வடிவைக்கொண்டு பாற்கடலில் இனி தனக்கு எதிராவார் ஆருமில்லை என அகந்தையுடன் யோக நித்திரை செய்தபோது] அவ்வாருன விஷ்ணுவின் அகந்தை நீங்கும் பொருட்டாக நெற்றிக் கண்ணுடைய சிவபிரான் எல்லா அண்டங்களும் தமது திருமேனியில் அணிந்த இரத்தின மாலைபோலத் தொங்கும்படியாக அங்கு ஒரு திருவுருவம் கொண்டார் என்று சொல்லப்படுவதும் கேட்டோமே ஒழிய அறிந்திலோம்; ஆனல் இன்று அத்தன்மையை குமரா! நினது வடிவிலே கண்டோம் நாம்; 96

நாரணன் மலரோன் பன்றுள் நாடவுந் தெரிவின் ருகிப்
பேரழல் உருவாய் நின்ற பிரான்திரு வடிவே போலுன்
சீருரு வுற்ற தம்மா தெளிகிலர் அவரும் எந்தை
ஆரருள் எய்தின் நம்போல் அடிமுடி தெரிந்தி டாரே.

விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் பலநாளாகப் பன்றி வடிவாயும் அன்னப் பட்சி வடிவாயும் தேடிய வழியும் அறிதற்கு அரிதாகிப் பெரிய சோதிருபமாய் நின்ற சிவபிரானது திருவடிவத்தைப் போல ஐயனே முருகா உனது சீரும் சிறப்பும் பொருந்திய இந்த நாம் காணும் வடிவமும் உற்றது. ஆனல் அன்று அந்த பிரம விஷ்ணுக்கள் சிவபிரான் கொண்ட சோதி வடிவத்தை பூமியை இடந்தும் மேலே பறந்து நாடியும் தெளியாமல் போனார்கள். அவர்களும் அதை சிவபிரான் அருள் பெற்றிருந்தால் நாம் இன்று தேவரீரது அருளால் உமது இந்த சோதிவடிவத்தின் அடியையும், முடியையும் அறிந்த அதே தன்மைபோல அவர்களும் அறிந்திருப்பார்கள். 97

அரியொடு கமலத் தேவும் ஆடல்செய் தகிலந் தன்னே
டொருவரை யொருவர் நுங்கி உந்தியால் முகத்தால் நல்கி
இருவரு மிகலு மெல்லை எடுத்தபே ருருநீ கொண்ட
திருவுரு விதனுக் காற்றச் சிறியன போலு மன்றே

முன்னொரு நாள் விஷ்ணுமூர்த்தியும் தாமரை மலரில் இருக்கும் கடவுளான பிரமதேவரும் போர்செய்து அதிலே ஒருவரை ஒருவர் உலகத்துடன் விழுங்கி பின்னர் உந்திக் கமலத்தில் இருந்தும் முகத்திலிருந்தும் தோற்றுவித்தும் போர்புரிந்த காலத்து அவர்கள் ஒருவரை ஒருவர் உலகத்துடன் விழுங்குவதற்கு எடுத்த பெரிய அந்த உருவங்கள் தேவரீர் கொண்ட இந்தத் திரு உருவத்திற்கு மிகவும் சிறியதாயே இருக்கின்றது. 98

ஆகையால் எம்பி ரான்நீ அருவுரு வாகி நின்ற
ஏகநா யகனே யாகும் எமதுமா தவத்தால் எங்கள்
சோகமா னவற்றை நீக்கிச் சூர்முதல் தடிந்தே எம்மை
நாகமே லிருந்து மாற்றல் நண்ணினை குமர னேபோல்.

ஆகையால் எம்பிரான் நீ அருவாயும் உருவமாயும் அருவுருவமாயும், வடிவற்றதாயும் வடிவுள்ளதாயும் அருள் நிறைந்தாயும் நின்ற ஏகனுகிய முழுமுதற் கடவுளாகும். நாம் செய்த பெரிய தவத்தால் எங்கள் சோகம் துயரம் யாவற்றையும் நீக்கிச் சூரபன்மன் என்ற அசுரனைச் சங்காரம் செய்து மீண்டும் எம்மை தேவ உலகில் பெருவாழ்வுடன் வாழும்படி வைக்கும் தன்மையாக மணங்கமழும் தெய்வக் குழந்தையாக எமது முன் நண்ணினீர். 99

எவ்வுரு வினுக்கும் ஆங்கோ ரிடனதா யுற்ற உன்றன்
செவ்வுரு வதனைக் கண்டு சிறந்தனம் அறம்பா வத்தின்
அவ்வுரு வத்தின் துப்பும் அகலுதும் இன்னும் யாங்கள்
வெவ்வுரு வத்திற் செல்லேம் வீடுபே றடைது மன்றே

எல்லா உருவங்களும் எதில் இருந்து வெளித்தோன்றுவனவோ அந்த முதற் பொருளான தேவரீரது இந்த செம்மையான அழகுடன் நிறைந்த உருவம் இதனைக்கண்டு சிறந்துள்ளோம். புண்ணியம் பாவங்களுக்கேற்ப நாம் எடுத்துக்கொள்ளும் எமது உருவங்களின் தோஷங்களின் நின்றும் நீங்கியுள்ளோம். இன்னும் நாங்கள் இனிமேல் எம்மைத் துயரப்படுத்தும் பிறவியிற் செல்லோம். பேரானந்தம் விளையும் முத்தியிற் செல்வோம். 100

இனையன வழுத்திக் கூறி யிலங்கெழிற் குமர மூர்த்தி
தனதுபே ருருவை நோக்கிச் சதமகன் முதலா வுள்ளோர்
தினகரன் மலர்ச்சி கண்ட சில்லுணர் வுயிர்க ளென்ன
மனமிக வெருவக் கண்கள் அலமர மயங்கிச் சொல்வார்

இவ்வாறான தோத்திரங்களை கைகூப்பித் தொழுதவண்ணம் தேவர்கள் கூறி பேரொளியுடன் அழகு சொலிக்கும் வண்ணம் நிறைந்து அகிலம் எல்லாம் நிறைவாகி நின்ற குமரமூர்த்தியின் பேருருவத்தை நோக்கி இந்திரன் முதலாக உள்ளோர் யாவரும் சூரியபகவானுடைய உதயமலர்ச்சிலயக் கண்டு மகிழ்வாகின்ற சிற்றுணர்ச்சி கொண்ட பிராணிகளைப்போல கண்கள் ஒளியைக் கண்டு கண்கூசிச் சுழல்தலாலும் மனம் மிகவும் அச்சப்படுதலாலும் மயங்கியவாறு சொல்வார்கள். 101

எல்லையில் ஒளிபெற் றன்றால் எந்தைநின் னுருவம் இன்னும்
ஒல்லுவ தன்றால் காண ஒளியிழந் துலைந்த கண்கள்
அல்லதும் பெருமை நோக்கி அஞ்சுதும் அடியம் உய்யத்
தொல்லையின் உருவங் கொண்டு தோன்றி யேஅளித்தி யென்றார்

எந்தை பிரானே தேவரீரது உருவம் எல்லைகாண முடியாத ஒளி பெற்று விளங்குகிறது. ஆனமையால் இனிமேலும் சிறிதுபொழுது பார்த்து நிற்கமுடியாததாகின்றது. எமது கண்களும் ஒளி இழந்து உலைந்து போயின, அல்லாமலும் உமது வடிவத்தின் பெருமையைப் பார்க்கப் அஞ்சுகிறோம். ஆகவே அடியேங்கள் உய்யும்படியாக பழமையான உமது குழந்தை வடிவைக் கொண்டு தோன்றி எம்மைக் காத்தருள் புரிவீராக என எல்லாரும் தொழுது வேண்டினார்கள். 102

என்றிவை புகன்று வேண்ட எம்பிரான் அருளால் வான்போய்
நின்றபே ருருவந் தன்னை நீத்தறு முகத்தோ னாகித்
தொன்றுள வடிவத் தோடு தோன்றலுந் தொழுது போற்றிக்
குன்றிருஞ் சிறைகள் ஈர்ந்த கொற்றவன் கூற லுற்றான்

என்று இவைகளைச் செப்பி தொழுது வேண்டியருள அப்போது எமது பெருமான் அருளாலே ஆகாயப் பரவெளிகள் எல்லாம் நிறைவாகும்படி நீண்டுநின்ற காண்டற்கரிய சோதி வடிவத்தை நீக்கியருளி இப்போ ஆறுமுகமுடைய வராகிப் பழைமையான வடிவத்தோடும் தோன்றுதலும் எல்லாத் தேவரும் அது கண்டு கைகூப்பித் தொழுது போற்றி செய்து நிற்றலும் அவ்வேளை மேரு மலையின் சிறகுகளை அரிந்து வெற்றிகொண்ட இந்திரதேவன் எம்பிரானை நோக்கி சொல்வானாயினன். 103

தொன்னிலை தவாது வைகுஞ் சூரனே முதா வுள்ள
ஒன்னலர் உயிரை மாற்றி உம்பரும் யானும் பாங்கர்
மன்னிநின் றேவல் செய்ய வானுயர் துறக்கம் நண்ணி
என்னர சியற்றி எந்தாய் இருத்திஎன் குறையீ தென்றான்

தங்களது பழைமையான நிலையை இன்னமும் தளராது கொடுமையையே செய்யும் சூரன் முதலாக உள்ள அசுரர்களின் உயிரை மாற்றி தேவர்களும் யானும் உமக்குப் பக்கராக அமர்ந்து நிற்றலும் உமது ஏவல் செய்ய எம்பிரானே தேவரீர் வான உலகங்களில் உயர்வான தேவ உலகை நீர் சேர்ந்து எனது அரசபதவியை நீர் ஏற்று ஆண்டுகொண்டு இனிது வீற்றிருப்பீராக. அடியேன் உம்மை இதைப் புரியுமாறு வேண்டுகின்றேன் என இந்திரன் வேண்டினன். 104

இகமோடு பரமும் வீடும் எத்தினர்க் குலப்பு றுமல்
அகனம ரருளால் நல்கும் அறுமுகத் தவற்குத் தன்சீர்
மகபதி யளிப்பான் சொற்ற வாசகம், சுடரோன் றங்கிப்
பகவனுக் கொருவன் நல்கப் பராவிய போலு மாதோ.

இவ்வுலக வாழ்வோடு மேலாகிய உயர்வுடை முத்தி இன்பத்தையும் தம்மை வணங்குவார்க்கு எக்காலமும் கெடுதலாகா வகை திருஉள்ளது நிரம்பிய தமது அருளால் அருள் செய்யும் ஆறுமுகமுடைய பெருமானுக்கு தனது சீர் என்னும் அரசபதவியைப் பெற்றுக்கொள்ளும்படியாக இந்திரன் கொடுப்பேன் எனப் புகன்ற தன்மை எப்படிப்போலும் எனில் அக்கினிதேவனுக்கு ஒரு விளக்கை நான் தருவேன் எனச்சொல்லி ஒருவன் அக்கினிக் கடவுளை வணக்கம் செய்வது போலாயிற்று. 105

வானவர் கோனை நோக்கி வறிதுற நகைத்துச் செவ்வேள்
நீநமக் களித்த தொல்சீர் நினக்குநாம் அளித்தும் நீவிர்
சேனைக ளாக நாமே சேனையந் தலைவ னாகித்
தானவர் கிளையை யெல்லாம் வீட்டுதும் தளரேல் என்றான்

இவ்வாறு சொல்லி வணங்கிய இந்திரதேவனை எம்பிரான் நோக்கி சிறியதோர் நகைசெய்து சொல்லியருள்வார், இந்திரதேவனே! நீ எனக்குத் தருவேன் என்று கொடுத்த உன் சீரான அரசுரிமையை நான் இப்போ உனக்குத் தருகின்றேன். நீங்கள் யாவரும் எமக்குச் சேனைகளாகவும், நானே சேனைக்குத் தலைவனாகவும் சென்று அசுரர் கூட்டத்தை எல்லாம் முடிவு செய்வோம். யாதொன்றும் இனியும் எண்ணி நெஞ்சம் தளரேல் என எமது குமரக்கடவுள் கிருபை செய்தார். 106

கோடலங் கண்ணி வேய்ந்த குமரவேள் இனைய கூற
ஆடியல் கடவுள் வெள்ளை அடற்களிற் றண்ணல் கேளா
வீடுற அவுண ரெல்லாம் வியன்முடி திருவி னோடுஞ்
சூடின னென்னப் போற்றிச் சுரரொடு மகிழ்ச்சி கொண்டான்

செங்காந்தள் பூமாலையை திருமுடியிற் சூடிய எமது குமரப்பெருமான் இனைய திருவார்த்தையைக் கூற அதனை போரில் வேகமுடன் ஆடல்புரியும் வலியுடைய ஐராவத யானையை வாகனமாக உடைய இந்திரன் கேட்ட உடன் அவன் அசுரர் எல்லாரும் அழியத் தனது முடி, அரசபதவி, பெருஞ்செல்வம் அனைத்தையும் பெற்றுள்ளான் போன்று மகிழ்வாகி, எம்பெரு முதல்வனைப் போற்றி செய்து தேவர்கள் அனைவரும் மகிழ்ந்து ஆனந்தமுற தானும் மகிழ்வாகினன். 107

அறுமுகத் தேவை நோக்கி அமரர்கோன் இந்த வண்டத்
துறைதரு வரைகள் நேமி உலகுயிர் பிறவும் நின்னால்
முறைபிறழ்ந் தனவால் இந்நாள் முன்புபோல் அவற்றை யெல்லாம்
நிறுவுதி யென்ன லோடும் நகைத்திவை நிகழ்த்த லுற்றான்

ஆறுமுகமுடைய தேவனை நோக்கித் தேவர்கட்கு அரசனான இந்திரன் சொல்வான் ஐயனே இந்த அண்டத்தில் இருக்கின்ற மலைகள், கடல்கள், உலகங்கள், உயிர்கள் இன்னும் பிறபொருள்கள் யாவுமே இந்நாள் தேவரீரால் முறை தவறி இருக்கும்படியாகச் செய்யப்பெற்றுள்ளன. ஆகையால் அவற்றையெல்லாம் பழைய படி முன்புபோல அமைந்து விளங்கும்படி ஆக்கித் தரல் வேண்டும் என்னலும் எம்பிரான் அதனைக் கேட்டுச் சிரித்துவிட்டு ஒரு வார்த்தை நிகழ்த்தலுற்றார் 108

இன்னதோ ரண்டந் தன்னில் எம்மில்வே றுற்ற வெல்லாந்
தொன்னெறி யாகஎன்றோர் தூமொழி குமரன் கூற
முன்னுறு பெற்றித் தான முறையிறந் திருந்த தெல்லாம்
அந்நிலை எவரும் நோக்கி அற்புத மடைந்து நின்றார்

''இன்னதாகிய இந்த அண்டந்தன்னிலே எம்மால் வேறுபாடுற்ற எல்லா உலகும் பொருளும் தொன்மைபோல ஆகட்டும்'' என்ற ஓர் தூய மொழியைக் குமரன் கூறியருள அந்நேரத்து எம்பிரானுடைய திருவிளையாடலால் முறை மாறி இருந்த பொருட்கள் உயிர்கள் யாவும் பழைய நிலையிலான முன்னுற்ற நிலையில் உடன் பொருந்தி நின்றன. இந்த நன்நிலையைக் கண்ட எல்லாத் தேவரும் அற்புதமடைந்து நின்றார். 109

நிற்கு மெல்லையின் நிலத்திடை யாகிப்
பொற்கெ னத்திகழ் பொருப்பிடை மேவுஞ்
சிற்கு ணக்குரிசில் சேவடி தாழுஉச்
சொற்க நாடுள சுரேசன் உரைப்பான்

எல்லாப் பொருளும் பழைய நிலை அடைந்த தன்மையை நோக்கித் தேவர்கள் யாவரும் அற்புதமும் அதிசயமும் அடைந்து நிற்கும் எல்லையில், நிலத்தின் கண் பொருந்திப் பொன்மயமான நிலையில் விளங்கும் மேருமலையில் மேவி நின்றருளிய ஞான சொரூபரான எமது முருகக் கடவுளின் செம்மை தரும் ஒளிநிறைந்த திருவடி மலர்களில் தாழ்ந்து வணங்கி சொர்க்க நாட்டிற்கு அதிபனான இந்திரதேவன் சொல்வான். 110

ஆண்ட கைப்பகவ ஆரண மெய்ந்நூல்
பூண்ட நின்னடிகள் பூசனை யாற்ற
வேண்டு கின்றும்வினை யேம்அது செய்ய
ஈண்டு நின்னருளை ஈகுதி யென்றான்

ஆண்டகைமையுடன் விளங்கும் பகவானே! சர்வவல்லபம் பொருந்தியவரே வேதங்களான உண்மை நூல்கள் தாங்கியும் தேடியும் துதித்தும் நிற்கும் உமது திருவடிகளை பூசனை செய்ய அடியேங்கள் வேண்டுகின்றோம். வினையுடையோம் யாங்களானமையால் அவ்வணம் பூசை ஆற்ற தகுதி இல்லேம். எனினும் அதைச் செய்ய ஈண்டு தேவரீரது அருளைத் தந்தருள்வீராக எனப் பிரார்த்தித்தான். 111

என்ன லுங்குகன் இசைந்து நடந்தே
பொன்னி னுலுயர் பொருப்பினை நீங்கித்
தன்ன தொண்கயிலை சார்ந்திடு ஞாங்கர்
மன்னி நின்றதொரு மால்வரை புக்கான்

என்று இந்திரன் வேண்டலும் அதனைக்கேட்ட எம்பெருமான் இசைவுகொண்டு நடந்தருளிச் சென்று பொன்னினால் உயர்ந்து மேன்மையுடன் விளங்கும் மேரு மலையை விட்டு நீங்கி தனது திருக்கைலாய மலையை விட்டு நீங்கி தனது திருக் கைலாய மலையின் பக்கராக பொருந்தி நிற்கின்ற ஓர் பெரியமலையின் கண் சென்று சேர்ந்தருளினார் உயர்வான எண்ணங்கொள்ளும் உத்தமர் தம் உளங்கோயில் கொண்ட குமரன். 112

குன்றி ருஞ்சிறை குறைத்தவன் ஏனோர்
ஒன்றி யேதொழு துவப்புள மெய்தி
என்றும் நல்லிளைய னாகிய எங்கோன்
பின்றொ டர்ந்தனர் பிறங்கலில் வந்தார்

அவ்வேளை மேரு மலையில் பெருஞ் சிறகுகளை அறுத்துக் குறைத்த இந்திரதேவன் ஏனைய தேவர்கள் எல்லாரும் கூடி எம்பிரான் தங்கள் வேண்டுகோட்கு இசைந்து புறப்பட்டதை நோக்கி மகிழ்ந்து கைகூப்பித் தொழுது எஞ்ஞான்றும் இளமைக் கோலத்துடன் பொலிந்து விளங்கும் எங்கள் தலைவனாகிய முருகப்பெருமானின் பின்னாகத் தொடர்ந்து தாமும் எங்கள் ஐயன் சென்று சேர்ந்தருளிய மலை இடத்து வந்தார். 113

சூரல் பம்புதுறு கல்முழை கொண்ட
சாரல் வெற்பினிடை சண்முகன் மேவ
ஆரும் விண்ணவர் அவன்கழல் தன்னைச்
சீரி தர்ச்சனை செயற்கு முயன்றார்

பிரம்புகள் படர்ந்துள்ள அடர்ந்த சிறு கற்பாறைகளுடன் பொருந்தி விளங்கும் சாரலை உடைய அம்மலையினிடத்துச் சென்றருளி ஆறுமுகம் உடைய ஐயன் வீற்றிருத்தலும் அப்போது அவரைப் பின்தொடர்ந்து சென்ற தேவர்கள் அனைவரும் அதனைக் கண்டு ஐயர்பெருமானுடைய சேவடிகளை சீராக அர்ச்சனை செய்வதற்கு முயற்சிகளை மேற்கொண்டார்கள். 114

அந்த வேலையம ரர்க்கிறை தங்கண்
முந்து கம்மியனை முன்னுற அன்னான்
வந்து கைதொழலும் மந்திர மொன்று
நந்த மாநகரின் நல்கிவ ணென்றான்

அவ்வாறு எல்லாரும் முற்படுகின்ற நேரத்து தேவர்கட்கு அரசனான இந்திரன் தங்களுக்கெல்லாம் மிக மூற்பட்ட தேவதச்சனை அங்கு வரும்படி நினைத்தான். இந்திரன் நினைந்த உடன் தேவதச்சன் அதை தானும் உணர்ந்து திடீரென வெளிப்பட்டு வந்து இந்திரதேவனை முன்னின்று கைதொழுது வணங்குதலும் அப்போது இந்திரன் தேவதச்சனை நோக்கி நீ இப்போது இவ்விடத்து மிக அழகிய தேவ சபை ஒன்றை எங்களது தேவ உலக நகரம் போலும் வடிவுபெற அமைப்பாயாக என்றான் இந்திரன். 115

அருக்கர் தந்தொகை அனைத்தையு மொன்றா
உருக்கி யாற்றியென ஒண்மணி தன்னால்
திருக்கி ளர்ந்துலவு செய்யதொர் கோயில்
பொருக்கெ னப்புனைவர் கோன்புரி குற்றான்

இந்திரதேவன் கூறிய வார்த்தை கேட்டுப் பெரிதும் மகிழ்வோடும் தேவதச்சன் உடன் அவ்விடத்து ஓர் அழகிய சபையைச் செய்துமுடிக்கின்றான். எவ்வாறு எனில் சூரியர் இங்குள்ள அண்டங்களில் எவ்வளவு பேர் உண்டோ அனைவரையும் ஒன்றாகச் சேர்த்து உருக்கி வார்த்துத்தான் இந்தத் தெய்வசபையை எமது பகவான் அமர்வதற்கு செய்தான் எனும்படியாகப் பிரகாசத்துடன் விளங்கும் இரத்தினங்களினால் எல்லாச் சிறப்பும் விளங்கும் அழகிய பெருமை வாய்ந்த கோயில் ஒன்றினை அதிவிரைவாக சிற்பம்செய்யும் எல்லார்க்கும் அதிபனும் தலைவனுமான தேவதச்சன் செய்து முடித்தான். 116

குடங்கர் போல்மகு டங்கெழு வுற்ற
இடங்கொள் கோபுர விருக்கையின் நாப்பண்
கடங்க லுழ்ந்திடு கரிக்குரு குண்ணும்
மடங்கல் கொண்டதோர் மணித்தவி சீந்தான்

குடங்களைப் போல சிகரங்கள் செறியப்பெற்ற விசாலமான கோபுரங்கள் பொருந்திய அழகிய இந்த இரத்தினக் கோயில் இடத்து நடுவணாக எமது பெருமான் எழுந்தருளி இருப்பதற்கெனப் பொருந்தி அமையும்படி மதம் பொழியும் யானையின் மீது பாய்ந்து அதன் தலையில் உள்ள மூளையை உண்ணுகின்ற சிங்கங்கள் சுமந்து நிற்கின்ற அழகிய ஒளிபொருந்திய ஓர் சிம்மாசனத்தை ஆக்கி வைத்தான் தேவதச்சன். 117

ஈந்த வெல்லைதனில் இந்திரன் ஏவப்
போந்து வானெறி புகுந்திடு தூநீர்
சாந்த மாமலர் தழற்புகை யாதி
ஆய்ந்து தந்தனர்கள் அண்டர்கள் பல்லோர்

இவ்வாறு மந்திர வடிவான கோயிலும் சபையும் நடுவே ஆசனமும் அமைந்த பின் இந்திரன் உடனே அங்கு இருந்த தேவர்களை பார்த்து நீங்கள் சென்று எம்பிரானுக்கு அபிஷேகம் செய்வதற்கு வேண்டி நீர் அணிவதற்கு ஆடை, பூக்கள் தூபம் தீபம் இவைகளைக் கொண்டு வாருங்கள் என அவர்களைச் செலுத்தலும் அந்நேரம் அவர்கள் யாவரும் பல இடமும் சென்று ஆகாய கங்கையைச் சேர்ந்து அதன் தூய நீரும் வாசனை உடைய சந்தனமும் அழகிய மலர்களும் தீபமும் தூபமும் ஆதியன பூசனைக்குரிய பொருள் யாவும் ஆராய்ந்து விசேடமாகத் தேடி அங்கு கொணர்ந்தார்கள். 118

அன்ன காலையில் அண்டர்கள் மேலையோன்
சென்னி யாறுடைத் தேவனை வந்தியா
உன்ன தாளருச் சித்தியா முய்ந்திட
இந்நி கேதனம் ஏகுதி நீயென்றான்

அவ்வாறாகிய சமயத்தில் தேவர்கள் யாவரும் தலைவனான இந்திரனும் சென்று ஆறுமுகமுடைய பெருமானை வந்தித்து வணங்கி சொல்வார், ஐயனே தேவரீரது திருவடிகளை அருச்சனை புரிந்து அடியேங்கள் யாரும் உய்ந்திடும்படியாக இப்போது தேவரீரது இந்தக் கோயில் அமைந்த இரத்தின சிம்மாசனத்து எழுந்தருளி இருப்பீராக என வேண்டினார்கள் எங்கள் கடவுளை. 119

கூற்ற மன்னதுட் கொண்டுவிண் ணோரெலாம்
போற்ற மந்திரம் புக்கு நனந்தலை
ஏற்ற ரித்தொகை ஏந்தொழிற் பீடமேல்
வீற்றி ருந்தனன் வேதத்தின் மேலையோன்

இவ்வாறான தேவர்கள் வேண்டுதல் வார்த்தையை எம்பெருமான் உட்கொண்டு உடன் தேவர்கள் யாரும் சூழ்ந்து போற்றித் தோத்திரம் செய்ய எழுந்தருளிச் சென்று தெய்வசபையில் புகுந்து அதன் நடுவே விளங்கும் ஆண்சிங்கங்களால் சுமக்கப்பெற்று விளங்கும் அழகிய சிம்மாசனத்தின் மீது விளங்கும் பீடத்தின் மேல் வீற்றிருந்தருளினான் எல்லா வேதங்களுக்கும் எட்டொணாத மேலைப் பொருளான ஆறுமுகப்பெருமான். 120

ஆன காலை அமரர்கள் வாசவன்
ஞான நாயக நாங்கள் உனக்கொரு
தானை யாகுந் தலைவனை நீயெனு
வான நீத்தத்து மஞ்சனம் ஆட்டினர்

அவ்வாறான நேரத்து தேவர்கள் இந்திரன் யாவரும் சிம்மாசனத்து எழுந்தருளிய எம்பிரானைச் சூழ்ந்து நின்று ஞானநாயகனே நாங்கள் உனக்கோரு சேனையாயினும் தேவா நீயே தலைவனுவாய் எனும் மந்திர பதங்களைச் சொன்னவாறு ஆகாய கங்கையில் தாங்கள் பெற்ற நீரினை பொற்குடங்களில் எடுத்து எம்பிரானுக்கு அபிஷகம் செய்து திருமஞ்சனமாட்டினர்கள். 121

நொதுமல் பெற்றிடு நுண்டுகில் சூழ்ந்தனர்
முதிய சந்த முதலமட் டித்தனர்
கதிரும் நன்பொற் கலன்வகை சாத்தினர்
மதும லர்த்தொகை மாலிகை சூட்டினர்

பின்பு இயற்கையான நிறம் கொண்டதாயும், மிருதுவானதும் ஆன அழகிய பட்டாடையை எம்பிரானுக்கு சூழ்ந்து உடுத்தினர்கள். மிகவும் வாசனை கொண்ட சந்தனம் முதல் வாசனைக் கலவையை அப்பினர்கள். மிக ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் ஆபரணங்களை எம்பிராற்கு அணிந்தார்கள். தேன் சொட்டும் பூக்களினல் ஆக்கப்பெற்ற பூமாலைகளை எம்பிரானுக்கு சூட்டி அணிந்தார்கள் 122

ஐவ கைப்படும் ஆவியும் பாளிதம்
மெய்வி ளக்கமும் வேறுள பான்மையும்
எவ்வெ வர்க்கும் இறைவற்கு நல்கியே
செவ்வி தர்ச்சனை செய்தன ரென்பவே

சந்தனம், அகில், பச்சைக்கர்ப்பூரம், குந்துருக்கம், குங்குலியம் எனும் ஐந்து பொருட்களால் ஆக்கப்பட்ட தூபமும் உண்மை ஒளியுடன் விளங்கும் தீபத்தையும் தமது கரங்களில் ஏந்திக் காண்பித்தும் பின்னர் உள்ள உபசாரமான பொருள்களை ஏந்திக் காண்பித்தும் நைவேத்தியமான அமிர்தத்தை எவ்வெவர்க்கும் இறைவனை எமது ஆறுமுகப் பெருமானுக்கு சமர்ப்பித்து செம்மையான முறையில் அர்ச்சனை செய்தார்கள் 123

புரந்த ரன்முதற் புங்கவர் தம்முளத்
தரந்தை நீங்க அருச்சனை செய்துபின்
பரிந்து தாழ்ந்து பரவலும் ஆயிடைக்
கரந்து வள்ளல் கயிலையிற் போயினன்

இந்திரன் முதல் தேவர்கள் யாவரும் தமது உள்ளத்துள்ள கவலையாவும் நீங்கும்படியாக சர்வேஸ்வரனை ஆறுமுகப்பிரானை அருச்சனை இவ்வாறு மகிழ்வோடும் புரிந்து எம்பிரான் திருமுன்பு தாழ்ந்து தாங்கள் யாவரும் வணக்கஞ் செய்து முன்னின்று தோத்திரம் பல சொல்லித் துதித்து நிற்றலும் அந்நேரத்து அருள் வள்ளலான எம்பிரான் அவ்விடத்துத் தான் மறைந்தருளி நீங்கி திருக்கைலாய மலையிற் போயினர் 124

வெற்பின் மிக்குயர் வெள்ளியம் பொற்றையில்
சிற்ப ரன்மறைந் தேகலுந் தேவரும்
பொற்பின் மேதகு பொன்னகர் அண்ணலும்
அற்பு தத்துடன் அவ்வரை நீங்கினர்

மலைகளில் எல்லாம் மிக உயர்ந்த வெள்ளியாலான திருக்கைலாய மலையில் எங்கள் ஆறுமுகப் பெருமானை ஞானமுதல்வர் மறைந்து செல்லும் அதனை அங்கு நாடிக் கண்ட தேவர்களும் தேவர் தலைவனும் சொர்க்கலோக வாசியான இந்திரனும் அற்புதநிலை கொண்டு அதிசயமாகி எம்பிரான் அருள் நிலை உணர்ந்து போற்றி அங்கு எம்பெருமானைப் பூசித்த அம் மலையில் நின்றும் நீங்கி அப்பால் சென்றார்கள். 125

ஈசன் மைந்தன் இளையன் இமையவர்
பூசை செய்யப் பொருந்தலின் அவ்வரை
மாசில் கந்த வரையென யாவரும்
பேச ஆங்கொர் பெயரினைப் பெற்றதே

சிவபிரானது இளைய திருக்குமாரரான முருகக்கடவுளை தேவர்களும் இந்திரனும் அன்பால நிறைவாகி மகிழ்வுடன் பூசை செய்யும்படியாகப் பொருத்தமுடையதாய் இருந்த இந்த மலையானது எக்குறையும் இல்லாது விளங்கும் கந்தவரை என எல்லாராலும் பேசப்பட்டு விளங்கும்படியான ஓர் சிறந்த பெயரைப் பெற்றுக்கொண்டது. ஆறுமுகப்பிரான் முதன் முதலாக தேவர் பூசை ஏற்க தாமே விரும்பிச் சென்று இருந்த காரணத்தால் கந்தமலை எனும் பேர் பெற்றது 129

ஆன கந்த வடுக்கலைத் தீர்ந்துபோய்
வான மன்னன் மனோவதி நண்ணினன்
ஏனை வானவர் யாவரும் அவ்வவர்
தான மெய்தனர் தொன்மையில் தங்கினர்

அவ்வாறான சிறப்புடைய கந்த மலையை விட்டு நீங்கிச் சென்று தேவர்கட்கு அரசனான இந்திரன் மகாமேரு மலையில் உள்ள மனோவதி என்னும் நகரை அடைந்தான். இப்பால் அங்கு அவனுடன் நின்ற மற்றைய கடவுளார் தேவர் யாவரும் தங்கள் இருப்பிடங்களான உலகங்கட்கு சென்றார்கள். ஆங்காங்கு பழைமை போலத்தங்கிதங்கள் கடமைகளைச் செய்வாராயினர். 127

உயவல் ஊர்திகொண் டொய்யென முன்னரே
கயிலை யங்கிரி ஏகிய கந்தவேள்
பயிலும் வீரரும் பாரிட மள்ளரும்
அயலின் மேவர ஆயிடை வைகினன்

இப்பால் முன்பு தமது சிந்தையையே வாகனமாகக் கொண்டு திடீரென திருக்கைலாய மலையில் இடத்துச் சென்றருளிய அருள் செல்வரான முருகக் கடவுள் அங்கு தம்முடன் பயின்று அன்புடன் தம்மைப் பேணும் வீரவாகு தேவர் முதலான இலக்கத்து ஒன்பது வீரரும் பூதகணங்களின் சேனாதிபதிகளும் பக்கராகப் பொருந்தி சேவகம் செய்ய எம்பிரான் திருக்கைலாய மலைமேல் உலகுய்ய வீற்றிருந்தருளினர் 128

திருவிளையாட்டுப்படலம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் 1179

339

# 15. தகரேறு படலம்

சூரன்முத லோருயிர் தொலைக்கவரு செவ்வேள்
அருமகிழ் வெள்ளியச லத்தின் அமர் போழ்தின்
மேருவி லுடைப்பரன் விரும்பஅகி லத்தே
நாரதனெர் வேள்வியை நடாத்தியிட லுற்ருன்.

சூரபன்மன் முதலாகச் சொல்லப்பெறும் அசுரர்கள் உயிர் யாவையும் தொலைக்கும்படி தோன்றியருளிய முருகக்கடவுள் எவரும் உள்ளம் மகிழ்ந்து வணங்கும் வெள்ளி மயமான திருக்கைலாய மலையில் அமர்ந்தருளும் இக்காலத்திற் பூவுலகிலே நாரத முனிவர் ஒரு யாகத்தை நடாத்தி வருவாராயினர். 1

மாமுனி வருஞ்சுரரும் மாநில வரைப்பில்
தோமறு தவத்தினுயர் தொல்லை மறையோரும்
ஏமமொடு சூழ்தர இயற்றிய மகத்தில்
தீமிசை யெழுந்ததொரு செக்கர்புரை செச்சை.

பெருமை வாய்ந்த தபோதனர்களும், தேவர்களும், இப்பூமியில் வாழும் குற்றம் நீங்கிய தவத்தால் உயர்வான கொள்கை உடைய பழைமையான வேதம் ஓதும் பிராமணர்களுமாகிய எல்லாரும் மகிழ்வுடன் சூழ்ந்திருப்ப நாரத முனிவன் இயற்றிய இந்த யாகத்தில் சுவாலித்து எழுந்த ஓம அக்கினியின் மேலாக அங்கு ஒரு சிவந்த நிறமுடைய ஆட்டுக்கடா தோன்றியது. 2

அங்கிதனில் வந்ததகர் ஆற்றுமகந் தன்னில்
நங்களின மேபலவும் நாளுமடு கின்ருர்
இங்கிவரை யான்அடுவன் என்றிசைவு கொண்டே
வெங்கனலை யேந்துபரி மீதெழுதல் போலும்.

யாக நெருப்பிலே தோன்றிய ஆட்டுக்கடாவானது நினைத்தது, ''இந்த உலகிலே இப்படியாகச் செய்யப்படும் யாகங்களில் எங்கள் இனமாகிய ஆடுகளையே வெட்டிப் பலியிட்டுக் கொலை புரிகின்ருர்கள். ஆகவே இப்படி எமது இனத்தவரைக் கொலை செய்யும் இவர்களை நான் பழிக்குப் பழி வாங்கிக் கொலை புரிவேன்'' என நினைந்து அங்கு கூடியிருந்து யாகம் செய்த அனைவரையும் கொல்வதற்குத் துணிந்து புறப்பட்டது. அது எதுபோலும் எனில் அக்கினிக் கடவுளைச் சுமக்கின்ற ஆட்டுக்கடா வாகனம் தான் சுமக்கின்ற அக்கினியின் மேலே தோன்றி எழுதல்போல அமைந்தது.

மாருதமும் ஊழிதனில் வன்னியும் விசும்பில்
பேருமுரு மேறுமொரு பேருருவு கொண்டே
ஆருவது போல்விரைவும் அத்தொளியும் ஆர்ப்புஞ்
சேரவெழும் மேடம்அடு செய்கைநினைந் தன்றே.

ஊழிக்காற்றும், பிரளய அழிவு காலத்தில் தோன்றும் வடவாமுகாக்கினியும், மேகத்திற் தோன்றும் இடியும் ஆகிய இவைகள் மூன்றும் ஒரு பெரிய வடிவுகொண்டு விரைவுடனும், ஆர்ப்புடனும், சிவந்த நிறத்துடனும் வருவதுபோல இந்த ஆட்டுக்கடாவும் சிவந்த நிறத்துடனும், வேகத்துடனும், பேரொலியான கனைப்புடனும் எல்லாரையும் கொலை புரியும் செய்கையை நினைந்து வந்தது. 4

கல்லென மணித்தொகை களத்தினிடை தூங்கச்
சில்லரிபெய் கிங்கிணி சிலம்படி புலம்ப
வல்லைவரு கின்றதகர் கண்டுமகத் துள்ளோர்
எல்லவரும் அச்சமொ டிரிந்தனர்கள் அன்றே.

சிறுமணிச் சதங்கைகள் இதன் கழுத்திற் கட்டப்பட்டுத் தூங்கும் மணி, ஆட்டுக் கடா புறப்பட்டு வரும் வேகத்தில் 'கல்' என்று ஒலிப்புண்டாக்கும்படியாக, சில பருக்கை மணிகள் உள்ளிடப்பெற்று இதன் காலில் உள்ள கிண்கிணிச் சிலம்பு ஒலிக்க விரைவாக எல்லாரையும் கொல்லும் நோக்கத்துடன் வரும் அதன் செயலைக் கண்டு யாகசாலையிலிருந்த அனைவரும் பெரும் பயத்துடன் எழுந்து ஓடினார்கள். 5

இரிந்தவர்கள் யாவரையும் இப்புவியும் வானுந்
துரந்துசிலர் வீழ்ந்துதொலை வாகநனி தாக்கிப்
பரந்ததரை மால்வரை பராகமெழ ஓடித்
திரிந்துயிர் வருந்தஅடல் செய்தது செயிர்த்தே.

அவ்வாறு அஞ்சிப் பயந்து தாம் செய்த யாகத்தையும் விடுத்து ஓடிய இவர்கள் யாவரையும் இந்தப் பூமியும், ஆகாயமும் வரை கலைத்துச் சென்று சிலர் வீழ்ந்து தொலைவாகும்படியாக விரைவாக அவர்களைத் தாக்கிக் குத்திக் கொன்று பரந்த இந்தப் பூமி, மலைகள் யாவும் துகளெழும்படி ஓடித் திரிந்து உயிர்கள் யாவும் வருந்தும்படி இந்த ஆட்டுக்கடா திரிந்தது. 6

எட்டுள திசைக்கரி இரிந்தலறி யேங்கக்
கிட்டியெதிர் தாக்குமதி கேழ்கிளரும் மானத்
தட்டிரவி தேரொடு தகர்ந்துமுரி வாக
முட்டும்அவர் தம்பரியை மொய்ம்பினொடு பாயும்.

எட்டுத் திக்குகளிலும் உள்ள யானைகள் இந்த ஆட்டுக் கடாவின் வேகங் கண்டு அலறி ஏங்கும்படியாக அந்த யானைகளை நெருங்கி இந்த ஆட்டுக்கடா தாக்கும். சந்திரன் செல்லும் விமானத்தை முட்டி அது முரிய இடிக்கும். சூரிய தேவனின் பெரும் தட்டினை உடைய தேரை இடித்துத் தகர்த்தெறியும். இத்தேரிற் பூட்டிய குதிரைகளின்மீது பாய்ந்து அவைகளை இடிக்கும். 7

இனையவகை யால்தகரி யாண்டுமுல வுற்றே
சினமொடுயிர் கட்கிறுதி செய்துபெயர் காலை
முனிவர்களும் நாரதனும் மொய்ம்புமிகு வானோர்
அனைவர்களும் ஓடினர் அருங்கயிலை புக்கார்.

இனைய வகையால் ஆட்டுக்கடாவானது எல்லா உலகமும் உலாவுற்றே பெருங் கோபத்துடன் உலகெங்குமுள்ள உயிர்கட்கு முடிவைச் செய்து திரியும் காலத்து யாகம் புரிந்த முனிவர்களும் நாரதனும் வலிமைகொண்ட தேவர்களும் மற்றும் அனைவரும் ஓடிச்சென்று யாவர்க்கும் தஞ்சமானதும் ஆனால் செல்லுவதற்கு அரிதானதுமான திருக்கைலாய மலையில் தஞ்சம் புகுந்தனர். 8

ஊறுபுக அன்னவர் உலைந்துகயி லைக்கண்
ஏறிவரு காலையில் இலக்கமுட னென்பான்
வீறுதிறல் வீரரொடு மேவியுல வுற்றே
ஆறுமுக வண்ணல்விளை யாடலது கண்டார்.

தமது மேனியில் ஆட்டுக்கடாவாற் தாக்கப்பட்ட காயங்களுடன் அவர்கள் யாவருங் கைலைமலையைச் சேர்ந்து ஏறிவருங்காலையில் இலக்கம் வீரருடன் வீரவாகு முதல் ஒன்பது பேர் சூழ்ந்து உடன் மேவி உலாவுற எங்கள் முதல்வரான ஆறுமுகப் பெருமான் அருளுடன் விளையாடி மகிழ்கின்ற தன்மையை நாரத முனிவர் முதல் யாவருங் கண்டார். 9

ஈசனிடை நண்ணுகிலம் ஈண்டுகும ரேசன்
நேசமொடு நந்துயரம் நீக்கவெதிர் வந்தான்
ஆசிறுவன் அல்லன்இவன் அண்டர்பல ரோடும்
வாசவனை வென்றுயிரை மாற்றியெழு வித்தான்.

அப்போது அவர்கள் சொல்வார்கள், ''எம்மைக் கொலை செய்யும்படி தொடர்ந்து ஓடிவரும் ஆட்டுக்கடாவிடமிருந்து எம்மைக் காப்பதற்கு வேண்டிச் சிவபிரானிடம் செல்லவேண்டியதில்லை. திருவுளத்து நிறைவாகின்ற கருணையுடன் இவ்விடத்து எமது குமாரக் கடவுள் நமது துயரம் நீங்கும்படியாக எல்லாம் உணரும் உணர்வுடன் வந்துள்ளார். ஐயகோ! இவர் குழந்தை வடிவுடன் தோன்றினாலும் குழந்தை அல்லன். தேவர்கள் பலரோடும் இந்திரனை வெற்றிகொண்டு அவனது உயிரை மாய்த்து பின்னர் உயிர்பெற்றெழும்படி செய்த கருணை உடையவன்,'' 10

எங்குறை முடித்திடல் இவற்கெளிது நாமிப்
புங்கவனோ டுற்றது புகன்றிடுது மென்னாத்
தங்களில் உணர்ந்துசுரர் தாபதர்கள் யாரும்
அங்கவன்முன் ஏகினர் அருந்துதிகள் செய்தே.

''எங்களது துன்பத்தைத் தீர்த்து வைப்பது இங்கு முருகப்பிரானுக்கு இலகுவாகும் ஆனமையால் நாம் இவரோடு நமக்கு நேர்ந்துள்ள துன்பத்தைச் சொல்வோம்'' எனத் துணிந்து, உணர்வாகி நாரதன்முதல் முனிவர் தேவர் யாவரும் அங்கு அருள் முதலாகிய முருகக்கடவுள் முன்பாக மிகவும் அருமையான தோத்திரங்களைச் சொல்லித் துதித்தவாறு சென்றார்கள். 11

வந்துபுகழ் வானவரும் மாமுனிவர் தாமுந்
தந்திமுக வற்கிளவல் தன்னடி வணங்கக்
கந்தனவர் கொண்டதுயர் கண்டுமிக நொந்தீர்
நொந்தனிர் புகுந்தது நுவன்றிடுதி ரென்றான்.

இவ்வாறு வந்து தோத்திரம் சொல்லிப் புகழ்கின்ற நாரதன் முதல் முனிவரும் தேவர்கள் யாவரும் யானைமுகமுடைய விநாயகப் பெருமானுக்கு இளையவராகிய முருகப்பிரான் திருவடிமுன்பாக வணங்க அப்போது முருகப்பிரான் அவர்கள் கொண்ட துயரத்தைக்கண்டு கேட்கின்றார் ''நீங்கள் யாவரும் மிகவும் நொந்தீர்கள், உங்களுக்கு யாது நேர்ந்தது? அதனைச் சொல்வீராக'' என்றார். 12

கேட்டிஇளை யோய்மறை கிளத்தும்ஒரு வேள்வி
வேட்டனமி யாங்களது வேலையிடை தன்னில்
மாட்டுகன லூடொரு மறித்தகர் எழுந்தே
ஈட்டமுறும் எம்மையட எண்ணியதை யன்றே.

அப்போது அதனைக்கேட்ட நாரதன் முதல் முனிவர் யாவரும் சொல்வார்கள் ''குமரக்கடவுளே, கேட்டருளுக! நாங்கள் வேதங்களால் கூறப்படுகின்ற ஒரு யாகத்தைச் செய்தோம் அந்த யாகம் நடந்து கொண்டிருக்கும் நேரத்தில் எம்மால் வளர்க்கப்பெற்ற யாகநெருப்பில் ஓர் ஆட்டுக் கடா தோன்றி கூட்டமாக அங்கிருந்து யாகஞ் செய்த எங்களைக் கொல்லக் கருதியது. 13

ஆடெழு கிளர்ச்சியை அறிந்துமகம் விட்டே
ஓடியிவ ணுற்றனம் உருத்தது துரந்தே
சாடியது சிற்சிலவர் தம்மையத ஞலே
வீடியத ளப்பிலுயிர் விண்ணிஞெடு மண்மேல்.

அந்த ஆட்டுக்கடா எழுகின்ற வேக எழுச்சியை நாங்கள் உணர்ந்து யாகத்தை குறையிலே விட்டுவிட்டு ஓடி இவ்விடத்து அடைக்கலமாக வந்தோம். ஆனல் அந்த ஆட்டுக்கடா ஓடுகின்ற எம்மைக் கலைத்துத் தாக்கியது. சிற்சிலர் தம்மைக் கொன்றும் விட்டது. அதனுலே இந்தப் பூமி மேலும் தேவ உலகிலும் பல உயிர்கள் இறந்துபோயின.'' 14

நீலவிட மன்றிது நிறங்குலவு செக்கர்க்
கோலவிட மேயுருவு கொண்டதய மேபோல்
ஓலமிட எங்குமுல வுற்றதுயி ரெல்லாங்
காலமுடி வெய்துமொரு கன்னல்முடி முன்னம்.

''பெருமானே! இந்த ஆட்டுக்கடாவின் தன்மையைக் கூறினுல் இது கருமை நிறம் கொண்ட நஞ்சே சிவந்த நிறமார்ந்த வடிவத்தினை உடைய ஆடுபோல் வடிவு கொண்டு வந்து கண்டோர் எல்லாம் ஓலம் இட்டுக் கதறும்படி எவ்விடத்திலும் உலாவியது. எல்லோரும் பயத்தாற் துன்புறுகிறுர். இந்த ஆட்டுக்கடா இன்னும் உலாவுமேல் ஜீவன்கள் எல்லாம் ஒரு நாழிகை நேரம் முடிவதற்கு முன்பாக அழிந்து போகும்.'' 15

சீற்றமொ டுயிர்க்குறுதி செய்துலவு மேடத்
தாற்றலை அடக்கியெம தச்சமும் அகற்றி
ஏற்றகுறை வேள்வியையும் ஈறுபுரி வித்தே
போற்றுதி யெனத் தொழுது போற்றிசெயும் வேலை.

''ஐயனே, அறுமுகவா! தேவரீர் மிக்க கோபத்தோடு உயிர்கட்கு முடிவைச் செய்து உலாவி வருகின்ற ஆட்டுக்கடாவின் ஆற்றலை அடக்கி எமது பயத்தையும் நீக்கியருளி முடிவுறுமலுள்ள குறையுடைய யாகத்தையும் நாம் பூர்த்திசெய்யும்படி அருள் புரிந்து எமைக் காத்தருள்வீராக'' என எல்லாரும் வணங்கித் தேவாதி தேவர்களும் கைதொழுது துதிக்கும் நேரத்து, 16

எஞ்சுமவர் தம்மைஇளை யோன்பரிவின் நோக்கி
அஞ்சல்விடு மின்களென அங்கைய தமைத்தே
தஞ்சமென வேபரவு தன்பரிச னத்துள்
மஞ்சுபெறு மேனி விறல் வாகுவொடு சொல்வான்.

மனத்தளர்ச்சியோடு வணங்கி நிற்கின்ற இவர்கள் தன்மையினை எம் குமாரக் கடவுள் மிக்க கருணையுடன் பார்த்து ''பயப்படாதீர்கள்'' எனத் தம்முடைய அழகு நிறைந்த திவ்விய கரத்தை அமைத்துக் காண்பித்துத் தம்மையே தஞ்சமாகச் சார்ந்து துதிக்கின்ற தனது பரிவாரமாகிய இலக்கத்து ஒன்பது வீரருள் அழகிய நீல நிறம் கொண்ட மேனியை உடைய வலிமையான வீரவாகு தேவரைப் பார்த்து இதனைச் சொல்வார். 17

**மண்டுகனல் வந்திவர் மகந்தனை அழித்தே**
**அண்டமொடு பாருலவி யாருயிர்க டம்மை**
**உண்டுதிரி செச்சைதனை ஒல்லைகுறு குற்றே**
**கொண்டணைதி என்றுஉமை குமாரனுரை செய்தான்.**

''சுவாலித்தெரிகின்ற யாக நெருப்பின்மீது வந்து தோன்றி இவர்கள் யாகத்தையும் அழித்து அண்டங்களோடு பூமி முதலாகிய உலகங்களெங்கும் உலாவி ஆருயிர்கள் எல்லாவற்றையும் கொன்று அழித்துத் திரிகின்ற சிவந்த நிறமுடைய ஆட்டுக்கடாவை நீ விரைவுடன் அணுகி இங்கு பிடித்துக்கொண்டு வருவாயாக'' என்று உமையம்மையாரின் பாலகரான முருகப்பிரான் சொல்லியருளினர். 18

**குன்றெழு கதிர்போல் மேனிக் குமரவேள் இனைய கூற**
**மன்றலந் தடந்தோள் வீர வாகுவாந் தனிப்பேர் பெற்றான்**
**நன்றென இசைந்து கந்தன் நாண்மலர்ப் பாதம் போற்றிச்**
**சென்றனன் கயிலை நீங்கிச் சினத்தகர் தேட லுற்றான்.**

உதய மலைமேற் தோன்றி வருகின்ற சூரியதேவனின் ஒளிபோலும் ஒளியுடன் விளங்கும் திருமேனி உடைய எம் குமாரக் கடவுள் இவ்வாறு கூறியருள அதைக் கேட்ட வாசனைகொண்ட மாலையணிந்த திருத்தோளுடன் பொலியும் வீரவாகு என்னும் தனிப்பெயர் பெற்ற அவர் ''எம்பெருமானே முருகா! அது நன்று. அவ்வண்ணமே செய்வேன்'' என இசைந்து முருகப் பெருமானுடைய அன்றலர்ந்த தாமரை மலர்போலும் செம்மையான பாதங்களைப் போற்றி வணங்கி எழுந்து திருக்கைலாய மலையைவிட்டு நீங்கிச் சினங்கொண்டு அழிவுசெய்யும் ஆட்டுக்கடா எங்கே எனத் தேடலுற்றார். 19

**மண்டல நேமி சூழும் மாநில முற்று நாடிக்**
**கண்டில னாகிச் சென்றேழ் பிலத்தினுங் காண கில்லான்**
**அண்டர்தம் பதங்கள் நாடி அயன்பதம் முன்ன தாகத்**
**தண்டளிர்ச் செக்கர் மேனித் தகர்செலுந் தன்மை கண்டான்**

வட்ட வடிவாகி விளங்கும் சமுத்திரம் சூழ்ந்த இப் பூமியிடம் எங்கும் ஆட்டுக்கடாவை வீரவாகு தேவர் தேடியுங் காணமல் பின்னர் ஏழுபாதாள உலகங்களெங்கும் தேடியும் காணமல் மேலே சென்று தேவர்களின் உலகிலும் தேடி அங்கும் காணப்பெறுமல் பிரமதேவருடைய உலகிற்குச் சென்று பார்த்தபொழுது அங்கு அந்த ஆட்டுக்கடா செல்லும் தன்மை கண்டார் வீரவாகு தேவர். 20

ஆடலந் தொழின்மேல் கொண்டே அனைவரும் இரியச் செல்லும்,
மேடமஞ் சுறவே ஆர்த்து விரைந்துபோய் வீர வாகு
கோடவை பற்றி ஈர்த்துக் கொண்டுராய்க் கயிலை நண்ணி
ஏடுறு நீபத் தண்டார் இளையவன் முன்னர் உய்த்தான்.

போராடற் தொழிலை மேற்கொண்டு வல்லோனாகி விளங்கும் வீரவாகு தேவர் பெருமான் அந்த ஆட்டுக்கடா திடுக்குற்று அஞ்சும்படியாக ஆரவாரித்து உரக்கச் சத்தமிட்டு விரைவாக ஓடிச்சென்று அக்கடாவின் கொம்பிலே எட்டிப்பிடித்து அதனை இழுத்து அது இழுபட்டு நிலத்தில் உராய்ந்தவாறு வரும்படி கொண்டுசென்று திருக்கைலாய மலையை நண்ணி அழகிய வாசம் கமழும் கடப்ப மலர் மாலையோடும் பொலிந்து விளங்கும் முருகப்பிரான் முன்பாகச் சேர்த்து நின்றார். 21

உய்த்தனன் வணங்கி நிற்ப உளமகிழ்ந் தருளித் தேவர்
மெய்த்தவர் தொகையை நோக்கி ஏழகம் மேவிற் றெம்பால்
எய்த்தினி வருந்து கில்லீர் யாருநீர் புவனி யேகி
முத்தழல் கொடுமுன் செய்த வேள்வியை முடித்தி ரென்றான்.

ஆட்டுக்கடாவை இவ்வாறு முன்னாக விடுத்து வீரவாகு தேவர் எம்பிரானை வணங்கி நிற்ப எம்பிரான் உள்ளம் மகிழ்வாகி அருள் செய்து தேவர்கள், முனிவர்கள் கூட்டத்தைப் பார்த்தருளிச் சொல்வார், "உங்களை உள்ளம் வருத்திய கொடுமையான ஆடு எம்பால் வந்தது. இனிமேல் நீங்கள் சஞ்சலங்கொண்டு வருந்த வேண்டாம். நீங்கள் யாவரும் பூமியில் சென்று பழையபடி ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினியம் என்னும் மூன்று அக்கினிகளையும வளர்த்து உலக சேமத்திற்காகச் செய்யும் யாகத்தைச் செய்து முடிப்பீராக" என அருள் செய்தார். 22

ஏர்தரு குமரப் புத்தேள் இவ்வகை இசைப்ப அன்னோர்
கார்தரு கண்டத் தெந்தை காதல வேள்வித் தீயிற்
சேர்தரு தகரின் ஏற்றைச் சிறியரேம் உய்யு மாற்றால்
ஊர்திய தாகக் கொண்டே ஊர்ந்திடல் வேண்டு மென்றார்.

எல்லா அழகும் ஒருங்குடன் கூடிய ஆறுமுகமுடைய சுவாமி இவ்வாறு அருள் புரிந்து சொல்ல முனிவர், தேவர், நாரதன் முதல் யாவரும் சொல்வார், "கருமையான மேகநிறத்துடன் தோன்றும் கண்டத்தை உடைய நீலகண்ட மகாதேவனின் காதல் மைந்தனே! யாகத்தின் நெருப்பில் தோன்றி அந்தநெருப்பைப் போலும் சிவந்த இந்த ஆட்டுக்கடாவை சிறியேங்களாகிய நாங்கள் உய்யும் பொருட்டாக தேவரீர் வாகனமாகக் கொண்டு அதன்மேலே எழுந்து உலாவுதல் வேண்டும்" எனச் சொன்னார்கள், 23

என்னலுந் தகரை அற்றே யானமாக் கொள்வம் பார்மேல்
முன்னிய மகத்தை நீவிர் முடித்திரென் றருள யார்க்கும்
நன்னய மாடல் செய்யும் நாரதன் முதலோர் யாரும்
அன்னதோர் குமர னெந்தை அடிபணிந் தருளாற் போந்தார்.

என்று தேவர், முனிவர் வேண்டுதலும் பெருமானும் அதைக்கேட்டு ''அவ்வாறு உங்கள் பிரியப்படியே ஆட்டுக்கடாவை வாகனமாகக் கொள்வோம். நீங்கள் இனி பூமிமேல் செய்யுமாறு நினைந்துள்ள யாகத்தை முடிப்பீராக'' என்று அருள்புரிந்து கருணை செய்தலும் அதுகேட்ட யாவர்க்கும் நல்ல நயம் பெறும்படி தமது செயல்களைச் செய்கின்ற நாரதமுனிவர் முதல்யாவரும் அங்கு அருள்புரிந்த குழந்தை வடிவினரான எந்தை பெருமானின் திருவடி மலர்களில் தாழ்ந்து வணங்கி அவர்அருள் பெற்று நிறைவாகிச் சென்றார்கள். 24

நவையில்சீர் முனிவர் தேவர் நயப்பநா ரதனென் றுள்ளோன்
புவிதனில் வந்து முற்றப் புரிந்தனன் முன்னர் வேள்வி
அவர்புரி தவத்தின் நீரால் அன்றுதொட் டமல மூர்த்தி
உவகையால் அனைய மேடம் ஊர்ந்தனன் ஊர்தி யாக.

குற்றமிலாத சீர் பொருந்திய முனிவர், தேவர் யாவரும் நயந்து மகிழ்வாகும்படி நாரதன் என்னும் பெயர் உடைய முனிவன் பூமியிலே திரும்பவந்து தான்முன்னே தொடங்கிய யாகத்தை நிறைவு பெறும்படி பூர்த்தி செய்தான். அந்த நாரதன், முனிவர், தேவர் புரிந்த தவத்தின் தன்மையால் அன்று தொட்டு நிர்மல சொரூபரான முருகப்பெருமான் பெரிதும் மகிழ்வுடன் உலகிற்கு தீமை புரிந்த அந்த ஆட்டுக்கடாமேல் எழுந்தருளி அதனை வாகனமாகக் கொண்டு உலாவி வரல் ஆயினர். 25

தகரேறு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-! 204

## 16. அயனைச் சிறைபுரி படலம்

மேடமூர்தி யாகவுய்த்து விண்ணும்மண்ணும் முருகவேள்
ஆடல்செய் துலாவிவெள்ளி யசலமீதில் அமர்தரும்
நீடுநாளில் ஒருபகற்கண் நெறிகொள் வேதன் முதலினோர்
நாடியீசன் அடிவணங்க அவ்வரைக்கண் நண்ணினார்.

ஆட்டுக்கடாவை வாகனமாகச் செலுத்தி வானுலகும் பூவுலகும் எங்கும் முருகக்கடவுள் திருவிளையாடல் புரிந்து உலாவி வெள்ளி மலையான திருக்கைலாய மலைமேல் அமர்ந்தருளுகின்ற பலநாட்களில் ஒருநாள் நெறியுடன் வேதத்தை ஓதிவரும் பிரமதேவர் முதல் யாவரும் சிவபிரானுடைய திருவடி மலர்களை வணங்கும்படி குறிப்புக்கொண்டு வந்து அந்த திருக்கைலாய மலையைச் சேர்ந்தார்கள். 1

எனுதியா னெனுஞ்செருக் கிகந்துதன் னுளர்ந்துளார்
மனுதிகொண்ட செய்கை தாங்கி மரபின்முத்தி வழிதரும்
அனுதியீசன் அடிவணங்கி அருளடைந்து மற்றவன்
தனுதுமன்றம் நீங்கிவாயில் சாருகின்ற வேலையில்.

என்னுடையது அல்லது நான் என்னும் செருக்காகிய அகங்காரத்தை விடுத்து தன்னையே உணர்ந்து வாழும் மனத்தில் கொண்ட செய்கை யாவற்றையும் தனதாக ஏற்று நல்மரபுடன் முத்தி வழியைத் தரும் அநாதியாகிய ஈசன் திருவடிகளைச் சென்று வணங்கி அருள் பெற்று பிரமதேவர் முதல் தேவர் யாவரும் ஈசனுடைய கோவிலைவிட்டு நீங்கி வாயிலைச் சாருகின்ற அந்த நேரத்து.

சிவலோக நெறியறியச் சிந்தை தந்த அருளானை (அப்பர் சுவாமிகள்) 2

**ஒன்பதொடி லக்கமான அனிகவீரர் உள்மகிழ்ந்**
**தன்பிளுேடு சூழ்ந்துபோற்ற அமலன் அம்பொ னுலய**
**முன்புநீடு கோபுரத்துள் முழுமணித் தலத்தின்மேல்**
**இன்பொடாடி வைகினுன் இராறுதோள் படைத்துளான்.**

ஓர் இலக்கத்து ஒன்பதுபேர் கொண்ட சேனை வீரர்கள் உள்ள மகிழ்வுடன் அன்பாகிச் சூழ்ந்து போற்ற அழகிய சிவபிரானுடைய பொன் மயமான ஆலயத்தின் முன்பே தோன்றி விளங்கும் பெரிய கோபுரத்துள் முழுதும் இரத்தினத்தால் ஆக்கப்பட்ட தலத்தின் மேல் இன்பம் பொருந்த குழந்தை வடிவுடன் விளையாடி வீற்றிருந்தருளினுன் பன்னிரு தோள்களை உடைய எமது பகவான். 3

**அங்கண்வைகும் முருகன்நம்பன் அடிவணங்கி வந்திடும்**
**புங்கவர்க்குள் ஆதியாய போதினுனை நோக்குரு**
**இங்குநம்முன் வருதியா லெனுவிளிப்ப ஏகியே**
**பங்கயாச னத்திளுேன் பணிந்திடாது தொழுதலும்.**

அங்கு அவ்வாறு வைகிய முருகக் கடவுள் சிவபிரானுடைய திருவடிகளை வணங்கி வாய்தலில் வந்திடுகின்ற தேவர்கள் யாவர்க்கும் முற்பட்டவராய்த் தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரமதேவரை நோக்கியருளி ''இங்கு எம்முன் வருவாயாக'' எனக் கூப்பிடுதலும் அதுகேட்ட தாமரை மலர்மேலாசனராகிய பிரமதேவர் குமரப் பெருமான் திருமுன்பு சென்று உள்ளன்புடன் வணங்காது போலி உபசாரமாகக் கும்பிட்டார். 4

**ஆதிதேவன் அருளுமைந்தன் அவனுளத்தை நோக்கியே**
**போதனே இருக்கெனுப் புகன்றிருத்தி வைகலும்**
**ஏதுநீ புரிந்திடும் இயற்கையென்ன நான்முகன்**
**நாதனுணை யால்அனைத்தும் நான்படைப்பன் என்றனன்.**

இவ்வாறு பாசாங்காக வணங்கிய பிரமதேவனின் உள்ளத்தை ஆதியங் கடவுளின் குழந்தையான எமது பெருமான் அறிந்தருளி ''பிரமனே! இப்படி இருப்பாயாக'' எனச் சொல்லியருளி இருக்க வைத்து பின்னரும் அவரை நோக்கி ''நீ நாள் தோறும் என்னென்ன காரியங்களைப் புரிந்துவரும் இயல்புடையாய்? சொல்லுக'' எனக் கேட்டலும் அப்போது பிரமதேவர் அதுகேட்டு, ''எல்லார்க்கும் நாயகரான சிவபிரான் ஆணையால் நான் அனைத்து உலகம் உயிர் யாவற்றையும் படைப்பேன்'' என்ருர். 5

முருக வேளது கேட்டலும் முறுவல்செய் தருளித்
தரணி வானுயிர் முழுவதுந் தருதியே என்னில்
சுருதி யாவையும் போகுமோ மொழிகெனத் தொல்சீர்ப்
பிரமன் என்பவன் இத்திறம் பேசுதல் உற்றான்

முருகப்பெருமான் அதைக் கேட்டலும் புன்சிரிப்புக் கொண்டருளிச் சொல்வார் பிரமதேவனே! நீ இப்பூமி வானம் முழுவதும் படைப்பையேயாகில் நீ நன்றாக வேதம் யாவையும் அறிவாயோ சொல்லுவாய் என்ன அப்போது மிகப் பழமையான ஆதி காலம் தொடக்கம் சீராகவே வாழ்ந்து வந்த பிரமதேவர் என்பவர் இத்திறம் சொல்லியருள்வார். 6

ஐய கேள்எனை யாதிகா லந்தனில் அளித்த
மையு லாவரு களத்தினன் அளப்பிலா மறைகள்
செய்ய ஆகமம் பற்பல புரிந்ததிற் சிலயான்
உய்யு மாறருள் செய்தனன் அவையுணர்ந் துடையேன்

ஐயனே கேட்பீராக என்னை ஆதிகாலதிலே பெற்றருளி நின்ற பரமபிதாவாகியவரும் நஞ்சை உண்டு அதனால் கருமைகொண்ட கண்டத்தை உடையவருமான சிவபிரான் அளவு கடந்த வேதங்கள் செப்பமுடைய ஆகமங்கள் பலபலவற்றை உண்டாக்கி அதிலே சிலவற்றை யான் உய்யுமாறு எனக்கு உரைத்து அருள் புரிந்துள்ளார். அவ்வாறு எனக்கு உரைத்தவற்றை யான் உணர்ந்துடையேன் என பிரமதேவர் பேசினார். 7

என்று நான்முகன் இசைத்தலும் அவற்றினுள் இருக்காம்
ஒன்று நீவிளம் புதியென முருகவேள் உரைப்ப,
நன்றெ னுமறை எவற்றிற்கும் ஆதியின் நவில்வான்
நின்ற தோர்தனி யொழியைமுன் ஓதினன் நெறியால்

என்று இவ்வாறு நான்கு முகமுடைய பிரமதேவர் உரைத்தலும் அப்போது எம்பெருமான் பிரமதேவரை நோக்கி அப்படியாயின் நீ உணர்ந்த வேதங்களிலே தூய பொருள் வடிவாய் உள்ள இருக்கு மந்திரம் ஒன்று சொல்வாய் எனலும் பிரமதேவர் ஐயனே நன்று எனச் சொல்லி வேத மந்திரத்தை எடுத்துச் சொல்வதற்கு ஆரம்பிக்கும்போது முதல் சொல்லப்படுகின்ற தனி மொழியான ஓம் என்னும் பதத்தை முன்னுக்கு ஓதி முறையாக தேவஞ் சொல்லத் தொடங்கினார் 8

தாம ரைத்தலை இருந்தவன் சூடிலைமுன் சாற்றி
மாம றைத்தலை யெடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக் குமரவேள் நிற்றி,முன் கழறும்
ஓமெ னப்படும் மொழிப்பொருள் இயம்புகென் றுரைத்தான்

தாமரை மலரின் உச்சியில் இருக்கும் பிரமதேவர் குடிலை என யாவராலும் போற்றப்படும் ஓம் என்னும் பதத்தைச் சொல்லி பெரிய வேதத்தின் முதல் வாக்கியத்தை சொல்ல எடுத்து அதை ஓதியக்கால் இவ்வளவு என அளவு படுத்தமுடியாத பேரழகின் பிழம்பே திரு உருவாக நிறைகின்ற முருகப் பெருமான் பிரமதேவனை இடைமறித்து கொஞ்சம் நில்! நீ இப்போது முன்னுகச் சொல்லிய ஓம் எனப்படும் மொழியின் பொருளினை விளம்புவாயாக என்றார். 9

முகத்தி லொன்றதா அவ்வெழுத் துடையதோர் முருகன்
நகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத்தி ருந்தனன் கண்டிலன் அப்பொருட் டிறனே

தமது ஆறு திருமுகங்களில் ஒரு முகமே அந்த ஓம் என்னும் பதத்தின் வடிவமாய் விளங்கும் முருகப் பிரான் புன்முறுவலுடன் எல்லா வற்றிற்கும் முன் ஓதப் படும் முதலெழுத்தாகிய ஓம் என்னும் பதத்தின் பொருளினை உரைப்பாயாக எனக் கேட்டலும் பிரமதேவர் உடன் திகைத்து அறியாது தனது நாலு தலையிலும் உள்ள எட்டு கண்களையும் விழித்து முழுசினார். தெரியாமையால் வெட்கினார். சொல்ல முடியாது விக்கினார். திகைத்திருந்தனன் அந்த பதத்தின் பொருளைக் காணாது தவித்தான் பிரமதேவன். 10

ஈசன் மேவரும் பீடமாய் ஏனையோர் தோற்றும்
வாச மாய்எலா வெழுத்திற்கும் மறைகட்கும் முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறும்
மாசில் தாரகப் பிரமமாம் அதன்பயன் ஆய்ந்தான்

கடவுளான சிவபிரான் எழுந்தருளி இருக்கின்ற பீடம் ஆகவும் ஏனைய எல்லா தேவர் உயிர் யாவும் தோற்றும் மூல இடமாகவும் எல்லா எழுத்திற்கும் வேதங்கட்கும் முதலாய்க் காசி என்னும் பதியில் முடிவாகி இறக்கின்ற யாவருக்கும் எம்பெருமான் இறப்பாரின் செவியின் ஊடு ஓதுகின்ற குறைவு இல்லாத தாரகப் பிரமம் எனப்படும் அந்த ஓம் என்னும் பதத்தின் பொருள் யாதோ என பிரமதேவர் ஆராய்ந்தார். 11

தெருள தாகிய குடிலைச் செப்புதல் அன்றிப்
பொருள றிந்திலன் என்செய்வான் கண்ணுதற் புனிதன்
அருளி னாலது முன்னரே பெற்றிலன் அதனால்
மருளு கின்றனன் யாரதன் பொருளினை வகுப்பார்

உள்ளத் தெளிவைத் தருகின்ற ஞானமாகிய குடிலை என்னும் ஓம் என்னும் பதத்தை சொல்லி வருவதே அன்றி ஒருபோதும் பிரமதேவர் அதன் பொருளை அறிந்திலர் அல்லது அறிய முற்பட்டாரும் அல்லர் என்செய்வார் நெற்றிக்கண்ணுடைக் கடவுளான சிவபிரானின் அருளால் இதன்பொருளை முன்பு பெற்றுக்கொண்டாரில்லை. பிரமதேவர் தெரியாது மயங்குகின்றார். அவர் மயங்குகின்றார் என்பதல்ல, யார்தான் அதன் பொருள் அறிவார். 12

தூம றைக்கெலாம் ஆதியு மந்தமுஞ் சொல்லும்
ஓமெ னப்படும் ஓரெழுத் துண்மையை யுணரான்
மாம லர்ப்பெருங் கடவுளும் மயங்கினன் என்றால்
நாமி னிச்சில அறிந்தனம் என்பது நகையே

தூயதான வேதங்களை ஓதும் பொழுது முன்னாகவும் பின்னாகவும் விதிமுறையால் ஓதப்படுகின்ற ஓம் எனப்படும் ஓர் எழுத்தின் உண்மையான நிலை உணராத படி தாமரை மலர்மேல் ஆசனங்கொண்ட எல்லார்க்கும் முன்னவரான கடவுளான பிரமதேவரும் மயங்கினார் என்றால் நாம் இனி இந்த உலகத்துச் சில அறிந்துள்ளோம் என நினைப்பதே சிரிப்புக்கு இடமாகும். 13

எட்டொ ணுதவக் குடிலையிற் பயன்இனைத் தென்றே
கட்டு ரைத்திலன் மயங்கலும் இதன்பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மைய தோவெனுச் செவ்வேள்
குட்டி னன் அயன் நான்குமா முடிகளுங் குலுங்க

நான

யாவர்க்கெனினும் நாடிக்காணுதை அந்த ஓம் என்னும் குடிலையின் பயனினை இதுதான் என்று முருகப்பிரானிடம் சொல்லமுடியாது பிரமதேவர் மயங்குதலும் அப்போது எம்பெருமான், பிரமனே! இதன் பொருள் கருத்தில் தெரிந்துகொள்ள முடியாத நீ எவ்வாறு படைப்புத் தொழிலைப் புரிவாய் இப்படிப் பொருள் அறியாதவாறுபோலத்தானே உன் படைப்புத்தொழிலும் ஆகும் எனத் தனது திருகையால் முருகப்பிரான் பிரமதேவரின் தலையில் குட்டினுர். அவர் நான்கு முடிகளும் குட்டினுல் நடுங்கும்படியாக. 14

மறைபு ரிந்திடுஞ் சிவனருண் மதலைமா மலர்மேல்
உறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினு லுதைத்து
நிறைபு ரிந்திடு பரிசன ரைக்கொடே நிகளச்
சிறைபு ரிந்திடு வித்தனன் கந்தமாஞ் சிலம்பில்

வேதங்களை அருள்செய்த சிவபிரானின் அருட்செல்வரான குழந்தையானவர் பெரிய தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமர் வீழும்படி திருப்பாதத்தால் உதைத்து வீழ்த்தி பின்னர் தன்பக்கராக நிறைந்து நின்ற பரிசனர்களான வீரவாகுதேவர் முதலியவரைக்கொண்டு பிரமதேவரை விலங்கிடுவித்து கந்தமலையில் சிறையிலே இட்டுவைத்தார் எம் குமாரக் கடவுள். 15

அல்லி மாமலர்ப் பண்ணவன் றனையருஞ் சிறையில்
வல்லி பூட்டுவித் தியாவையும் புரிதர வல்லோன்
எல்லை தீர்தரு கந்தமால் வரைதனில் ஏகிப்
பல்லு யிர்த்தொகை படைப்பது நினைந்தனன் பரிவால்

தாமரை மலர்மேல் இருக்கும் கடவுளான பிரமனை அரிய சிறையிலே விலங்கு பூட்டி வைத்த பிற்பாடு எல்லாவற்றையும் புரிவதற்கு வலிமையுடைய எமது குமரக் கடவுள் எல்லை காண முடியாத தமது இருப்பிடமான கந்தமலையிடத்துச் சென்று இப்பால் பல உயிர்த்தொகைகளையும் தாமே படைப்பதற்குக் கருணையாலே நினைந்தருளினுர். 16

ஒருக ரந்தனில் கண்டிகை வடம்பரித் தொருதன்
காத லந்தனில் குண்டிகை தரித்திரு காங்கள்
வாத மோடப யந்தரப் பரம்பொருள் மகனுேர்
திருமு கங்கொடு சதுர்முகன் போல்விதி செய்தான்

ஒரு திருக்கரத்தில் உருத்திராக்க மாலையும் தாங்கி மற்று ஒரு கரத்தில் கமண்டலம் என்னும் தூக்குச்செம்பைத் தாங்கி பின்னர் இரண்டு கைகளை எடுத்து ஒன்றை வரதமுடனும் மற்றதை அபயம் ஆகவும் தரித்து பரம்பொருளின் திருக்குமாரரான எமது கடவுள் ஒருமுகம்கொண்ட வடிவத்துடன் நான்கு முகத்துடன் தோன்றும் பிரமதேவரைப்போல் படைத்தருளினுர். 17

உயிரி னுக்குயி ராகியே பராஞ்சுட ரொளியாய்
வியன்ம றைத்தொகைக் கிறுதியாய் விதிமுத லுரைக்குஞ்
செயலி னுக்கெலாம் ஆதியாய் வைகிய செவ்வேள்
அயனெ னப்படைக் கின்றதும் அற்புத மாமோ

எல்லா உயிர்கட்கும் உயிராகியும் மேலான காணுணு வகை நின்ற ஞானச் சுடர் ஒளியாகியும் அற்புதமான வேதங்கட்கு எல்லாம் முடிவாகிய பொருளாகியும் பிரமதேவரின் செயல் என்னும் முதல்தோற்றமான படைப்புக்கள் எனச் சொல்லப்படும் செயல்களுக்கு எல்லாம் ஆதியாய் நித்தியப்பொருளாய் இருக்கின்ற முருகக் கடவுள் பிரமதேவரைப்போலப் படைக்கின்றது ஓர் அற்புதமாமோ? 18

தண்ணெனன் அம்புயத் தவிசினேன் சிறைபுகத் தானே
எண்ணி லாவுயிர்த் தொகையளித் தறுமுகன் இருந்தான்
அண்ண லந்திசை முகனொடு வந்துசூழ் அமரர்
உண்ண டுங்கியே தொழுதுதம் பதங்களி லுற்றார்

தண்ணெனும்படி குளிர்ச்சி வாய்ந்த தாமரைப் பூவில் இருக்கும் பிரமதேவர் சிறையில் கிடப்பதானே அருளினால் எண்ணில் அடங்காத உயிர்த்தொகைகளைப் படைத்து ஆறுமுகமுடைய பெருமான் இந்த முன்சொல்லிய வடிவத்துடன் இருந்தார். அப்போது மேலான பிரமதேவருடன் சூழ்ந்து கைலை மலையைச் சேர்ந்த தேவர்கள் யாவரும் பிரமதேவர் குட்டு வாங்கிய நிலையைக் கண்டதும் உள்ளம் நடுங்கி முருகக்கடவுளை வணங்கித் தொழுது தமது பதங்களில் உற்றார்கள். 19

அயனைச் சிறைபுரி படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம்–1,223

# அயனைச் சிறை நீக்கு படலம்

ஆல மாமிடற் றண்ணல்சேய் இத்திறம் அளப்பில்
காலம் யாவையும் அளித்தனன் இருத்தலுங் கரியோன்
நாலு மாமுகன் உவளகம் நீக்குவான் நாடிச்
சீல வானவர் முனிவரைச் சிந்தனை செய்தான்

நஞ்சை உண்ட கண்டத்தினை உடைய கடவுளான சிவபிரான் திருக்குமாரர் இத்தன்மையாக அளவில்லாக் காலமாக யாவற்றையும் படைத்தவாறு இருத்தலும் நாராயணக் கடவுள் தனது மைந்தரான பிரமதேவரின் சிறையை நீக்கும் பொருட்டாக நாடியவாறு சீலம் ஆன நெறியுடைய தேவர்களை முனிவர்களை யாவரையும் தமது திருமுன்பு வரும்படியாகச் சிந்தனைசெய்தார். 1

சீத ரத்தனிப் பண்ணவன் சிந்தனை தேறி
ஆத பத்தினர் பரிமுகர் வசுக்கள்அன் னையர்கள்
ஏத மற்றிடும் விஞ்சையர் உவணரோ டியக்கர்
மாதி ரத்தவர் யாவரும் விரைந்துடன் வந்தார்

மகாலட்சுமியை மார்பில் தாங்கும் கடவுளான நாராயணப் பெருமான் இவ்வாறு தங்களை வரும்படி நினைந்துள்ள தம்மையை உணர்ந்து சூரியர்களும், குதிரை முகங்கொண்ட அச்சுவினி தேவர்களும், அட்டவசுக்களும், சப்தமாதர்களும், குற்றங்கள் நீங்கிய, விஞ்சையர்களும். கருடர்களும், இயக்கர்களும் திக்குப்பாலகர்களான இந்திரன் முதல் கடவுளர்களும் யாவரும் அவர் திருமுன்பு வந்தார்கள். 2

மதியும் ஏனைய கோள்களுங் கணங்களும் வான்றோய்
பொதிய மேயவ னுதியாம் பொருவில்மா தவரும்
விதிபு ரிந்திடு பிரமரோன் பதின்மரும் வியன்பார்
அதனை ஏந்திய சேடனும் உரகரும் அடைந்தார்

சந்திரனும் ஏனைய செவ்வாய் வியாழன் வெள்ளி புதன் முதலிய கிரகங்களும் ஆகாயத்தை அளாவி உயர்ந்த பொதிய மலையில் வாழ்கின்ற அகத்திய முனிவர் முதலாகிய ஒப்பற்ற சிறந்த வேறு முனிவர்களும் பிரமதேவர்க்குதவியாய் படைத்தல் தொழிலைச் செய்கின்ற உபபிரமர்களான அங்கிரா, பிருகு, புலத்தியர், கிரது, மரீசி, அத்திரி, தக்கன், வசிட்டர், நாரதர், முதலிய ஒன்பதுபேரும் பெரிய பூமியைத் தாங்குகின்ற ஆதிசேடனும் நாகர்களும் ஆகிய இவர்களும் விஷ்ணுபிரான் திருமுன்பு வந்தார்கள். 3

இன்ன தன்மையில் அமரரும் முனிவரு மெய்த
அன்னர் தம்மொடுஞ் செங்கண்மால் கயிலையை அடைந்து
முன்னர் வைகிய நந்திகள் முறையினுய்த் திடப்போய்த்
தன்னை யேதனக் கொப்பவன் பொற்கழல் தாழ்ந்தான்

இவ்வாருகிய தன்மையில் தேவர்களும் முனிவர்களும் வந்துகூட இவர்கள் தம்மொடும் சிவந்த கண்ணுடைய விஷ்ணுபகவான் எழுந்து புறப்பட்டுச் சென்று திருக்கைலாய மலையை அடைந்து திருக்கோவில் வாயில் முன்பு காவல் கொண்டிருந்த நந்தியங் கடவுள் முறையாக எல்லோரையும் உள்ளே விடுதலும் சென்ற தன்னையே தனக்கு ஒப்பவனுகிய சிவபிரான் பொன்போலும் திருப்பாதம் முன்பாகத் தாழ்ந்து வணங்கினுர் விஷ்ணுபகவான் 4

பொற்றி ருப்பதம் இறைஞ்சியே மறைமுறை போற்றி
நிற்ற லுஞ்சிவ னருள்கொடே நோக்குறீஇ நீவிர்
எற்றை வைகலு மில்லதோர் தளர்வொடும் எம்பால்
உற்ற தென்கொலோ என்றலும் மாலிவை உரைப்பான்

இவர்கள் யாவரும் பொன்னுர்ந்த எம்பிரான் சேவடியில் தாழ்ந்து வணங்கி வேதமுறையாகப் போற்றி செய்து அங்கு நிற்றலுஞ் சிவபிரான் அருளுடன் இவர்களைப் பார்த்து நீங்கள் யாவரும் எந்த நாளும் இல்லாததோர் தளர்ச்சியோடும் எம்பால் இங்கு வந்தது என்ன காரணமாகும் என்று கேட்டருளலும் அப்போது நாராயணக் கடவுள் சொல்வார். 5

**வேறு**

இறைவ நின்மகன் ஈண்டுறு போதனை
மறைமு தற்பத வான்பொருள் கேட்டலும்
அறிகி லானுற அன்னவன் றன்னைமுன்
சிறைபு ரிந்தனன் சிட்டியுஞ் செய்கின்றான்

இறைவா! தேவரீரது திருக்குமாரர் இங்கு இப்புவனம் படைக்கும் எனது மகனான பிரமதேவனை வேதங்களின் முதற்பொருளைக் கேட்டலும் பிரமதேவன் அறியயாது மயங்கி நிற்றலும் அப்போது எனது மகனைக் குட்டி சிறைவைத்தார்: இப்போது உமது திருமகன்தானே படைப்புத் தொழிலையும் செய்கின்றார். 6

கந்த வேளெனக் கஞ்சனும் ஐயநின்
மைந்த னும்அவன் வல்வினை யூழினல்
அந்த மில்பகல் ஆழ்சிறைப் பட்டுளம்
நொந்து வாடினன் நோவுழந் தானரோ

பெருமானே! முருகப்பிரான் எவ்வாறு உமக்கு அருமைப்பாடான குமரன் ஆவனோ அதேபோல பிரமதேவனும் என்னுடைய அருமையான பிள்ளையாவான்: ஆனால் என்செய்வேன் எனது மகன் அவன் செய்து கொண்ட வினையின் ஊழினால் அளவற்ற காலம் சிறையிடத்தே வைக்கப்பட்டான். அதனாலே எனது மகன் பிரமன் உளம் நொந்து வாடி நோவுப்பட்டுத் துன்பப்பட்டான் என்று மிகுந்த சலிப்புடன் விஷ்ணுபிரான் கூறினார். 7

ஆக்க மற்ற அயன்தன் சிறையினை
நீக்கு கென்று நிமலனை வேண்டலுந்
தேக்கும் அன்பிற் சிலாதன்நற் செம்மலை
நோக்கி யொன்று நுவலுதல் மேயினான்

ஆகையில் இப்படி எமது பிரமனை உமது மகன் சிறைவைத்தலால் ஏது பிரயோசனமும் இல்லாத தன்மையால் அவனின் சிறைவாசம் தகுதியற்றது: ஆகவே இச்சிறையினை தேவரீர் நீக்குவீராக என்று விஷ்ணு மூர்த்தி வேண்டி நிற்றலும் அப்போது சிவபிரான் கருணை நிறையும் உள்ளத்தவராய் பக்கராக நின்ற சிலாதன முனிவன் புத்திரரான நந்திதேவரைப் பார்த்து ஈது ஒருவார்த்தை சொல்வார் சிவபிரான். 8

குடுவைச் செங்கையி னானைக் குமரவேள்
இடுவித் தான்சிறை என்றனர் ஆண்டுநீ
கடிதிற் சென்றுநங் கட்டுரை கூறியே
விடுவித் தேயிவண் மீள்கெனச் சாற்றினான்.

எமது மைந்தனான குமரக் கடவுள் கமண்டலத்தை சிவந்த கையில் ஏந்திய பிரமதேவனை சிறை வைத்துள்ளான் என்று இவர்கள் சொல்லுகிறார்கள். ஆனமையால் நீ அங்கு அதிவிரைவாகச் சென்று நமது வார்த்தையைச் சொல்லி பிரமதேவரைச் சிறைவிடுவித்தே மீள்வாயாக எனச் சிவபிரான் சாற்றியருளினார். 9

எந்தை யன்ன திசைத்தலும் நன்றெனு
நந்தி அக்கணம் நாதனைத் தாழ்ந்துபோய்
அந்த மற்ற அடற்கணஞ் சூழ்தரக்
கந்த வெற்பிற் கடிநகர் எய்தினான்.

எங்கள் தந்தையாகிய சிவபிரான் அதைச்சொல்லியருள்தலும் நந்தியம்பெருமான் அதுகேட்டு நன்று என்று எல்லாக் கணங்கட்கும் நாயகரான சிவபிரானைத் தாழ்ந்து வணங்கிச் சென்று தம்மோடும் அள்வு கணக்கிடமுடியாத சிவ கணங்கள் சூழ்ந்து வரும்படியாக கந்தமலையிடத்து அதிவிரைவாகச் சென்று சேர்ந்தார். 10

ஏறுமு டைத்தனி ஏற்று முகத்தினன்
அறுமு கத்தன் அமர்ந்த நிகேதனங்
குறுகி மற்றவன் கோல மலர்ப்பதம்
முறைத னிற்பணிந் தேத்தி மொழிகுவான்

வலி உடைய தனி இடபத்தின் முகத்தினை உடைய நந்தியங்கடவுள் இவ்வாறு கணங்கள் சூழ்தரச் சென்று ஆறுமுகமுடைய பெருமான் அமர்ந்தருளிய கோவில் உட்சென்று அங்கு காண்பார் கண்குளிர மனங்குளிர மிளிர்கின்ற ஐயரின் கோலம் மிக்க பூப்போலும் பாதத்தை முறையாகப் பணிந்து ஏத்தி இவ்வார்த்தை மொழிகின்றார் நந்தியங்கடவுள் முருகப்பிரானை வணங்கியவாறு. 11

கடிகொள் பங்கயன் காப்பினை எம்பிரான்
விடுதல் கூறி விடுத்தனன் ஈங்கெனைத்
தடைப டாதவன் றன்சிறை நீக்குதி
குடிலை யன்னவன் கூறற் கெளியதோ.

பெருமானே முருகா! மிக்க காவல் உடைய சிறையில் வைத்த பிரமதேவனை சிறையை நீக்கி விடுதலை செய்யும்படியாக தேவரீரிடம் சொல்லும்படியாக சிவபிரான் என்னை இங்கு விடுத்தார். ஆகவே தந்தையாரின் வாக்கு தடைபடாதபடி பிரதமதேவரின் சிறையை நீக்குவீராக. குடிலையான ஓம் எனும் பதத்தின் பொருளை அப்பிரமன் கூறுவதற்கு அது எளிதானது ஒன்றோ அல்லவே. 12

என்னு முன்னம் இளையவன் சீறியே
அன்ன வூர்தி யருஞ்சிறை நீக்கலன்
நின்னை யுஞ்சிறை வீட்டுவன் நிற்றியேல்
உன்னி யேகுதி ஒல்லையி லென்றலும்.

என்று இவ்வாறு நந்திதேவர் தாம் சொல்ல எடுத்ததை சொல்லி முடிக்கு முன்பே உலகெலாம் முத்தாலும் முவாத நலமுடைய முருகக் கடவுள் சீறி வேகத்துடன் மொழிவார் நந்தியே! அன்னவாகனன் ஆன பிரமதேவனின் சிறையை நான் நீக்கமாட்டேன். இங்கே நீயும் நின்றால் உன்னையும் சிறைவைப்பேன் இதை மனதில் இப்போது நினைந்துகொண்டு உடனடியாக இங்கிருந்து போய்விடு என்று எம்பிரான் குருபரன் மொழிந்தார். 13

வேற தொன்றும் விளம்பிலன் அஞ்சியே
ஆறு மாமுகத் தண்ணலை வந்தியா
மாறி லாவெள்ளி மால்வரை சென்றனன்
ஏறு போல்முக மெய்திய நந்தியே.

இதைக் கேட்டவுடன் நந்திதேவர் பயந்து வேறு ஒன்றும் பேசமுடியாதவராய் ஆறுமுகமுடையதாய் எல்லார்க்கும் கடவுளாய் நின்ற பெருமானை வந்தித்து வணங்கி அங்கு நின்றும் நீங்கி மாறுபாடில்லாத வெள்ளி மலையான திருக்கயிலாய மலை சென்றார் இடபம்போலே முகமுடைய நந்திதேவர். 14

மைதி கழந்த மணிமிடற் றண்ணல்முன்
வெய்தெ னச்சென்று மேவி அவன்பதங்
கைதொ ழூஉநின்று கந்தன் மொழிந்திடுஞ்
செய்தி செப்பச் சிறுநகை யெய்தினன்.

மைபோலும் திகழ்ந்து விளங்கும் கண்டத்தையுடைய சிவபிரான் திருமுன்பாக நந்தியங்கடவுள் பதைப்புடன் விரைவாகச் சென்று சேர்ந்து சிவபிரானுடைய பாத கமலங்களை கைதொழுது நின்று கந்தசுவாமி மொழிந்திட்ட செய்தியைச் சொல்லி நிற்றலும் அதைக் கேட்டவுடன் சிவபிரான் ஓர் சிறு புன்சிரிப்புச் செய்தார். 15

கெழுத கைச்சுடர்க் கேசரிப் பீடமேல்
விழுமி துற்ற விமலன் விரைந்தெழீஇ
அழகு டைத்தன தாலயம் நீங்கியே
மழவி டைத்தனி மால்வரை ஏறினன்.

உடனே தகுதிபொருந்திய சோதியினை உடைய சிங்காசனத்தின் மேல் சிறப்பாக வீற்றிருந்த சிவபிரான் விரைவாக எழுந்து அழகுடன் விளங்கும் தனது ஆலயத்தை விட்டு நீங்கி இளமையுடன் சோபித்து விளங்கியவாறு முன்னின்ற மலைபோலும் பெருத்தமேனி உடைய இடபவாகனத்து ஏறியருளினர். 16

முன்னர் வந்த முகில்புரை வண்ணனுங்
கின்ன ரம்பயில் கேசர ராதியோர்
நன்னர் கொண்டிடு நாகரும் நற்றவர்
என்ன ருந்தொழு தெந்தைபின் ஏகினர்.

அவ்வாறு எமது சிவபிரான் இடபவாகனத்து எழுந்தருளிய போது பலவகையான ஆயுதங்களை ஏந்திய கையினை உடையர் பலநிறங்கொண்ட பட்டாடைகளை உடுத்தியவர்களும் நெருப்பின் சுடர்போலும் உருவம் அமைந்த தலையினை உடையர் இடியேறு போலும் சொல்லை உடையர் ஆகியவண்ணங் கொண்ட எண்ணற்ற பூதர்கள் சுவாமி பக்கராகச் சூழ்ந்து போற்றுவார் ஆயினர். 17

படைகொள் கையினர் பன்னிறக் காழக
உடையர் தீயி னுருகெழு சென்னியர்
இடிகொள் சொல்லினர் எண்ணரும் பூதர்கள்
புடையில் ஈண்டினர் போற்றுதல் மேயினர். 18

ஆயுதங்களை ஏந்திய கையினை உடையவர்களும் பல நிறங்கொண்ட ஆடைகளை உடுத்தியவர்களும் நெருப்பைப் போலும் உருவம் கொண்டு சிவந்த சடையை உடையவர்களும் இடிபோலும் சொல்லைப் பேசுகின்றவர்களும் ஆகிய எண்ணிக்கை சொல்ல முடியாத பூதங்கள் எம்பிரானைப் பக்கராக நெருங்கிச் சூழ்ந்து போற்றுவார் ஆயினர்.

இனைய காலை இனையவர் தம்மொடும்
வனிதை பாதியன் மால்விடை யூர்ந்துராய்ப்
புனித வெள்ளியம் பொற்றை தணந்துபோய்த்
தனது மைந்தன் தடவரை யெய்தினன். 19

இவ்வாறாகிய நேரத்து இங்கு சூழ்ந்துள்ள திருமால் இந்திரன் முதலாகியவர்களுடன் உமையம்மையாரை ஒரு பாகத்து உடையவராகிய சிவபிரான் பெரியதோர் இடப வாகனத்து எழுந்தருளி அதனைச் செலுத்தி புனிதமாகத் திகழும் வெள்ளிமயமான திருக்கைலாய மலையை விட்டு நீங்கிச் சென்று தனது திருக்குமாரராகிய முருகப் பெருமானின் கந்த மலையைச் சேர்ந்தருளினர்.

சாற்ற ருந்திறற் சண்முக வெம்பிரான்
வீற்றி ருந்த வியனகர் முன்னுரு
ஏற்றி னின்றும் இழிந்துவிண் ணோரெலாம்
போற்ற முக்கட் புனிதனுட் போயினன். 20

சொல்லற்கரிய திறமை வாய்ந்த ஆறு முகமுடைய எம்பிரான் வீற்றிருந்தருளிய பெருமை வாய்ந்த நகரத்தின் முன்னாகச் சென்றருளி தாம் எழுந்தருளி வந்த இடபத்தின் நின்றும் இறங்கி, தேவர்களெல்லாம் சங்கரா சிவ சிவா எனப் போற்றும்படியாக மூன்று கண்களைக் கொண்ட புனிதராகிய சிவபிரான் முருகப் பெருமானுடைய ஆலயத்தின் உள்ளே சென்றருளினர்.

அந்தி போலும் அவிர்சடைப் பண்ணவன்
கந்தன் முன்னர்க் கருணையொ டேகலும்
எந்தை வந்தனன் என்றெழுந் தாங்கவன்
வந்து நேர்கொண் டடிகள் வணங்கியே. 21

செக்கர் போலும் சிவந்த அழகிய சடை முடியை உடைய சிவபிரான் கந்த சுவாமியார் முன்பாக அளவு கடந்த கருணையுடன் ஏகலும் அப்போது எமது முருகக் கடவுள் அதனைக் கண்ணுற்று எந்தை ஈசன் எம்பிரான் வந்தார் எனக் கூறிய வண்ணம் ஆசனம் விட்டெழுந்து அங்கு சிவபிரான் திருமுன்பு தாம் சென்று வரவேற்று அவருடைய பாதங்களை வணங்கினர்.

பெருத்த தன்மணிப் பீடிகை மீமிசை
இருத்தி நாதனை ஏழுல கீன்றிடும்
ஒருத்தி மைந்தன் உயிர்க்குயி ராகிய
கருத்த நீ வந்த காரியம் யாதென்றான். 22

முருகக் கடவுள் தந்தையாரை வணங்கி எழுந்து அவரை அழைத்துச் சென்று குளிர்ச்சி தரும் முத்துக்களால் இழைக்கப் பெற்ற பெரியதோர் ஆசனத்தில் சிவபிரானை இருத்தி பின்னர் ஏழு உலகையும் தந்தவளாகிய ஒருத்தியான உமையம்மை பாலகர் தந்தையாரை நோக்கி உயிர்க்கு உயிராகி உள்நிறையும் பரமான்மாவானவனே நீ இங்கு வந்த காரியம் யாது எனக் கேட்டருளினர்.

மட்டு லாவு மலர்அய னைச்சிறை
இட்டு வைத்தனை யாமது நீங்குவான்
சுட்டி வந்தன மாற்சுரர் தம்முடன்
விட்டி டையவென் றெந்தை விளம்பினன். 23

அப்போது எந்தை பெருமானாகிய சிவபெருமான் முருகக் கடவுளை நோக்கி தேன் சொரியும் தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரமதேவனை நீ சிறையிட்டு வைத்தாய். ஆகவே, நான் அதை நீக்கும்படியான குறிப்புடன் இவ்விடத்து தேவர் தம்முடன் வந்தனமால். ஐயா! எனது மகனே! நீ அப் பிரமனைச் சிறை நீக்கி விடுவாயாக என எந்தை பிரானான சிவபிரான் விளம்பினர்.

நாட்ட மூன்றுடை நாயகன் இவ்வகை
ஈட்டு மன்பொ டிசைத்திடும் இன்சொலைக்
கேட்ட காலையிற் கேழ்கிளர் சென்னிமேற்
சூட்டு மௌலி துளக்கினன் சொல்லுவான். 24

மூன்று கண்களையுடைய நாயகரான சிவபிரான் இவ்வாறு உள்ளத்தே பெருகுகின்ற அன்புடன் இசைத்திட்ட இன்சொல்லைக் கேட்ட நேரத்து எமது முருகக் கடவுள் அப்படியா என அழகு பொழியும் தமது தலைமேலாகச் சூட்டிய முடிகளை அசைத்து விட்டு எம்பிரானை நோக்கிச் சொல்வார்.

உறுதி யாகிய ஓரெழுத் தின்பயன்
அறிகி லாதவன் ஆவிகள் வைகலும்
பெறுவ னென்பது பேதைமை ஆங்கவன்
மறைகள் வல்லது மற்றது போலுமால். 25

ஐயனே தந்தையே! கேளும் யாவர்க்கும் உறுதியான ஓம் என்னும் ஓர் பதத்தின் பொருளை அறியாத இந்தப் பிரமதேவன் உயிர்கள் யாவற்றையும் நிற்றலும் படைத்து அதனாலே உயிர்களை நல்நிலை ஆக்குவான் என்பது அறியாமையாகும். ஆகவே அவன் வேதப் பொருளை அறியாதவாறு போலத்தான் அவனது படைப்புகளும் மூடத்தில் மூழ்கிக் கிடக்கும். ஓம் எனும் எழுத்தான பதம் யாவர்க்கும் உறுதி என இங்கு கூறியதை யோக சுவாமிகளும் ஓம் என்று உறுதி தந்தான் எங்கள் குருநாதன் என்பார்.

அழகி தையநின் னருள் வேதமுன்
மொழிய நின்ற முதலெழுத் தோர்கிலான்
இழிவில் பூசை இயற்றலும் நல்கிய
தொழில்பு ரிந்து சுமத்தினை யோர்பரம். 26

ஐயனே! உமது ஆர்ந்து விளங்கும் அருள் நன்றாக இருக்கின்றது. வேதத்தின் முன்னாக மொழிய நின்ற முதல் எழுத்தை ஓர்ந்து உணராத பிரமதேவன் ஏதோ வகையாக இழிவில்லாத சிவபூசை இயற்றி வழிபடுதலும் அவருக்கு நீர் எல்லாவற்றையும் படைக்கின்ற மிகப் பாரமான ஓர் தொழிலைச் சுமத்தி உள்ளீர். இது நன்றாக இருக்கிறது!

ஆவி முற்றும் அகிலமும் நல்கியே
மேவு கின்ற வியன்செயல் கோடலால்
தாவில் கஞ்சத் தவிசுறை நான்முகன்
ஏவர் தம்மையும் எண்ணலன் யாவதும். 27

உலகத்தோடு உயிர் முழுவதையும் படைத்து வரும் மேலான செயலைச் செய்வ தால் தான் ஒருவனே படைப்புக்குக் காரணன் என்னும் அகந்தை கொண்டு அதனலே குறைவில்லாத தாமரைப் பூவில் இருக்கும் பிரமதேவர் மற்று ஒருவரையேனும் சிறி தும் மதிக்காது போகின்ருன்.

நின்னை வந்தனை செய்யினும் நித்தலுந்
தன்ன கந்தை தவிர்கிலன் ஆதலால்
அன்ன வன்றன் அருஞ்சிறை நீக்கலன்
என்ன மைந்தன் இயம்பிய வேலையே. 28

தேவரீரை வந்து நித்தலும் வந்தனை வழிபாடு செய்யினும் இன்னும் அப்பிரம தேவன் தனது அகந்தையினை நீங்குகின்ருன் இல்லை ஆகையால் அந்தப் பிரமதேவனைப் பூட்டி வைத்த கொடிய சிறையினின்றும் ஒருபோதும் அவனை விடமாட்டேன். என்று தமது திருக்குமாரரான முருகப் பெருமான் சொல்லிய நேரத்து.

மைந்தநின் செய்கை யென்னே மலரயன் சிறைவி டென்று
நந்திநம் பணியா லேகி நவின்றதுங் கொள்ளாய் நாமும்
வந்துரைத் திடினுங் கேளாய் மறுத்தெதிர் மொழிந்தா யென்னக்
கந்தனை வெகுள்வான் போலக் கழறினன் கருணை வள்ளல் 29

அதனைக் கேட்டருளிய கருணைக் கடலான சிவபிரான் குமரக் கடவுளை நோக்கி எனது மகனே இது என்ன உனது செய்கை. தாமரை மலர் மேல் ஆசனரான பிரம தேவன் சிறையை விடுவாயாக என்று முன்னர் நந்திதேவன் நமது கட்டளையால் இங்கு வந்து உன்னேடு சொன்ன போதும் அது கேளாய் அப்பால் நானே நேரே வந்து உன்னேடு சொன்னதும் கேளாய். என் வார்த்தைக்கும் மறுத்து எதிர்மொழி கின்ருய் என்று முருகக் கடவுளைக் கோபிப்பார் போன்று சொல்லியருளினர்.

அத்தன தியல்பு நோக்கி அறுமுகத் தமலன் ஐய
சித்தமிங் கிதுவே யாகில் திசைமுகத் தொருவன் தன்னை
உய்த்திடு சிறையின் நீக்கி ஒல்லையில் தருவ னென்னுப்
பத்தியின் இறைஞ்சிக் கூறப் பராபரன் கருணை செய்தான். 30

தந்தையாகிய சிவபிரான் இயல்பை எமது முருகக் கடவுள் நோக்கி ஐயனே உமது சித்தம் இதுவேயாகில் நான்கு திக்குகளில் பொருந்திய முகங்களை உடைய ஒருவ ரான பிரமதேவனை நாம் செலுத்தி அடைத்து வைத்த சிறையில் நின்றும் நீக்கி இப் போது தருகிறேன் எனக்கூறி பத்தியோடும் வணங்கி முருகக்கடவுள் கூறுதலும் அப்போது பராபரா முதல்வராகிய சிவபிரான் அதுகேட்டுத் திருமகனுர் மீது கருணை செய்தார்.

நன்சிறை எகினம் ஏனம் நாடுவான் அருளை நல்கத்
தன்சிறை நின்ருேர் தம்மைச் சண்முகக் கடவுள் நோக்கி
முன்சிறை யொன்றிற் செங்கேழ் முண்டகத் தயனை வைத்த
வன்சிறை நீக்கி நம்முன் வல்லைதந் திடுதி ரென்ருன். 31

நல்ல சிறகுகளை உடைய அன்னப் பட்சியும் பன்றியும் இன்னமும் நாடியும் காணுெணு வகை நின்ற சர்வேஸ்வரரான சிவபிரான் அருள் நல்க உடன் ஆறுமுகம் உடைய முருகக் கடவுள் தமது பக்கமாக நின்ற சில வீரரை நோக்கிச் சொல்வார் ''முன்னரே நாம் சிவந்த இதழுடைய தாமரை மலர் மேல் இருக்கின்ற பிரமனைச் சிறைபடுத்தி வைத்த கடுமையான சிறையின் நீக்கி விடுதலையாக்கி நமது முன்பாக விரைவாகக் கொண்டு வந்து தாருங்கள்'' என்றார்.

என்றலுஞ் சார தர்க்குட் சிலவர்க ளேகி யங்கண்
ஒன்றொரு பூழை தன்னுள் ஒடுங்கின னுறையும் வேதா
வன்றளை விடுத்தல் செய்து மற்றவன் றனைக்கொண் டேகிக்
குன்றுதொ றுடல் செய்யுங் குமரவேள் முன்னர் உய்த்தார். 32

என்று கூறுதலும் அதுபோது அங்கு நின்ற பூதங்களில் சிலர் அதிவிரைவாக ஓடிச் சென்று அங்கு சிறைச்சாலையிலே ஒரு துவாரம் போன்ற பகுதியிலே ஒடுங்கிப் போய் இருந்த பிரமதேவரின் விலங்குகளை நீக்கி அவரைக் கொண்டு வந்து மலையிடங்கள் தோறும் ஆடல் புரியும் குமரப் பெருமானின் திருமுன்பு சேர்த்தார்கள்.

உய்த்தலுங் கமலத் தண்ணல் ஒன்கரம் பற்றிச் செவ்வேள்
அத்தன்முன் விடுத்த லோடும் ஆங்கவன் பரமன் றன்னை
மெய்த்தகும் அன்பால் தாழ்ந்து வெள்கினன் நிற்ப நோக்கி
எய்த்தனை போலும் பன்னாள் இருஞ்சிறை யெய்தி யென்றான். 33

அவ்வாறு சேர்த்தலும் குமரப் பெருமான் பிரமதேவருடைய ஒரு கையைத் தமது திருக்கரத்தால் எட்டிப்பற்றித் தந்தையாகிய சிவபிரான்முன் சேர்த்தலோடும் அப்போது பிரமதேவர் சிவபிரானை மெய்மையான அன்பினால் தாழ்ந்து வணங்கி வெட்கப்பட்டு நிற்றலும் அதனை எமது சிவபிரான் பார்த்தருளி, ''பிரமனே! நீ பலநாள் கொடிய சிறையில் இருந்து களைத்துவிட்டாய் போலும்'', என்றான்.

நாதனித் தன்மை கூறி நல்லருள் புரித லோடும்
போதினன் ஐய உன்றன் புதல்வன்ஆற் றியவித் தண்டம்
ஏதமன் றுணர்வு நல்கி யானெனும் அகந்தை வீட்டித்
தீதுசெய் வினைகள் மாற்றிச் செய்தது புனிதமென்றான். 34

இவ்வாறாகிய இந்த வார்த்தையைச் சிவபிரான் கூறி நல்ல அருளைப் புரிதலோடும் அதனைக் கேட்ட பிரமதேவர் சொல்வார். ஐயனே! உமது திருக்குமாரர் எமக்குப் புரிந்த இத்தண்டனையானது குற்றமுடையது அன்று. ஆனால், அது அகந்தை முதலிய குறைகளுடன் விளங்கும் தன்மையை நீக்குவதற்கு உணர்வு தந்து யான் என்ற எனது அகந்தையை நீக்கி இதனால் நான் செய்யும் தீதான நிலைகளை மாற்றி என்னைப் புனிதமாக்கியது என்றார் பிரமதேவர்.

அப்பொழு தயனை முக்கண் ஆதியம் பரமன் காணுஉ
முப்புவ னத்தின் மேவும் முழுதுயிர்த் தொகைக்கும் ஏற்ற
துப்புற வதனை நன்று தூக்கினை தொன்மை யேபோல்
இப்பகல் தொட்டு நீயே ஈந்தனை யிருத்தி யென்றான் 35

அவ்வாறு கூறிய பிரமதேவரை அதுபொழுது எமது முக்கண் மூர்த்தியான சிவபிரான் பார்த்து பிரமனே! நீ இன்றுதொட்டு மூன்று உலகெங்கும் உள்ள முழுது உயிர்கட்கும் உள்ள புண்ணிய பாவ அனுபவங்களை நன்கு ஆராய்ந்து அதற்கேற்ப பழைமையேபோல் உனது படைப்புச் செயலைப் புரிந்து வாழ்ந்து வருவாய் என அருள் புரிந்தார்.

அருளுரு வாகும் ஈசன் அயற்கிது புகன்ற பின்னர்
முருகவேள் முகத்தை நோக்கி முறுவல்செய் தருளை நல்கி
வருதியால் ஐய என்று மலர்க்கையுய்த் தவனைப் பற்றித்
திருமணிக் குறங்கின் மீது சிறந்து வீற் றிருப்பச் செய்தான். 36

கருணையான அருளையே தமக்குத் திருமேனியாக உடைய ஈசன் இதனைப் பிரம தேவருக்குச் சொல்லியருளியபின்பு பின்னர் முருகக் கடவுள் முகத்தை நோக்கி புன் சிரிப்புக்கொண்டு அருளினைக் கொடுத்து "ஐயனே, இழகு வாவென எமது குமரனை தமது மலர்போலும் கையினை நீட்டிப் பிடித்து தமது அழகிய இரத்தின ஒளிபோ லும் சிவந்த தொடையின்மீது இருக்கும்படி செய்தார் சிவபிரான்.

காமரு குமரன் சென்னி கதுமென உயிர்த்துச் செக்கர்த்
தாமரை புரையுங் கையால் தழுவியே அயனுந் தேற்ரு
ஓமென உரைக்குஞ் சொல்லின் உறுபொரு ளுனக்குப் போமோ
போமெனில் அதனை யின்னே புகலென இறைவன் சொற்ருன். 37

தமது தொடையின்மீது வீற்றிருக்கின்ற அழகிய குமரனின் உச்சியின்மீது பல கால் அன்பால் முத்தமிட்டு செக்கர்போலும் சிவந்த தாமரை மலர்போலும் கையால் தடவிக்கொண்டு கேட்கிருர் சிவபிரான் முருகக் கடவுளை, "மைந்தனே! பிரமதேவ னும் தேடியறியாது திகைத்திட்ட 'ஓம்' என்னும் பதத்தின் பொருள் உனக்குத் தெரி யுமோ? அவ்வாருயின் உனக்கு தெரியுமாகில் உரைத்தருள்வாய்" எனச் சொல்லியருளினுர்.

முற்ருெருங் குணருநம் ஆதி முதல்வகேள் உலக மெல்லாம்
பெற்றிடும் அவட்கு நீமுன் பிறருண ராத வாற்ருல்
சொற்றதோ ரினைய மூலத் தொய்பொருள் யாருங் கேட்ப
இற்றென இயம்ப லாமோ மறையினுல் இசைப்ப தல்லால். 38

அப்போது முருகக் கடவுள் சொல்வார் "எல்லாவற்றையும் முழுதும் உணர் கின்ற ஆதிப் பிரமமான முதல்வனே கேள். உலகமெல்லாம் பெற்றவளாகிய எமது அம்மையார்க்கு நீ முன்னர் பிறர் அதை உணராதபடி இரகசியமாகச் சொன்ன அந்த மூலப் பழம்பொருளை யாருங் கேட்ப இங்கே வெளிப்படப் புகலலாமோ அதை மறைவாக உபதேசிக்கும் தன்மையை விடுத்து."

என்றலும் நகைத்து மைந்த எமக்கருள் மறையின் என்னுத்
தன்றிருச் செவியை நல்கச் சண்முகன் குடிலை யென்னும்
ஒன்ருெரு பதத்தி னுண்மை உரைத்தனன் உரைத்தல் கேளா
நன்றருள் புரிந்தா னென்ப ஞானநா யகனும் அண்ணல். 39

என்று முருகக் கடவுள் கூறியருளலும் சிவபிரான் அதனைக் கேட்டுச் சிரித்தருளி "மகனே! அப்படியாயின் எனக்கு அதை மறைவாக சொல்வாயாக!" என்று தமது திருச்செவியை தம்முடைய திருக்குமாரனின் உபதேசங் கேட்கும்படி சாய்த்து நிற்ப அதுபோது ஆறுமுகமுடைய பகவான் குடிலையாகிய ஓம் என்னும் பதத்தின் உண்மை நிலையான பொருளை உரைத்தனர். திருமகனுர் உபதேசமாக உரைத்த வார்த்தை யைக் கேட்டு நல்ல அருள் செய்தார் ஞானநாயகரான சிவபெருமான்,

அன்னதோர் ஐய மாற்றி அகமகிழ் வெய்தி அங்கண்
தன்னிளங் குமரன் றன்னைத் தலைமையோ டிருப்ப நல்கி
என்னையா ளுடைய நாதன் யாவரும் போற்றிச் செல்லத்
தொன்னிலை யமைந்து போந்து தொல்பெருங் கயிலை வந்தான். 40

அவ்வாருகிய உபதேச முறைமையால் சண்முகப் பெருமான் தந்தையாகிய சிவபிரானின் ஐயப்பாட்டை நீக்கி உள்ளம் பெரிதும் மகிழ்வெய்தும்படி செய்தலும் இதனுல் உள்ளம் மகிழ்வான எமது சிவபிரான் தமது இளம் திருக்குமாரனே அங்கு யாவர்க்கும் மேலான குருநாதன் என்னும் தலைமையோடும் இருக்கும்படி அவருக்கு அருள் கொடுத்து என்னை முற்றிலும் ஆளுடைய நாயகரான சிவபிரான் யாவரும் தம்மைச் சூழ்ந்து போற்றிசெய்து வர தாம் எழுந்தருளி வந்து நிலைபோலப் பழையபடி இடப வாகனத்துச் சென்றருளி மிகப் பழைமையான திருக்கைலாய மலை சேர்ந்தார்.

முன்புறும் அயன்மால் தேவர் முனிவரை விடுத்து முன்னேன்
தன்பெருங் கோயில் புக்கான் தாவில் சீர்க் கந்த வெற்பில்
பொன்புனை தவிசின் ஏறிப் புடைதனில் வயவர் போற்ற
இன்பொடு குமர மூர்ந்தி இனிது வீற் றிருந்தா னன்றே. 41

தமது முன்பு தம்மைச் சூழ்ந்து நிற்கும் பிரமதேவர், நாராயணக் கடவுள், தேவர் முனிவர் யாரையும் அவர்கள் இடங்கட்குச் செல்லுமாறு விடை கொடுத்து அனுப்பி விட்டு தனது செம்பொன்மயமான பெருங் கோயில் புகுந்தருளினர் சிவபிரான். இப்பால் குறைவிலாத சிறப்பினை உடைய கந்த மலையில் பொன்னுல் அலங்கார வனப்புடன் செய்த சிம்மாசனத்தினிடத்து பக்கராக வீரவாகு முதல் இலக்கத்து ஒன்பது பேரும் சூழ்ந்து போற்றும்படியாக பேருன்ப நிலையாகி குமர மூர்த்தி இனிது வீற்றிருந்தருளினர்.

ஆங்குறு குமரப் புத்தேள் அருமறைக் காதி யாகி
ஓங்குமெய்ப் பொருட்கு மேலாம் ஓரெழுத் துரையின் உண்மை
தீங்கற வணங்கிக் கேட்பச் சிறுமுனிக் குதவி மற்றும்
பாங்குறும் இறைவன் நூலும் பரிவினுல் உணர்த்தி ஞனல். 42

அவ்வாருக ஆங்கு உறைகின்ற குமாரக் கடவுள் அரிய வேதங்கட்கெல்லாம் முன் சொல்லப்படுகின்ற மேலோங்கிய எப்பொருட்கும் மேலான ஓர் எழுத்தாம் ஓம் என்னும் எழுத்தின் உண்மைப் பொருளைத் தனது தீங்கெல்லாம் நீங்கும்படியாக வணங்கிக் கேட்டருளிய அகத்திய முனிவருக்கு உபதேசித்துப் பின்னர் அவர் அகத்திய முனிவருக்குப் பாங்காக இறைவனுல் உபதேசம் செய்யப்பட்ட ஆகம நூல்களையும் உணர்த்திக் கொடுத்தார்.

அயனைச் சிறைநீக்கு படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் - 1265

---

பிரமனைக் குட்டிச் சிறை இருத்திப் பின்னர் விடுத்துத் திருவிளையாடல் புரிந்த தன்மையை அருணகிரியார் கந்தர் அலங்காரத்து இப்படிச் சொல்லித் துதித்து மகிழ்கிருர்:

பங்கேருகன் எனை பட்டோலையில் இட பண்டுதலை
தங்காலில் இட்டது அறிந்திலனே தனிவேல் எடுத்து
பொங்கோதம் வாய்விட்டு அலற பொன்னம் சிலம்பு புலம்ப வரும்
எங்கோன் அறிந்திடில் இனி நான்முகனுக்கு இருவிலங்கே.

# 18. விடைபெறு படலம்

எல்லை அன்னதின் மாலருள் கன்னியர் இருவர்
சொல்ல ரும்பெரு வனப்பினர் சுந்தரி அமுத
வல்லி என்றிடும் பெயரினர் கந்தவேள் வரைத்தோள்
புல்லும் ஆசையால் சரவணத் தருந்தவம் புரிந்தார். 1

இவ்வாறாகிய எல்லையிலே விஷ்னு பிரான் பெற்றருளிய கன்னியரான இரு புதல்விகள் எம்மால் சொல்ல இயலாத அவ்வளவு சிறந்த அழகினை உடையவர்கள். சுந்தரவல்லி, அமுதவல்லி என்னும் பெயரினை உடையவர்கள். முருகப்பிரானின் மலை போலும் திருத்தோளினை அணைந்து தழுவி இன்பம் பெறும் ஆசையால் சரவணப் பொய்கைக் கரையில் இருந்து அரிய தவம் புரிந்தார்கள்.

என்னை யாளுடை மூவிரு முகத்தவன் இரண்டு
கன்னி மாருமாய் ஒன்றிநோற் றிடுவது கருத்தில்
உன்னி யேயெழீஇக் கந்தமால் வரையினை யொருவி
அன்னை தோன்றிய இமகிரிச் சாரலை அடைந்தான். 2

என்னை முற்றிலும் ஆட்கொண்டு அருள்கின்ற ஆறுமுகமுடைய பகவான் இரண்டு கன்னிமாரும் ஒருமைப்பாட்டுடன் கூடித் தவம் செய்யும் தன்மையைத் தனது கருத்திலே கொண்டு எழுந்தருளி வந்து கந்த மலையை விட்டு நீங்கிச் சென்று தாயாகிய உமையம்மையார் தோன்றிய இமயமலைச் சாரலில் உள்ள சரவணப் பொய்கையிடம் சென்றார்.

பொருவில் சீருடை இமையமால் வரைக்கொரு புடையாஞ்
சரவ ணந்தனிற் போதலுந் தவம்புரி மடவார்
இருவ ரும்பெரி தஞ்சியே பணிந்துநின் றேத்த
வரம ளிப்பதென் கூறுதிர் என்றனன் வள்ளல். 3

தனக்கு நிகர் பிறிதில்லாத சிறப்புடைய இமயம் என்னும் பெரிய மலைக்கு ஒரு பக்கராகும் சரவணப் பொய்கை இடத்துச் சென்று எம்பிரான் சேர்தலும் அப்போது அங்கு தவம் புரிந்திட்ட பெண்கள் இருவரும் பெரிதும் அஞ்சிப் பணிந்து நின்று துதிப்ப அந்நேரம் ஆறுமுகமும் பன்னிரு கையுடனும் தரிசனமான கடவுள் அக் கன்னியரை நோக்கி ''உங்கட்கு என்ன வரம் நான் தரல் வேண்டும்? கூறுவீராக'' என்றார் எம் வள்ளல்.

மங்கை மார்தொழு தெம்மைநீ மதுவையால் மருவ
இங்கி யாந்தவம் புரிந்தனங் கருணைசெய் யென்ன
அங்கவ் வாசகங் கேட்டலும் ஆறுமா முகத்துத்
துங்க நாயகன் அவர்தமை நோக்கியே சொல்வான். 4

அப்போது அப்பெண்கள் தொழுது சொல்வார்கள் ''ஐயனே! எம்மை நீர் திருமணமுறையால் சேரும்படியாக இங்கு நாம் தவம் புரிந்தனம். அதற்குக் கருணை செய்வீராக'' எனவும் அப்போது அங்கு அந்த வாசகத்தைக் கேட்டலும் ஆறுமுகமுடையவராய் யாவர்க்கும் மேலான எமது கடவுள் ஈதொரு வார்த்தையை அவர்தமை நோக்கியே சொல்வார்.

முந்தும் இன்னமு தக்கொடி மூவுல கேத்தும்
இந்தி ரன்மக ளாகியே வளர்ந்தனை இருத்தி
சுந்த ரிப்பெயர் இளையவள் தொல்புவி தன்னில்
அந்தண் மாமுனி புதல்வியாய் வேடர்பால் அமர்தி. 5

''உங்கள் இருவரில் மூத்தவளாகிய இனிய இயல்புடைய அமுதவல்லியே! நீ மூவுலகமும் வணங்கும் இந்திரன் மகளாகியே வளர்ந்து இருப்பாயாக. அப்பால் இளையவளாகிய சுந்தரவல்லியே நீ பழைமையான இப்பூமியில் வந்து தண்ணளி உடைய சிவமுனிவன் மகளாகி வேடர் இடத்து வளர்வாயாக.

நன்று நீவிர்கள் வளர்ந்திடு காலையாம் நண்ணி
மன்றல் நீர்மையால் உங்களை மேவுதும் மனத்தில்
ஒன்றும் எண்ணலீர் செல்லுமென் றெம்பிரான் உரைப்ப
நின்ற கன்னியர் கைதொழு தேகினர் நெறியால். 6

இவ்வாறு இத்திறமாக நீவிர் இருவரும் இருக்குங்கால் யாம் அங்கு சேர்ந்து திருமண முறையால் உங்களை நாம் மேவுவோம். உங்கள் மனத்தில் வேறொன்றும் எண்ணலீர் செல்வீராக என எம்பிரான் உரைப்ப அங்கு நின்ற கன்னியர்கள் எம்பிரானைக் கை தொழுது இறைவன் ஆணை வழியே நெறியாகச் சென்றார்கள்.

ஏகு மெல்லையில் அமுதமா மென்கொடி யென்பாள்
பாக சாதனன் முன்னமோர் குழவியாய்ப் படர்ந்து
மாக மன்னநின் னுடன்வரும் உபேந்திரன் மகள் யான்
ஆகை யால்எனைப் போற்றுதி தந்தையென் றடைந்தாள். 7

இவ்வாறு ஏகும் எல்லையில் அமுதவல்லி என்னும் பூங்கொடிபோலும் சாயலுடையாள் இந்திர தேவன் முன்பாக ஓர் பெண்குழந்தை வடிவுடன் சேர்ந்து இந்திரனைப் பார்த்துச் சொல்வாள் ''தேவ உலக அரசனே! இந்திரனே! நான் நின்னுடன் பிறந்த உபேந்திரனுடைய புதல்வியாவேன். ஆகையால் உனக்கும் மகளானேன். என்னை வளர்த்துத் தந்தையெனும்படி காப்பாயாக'' என்றாள் அமுதவல்லி.

விஷ்ணு மூர்த்தி இந்திரனைக் காக்கும்பொருட்டாக காசிப முனிவருக்கு அதிதி என்னும் பெண்ணிடத்தே தோன்றி உபேந்திரன் என்னும் பெயருடன் இந்திரனுடைய பகைவரை அழித்து இந்திரன் பக்கராக இருத்தலால் விஷ்ணு மூர்த்திக்கு உபேந்திரன் என்னும் பெயர் உண்டு. இதனாலே அமுதவல்லி அம்மையாரும் தம்மைப்பற்றிக் கூறும் பொழுது உபேந்திரன் மகள்தான் விஷ்ணு மூர்த்தியின் மகளானமையின் எனத் துணிந்து கூறினாள்.

பொன்னின் மேருவில் இருந்தவன் புதல்வியை நோக்கி
என்னை யீன்றயாய் இங்ஙனம் வருகென இசைத்து
தன்ன தாகிய தனிப்பெருங் களிற்றினைத் தனது
முன்ன ராகவே விளித்தனன் இத்திறம் மொழிவான். 8

தன்னிடத்து குழநதை வடிவாய் வந்து அடைந்த புதல்வியை பொன்னாலான மகாமேரு மலையில் இருந்த இந்திரன் பார்த்து 'என்னைப் பெற்ற அம்மையே வருக' என்று அன்புடன் கூறி அழைத்து பின்னர் தனது வாகனமான ஐராவதம் என்னும் யானையை அங்கு வரும்படி கூப்பிட்டு இந்த வார்த்தையை அந்த யானைக்குச் சொல்வான் இந்திரன்.

இந்த மங்கைநந் திருமக ளாகுமீங் கிவளைப்
புந்தி யன்பொடு போற்றுதி இனையவள் பொருட்டால்
அந்த மில்சிறப் பெய்துமே லென்றலும் அவளைக்
கந்த மேற்கொடு நன்றெனப் போயது களிறு.

''யானையே கேள் இந்தப்பெண் நமது திருக்குமாரத்தியாகும். ஆகவே நீ இங்கு இவளை மனத்தில் எக்காலமும் நீங்காத அன்போடு காத்து வளர்ப்பாயாக. இவள் பொருட்டால் நாங்கள் எல்லாரும் எல்லையற்ற பெருஞ் சிறப்பினை பின்னர் அடைவோம்'' என இந்திரதேவன் சொல்லலும் அப்போது அது கேட்ட ஐராவதம் என்னும் யானை ''அரசே! அது நன்று'' எனக் கூறி உடன் குழந்தை வடிவினளான அமுதவல்லி அம்மையாரைத் தனது பிடரியின் மேலாகத் தூக்கிவைத்துச் சுமந்து கொண்டு போயது. 9

கொவ்வை போலிதழ்க் கன்னியை மனேவதி கொடுபோய்
அவ்வி யானையே போற்றிய தனையகா ரணத்தால்
தெய்வ யானைஎன் றொருபெயர் எய்தியே சிறிது
நொவ்வு றாதுவீற் றிருந்தனள் குமரனை நுவன்றே.

கொவ்வைப் பழம்போன்ற இதழினை உடைய கன்னியை ஐராவதயானை மனேவதி நகரிற் கொண்டுசென்று அந்த யானையே அமுதவல்லி அம்மையாரை வளர்த்த காரணத்தால் தெய்வயானை என்று ஒரு பெயரை எம்பிராட்டி பெற்று சிறிதேனும் துயரம் குறைவு யாதும் இல்லாமல் வீற்றிருந்தருளினாள் என்றும் இளமை வாய்ந்த கோலமுடைய குமரக்கடவுளின் நாமமே சொல்லியவாறு. 10

பெருமை கொண்டிடு தெண்டிரைப் பாற்கடல் பெற்றுத்
திரும டந்தையை அன்புடன் வளர்த்திடும் திறம்போல்
பொருவில் சீருடை அடல் அயிராவதம் போற்ற
வரிசை தன்னுடன் இருந்தனள் தெய்வத மடந்தை.

பெருமை கொண்டு விளங்கும் தெள்ளிய திரைகளை உடைய பாற்கடல் தான் மகாலெட்சுமியைப் பெற்று எடுத்து வளர்த்திடும் தன்மையே போலத் தனக்கு வேறொன்றும் ஒப்புச் சொல்லமுடியாத வலிமை உடைய வெள்ளை நிறம் பொருந்திய ஐராவதம் என்னும் யானை வளர்த்துவர சகல உபசாரத்தோடும் தெய்வயானை அம்மையார் மனேவதி என்னும் நகரத்து இருந்தாள். 11

முற்று ணர்ந்திடு சுந்தரி யென்பவள் முருகன்
சொற்ற தன்மையை உளங்கொடு தொண்டைநன் னாட்டில்
உற்ற வள்ளியஞ் சிலம்பினை நோக்கியாங் குறையும்
நற்ற வச்சிவ முனிமக ளாகவே நடந்தாள்.

இப்பால் எல்லாவற்றையும் தாமாக உணரும் தன்மைவாய்ந்த சுந்தரவல்லி அம்மையார் முருகக்கடவுள் தமக்குச் சொல்லியருளிய அத்தன்மையைத் தனது மனத்தினுள்ளே சிந்தித்து அதன் நியமப்படி தொண்டை நாட்டில் உற்ற வள்ளி மலையை நோக்கியவண்ணம் அங்கு உறைந்து தவம் செய்கின்ற சிவமுனிவன் மகளாக அவதரிக்கும்படி நடந்தருளிச் சென்றாள். 12

இந்த வண்ணம்இவ் விருவர்க்கும் வரந்தனை ஈந்து
கந்த மால்வரை யேகியே கருணையோ டிருந்தான்
தந்தை யில்லதோர் தலைவனைத் தாதையாய்ப் பெற்று
முந்து பற்பகல் உலகெலாம் படைத்ததோர் முதல்வன்.

இந்தவண்ணம் அந்தக் கன்னியர் இருவர்க்கும் வரந்தனை எம்பிரான் கொடுத்தருளி பின்னர் கந்தமலையிடத்துத் திரும்பவும் சென்று உலகருள் கருணையோடு இருந்தார். அவர் யாரெனில் தந்தை இல்லதோர் தலைவனுன சிவபிரானைத் தமக்கு தாதையாகப் பெற்றும் தான் முன்னர் உலகம் எல்லாவற்றையும் பலநாள் படைத்தருளி நின்ற பகவான், தனக்கு ஒரு மூலப்பொருள் இல்லாத சிவபிரானிடத்துத் தோன்றினுலும் தானே எல்லாவற்றையும் படைத்தார் என்றமையால் எங்கள் பெருமானுகிய முருகனும் மூலமும் முடிவும் இல்லாதவன் எனும் பொருள்படக் கூறினர். 13

இத்திறஞ் சிலபக லிருந்து பன்னிரு
கைத்தல முடையவன் கயிலை மேலுறை
அத்தனெ டன்னைதன் னடிப ணிந்திடச்
சித்தம துன்னினன் அருளின் செய்கையால்.

இத்திறமாக கந்தமலை யிடத்து ஆறுமுகப்பிரான் இருந்து பின்னர் ஒருநாள் பன்னிரண்டு திருக்கைகளை உடைய பகவான் திருக்கைலாய மலைமேல் உறைகின்ற தந்தையாகிய சிவபிரானையும் தாயாராகிய உமையம்மையாரையும் சென்று திருவடி பணிய தமது சித்தத்தில் நினைந்தருளினர் அருளின் செய்கையால். தந்தை தாய் பேணுவது மைந்தர் கடன் எனுந்தன்மையை உலக மக்களுக்குக் காட்டி அருளவும் தேவர் துயரம் நீக்கவும் நினைந்தமையால் அருளின் செய்கை எனப்பட்டது. 14

எள்ளருந் தவிசினின் றிழிந்து வீரராய்
உள்ளுறும் பரிசனர் ஒருங்கு சென்றிடக்
கொள்ளையஞ் சாரதர் குழாமும் பாற்பட
வள்ளலங் கொருவியே வல்லை யேகினன்.

எவ்விதத்தாலும் குறைகாண முடியாதபடி நிறைவாகிய சிம்மாசனத்தில் இருந்து கீழே இறங்கி எமது பெருமான் வீரவாகுதேவர் முதலாகிய பரிசனர்கள் இலக்கத் தொன்பது பேரும் ஒருங்கே கூடி எம்பிரானுடன் சென்றிடும்படியாகவும் கணக்கற்ற பூதங்கள் யாவும் கூட்டமாகத் திரண்டுவர எமது அருள் வள்ளலாகிய பெருமான் கந்தமலையை விட்டு நீங்கித் திருக்கைலாய மலையை நோக்கி அதிவிரைவாகப் போயினர்.

ஏயென வெள்ளிவெற் பெய்தி யாங்ஙனங்
கோயிலின் அவைக்களங் குறுகிக் கந்தவேள்
தாயொடு தந்தையைத் தாழ்ந்து போற்றியே
ஆயவர் நடுவுற அருளின் வைகினன்.

'ஏ' எனும் அளவில் வெள்ளியாலாகிய கந்தமலையிடத்துச் சென்ற முருகக் கடவுள் அங்கு திருக்கைலாய மலைமேல் சிவபிரானுடைய செம்பொற் கோயிலின் சபையின் உள்ளே சென்றருளி எல்லார்க்கும் அம்மையும் அப்பனும் ஆகிய சிவபிரானை உமையம்மையார் திருமுன்பு தாழ்ந்து போற்றி அவர்கள் இருவரின் நடுவணுகப் பொருந்தி அருளோடும் வீற்றிருந்தருளினர். 16

அண்ணலங் குமரவேள் அங்கண் வைகலும்
விண்ணவர் மகபதி மேலை நாண்முதல்
உண்ணிகழ் தங்குறை யுரைத்து நான்முகன்
கண்ணனை முன்கொடு கயிலை யெய்தினர்.

மேலாகிய தலைவனான குமரக்கடவுள் அப்பன் அம்மை நடுவனாக அங்கு இருத்தலும் தேவர்களும் தலைவனான இந்திரனும் தங்கட்கு எத்தனையோ காலங்கட்கு முன்புதொட்டே ஏற்பட்டுள்ள அசுரர்களால் வந்த உள்ளத்துயரம் தரும் குறைகளை பிரமன் விஷ்ணுமூர்த்தி இவர்கட்கும் சொல்லி அவர்களையும் அழைத்துக் கொண்டு திருக்கைலாயமலையிற் சேர்ந்தார்கள். 17

அடைதரும் அவர்தமை அமலன் ஆலயம்
நடைமுறை போற்றிடும் நந்தி நின்மெனத்
தடைவினை புரிதலுந் தளர்ந்து பற்பகல்
நெடிதுறு துயரொடு நிற்றல் மேயினர்.

அவ்வாறு தங்கள் குறைகளைச் செப்பி ஈசன் அருளால் நன்னிலையடைய எண்ணி திருக்கைலாயமலையை அடைந்த இந்தப் பிரம விஷ்ணு இந்திராதியர்களை சிவபிரானின் கோயில் வாய்தலில் காவல்புரியும் நந்தியங்கடவுள் உள்ளே இவர்களைச் செல்ல விடாது தடை செய்தலும் அதனால் கோவில் வாய்தலிற் தடை நேர்ந்ததைக் குறித்து உள்ளம் தளர்வாகி பெரும் துயரத்துடன் பற்பல நாட்களாக அங்கு நின்றார்கள். 18

அளவறு பற்பகல் அங்கண் நின்றுளார்
வளனுறு சிலாதனன் மதலை முன்புதம்
உளமலி இன்னலை யுரைத்துப் போற்றலுந்
தளர்வினி விடுமின்என் றிதனைச் சாற்றினன்.

அளவற்ற பல நாட்கள் அங்கு கைலாயமலைக் கோவில் வாய்தலில் தளர்வுடன் நின்ற இவர்கள் வளம் தரும் சிறப்புடைய சிலாதன முனிவரின் திருக்குமாரனான நந்தியெம்பெருமானுக்கு தம்முடைய உள்ளம் நிறைந்த இன்னல்களை எல்லாம் எடுத்துச்சொல்லி போற்றி செய்து வணங்கி நிற்றலும் அதை உணர்ந்துகொண்ட கருணை வடிவான நந்தியங் கடவுள் ''தேவர்களே! உமது தளர்ச்சியை இனி நீங்கள் விடுங்கள்'' எனக்கூறி இதனைச் சொல்லியருளினர். 19

தங்குறை நெடும்புனற் சடில மேன்மதி
யங்குறை வைத்திடும் ஆதி முன்புபோய்
நுங்குறை புகன்றவன் நொய்தின் உய்ப்பனல்
இங்குறை வீரென இயம்பிப் போயினன்.

''திருச்சடைமேற் தங்கி உறைகின்ற கங்கா நதியுடன் குறையான கலை உடைய இளம்பிறை அணிந்து வைத்தருளும் ஆதியான சிவபிரான்முன்பு யான் சென்று உங்கள் குறைகளைச் செப்பி அவ்விடத்து உம்மை அழைத்துச் செல்வேன். அதுவரையும் இங்கு நீவிர் இருப்பீராக'' என நந்திதேவர் கூறிவிட்டுக் கோயிலின் உள்ளே சென்றார். 20

போயினன் நந்தியம் புனிதன் கண்ணுதற்
றூயனை வணங்கினன் தொழுது வாசவன்
மாயவன் நான்முகன் வானு ளோரெலாங்
கோயிலின் முதற்கடை குறுகினு ரென்றான்.

இவ்வாறு சென்ற திருநந்திதேவர் அங்கு அழகிய கோலமும் புனிதமும் ஒருங்குடன் சிறக்கும் குறைவிலா நிறைவாகிய நெற்றிக் கண்ணுடன் பொருந்தும் பெருமானை வணங்கித் தொழுது போற்றிச் சொல்வார் ''பெருமானே! இந்திரன், நாராயணக்கடவுள், பிரமதேவர், தேவ உலகு உள்ளோர் எல்லாரும் கோவிலின் முதலாவது வாய்தலில் வந்து சேர்ந்துள்ளார்கள்'' எனச் சொல்லியருளினர். 21

அருளுடை யெம்பிரான் அனையர் யாரையுந்
தருதிநம் முன்னரே சார வென்றலும்
விரைவொடு மீண்டனன் மேலை யோர்களை
வருகென அருளினன் மாசில் காட்சியான்.

அது கேட்டருளிய அருள் உடைய எமது பெருமான் திருநந்திதேவரைப் பார்த்து ''அப்படியாயின் அவர்கள் யாவரையும் நமது திருமுன்பு வந்து சேரும்படி அழைத்து வருவாயாக'' எனக் கூறியருளலும் அதுகேட்ட நந்தியங்கடவுள் விரைவாக மீண்டு வந்து அங்கு வாய்தலில் காத்து நின்ற முன்னோரான பிரமவிஷ்ணு, இந்திராதிதேவர்களை ''எல்லீரும் உள்ளே வாருங்கள்'' என அழைத்தார் குறைவிலா நற்காட்சிப் பேறுடைய நந்தியங்கடவுள். 22

விடைமுகன் உரைத்தசொல் வினவி யாவருங்
கடிதினி லேகியே கருணை வாரிதி
அடிமுறை வணங்கினர் அதற்குள் வாசவன்
இடருறு மனத்தினன் இனைய கூறுவான்.

இடபத்தின் முகமுடைய நந்தியங் கடவுள் உரைத்த இந்த வார்த்தையைக் கேட்ட யாவரும் அதிவிரைவாக உள்ளே சென்று அங்கு கருணைக் கடலான சிவபிரானின் திருவடிகள் முன்பு வணங்கினர்கள். அவ்வாறாக வணங்கியவர்களில் ஒருவன் இந்திரதேவனாவான். இடர்ப்படும் மனத்தினஞ்கிய அவன் தனது குறை தரிக்கொணாத படியால் இனைய வார்த்தைகளை எம்பிரானிடம் வணக்கத்துடன் சொல்வான். 23

பரிந்துல கருள்புரி பரையொ டொன்றியே
இருந்தருள் முதல்வகேள் எண்ணி லாஉகம்
அருந்திறற் சூர்முதல் அவுணர் தங்களால்
வருந்தின மொடுங்கினம் வன்மை இன்றியே.

''அகில உலகங்களையும் தந்தருளி அருளே வடிவு நிறைவாகிய அம்பாளுடன் ஒன்றி நிறைந்து உறைகின்ற முதல்வனே! கேட்பீராக. நாங்கள் எண்ண முடியாத பல யுகங்களான காலம்வரை வெல்லமுடியாத அரிய வலிமை உடைய சூரனும் அவன் பரிவாரமான அசுரராலும் வருந்தித் துன்பப்பட்டுள்ளோம். நாங்கள் யாவரும் எங்கள் வலிமை யாவும் நீங்கி ஒடுங்கியுள்ளோம்.'' 24

அந்தமில் அழகுடை அரம்பை மாதரும்
மைந்தனும் அளப்பிலா வானு ளோர்களும்
வெந்தொழில் அவுணர்கள் வேந்தன் மேவிய
சிந்துவின் நகரிடைச் சிறைக்கண் வைகினர்.

''பேசொணுத முடிவில்லா அழகினை உடைய தேவப் பெண்களும் எனது மைந்தனை சயந்தன் என்பானும் எண்ணற்ற எத்தனையோ தேவர்களிற் பலரும் கொடுந்தொழில் செய்கின்ற அசுரர் தலைவனை சூரபன்மன் வீற்றிருந்தருளுகின்ற சமுத்திர நடுவணை வீரமகேந்திரபுரத்தே சிறையில் அகப்பட்டு இருக்கிறார்கள். 25

இழிந்திடும் அவுணரா லியாதொர் காலமும்
ஒழிந்திட லின்றியே உறைந்த சீரொடும்,
அழிந்ததென் கடிநகர் அதனை யானிவண்
மொழிந்திடல் வேண்டுமோ உணர்தி முற்றுநீ.

''இழிவான செயல்களைப் புரிதலிற் கெட்டிக்காரரான அசுரர்களால், எக்காலத்திலும் ஒழியாதபடி நிறைந்த சிறப்பினை உடைய எமது தேவலோகமானது அழிக்கப்பட்டு அழிந்து போயது. அவ்வாறு அங்கு இழைக்கப்பட்ட அநீதிகளை யான் இங்கு தேவரீருக்குச் சொல்லவும் வேண்டுமோ. எல்லாவற்றையும் நீ உணர்வாய் பெருமானே.'' 26

முன்னுற யான்தவம் முயன்று செய்துழித்
துன்னினை நங்கணோர் தோன்ற லெய்துவான்
அன்னவ னைக்கொடே அவுணர்ச் செற்றுநும்
இன்னலை யகற்றுதும் என்றி எந்தைநீ.

''தங்கள் முன்பாக நான்தவம் செய்து என்துயர் நீக்க வேண்டிய பொழுது தேவரீர் எமதுமுன் தெரிசனப்பட்டு என்னை நோக்கி ''இந்திரனே! கவலையுருதே' உங்கள் குறை தீர்க்க எம்மிடத்தே ஒரு கடவுள் வந்து குழந்தையாகத் தோன்றுவான். அந்தக் கடவுளைக் கொண்டு பகைவராகிய அசுரர்களை அழித்து உங்கள் துயரங்களையும் நீக்குங்கள்'' என்று வாய்ச் சொல்லருளினீர் எந்தை பிரானே!'' 27

அப்படிக் குமரனும் அவத ரித்துளன்
இப்பகல் காறுமெம் மின்னல் தீர்த்திலை
முப்புவ னந்தொழு முதல்வ தீயரேந்
துப்புறு பவப்பயன் தொலைந்த தில்லையோ.

''அப்படி தேவரீரிடத்துக் குமரனும் அவதரித்துள்ளார். ஆனால் இன்றைய நாள் வரைக்கும் எமது இன்னல்கள் தீர்ந்தபாடில்லை. மூன்று புவனங்களாலும் தொழப்படும் எமது முதல்வா! அடியேங்களை வருத்துவதற்குக் காரணமாக இருக்கின்ற பாவவினையின் பயனாகிய ஊழ் இன்னமும் தொலைந்தபாடில்லையோ?'' 28

சூருடை வன்மையைத் தொலைக்கத் தக்கதோர்
பேருடை யாரிலை பின்னை யானினி
யாரொடு கூறுவன் ஆரை நோகுவன்
நீருடை முடியினேய் நினது முன்னலால்.

''சூரன் என்பவனின் வலிமையைத் தொலைக்கும்படியான வலிமை உடையார் இங்கு ஒருவர்தானும் இல்லை. ஆகவே நான் இனி யாரோடு என்குறையைக் கூறுவேன்? இனி யாரை நொந்து வேண்டுவேன்? யாவர்க்கும் குளிர்ச்சியெய்தும்படி விளங்கும் கங்கையாற்றை சடை முடியிலே தரித்தருளும் கடவுளாகிய நீர் ஒருவரே அல்லாது எனக்கு வேறு யார் உளர்?''

கங்கைச் சடையுடைய கடவுளைக் கும்பிட்டோர்க்கு பங்கம்தான் வந்திடுமோ என்ற யோகசுவாமிகள் திருவாக்கும் ஒப்ப நோக்கத்தக்கது. 29

சீகர மறிகடற் சென்று நவ்வி சேர்
காகம தென்னஉன் கயிலை யன்றியே
ஏகவோர் இடமிலை எமக்கு நீயலால்
சோகம தகற்றிடுந் துணைவர் இல்லையே.

''குளிர்மை வாய்ந்த திரைகளை உடைய கடலின் இடத்தே செல்லுகின்ற கப்பலின் பாய் மரத்திலே தங்கி இருக்கின்ற காகம் ஒன்றிற்கு அந்தப் பாய்மரம் அல்லாது வேறு எதைத் தஞ்சமாக அடையமுடியும்? அதேபோல் பெருமானே! நானும் உமது கைலை மலையை அன்றி செல்லுவதற்கு வேறோர் இடமுமில்லை. எங்களுக்கெல்லாம் சோகம் அகற்றுந் துணைவர் உம்மையன்றி வேறு யாருமில்லை.'' 30

ஏற்றெழு வன்னிமேல் இனிது துஞ்சலாந்
தோற்றிய வெவ்விட மெனினுந் துய்க்கலாம்
மாற்றலர் அலைத்திட வந்த வெந்துயர்
ஆற்றரி தாற்றரி தலம்இப் புன்மையே.

''பகவானே! சுவாலித்தெரிகின்ற நெருப்பின் மேலாகவும் படுத்து நித்திரை செய்யலாம். உலகில் தோன்றிய கொடிய நஞ்சு என்றாலும் அதனை உண்டு கொள்ளலாம். ஆனால் பகைவர் எம்மை அலைத்திடும் படியாக துன்புறுத்துகின்ற அந்த வேதனையை நாங்கள் தாங்கமாட்டோம். ஐயா இந்தக் கீழ்மையான துயரம் தாங்க முடியாத ஒன்று'' என்றான் இந்திரன். 13

தீதினை யகற்றவுந் திருவை நல்கவுந்
தாதையர் அல்லது தனயர்க் காருளர்
ஆதலின் எமையினி அளித்தி யாலென
ஓதினன் வணங்கினன் உம்பர் வேந்தனே.

''பிள்ளைகளுக்குத் தீங்கு நேர்ந்தால் அத்தீங்கை நீக்கவும் செல்வத்தைக் கொடுக்கவும் தந்தை அதனைச் செய்வதே ஒழிய வேறு யார் அதனைச் செய்ய முடியும் ஆதலினால் ஆதியான எமது பிதாவே! எங்களை நீர் இனிக் காப்பீராக'' என ஓதி வணங்கினான் தேவர்கட்கு எல்லாம் தலைவனான இந்திரன். 32

அப்பொழு தரியயன் ஐய வெய்யசூர்
துப்புடன் உலகுயிர்த் தொகையை வாட்டுதல்
செப்பரி தின்னினிச் சிறிதுந் தாழ்க்கலை
இப்பொழு தருள்கென இயம்பி வேண்டினர்.

அவ்வாருகிய நேரத்து விஷ்ணு மூர்த்தியும் பிரமதேவரும், ''ஐயனே, பகவானே! கொடிய அசுரர் தலைவனுன சூரபன்மன் கர்வத்துடன் உலக உயிர்களை வாட்டித் துயருறுத்தும் கொடுமையான செய்கைகளை இங்கு நாம் எடுத்துச் சொல்ல முடியாது. தேவரீர் மேலும் தாமதம் செய்யாது இப்போதே எமக்கு அருள் செய்வீராக; இத்துயரம் நீக்குவீராக'' எனச் சொல்லி வேண்டினுர்கள். 33

**இகபரம் உதவுவோன் இவற்றைக் கேட்டலும்**
**மிகவருள் எய்தியே விடுமின் நீர்இனி**
**அகமெலி வுறலென அருளி ஆங்கமர்**
**குகன்முகம் நோக்கியே இனைய கூறுவான்.**

இகம், பரம் ஆகிய இவ்வுலகமும், உடலம் நீங்கிய பின் செல்லும் அவ்வுலகமும் ஆகிய எவ்விடத்தும் உயிர்கட்கு இன்பங்களை வேண்டியாங்கு வேண்டியபடி கொடுப்பவராகிய சிவபிரான் இவற்றைக் கேட்டலும் மிகவும் கருணைகொண்டாராய் அவ்விடத்து அமர்ந்தருளுகின்ற முருகப்பிரான் திருமுகத்தை நோக்கி இனைய வார்த்தைகளைச் சொல்லியருள்கின்ருர். 34

**பாரினை யலைத்துப் பல்லுயிர் தமக்கும் பருவரல் செய்துவிண் ணவர்தம்**
**ஊரினை முருக்கித் தீமையே இயற்றி யுலப்புரு வன்மை கொண் டுற்ற**
**சூரனை யவுணர் குழுவொடுந் தடிந்து சுருதியின் நெறிநிறீஇ மகவான்,**
**பேரர சளித்துச் சுரர்துயர் அகற்றிப் பெயர்தியென் றனன்எந்தை பெருமான்.**

''எமது மைந்தனே! நீ சென்று, பூமியை அலைவு செய்து அங்கு வாழும் பல உயிர்கட்கும் துயரம் புரிந்து தேவர்களின் உலகத்தை நெருப்பிட்டு எரித்துச் சாம்பராக்கித் தீமையையே நாள்தோறும் செய்து எக்காலமும் அழியாத வலிமைகொண்டுற்ற சூரபன்மனை அசுரர்களையோடும் அழித்து வேதங்களிற் சொல்லிய மார்க்கம் உலகில் நிறுவும்படி நிலையாக்கி இந்திரதேவனுடைய தேவ அரசபதவியை மீண்டும் கொடுத்துத் தேவர் துயரம் அகற்றிப் பின்னர் எம்பால் வருவாயாக'' எனச் சொல்லியருளினர். 35

**அருத்திகொள் குமரன் இனையசொல் வினவி அப்பணி புரிகுவ னென்னப்**
**புரத்தினை யட்ட கண்ணுதல் பின்னர்ப் பொள்ளென உள்ளமேற் பதினேர்**
**உருத்திரர் தமையும் உன்னலும் அன்னேர் உற்றிட இவன்கையிற் படையாய்**
**இருத்திரென் றவரைப் பலபடை யாக்கி ஈந்தனன் எம்பிரான் கரத்தில்.**

எல்லா உயிர்களிடமும் அன்பான முருகக்கடவுள் சிவபிரான் சொல்லைக் கேட்டு ''தந்தையே! அப்பணியை யான் செய்கிறேன்'' எனலும் அவ்வேளை முப்புரங்களையும் சிரிப்பால் எரித்தருளிய எங்கள் சிவபிரான் திடீரென தமது உள்ளத்தில் பதினெரு உருத்திர மூர்த்திகளை நினைத்தலும் அவர்கள் பதினெருவரும் இதை உணர்ந்து அங்கு வருதலும் சிவபிரான் அவர்களைப் பார்த்து ''நீங்கள் அனைவரும் எமது மகன் திருக்கையில் பதினெரு படைகளாக இருப்பீராக'' என்று அவர்களைப் பதினெரு வகையான ஆயுதங்களாக்கி முருகப்பிரான் திருக்கையில் கொடுத்தார். 36

**பொன்றிகழ் சடிலத் தண்ணல்தன் பெயரும் பொருவிலா உருவமுந் தொன்னுள்**
**நன்றுபெற் றுடைய உருத்திர கணத்தோர் நவிலருந் தோமரங் கொடிவாள்**
**வன்றிறற் குலிசம் பகழியங் குசமும் மணிமலர்ப் பங்கயந் தண்டம்**
**வென்றிவின் மழுவு மாகிவீற் றிருந்தார் விறல்மிகும் அறுமுகன் கரத்தில்;**

பொன்போல் மிளிரும் சடையுடைய சிவபிரான் தனது பெயரையும் நிகரில்லாத வடிவத்தையும் முன்னுளில் நன்ருகப் பெற்று விளங்கும் பதினெரு உருத்திரரும் தமது குமரனுடைய பன்னிரு திருக்கைகளில் சொல்லற்கரிய வலியுடைய தோமரமும் கொடியும், வாளும், வலியான திறனுடைய வச்சிரமும், அம்பும், அழகிய அங்குசமும், மணியும், தாமரைப் பூவும், தண்டாயுதமும் வெற்றிதரும் வில்லும், மழுவாயுதமும் கைக்கோடரியும் ஆகிய பதினெரு படைகளாகி வீற்றிருந்தார்கள் வலிமை மிக்க ஆறு முகப்பிரானுடைய பன்னிருகைகளிலே. 37

ஆயதற் பின்னர் ஏவில்மூ தண்டத் தைம்பெரும் பூதமும் அடுவ
தேயபல் லுயிரும் ஒருதலே முடிப்ப தேவர்மேல் விடுக்கினும் அவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயிர் உண்பதெப் படைக்கும்
நாயகமாவ தொருதனிச் சுடர்வேல் நல்கியே மதலேகைக் கொடுத்தான்.

அன்னதன் பின்னர் எமது சிவபிரான் இப்படையை விடுத்தால் எல்லா அண்டங் களேயும் ஆகாயம் முதல் ஐந்து பூதங்களேயுமே இல்லாமல் அழிப்பதும், உலகில் எங்கு உள்ள உயிரையும் ஒரு தலேயாக ஒரே மூச்சில் முடிப்பதும், எவர்மேல் விடுத்தாலும் அவர்களுடைய திறல்களேயும் வரங்களேயும் சிந்தி அழித்து மேலான அவருடைய உயிரை உண்பதும், எப்படைகளுக்கும் நாயகமாகி இருப்பதும் ஆன தன்னந்தனியான சுடர்விட்டுப் பிரகாசிக்கும் வேற்படை ஒன்றினே தாம் படைத்து தமது திருக்குமாரரின் திருக்கையிற் கொடுத்தார். 38

அன்னதற் பின்னர் எம்பிரான் றன்பா லாகிநின் றேவின புரிந்து
மன்னிய இலக்கத் தொன்பது வகைத்தா மைந்தரை நோக்கியே எவர்க்கும்
முன்னவ ஞம்இக் குமரனே டேகி முடிக்குதிர் அவுணரை யென்ஞத்
துன்னுபல் படையும் உதவியே சேய்க்குத் துணைப்படை யாகவே கொடுத்தான்.

அன்னதன் பின்னராக எம்பெருமான் தன்குமரன் பக்கராகி நின்று அவர் ஏவிய கருமங்களேச் செய்து பொருந்தி இலக்கத்து ஒன்பது வீரர் எனும்படி நின்ற தனது பிள்ளேகளே நோக்கிச் சொல்வார் ''இங்கு இருக்கும் எவர்க்கும் முன்னவனுன எமது குமாரனேடு நீங்களும் சென்று அசுரர்களே முடிவு செய்வீராக'' என்று அவர் களுக்கும் மேலான நல்ல படைக்கலங்களே உதவி தமது மகனுருக்குத் துணையான படைகளாகும்படி கொடுத்தார், 36

நாயகன் அதற்பின் அண்டவா பரணன் நந்தியுக் கிரனேடு சண்டன்
காயெரி விழியன் சிங்கனே முதலாங் கணப்பெருந் தலேவரை நோக்கி
ஆயிர விரட்டி பூதவெள் ளத்தோ டறுமுகன் சேனேயாய்ச் சென்மின்
நீயிரென் றருளி அவர்தமைக் குகற்கு நெடும்படைத் தலேவரா அளித்தான்,

சிவபிரான் அதன்பின்னுக அண்டாபரணன், நந்தி, உக்கிரன், சண்டன், அக்கி னிக் கண்ணன், சிங்கன் முதலாகச் சொல்லும் பூதத் தலேவரைப் பார்த்து ''நீங்கள் யாவரும் இரண்டாயிரம் வெள்ளம் என்னும் கணக்கினே உடைய பூதங்களோடும் புறப்பட்டு ஆறுமுகக் கடவுளின் சேனேகளாகப் பொருந்திச் செல்லுங்கள்'' எனக் கூறியருளி அவர்கள் யாவரையும் முருகப் பிரானுக்கு பெரிய படைத் தலேவர்களா கக் கொடுத்தருளினர். 40

ஐம்பெரும் பூத வன்மையும் அங்கண் அமர்தரும் பொருள்களின் வலியுஞ்
செம்பது மத்தோ னாதியாம் அமரர் திண்மையுங் கொண்ட தோர் செழுந்தேர்
வெம்பரி இலக்கம் பூண்டது மனத்தின் விரைந்துமுன் செல்வதொன் றதனை
எம்பெரு முதல்வன் சிந்தையா லுதவி யேறுவான் மைந்தனுக் களித்தான்.

மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பெரிய பூதங்களின் வலியையும், இப்பூதங்களில் இருக்கின்ற எந்தவிதமான உயிர்வர்க்கங்களின் வலியையும், செந்தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமதேவன் முதலாகச் சொல்லப்படுகின்ற சகலத்தினதும் திடவலியும் கொண்டதாகியதும் அழகு நிரம்பியதும், ஓர் இலக்கம் தொகை உடைய குதிரை பூண்டதுமாய், மனவேகத்திலும் விரைவாகச் செல்லக்கூடியதுமான தேர் ஒன்றினை எம்பெரு முதல்வரான சிவபிரான் மனத்தினுல் உண்டாக்கி தனது திருக்குமாரனுன முருகக்கடவுள் ஏறிச்செல்வதற்காகக் கொடுத்தருளினுர். 41

இவ்வகை யெல்லாம் விரைவுடன் உதவி யேகுதி நீயெனக் குமரன்
மைவிழி உமையோ டிறைவனைத் தொழுது வலங்கொடே மும்முறை வணங்கிச்
செவ்விதின் எழுந்து புகழ்ந்தனன் நிற்பத் திருவுளத் துவகையால் தழுவிக்
கைவரு கவானுய்த் துச்சிமேல் உயிர்த்துக் கருணைசெய் தமலைகைக் கொடுத்தான்

இவ்வகை எல்லாம் அதிவிரைவாக சிவபிரான் உதவி பின்னர் தனது குமாரனைப் பார்த்து ''மகனே! நீ அதி விரைவாகச் செல்வாயாக'' என்றலும் அப்பொழுது குமரப்பெருமான் மைதீட்டிய கண்களை உடைய உமையம்மையாரையும் சிவபெருமானையும் தொழுது மும்முறையாக வலம் வந்து வணக்கம் செய்து செவ்விதின் எழுந்தருளி முன்னின்று தோத்திரம் பல சொல்லிப் புகழ்ந்தனராகி நிற்ப அப்போது எமது சிவபிரான் திருவுள்ளத்து நிறைகின்ற பேராதரவோடும் திருக்குமாரனை அன்புடன் தழுவி சிறப்பமைந்த தமது திருவடிமீது முருகக்கடவுளை வைத்து உச்சியின் மேல் முத்தமிட்டு கருணை செய்து பின்னர் எங்குமரனைத் தமது கையால் தூக்கி எடுத்து நின்மல சொரூபியான அம்பாள் திருக்கரத்துக் கொடுத்தார் சிவபிரான். 42

கொடுத்தலும் வயின்வைத் தருளினுற் புல்லிக் குமரவேள் சென்னிமோந் துன்பால்
அடுத்திடும் இலக்கத் தொன்பது வகையோர் அனிகமாய்ச் சூழ்ந்திடப் போந்து
கடக்கரும் ஆற்றல் அவுணர்தங் கிளையைக் காதியிக் கடவுளர் குறையை
முடித்தனை வருதி என்றருள் புரிந்தாள் மூவிரு சமயத்தின் முதல்வி.

சிவபிரான் எல்லார்க்கும் தஞ்சமான முருகனைக் கொடுத்தலும் பிராட்டி எம்பிரானைத் தமது மடிமேல் வைத்து அருள் நிறைவாகிக் கனிந்து இறுகத் தழுவி சிரசின்மீது முத்தமிட்டு சொல்வாள் ''மகனே! உன்பால் துணையாகவந்து சேர்ந்த இலக்கத்து ஒன்பது வகையான இவர்கள் உனக்கு சேனைகளாகச் சூழ்ந்திட நீ சென்று யாவராலும் வெல்ல முடியாத வலிமை பெற்ற அசுரர்தங்கிளையை அழித்து இங்கே நிற்கும் இத்தேவர் குறையை நீக்கி வருவாயாக'' என்று அருள் செய்தாள் ஆறு வகையான சமயங்களின் முதல்வியான பிராட்டி. 43

அம்மையித் திறத்தால் அருள்புரிந் திடலும் அறுமுகன் தொழுதெழீஇ யனையோர்
தம்விடை கொண்டு படர்ந்தனன் தானைத் தலைவராம் இலக்கமே லொன்பான்
மெய்ம்மைகொள் வீரர் யாவருங் கணங்கள் வியன்பெருந் தலைவரும் இருவர்
செம்மல ரடிகள் மும்முறை இறைஞ்சிச் சேரவே விடைகொடு சென்றார்.

அம்மை இத்திறத்தால் அருள் புரிந்திடலும் ஆறுமுகப்பகவான் தாயை வணங்கி எழுந்து தந்தை தாயாகி இருக்கும் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு உத்தரவாகிப் புறப்பட்டுச் சென்றருளலும் அவருடைய சேனைத் தலைவரான இலக்கத்து ஒன்பது மெய்ம்மையான வீரர்கள் யாவரும் பூதங்களின் மேலான உக்கிர வலிமை கொண்ட பூத சேனாதிபதிகளும் சிவபிரான் உமையம்மையாரின் செம்மையான மலர்ப் பாதங்களை மும்முறை வணங்கி எல்லாரும் ஒருங்குசேர விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள். 44

**நின்றிடும் அயன்மால் மகபதி எந்தாய் நீயெமை அளித்தனை நெஞ்சத்**
**தொன்றொரு குறையும் இல்லையால் இந்நாள் உய்ந்தனம் உய்ந்தன மென்று**
**பொன்றிகழ் மேனி உமையுடன் இறைவன் பொன்னடி பணிந்தெழ நுமக்கு**
**நன்றிசெய் குமரன் தன்னுடன் நீரும் நடமெனா விடையது புரிந்தான்.**

அங்கு அப்போது நின்றிடுகின்ற பிரமதேவர், நாராயணக்கடவுள், இந்திரன் முதலியோர் சிவபிரானை வணங்கி. ''எந்தைபிரானே! நீர் எம்மைக் காத்தருளினீர் எமது நெஞ்சில் யாதொரு கவலையும் இல்லாதிருக்கின்றோம். இன்று நாம் உய்ந்தோம் உய்ந்தோம்'' எனச் செப்பி பொன்னார்ந்து விளங்கும் திருமேனி உடைய உமையம்மையாருடன் சிவபிரானின் பொன்னடி பணிந்து எல்லோரும் எழுதலும் அப்போது ஈசன் சொல்வார் ''கடவுளரே! உமக்கு நன்மை தரவே தோன்றிய குமரன் தன்னுடன் நீங்களும் செல்லுங்கள்'' என்று அவர்களையும் சென்று முருகக் கடவுளுடன் கூடுமாறு விடைகொடுத்தார். 45

விடைபெறு படலம் முற்றிற்று

**ஆகத் திருவிருத்தம் 1310**

# 19. படையெழு படலம்

**கண்ணுதல் விடைபெற் றரியயன் மகவான் கடவுளர் தம்மொடு கடிதின்**
**அண்ணலங் குமரன் தன்னொடு சென்றே அயல்வரும் மருத்தினை நோக்கி**
**தண்ணளி புரியும் அறுமுகத் தெந்தை தனிப்பெருந் தேர்மிசை நீபோய்ப்**
**பண்ணொடு முட்கோல் மத்திகை பரித்துப் பாகனாய்த் தூண்டெனப் பணித்தான்**

கண்ணுதற் கடவுளான சிவபிரான் உத்தரவைப் பெற்றுக்கொண்ட விஷ்ணு மூர்த்தியானவர், பிரமதேவர், இந்திரன், தேவர்கள்தம்மொடும் யாவர்க்கும் மேலாகிய தலைமைப்பாட்டுடன் விளங்கும் குமாரக் கடவுளோடும் சென்றபோது தன் பக்கராக வருகின்ற வாயு பகவானை நோக்கி ''வாயு தேவனே! நீ எல்லார்க்கும் தண்ணளியான கிருபையைச் செய்கின்ற ஆறுமுகமுடைய எந்தைபிரானின் தனியான மனோவேகம் என்னும் தேர்மேலாகச் சென்று தேரிற் பூட்டிய குதிரையின் கடிவாளத்தையும், முட்கோலையும் சம்மட்டியையும் கைக்கொண்டு சாரதியாகி தேரைச் செலுத்துவாய்'' எனக் கூறினர். 1

**மன்புரி திருமால் இனையன பணிப்ப மாருதன் இசைந்துவான் செல்லும்**
**பொன்பொலி தேரின் மீமிசைப் பாய்ந்து பொருக்கென மருத்துவர் நாற்பான்**
**ஒன்பது திறத்தார் புடைவரத் தூண்டி உவகையோ டறுமுகத் தொருவன்**
**முன்புற வுய்த்துத் தொழுது மற்றிதன்மேல் முருகநீ வருகென மொழிந்தான்.**

உலகைக் காக்கும் கடவுளான விஷ்ணு மூர்த்தி இவ்வாறான சேவையைச் செய்யும்படி வாயு பகவானுக்குப் பணித்தருள வாயுதேவன் அதனைக் கேட்டு இசைவு கொண்டு அத்தரத்து எழுந்து செல்லும் பொன்னால் பொலிகின்ற மனோவேகம் என்னும் தேர்மேற் தாவிப் பாய்ந்து அதிவிரைவாகத் தனக்குத் துணையாக நாற்பத்தொன்பது வகையான வாயுக்கள் சூழ்ந்து இருப்பத் தேரைச் செலுத்தி வந்து ஆறுமுகப் பெருமான் திருமுன்னராக விடுத்து எம்பிரானை மகிழ்வுடன் நோக்கித் தொழுது ''ஐயனே! முருகா! இதன்மேல் எழுந்தருளி வருவீராக'' எனச் செப்பியருளினான் வாயு பகவான். 2

**மாருதன் இனைய புகன்றுகை தொழலும் மற்றவன் செயற் கையை நோக்கிப்**
**பேரருள் புரிந்து கதிரிளம் பரிதி பிறங்குசீர் உதயமால் வரைமேல்**
**சேருவ தென்னக் குமரவேள் அனைய செழுமணி இரதமேற் செல்லச்**
**சூரினி இறந்தான் என்றுவா சவனுஞ் சுரர்களும் ஆர்த்தனர் துள்ளி.**

வாயு தேவன் இவ்வாறு சொல்லித் தொழுதலும் அங்கு எம்பெருமான் அவன் செய்கையைப் பார்த்துப் பேரருள் புரிந்து கதிர்விட்டுப் பிரகாசிக்கும் இளம் சூரியன், மேலாக விளங்கும் உதயமலைமேல் தோன்றி உதயமாவதுபோலக் குமாரக் கடவுள் அந்தச் செழுமை மிக்க இரத்தினத்தினாலாய தேரினிலே ஏறியருளி வீற்றிருந்து செல்லுதலும் அச் சிறப்பை நோக்கிய தேவர்கள், இந்திரன் முதல் யாவரும் சூரபன்மன் இனி இறந்தான் எனக் கூறித் துள்ளியார்த்தார்கள். 3

**ஓங்கு தேர்மிசைக் குமரவேள் மேவலும் உவப்பால்**
**ஆங்க வன்றன தருள்பெறுந் திறலினோர் அணுகிப்**
**பாங்கர் நண்ணினர் முனிவருந் தேவர்கள் பலரும்**
**நீங்க லின்றியே அவர்புடை சூழ்ந்தனர் நெறியால்.**

எவ்வாற்றாலும் ஓங்கிய தேர்மேலாகக் குமரக்கடவுள் ஆறுமுகத்துடன் அருள் கொண்டு வீற்றிருக்கும்போது ஆங்கு அவருடைய அருள்பெறும் திறலினரான வீரவாகு தேவர் முதலினோர் எம்பிரானைப் பேரானந்தத்துடன் அணுகிப் பக்கராகச் சூழ்ந்துகொண்டனர். முனிவர்களும் தேவர்கள் பலரும் நீக்கம் இல்லாமல் எம்பிரானை முன்னர் சூழ்ந்துள்ள வீரவாகு தேவர் முதலியோரின் புறத்தே சூழ்ந்துகொண்டார்கள்.

**இனந்த னோடவர் முருகனை அடைதலும் இருநீர்**
**புனைந்த சென்னியன் கயிலையில் இருந்தவெம் பூதர்**
**அனந்த வெள்ளத்தில் இராயிர மாகும்வெள் ளத்தர்**
**வனைந்த வார்கழற் றலைவர்தம் முறைகொடு வந்தார்.**

இவ்வாறு இவர்கள் எல்லாரும் இனமாகக் கூடித் திரண்டு முருகப்பிரானைச் சூழ்ந்துகொள்ளலும் அப்போ கங்கை நதியைச் சடைமேல் அணிந்துகொண்ட சிவபிரான் அருளுடன் இருக்கும் திருக்கைலாய மலையிலிருந்த கொடிய பூதங்களான அநந்த கோடி வெள்ளத்திலே இரண்டாயிரம் வெள்ளத்தர் எம்பிரானை வளைந்து சூழ்ந்துகொண்டு வீரக்கழலை அணிந்துகொண்ட சேனாதிபதியரின் சொற்படி எழுந்தருளி வந்தார்கள். 5

எழுவி யன்கதை நேமிவெஞ் சூலம்வாள் எறிவேல்
மழுமு தற்படை யாவையும் ஏந்திய வலியோர்
நிழன்ம திப்பிறை ஞெலிந்தென நிலாவுமிழ் எயிற்றர்
அழலு குத்திடும் விழியினர் அசனியின் அறைவார்.

மழுவாயுதம், பெரிய கதாயுதம் சக்கரம், கொடிய சூலம், வாள், நேராகச் சென்றுதைக்கும் வேலாயுதம், மழுவாயுதம் முதலான படைகள் யாவையும் ஏந்திய வலியை உடையவர்களும் சிறிய ஒற்றைக் கலைகொண்ட சந்திரப் பிறைபோலும் வளைந்த பற்களை உடையவரும், நெருப்புப்பொறிகள் கக்கும் கண்ணினை உடையவரும், இடியேற்றின் ஓசைபோல் பேசுகின்ற வார்த்தை உடையரும் ஆகிய பூதங்களும்; 6

நெடியர் சிந்தினர் குறியினர் ஐம்பெரு நிறனும்
வடிவில் வீற்றுவீற் றெய்தினர் வார்சடைக் கற்றை
முடியர் குஞ்சியர் பலவத னத்தரோர் முகத்தர்
கொடிய ரென்னினும் அடைந்தவர்க் கருள்புரி குணத்தோர்.

நெடிய வடிவு கொண்டார்களும், குறுகிய வடிவம் உடையாரும், வெண்மை. கருமை, சிகப்பு, மஞ்சள், பச்சை என்னும் ஐந்து வகையான நிறங்களும் தமது வடிவில் வெவ்வேருக எய்தியவர்களும், கற்றையாக வார்ந்து முடித்த சடையை உடையவரும், குடுமிவைத்தவர்களும், பலமுகங்களை உடையவரும், ஒரு முகம் உடைய பூதங்களுமாகிய இவர்கள் கொடுமை உடையார் என்ருலும் தங்களை அன்பால் அண்டி வருவோரைக் காத்து அருள் செய்யும் கொள்கை உடையவருமான பூதங்களும்; 7

நீறு கண்டிகை புனைதரும் யாக்கையர் நெடுநஞ்
சேறு கண்டனை அன்றிமற் றெவரையும் எண்ணுர்
மாறு கொண்டவர் உயிர்ப்பலி நுங்குவோர் மறலி
வீறு கொண்டதொல் படைதனைப் படுத்திடு மேலோர்.

திருநீறும் உருத்திராக்கமும் அணிந்து விளங்கும் மேனியை உடையவர்களும், வேகமாகப் பரந்து உலகை அழிக்கவந்த நஞ்சை உண்ட கண்டத்தை உடைய சிவபிரானை அன்றி மற்று எவரையும் எண்ணுதவர்களும், தமக்கு மாறுபட்டு எழுவார்களின் உயிரைப் பலியாக ஏற்பவர்களும், யமதேவனுடைய வீறுகொண்டு எழும் படையை அழிக்கின்ற மேலோர்களும் ஆகிய பூதங்களும்; 8

அண்டம் யாவையும் ஆண்டுறை உயிர்த்தொகை யனைத்தும்
உண்டு மிழ்ந்திட வல்லவர் அன்றியும் உதரச்
சண்ட அங்கியா லடுபவர் அட்டவை தம்மைப்
பண்டு போற்சிவன் அருளினல் வல்லையிற் படைப்போர்.

அண்டங்கள் யாவற்றையுமன்றி உயிர்க்கூட்டம் அனைத்தையும் உண்டு உமிழ்ந்திட வல்லவர்களும், அல்லாமலும் தங்களது உதரத்தில் (வயிற்றில்) பசி என்னும் அக்கினியாலே அழிப்பவரும், அவ்வாறு அழித்த அந்த உலகை மீளவும் பழமைபோலச் சிவன் அருளினல் படைக்க வல்லவரும் ஆகிய பூதங்களும், 9

முன்னை வைகலின் இறந்திடும் இந்திரன் முதலோர்
சென்னி மாலைகந் தரத்தினில் உரத்தினில் சிரத்தில்
கன்ன மீதினில் கரத்தினில் மருங்கினில் கழலில்
பொன்னின் மாமணிக் கலனொடும் விரவினர் புனைவார்.

முன்னைக் காலங்களில் இறந்திட்ட இந்திரன் முதலாகச் சொல்லப்பெறும் தேவர்களின் மண்டை ஓட்டு மாலைகளை கழுத்திலும், நெஞ்சிலும், தலையிலும், காதிலும், கைகளிலும், அரையிலும், காலிலும் தாங்கள் வேறுக அணிந்த பொன்னினலும் இரத்தினங்களினலும் ஆகிய ஆபரணங்களோடு ஒன்றுசேர இந்த மண்டைஓட்டு மாலையை அணிந்தார்களுமான பூதங்களும். 10

இந்த வண்ணமாஞ் சாரதப் படையினர் ஈண்டித்
தந்தம் வெஞ்சமர்த் தலைவர்க ளோடுசண் முகன்பால்.
வந்து கைதொழு தேத்தியே இறுதி சேர்வைகல்
அந்த மில்புனல் அண்டம துடைந்தென ஆர்த்தார்.

இந்தவண்ணம் சிறப்புக்கள் கொண்ட பூதப்படைகள் யாவும் நெருங்கித் தங்கள் தங்கள் கொடிய போர்த் தலைவர்களோடும் சேர்ந்து அணி அணியாக வந்து தேர் மேலாகி வருகின்ற பேரொளி வடிவுடன் விளங்கும் ஆறுமுகப்பிரானைக் கைகூப்பித் தொழுது துதித்து ஆனந்த விளைவினல் உலகம் முடிவாகின்ற நாளன்று கடல்கள் கரை உடைத்துப் பெருகும் பேரிரைச்சல் போன்று பெரிதும் ஆரவாரித்தார்கள். 11

ஆர்த்த சாரதர் எந்தைபா லாயினர் அதுகால்
பேர்த்தும் ஆயவர் இடித்தெனப் பூதரில் பெரியோர்
வார்த்த யங்கிய தண்ணுமை திமிலைவான் படகஞ்
சீர்த்த காகள முதலிய இயம்பினர் சிலரே.

இவ்வாறு ஆரவாரித்த பூதங்கள் யாவும் எந்தைபிரான் பக்கராயினர்கள். அதுகாலை இவர்கள் போட்ட இரைச்சலோடு பிறகும் இவர்கள் இடியேற்றுச் சத்தம் போலக் கத்துவதோடு, பூதங்களில் பெரிய வடிவுடையவர்கள் வார்பூட்டப்பட்ட மத்தளம், திமிலை, உயர்ந்த பேரிகையும், சிறந்த காகள முதலாகிய வாத்தியங்களை முழக்கினர்கள். 12

ஆனகாலையில் அதுதெரிந் தறுமுகத் தொருவன்
வான ளாவிய புணரிகள் சூழ்ந்திட வயங்கும்
பானு நாயகன் வந்தெனப் பரந்துபா ரிடத்துச்
சேனை சூழ்தரக் கயிலைநீத் தவனிமேற் சென்றான்.

இவ்வாறனகாலையில் இது யாவற்றையும் தெரிந்து ஆறுமுகம் கொண்ட ஒருவனை தான் ஒருவனே சகலமும் ஆகிய கடவுள், வானத்து உலவி எழுவதுபோல விளங்கும் கடல் சூழ்ந்து விளங்கும்படி ஒளிக்கு நாயகனை சூரிய பகவான் வந்துற்றதுபோல அமைந்து காட்சிபெறும்படியாக எங்கும் கடல்போலப் பரந்து பூதங்கள் சூழ்ந்து வர ஞான ஒளியாகிய முருகக் கடவுள் தேர்மேலாகி எழுந்து திருக்கைலாய மலையைவிட்டு நீங்கிப் பூமியின்பாற் சென்றருளினர். 13

கொள்ளே வெஞ்சினச் சாரதர் இராயிரங் குணித்த
வெள்ளம் வந்திடக் கந்தவேள் அவனிமேல் மேவக்
கள்ள வான்படை அவுணர்கள் கலந்துசூழ்ந் தென்னப்
பொள்ளெ னத்துகள் எழுந்தது வளைந்தது புவியை.

அளவுகாண முடியாதபடி எங்கும் பரந்து வரும் கொடிய கோபமுடைய பூதங்கள் இரண்டாயிரம் வெள்ளம் எனக் கணக்கிடப்பட்டவை சேனையாக வந்திடும்படி யாக முருகப்பிரான் இப்பூமிமேலாக எழுந்தருளி வருதலும் அவர்கள் வந்த வேகத் தில் எழுந்த புழுதியானது இப்பூத சேனையை மூடி மறைப்ப அக்காட்சி எப்படியா னதுபோலும் எனில் கள்ளம் கபடம் பொருந்திய அசுரர்கள் இந்தப் பூதங்கள் இடையே கலந்து சூழ்ந்துகொண்டார்கள் எனும்படியாக புழுதி பூமியை வளைந்து மூடிக்கொண்டது. 14

எழுத ருந்துகள் மாதிர வரைப்பெலாம் ஏகி
ஒழியும் வான்பதஞ் சென்றதால் ஆங்கவை யுறுதல்
குழுவின் மல்கிய சாரதர் ஆர்ப்பு முன்குறுகி
மொழிதல் போன்றன விண்ணுளோர் இமைப்பில்கண் மூட.

இவ்வாறு எழுந்த புழுதி யாவும் திக்குகள் எல்லாம் பரந்து சென்று அழிந்து போய்ச் சீர் குன்றிய தேவருலகையும் சேர்ந்தது. அது எப்படிப்போலும் எனில் இங்கே பூதர்கள் வந்தார்கள்; அவர்கள் பொல்லாதவர்கள்; ஐயோ, கவனம் என்று தேவர்களுக்குச் சொல்ல அவர்கள் பயத்தாற் கண் மூடுவதுபோல, புழுதியானது மேலுள்ள தேவர்களின் கண்களிற் படுதலும் அவர்கள் கண் மூடினார்கள். 15

கழிய டைத்திடு நேமிகள் பலவொடு ககன
வழிய டைத்திடு பூழியும் ஒலியும்மன் னுயிர்கள்
விழிய டைத்தன நாசியை யடைத்தன விளம்பு
மொழிய டைத்தன அடைத்தன கேள்வியின் மூலம்.

கழிநிலங்களாற் சூழப்பட்ட சமுத்திரங்கள் பலவற்றையும், வானத்து உள்ள மார்க்கங்களையும் அடைத்த இப்புழுதியும் இரைச்சல் ஓசையும் உலகத்திற் பொருந் திய மேலான பிராணிகளினது கண்களை அடைத்தன; மூக்கை அடைத்தன; பேசு கின்ற பேச்சையும் பேசாதபடி அடைத்தன; காதுகளையும் ஒன்றையும் கேட்காதபடி அடைத்தன.

புழுதி கடலையும், ஆகாய மார்க்கத்தையும், மனிதர் மூக்கையும், காதையும், கண் ணையும் அடைத்தது. பூதகணங்கள் போட்ட சப்தம் உயிர்களின் சப்தத்தையும் சமுத்திர இரைச்சலையும் மிஞ்சி நின்று அடைத்தது. 16

பேரி டங்களாந் தனுவுடைப் பூதர்கள் பெயரப்
பாரி டங்கள்தாம் இடம்பெறு ஆதலிற் பல்லோர்
காரி டங்கொளும் வான்வழிச் சென்றனர் கண்டோர்
ஓரி டங்களும் வெள்ளிடை இலதென வுரைப்ப.

பெரிய உடல் பொருந்திய பூதங்கள் பெயர்ந்து இவ்வாறு புறப்பட்ட இந்தப் பூமிகளில் எங்கும் எதிலும் சிறிதும் இடம் காணது போன தன்மையால் பல பூதங் கள் மேகங்கள் சஞ்சரிக்கின்ற ஆகாய மார்க்கமாகவும் சென்றன. இந்தப் பூதங்கள்

செல்கின்ற காட்சியைக் கண்டோர் யாவரும் ''ஓரிடமும் வெளியாக இல்லையே. எல்லாம் பூதங்களாகவே இருக்கின்றன'' எனப் பேசினார்கள். 17

**அவனி வானெலாம் பூழியால் மறைத்தலும் அதனைச்**
**சிவன்ம கன்றன தொளியினால் அகற்றினன் செல்வான்**
**கவன வாம்பரி இரதமேற் பனிபடுங் காலைத்**
**தவன நாயகன் அதுதடிந் தேகுதன் மையைப் போல்.**

பூமி, ஆகாயம் எல்லாம் புழுதியாலே மறைந்தபோது எங்கும் இருள் காணப்படுதலும் அவ்வாறான இருளை எமது அப்பனான சிவகுமாரன் தனது பேரொளியினால் அகற்றியவாறு செல்வாராயினார். இது எதுபோலும் எனில் வேகமுடன் செல்லும் குதிரை பூட்டிய தேர்மேற் செல்லும் சூரியபகவான் தனது தேர்மேல் பனிப்படலம் மூடுங்காலை அதை அகற்றியவாறு செல்வது போலாகும். 18

படையெழு படலம் முற்றிற்று

**ஆகத் திருவிருத்தம் - 1328**

---

# 20. தாரகன் வதைப் படலம்

**வெம்மை தீர்ந்திடும் அப்பெரு நெறியிடை விரைந்து**
**செம்மை சேர்தரு குமரவேள் படையொடு செல்ல**
**அம்ம சேர்ந்தது தாரகற் குறையுளாய் அடைந்தோர்**
**தம்மை வாட்டியே அமர்கிர வுஞ்சமாஞ் சைலம்.**

எமது குமரப்பெருமான் எழுந்தருளிவரும் பேற்றினால் கொடுமைகள் எல்லாம் நீங்கப்பெற்ற அப்பெருமார்க்கமாக தீதுஇலா நன்மைத் திருவருட்குமரன் பெரும் படையோடு செல்லும் தன்மையினால், தம்மை அடைந்தோர் யாவராயினும் அவர்களை வாட்டித் துயரப்படுத்திய வண்ணமாக தாரகாசுரன் என்னும் கொடிய அசுரனுக்கு விருப்பமுள்ள இருப்பிடமாய் இருக்கும் கிரவுஞ்சம் என்னும் மலையும் வந்தடைந்தது, (இம்மலை மிகக் கொடுமையுடையது என்னும் தன்மையினை பின்னர் இம்மலை வரலாற்றில் காண்க.) 1

**விண்டு லாய்நிமிர் கிரவுஞ்ச கிரியினை விண்ணோர்**
**கண்டு ளம்பதை பதைத்தனர் மகபதி கலக்கங்**
**கொண்டு நின்றனன் நாரதன் அணுகியே குமரன்**
**புண்ட ரீகநேர் பதந்தொழு தின்னன புகல்வான்.**

வானை நோக்கி வளர்ந்துள்ள இந்தக் கொடிய கிரவுஞ்ச மலையினை தேவர்கள் யாவரும் கண்டு உள்ளம் பதைபதைத்து ஏக்கமுற்று நின்றனர். இந்திரதேவன் கலக்கங்கொண்டு நின்றனன். அவ்வேளை நாரதமுனிவன் எழுந்து வந்து ஆறுமுகப்பிரானைக் கிட்டிச் சென்று பெருமானுடைய தாமரை மலரின் செவ்வியை ஒத்த திருவடி தொழுது நின்று இந்த வார்த்தைகளைச் சொல்வார்; 2

தூய நான்மறை அந்தணர் முனிவர்இச் சுரத்திற்
போய வெல்லையின் நெறியதாய் வரவரப் புணர்த்து
மாய்வு செய்துபின் குறுமுனி சூளின்இவ் வடுவாய்
ஏய தொல்பெயர்க் கிரவுஞ்ச மால்வரை இதுகாண்.

''பெருமானே கேட்டருள்க! தூய்மையான வேதநெறி நின்ற பிராமணர்கள், முனிவர் இந்த கிரவுஞ்சமலை இருக்கும் மார்க்கமாக எப்பொழுதாவது வர நேரிடுங் காலையில் இம்மலை வருகின்ற இவர்களுக்கு நல்லதோர் மார்க்கம் இதுவெனக் காண்பித்து அவர்களை அப்பாதையால் வரச்செய்து பின்னர் அவர்களை மயக்கி மாய்வு செய்யும் தொழில் கொண்டது, ஆனால் அவ்வாறு திரிந்து பலரையும் மயக்கிக்கொன்ற இம்மலை இப்போது அகத்திய முனிவனது சாபத்தால் இந்தவடிவாக இப்போது அசைவில்லாது தனித்து நிற்கின்றது. இதுவேதான் மிகப் பழையகாலம் தொட்டு கொடுமைக்குப் பெயர்போன கிரவுஞ்சம் என்னும் மலையாகும்''. 3

நேரில் இக்கிரிக் கொருபுடை மாயநீள் நகரில்
சூரெ னப்படும் அவுணனுக் கிளவலாந் துணைவன்
போரில் அச்சுதன் நேமியை அணியதாப் புனைந்தோன்
தார கப்பெயர் வெய்யவன் வைகினன் சயத்தால்.

''கொடுமையில் தனக்கு நிகரில்லா இம்மலைக்கு ஒரு புறமாக சூரபன்மனுடைய தம்பியான தாரகன் என்னும் கொடுமை புரியும் அசுரன் மாயபுரி என்னும் நீண்ட பெரிய நகரிடத்து வாழ்கிறான். இந்தத் தாரகனே பெரும் பலமுடையவன். அவன் நாராயணக் கடவுளோடு செய்த போரிலே அவர் விடுத்த சக்கரப் படையை தனது கழுத்தில் ஆபரணமாக அணிந்தவன். அவ்வாறாகிய அவன் பெரும் வெற்றிகளை அடைந்து தனக்கு நிகர் ஒருவரின்றி இருக்கிறான்.'' 4

இன்ன வன்றனை அடுதியேல் எளிதுகாண் இனையோன்
முன்ன வன்றனை வென்றிட லெனமுனி மொழிய
மின்னு தண்சுடர் வேலவன் அவற்றினை வினவி
அன்ன வன்றனை முடிக்குதும் இவணென அறைந்தான்.

''எம்பிரானே! தேவரீர் இத்தன்மையுடைய தாரகனை முதலிலேயே சங்காரம் செய்தால் பின்னர் உமது போர்ச் செயல் யாவும் சுலபமாகவும் இனிதாகவும் முடியும். அத்தோடு சூரபன்மனையும் வென்றிடுதல் எளிதாகும்'' என நாரத முனிவன் மொழிந்தருள அதனை மின்னலைப் போலும் ஒளி பரந்த வேலினை உடைய பெருமான் கேட்டருளி ''அப்படியாயின் அந்தத் தாரகாசுரனை இப்போதே இவ்விடத்து முடிவு செய்வேன்'' எனப் பலரும் அறியக் கூறியருளினர். 5

சிறந்திடு முருகவேள் இனைய செப்பலும்
நிறைந்திடும் அமரரும் இறையும் நெஞ்சினில்
உறைந்திடு கவலொரீஇ உவகை எய்தினர்
இறந்தனன் தாரகன் இன்றே டேயென.

அழகான மேனிகொண்ட முருகப் பெருமான் இனையதாகிய வார்த்தையைச் செப்பலும் அங்கே முன்பு மலையைக் கண்ட பயத்தாலே ஏக்கமுற்று எங்கும் சூழ்ந்து நின்ற

தேவர்கள் கேட்டு தங்கள் உள்ளங்களிற் கவலை சிறிதுமின்றி நீங்கியவர்களாய்க் களிப்புற்றார்கள் இன்றோடு தாரகன் இறந்தனன் எனும் தன்மை பெற்றாராக. 6

ஐயர்கள் பெருமகிழ் வடைய ஆறிரு
கையுடை முருகன்அக் காலை தன்புடை
மெய்யருள் எய்திய வீர வாகுவாந்
துய்யனை நோக்கியே இனைய சொல்லுவான்.

தேவர்கள் யாவரும் எம்பிரான் வார்த்தை கேட்டுப் பெருமகிழ்வு அடைந்திட்ட நேரத்து பன்னிரண்டு திருக்கையுடன் பொலியும் முருகப் பெருமான் தனது பக்கராக உண்மையான அருள் நிறைவுடன் விளங்கும் தூய வீரவாகு தேவனைப் பார்த்தருளியே இனைய வார்த்தைகளைச் சொல்லியருள்கிறார். 7

உற்றவக் கிரிகிர வுஞ்ச மாகுமால்
மற்றத னொருபுடை மாய நொச்சியுட்
செற்றிய அசுரர்தஞ் சேனை தன்னுடன்
அற்றமில் தாரகன் அமர்தல் மேயினான்.

''வீரவாகு தேவனே! இங்குற்ற இந்த மலை கிரவுஞ்சம் என்னும் மலையாகும். இதன் ஒருபுடையாக மாயம் விளையும் மதில்கொண்ட மாயபுரி என்னும் நகரில் செறிந்து நெருங்கி வாழ்கின்ற அசுரர் சேனையோடும் நன்மையில்லாத கொடிய தாரகன் அமர்ந்திருக்கிறான்.'' 8

ஏயநின் துணைவர்கள் இலக்கத் தெண்மர்கள்
ஆயிர வெள்ளமாம் அடல்கொள் பூதர்கள்
சாய்வறு தலைவர்கள் தம்மொ டேகியே
நீயவன் பதியினை வளைத்தி நேரிலாய்.

''ஆகவே நீ உன்னுடன் வந்த தம்பியர் எட்டுப் பேருடனும், இலக்கம் வீரருடனும், பூத சேனைகளில் ஆயிரம் வெள்ளத்துடனும், வலிமைகொண்டு தாக்கல் புரியும் பூத சேனாதிபதியுடனும் சென்று அந்தத் தாரகனுடைய பதியான மாயபுரியை வளைந்து சுற்றிப் போர் செய்வாயாக.'' 9

தடுத்தெதிர் மலைந்திடும் அவுணர் தானையைப்
படுத்தனை தாரகப் பதகன் எய்துமேல்
அடுத்தமர் இயற்றுதி அரிய தேலியாம்
முடித்திட வருகுதும் முந்துபோ வென்றான்.

''அவ்வாறு நகரை நீ தாக்கும்போது உன்னை எதிர்த்துப் போர் செய்ய வரும் அசுரரின் சேனைகளைக் கொல்வாயாக. அந்தப் பாதகனான கொடிய தாரகன் வருவானேல் அவனைக் கிட்டி நீ போர் செய்வாய். அவனைப் போரில் வெல்வது உனக்கு அரிதாயிருக்குங்கால் அவனை முடிக்கும்படியாக நான் எழுந்தருளி அங்கு வருவேன். நீ முன்னர் போவாயாக'' என்றார் எமது கடவுள். 10

நலமிகு குமரவேள் நவில இன்னணம்
வலமிகு சிறப்புடை வாகு நன்றெனுத்
தலைமிசை கூப்பிய கரத்தன் தாழ்ந்துமுன்
நிலமிசை இறைஞ்சினன் நேர்ந்து நிற்பவே.

எல்லா நலமும் ஒருங்குடன் கூடிய முருகக் கடவுள் இவ்வாறு கூறியருளலும் அதனைக் கேட்ட மிக்க வலிமைகொண்ட சிறப்புடைய வீரவாகு தேவர் ''பெருமானே! நன்று'' எனச் சொல்லி தலைமேற் கைகள் இரண்டையும் குவித்துத் தாழ்ந்து வணங்கி முன்பாக நிலத்திலும் தாழ்ந்து வணங்கினராகி எம்பிரான் திருவுள்ளப்படியே இசைவாகி உடன்பட்டு மகிழ்வுடன் நிற்ப, 11

ஏந்தலந் துணைவராம் இலக்கத் தெண்மரை
ஆய்ந்திடு பூதரை யாதி நோக்கியே
வாய்ந்திடு பெருந் திறல் வாகு தன்னுடன்
போந்திடும் அவுணரைப் பொரவென் றேவினன்.

வீரவாகு தேவரின் தம்பியரான எட்டுப் பேரையும் இலக்கம் வீரரையும், எப்போ எங்களுக்குப் போர் வரும் என்னும் ஆராய்வுடன் நின்ற ஆயிரம் வெள்ளம் பூதரையும் ஆதியாகிய முருகப் பெருமான் பார்த்தருளி ''நீங்கள் எல்லோரும் வலியும், வீரமும் துணிவும் ஒருங்குடன் வாய்க்கப்பெற்ற தலைவனுன வீரவாகு தேவருடன் அசுரர்களோடும் போர் செய்யும்படியாகச் செல்வீராக'' என்றுர். 12

ஏவலும் அனையவர் யாரும் எம்பிரான்
பூவடி வணங்கியே போதற் குன்னலும்
ஆவியுள் ஆவியாம் அமலன் பாங்குறுந்
தேவர்கள் கம்மியற் கிதனைச் செப்புவான்.

இவ்வாறு எமது பெருமான் முருகன் ஏவுதலும் அவர்கள் யாவரும் எம்பெருமானுடைய மலர்ப்பாதங்களை வணங்கியே எழுந்து புறப்பட்டுப் போதற்கு நினைத்தலும், அப்போது எல்லாவுயிர்கட்கும் உயிராய் விளங்குகின்ற நிர்மல சோதியான முருகக் கடவுள் தமது பக்கராக இருக்கும் தேவதச்சனைப் பார்த்து இந்த வார்த்தையைச் செப்புவார். 13

மேதகு பெருந்திறல் வீர வாகுவை
ஆதியர் தமக்கெலாம் அளிக்கும் பான்மையால்
ஏதமி லாதபல் லிரதம் நல்கென
ஓதினன் உலகெலாம் உதவும் தொன்மையோன்.

''மேன்மையான பெரிதும் வலிமை உடைய வீரவாகுதேவனை முதலாகவுள்ள இவர்கள் யாவருக்கும் நாம் கொடுக்கும்படி குறைபாடிலாத பல இரதங்களைச் செய்து தருவாயாக'' என்று சொல்லியருளினர். அவர் யாரெனில் எல்லா உலகையும் தானே முன்னர் படைக்கும், எல்லார்க்கும், யாவற்றிற்கும் முற்பட்ட மூலப்பொருளான முருகன்.

அத்திறங் கேட்டதோர் அமரர் கம்மியன்
ஒத்ததோர் மாத்திரை ஒடுங்கு முன்னரே
சித்திர வயப்பரி சீயங் கூளிகள்
இத்திறம் பூண்டபல் லிரதம் நல்கினன்.

எம்பிரானுடைய இந்த வார்த்தைகளைக் கேட்ட தேவதச்சனானவன் அப்பொழுதில் ஒரு மாத்திரைப் பொழுது நேரம் செல்லுவதற்கு முன்பாக அழகிலும் சிறப்பிலும் ஒன்றையொன்று ஒத்த வடிவினையுடையதாய் அழகிய சித்திரம்போலும் அமைந்த குதிரைகள் பூட்டப்பெற்றதும், சிங்கங்கள் பூட்டப்பட்டதும், கூளிகள் பூட்டப்பெற்றதுமாக விளங்குவனவாய் இருக்கும் பல தேர்களைத் தனது சித்தத்தால் நினைந்து உண்டாக்கினான். 15

அன்ன தேர்த்தொகை அதனை எம்பிரான்
மின்னு காலவேல் வீர வாகுவும்
பின்னர் எண்மரும் பிறருஞ் சாரத
மன்ன ரும்பெற வழங்கி னானரோ.

இவ்வாறாக உண்டாக்கப்பெற்ற தேர்த்தொகையதனை எம்பெருமான் மின்னல் போலும் ஒளியுடைய வேல் ஏந்திய வீரவாகு தேவரும் அவரின் தம்பியரான எட்டுப் பேர்களும் இலக்கம் வீரரும் பூத சேனாதிபதிகளும் பெற்றுக்கொள்ளும்படியாகக் கொடுத்தருளினார். 16

பாகர் தூண்டிடப் படருந் தேர்கள்மேல்
வாகை சேர்தரும் வாகு வேமுதல்
ஆனோர் அடைந் தம்பொன் மால்வரைத்
தோகை மைந்தனைத் தொழுது போற்றினர்.

சாரதிகள் தூண்டிச் செலுத்தச் செல்கின்ற தேர்கள் மேலாக வெற்றி அடையும் பேறுடைய வீரவாகு தேவர் முதலியோர் சென்று எழுந்தருளிக்கொண்டு அத்தேர் மேல் நின்றவாறு அழகிய பொன்மயமான இமயமலையிற் தோன்றிய உமையம்மையார் பாலகரான எமது பெருமானைக் கைகளைக் கூப்பித் தொழுது போற்றி செய்தார்கள். 17

தொழுது வள்ளலைச் சூழ்ந்து மும்முறை
விழுமி தாகிய விடைபெற் றேகினர்
பழுதில் நீத்தமோர் பத்து நூறெனக்
குழுமிப் பாரிடங் குலவிச் செல்லவே.

அருட் செல்வரான எமது குருமணியைத் தொழுது மும்முறை வலமாக வந்து முன்னின்று வணங்கி பெறற்கரிய மேலான உத்தரவைப் பெற்றுக்கொண்டு பழுது ஒன்றும் இல்லாத ஆயிரம் வெள்ளம் என்னும் பூதங்கள் சேனைகளாகிக் கூடிச் சூழ்ந்து வர தாரகாசுரனுடைய மாயபுரியை நோக்கிச் சென்றார்கள். 18

பாய பூதர்தம் படைக்கு வேந்தராய்
ஏயி னார்க்குவீ றிலக்கத் தெண்மராய்
மேயி னார்க்கெலாம் வீர வாகுவோர்
நாய கம்பெறீஇ நடுவட் போயினான்.

இவ்வாறாக சூழ்ந்து செல்லும் ஆயிரம் வெள்ளம் பூத சேனைக்கு எல்லாம் நாயகர் (தலைவர்) எனும் வீரர்களானவர்க்கும் இலக்கத்து எட்டு வீரர்களாகி தன்னைச் சூழ வருவார்க்கும் வீரவாகுதேவர் நடுநாயகமாகத் தலைமையுடன் சென்றருளுவாராயினர். 19

அமர்வி ளைக்கமுந் தவனை யேவியே
தமர வேலையில் தானை சூழ்தர
இமைய வர்க்கிறை ஏனை யோர்தொழக்
குமரவேள் கடைக் கூழை யேகினன்.

போர் விளைக்கும்படி முன்னாக வீரவாகு தேவனைச் செலுத்திவிட்டு அழகிய கடல் பரந்ததுபோல சூழ்ந்துவரும் சேனையான மிகுதிப் பூதம் சூழவும் தேவர்கட்கு அரசனான இந்திரன் முதல் யாவரும் தொழவும் என்றும் இளமையும் நலமும் குன்றாத எம் கடவுள் இவர்கள் பின்னாகத் தாம் தேர்மேற் சென்றருளினர். 20

பிற்பட எம்பிரான் பெயர ஏவலால்
முற்படு வீரனை முயங்கிப் பாரிடச்
சொற்படை படர்வன தூமந் தன்னொடு
சிற்பரன் நகையழல் புரத்துச் சென்றபோல்.

எம்பிரான் பின்னாகச் சென்றருள அவரின் ஏவுதலால் முற்பட்டுச் செல்கின்ற வீரவாகு தேவனை நெருங்கிச் சூழ்ந்து புகழ்பெற்ற பூதங்கள் அணிவகுத்துச் செல்லும் தன்மையானது எதுபோலும் எனில் புகைதோன்றும் படியாக ஞான சொரூபரான சிவபிரான் முப்புரங்கள் அழியும்படி விடுத்த சிரிப்பில் எழுந்த நெருப்பு சென்ற தன்மைபோலவும் இருந்தது. 21

அரிநிரை பூண்டதேர் அலகை பூண்டதேர்
பரிநிரை பூண்டதேர் படைக்குள் ஏகுவ
விரிகடல் வரைப்பினில் மேக ராசியுங்
கிரியுறழ் கலங்களுங் கெழுமிச் செல்வபோல்.

சிங்கங்கள் வரிசையாகப் பூட்டப்பட்ட தேரும், பேய்கள் பூட்டப்பட்ட தேரும், குதிரைகள் வரிசையாகப் பூட்டப்பட்ட தேருமாகிய இவைகள் யாவும், பூதப்படைகளுக்குள்ளே செல்லுவன. எதுபோலும் எனில் விரிந்த கடல் மேலாக மேகக் கூட்டமும் மலையை ஒத்த கப்பல்களும் செல்லும் தன்மைபோலும் இருந்தது. 22

இடையல் இரதமோ டிரதந் தாக்கிய
படையொடு படைவகை செறிந்த பல்வகைக்
கொடியொடு தொடிநிரை துதைந்த கூளியர்
அடுசமர் பயின்றிடும் அமைதி போலவே.

பரந்த அகன்ற தேர்கள் வேகமாகச் செல்லுதலில் ஒன்றோடொன்று தாக்கி முட்டிக்கொள்ளும்; வீரர்கள் கையில் பிடித்த படைகளோடு படைகளும் வேகமாகச் செல்வதினால் சிக்கி மாட்டிக்கொள்ளும்; கொடிகளோடு கொடிகளும் ஒன்றுடன் ஒன்று சிக்கிக்கொள்ளும். இவைகள் முட்டியும் சிக்கியும் மாட்டியும் நிற்கும் தன்மை பூதங்கள் ஒன்றுடன் ஒன்று போர் பயில்கின்ற தன்மைபோல் இருந்தன. 23

சங்கொடு பணைதுடி தடாரி காகளம்
பங்கமில் தண்ணுமை யாதிப் பல்லியம்
எங்கணும் இயம்பின எழுந்து பூழிபோய்ச்
செங்கம லத்தவன் பதத்தைச் செம்மிற்றே.

சங்குகள் ஊதப்பெற்றன; பெரிய முரசப்பறை முழக்கப் பெற்றன; உடுக்கு அடிக்கப்பட்டது; பேரிகை அடிக்கப்பட்டது; காகளம் ஊதப்பட்டது; குற்றமில்லாத மத்தளம் அடிக்கப்பட்டது. இவ்வாருக இன்னும் வேறு வேறு வாத்தியங்களும் எங்கும் முழக்கப்பட்டன. சேனை சென்ற வேகத்தில் எழுந்துகொண்ட புழுதிபோய் தாமரை மலரில் இருக்கும் பிரமனுடைய உலகைச் சார்ந்து கொண்டது. 24

சாற்றுமிவ் வியல்புறத் தானை வீரருஞ்
சீற்றவெம் பூதருஞ் செல்ல வாகையான்
கோற்றெழில் அகற்றிய கோட்டு மாமுகன்
போற்றிய மாயமா புரியைச் சேர்ந்தனன்.

சொல்லப்பெறும் இவ்வியல்புகள் பொருந்த சேனை வீரரும் கோபமுடைய பூத வீரரும் செல்ல, தனது வெற்றி வீரத்தினுலே செங்கோன்மை முழுவதும் இல்லாமல் செய்த யானை முகம் உடைய தாரகாசுரன் அரசாண்டு இருந்த மாயபுரி என்பதைச் சேர்ந்தார் வீரவாகு தேவர். 25

சேர்ந்திடு மெல்லை பூதர் சேனைபோய் நகரம் புக்கு
நேர்ந்திடும் அவுண ரோடு நின்றமர் விளைத்து நின்றுர்
ஓர்ந்தனர் அதனைத் தூத ரோடித்தங் கோயில் புக்குச்
சார்ந்திடு திருவில் வைகுந் தாரகற் றெழுது சொல்வார்,

இவ்வாறு சேர்ந்திட்ட நேரத்து பூதர்களின் சேனையானது சென்று மாயபுரி என்னும் நகரத்துள்ளே புகுந்து அங்கு தம்முடன் எதிர்ப்பட்ட அசுரரோடு நின்று போர் செய்தார்கள். இவ்வாறு பூதங்கள் புறப்பட்டு உள்புகுந்து போர்விளைத்த தன்மையை அங்கு நின்ற தூதுவர்கள் கண்ணுற்று ஓடிச் சென்று அரண்மனை புகுந்து அங்கு இயல்பாகவே அமைந்திருந்த செல்வத்துடன் பொருந்திய தாரகாசுரனைக் கண்டு கை தொழுது இனைய வார்த்தைகளைச் சொல்வார்கள். 26

எந்தைமற் றிதுகேள் நும்முன் இமையவர் தொகையை யிட்ட
வெந்துயர்ச் சிறையை நீக்க விரிசடைக் கடவுள் மைந்தன்
கந்தனென் றெருவன் வந்தான் அவுணரைக் கடக்கு மென்னு
அந்தர நெறிசெல் விண்ணேர் அறைந்திடக் கேட்டு மன்றே.

"எங்கள் அரசே! யாங்கள் சொல்லும் இந்த வார்த்தைகளைக் கேட்பீராக. உம்முடைய ஊராகிய வீரமகேந்திரபுரத்தில் தேவர்களை நீங்கள் சிறைப்படுத்திய கொடிய துயரம் தரும் சிறையினை நீக்கும்பொருட்டாக விரித்த சடையுடைப் பகவானின் திருக்குமரன் கந்தன் என்று ஒரு பெயரைக் கொண்டவன் வந்துள்ளான். "இந்தத் தெய்வக் குழந்தை எம்மால் வெல்லமுடியாதபடி நம்மைத் துயரம் செய்த அசுரர்களை வெற்றி கொள்வார்" என்று ஆகாய மார்க்கமாகச் செல்லும் தேவர் சிலர் சொல்லிக்கொண்டு சென்ற வார்த்தையை நாம் கேட்டோம்." 27

என்னிவர் மாற்ற மென்னு யாந்தெரி குற்றே மாக,
அன்னவர் இயம்பி யாங்கே ஆயிரத் திரட்டி யென்னப்
பன்னுறு பூத வெள்ளம் படர்ந்திடக் குமரன் போந்தான்
முன்னுறு தூசி நந்தம் முதுநகர் அலைத்த தென்றுர்.

"இஃதென்ன இவர்கள் இப்படிச் சொல்கிருர்களேயென நாம் அதை ஆராய முற்பட்டபோது அந்தத் தேவர் சொன்ன அதே தன்மையாக அங்கே இரண்டாயி

ரம் வெள்ளம் எனச் சொல்லப்படும் பூதங்கள் சேனையாகச் சூழ்ந்து படர்ந்திடக் குமரக் கடவுள் வந்தார். இப்போ அவருக்கு முற்பட்டு வந்த தூசிப்படை நம் முடைய ஊரை வளைந்துகொண்டு அழிவு செய்கிறது'' என்றார் தூதுவர். 28

**என்றலும் வடவைத் தீயில் இழுதெனும் அளக்கர் வீழத்**
**துன்றிய எழுச்சி மானத் துண்ணெனச் செற்றந் தூண்ட**
**மின்றிகழ் அரிமான் ஏற்று வியன்றவி சிருக்கை நீங்கிக்**
**குன்றுறழ் மகுடம் அண்ட கோளகை தொடவெ ழுந்தான்.**

அவர்கள் இவ்வாறு கூறியபொழுது வடவாமுகாக்கினியில் நெய்யெனும் கடலைக் கவிழ்த்து விட்டாற் தீ சுவாலித்து எழுதலொப்பத் தாரகாசுரனுடைய உள்ளத்திலே கோபத் தீ பொங்கி எழுந்து துள்ள மின்னல்போல ஒளி உடைய இரத்தின சிம்மா சனத்தை விட்டு நீங்கித் தனது முடியானது அண்டகோளங்களையும் முட்டும்படியாகத் தாரகாசுரன் எழுந்துகொண்டான். 29

**எழுந்துதன் மருங்கு நின்ற ஒற்றரை நோக்கி இந்தச்**
**செழுந்திரு நகர்மேல் வந்த சேனையை முளிபுற் கானில்**
**கொழுந்தழல் புகுந்த தென்னக் கொல்வன்நந் தானை முற்றும்**
**உழுந்துருள் கின்ற முன்னர் ஒல்லைதந் திடுதி ரென்றான்.**

எழுந்து தன்பக்கராக நின்ற தூதுவரை விரைவுடன் பார்த்து, ''இந்த என்னுடைய செழுமைமிக்க செல்வ நகர்மேல் வந்த சேனையைக் காய்ந்த புற் கொண்ட பற்றையில் பெருநெருப்புப் பற்றினாற்போலக் கொல்வேன். ஆகவே எனது சேனை முழுவதையும் உளுந்து உருள்வதற்கு முன்பான சடுதியான நேரத்து என்முன் கொணர்வீராக'' என்றான் தாரகாசுரன். 30

**அன்னபணி முறைபுரிவான் ஒற்றுவர்கள் போயிடலும் அவுணன் நின்ற**
**கொன்னுறுவேற் பரிசனரைக் கொடுவருதிர் இரதமெனக் கூற லோடும்**
**முன்னமொரு நொடிவரையில் தந்திடலும் அதனிடையே மொய்ம்பிற் புக்குப்**
**பின்னர்வரும் அமைச்சர்கள்தந் தொகைபரவ மதர்ப்பினொடு பெயர்த லுற்றான்.**

அவ்வாறு தாரகன் பணித்த முறை செய்யும்படி தூதுவர்கள் போயிடலும் தாரகாசுரன் அயலே அச்சம் விளைக்கும் வேலேந்திய கையோடும் நின்ற தனது பரிசனரைப் பார்த்து ''என் தேரைக் கொண்டு வருவீராக'' எனக் கூறலோடும் உடனே அவர்கள் ஓடிச் சென்று ஒரு நொடிப் பொழுதில் தேரை முன்பாகக் கொண்டு வருதலும் அத்தேர்மீது வலிமையோடும் பாய்ந்து ஏறிக்கொண்டு பின்னால் வந்த மந்திரிமார் கூட்டம் வணங்கியவாறு தாங்களும் புறப்பட்டுச் சூழ்ந்து வருமாறு பெரும் மதர்ப்பினோடும் ஆங்காரத்துடனும் சென்றான் தாரகாசுரன். 31

**வீடுவான் போலுமினித் தாரகனென் றவன்சீர்த்தி விரைவில் வந்து**
**கூடியே புரள்வதுவும் அரற்றுவதுங் காப்பதுமாங் கொள்கைத்தென்ன**
**நீடுசா மரத்தொகுதி பலவிரட்ட வெள்ளொலியல் நிமிர்ந்து வீசப்**
**பீடுசேர் தவளமதிக் குடைநிழற்ற வலம்புரிகள் பெரிதும் ஆர்ப்ப.**

இனி இந்தத் தாரகாசுரன் அழிவான்போலும் என்று முன்னமே அவன் நிலையை உணர்ந்துகொண்டு அவ்வசுரனுடைய கீர்த்தி, புகழ், அனைத்தும் விரைவாக அவன் முன்புவந்து கூடி நின்று புரள்வதும், புலம்புவதும், காப்பதும் ஆகிய கொள்கை

போன்று தோன்றும்படியாக நீண்ட தாமரைத் தொகுதிகள் பல அவன் முன்னால் வீசப்பட்டும் வெண்ணிறமான பல வஸ்திரத் தூக்குகள் உயர்ந்து அசையவும் பெருமை பொருந்திய வெண்ணிறமான சந்திர வட்டக்குடை நிழல் செய்யும்படியும், வலம் புரிச் சங்குகள் பெரிதும் ஆரவாரத்துடன் ஊதப்பெறும்படியும் தாரகன் வந்தான்.

தாரகன் முன்பு அவன் கீர்த்திகள் அவன் இறப்பான் என எண்ணி புரண் டடித்துப் புலம்பி அழுது காக்க முயன்று நிற்றல்போல சாமரைகள் புரண்டும், சங்குகள் புலம்புதல்போல் ஊதியும், வஸ்திரத்தூக்குகளும் சந்திர வட்டக் குடையும் காப்பது போல் மேல் பிடிக்கப்பட்டுத் தோன்றியும் நின்றன என உவமித்தார். 32

**ஈமத்தே நடம்புரியுங் கண்ணுதலோன் எடாதசிலை யென்ன மாலோன்**
**மாமத்தே யெனக்கிடந்த முழுவயிரத் தண்டமொன்று வயிரக் கண்டைத்**
**தாமத்தேர் பெறுகின்ற மடங்கல்பல ஈர்த்துவருஞ் சகடத்தின்கால்**
**சேமத்தேர் மிசைப்போத ஏனையபல் படைக்கலமுஞ் செறிந்து நண்ண.**

சுடுகாட்டிடத்தே நடம் புரிகின்ற நெற்றிக் கண்ணினை உடைய பெருமான் எடுத்து வளையாத வில்லான மேருமலையானது இதுதான் என்னும்படியும் விஷ்ணு மூர்த்தி பாற்கடலைக் கடைந்தபோது பெரிய மத்தாகிம மந்தர மலையானதும் இது தான் என்னும்படியாகவும் அமைந்த முழுதும் வைரத்தினால் செய்த பெரிய தண்டா யுதமொன்று வைரத்தினால் செய்த மணிமாலைகள் அணியப்பட்டு விளங்கும் கழுத் தைக்கொண்ட அழகிய சிங்கங்கள் இழுத்துச் செல்கின்ற பெரிய சில்லுகளையும் வலிய கால்களையும் உடைய ஒரு துணைத்தேரின் மேலாகச் செல்லவும் இத்தண்டோடு வேறு படைகளும் அத்தேரில் செறிந்து நண்ணவும், 33

**ஒற்றர்கூ வியவேலை ஏற்றெழுந்த அவுணர்கடல் ஒருங்கு செல்லக்**
**கொற்றமால் கரிபரிதேர் இனத்தினொடு வந்தீண்டக் குழவித் திங்கட்**
**கற்றைவார் சடைக்கடவுள் வாங்கியபொன் மால்வரையைக் காவ லாகச்**
**சுற்றுமால் வரையென்னப் படைத்தலைவர் பஃறேரில் துவன்றிச் சூழ.**

தூதுவர் அழைத்த நேரத்து அதைக்கேட்டு எழுந்த அசுரர்களான சேனை கடல் போலப் பரந்து செல்லவும், கொற்றமான மதயானையும். குதிரையும், தேரும் இனம் இனமாக வந்து சூழவும், இளம் பிறையணிந்து கற்றையாக வார்ந்து விளங்கும் சடையுடைய சிவபிரான் வளைத்த பொன்னான மலையைக் காவலாகச் சுற்றி வருகின்ற பெரிய மலைகள் என்னும்படி சேனாதிபதிகள் பல தேர்களில் நெருங்கிச் சூழ்ந்து வரவும், 34

**மொய்யமர்செய் கோலமொடு முப்புரம்மேல் நடந்தருளும் முக்கண்மூர்த்தி**
**பையரவின் தலைத்துஞ்சுங் கணைதூண்ட மூண்டதழல் பதகரானோர்**
**மெய்யுடலம் முழுதுநுங்கத் தலைக்கொள்ளப் பெருந்தூம மிசைக்கொண் டென்னச்**
**செய்யமுடி அவுணர்பெருங் கடலினிடை யெழும்பூழி சேட்சென் றோங்க,**

வலிமையான போரைச் செய்யுங் கோலத்துடன் முக்கண்மூர்த்தியான சிவபிரான் முப்புரங்கள்மேல் போர் செய்யச் சென்றபோது நஞ்சைப் பையில் உடைய அனந்தன் என்னும் பாம்பில் யோக நித்திரை செய்யும் நாராயணக் கடவுள் என் னும் அம்பை செலுத்த அந்தப் பாதகரான அசுரர்களின் உடலங்கள் தலை வரையும் நெருப்பு பற்றி எரியும்போது தோன்றுகின்ற புகைப்படலமானது மேற்கொண்டு சென்றது எனும்படியாக தாரகாசுரனைச் சூழ்ந்து வருகின்ற சிவந்த முடியை உடைய அசுரர்களின் சேனை செல்லும் வேகத்து எழுந்த புழுதி மேற்கொண்டு தோன்றவும்,

கார்க்குன்றம் அன்னதிறல் கரிமீதும் பரிமீதுங் கடிதில் தூண்டுந்
தேர்க்குன்றம் அதன்மீதும் வயவர்கள்தங் கரங்களினுஞ் செறிபதாகை
ஆர்க்கின்ற துயர்ந்தோங்கி அசைகின்ற தெம்மருங்கும் அம்பொன் நாட்டில்
தூர்க்கின்ற பூழியினைத் துடைக்கின்ற பரிசேபோல் துவன்றித் தோன்ற.

கறுத்த மலை என்னும்படி ஒத்த யானைமீதும், கடிதாகத் தூண்டப்படும் மலைபோலும் தேர் மீதும், வீரர்களுடைய கைகள்மீதும் செறிந்து விளங்கும் கொடிகள், சேனைகள் வேகமாகச் செல்வதால் பட படத்து ஆர்க்கின்றதாய், உயர்ந்து ஓங்கி அசைகின்றதாய், எப்பக்கமும் சூழ்ந்து காணப்படுவதாய் நிற்கும் தன்மையால் சேனைகள் சென்ற வேகத்தில் முன் எழுந்த புழுதி சென்று பொன்னுன தேவ உலகில் பட்டு மூடிய அந்தப் புழுதியை வஸ்திரத்தால் துடைத்துக்கொள்கின்ற தன்மைபோல் விளங்கி நிற்கிறது இக்கொடிகளின் தன்மை, 36

வாகையுள பல்லியமும் இயம்பத்தன் நகர்நீங்கி மன்னர் மன்னன்
ஏகியதோர் படிநோக்கி உவரிமிசைக் கங்கைகள்வந் தெய்து மாபோல்
சாகையுள பன்மரனும் பல்படையுங் குன்றுகளுந் தடக்கை யேந்திச்
சேகுடைய பெருஞ்சீற்றப் பூதர்படை யார்த்தெதிர்ந்து சென்ற தன்றே.

வெற்றிக்குச் சேனையை ஊக்குவிக்க முழக்கப்படும் பல்வேறு விதமான வாத்தியங்களும் இயம்பத் தனது நகரை விட்டு நீங்கி அரசர்க்கு அரசனுன தாரகாசுரன் போர் செய்ய வந்த தன்மையை நோக்கி, சமுத்திரத்தின் மீது கங்கையாறு வந்து சேர்கின்ற தன்மைபோல வைராக்கியம் பொருந்திய பெருங் கோபமுடைய பூதங்களான படைகள் யாவும் ஆர்த்து இரைந்தவண்ணம் பெரிய கொம்பர்களை உடைய பல மரங்களையும், பல படைகளையும், பல மலைகளையும் தங்கள் கைகளில் ஏந்திய வண்ணம் தாரகாசுரனையும் அவனது சேனையையும் எதிர்ந்து சென்றது. 37

எல்லோரும் தொழுதகைய குமரனடி இணைவழுத்தி இகல்வெம்பூதர்
கல்லோடு மரனேடுங் கதையோடுங் கணிச்சியொடுங் கழுமுள் வீச
வில்லோடுங் கணையோடும் வேலோடும் நேமியொடும் மிக்க எல்லாம்
அல்லோடும் புரையுமனத் தவுணர்படை எதிர்சிதறி அமர்செய் திட்டார்.

எல்லோரும் தொழும் தகைமையினை உடைய குமரப்பெருமானின் உற்ற துணையான திருவடி மலர்களைத் தியானித்துப், பூதகணங்கள் வழிபட்டு, கல்லுடனும், மரத்துடனும், வச்சிரப் படையோடும், கதாயுதத்தோடும், கழுமுள்ளாலும் எடுத்து அசுரர்மேல் வீசி எறிதலும் அப்போது அசுரர்கள் யாவரும் அதற்கு மாருகக் கையில் இருக்கும் வில்லில் அம்பைப் பூட்டிச் செலுத்தியும் வேலால் எறிந்தும் சக்கரத்தைச் சுழற்றியும் மிகுதியான எல்லாப் படையாலும் இருளோடு ஒத்த மனமுடையராய் வீசிப் போர் செய்யலானுர்கள். 38

எண்ணுறு படைகள் இவ்வா றெதிர் தழீஇ அடரும் வேலை
விண்ணுறு பூழி யென்னும் விரிதரு புகைமீச் செல்ல
மண்ணுறு குருதியான வன்னியை மாற்று வார்போல்
கண்ணுறும் இமையோர் கண்கள் கடிப்புனல் கான்ற அன்றே.

எண்ணப்பட்ட படைகள் இவ்வாறு எதிர் செலுத்திப் போர்செய்யுங்காலை படைகளின் தாக்குதலினுல் எழுந்த தூசி ஆகாயத்திற் சென்று பரந்து புகைபோல்மேற்

சென்று அங்குள்ள தேவர்கள் கண்களிற்படுதலும் அவர்களது கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. இந்தக் கண்ணீர் கீழே பட்டு இறந்தாருடைய இரத்த வெள்ளம் என்னும் நெருப்பை அவித்துவிடுவதுபோல் ஆயிற்று. 39

இரிந்திட லின்றி நேர்வந் தேற்றமர் புரிதலாலே
சொரிந்திடு குருதி பொங்கத் தோளொடு சென்னி துள்ளச்
சரிந்திடுங் குடர்கள் சிந்தத் தானவர் பல்லோர் மாயப்
பொருந்திறல் வயத்தால் மேலாம் பூதருஞ் சிலவர் பட்டார்.

போர் செய்ய முற்பட்டவர் திரும்பி ஓடாது நேருக்குநேராகி ஏற்று அமர் புரிதலால் சொரிந்த இரத்தம் பொங்கவும் தோளும் தலையும் வெட்டுண்டு துள்ளவும் சரிகின்ற குடர்கள் சிந்தும்படியாகவும் அசுரர் பலர் இறப்ப பெரும்வெற்றி ஈட்டிய பூதசேனையிற் சில பூதங்களும் அழிந்து மாய்ந்தன. 40

தேருடைத் தெறிந்து பாய்மரீத் திறத்தினைச் சிதைத்து நீக்கி
ஆருடைத் திகிரிச் சில்லி அங்கையால் எடுத்துச் சுற்றிப்
போருடைத் திறலோர் தம்பால் பொம்மென நடாத்தும் பொற்பால்
காருடைப் பூதர் சில்லோர் கண்ணனே போன்றார் அன்றே.

பூதங்கள் சில தேரை உடைத்து எறிந்து பாய்கின்ற குதிரைகளைச் சிதைத்து நீக்கி தேரில் உருள்கின்ற வட்டமான சில்லை அழகிய கைகளால் எடுத்து போர்செய்யும் அசுரர்மேலாக எறிகின்ற தன்மையால் இந்தமேகம்போலப் பருத்த பூதங்கள் சக்கரப் படை உடைய விஷ்ணுபிரானைப் போன்றார்கள். 41

தேர்பரித் தெழுந்து மண்ணில் செல்லுருப் பவளச் செங்கால்
கார்பறித் தன்ன தோகைக் கவனவாம் புரவி யீட்டம்
போர்பரித் தொழுகு சீற்றப் பூதர்கள் புடைத்துச் சிந்திப்
பார்பரித் திடவே செய்தார் படிமகள் இடும்பை தீர்ப்பார்.

அசுரர் தேரை இழுத்து, எழுந்து பாய்ந்து மண்மேலாகச் செல்கின்ற பவளம்போலும் சிவந்த காலினை உடையதும், கறுத்த வாலினை உடையதும் வேகமுடையதுமான கடிவாளம் உடைய குதிரைக் கூட்டங்களை போர் வேகத்துடன் எழுந்து தாக்குகின்ற பூதங்கள் உதைத்து அடித்துச் சிந்திப் பூமியிலே கிடக்கும்படி செய்தார். இவ்வண்ணம் வேகத்தால் பூமியை அதிரச் செய்து இடும்பை தந்த குதிரைகளைக் கொன்றதால் பூமிதேவி இடும்பை தீர்த்தார் இப்பூதர். 42

வாலுடைக் களிற்றின் ஈட்டம் வாரியே கரத்தா லெற்றிக்
காலுடைத் திகிரித் திண்டேர் கழல்களால் உருட்டிக் காமர்
பாலுடைப் புரவித் தானை பதங்களால் உழக்கிச் சென்றார்
வேலுடைத் தடக்கை அண்ணல் விடுத்தருள் வீர வீரர்.

பெரிய வால் உடைய யானையின் கூட்டங்களைக் கைகளால் வாரித் தூக்கி அடித்தும், கால்களை உடைய திண்மையான சில்லுடைய தேர்களைத் தமது பாதங்களால் உதைத்து உருட்டியும், அழகிய வெண்ணிறத்தை உடைய குதிரைகளைக் காலால் மிதித்துக் கொன்றும் செல்கிறார்கள் வேற்படையை ஏந்திய திருக்கரத்துடன் விளங்கும் ஏகநாயகனான முருகப்பிரான் விடுத்துள்ள வீரரான பூதங்கள். 43

வாருறு புரசை பூண்ட வன்களிற் றெருத்தல் யாவுஞ்
சூருறு நிலைய வாகித் துஞ்சிய தொகுதி சூழப்
பேருறு குருதி நீத்தம் பிறங்கழற் கதிர்கா ணுது
காருற வூர்கோள் தோன்றுங் காட்சியை யொத்த தன்றே.

வார் பூட்டிய உப்பரிகை உடைய கொடிய யானையின் கூட்டம் யாவும் பூதங்கள் கொன்ற வேகத்தைக் கண்டே பயத்தால் அப்படியே இறந்துபோக அந்த இறந்த யானைகளைச் சூழ்ந்து இரத்தமானது வட்டமாக வளைந்து நிற்கும் தன்மை எதுபோல ஆகிறதெனில், பிரகாசிக்கும் வெப்பமுடைய கிரணங்களைக்கொண்ட சூரிய தேவனைக் காணமுடியாதபடி மேகங்கள் மறைப்ப அம்மேகங்கள் புறத்தே பரிவட்டம் சூழ்ந்து தோற்றும் காட்சியை ஒத்தது. 44

கண்ணெதிர் நின்று போர்செய் கார்கொழும் அவுணர்ப் பற்றித்
துண்ணெனப் பூதர் வீசத் துளங்கிய கலன்க ளோடும்
விண்ணிடை யிறந்து நொய்தின் வீழ்வது விசும்பில் தப்பி
மண்ணிடை மின்னு வோடும் வருமுகில் போன்ற தன்றே.

கண்முன்னால் நின்று போர் செய்கின்ற கருமை நிறம் உடைய அசுரரைப் பூதங்கள் பற்றிப் பிடித்து திடீரெனத் தூக்கி வீசுதலும், வீசப்பட்ட அசுரர் ஆகாயத்துச் சென்று இறந்து திரும்ப உடல் பூமியில் அணிந்துகொண்ட பிரகாசமுடைய ஆபரணங்களோடும் வீழ்கின்ற தன்மை வானத்தில் நின்றும் தவறி கரிய முகில் மின்னலோடு பூமியில் வீழ்வது போன்றுள்ளது. 45

ஆயிர வெள்ள மாகுங் கணவரும் ஆங்க ணுள்ள
பாயிருங் குன்ற மெல்லாம் பன்முறை பறித்து வீசி
மாயிருந் தகுவர் தானை வரம்பில படுத்து நின்றூர்
ஏயென வுலகைச் சிந்தும் இறுதிநாள் எழிலி போல்வார்.

ஆயிரம் வெள்ளம் சேனையாகும் பூதங்கள் யாவும் அங்கணுள்ள பருத்த பெரிய மலைகள் எல்லாவற்றையும் பலமுறை பிடுங்கி வீசி பெரிய அசுரர்களின் சேனைகளில் அளவுகடந்தனவற்றைக் கொன்று நின்றூர்கள். இந்தப் பூதங்கள் உலகின் அழிவு காலத்தில் மழையைப் பொழிந்து உலகை அழியச் செய்யும் மேகம்போல் ஆயினூர்கள். 46

நிணங்கவர் ஞமலி யோர்சார் ஞெரேலெனக் குரைப்பப் புள்ளின்
கணங்களும் அலகை தானுங் கறங்கிடக் கரினத் தோங்கிப்
பிணங்களின் அடுக்கல் ஈண்டிப் பேரமர் விலக்கி யார்க்கும்
அணங்குறு நிலைய வாகி அடுத்தன நடுவண் அம்மா.

போர்க்களத்தில் பிணங்களைக் கவர்ந்து செல்லும் நாய்கள் ஒருசாராக நின்று ஒன்றை ஒன்று பார்த்து ஞெரேலெனும்படி ஓசைபடக் குரைக்கவும், பறவைக் கூட்டங்களும் பேய்க் கூட்டமும் உலாவவும், இறந்தாரின் பிணங்கள் மலைபோலக் குவிந்து போர் செய்வாரைச் செய்யாதபடி இடைவிலக்கி பார்ப்பவர் யாவரும் நடுக்கம் கொள்ளும்படி அச்சுறுவிக்கும் நிலைமையாகப் பிணக்குவியல்கள் நடுவணுக நிற்பன. 4

தரைத்தடஞ் சிலைய தாகத் தறுகண்வெம் பூத ராஞேர்
வரைத்துணை அன்ன தாளே வலிகெழு குழவி யாகத்
திரைத்திழி குருதி நீராத் தீர்ந்திடு திறலோர் யாக்கை
அரைத்தென நடப்ப ஏற்ருர் அவுணரும் அடுபோர் செய்தார்.

கொடிய சில பூதர்கள் இந்தப் பூமியே அம்மி எனும்படியாகவும், தமது மலை போன்ற கால்களே குழவி எனும்படியாகவும் வெட்டுண்ட உடலில் நின்றும் சொரியும் இரத்தம் நீராகவும், இறந்தாருடைய உடலமே சரக்காகும்படி அரைப்பார் போன்று காலால் அசுரர் பலரைத் தேய்த்து அழித்துவர அசுரரும் எவ்வாற்ருலும் விடாது பூதங்களை எதிரேற்றுப் போர் செய்தார்கள். 48

தத்துறு புரவித் திண்டேர்த் தானவர் நிகளத் தந்தி
பத்துநா ருென்றில் வீழப் பழுமரப் பணைகொண் டெற்றி
முத்தலை யெஃகம் வீசி முசலத்திற் புடைத்து மொய்ம்பால்
குத்திநின் றுழக்கிப் பாய்ந்து கொன்றனர் பூத வீரர்.

தாவிப்பாய்கின்ற குதிரைகள் பூட்டியதேரை உடைய அசுரர்களின் விலங்கு போலும் சங்கிலித்தொடர் கொண்ட யானைகள் ஒரு அடியாலே ஆயிரம் வீழும்படி பூதங்கள் பெரிய மரங்களால் மோதி அடித்தும், மூன்று தலை உடைய சூல வேலை வீசிக்குற்றியும் முசலப்படையால் அடித்துக்கொன்றும், தோளாலும் கையாலும் குத்திக் கொன்றும், பாய்ந்து உழக்கிக் கொன்றும் அநேக அசுர சேனையைப் பூதங்கள் அழிவு செய்தார்கள். 49

விழுந்தன படிவம் யாண்டும் விரிந்தன கவந்த மேன்மேல்
எழுந்தன குருதித் தாரை ஈர்த்தன நீத்த மாக
அழுந்திய இறந்தோர் யாக்கை ஆர்த்தன பறவை செய்ய
கொழுந்தசை மிசைந்து நின்று குரைவையாட் டயர்ந்த கூளி.

உடலங்கள் யாண்டும் விழுந்தன; உடற்குறைகள் மேன்மேலும் எழுந்து கூத்தாடின; இரத்தம் தாரை தாரையாக எழுந்து ஆறுபோல் ஓடி இறந்தோர் உடல்களை இழுத்துச் சென்றன; பறவைகள் ஆரவாரித்தன; சிவந்த கொழுப்புடைய தசைகளை உண்டு களித்து நின்று பேய்கள் குரவைக் கூத்தாடின. 50

கண்டனன் இனைய தன்மை தாரகன் கடிய சீற்றங்
கொண்டனன் வையம் நீங்கிக் குவலய மிசைக்குப் புற்றுத்
தண்டமொன் றெடுத்துப் பூதப் படையினைத் தரையில் வீட்டி
அண்டமுங் குலுங்க ஆர்த்திட் டடிகளால் உழக்கிச் சென்ருன்.

இவ்வாருகத் தனது சேனைகள் அழிந்ததன்மையினைத் தாரகாசுரன் கண்டவுடன் கொடிய கோபங்கொண்டனன். தேரைவிட்டு நீங்கி பூமியினிலே குதித்து தண்டாயுதமொன்றை கையிலே எடுத்துக்கொண்டு அத்தண்டால் ஓங்கிப் பூதப்படைகளை அடித்துச் சாய்த்து பூமியிலே கிடத்தி அண்டங்களும் குலுங்கும்படியாக இரைச்சலிட்டுக் கூவி ஆர்த்து தனது கால்களால் பூதப்படைகளை உழக்கிக் கொன்றும் சென்ருன்.

அல்லெனப் பட்டமேனி அவுணர்கட் கரசன் கையிற்
கல்லெனப் பட்ட தண்டாற் புடைத்தலுங் கரங்கள் சென்று
பல்லெனப் பட்ட சிந்திப் பாய்புனல் ஒழுக்கிற் சாய்ந்த
புல்லெனப் பட்ட தம்மா பூதர்தஞ் சேனை யெல்லாம்.

இருள் எனப்பொருந்திய மேனியை உடைய தாரகாசுரன் இவ்வாறு கையில்கொண்ட மலைபோன்ற தண்டாயுதத்தால் பூதசேனைகளை அடித்தலும், கைகள், தலைகள், பல்லுகள் எனப்பட்ட யாவும் சிதறி நொருங்கப்பட்டு இரத்தம் கொப்பளிக்கும் படியாக பூதங்கள் சாய்ந்து சாய்ந்து விழுந்தன. இவ்வாறு தண்டால் அடித்தலும் மள மளவெனச் சாய்ந்து வீழும் பூதசேனை புல்லை ஆயாது, தண்டால் அடிக்கச் சாய்வது போல தாரகன் தண்டால் அடிக்கச் சாய்ந்து வீழ்ந்தது. 52

பிடித்திடு வயிரத் தண்டம் பெருங்கடற் பூதவெள்ளம்
முடித்திடல் புகழோ அன்றால் தாரக மொய்ம்பின் மேலோன்
அடித்திடுங் காலை கீண்ட தம்புவி அடிப்பான் ஓங்கி
எடுத்திடுங் காலை கீண்ட தெண்டிசை அண்டச் சூழல்.

தாரகாசுரன் பிடித்திட்ட வயிரத்தண்டம் ஒவ்வோர் அடியில் கடல்போல் பரந்த பூதவெள்ளத்தை முடித்திடல் ஒருபுகழோ? இல்லை ஏனெனில் வலிமையுடைய கால் கொண்ட தாரகாசுரன் தண்டால் ஓங்கி அடித்தால் அந்த அடியில் பூமி வெடித்துப் பிளக்கும். அடிக்கும்படி தண்டாயுதத்தை ஓங்கித் தூக்கியமையால் மேலுள்ள எட்டு திக்கு அண்டங்கள் கிழிபட்டன. 53

தாரிடங் கொண்ட மார்பத் தாரகன் வயிரத் தண்டம்
போரிடங் கொண்டோர் சென்னி புயமுரங் கரங்கள் சிந்திக்
காருடங் கண்ட பாந்தட் கணமெனத் துடிப்ப வீட்டிப்
பாரிடந் தன்னை யெல்லாம் பாரிடம் ஆக்கிற் றம்மா.

மாலையை அணிந்த நெஞ்சினை உடைய தாரகாசுரன் கொண்ட இத்தண்டாயுதம் போர்செய்யும்படி ஆயத்தங்கொண்ட பூதங்களின் தலைகளை, தோளை, நெஞ்சை, கைகளைச் சிந்தி கருடனைக்கண்ட பாம்புகள்போல, பூமியிலே கிடந்து துடிக்கும்படியாக எல்லாப் பூதங்களையும் கீழேவீழ்த்தி, பூதங்கள் யாவற்றையும் ஒன்றையேனும் நிற்க வையாமல் பூமியிலே பரந்து கிடக்க வைத்தது. 54

அன்றரி விடுத்த ஆழி ஆரமா வணிந்த தீயோன்
கொன்றனன் அனிக மென்னுங் கொள்கையும் அவன் மேற்செல்லும்
வன்றிறல் தம்பால் இல்லா வண்ணமும் மதித்து நோக்கி
நின்றிலர் பூதர் வேந்தர் நெஞ்சழிந் துடைந்து போனர்.

அன்று விஷ்ணுபிரான் விடுத்த சக்கராயுதத்தைக் கழுத்தில் மாலையாக அணிந்த தீயவனன தாரகாசுரன் பூதங்களின் சேனைகளைக் கொன்றான் மிச்சமின்றாக என்னும் கொள்கையையும், அதுவன்றி இந்நிலையில் அவனோடும் போர் செய்வதற்கு செல்லத் தங்கட்கு வலிஇல்லை என்னும் தகவையும் கண்ட பூத சேனாதிபதியர் யாவரும் தங்கள் மனம் நிலைகுலைந்து அவன் முன்னிற்கமுடியாதபடி தோற்று ஓடிப்போனார்கள். 55

திண்கண நிரையின் வேந்தர் சிந்துழிச் சீற்றந் தூண்ட
எண்கண மாகியுள்ள இலக்கருஞ் சிலைகா லூன்றி
மண்கணை முழவம் விம்ம வயிரெழுந் திசைப்ப வாங்கி
ஒண்கணை மாரி தூவி அவுணனை ஒல்லை சூழ்ந்தார்.

நீங்காத திண்மையான பூதசேனாதிபதியர் உடைந்து சிதறி ஓடிப்போதலும் அத்தன்மை கண்டபோதே கோபம் பொங்கி எழ எல்லாராலும் மதிக்கப்படும்படியாக

உள்ள இலக்கம் வீரரும் தங்கள் வில்லை எடுத்து காலுற வைத்து ஊன்றி மார்ச்சனை மண்பூசிய முரசப்பறை மேளம் முழங்க ஊதுகொம்புகள் ஊதப்பட்டு பேரோசை கொள்ள அவ்விற்களை வளைத்துக்கொண்டு அவற்றில் அம்புகளைப் பூட்டிச் செலுத்தி மழை சொரிவதுபோல அம்புகளைச் சொரிந்து தாரகாசுரனை விரைவாக வளைத்துக் கொண்டார்கள். 56

சூழ்ந்தனர் துரந்த வாளி தோன்முகத் தவுணன் யாக்கை
போழ்ந்தில ஊறதேனும் புணர்த்தில புன்மை யாகித்
தாழ்ந்திடு நிரப்பின் மேலோன் ஒருமகன் தலைமை தாங்கி
வாழ்ந்தவர் தமக்குச் சொல்லுஞ் சொல்லென வறிது மீண்ட.

இவ்வாறு இவர்கள் சூழ்ந்து நின்று விடுத்த அம்புகள் ஒன்றுயினும் வந்து யானை முகமுடைய தாரகனுடைய உடலத்தைப் பிளந்தது இல்லை. அல்லது சிறு காயம் ஏனும் உண்டுபண்ணிய தில்லை. இதற்குப்பதிலாக இந்த அம்புகளே வலியிலாது மீண்டுபோயது. இது எப்படியெனில் மிகவும் வறுமைப்பட்டுத் தாழ்வாகிய நிலையில் யாவராலும் மதிக்கப்படாது இருக்கப்பெறும் ஒரு பிள்ளையானவன் தானும் கல்வி கற்றுடையான் என எண்ணிக்கொண்டு தலைமைப்பாடு கொண்டு செல்வத்தால் நிரம்பி வாழ்வார்களுக்குச் சொல்லும்சொல் எப்படி அவர் செவியில் ஏருதுபோமோ அதே போல அம்புகள் வீணே மீண்டன. உலக இயல்பு மதிப்பு உடையாரைத்தான் மதிக்கும் அதிலும் அநேகமாக செல்வத்திமிரால் இருப்பவர்கள் தம்மை உணராது தாங்களே மேம்பாடு உடையார் என எண்ணுவார்கள். ஓர் வறியவன் அவரிடத்து சென்று தனது வித்தைபற்றியோ, அறிவுபற்றியோ சொல்ல முயன்றால் அதைஅந்தத் தலைமைத் திமிர் பிடித்தார் ஏற்கார். அதனையே இங்கு தலைமை தாங்கி வாழ்ந்தவர் தமக்குச் சொல்லும் சொல் எனக் கூறினர். 57

தரைபடப் புகழ்வைத் துள்ள தாரகன் தடமார் பத்தைப்
புரைபடச் செய்தி டாது பொள்ளெனப் பட்டு மீண்டு
நிரைபடத் திறலோர் உய்த்த நெடுங்கணை யான வெல்லாம்
வரைபடச் சிதறுங் கல்லின் மாரி போல் ஆனவன்றே.

உலகமெங்கும் புகழ் பரம்பும்படியான புகழ்கொண்ட தாரகாசுரனுடைய விசா லித்த மார்பினை ஒரு சிறிய ஊறும் செய்ப முடியாதபடி நிரை நிரையாக நின்று இந்த இலக்கம் வீரர்களும் விடுத்துள்ள அம்புகள் யாவும் மலையின் மீது கல் மழை பொழிந்தால் அக்கற்கள் சிதறும் தன்மைபோல அவன் நெஞ்சில் விரைவாகச் சென்று பட்டு மீண்டும் சிதறி வீழ்வுற்றன. 58

விடுகணை மாரி யாவும் மீண்டிட வெகுண்டு விண்ணோர்
படைமுறை வழங்கி நிற்பப் பதகன்மேல் அவைகள் எய்தா
உடையதம் வலியுஞ்சிந்தி ஒல்லென மறிந்து செல்லக்
கடவுளர் அதனை நோக்கிக் கரங்குலைத் திரங்கலுற்றார்.

வீரர்கள் விடுத்த அம்பின் மழையால் ஒரு ஊறும் ஆகாது அம்புகள் மீள்தலும் அதனைக்கண்ட வீரர் வெகிழ்ச்சி எய்தி தேவர்கள் படையான இந்திராஸ்திரம், சூரி யாஸ்திரம். பிரமாஸ்திரம் இவைபோன்ற படைகளைச்செலுத்தி நிற்றலும் அப்படை கள் தானும் அப்பாதகன்மேல் சென்று எய்த முடியாதனவாகி தங்கள் வலியையும் சிந்தி திடீரெனத் திரும்பிச் செல்லலும், அந்த செயலினை மேல் நின்று கண்ட தேவர் கள் எல்லாம் தங்கள் கைகளை எடுத்து உதறி துன்பப்பட்டு இரங்கினர்கள். 59

மற்றது காலை தன்னில் வலியினால் வயிரத் தண்டஞ்
சுற்றினன் தற்சூழ் கின்ற சுடர்மணிக் கடுமான் தேர்கள்
எற்றினன் புழைக்கை நீட்டி இலக்கர்தந் தொகையும் வாரிப்
பொற்றனு வோடும் வீழப் புணரியின் மீது விட்டான்.

மற்று இவ்வாறான நேரத்தில் தனது முழு வலியுடன் தாரகாசுரன் கைமேல் பிடித்த தண்டாயுதத்தை சுழற்றினான். சுழற்றித் தன்னை வளைந்து சூழ்ந்திருக்கின்ற இலக்கம் வீரரின் பிரகாசமுடைய இரத்தினம் பதித்தனவும் வேகமுடன் செல்வனவு மான குதிரைகள் பூட்டப்பட்ட தேர்களை மோதி அடித்தான். தன்னுடைய நீண்ட துதிக்கையை நீட்டி இலக்கம் வீரரையும் வாரிப்பிடித்து அவர்கள் கையில் பிடித்த பொன்வில்லோடும் கடலே சென்று வீழும்படி தூக்கி எறிந்தான். 60

துளும்பிய அளக்கர் தன்னில் சூழுற நின்ற தெங்கின்
வளம்படு பழுக்காய் வர்க்கம் மாருதம் எறியச் சிந்திக்
குளம்புகு தன்மை யென்ன வீழ்தரு கொற்ற வீரர்
இளம்பிறை புரையும் வில்லோ டெழுந்தொரு புடையிற் போனார்.

அலைமோதும் சமுத்திரத்தில் வீசப்பட்ட இந்த இலக்க வீரரும்; குளத்தில் ஓரமாக நின்ற தென்னை மரத்தில் உற்ற வளம்பொருந்திய பழுத்த தேங்காய்கள் காற்று வேகமுடன் வீச சிதறிக் குளத்தில் வீழ்கின்ற தன்மையை ஒப்ப கடலில் சித றுண்டு சென்று வீழ்ந்து பின்னர் இளம் பிறையை ஒத்த வில்லோடும் எழுந்து ஒரு பக்கராகப் போனார்கள். 61

கொற்றவில் உழவன் வீர கோளரி யதனை நோக்கிச்
செற்றமோ டேகிச் செவ்வேள் சேவடி மனத்துட் கொண்டு
பற்றிய தனுவை வாங்கிப் பகழிநூ றுய்த்துத் தீயோன்
பொற்றட மவுலி தள்ளிப் புணரியும் நாண ஆர்த்தான்.

அந்நேரத்து கொற்றமிக்க வில்வீரரான வீரகேசரி என்பவர் அதனை நோக்கி மிகு கோபத்துடன் சென்று முருகப்பிரான் திருவடிகளை மனத்தில் தியானித்து கையில் பிடித்த வில்லை வளைத்து நூறு அம்புகளைப் பூட்டித் தொடுத்துச் செலுத்தி தீயவனை தாரகாசுரனுடைய பொன்னகை விளங்கும் பெரிய மகுடத்தை (முடியை) அறுத்துத் தள்ளி வீழ்த்தி கடலும் நாணும்படி இரைந்து ஆரவாரித்தார். 62

ஆர்த்திடு மோதை கேளா அண்டர்கள் அனையன் மீது
தூர்த்தனர் மலரின் மாரி தோன்முகன் அதனைக்காணா
வேர்த்தனன் மான முற்றான் வீரகே சரிமேல் அங்கைத்
தார்த்தடந் தண்டம் உய்த்துத் தனதுமான் தேரிற் சென்றான்.

இவ்வாறு தாரகாசுரனுடைய பொன்முடியைத் தள்ளி வீழ்த்தி வீரகேசரி ஆர வாரித்திடும் ஓசையைக் கேட்டு தேவர்கள் வீரகேசரிமீது பூக்களை மழை சொரிவது போலச் சொரிந்தார்கள். யானைமுகமுடைய தாரகாசுரன் அதனைக் கண்டு வியர்த் தான்; மானம் உற்றான். வீரகேசரி மேலாகத் தனது அழகிய கையில் பிடித்த தண் டாயுதத்தை வீசி எறிந்துவிட்டு தனது தேரில் சென்று ஏறிக்கொண்டான். 63

சென்றோர் மாமுடி புனைவிழித் தண்டமத் திறலோன்
மன்றல் மார்பகம் படுதலும் வீழ்ந்தனன் மயங்கி
வென்றி மொய்ம்புடை ஆண்டகை யதுகண்டு வெகுண்டு
குன்றம் அன்னதோள் தாரக னெடுபொரக் குறித்தான்.

தேரில் ஏறிய தாரகன் ஓர் பெரிய முடியை எடுத்து தலையில் அணியும் நேரத்தில், அவன் எறிந்த அந்தத் தண்டாயுதமானது சென்று திறமைவாய்ந்த வீரரான வீரகேசரியின் அழகிய நெஞ்சில் படுதலும் அவர் மயங்கிக் கீழே விழுந்தார் அது கண்டு வெற்றிதரும் தோள்கொண்ட ஆண்டகையான வீரவாகு தேவர் வெகுண்டு மலைஒத்த பெரிய தோளினை உடைய தாரகாசுரனோடு போர் செய்ய குறிப்புக் கொண்டார். 64

குறித்தேவிறல் புயன் தாரகக் கொடியோன்எதிர் குறுகி
வெறித்தேன்மலர்த் தொடைதூங்குதன் விறற்கார்முகங் குனியாப்
பொறித்தேயுறு கனல்வாளிகள் பொழிந்தேயவன் புரத்தில்
செறித்தேயுற வளைத்தான் ஒரு சிலைதானவர் தலைவன்.

இவ்வாறு குறிப்பாகி வலிமைகொண்ட தோளினை உடைய தாரகன் என்னும் கொடியவன் முன்பாக வீரவாகு தேவர் சென்று நின்று வெறிக்கும் தன்மையான தேன்சொட்டும் பூமாலை தூங்கும் தனது வலியுடைய வில்லை எடுத்து வளைத்து அக்கினிப் பொறிகளைக் கக்கி நிற்கும் அம்புகளை அவன் நெஞ்சில் சென்று படும்படி செலுத்தி நிற்றலும் அதுகண்ட அசுரர் தலைவனான தாரகனும் ஒரு வில்லை எடுத்து வளைத்தான். 65

பொழிந்தான்சர மழைநம்மவன் புரமேலது பொழுதின்
இழிந்தான்சிலை யுயர்ந்தான் கணை ஈரேழுதொட் டிறுப்ப
அழிந்தாயெனை எதிர்ந்தாய் இதற் கையமிலை யென்னு
மொழிந்தான் ஒரு சூலந்தனை மொய்ம்பிற்செல வுய்த்தான்.

வளைத்த வில்லில் இருந்து அம்புகளை மழை சொரிவது போன்று வீரவாகு தேவர்மேல் தாரகன் பொழிந்தான். பொழிதலும் அதுகண்டு உயர்வான வாழ்க்கை உடைய வீரவாகு தேவர் பதினான்கு அம்புகளைச் செலுத்தி இழிந்த குணமுடைய தாராகாசுரன் கையில் பிடித்த வில்லை முறித்து அழித்துவிட அப்போது தாரகன் ''அட வீரவாகு தேவனே! இதோ எனை எதிர்த்துப் போர்செய்த நீ அழிந்தாய்'' என்று மொழிந்து ஒரு சூலம்தன்னை எடுத்து மிக்க வலியுடன் செலும்படிஅதனை வீரவாகு தேவர்மீது விடுத்தான். 66

பொருமூவிலை வேலங்கவன் பொன்மார்புறப் பொருமிப்
பெருமோகமோ டேநின்றிடப் பின்னங்கது காணு
உருமேறென அதிர்தாரக னுடனேயவன் துணையாய்
வருமூவரும் ஒரு நால்வரும் மாறுற்றமர் இழைத்தார்.

எவரையும் கொல்லும்படியான மூன்று சுடர்கொண்ட சூலம் நேராகவந்து வீரவாகு தேவர் மார்பில் படுதலும் அவர் ஏங்கிப் பொருமி பெரிதும் மயக்கத்துடன் நிற்ப, இச்செயலை அங்கு கண்டு வீரவாகு தேவரின் தம்பியரான ஏழுபேர்களும் இடியேறுபோல அதிர்ந்து சத்தமிடும் தாரகாசுரனோடும் மாறுபட்டுப் போர்செய்யலுற்றார்கள். 67

அமர்செய்திடும் எழுவீரரும் அவுணன்றனக் குடையக்
குமரன்பதந் தலைக்கொண்டிடுங் கோமானது காணு
எமர்மற்றிவர் எல்லோர்களும் இரிந்தார்பொரு தென்னுச்
சமர்முற்றிட வருதாரகத் தகுவன்முனம் அடைந்தான்.

போர்செய்கின்ற ஏழு வீரர்களும் தாரகாசுரனோடு எதிர்நின்று போர்புரியமாட்டாமல் உடைந்து ஓடிப்போக இப்போது குமரப்பெருமானுடைய திருவடிகளைத் தலை மேற்கொள்ளும் வீரவாகுதேவர் அதனைக் கண்ணுற்று ''எம்முடைய தம்பியர் யாவருமல்லவோ இவனோடும் போர்செய்து திரும்பி ஓடிவிட்டார்களே, நன்றாகும்'' என்று சொல்லி போரில் எல்லாரையும் வெற்றிகொண்டு மேலும் போர்செய்ய ஆளில்லாது இருக்கும் தாரகாசுரனோடு போர்செய்யும்படி முன்பாக வந்து சேர்ந்தார். 68

ஒருகார்முகம் இருகால்வளை வுறவேகுனித் துகுதேன்
அருகாதொழு கியதன்மையின் அவிர்நாணொலி யெடுப்பத்
திருகாநெடு வரையானவுந் தெருமந்தன அவுணர்
இருகாதையும் நனிபொத்தினர் ஏங்குற்றனர் இரிவார்.

ஒரு வில்லை வீரவாகுதேவர் கையிலெடுத்து இரண்டு நுனிகளும் ஒன்றிற்றோ எனும்படி வளைவுற வளைத்து தேன் குறையாது சொட்டுவதுபோல அதன் நாணினைச் சுண்டி ஓசைப்படுத்தினார். அந்த நாணோசையால் சலனமில்லாத மலைகள் யாவும் நடுக்கங்கொண்டன. அதுவன்றி அவ்வோசையைப் பொறுக்கமுடியாதபடி அசுரர்கள் யாவரும் இரண்டு காதையும் தங்கள் கைகளாற் பொத்தினார்கள், 69

நாண்கொண்டிடும் ஒலிகேட்டலும் நடுங்காவெரு வுற்றார்
பூண்கொண்டிடு சிலைவாங்கலும் மகிழ்வுற்றிடு புலவோர்
சேண்கொண்டிடும் முகில்வேண்டினர் அதுவந்திடச் சிறந்தே
மாண்கொண்டதன் உருமுச்செல மயங்கித்தளர் வதுபோல்.

வில்லை எடுத்து வீரவாகு தேவர் ஓசைப்படுத்திய நேரத்து அதைக் கேட்டலும் தேவர்கள் நடுங்கிப் பெரிதும் அச்சமுற்றார்கள். ஆனால் பூண்பூட்டிய வில்லை வளைத்த அத்தன்மை கண்டபோது முன்னர் மகிழ்வாக நின்ற தேவர்கள் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற மேகத்தின் வரவை மழையின் பொருட்டு அதை விரும்பியவர்கள் காணுற்ற பொழுது மகிழ்வாகி ஆனால் அது மின்னி இடித்தபோது அவ்விடியோசையால் தளர்ச்சி கொண்டு மயங்குவார்போல வீரவாகுதேவர் வில்லெடுத்து வளைக்க மகிழ்ந்த தேவர் நாணோசைகேட்டு ஏங்கிப் பயந்துநின்றார்கள். 70

மேதா வியர்கள் பரவுந்திறல் வீர வாகு
மாதாரு வன்ன சிலைதன்னை வளைத்து வாகைத்
தாதார் பிணையல் புனைதாரகன் றன்னை நோக்கித்
தீதாம் அழல்போல் வெகுண்டேயிது செப்பு கின்றான்.

மேலாம் நெறிநின்ற பெரியோர்கள் வணங்கும் வீரவாகு தேவர் பெரியதோர் மரம்போலும் வில்லை எடுத்து வளைத்து வெற்றிமாலை சூடியவனாய் விளங்கும் தாரகாசுரனைப் பார்த்து கொடிய நெருப்பைப்போல் கோபத்துடன் இதைச் சொல்வாராயினர். 71

பொன்று வலிகொண் டமராடிய பூதர் தம்மை
வன்றாள் சிலைகொண் டிடுவீரரை வன்மை தன்னால்
வென்று மெனவுன் னினைபோலும் விரைந்து நின்னைக்
கொன்றாவி உண்பன் எனலுங்கொடி யோன்உ ரைப்பான்.

''என்றும் பொன்றாத வலியுடன் போராடிய பூதங்கள் தம்மை வலிமையுடன் ஆளும் வில்லைக் கையில் ஏந்திய வீரர் ஆனவரை என்னுடைய வன்மை தன்னால் வென்றுவிட்டாய் என எண்ணினாய் போலும். இப்போ உன்னை விரைவாகக் கொன்று உன் உயிர் குடிப்பேன்'' எனக் கூறுதலும் கொடியவனான தாரகன் ஈது சொல்வான். 72

மாயன் றனைவென் றவன்நேமியை மாசில் கண்டத்
தேயும் படியே புனைந்தேன்வலி எண்ணு றாதே
நீயிங் கடுவா மெனக்கூறினை நீடு மாற்றஞ்
சீயந் தனையும் நரிவெல்வது திண்ண மாமோ.

''நாராயணரைப் போரில் யான் வென்று அவர் சக்கரப்படையை மாசில்லாத எனது கழுத்தில் மாலையாகப் பொருந்த அணிந்துள்ளேன். அப்படியான எனது வலிமைஎத்தகை யதாக இருக்கும் என நீ எண்ணுறாமல் என்னைக் கொல்வாய் என இந்தவார்த்தையைக் கூறினாய்; நீயே சொல், சிங்கத்தையும் நரி வெல்லும் என்பது திண்ணம் ஆகுமோ?''

சாருங் குறள்வெம் படையாவையுஞ் சாய்ந்த வீரர்
ஆருந் தொலைவுற் றனர்நீயும் அயர்ந்து நின்றாய்
வீரம் புகல்வாய் விளிகின்ற விளக்கம் நேர்வாய்
பாரென் வலியால் உனதாவி படுப்ப னென்றான்.

''உன்னைச் சேர்ந்த குறள் வடிவுடைப் பூதப்படை யாவும் சாய்ந்து இதோ கிடப் பன. வீரர் எல்லோரும் தொலைந்து ஓடினார்கள். நீயும் சற்று முன்பு என் சூலத்தால் மயங்கிச் சோர்ந்து நின்றாய். இப்போது எழுந்து வீரம் பேசுகின்றாய், ஒளி குன்றி அணையப்போகும் விளக்கை ஒத்தாய் பார்! என் வலியால் உன்னைக் கொன்று உனது உயிரை நீக்குவேன்'' என்றான் தாரகன். 74

என்னுந் துணையில் சரமாயிரம் ஏந்தல் உய்ப்பத்
தன்னங் கையிலோர் சிலைவாங்கினன் தாரகப்பேர்
மன்னன் கடிது கணையாயிரம் மாறு தூண்டிச்
சின்னம் புரிந்து கணைநூறு செலுத்தி னானால்.

தாரகன் இவ்வாறு சொன்ன அளவில் வீரவாகு தேவர் ஆயிரம் அம்புகளை அவன்மேற் செலுத்த, தாரகன் என்னும் அரசன் அது கண்டு தனது கையிலும் ஓர் வில்லை வளைத்து விரைவாகத் தானும் ஆயிரம் அம்புகளை வீரவாகு தேவர் விடுத்த ஆயிரம் அம்புகளுக்கு மாறாகத் தூண்டி அழித்துச் சின்னப்படுத்தி பின்னர் நூறு அம்புகளை வீரவாகு தேவர்மேல் விடுத்தான். 75

எவ்வக் கொடியோன் தொடுவாளியை ஏந்தல் காணா
அவ்வக் கணைகள் விடுத்தேயவை முற்று மாற்றக்
கைவிற் கொருவன் இவனாகுமிக் காளை தன்னைத்
தெய்வப் படையால் முடிப்பேனெனச் சிந்தை செய்தான்.

குற்றம் நிறைந்த கொடியவனுன தாரகன் விடுத்த நூறு அம்புகளை வீரவாகு தேவர் கண்டு தானும் நூறு அம்புகளை விடுத்துத் தாரகன் அம்புகளை அழிவு செய்ய அது கண்ட தாரகன் அதிசயமுற்று ''ஓகோ! கையில் பிடித்து விற்போர் செய்யும் செய லிலே இவன் ஒரு சிறந்த வீரனுகும்: இந்த வீரனை இனி நான் தெய்வப்படை செலுத்தி வெல்வேன்'' எனச் சிந்தை செய்தான். 76

வெங்கனற்படை தாரகன்விட வீரவாகு வெகுண்டுபின்
செங்கனற்படை யேவியன்னது சிந்தவேவரு ணப்படை
அங்கணுய்த்திட அவுணர்கோமகன் அடுபுனற்கிறை படையினைத்
துங்கமுற்றிய வீரனுய்த்தது துண்டமாம்வகை கண்டனன்.

தாரகாசுரன் கொடிய அக்கினிப்படையை விட வீரவாகு தேவர் அது கண்டு வெகுண்டு தாமும் கொடிய சிவந்த அக்கினியாஸ்திரத்தை விடுத்து தாரகன் விட்ட படையை அழித்தலும் தாரகாசுரன் உடன் வருணஸ்திரத்தை விடுத்து நிற்றலும் மேன்மையான வீரவாகு தேவனும் அதே வருணப்படையை விடுத்து தாரகன் விட்ட படையினை மாற்றினுன். 77

இரவிதன்படை அவுணன்விட்டனன் இவனுமப்படை யேவியே
விரைவிலன்னது தொலைவுகண்டனன் வீரமேதகு தாரகன்
உரமிகுந்தனி ஊதைவெம்படை யுந்தினுன் அது கந்தவேள்
அருள்மிகுந்தனி யடியன்மாற்றினன் அனையதொல்படை தனைவிடா.

பின்னர் தாரக அசுரன் சூரியாஸ்திரத்தை விடுத்தான். வீரவாகுதேவர் தாமும் சூரியாஸ்திரத்தை விடுத்துத் தாரகன் விடுத்த சூரியாஸ்த்திரத்தை மாய்வு செய்தார். அப்போது வீரம் மேம்பட்ட தாரகாசுரன் வலிமைகொண்ட வாயுப்படையை ஏவி னுன். அதுவேளையில் கந்தசுவாமியாரின் அருண்மிகுந்த தனி அடியவரான வீரவாகு தேவர் தானும் வாயுப்படையை விடுத்து தாரகன் விட்ட படையை அழித்தார். 78

அனிலவெம்படை வீறழிந்திட அவுணர் கோமகன் அம்புயன்
தனதுதொல்படை ஏவினுனது தணிவில்செற்றமோ டேகலும்
வனைகருங்கழல் வீரவாகுவும் மற்றவன்படை தூண்டியே
நினையுமுன்னது தொலைவுசெய்தனன் நிகரில்வானவர் புகழவே.

அசுரர் தலைவனுன தாரகன் வாயுப்படை தனது வீறுகெட்டு அழித்திடப் பின் னர் பிரமன் படையை எடுத்துச் செலுத்தினுன், அம்போது அப்பிரமாஸ்த்திர மானது தணிக்க முடியாத வேகத்துடன் செல்லலும் அதைக் கண்ணுற்ற வீரக்கழல் கள் அணிந்த வீரவாகுதேவர் தானும் பிரமன் படையைத் தூண்டி நினைக்க முன்பே அந்த பிரமாஸ்த்திரத்தைத் தொலைவு செய்தார். 79

ஆயதன்மைகள் கண்டுதாரகன் அற்புதத்தின ணுகியே
மேயவானவர் படைகள் யாவையும் வீரன்மற்றிவன் வென்றனன்
மாயநீர்மையின் இங்கிவன்றிறல் வன்மைகொள்ளுதும் இனியெனுத்
தீயபுந்தியில் இனையவாறு தெரிந்துசிந்தனை செய்துமேல்.

இவ்வாருகத் தான் விடும் படைகள் எதையும் அதற்கேற்ற படையை விடுத்து வீர வாகுதேவர் தொலைவு செய்யும் தன்மையைத் தாரகன் கண்டு அற்புதம் கொண்டவனுய் ''நான் செலுத்திய மேலான தேவர்களின் படையை இந்த வீரன் வென்றுன் ஆகை

யால் எனது மாயத்திறத்தினால் இவனின் வலிமையைக் கெடுத்து வெல்வேன்'' என்று தனது தீமையான மனத்தில் வஞ்சனையான புத்தியைத் தெரிந்து கொண்டு மேலும், 80

தொல்லைமாயையின் விஞ்சைதன்னை நவின்றுளங்கொடு துண்ணெண
மல்லன்மேவரு தாரகாசுரன் வடிவமெண்ணில தாங்கியே
எல்லைதீர்தரு படைவழங்கினன் எங்குமாகி இருட்குழாம்
ஒல்லைவந்து பரந்தபோல்அவன் ஒருவன்நின்றமர் புரியவே.

பழைமைதொட்ட மாயையின் வித்தை ஒன்றிற்கு ஏற்றதான மந்திரத்தைச் சொல்லி உள்ளத்தால் கற்பித்து இருள் போலவே வரும்தாரகாசுரன் வடிவங்கள் எண்ணற்றன கொண்டு பல பக்கமும் தோன்றி அளவு கடந்த படைகள் பல செலுத்தி எங்குமாகி இருட்கூட்டம் பரந்து எழுவதுபோலவே வந்து நின்று தான் ஒருவன் மாயையால் போர் செய்தலும், 81

கண்டுமற்றது வானுளோர்கள் கலங்கியேங்கினர் முன்னரே
விண்டுநீளிடை நின்றபூதர் வெருண்டுபின்னரும் ஓடினார்
மண்டுபேரமர் செய்தயர்ந்திடு மானவீரரும் அச்சமேல்
கொண்டுநின்றனர் முறுவல்செய்தனர் குணலையிட்டனர் அவுணரே.

இந்த இருள் வடிவைக் கொண்டு நின்ற தாரகனின் மாயத்தைக் கண்டு தேவர்கள் கலங்கி ஏங்கினர். தாரகனுக்கு முன்னர்தோற்று தூரத்தே நின்ற பூதங்கள் பின்னரும் பயத்தால் இன்னமும் ஓடினார்கள், பெரும் போரினை முன்னர் செய்து களைத்து அயர்வுடன் நிற்கும் வீரரும் என்ன விளையுமோ என அச்சம்மேற் கொண்டு நின்றனர். இத்தன்மை கண்டு சிரித்து மகிழ்ந்து குணலைக்கூத்தாடினார்கள் அசுரர்கள். 82

தார கப்பெயர் அவுணர்கோன் மாயையின் சமரும்
ஆரும் அச்சுறு கின்றதும் ஆடல் மொய்ம் புடையோன்
பேர ழற்பொறி கதுவுற நோக்கியே பிறங்கும்
வீரபத்திரன் நெடும்படை எடுத்தனன் விடுவான்.

தாரகன் என்னும் அசுரர் தலைவனுடைய மாயையின் போரையும் இதைக்கண்டு எல்லாரும் பயங்கொள்ளும் தன்மையையும் வெற்றித் தோள்கொண்ட வீரவாகு தேவர் கண்களில் நெருப்புப் பொறி பறக்கும்படி பார்த்து மேலாக விளங்கும் வீரபத்திரப் பெருமான் படையை தாரகன் மேல் விடுக்கும்படியாகத் தனது கையில் எடுத்துக்கொண்டார். 83

துங்க வுக்கிரச் சிம்புள்மாப் படையினைத் தூயோன்
செங்கை பற்றலும் அன்னது தாரகன் செயலால்
அங்கண் நின்றிடு மாயைகண் டச்சமுற் றழுங்கிப்
பொங்கு பானுமுன் இருளென முடிந்ததப் பொழுதே.

மேன்மையான உக்கிரம் கொண்ட சரபப் பட்சி வடிவைக் கொண்ட வீரபத்திரப் படையினைத் தூயவரான வீரவாகு தேவர் தமது சிவந்த கைகளிலே பற்றி நிற்றலும் அத் தன்மையினைத் தாரகனின் செய்கையால் அங்குத் தோன்றிய மாயை கண்டு பயந்து ஏங்கித் துயருற்று பொங்கி எழும் கிரணமுடைய சூரிய பகவான் முன்னர் இருள்போல மறைந்தோடி அழிந்து போயது. 84

தன்பு ணர்ப்புறு மாயைதான் உடைதலுந் தமியாய்
முன்பு நின்றதோர் தாரகன் மொய்ம்புளான் றன்னைப்
பின்பு மாயையிற் படுத்தவோர் சூழ்ச்சியைப் பிடித்து
மின்பொலிந்ததன் தேரைவிட் டோடினன் விரைவில்

தான் வஞ்சனையால் உண்டாக்கிய மாயையானது அழிந்து போய் விடுதலும் தனியே வெளிப்பட்டுநின்ற தாரகாசுரனும் வலிமை உடைய வீரவாகு தேவரை மாயையின் வசப்படுத்தப் பின்னரும் ஓர் சூழ்ச்சியினைச் சிந்தித்து அதைக் கடைப் பிடித்து மின்போலும் பொலிகின்ற தனது தேரைவிட்டு கீழிறங்கி ஓடினான். 85

தார கன்றொலைந் தோடலுந் தனக்கிணை யில்லோன்
போர ழிந்துவென் னிட்டவன் றன்மிசைப் புத்தேள்
வீர வெம்படை விடுப்பது வீரமென் றெண்ணாச்
சீரி தாகிய தூணியுள் அன்னதைச் செறித்தான்.

தாரகன் இவ்வாறு போரில் தோற்றான் என எண்ணும்படி வஞ்சனையால் தேரை விடுத்து இறங்கி ஓடலும் அதனைப் பார்த்தருளிய வீரவாகு தேவர் போரில் தோற்று புறமுதுகிட்டு ஓடுவான் மேல் வீரபத்திரப் படைவிடுதல் தகாது, வீரம் அன்று எனச் சிந்தைசெய்து அந்தப் படையினை சிறப்புடன் அமையும் தனது அம்புக் கூட்டினில் வைத்தார், 86

அற்ற போர்வலித் தாரகன் பின்விரைந் தணுகிப்
பற்றி நாண்கொடு புயந்தனைப் பிணித்தெனைப் பணித்த
கொற்ற வேலன்முன் உய்க்குவன் யானெனக் குறித்து
மற்ற வன்றனைத் தொடர்ந்தனன் நெடுந்திறல் வாகு.

"போரில் தோற்று ஓடிய தாரகன் பின்னர் நான் விரைவாக அணுகி பற்றிப் பிடித்துக் கயிற்றால் இவன் தோளைக் கட்டி என்னை இங்கு இப்போரைச் செய்யுமாறு பணித்த கொற்றம்மிக்க வேலேந்திய பெருமான் ஆறுமுகத்து ஐயன் முன்னர் உய்ப்பேன்'' என எண்ணம் கொண்டு ஓடும் தாரகனைப் பின் தொடர்ந்து கலைத்துச் சென்றார் நெடிய வலியுடைய வீரவாகு தேவர். 87

வேழ மாமுகற் கிளவலை உன்னியே வீரன்
ஆழி மால்கட லாமென ஆர்த்துவை தணுகச்
சூழு மாயையின் இருக்கையாந் தொல்கிர வுஞ்சப்
பாழி யொன்றுசென் றொளித்தனன் தாரகப் பதகன்.

ஆனைமுகமுடைய விநாயகப் பெருமானின் இனிய தம்பியான முருகக் கடவுளைத் தியானித்தவாறு வீரவாகுதேவர் ஆழமான கடல் இரைவதுபோல இரைந்து ஆர்த்து வைதுகொண்டு தாரகனைப் பின்னால் வந்து அணுகுதலும் அப்போது எங்கும் சூழ்கின்ற மாயைக்கு இருப்பிடமான பழைய கிரவுஞ்சம் என்னும் மலையில் வந்து அங்குள்ள ஓர் குகையினுள் போனான் தாரகாசுரன் என்னும் பாதகன். 88

முன்ன மாங்கவன் போகிய பூழையுள் முடுகிப்
பொன்னின் வாகையந் தோளுடை யாண்டகை புகலும்
அன்ன தோர்வரை யகமெலாம் ஆயிரங் கதிரின்
மன்ன னேகுறு இருள்நிலம் போன்றுவை கியதே.

முன்னுகத் தாரகாசுரன் ஓடிய குகை வழியாக முடுக்குடன் பொன்னன வெள்ளித் தோள்கொண்ட வீரவாகு தேவர் தாமும் ஓடலும் அந்தக் கிரவுஞ்ச மலையானது அங்கு வீரவாகுதேவருக்கு அதன் இடமெல்லாம் ஆயிரம் கிரணங்களை உடைய சூரியதேவன் செல்லாத கொடிய இருள் நிலம் போன்று இருந்தது. 89

நீளு மாலிருள் படர்தலுஞ் சில்லிடை நெறியால்
தாளி னெற்றியே படர்ந்தனன் தாரகற் காணுன்
ஆளி மொய்ம்புடை மேலையோன் அடுக்கலின் புணர்ப்பான்
மீளு கின்றதோர் நெறியையுங் கண்டிலன் வெகுண்டான்.

நீண்ட பெரிய இருள்படர்தலும் அதைக் கண்ணுற்ற வீரவாகுதேவர் அந்த இருளில் தனது காலால் தடவிச் சில தூரம்வரை அக்குகையில் சென்றுர். சென்றும் தாரகனைக் காணுமற் போனுர். சிங்கம்போலும் பயமறியா வலிகொண்ட வீரவாகு தேவர் அந்த கிரவுஞ்சமலை செய்கின்ற மாயத்தின் கொடுமையால் தாம் போன பாதையைக்கூட அக்குகையில் காணமுடியாதபடியாகி அதனுல் மனத்தில் பெருங் கோபம் கொண்டார். 90

செற்ற மிக்கவன் மாயைஇவ் வரையெனச் சிந்தித்
துற்ற காலையில் அவுணனு கியகிர வுஞ்சப்
பொற்றை அன்னது கண்டுமோ கத்துயில் புரிந்து
மற்ற வன்றன துணர்வினை மையல் செய் ததுவே.

கோபம் மிகுந்த வீரவாகு தேவர் இது மாயையின் மலையாகும் எனத் தெரிந்து கொண்டு அங்கு நின்ற காலையில் அசுரனுகிய கிரவுஞ்சமலை அதைக்கண்டு வீரவாகு தேவருக்கு மயக்கம் தரும் நித்திரையை உண்டாக்கி அங்கு வீரவாகு தேவரின் உணர்ச்சியை யாதொன்றும் தெளிவில்லாதபடி மையல் செய்தது. 91

இயலி சைத்தமிழ் முனிவரன் இசைத்தருள் இசைவால்
வியலு டைத்திறல் வாகுவை அவ்வரை மிகவும்
மயலு டைப்பெரு மாயம தியற்றலும் மயங்கித்
துயில லுற்றனன் தொல்லையின் உணர்வெலாந் துறந்தே.

இயல் இசை பொருந்திய தமிழ்த்தெய்வம் எனப்படும் அகத்தியமுனிவர் இம்மலைக்கு முன்னர் இட்ட சாபத்தால் இம்மலை மிகுந்த வலியுடைய வீரவாகு தேவரை மிகவும் மயக்கந்தரும் மாயைகளைச் செய்து நிற்றலும் வீரவாகுதேவர் அதனுல் மயங்கி நித்திரையாயினுர் விரைவுடன் அவர் பழைய உணர்வெல்லாம் மயங்கிப் போகும்படியாக.

அகத்திய முனிவர் இந்த மலையில் முன்னர் தண்டால் குற்றி ''இந்தக்குகைகள் மாயைக்கு இருப்பிடமாக இருக்கட்டும் ஆனுல் நீ திரிந்து சென்று யாவரையும் மயக்க முடியாது'' என்று சாபமிட்டபடி குகையில் அகப்பட்ட வீரவாகுதேவரை கிரவுஞ்ச மலை மயக்கியது. 92

அம்ம லைக்கணே முன்னவன் உறங்கலும் அனைய
செம்ம லுக்கிளை யோர்இரு நால்வருஞ் சிறந்த
தம்மி னத்தரோர் இலக்கருஞ் சாரதர் பலரும்
விம்ம லுற்றனர் சிறையிலாப் பறவையின் மெலிந்தார்.

அம்மலையின் கண்ணே எல்லார்க்கும் முன்னவரான வீரவாகு தேவர் உறங்கலும் அப்போது அந்த வீரவாகு தேவர்க்கு இளையவர்களான எட்டுப் பேரும் சிறந்த இவர்கள் இனத்தவரான இலக்கம் வீரரும் பூதங்கள் பலரும் வீரவாகு தேவரைக் காணாது மனத்துயரம் கொண்டு தாயில்லாச் சிறு குஞ்சுகள்போல் மெலிவுற்றார்கள். 93

உடைந்து போயின தாரகன் றன்னைநம் முரவோன்
தொடர்ந்து சென்றனன் மீண்டிலன் அவனெடுந் துன்னி
அடைந்து வெற்பினில் போர்புரி வான்கொலோ அங்கட்
படர்ந்து நாடுதும் யாமுமென் றெண்ணினர் பலரும்.

''போரில் தோற்று ஓடிய தாரகனை நமது வீரர் வீரவாகு தேவர் தொடர்ந்து சென்றார். இன்னும் திரும்பக் காணவில்லையே அவரோடு கூடி இவர் தொடர்ந்தும் கிரவுஞ்சமலையில் போர் புரிவாரோ? அங்கே நாங்களும் சென்று நாடிப் பார்ப்போம்'' என எண்ணினார் பலரும். 94

எண்ணி யேயிசைந் திளையரோ ரெண்மரும் இலக்கம்
நண்ணும் வீரரும் பாரிடந் தன்னுள்நா யகரும்
அண்ணல் வான்படை ஏந்தியே யாயிடை யகன்று
விண்ணு லாவுறு கிரவுஞ்சம் எய்தினர் விரைவில்.

இவ்வாறு எண்ணி இசைவுகொண்டு தம்பிமாரான எட்டுப் பேரும் இலக்கம் வீரரும் பூதங்கள் தன்னிலே தலைவருமாய் இருப்பவரும் கைகளில் மேலான படைகளை ஏந்தியவாறு அவ்விடத்தை விட்டு அகன்று சென்று வானத்தை அளாவுகின்ற கிரவுஞ்சம் என்னும் மலையை எய்தினார்கள். 95

ஆய வெற்பினில் வீரவா குப்பெயர் அடலோன்
போய பூழையுள் மற்றவர் யாவரும் புகலுந்
தீய தொல்வரை முன்னவர்க் கிழைத்திடு திறம்போல்
மாயம் எண்ணில புரிதலும் மயங்கியே வதிந்தார்.

அந்த மலையில் வீரவாகு தேவர் என்னும் பெயருடைய வலிமையுடை வீரர் போன குகையில் இவர்கள் யாவரும் சென்று புகுதலும் அதுபோதில் தீயதான மிகப்பழைய கிரவுஞ்சமலை முன்னவரான வீரவாகு தேவர்க்குச் செய்த அதே திறம் போல மாயங்கள் எண்ணில்லாதவற்றை புரிதலும் அங்கு இவர்கள் யாவரும் மிக மயங்கியே கிடந்தார்கள். 96

வெற்றி வீரவா குப்பெயர் அண்ணலும் வீரர்
மற்றி யாவரு மயங்கலுந் தாரகன் வாரா
உற்று நோக்கிநம் மாயையால் இவரெலா மொருங்கே
இற்று ளாரென மகிழ்ந்துமால் வரைமிசை எழுந்தான்.

வெற்றி மிக்க வீரவாகு என்னும் பெயருடைய கடவுளும் அவரின் தம்பியரான வீரர் யாவரும் மயக்கமாகுதலும் தாரகன் வந்து இங்கு மயங்கிக் கிடப்பாரைக் கண்ணுற்று இவர்கள் யாவரும் நமது மாயையால் ஒருங்கே அழிந்து இறந்து போனார்கள் என எண்ணி மகிழ்ந்து பின்னர் தான் கிரவுஞ்சமலை மேலாகத் தோன்றி எழுந்தான். 97

அண்ட மீமிசை நின்றவா னவர்கள்இவ் வனைத்துங்
கண்டு கட்புனல் பனிவர அரற்றியே கலங்கிக்
கொண்ட துன்பொடு பதைபதைத் தோடினர் கூளித்
தண்டம் யாவையும் வெருவின தலைவர்இன் மையினால்.

வானத்தில் வேறு வேறு அண்டங்களில் மேலாகி நின்று இப்போரைக் கண்ணுற்று நின்ற தேவர்கள் இங்கு இப்போது நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகள் யாவற்றையும் கண்டு கண்ணீர் பெருக அழுது குளறி உள்ளம் நடுங்கிக் கலங்கிக் கொண்ட துயரத்தோடும் பதைபதைத்து ஓடினார்கள் தேவர்கள். பூத சேனைகள் யாவும் தங்கள் தலைவர் இன்மையால் பெரிதும் பயந்து கலங்கின. 98

மலையின் மீமிசை யெழுதரு தாரகன் மற்றோர்
தலைமை யாகிய விரதமேல் கொண்டுதா னவர்கள்
பலரும் வந்துவந் தார்த்தனர் சூழ்தரப் பைம்பொற்
சிலைய தொன்றினை வாங்கியே செருநிலஞ் சென்றான்.

மலையின்மேலே தோன்றிய தாரகன் இப்போ வேறு ஒரு தலைமைப்பாட்டுடன் விளங்கும் தேர்மேல் ஏறிக்கொண்டு முன்னர் முறிந்து தோற்று ஓடிப்போன அசுரர் பலரும் திரும்பவந்து ஆரவாரத்துடன் சூழ்ந்துகொள்ள பசிய பொன் மயமான வில் ஒன்றினை எடுத்து வளைத்துக்கொண்டு போர்க்களத்தில் சென்றான். 99

நீடு தன்சிலை நாணொலி கொண்டுநீள் சரங்கள்
கோடி கோடிமற் றொருதொடை யாகவே கொளுவி
ஆடல் சேர்தரு பூதர்மேற் பொழிதலும் அலமந்
தோட லுற்றனர் திசையினும் விண்ணினும் உலைந்தே.

நெடியதாகிய தனது வில்லின் நாணைச் சுண்டி ஓசைப்படுத்திக்கொண்டு நீண்ட அம்புகள் கோடி கோடி ஒரு தொடுப்பிலே தொடுத்துப் பூட்டி ஆவலுடன் போர் புரியும் பூதங்கள்மேற் சொரிய அவ்வேளை பூதங்கள் அம்புபடுதலும் தாங்காது திசை தடுமாறி அலமந்து உலைந்து ஓடலுற்றார் பல திக்கிலும் வானத்திலுமாக. 100

ஆனகாலையின் நாரதன் இனையகண் டழுங்கி
மேனி துண்ணென வியர்ப்புற வழிக்கொடு விரைந்து
போன விண்ணவர் தம்மொடு சென்றுபுத் தேளிர்
சேனை காவலன் நின்றதோர் கடைக்கூழை சேர்ந்தான்.

ஆனகாலையில் நாரத முனிவன் இனையதன்மைகண்டு மனத்துயரம் கொண்டு கவலையாகி தனது மேனி துண்ணென வியர்வை கொள்ள புறப்பட்டு முன்னே விரைவாக வழிக்கொண்டு ஓடிப்போகும் தேவர் தம்மொடு தானும் கூடச்சென்று தேவர்களின் சேனைக்குக் காவலனாகிய தலைவனும் எம்பிரான் நின்றதோர் பின்னணியைச் சேர்ந்தான். 101

அரிது மாதவம் புரிதரு நாரதன் அடலின்
விரவு மாயிரம் பூதவெள் ளத்தொடு மேவுங்
கருணை சேராறு முகத்தனைக் கண்டுகண் களித்துச்
சுரர்க ளோடுபோய் இறைஞ்சியே இனையன சொல்வான்.

மிக அருமைப்பாடுடைய தவத்தைச் செய்யும் நாரதமுனிவன் வலிமையுடன் நெருங்கிச் செறிந்து விளங்கும் ஆயிரம் வெள்ளம் பூதத்துடன் அங்கு மேவி இருந்தருளும் கருணைசேர்ந்த ஆறுமுகமுடைய பெருமானைக் கண்டு கண்கள் களிப்படைந்து தேவர்களோடும் போய் திருமுன்பு நின்று வணங்கியே இந்த வார்த்தைகளை அவருக்குச் சொல்வான் நாரத முனிவன். 102

ஐய நின்படை வீரர்கள் பெருஞ்சம ராடி
வெய்ய தானவர் தானைகள் வரவர வீட்டிச்
செய்ய மந்திரித் தலைவரை அமைச்சரைச் செற்றுப்
பொய்யின் மொய்ம்புடைத் தாரகன் தன்னொடும் பொருதார்.

''ஐயனே! நினது படைவீரர்கள் பெரிய போரைப் புரிந்து கொடிய அசுரர் வரவர அவர்களை அழித்துக்கொன்று செம்மையான அசுர சேனாதிபதியரையும் மந்திரிமாரையும் கொன்று அதன்பின் பொய்யில்லாத வலிமைகொண்ட தாரகாசுரனுடன் போர்செய்தார்கள்.'' 10

தலைக்க ணாகிய வீரனுந் தம்பியர் பிறரும்
இலக்க வீரரும் பாரிடத் தலைவர்கள் யாரும்
புலைக்கொ டுந்தொழில் தாரகன் றன்னொடும் பொரத்தன்
மலைக்கண் உய்த்தனன் அவர்தமைச் சூழ்ச்சியின் வலியால்.

''தலைமை பொருந்திய வீரவாகு தேவரும் அவரின் தம்பியரான மற்றுமுள்ள எட்டுப்பேரும் இலக்கம் வீரரும் பூதங்களின் சேனாதிபதிகள் யாவரும் இழிவான தீய செயலைச் செய்கின்ற தாரகாசுரனுடன் போர்செய்தலும் அவர்கள் யாவரையும் கொடிய தாரகாசுரன் தனது மாயைகளுக்கு இருப்பிடமான கிரவுஞ்ச மலையினிடத்து வஞ்சனையான செயல் ஒன்றைப் புரிந்து அதன் வலியினாலே எல்லாரையும் அதனுள் சேர்த்துவிட்டான்.'' 104

உய்த்த காலையில் அவுணனா கியகிர வுஞ்சம்
மெத்து மாயைகள் அனையவர்க் கிழைத்தலும் வெருவிப்
பித்த ராமென மயங்கினர் போலுமால் பின்னர்
இத்தி றந்தனை உணர்ந்தனன் தாரக னென்போன்.

எல்லாரையும் அங்கு அம்மலையிடத்துச் சேர்த்த காலையில் அசுரன் ஆகிய கிரவுஞ்சம் என்னும் மலையானது மேலான மிகுந்த மாயைத் தன்மைகளை அங்கு சேர்ந்த இவர்களுக்கு இழைத்துவிட்ட அம்மாயங்களைக் கண்ட இவ்வீரர் எல்லாம் பயந்து பைத்தியகாரர் எனும்படியாக மயங்கினார்கள் போலும். ஆகையால் மலையினிடத்துச் சென்றார்கள் திரும்பவேயில்லை. இவ்வாறாக இவர்கள் மயங்கிய இத்திறந்தனை உணர்ந்தான் தாரகாசுரன் என்னும் கொடியவன்.'' 105

தெரிந்து தாரகன் மகிழ்வொடு பறந்தலை சென்று
துரந்து நம்பெருந் தானையைக் கணைமழை சொரிய
முரிந்து பேயின நிகழ்ச்சியி துயிர்த் தொகை முற்றும்
இருந்த நாயக அறிதியே யாவையும் என்றான்.

''தாரகன் இதைத்தெரிந்து பெரும் மகிழ்வொடும் போர்க்களம் திரும்பச்சென்று அங்குள்ள மிச்சமாக இருந்த சேனையான பூதங்கள்மீது கொடிய அம்புகளை மழை

போலச் சொரிய அந்தச் சேனைகள் யாவும் நிற்கமுடியாமல் அணிவிட்டுப் பிரிந்து சிதறி ஓடிவிட்டன; இவையே அங்கு நிகழ்ந்தனவாகும். உயிர்வர்க்கம் முற்றிலும் இருந்தருளுகின்ற எம்முடைய நாயகமே! பிரபுவே! தேவரீரே நான் சொல்லாமல் யாவற்றையும் அறிவீர்! எனப் பணிவுடன் கூறியருளினான் நாரதன்''. 106

என்ற காலையில் நாரதன் உள்ளமும் இமையோர்
நின்று தாமயர் கின்றதும் அமரர்கோன் நெஞ்சில்
துன்று சோகமும் நான்முக னாதியோர் துயரும்
ஒன்ற நோக்கியே அறுமுகப் பண்ணவன் உரைப்பான்,

என்ற காலையில் நாரத முனிவனுடைய உள்ளமும், தேவர்கள் யாவரும் தன்னைச் சூழ்ந்து நின்று அயர்ந்து துன்பமாகுவதையும் தேவர்க்கு அரசனான இந்திரதேவனுடைய நெஞ்சில் பெருகும் சோகத்தையும், நான்முகமுடைய பிரமதேவர், விஷ்ணுமூர்த்தி ஏனைய கடவுளர் துயருமாகிய எல்லாவற்றையும் ஒன்றாகவே நோக்கி ஆறுமுகமுடைய கடவுள் சொல்லியருள்கின்றார். 107

ஆருமிது கேண்மின்அம ராடுகளன் ஏகித்
தாரகனை வேல்கொடு தடிந்தவுணர் வைகும்
ஓரரண மானகிர வுஞ்சகிரி செற்றே
வீரர்தமை யோரிறையின் மீட்டிடுவன் என்றான்.

''நீவிர் அனைவரும் இதைக் கேட்பீராக! எம்முடைய வீரர் போர்செய்த போர்க்களத்தைச் சேர்ந்து தாரகாசுரனை வேலால் நாம் சங்கரித்து அசுரர்க்கெல்லாம் ஓர் ஒப்பற்ற காவற்கோட்டை எனும்படியாகி இருக்கின்ற கிரவுஞ்ச மலையை அழித்து வீரவாகுதேவர் முதலியோரை ஓர் இறைப்பொழுதில் நான் மீட்டிடுகின்றேன்'' என்றார். 108

எந்தையிவை கூறுதலும் யாருமவை தேர்ந்து
சிந்தையுறு கின்றதுயர் செற்றுமுடி வில்லா
அந்தமில் மகிழ்ச்சியுடன் ஆடியிசை பாடிக்
கந்தனடி வந்தனை புரிந்தனர் களிப்பால்.

எந்தைபெருமான் இவற்றைக் கூறுதலும் வீரர்கள் யாவரும் அவற்றைத் தேர்ந்து கொண்டு தங்கள் சிந்தையின்கண் உறுகின்ற துயரம் நீங்கியவராய் முடிவில்லாது பெருகுகின்ற எல்லையற்ற மகிழ்ச்சியுடன் ஆடி, இசைகளைப் பாடித் தோத்திரம் செய்து எங்கள் கந்தசுவாமியின் மலரடிகளை மிகுந்த ஆனந்தத்தால் வந்தனைபுரிந்து மகிழ்வுடன் சிறந்து நின்றார்கள். 109

கந்தமுரு கேசனது காலைமுது பாகாய்
வந்ததொரு வந்தினை மகிழ்ச்சியொடு நோக்கிச்
சிந்தைதனில் முந்தும்வகை தேரதனை வல்லே
உந்துதி விரைந்தென உரைத்தருள லோடும்.

யாவரையும் மேலான வீட்டு நிலையில் உய்க்கும் கருணையாலே ஆறுமுகமும் பன்னிரு கையுமாக அருளும் கருணையும் உடன்கொண்ட வடிவாய் நின்றருளும் முருகப் பெருமான் இவ்வாறாகிய நேரத்து சாரதிகளில் தலைமையுடன் விளங்கும்படி வந்த வாயுபகவானை மகிழ்வுடன் நோக்கியருளி ''வாயுவே! மனோவேகத்திலும் முந்தும்

படியாக நமதுதேரினை விரைவாக வலிமையோடு செலுத்துவாயாக'' என்று உரைத்து அருள்செய்தலோடும். 110

என்னவினி தென்றுதொழு தேழெழுவ கைத்தாந்
தன்னினம தாகியவர் தாங்கள்புடை போதக்
கொன்னுனைய தாமுளவு கோல்கயிறு பற்றித்
துன்னுபரி மான்நிரைகள் தூண்டிமிக ஆர்த்தான்.

அதுகேட்ட வாயுதேவன் ''என் ஐயனே! அதை இனிதே செய்வேன்'' என்று தனது கைகளை வாயுதேவன் கூப்பித்தொழுது நாற்பத்தொன்பது வகையான தன் இனத்தவர்கள் தனது பக்கராக இருந்து உடன் துணையாகத் தேரைச் செலுத்தும் படியாக மேலாகிய கூரிய முனை உடைய சவுக்குக் கோலையும் குதிரைகளின் கடிவாளக் கயிற்றையும் கையில்பிடித்து குதிரைகளைப் புறப்படும்படி தூண்டி மிக ஆர்த்தான் வாயுதேவன். 111

ஆன காலைதனில் அண்டமும் வையந்
தானும் அங்குள தடங்கிரி யாவும்
ஏனை மாகடலும் எண்டிசை யுள்ள
மான வேழமும் நடுங்கின மன்னோ.

அவ்வாறு வாயுதேவன் செலுத்துதலும் எல்லா அண்டங்களும், இப் பூமியும், இங்குள்ள மேலோங்கிய மலைகளும், ஏனைய வேறுவேறான கடல்களும், எட்டுத் திக்கில் நின்று உலகைத்தாங்கும் மானமுள்ள வலிமைகொண்ட யானைகளுமாகிய எல்லாம் எம்பிரான் தேர்புறப்பட கிடுகிடு என நடுங்கின. 112

வாவு கின்றபல மாநிரை தூண்டத்
தேவர் தங்கள்சிறை தீரிய செல்வோன்
மேவு தொல்லிரதம் விண்ணெறி கொண்டே
ஏவ ரும்புகழ ஏகிய தன்றே.

தாவிப்பாய்கின்ற பல குதிரைநிரைகளை வாயுதேவன் தூண்டலும் தேவர் தங்களது துயர் கொண்ட சிறை நீக்கச் செல்வோனாகிய எமதுபெருமான் எழுந்தருளி வருகின்ற தேரானது ஆகாய வழியாக மேலெழுந்து எல்லாரும் ''அரகரா, முருகா'' எனப் போற்றி செய்து இது அற்புதம்; ஆனந்தம் எனப்புகழ வழிக்கொண்டு செல்வதாயிற்று.

ஆதி யங்குமரன் அவ்வழி பொற்றேர்
மீது செல்லுதலும் விண்முகில் பல்வே
றோதும் வண்ணமுடன் உற்றென வானில்
பூத சேனைபுடை போயின அன்றே.

ஆதியாய் முன்னமே தோன்றி மூலத்தவராகிய முருகப் பெருமான் அவ்வழியாகப் பொன்னான தேரிற் செல்லுதலும் விண்ணிலே முகில்கள் பல வகையாக ஓதப்படும் வண்ணங்களுடன் உற்றது என்னும்படி ஆகாயத்து பூதசேனை பக்கராகப் போயது.

போர ழிந்துபுற கிட்டெதிர் பூதர்
ஆரும், நேர்ந்துதொழு தாற்றலொ டெய்த
நார ணன்றனது நன்மரு கானேன்
தார கன்திகழ் சமர்க்களம் உற்றான்.

முன்னர் தாரகன் அம்பால் எய்து துன்புறுத்த அம்பால் அடிபட்டு வேதனையா கிப் போர்க்களத்து நிற்க முடியாமல் சிதறியோடிய பூதங்கள் யாவும் இப்போ பேரொளி பரப்பியவாறு எம்பிரான் தேர் வானத்துத் தோன்றுதலும் "அரகரா, சிவ சிவா, முருகா எனக் கரங் குவித்து கும்பிட்டவாறு எம்பிரானைக் கிட்டிப் பணிந்து இப்போ பயம், கவலை யாவும் நீங்கி வலிமை பெற்றார்களாய் எம்பிரான் பக்கராக வர நாராயணக் கடவுளின் நல்ல மருகரான முருகக் கடவுள் தாரகன் எல்லாரை யும் வென்ற வெற்றிப் பிரதாபத்துடன் திகழ்ந்து விளங்கி நின்ற போர்க்களத் தைச் சேர்ந்தார். 115

கவன மோடுபடர் காலினு முந்திச்
சிவன்ம கன்றனது சேனைய தானோர்
உவரி யாமென உறுந்திறம் நோக்கி
அவுணர் தானையை அணிந்தெதிர் சென்றார்.

வேகத்தோடு செல்கின்ற காற்றிலும் முந்திச் சிவபிரானின் திருக்குமாரரான எமது ஐயர் பெருமானுடைய சேனைகளாய் நின்ற பூதர் யாவரும் சமுத்திரம் இரை வதுபோல இரைந்து கூச்சலிட்டு வேகத்துடன் வரும் திறத்தைப் பார்த்த அசுரர்கள் தங்களது சேனையை அணியாக வகுத்து பூதங்களை எதிரேற்றுப் போர் செய்யச் சென்றார்கள். 116

சகந்து திக்கவரு சாரதர் தாமும்
அகந்தை யுற்றஅவு ணத்தொகை யோரும்
இகந்த வன்மையொ டெதிர்ந்திகல் எய்தி
வெகுண்டு பேரமர் விளைத்திட லுற்றார்.

இப்பூமியில் உள்ளார் யாவரும் வணங்கும்படியாக வருகின்ற பூதங்களும் அகந் தையுடன் இறுமாந்த அசுரரும் மிகுந்த வலிமையுடன் ஒருவரை ஒருவர் கிட்டி வலிமைபேசிச் சண்டைசெய்யத் தொடங்கி மேலோங்கும் கோபத்துடன் பெரிய போரை விளைப்பாராயினர். 117

கரங்கொள் நேமிகள் கணிச்சிகள் தீவாய்ச்
சரங்க ளாதியன தானவர் விட்டார்
உரங்கொள் மால்வரைகள் ஓங்குமெ ழுக்கள்
மரங்கள் விட்டனர் மறங்கெழு பூதர்.

அசுரர்கள் அப்படிப் போர் செய்யுங்கால் தங்களது கைகளிலே உள்ள சக்கரங் களும், மழுவாயுதமும், நெருப்பு உமிழும் வாயினை உடைய அம்புகளும் ஆகியவற்றைப் பூதங்கள் மேலாக விட்டுச் செலுத்தினார்கள். அவ்வேளையில் மறங்கொண்ட பூதங்களோ மாறாக வலிய பெரிய மலைகளையும் மரங்களையும் பெயர்த்தெடுத்து வீசியும் நீண்ட எழுவாயுதத்தால் எறிந்தும் போர் செய்தார்கள். 118

முரிந்த தேர்நிரை முடிந்தன மாக்கள்
நெரிந்த தானவர் நெடுந்தலை, சோரி
சொரிந்த பூதர்மெய் துணிந்தன வானில்
திரிந்த பாறுகள் செறிந்தன வன்றே.

இப்படியான கொடும்போர் நிகழ்தலும் வரிசையாக வந்த அசுரர் தேர்கள் முரிந்தன; குதிரைகள் இறந்தன; அசுரர்களின் பெரிய தலைகளில் இருந்து இரத்தஞ் சொரிந்த வண்ணமாயின, பூதங்களின் உடல்கள் துணிபட்டன. ஆகாயத்தில் பறந்து திரிந்த பருந்துகள் இப்போ இறந்தாரின் உடல்களை உண்ணக் கீழே இறங்கி வந்தன.

நிறங்கொள் செங்குருதி நீத்தம தாகிக்
கறங்கி யோடின கவந்தமொர் கோடி
மறங்கொ டாடுவ வயின்தொறு மாகிப்
பிறங்கு கின்றன பிணங்கெழு குன்றம்.

சிவந்த நிறங்கொண்ட இரத்தமானது கடல்போலப் பெருகி இரைச்சலுடன் வடிந்தோடியது. உடற்குறைகள் கோடிக்கணக்கில் முன்கொண்ட மறத்துடன் ஆடும் தன்மையுடன் அங்கு எங்கு பார்த்தாலும் பிணங்களின் குவியல்கள் மலைகள்போலக் காட்சியளிக்கின்றன. இறந்தாரை எடுத்துக் குவித்துப் போடுவது போர்க்களத்தில் இயல்பு. ஆகவே இறந்தாரின் உடலங்கள் மலைபோலக் குவிந்து காணப்பெறுவதாகிறது.

அனைய வாறிவர் அருஞ்சம ராற்றப்
புனையல் வாகையுள பூதர்கள் தம்மால்
வினையம் வல்லவுணர் வெவ்வலி சிந்தி
இனைத லோடுமிரி குற்றனர் அன்றே.

இவ்வாறாக இதுகாறும் எக்காலத்திலும் நிகழ்ந்திராத ஒரு கொடிய போரைச் செய்ய எம்பிரானது படைகளான தன்மையால் வெற்றி ஈட்டுவதற்கே என மாலை சூடி வந்த பூதங்களால் கொடுந் தொழிலில் வஞ்சனையில் வல்லவரான அசுரர்கள் யாவரும் தமது வலி எல்லாம் இவ்விடத்தே நீக்கப்பட்டு அழிவாதலும் பின்னர் நிற்க முடியாது அவ்விடத்தை விட்டு திரும்பி தோற்று ஓடினர். 121

தன்ப டைத்தொலைவு தாரகன் நோக்கிக்
கொன்ப டைத்தகுனி விற்குனி வித்தே
மின்ப டைத்தபல வெங்கணை தூவி
வன்ப டைக்கணம் வருந்த நடந்தான்.

தனது படைகள் தொலைவாகிப் போகின்ற தன்மையை தாரகாசுரன் பார்த்து உயர்வான மேன்மை பொருந்திய தனது வில்லை வளைத்து மின்னுகின்ற கூரிய அம்புகளைச் செலுத்தி வெறியுடன் போர் செய்த பூதங்கள் அம்பு படுதலால் வருந்தும் படியாக பூதசேனையுள் புகுந்து அம்புகளைச் செலுத்தியவாறு தாரகன் சென்றான். 122

நடந்தெ திர்ந்தகண நாதரை யெல்லாந்
தொடர்ந்து பல்கணை சொரிந்து துரந்தே
இடந்தி கழ்ந்தஇமை யத்திறை நல்கும்
மடந்தை தந்ததிரு மைந்தன்முன் உற்றான்.

தாரகன் இவ்வாறு செல்லுதலும் தன்னை எதிர்த்த பூதசேனாதிபதியரை எல்லாம் தொடர்ந்து பல அம்புகளைச் சொரிந்து வாட்டி அவர்களை முன்னிற்காது ஓடும்படி செய்தவாறு சென்று உலகில் பரந்து விளங்கியிருக்கும் இமயமலையரசன் வளர்த்தெடுத்த தாயாகிய உமையம்மையார் தந்தருளிய திருமைந்தரான எமது முருகக் கடவுள்முன் சென்றான் தாரகன். 123

உற்ற காலேதனில் ஒற்றரை நோக்கிச்
சற்று நீதியறு தாரக வெய்யோன்
செற்றம் என்னுமழல் சிந்தையின் மூள
மற்றி வன்கொல் அரன் மாமகன் என்ருன்.

அவ்வாருக எம்பெருமான் திருமுன்னர் உற்ற காலேயில் சற்றேனும் நீதி இல்லாத தாரகாசுரன் என்னும் கொடியவன் எம்பிரானைக் கண்டபோதே அவனுடைய உள்ளத்துக் கோபம் என்னும் நெருப்பு மூண்டு எழ பக்கராக நின்ற தூதரைப் பார்த்து ''ஓகோ இங்கு இவர்தானு சிவபிரான் திருக்குமாரன்?''என்று கேட்டான். 124

என்ன லுங்குமரன் இங்கிவ னேயாம்
மன்ன என்றிடலும், மற்றவன் ஏறுந்
துன்னு தேர்கடிது தூண்டி எவர்க்கும்
முன்ன வன்மதலே முன்னுற வந்தான்.

அப்போது அந்தத் தூதுவர்களும் தாரகனை நோக்கி ''அரசே இவர்தான் எஞ்ஞான்றும் இளமையுடன் பொலியும் குமரன்'' எனலும் அப்போது தாரகன் தான் ஏறிவந்த தேரை மிகு அவசரமாகச் செலுத்தியவாறு எவர்க்கும் முற்பட்ட முதற் பொருளான சிவபிரான் மைந்தர் திருமுன்பு வந்தான். 125

முழுமதி யன்னஆறு முகங்களும் முந்நான் காகும்
விழிகளின் அருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகிய கரமீ ராறும் அணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டான் அவன்தவஞ் செப்பற் பாற்றே.

அவ்வாறு வேகமாக வந்த தாரகன் அங்கு ஒரு காட்சியைக் காணுகிருன் எவ்வாறு எனில்,

முழுதும் ஒளியுடன் விளங்கும் சந்திரனை ஒத்த ஆறு முகங்களும், பன்னிரண்டாகிய கண்களிற் பிரகாசிக்கின்ற அருட்பொலிவும், வேற் படைக்கலமும், வேறு வேருன படைகளின் சிறப்பும், இவற்றை ஏந்தியபடி விளங்கும் சீரும் சிறப்பும் கொண்ட பன்னிரண்டு அழகிய கைகளும், அழகிய இரத்தினங்களினுல் ஆக்கப்பெற்ற தண்டை ஒலிக்கின்ற செந்தாமரை மலர்போலும் திருப்பாதமும் ஆன ஒரு காட்சி கண்டான். அம்மவோ, எத்தேவர்க்கும் தென்படாத பெருமானின் அந்தக் கோலத்தை அவன் காணப் பெற்றமையால் அவன் தவம் செப்ப முடியுமோ, முடியாது. 126

தற்பம துடைய சிந்தைத் தாரகன் இனைய வாற்ருல்
சிற்பர மூர்த்தி கொண்ட திருவுரு வனைத்தும் நோக்கி
அற்புத மெய்தி நம்மேல் அமர்செய வந்தா னென்ருல்
கற்பனை கடந்த ஆதிக் கடவுளே இவன்கொ லென்ருன்.

செல்வம், சிறப்பு, வலி இவற்றின் மிகுதியால் சிறப்புற்று தானென்ற செருக்கினையும் உடைய தாரகாசுரன் இத்தன்மையாக ஞான முதல்வராகிய மூர்த்தி கொண்ட திருவுருவம் அனைத்தையும் பார்த்து அற்புதம் அடைந்து ''ஐயையோ, நம்மேலாக இந்தக் கருணை நிறையும் வடிவுடைய இவர் போர் செய்ய வந்தார் என்ருல் இவர் தான் கற்பனை முதலிய எவற்றிற்கும் எட்டொணுது நின்ற ஆதியான சிவபிரானே போலும்'' என்ருன். 127

இந்தவா றுன்னிப் பின்னர் யார்க்குமே லாகும் ஈசன்
தந்ததோர் வரமும் வீரத் தன்மையும் வன்மைப் பாடும்
முந்துதாம் பெற்ற சீரும் முழுவதும் நினைந்து சீறிக்
கந்தவேள் தன்னை நோக்கி இனையன கழற லுற்றான்.

இந்தவாறு அவரை நோக்கிய அற்புதநிலையால் பேசினாலும் தாரகனுடைய உள்ளத்து இப்போது, பின்னர் யாவர்க்கும் மேலான சிவபிரான் தந்ததோர் அழியாத வரமும், வீரத்தன்மையும், அழிவுறா வலிமைப்பாடும், முன்னேயே தாங்கள் பெற்றுக் கொண்ட சீருமாகிய முழுவதையும் இப்போ நினைந்தான். நினைத்தவுடனே முன் கொண்ட அற்புத நிலைமாறி இப்போ கோபத்துடன் சீறி எமது கந்தக்கடவுளைப் பார்த்து இந்த வார்த்தைகளைச் சொல்கின்றான். 128

நாரணன் றனக்கு மற்றை நான்முகன் றனக்கும் வெள்ளை
வாரணன் றனக்கு மல்லால் மதிமுடி அமலனுக்குந்
தாரணி தனில்எ மக்குஞ் சமரினை இழைப்ப இங்கோர்
காரண மில்லை மைந்தா வந்ததென் கழறு கென்றான்.

"நாராயணக் கடவுளுக்கும், மற்று நான்கு முகமுடைய பிரமதேவனுக்கும், வெள்ளை யானை வாகனமுடைய இந்திரனுக்கும் எங்களுக்குமிடையேதான் இவ்வுலகில் பகை உண்டு. அப்படி இருப்ப இளம்பிறையணிந்த சடைமுடி உடைய சிவபிரானுக்கும் எமக்கும் இங்கு போர் செய்யவேண்டிய காரணம் இப்பூவுலகில் எக்காலமும் இருக்கவில்லையே. ஆகவே மைந்தனே! நீர் எம்முடன் போர் செய்யும்படியாக வந்த காரணம் யாது? அதைச் சொல்லுக முன்னராக" என்றான். 129

அறவினை புரிந்தே யார்க்கும் அருளோடு தண்டஞ் செய்யும்
இறையவ னாகும் ஈசன் இமையவர் தம்மை நீங்கள்
சிறையிடை வைத்த தன்மை திருவுளங் கொண்டு நுந்தம்
விறலொடு வன்மை சிந்த விடுத்தனன் எம்மை யென்றான்.

அப்போது கருணைவடிவுடன் நிறைந்து நின்றருளும் பெருமான் தாரகனைப் பார்த்துச் சொல்வார், "உலகம் உயிர்கள் யாவும் தருமமுறையால் படைத்து யார்க்கும் நன்னெறி நின்றார்க்கு அருளையும் தீயநெறி நின்றார்க்கு தண்டத்தையும் செய்யும் யாவர்க்கும் இறைவனான ஈசன் நீங்கள் தேவர்கள் தம்மை எல்லாம் சிறையிடை வைத்த தன்மையைத் திருவுள்ளத்து உணர்ந்து அவ்வண்ணம் உங்கள் வலியையும் வீரத்தையும் நீக்கும்படி எம்மை இங்கு விடுத்தார்." 130

கூரிய வேற்படைக் குமர நாயகன்
பேரருள் நிலைமையால் இனைய பேசலும்
போரினை இழைத்திடும் பூட்கை மாமுகத்
தாரக னென்பவன் சாற்றல் மேயினான்.

கூரிய வேற்படையைத் திருக்கரத்து ஏந்தியருளியவரான எமது குமர நாயகன் பேரருள் நிலைமையால் இந்த வார்த்தையைப் பேசுதலும் அவ்வேளை போரினைப் புரியும் யானைமுகமுடைய தாரகாசுரன் என்பவன் சொல்லத் தொடங்குவான் ஆயினான்.

செந்திருத் திகழுமார் புடைய செங்கணன்
சுந்தரக் கலுழன்மேல் தோன்றிப் போர்செய்தே
அந்தரக் கதிர்புரை ஆழி உய்த்ததென்
கந்தரத் தணிந்தது காண்கி லாய்கொலோ.

''மகாலட்சுமி தேவி திகழ்ந்து விளங்கும் மார்பினை உடையவராய் சிவந்து விளங்கும் கண்ணினை உடைய நாராயணக் கடவுள் அழகிய கருட வாகனத்தின் மீது வந்து தோற்றி என்னோடு போர் செய்து அப்போது வானத்தில் தோன்றும் சூரியன்போல் ஒளிகொண்ட சக்கரப் படையை என்மீது விட அதை என் கழுத்தில் மாலையாக அணிந்து கொண்டதை நீ காணவில்லையோ.'' 132

இன்றுகா றெம்முடன் இகலிப் போர்செயச்
சென்றுளார் யாவருஞ் சிறிது போழ்தினுட்
பொன்றுவார் இரிந்தனர் போவ ரல்லது
வென்றுளார் இலையது வினவ லாய்கொலோ.

''இன்று வரையும் எம்முடன் வலிகொண்டு பகைத்துப்போர் செய்யும்படி வந்துளார் யாவரும் சிறிதுநேரத்திலே இறந்துபோவார் அல்லது போர்செய்ய முடியாது பயந்தோடிப் போவார்களேயல்லாது வேறு எம்மை வென்றுளார் யாவரேனும் இல்லை; ஆகவே நீ அதைப்பற்றி யாரிடமும் கேட்டாய் இல்லைப் போலும்.'' 133

முட்டிவெஞ் சமரினை முயல முன்னம்நீ
விட்டிடு தலைவரை வென்று வெற்பினில்
பட்டிட இயற்றினன் பலக ணங்களை
அட்டனன் அவற்றினை அறிந்தி லாய்கொலோ.

''எம்மொடு முரணாக வந்து முட்டிப் போர் செய்யும்படியாக முயன்றுபார்க்கும்படி பாலனே! நீ முன்னம் விட்டிட்ட தலைவர்கள் யாவரையும் நான் வென்று மலையின் குகையில் இறந்து கிடக்கும்படி செய்தேன். பல பூதங்களை யான் கொன்றேன். நீ இன்னும் அதை அறியவில்லைப் போலும்.'' 134

ஆகையால் எம்முடன் அமரி யற்றியே
சோகம தடையலை சூல பாணிபால்
ஏகுதி பாலநீ என்று கூறலும்
வாகையங் குமரவேள் மரபிற் கூறுவான்.

''ஆகையால் பாலகனே! எம்மோடு போர்செய்து நீ பின்னர் சோகம் அடைந்து துன்பப்படாதே. சூலப்படையை ஏந்திய உன்தந்தையிடத்து இப்போதே திரும்பிச் சென்றுவிடுவாயாக'' என்று தாரகாசுரன் கூறியருளலும் அப்போது வெற்றியுடன் விளங்கும் எமது குமரப்பெருமான் தாரகனை நோக்கி மரபினால் அவனைப்போல் வீணான இடம்ப வார்த்தை பேசாமல் முறையாக சில வார்த்தைகளை இவ்வாறு கூறியருளினார்:

தாரணி மறையவன் ததீசி தன்மிசை
நாரணன் விடுத்ததோர் நலங்கொள் ஆழிதன்
கூரினை இழந்துபோய்க் குலாலன் சக்கர
நீர்மைய தானதுவினவ லாய்கொல்நீ.

''இப் பூமியில் வாழ்ந்த பிராமணரான ததீசி முனிவர்பால் கோபத்துடன் நாராயணக் கடவுள் விடுத்த நலங்கொண்ட சக்கரப்படையானது பிராமணரானவரும் உத்தமரானவருமான அம்முனிவர்பால் விடுக்கப்பெற்றமையால் பழி சூழப்பட்டு அந்த விஷ்ணுவுடைய சக்கரப்படையானது தனது கூரினை இழந்து குயவனுடைய மட்பாத்திரம் செய்யும் சக்கரம்போல ஆகியது. அதை நீ கேட்டு அறியவில்லை போலும்.',

சூற்புயல் மேனியான் துங்கச் செங்கையின்
பாற்படு திகிரிபோற் பழியில் துஞ்சுமோ
வேற்புறு படைக்கெலாம் இறைவ னுகுநம்
வேற்படை நின்னுயிர் விரைவின் உண்ணுமால்.

''பயந்தரும்படியான கருமேகம் போன்ற நீலநிற மேனிகொண்ட நாராயணக் கடவுளின் சிவந்த கையில் ஏந்திய அந்தச் சக்கரம் இப்படி உத்தமப் பிராமணர் தபோதனர் பால் விடப்பட்டு பழியை ஏற்றதுபோல எனது எல்லாவிதமான பெருமைகளுடனும் சகலபடைகளுக்கும் நாயகமானதுமான வேற்படை விரைவில் உனது உயிரைக் குடிக்கும் என்பதைத் தாரகனே நீ அறிவாயாக.'' 137

உங்கள்பே ராற்றல்இவ் வுலகை வென்றன
இங்குநாம் வருதலும் இமைப்பின் மாய்ந்தன
அங்கண்மா ஞாலமுண் டமரும் ஆரிருள்
பொங்குபே ரொளிவர விளிந்து போனபோல்.

''உங்களுடைய பெரியவலிமை இந்த உலகைவென்று அடிமைப்படுத்தியது இங்கு நாம் வருதலும் ஓர் இமைப்பொழுதிலே மாய்ந்து போயின, அது எதுபோலுமெனில் பெரிய இந்த உலகில் தோன்றி உலகை மறைத்த கொடிய இருளானது இங்கு பேரொளி வர மாய்ந்துபோகும் தன்மைபோல என அறிவாய்.'' 138

ஈட்டிய மாயைகள் எவையுந் தன்வழிக்
காட்டிய கிரியையுங் கள்வ நின்னையுந்
தீட்டிய வேல்கொடு செற்றுச் சேனையை
மீட்டிடு கின்றனன் விரைவி னுலென்றான்.

''உலகில் பெருகுகின்ற மாயைகள் யாவற்றையும் தன்னிடத்தில் தோற்றுவித்துக் காட்டுகின்ற கிரவுஞ்சம் என்னும் மலையையும், கள்வனே! உன்னையும் தீட்டிய கூரான வேல்கொண்டு அழித்துச் சேனையை மீட்டிடுகின்றேன் மிகு விரைவாக'' என்றார் ஆறுமுகமும் பன்னிரு கையுடனும் பேரருள் வடிவுடன் நின்ற எமது பகவான். 139

என்றலுஞ் சீறியே இகலித் தாரகன்
குன்றுறழ் தன்சிலை குனியக் கோட்டியே
மின்றிகழ் நாணொலி எடுப்ப விண்மிசைச்
சென்றிடும் அமரருந் தியக்க மெய்தினர்.

என்று எம்பிரான் கூறியருளலும் தாரகன் அதுகேட்டுச் சீறிக் கோபித்து ''அப்படியா! உன்னால் முடியுமா?'' என இகலுடன் ஓர் மலைஒத்த தனது வில்லை எடுத்து நன்றாக வளையும்படி வளைத்து மின்னல்போல் திகழும் நாணினைச் சுண்டி ஓசைப்படுத்தலும் அவ்வோசைகேட்டு வானவழியாகச் சென்ற தேவர்களுந் தியக்கம் கொண்டார்கள்.

எய்திய காலையில் எந்தை கந்தவேள்
கைதனில் இருந்ததோர் கார்மு கந்தனை
மொய்தனில் வாங்கிநாண் முழக்கங் கோடலும்
ஐதென உலகெலாம் அழுங்கிற் றென்பவே.

தியக்கம் எய்தி ஏங்கியகாலையில் எங்கள் அப்பனான கந்தக்கடவுள் தமது திருக் கரத்திலே இருந்த பெரியதோர் வில்லை வலிமையோடு தன் கையிலெடுத்து வளைத்து நாணோசை செய்தலும் அவ்வோசைகேட்டு அனைத்துலகும் மிகுவிரைவாக அச்சத்துடன் ஏங்கிச் சஞ்சலமுற்றது. 141

நாரியின் பேரொலி நாதன் கோடலும்
ஆரணன் முதலினோர் தாமும் அஞ்சினர்
பேருல கெங்கணும் பேதுற் றேங்கின
தாரக முதல்வனுந் தலைது ளக்கினன்.

வில்லினின்றும் பேரோசையை நாதனான பகவான் எழுப்புதலும் அப்போது நாராய ணக் கடவுள் முதலினோர் தாமும் அதுகேட்டு பெரிதும் அச்சமுற்றார்கள்; பெரிய உல கம் எல்லாம் எங்கணும் பேதுற்று ஏங்கின. இதைக் கேட்ட எதற்கும் அஞ்சாத தாரகன் என்னும் அசுரர் தலைவனும் ''நல்லது!'' எனத் தலையை ஆட்டினன். 142

துளக்கிய தாரக சூரன் கைத்தலங்
கொளற்குரி வில்லுமிழ் கொள்கைத் தாலென
வளக்கதிர் நுனைகெழு வயிர வான்கணை
அளக்கரும் எண்ணில ஆர்த்துத் தூண்டினன்.

தலையை ஆட்டிக்கொண்ட தாரகாசுரன் தனது கையிலே கொள்ளும்படியாகப் பிடித்துக்கொண்ட வில் இப்போது அம்புகளை ஓயாது உமிழ்ந்து கொள்கிறது என்னும் கொள்கைப்படியாக வளமான கதிர் ஒளியுடைய வைரத்தாலான பெரிய அம்புகள் பலவற்றை சமுத்திரங்கள் பல இரைவது போல உரக்கக் கூவியவாறு விடுத்தான்.

ஆயதோர் காலையில் ஆறு மாமுகன்
மீயுயர் சிலைதனில் விரைவில் ஆயிரஞ்
சாயகந் தூண்டியே தார காசுரன்
ஏயின பகழிக ளியாவுஞ் சிந்தினன்.

ஆயதோர் காலையில் ஆறு பெரிய முகங்களை உடைய எமது பெருமான் மிக உயர்ந்து விளங்கும் தனது வில்லில் அதிவிரைவுடன் ஆயிரம் அம்புகளைப் பூட்டி விடுத்து தாரகாசுரன் செலுத்திய அம்புகள் யாவற்றையும் அழித்தார். 144

சிந்திய காலையில் செயிர்த்துத் தாரகன்
உந்தினன் பின்னரும் ஓராயி ரங்கணை
கந்தனும் அனையது கண்டு வல்லையின்
ஐந்திரு பகழிதொட் டவற்றை நீக்கினன்.

இவ்வாறு சிந்திய நேரத்துத் தாரகாசுரன் மிகு கோபங்கொண்டு பின்னும் ஓர் ஆயிரம் அம்புகளைச் செலுத்தினன் எமது கந்தக் கடவுளும் அதுகண்டு விரைவாகத் தாம் பத்து அம்புகளைச் செலுத்தி தாரகன் விடுத்துள்ள அம்புகளை அழிவு செய்தார்.

மீட்டுமத் தாரகன் விசிகம் வெஞ்சிலை
பூட்டிய வாங்கலும் புராரி காதலன்
ஈட்டமொ டொருகணை யேவி ஆங்கவன்
தோட்டுணை வில்லினைத் துண்ட மாக்கினான்.

மீண்டும் தாரகாசுரன் அம்புவிடும்படியாகத் தனது வில்லில் அம்புகளைப் பூட்டி விடும்படி வளைத்தலும் அப்போது திரிபுர சங்காரியான சிவபிரான் காதல் மைந்தரான எமதுபெருமான் வலிமையுடன் ஓர் அம்பினைச் செலுத்தி தாரகாசுரன் பிடித்த வில்லினைத் துண்டமாகப் போகும்படி துணித்து வீழ்த்தினார். 146

அங்கோர் சிலையைக் குனித்தானது காலை தன்னில்
எங்கோ முதல்வன் ஒருபாணியின் ஏந்து வில்லில்
செங்கோல் வகையா யிரம்பூட்டினன் செல்ல உய்த்தான்
வெங்கோல் நடாத்தி வருதாரக வெய்யன் மீதில்.

தனது வில் முரிவாதலும் தாரகாசுரன் பின்னரும் அங்கு ஓர்வில்லை எடுத்து வளைத்தான். அப்போது எமது தலைமைப்பாடுடைய கடவுள் ஒரு திருக்கரத்திலே ஏந்திய வில்லில் கூரிய சிவந்த அம்புகள் ஆயிரத்தைப் பூட்டி கொடுங்கோன்மையாக அரசு நடத்தும் தாரகாசுரனுடைய மேனியில் சென்று படும்படி விடுத்தருளினார். 147

சேரார் பரவுந் திறல்வேலவன் செய்கை நோக்கித்
தாரார் முடித்தா ரகவீரன் தனது வில்லில்
ஓரா யிரம்வா ளிகள்பூட்டினன் ஒல்லை உய்த்து
நேராய் விரவுங் கணையாவையும் நீறு செய்தான்,

மாலையணிந்த முடியினைக்கொண்ட வீரனான தாரகாசுரன் பகைவர்களானவரும் வணங்கிப் புகழுகின்ற திறமை வாய்ந்த வேலவனின் செய்கையைப் பார்த்து தன்னுடைய வில்லிலே ஓராயிரம் அம்புகளைப் பூட்டினனாய் விரைவாக அவற்றைச் செலுத்தித் தனக்கு நேராக வரும் அம்புகள் எல்லாவற்றையும் நீறாகிப் போகும்படி பொடியாக்கினான். 148

வெய்யான் அநந்தங் கணைதூண்ட விமலன் நல்குந்
துய்யான் அவைகள் அறுத்துக் கணைகோடி தூண்டி
மையார் அவுணர் புகழ்தாரக மான வேழம்
எய்யாகும் வண்ணஞ் செறித்தானவன் யாக்கை யெங்கும்.

பின்னர் கொடியவனான தாரகன் அநந்தகோடி அம்புகளைச் செலுத்தலும் அவ்வேளை நின்மலப்பொருளான சிவபிரான் தந்தருளிய ஞானப்பொருளான முருகப்பிரான் தாரகன் விட்ட அம்புகளை தமது அம்புகள் மூலம் அறுத்தெறிந்து அம்புகளை மேலும் கோடிக்கணக்கிற் செலுத்தி தாரகன் மேனியில் அவை தைக்கும்படி விடுத்து இருண்ட வடிவினை உடைய அசுரர் புகழும் யானை முகமுடைய தாரகன் இப்போ முள்ளம் பன்றி உடல் கொண்டானோ என்னும்படி தாரகன் உடலம் எங்கும் அம்பு தைத்து செறிய வைத்தார் எங்கடவுள். 149

ஒருகோடி வாளி உறலோடும் உருத்து நீசன்
இருகோடி வாளி விடஅன்னதை ஏவின் நீக்கி
முருகோ டியதார் அசுரேசன் முகங்கொள் கையும்
பொருகோடும் வீழ விடுத்தான்இரு புங்க வாளி.

குமாரக் கடவுள் விடுத்த ஒருகோடி அம்புகள் மேனியில் படலும் தாரகன் கோபித்து அதன் பதிலாக இரண்டு கோடி அம்பைவிட அதனை எம்பிரான் தானும் இரண்டுகோடி அம்புவிடுத்து நீக்கி வாசனை பொருந்திய மாலையணிந்த மார்பையுடைய தாரகாசுரனின் முகத்தில் பொருந்திய துதிக்கையும் நாலு தந்தங்களும் அறுந்து கீழ் விழும்படி இரண்டு மேன்மையான அம்புகளை விடுத்தார் எமது கடவுள். 150

வந்தங் கிரண்டு சரமும்பட மாயை மைந்தன்
தந்தங்கள் கையோ டிறலோடுந் தளர்ச்சி யெய்தி
முந்துங் கணைஆ யிரந்தன்னை முனிந்து தூண்டிக்
கந்தன் தடந்தேர்த் துவசந்துகள் கண்டு நின்றான்.

எம்பிரான் விடுத்த மேலான இரண்டு அம்பும் வந்துபடுதலும் மாயவனின் புத்திரனை தாரகாசுரனின் நான்கு தந்தங்களும் துதிக்கையும் அறுந்து வீழ்தலும் தாரகன் தளர்ச்சி எய்தி வேகமுடன் செல்லும் ஆயிரம் அம்புகளை மிகு கோபத்துடன் செலுத்தி முருகப்பிரானின் விசாலித்த பெரிய தேர்மேல் கட்டிய கொடியை துகளாகும்படி செய்து நின்றான் 151

மல்லற் கொடியிற் றதுகண்டு மறங்கொள் வெய்யோன்
வில்லைக் கணைநான் கிரண்டால் நிலமீது வீட்டித்
தொல்லைக் கனலின் கணையாயிரந் தூண்டி யன்னோன்
செல்லுற்ற திண்டேர் பரிபாகொடு சிந்தி நின்றான்.

வலிமைகொண்ட பெருமானின் தேர்க்கொடியானது துகளாக்கப்பட்டதை முருகக் கடவுள் கண்ணுற்று மறம்கொண்ட கொடிய தாரகாசுரனின் கையில் இருந்த வில்லை நான்கு அம்புகளை விடுத்துத் துண்டாக்கி நிலத்தில் வீழ்த்தி தாரகன் ஏறிவந்த தேரை, குதிரையை, தேர்சாரதியை எல்லாவற்றையும் அழித்து நின்றார். 152

வேறங் கொருதேர் மிசையேறியொர் வில்லை வாங்கி
நூறைந் திருநீ விசிகந்தனை நொய்தின் ஏவி
மாறின்றி வைகும் பரமன்வடி வான செவ்வேள்
ஏறுந் தடந்தேர் வலவன் புயத் தெய்த உய்த்தான்.

தனது தேர் அழிவாகத் தாரகன் வேறு ஒரு தேர்மீது ஏறி ஓர் வேறு வில்லை வளைத்து ஆயிரம் அம்புகளை விரைவாகச் செலுத்தி எவ்வித மாறுபாடும் இல்லாது சிவபிரான் வடிவாக இருந்தருளும் செம்மையான கோலமுடைய முருகக் கடவுளின் தேர்ச்சாரதியான வாயுபகவான் தோளிற்படும்படி எய்தான். 153

வென்றோர் புகழுங் குமரன்வியன் தேர்க டாவிச்
சென்றோன் வருத்தந் தெரிந்தாயிரந் தீய வாளி
வன்றோன் முகத்தா ரகன்நெற்றியுள் மன்ன வுய்ப்பப்
பொன்றாய் தனது தடந்தேரில் புலம்பி வீழ்ந்தான்.

வெற்றியுற்றோர் எவராலும் புகழப்படுகின்ற குமரப்பெருமானின் அற்புதவடிவுடைய தேரின் சாரதியாகித் தேரைச் செலுத்திச் சென்ற வாயுபகவான் தனது தோள்மேல் அம்புபடுதலும் பதைத்து வருந்த அவ்வருத்தத்தினைத் தெரிந்துகொண்ட குமரக் கடவுள் உடன் தாரகன் நெற்றியில் படும்படி ஆயிரம் அம்புகளை விடுப்ப அந்த அம் புகள் நெற்றியில் படுதலும் தாரகன் உடல் பதைபதைத்து பொன் தோய்ந்த தமது தேரில் அலறிப் புலம்பிய வண்ணம் வீழ்ந்தான். 154

வீழுற் றிடலும் விழுசெம்புனல் வெள்ள மிக்கே
தாழுற்ற பாரிற் புகுந்தேபுடை சார்த லுற்ற
பாழிக் கடலிற் பரிமாமுகம் பட்ட செந்தீச்
சூழிக் களிற்றின் வதனத்தினுந் தோன்று மென்ன.

தேரில் தாரகன் வீழ்தலும் அம்புபட்ட காயமுடாக வருகின்ற இரத்த வெள் ளம் பெருகி மிகுந்து கீழே உள்ள பூமியில் புகுந்து அதன் பக்கராகத் திரண்டு நின் றது. இது எதுபோலும் எனில். கடலினிடத்தே குதிரை முகத்தில் தோன்றிய சிவந்த வடவாமுகாக்கினியானது யானை முகத்திலும் வந்து தோன்றுமோ என்று ஐயுறும்படி பெருகியது அந்த இரத்தம். இரத்தம் இங்கே வடவாமுகாக்கினிக்கு ஒப்பிடப்பட்டது. 155

மன்னு கியதா ரகன்அங்கண் மயங்கி வீழ
அன்னான் றனது படைவீரர் அதனை நோக்கிக்
கொன்னார் சினங்கொண் டடுபோரைக் குறித்து நம்பன்
தொன்னாள் உதவுந் திறல்மைந்தனைச் சூழ்ந்து கொண்டார்.

தங்கள் அரசனாகிய தாரகன் அங்கண் மயங்கி வீழ அவனுடைய படைவீரர் ஆனவர்கள் அதனைப் பார்த்து மிகவும் மேலான கோபங்கொண்டு கொலைப் போர் செய்யக் குறிப்பாகி சிவபிரான் முன்னே தந்தருளிய வலிமைமிக்க மைந்தனைச் சூழ்ந்து வளைந்துகொண்டார்கள். 156

சூலந் திகிரிப் படைதோமரந் துய்ய பிண்டி
பாலஞ் சுடர்வேல் எழுநாஞ்சில் பகழி தண்டம்
ஆலங் கணையங் குலிசாயுத மாதியாக
ஏலும் படைகள் பொழிந்தார்த்தனர் எங்கும் ஈண்டி.

வளைந்துகொண்ட இவர்கள் சூலாயுதம், சக்கரம், தோமரம், கொடிய பிண்டி பாலமும், சுடர்கொண்ட வேலும், எழுவாயுதமும், கலப்பை என்னும் ஒருவகைப் படையும் அம்புகளும், தண்டாயுதங்களும், சூலங்களும், வளைதடியும், வச்சிராயுதமும் ஆதியாகத் தம்மால் எறியக்கூடிய படைகள் யாவற்றையும் பொழிந்து இரைந்து பெரும் கூக்குரலுடன் எப்பக்கரும் நின்று போர் செய்தார்கள். 157

கறுத்தான் அவர்தஞ் செயல்கண்டுதன் கார்மு கத்தை
நிறுத்தா வளையாக் கணைமாமழை நீட வுய்த்து
மறுத்தா னுடைய கொடுந்தானவர் வாகை சிந்தி
அறுத்தான் விடுதொல்படை யாவையும் ஆடல் வேலோன்.

கோபத்துடன் இவ்வாறு போர் செய்யும் இவர்கள்தம் செய்கையைக் கண்டு எம்பிரான் தமது பெரிய வில்லை எடுத்து நிறுத்தி வளைத்து அம்புகளை மழை சொரி

வதுபோல ஓயாது செலுத்தி மாறுபட்ட கொள்கையுடைய தாரகனின் சேனுவீரர் விடுத்த படைகள் யாவற்றையும் அவர்கள் வீரம் கெடும்படியாக அழித்து பெரும் போர் செய்தார். 158

வெய்தாகிய தீங்கணை மாரி விசாகன் மீட்டும்
பெய்தான் அவுணர் முடிதன்னைப் பிறங்கு மார்பைத்
துய்தா னுறும்வா யினையங்கையைத் தோளைத் தாளைக்
கொய்தான் குருதிக் கடலெங்கணுங் கொண்ட தன்றே.

கொடிதாகிய அம்புகளை எம்பிரான் மீட்டும் மீட்டும் சொரிந்து அசுரர்களின் முடி, தலை, மேலாங்கிய, நெஞ்சு, ஊனமான உணவு தின்னும் வாயினை, அழகிய கை, தோள், கால் ஆகிய இந்த அவயவங்களைக் கொய்து வீழ்த்தினர். அப்போது இரத்தம் கடல்போலப் பெருகிக்கொண்டது. விசாகன்—விசாக நட்சத்திரத்திற்கு உரியவன். 159

வில்லோர் பரவுந் திறல்வேலவன் வெய்ய கோலால்
அல்லோ டியதீ மனத்தானவர் ஆயி னோரில்
பல்லோர் இறந்தார் குருதிக் கடல்பாய்ந்து நீந்திச்
சில்லோர் கள்தத்தம் உயிர்கொண்டு சிதைந்து போனார்.

வில்லாண்மை உடையார் வணங்கும் திறல் உடைய வேலேந்திய பகவான் விடுத்த கொடிய அம்பினால் கருமையாக இருண்ட தீயமனத்தினை உடைய அசுரர்களாய் அங்கு நின்றோரிற் பல்லோர் இறந்தார்கள். சிலர் ஓடிப்பெருகும் இரத்தக் கடலிலே பாய்ந்து நீந்தித் தங்கள் உயிர்களைக்கொண்டு உடலம் சிதைவாகிப் போனார்கள். 160

மைக்கார் சிவந்த தெனுந்தாரகன் மையல் நீங்கி
அக்காலை தன்னில் எழுந்தே அயல்போற்றி நின்று
தொக்கார் தமையாரையுங் காண்கிலன் துன்ப மெய்தி
நக்கான் அவர்தஞ் செயல்கண்டு நவிறல் உற்றான்.

இருண்ட மேகம் சிவந்து போனது எனும்படியாக அங்கு இரத்தம் தோய்ந்து சிவந்த உடல்கொண்ட தாரகன் அக்காலை தனது மயக்கம் நீங்கி எழுந்து பார்த்த போது தனது பக்கராக உடன்கூடி தனக்குச் சேனையாக நின்றார்கள் ஒருவரையுமே காணாதவனாய் துன்பங்கொண்டு துணையாகவந்த சேனைகள் இறந்தார் ஒழிய ஒருவரும் இல்லாமல் ஓடிப்போன தன்மையைப் பார்த்து சிரித்து இதனைச் சொல்லல் உற்றான்.

செய்ய வார்சடை ஈசன் நல்கிய சிறுவன் இங்கொரு வன்பொரக்
கையி ழந்துமு கத்தி னூடு கவின்கொள் கோடுமி ழந்தனன்
மைய லெய்திவி ழுந்த னன்பொரும் வலியதானையும் மாண்டன
ஐய வீங்கொரு தமியன் நின்றனன் அழகி தாலென தாண்மையே.

"செம்மையுடன் ஆர்ந்து விளங்கும் சடைமுடி உடைய சிவபிரான் திருக்குமாரர் இங்கு ஒருவர் வந்துபோர் செய்ய என் துதிக்கையும் இழந்து அழகிய நான்கு தந்தமும் இழந்தேன். அதுமட்டும் இல்லாமல் ஒருநாளும் இல்லாதபடி இன்று மயங்கியும் விழுந்தேன். போர்செய்யும்படியான வலிமையுடைய எனது சேனையும் மாண்டு போயது. ஐயனே! நான் இங்கு ஒருவன்மட்டும் நிற்கின்றேன், என்வலிமை மிக அழகாக இருக்கின்றது." 162

தாவில் வெஞ்சிலை வன்மை கொண்டு சரங்கள் எண்ணில தூண்டியே
மேவ லாணிவன் உயிர்கு டிப்பதும் வெல்லு கின்றதும் அரியதால்
தேவர் மாப்படை தொடுவ னிங்கினி யென்று சிந்தனை செய்துபின்
ஏவரும் புகழ் தார காசுரன் இனைய செய்கை இயற்றினான்.

''குறைவில்லாத கொடிய வில்லின் வலிமையைக் கொண்டு எண்ணற்ற எத்தகைய அம்புகளைத்தான் செலுத்தினாலும் எனது பகைவனான இக்குமரனின் உயிரை மாய்ப்பதும் அல்லது வெல்வதும் அரியதாகும். ஆகவே மேலான தெய்வப்படைகளை இனி விடுவேன்'' எனத் தாரகன் நினைத்து பின்னர் எல்லாருமே புகழ்ந்து நிற்கும் தாரகன் இச்செய்கைகளைச் செய்கிறான். 163

அடலரி நான்முக னாதி வானவப்
படையினை யாவையும் பவஞ்செய் தாரகன்
விடவிட வந்தவை வெருவி மேலையோன்.
புடைதனில் ஒடுங்கியே போற்றி நின்றவே.

எம்பிரான் மேலாக, வலியுடைய நாராயணாஸ்திரம், நான்முகன் படையான பிரமாஸ்த்திரம், ஆதியாகச் சொல்லப்படுகின்ற தேவப்படைகளை கொடும் பாவத்தைச் செய்கின்ற தாரகன் ஒன்றன்பின் ஒன்றாக விட விட வந்த அப்படைகள் யாவும் பயந்து நடுங்கி எப்பொருட்கும் மேலவராகிய முருகப் பிரானின் பக்கராகச்சென்று மிக ஒடுங்கி வணங்கி நின்றன. 164

செங்கண்மா லயன்முதற் றேவர் மாப்படை
துங்கமொ டேகியே துளங்கி வேலுடைப்
புங்கவன் பாங்கரிற் போற்றி நிற்றலும்
அங்கது கண்டனன் அவுணர் மன்னவன்

சிவந்த கண்ணுடைய நாராயணக்கடவுளின் படையான நாராயணாஸ்திரம், பிரமாஸ்திரம் முதலான தேவர்தம் படைகள் யாவும் செலுத்தும்போது வீரத்துடன் சென்று வேலுடைய பெருமானைக் கிட்டியபோது நடுங்கிப்பயந்து வலிகெட்டு வணங்கி நிற்றலும் அங்கு இத்தன்மையை அசுரர் தலைவனான தாரகாசுரன் கண்டான். 165

ஒருவினன் அகந்தையை உள்ள மோரிறை
வெருவினன் விம்மிதம் மிகவு மெய்தினான்
எரிகலுழ் விழியினன் இவனை வென்றிடல்
அரியது போலுமென் றகத்தில் உன்னினான்.

தனது இறுமாப்பாகிய அகந்தையை நீங்கினான். தனது நெஞ்சம் ஒரு இறைப் பொழுது அளவுபயந்தான். ஆச்சரியம் மிகவும் கொண்டான். நெருப்புக் கக்கும் கண்களினை உடையவனாய் ''இக்குமரனை வென்றிடல் இனிமேல் எமக்கு அரிது போலும்'' எனத் தனது உள்ளத்தே நினைத்தான். 166

பாங்கரின் மாதுடைப் பரமன் றொல்படை
ஈங்கினி விடுதுமென் றெண்ணி யப்படை
வாங்கினன் அருச்சனை மனத்தி னாற்றினன்
ஓங்கிடுஞ் சினமுடன் ஒல்லை யேவினான்.

''இதுபோகட்டும். பக்கரிலே பெண்ணினை இருத்திய முதல்வரான சிவபிரானின் சிவப்படைக்கலத்தை இனி விடுவேன் யான்'' என தாரகன் எண்ணி அந்தச் சிவப்படைக் கலத்தைக் கையில் எடுத்து அப்படைக்கு அருச்சனை முதலியவற்றை மனத்தினாலே செய்து நிரப்பி பின்னர் மனத்தில் எழுகின்ற பெரும் சினத்துடன் சிவப்படைக்கல மதை முருகப் பிரான் மீது விடுத்தான். 167

**சங்கரன் தொல்படை தறுகண் ஆலமும்**
**புங்கவர் படைகளும் பூத ராசியும்**
**அங்கத நிரைகளும் அளப்பில் சூலமும்**
**வெங்கனல் ஈட்டமும் விதித்துச் சென்றதே.**

தாரகன் விடுத்த சிவபிரானின் மிகப்பழைய அச்சிவப்படைக்கலம் புறப்பட்டுக் கொடிய நஞ்சையும் அளவுகடந்த சூலங்களையும், தேவர்களின் வேறு படைகளையும், பூதங்களின் வரிசைகளையும், கொடிய நெருப்புச் சுவாலைகளையும் ஆகிய இவைகள் யாவற்றையும் தன்னிடத்தில் நின்றும் தோற்றுவித்து விரியப்பண்ணிச் சென்றது. 168

**கலைகுலாம் பிறைமுடிக் கடவுள் மாப்படை**
**அலகிலா உயிர்களும் அண்டம் யாவையும்**
**உலைகுரு தலமர வுருத்துச் சேறலும்**
**இலைகுலாம் அயிலுடை எந்தை நோக்கினன்.**

ஒரு கலை நிரம்பிய பிறையணிந்த சடைமுடியுடைய சிவனுடைய சிவப்படைக்கலம் காண முடியாத உயிர்களும் அண்டங்கள் யாவும் உலைந்து ஏங்கி நடுங்கும்படி கோபத்துடன் செல்லுதலும் அதனை இலைபோலும் வடிவினை உடைய வேல் ஏந்திய எமது பரம பிதாவானவர் பார்த்தருளினார். 169

**கந்தவேள் அனையது கண்டு தந்தையைச்**
**சிந்தையில் உன்னியோர் செங்கை நீட்டியே**
**அந்த வெம்படையினை அருளிற் பற்றினன்**
**தந்தவன் வாங்கிய தன்மை யென்னவே.**

கந்தக் கடவுள் அப்படையினைக் கண்டு தந்தையாகிய சிவபிரானைச் சிந்தையில் நினைந்து தமது அழகிய சிவந்த கையை நீட்டி அந்த கொடிய சிவப்படைக்கலத்தை அருளோடு எட்டிப் பிடித்து எடுத்துக்கொண்டார். இது எதுபோல் என்றால் அதைக் கொடுத்தவரே திரும்பப் பெறும் தன்மைபோல எனும்படியாக. 170

**நெற்றியில் விழியுடை நிமலன் காதலன்**
**பற்றிய படையினைப் பாணி சேர்த்தினன்**
**மற்றது தாரக வலியன் கண்ணுறீஇ**
**இற்றது நந்திரு இனியென் றேங்கினன்.**

தமது நெற்றியிலே கண்ணுடைய நின்மலப் பொருளான சிவபிரான் காதல் மைந்தரான முருகக் கடவுள் எட்டிப்பிடித்த சிவப்படைக்கலத்தை தனது திருக்கரத்தில்

வைத்துக் கொண்டார். இச்செயலை தாரகன் என்ற வலியுடையான் கண்ணுற்று ''ஐயையோ! இன்றோடு எமது செல்வம் அழிந்ததோ' என ஏங்கினன். 171

தேவர்கள் தேவனர் தெய்வத் தொல்படை
ஏவினன் அதனையும் எதிர்ந்து பற்றினன்
மூவிரு முகமுடை முதல்வன் வன்மையை
நாவினி லொருவரால் நவிறற் பாலதோ.

''நான் தேவாதி தேவனான சிவபிரானின் தெய்வீகம் நிரம்பிய மிக முதிய வலி கொண்ட சிவப்படைக்கலத்தை ஏவினேன். அதனையும் தமது கையினை நீட்டி எதிராகப் பற்றிக்கொண்டார் இக்குழந்தை. ஆகையால் இனி ஆறுமுகமுடைய முதல்வரான இவரின் வலிமையை நாவாலே ஒருவராற் சொல்ல முடியுமோ.'' 172

ஆயினும் அரன்மகன் அறத்தின் போரலால்
தீயதோர் கைதவச் செருவ துன்னலான்
மாயைகள் ஆற்றியே மறைந்து நின்றுநான்
ஏயன இயற்றுவன் அமரென் றெண்ணினன்.

இப்படியாயினும் சிவபிரானுடைய திருக்குமரர் தருமத்தின் போர் அல்லாது தீமை தரும் வேறு வஞ்சனையுடன் கூடிய மாயப்போரைச் செய்ய நினையார். ஆகவே நான் மாயைகளைச் செய்து அதிலே மறைந்து நின்று கொடிய போரைச் செய்வேன் இவருடன்'' எனத்தாரகன் எண்ணினன். 173

கையனும் இவ்வகை கருத்தி லுன்னியே
ஒய்யென வேகிர வுஞ்ச வெற்பின்முன்
வையமொ டேகிநீ வல்ல மாயைகள்
செய்குதி செய்குதி யென்று செப்பினன்.

வஞ்சனை உடைய தாரகனும் இவ்வகையாகக் கருத்தில் நினைந்து விரைவாகச் சென்று கிரவுஞ்சம் என்னும் மலையின் முன்னராகத் தேரோடும் சென்று ''கிரவுஞ்சமே நீ உன்னால் செய்யக்கூடிய மாயைகளை அதிவிரைவாகச் செய்வாயாக, என்று சொல்லினன். 174

செப்பிய இறுவரை கிரவுஞ்சந் திகழ்வுறு மாயையின் நிகழ்வுன்னி
முப்புர வகைபல வெனநிற்ப முரணுறு தாரக முதல்வன்றான்
அப்புர நிருதர்க ளெனநின்றான் அகல்வரை பலபல முகிலாக
ஒப்பறு சூரன திளையோனும் உருமென அவையிடை உலவுற்றான்.

தாரகாசுரன் இவ்வாறு கிரவுஞ்சமலைக்குச் சொல்லிய அந்த வார்த்தை முடிவாகிய நேரத்து, கிரவுஞ்சம் என்னும் மலையானது தன்னிடத்து விளங்கும் மாயத்தன்மையின் நிகழ்ச்சிகளை நினைந்து முப்புரங்களின் வகையாக இரும்பு, பொன், வெள்ளி இவற்றின் வடிவாகிய பல புரங்களாகித் தோன்ற வலிமைகொண்ட முதல்வனான தாரகாசுரன் அந்த முப்புரங்களில் விளங்கும் அசுரர்கள்போல நின்றான். இப்பால் அக்கிரவுஞ்சமலை பல முகிற் கூட்டமாகத் தோன்ற ஒப்பற்ற தாரகன் ஆகிய இவனும் அம்முகில்களிடையே தோன்றி நின்றுலாவும் இடியேறுபோல் நிற்பான். 175

வேலைக ளுருவினை வரை கொள்ள விசயம துடையதொ ரசுரேசன்
காலம திறுதியில் உலகுண்ணுங் கனையொலி அனலிக ளெனநின்றான்
சீலமின் முதுகிரி நெடுநேமித் திருவரை சூழ்தரும் இருளாக
மால்கரி முகமுள அவுணன்றான் வரையறு பாரிட நிரையானான்.

சமுத்திரங்களின் வடிவினைக் கிரவுஞ்சமலை கொள்ள, வெற்றியை எக்காலமும் உடைய அசுரர் தலைவனான தாரகன் காலமுடிவிலே உயிரை உண்கின்ற வடவா முகாக்கினிபோல வருவான். சீலமில்லாத முதிய மலையானது நெடிய சக்கரவாளம் என்னும் மலையைச் சூழ்ந்த இருளாகியதும் யானை முகமுடைய வலிய தாரகாசுரனும் கணக்கற்ற பூதங்களாகி வரிசை வரிசையாகத் தோன்றுவான். 176

இந்திரன் முதலுள சுரர் வைகும் ஏழுட னெருதிசை வேழம்போல்
அந்தநெ டுங்கிரி வரலோடும் அருகினில் உறுகுல கிரியாகித்
தந்தியின் முகமுள அவுணன்றான் சடசட முதிரொலி யுடன்வந்தான்
முந்திய தந்தம துருமாறி முறைமுறை நின்றதொர் திறனேபோல்.

இந்திரன் முதல் எட்டுத்திக்குப் பாலகரும் வாழ்கின்ற எட்டு திக்கு யானைபோல வடிவாகி அந்த நெடிய கிரவுஞ்சமலை வரலும் அந்த யானைகளின் பக்கராக பெரிய மலைவடிவுடன் யானைமுகமுடைய தாரகாசுரன் சடசட என்ற முதிர்ந்த சத்தத்துடன் வருவான். இது எப்படி எனில் தங்கள் முந்திய வடிவங்களான மலையையும் யானையையும் மாற்றி யானைமுகமுடைய தாரகாசுரன் மலையாகவும் மலையாகிய கிரவுஞ்சம் யானையாகவும் உருமாறி வருதல் போல. 177

வாயுவின் உருவென மலைசெல்ல மதகரி முகமுள பதகன்றான்
தேயுவின் உருவென வரலுற்றான் திரியவும் நெடுவரை விரைவோடுங்
காய்கனல் உகுஞெகி ழிகளாகிக் ககனம திடையுற மிடைகாலை
ஆயிர கோடிவெய் யவரேபோல் அலமர லுற்றனன் அறமில்லான்.

காற்றின் வடிவுகொண்டு மலை செல்ல மதம் பொழியும் யானை முகமுடைய தாரகன் நெருப்பின் வடிவமாகி வரல் உற்றானுகித் திரியவும் அம்மலையானது பெரிய நெருப்புச் சுவாலைகளாக ஆகாயமெங்கும் நெருங்கி மிடைகின்றகாலை ஆயிரகோடி சூரியர்களைப் போல அலமந்து திரிவானாயினன் தருமநெறி தப்பிய தாரகன். 178

அவ்வகை தாரகன் வரையோடும் அளவறு மாயையின் வடிவெய்தி
எவ்விடை யுஞ்செறி தரலோடும் எம்பெரு மானவன் இவைகாணாத்
தெவ்வலி கொண்டுறும் இவனாவி சிந்துவன் என்றுள மிசைகொண்டே
கைவரு வேற்படை தனைநோக்கி இனையன சிலமொழி கழறுற்றான்.

அவ்வகையாகத் தாரகாசுரன் கிரவுஞ்சமலையோடு அளவற்ற மாயையின் வடிவங் கொண்டு எவ்விடத்தும் தான் ஒருவனே செறிதலோடும் எம்பிரான் இதனைக் கண்ணும்

றருளி ''மிக்க பகைமைகொண்ட இவன் உயிரைச் சிந்துவன் இப்பொழுதே'' என்று தமது திருக்கரத்திலே இருக்கின்ற வேற்படைதனைப் பார்த்தருளி இனையவாகிய சில வார்த்தைகளைச் சொல்வாராயினர். 179

தாரகன் என்பதோர் பேரோனைச் சஞ்சல முறுகிர வுஞ்சத்தை
ஓரிறை செல்லுமுன் உடல்கீறி உள்ளுயி ருண்டுபு றத்தேகிப்
பாரிடர் தம்மை இலக்கத்தொன் பதின்மர்க ளாக உரைக்கின்ற
வீரரை மீட்டிவண் வருகென்றே வேற்படை தன்னை விடுத்திட்டான்.

''தாரகன் என்பதோர் வலிமையுடைய அசுரனையும் பிறரைச் சஞ்சலப்படுத்தும் துயரம் கொண்ட கிரவுஞ்சமலையையும் ஓர் இறைப்பொழுது செல்லுமுன்பாக நீ சென்று அவர்கள் உடலைக் கிழித்து உள்ளிருக்கும் உயிருண்டு புறத்தே சென்று அக்கிரவுஞ்சமலைக்குள் மயங்கி உறங்கும் பூதங்களை இலக்கத்து ஒன்பது வீரர்களெனச் சொல்லப்படுகின்ற வீரர் எல்லாரையும் மீட்டுக் கொண்டே இவ்விடத்து திரும்ப வருவாயாக'' என வேற்படையை தாரகன் மீது செலுத்தி விட்டார். 180

சேயவன் விட்டிடு தனிவைவேல் செருமுயல் தாரகன் வரையோடும்
ஆயிடை செய்த புணர்ப்பெல்லாம் அகிலமும் அழிதரு பொழுதின்கண்
மாயையி னாகிய வுலகெங்கும் மலிதரு முயிர்களும் மதிசூடுந்
தூயவன் விழியழல் சுடுமாபோல் துண்ணென அட்டது சுரர்போற்ற.

குழந்தை வடிவினரான பெருமான் விட்டிட்ட தனியான வேற்படை உடன் புறப்பட்டு தாரகாசுரன் கிரவுஞ்ச மலையுடன் கூடிச் செய்த மாயங்கள் யாவற்றையும் அகில உலகமும் உயிரும் அழியுங்கால் சிவபிரானின் தூய கண்ணில் இருந்து தோன்றும் நெருப்புச் சுட்டெரிக்கும் தன்மை போல தாரகனும் கிரவுஞ்ச மலையும் கொண்ட மாயவடிவினை திடீரெனச் சுட்டு எரித்தழித்தது. இச் செயலைக் கண்டு தேவர்கள் கைகுவித்துக் கும்பிட்டு போற்றுதல் செய்யும்படியாக, 181

அரண்டரு கழற்கால் ஐயன் அறுமுகத் தெழுந்த சீற்றந்
திரண்டொரு வடிவின் வேறாய்ச் சென்றதே யெனவு நான்கு
முரண்டரு தடந்தோள் அண்ணல் முத்தலை படைத்த சூலம்
இரண்டொரு படையாய் வந்த தென்னவும் ஏகிற் றவ்வேல்.

எமக்கெல்லாம் காப்பினைத் தந்துநிற்கும் சிலம்பணிந்த சேவடியினை உடைய ஐயனின் ஆறுமுகத்தில் எழுந்த கோபமானது திரண்டு ஒன்றாக அவரை விட்டுப் பிரிந்து வேறாகிச் சென்றது எனும்படியாகவும், நான்கு வலிமைகொண்ட தோள்களினை உடைய சிவபிரானின் மூன்றுதலைகளை உடைய சூலப்படை இரண்டு ஒன்றாகிச் சென்றதெனும்படியும், எம்பிரானது வேல் மாயையைஅழித்துவிட்டு அப்பால் தாரகன் மேல் சென்றது

வேதாகம சித்திர வேலாயுதன் வெட்சித் தண்டைப்
பாதாரவிந்தம் அரணாக (அருணகிரியார்) 182

முடித்திடல் அரிய மாய மூரிநீர்க் கடலை வற்றக்
குடித்திடு கின்ற செவ்வேற் கூற்றம்வந் திடுத லோடுந்
தடித்திடும் எயிற்றுப் பேழ்வாய்த் தாரகன் இதனைப் பற்றி
ஒடித்திடு கிற்பேன் என்னு ஒல்லென உருத்து வந்தான்.

எம்பிரானுடைய வேலானது எவராலும் முடித்தற்கு அரிதாகிய மாயை என்னும் பெரும் நிரை உடைய கடலை வற்றக் குடித்திடுகின்ற செவ்வொளி பரந்த வேல் என்னும் இயமன் வந்திடுதலோடும் தடித்திட்ட பற்களைக் கொண்ட அகன்ற வாயினையும் உடைய தாரகன் பார்த்து ''நான் இந்த வேலைப் பற்றி முறித்துப் பொடியாக்கி விடுவேன்'' என்று வேகமுடைய சுறுக்கெனும் படியான உக்கிர கோபத்துடன் எண்ணியவாறு முடிப்ப வேலை நோக்கி வந்தான். 183

அச்சமொர் சிறிதுமில்லா அவுணர்கோன் உவணன் மேற்செல்
நச்சர வென்னச் சீறி நணுகலும் அவன்மார் பென்னும்
வச்சிர வரையின் மீது வானுரும் ஏறுற் றென்னச்
செச்சையந் தெரியல் வீரன் செலுத்தும்வேல் பட்டதன்றே.

பயம் என்பது கொஞ்சமேனும் நெஞ்சில் அறியாத அசுரர் தலைவனான தாரகன் கருடப் பட்சியைநோக்கிச் செல்லும் பாம்பைப்போல் எம்பிரானுடைய வேலைநோக்கி சீறிக் கொண்டு கிட்டவாகச் செல்லலும் அதுவேளை வெட்சி மாலைசூடியவராய் திகழ்கின்ற வீரரான முருகப்பெருமானின் வேல் ஆனது தாரகனுடையநெஞ்சான வச்சிர மலையின் மீது இடியேறு சென்று தாக்குவதுபோல் அவன் நெஞ்சில் பாய்ந்துவேல் பட்டது. 184

தாரகன் மார்ப மென்னுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன அங்கட்
சோரியுந் துகளும் ஆடித் துண்ணென மீண்ட தன்றே.

விசாலித்த மலைபோன்ற தாரகனுடைய நெஞ்சிலே எம்பிரானுடைய வேல்பாய்ந்து கிழித்து அவன் நின்ற கிரவுஞ்சம் என்னும் சீரிய மலையிலும் பாய்ந்து அதனையும் ஊடுருவிப் பொடியாக்கி இந்தக் சொடியரைஅழித்து விட்டு வருதலாலே வீரமும் புகழும் ஒருங்கே கொண்டு விளங்கியது எனும்படியாக தனது மேனி எல்லாம் இரத்தமும் மலையின் தூசுகளும் ஒருங்குடன் படியப்பெற்று அதிவிரைவாக எம்பிரான் வேல் மீண்டது.

மீண்டிடு சீற்ற வைவேல் வெற்பினுள் துஞ்சு கின்ற
ஆண்டகை வீரர்தம்மை ஆயிடை யெழுப்பி வான் போய்
மாண்டகு கங்கை தோய்ந்து வாலிய வடிவாய் ஐயன்
தூண்டிய கரத்தில் வந்து தொன்மைபோல் இருந்த தம்மா.

இவ்வாறு மீண்டிடுகின்ற கோபங்கொண்ட வேலானது கிரவுஞ்சமலையில் மயக்கமான சோக நித்திரை செய்கின்ற வீரவாகு தேவர் முதல் வீரர் யாவரையும் அவ்விடத்து எழுப்பியபின்னர் எம்பிரான் வேல் ஆகாயத்தெழுந்து மாட்சிமை கொண்ட

ஆகாயகங்கையில் சென்று நீராடி இப்போது தனது உக்கிரமான கோப வடிவைவிட்டு நீங்கி வணங்கிக் கைகூப்புவார் யாவர்க்கும் அருள் புரியும் வடிவாகி எம்பிரான் வேல் ஐயன் இடத்து வந்து செலுத்திய கரத்தில் பழைமைபோல இருந்தது.

கருத்தில் நினைந்து உருகிக் கைகூப்பும் மெய்யடியார் வருத்தமெலாம் தீர்க்கும் வடிவேல். —யோகசுவாமிகள்.

இக்கருத்தை வேல் வாலியவடிவம் எய்தியது என்பதற்கு ஒப்பநோக்குக. 186

தண்டம தியற்றுங் கூர்வேல் தாரக வவுணன் மார்பும்
பண்டுள வரையும் பட்டுப் பறிந்தபே ரோசை கேளா
விண்டது ஞால மென்பார் வெடித்தது மேரு வென்பார்
அண்டம துடைந்த தென்பா ராயினர் அகிலத் துள்ளோர்.

கொடியவர்களுக்கு உற்ற தண்டனையைச் செய்யும் கூரியவேல் தாரகாசுரனுடைய நெஞ்சம் முன்னுக உள்ள கிரவுஞ்சம் என்னும் மலையிலும் பட்ட வேளையில் எழுந்த பெரிய ஓசையைக் கேட்டு உலகிலுள்ள எல்லாரும் ஐயையோ பூமி கிழிபட்டதோ என்பார், மகாமேருமலை வெடித்ததோ என்பார், அண்டங்கள் உடைந்தனவோ என்றார்கள்.

வடித்ததை யன்ன கூர்வேல் மார்பையூ டறுத்துச் செல்லத்
தடித்திடு கின்ற யாக்கைத் தாரகன் அநந்த கோடி
இடித்தொகை யென்ன ஆர்த்திட் டிம்மென எழுந்து துள்ளிப்
படித்தலந் தன்னில் வீழ்ந்து பதைபதைத் தாவி விட்டான்.

இயல்பாகவே அராவிக் கூரிட்ட தன்மையை ஒத்த கூரிய வேலானது தாரகாசுர னுடைய தடித்திட்ட நெஞ்சில் பாய்ந்து ஊடறுத்துச் செல்லலும் தடித்த பெரிய உடலை உடைய தாரகாசுரன் அநந்தகோடி இடியேற்றுகள் முழங்கியதுபோல வாய் விட்டுக் குளறி திடீரென எழுந்து துள்ளிப் பூமியிலே வீழ்ந்து பதைபதைத்து துடித் துத் தனது உயிரை விட்டான். 188

தடவரை யனைய மொய்ம்பில் தாரகன் வேலாற் பட்டுப்
புடவியில் வீழா நின்றான் பொள்ளென வானில் துள்ளிக்
கடலுடைந் தென்ன ஆர்க்குங் காலையில் கலக்க மெய்தி
உடுகணம் உதிர்ந்த தஞ்சி யோடினன் இரவி யென்போன்.

பெரிய மலைபோன்ற தோளை உடைய தாரகன் வேலினால் பிளக்கப்பட்டு பூமியில் விழுமுன்பு விரைவுடன் வானத்தில் துள்ளி எழுந்து அங்கே வருத்த மிகுதியால் போட்ட சத்தத்தினைக் கேட்டுக் கலங்கி நட்சத்திரங்கள் உதிர்ந்தன. சூரிய பகவான் பயந்து ஓடினான். 189

தளர்ந்திடல் இல்லா வீரத் தாரகன் பட்டு வானில்
கிளர்ந்தனன் வீழு மெல்லைக் கீழுறு பிலமும் பாரும்
பிளந்தன வரைகள் யாவும் பிதிர்ந்தன அதிர்ந்த தண்டம்
உளந்தடு மாறி யோலிட் டோடின திசையில் யானை.

எக்காலமும் தளர்ச்சி இல்லாத வீரமுடைய தாரகன் வேலாற் பிளக்கப்பட்டு வானத்து துள்ளி எழுந்து வீழ்கின்ற எல்லையில் கீழாக உள்ள பிலங்களும் பூமியும் பிளந்து போயின; மலைகள் எல்லாம் நொருங்கி உதிர்ந்து வீழ்ந்தன; அண்டங்கள் அதிர்ந்தன; விழுந்த சத்தத்தைக் கேட்டு உள்ளம் தடுமாறி ஓலமிட்டுக் கத்திய வண்ணம் திக்குகளில் காவல்கொண்ட பெரிய யானைகள் ஓடின. 190

தண்ணளி சிறிது மில்லாத் தாரகன் கிளர்ந்து வான்போய்
மண்ணிடை மறிந்த தன்மை வன்சிறை இழந்த நாளில்
திண்ணிய மேரு இன்னுஞ் செல்லலாங் கொல்லென் றுன்னி
விண்ணிடை யெழுந்து வல்லே வீழ்ந்ததே போலும் அன்றே.

இரக்கம் என்பது சிறிதும் இல்லாது உயிர்களை வதைத்த தாரகாசுரன் துள்ளி வானத்து எழுந்து மீண்டும் பூமியில் வீழ்ந்து இறந்த தன்மையானது இந்திரனால் தனது சிறகுகள் வெட்டப்பட்டபோது மேருமலையானது இன்னும் சிறகு இன்றி மேலே பறந்து போவதற்கு முடியுமென எண்ணி மேலே எழுந்து அது பறக்கமுடியாமல் கீழே விழுந்த தன்மையைப்போல ஆயது. மகாமேருமலையோடு இந்திரன் போர் செய்தபோது அதன் சிறகுகளை இந்திரன் வெட்டினான் என்ற வரலாறு முன்னரும் உரையிற் சொல்லப்பட்டது. 191

வெற்றிய தாகுங் கூர்வேல் வெற்பினை அட்ட காலைச்
செற்றிய பூழி யீட்டஞ் சிதறிய பொறிக ளெங்கும்
பற்றிய புகையும் வந்து பரந்தன கரந்த தண்டம்
வற்றிய கடல்கள் வானிற் கங்கையும் வறந்த தன்றே.

வெற்றியதாக விளங்கும் கூரிய வேலாயுதமானது கிரவுஞ்சம் என்னும் மலையை பொடி செய்து அழித்த நேரத்து எங்கும் ஒரே புழுதிமயமாக பரந்து கொண்டது. நெருப்புப் பொறிகள் எங்கும் பறந்தன, புகையும் எங்கும் பற்றிக்கொண்டு பரந்தது. அப்புகையால், புழுதியால் அண்டங்கள் யாவும் மறைக்கப்பட்டன. கடல்கள் புழுதி பட்டும் வெப்பினாலும் வற்றிப் போயின, வானத்துள்ள கங்காநதியும் வற்றிப் போனது.

சிறந்திடு மாய வெற்பைத் திருக்கைவேல் பொடித்த காலைப்
பிறந்திடு கின்ற தீயைத் தீயெனப் பேச லாமோ
அறிந்தவர் தெரியில் குன்றம் அவுணனா கையினான் மெய்யில்
உறைந்திடு குருதி துள்ளி உகுத்தவா றுகு மன்றே.

மாயை செய்வதிற் சிறந்து விளங்கும் கிரவுஞ்சமலையை எம்பிரான் திருக்கை வேல் பொடியாக்கியகாலையில் அங்கு பிறந்து தோன்றிய நெருப்பை நெருப்பு என்று நாம் பேசலாமோ! அறிவாளிகள் அதன் தன்மையைத் தெரிவராயின் இந்தக் கிரவுஞ்சமலையும் ஓர் அசுரன் என்பதை அறிவார்கள். ஆகவே அசுரனாகிய மலை உடலில் வேல் பட்டதும் சீறி எழுந்த அவன் உடலில் உறைந்த இரத்தமே துள்ளிச் சொரிந்தது என்பதேயாகும்; அதை நெருப்பென்று பேச இயலாது.

(இக்கந்தபுராணம் முழுவதும், பதியாகிய இறைவனை ஆன்மாவான உயிர் அடைவதற்கு முயலும் வழிக்கு இடையூறாக நிற்கும் அசுரசத்திகளின் இயல்புபற்றிச் சொல்லப்பெறும் தத்துவப் பொருள் நிரம்பிய அதி அற்புதம் நிறைந்த புராணமாகும். ஆகவே இங்கு ஆசிரியரும் 'அறிந்தவர் தெரியில்' என்னும் வாக்கியத்தால் சொல்லாமல் சொல்லி சுட்டாமல் சுட்டிக் காண்பிக்கின்றார்.)

யானுற்ற குன்றந் தன்னை யெறிந்தனன் என்று செவ்வேள்
தானுற்ற நதியை வந்து தடிந்ததே என்ன வெற்பில்
ஊனுற்ற நெடுவேல் பாய உதித்திடும் பொறியின் ஈட்டம்
வானுற்ற கங்கை புக்கு வறந்திடு வித்த தன்றே

கிரவுஞ்சமலை பிளவுபட்டபோது எழுந்த நெருப்புப்பொறிகளின் தொகுதியானது, "நான் இருந்த மலையை பொடிப்படுத்தினர் செம்மேனிச் செல்வரான முருகன். ஆகையால் அவர் பிறப்பதற்கு முன் இருந்த கங்கை நீரைப் பதிலுக்குப் பதில் அழிவு செய்வேன்" என நினைந்து வந்து அழகிய ஆகாய கங்கையை வற்றச் செய்துள்ளது என்பதற்கு ஒப்பாக எம்பிரானுடைய ஊன் உண்ணும் செயலுடைய நெடிய வேல் வந்து கிரவுஞ்ச மலையிற் பட்டபோது எழுந்த நெருப்புப் பொறிகளின் கூட்டம் சென்று ஆகாய கங்கையை வற்றச் செய்தது. 194

திறலுடை நெடுவேல் அட்ட சிலம்பினில் சிதறித் தோன்றும்
பொறிகளுந் துகளும் ஆர்ப்பும் பொள்ளெனச் செறிந்த தன்மை
மறிகடல் முழுதும் அங்கண் வடவையும் அடைந்தொன் றாகி
இறுதியில் உலகங் கொள்ள எழுந்தது போலும் மாதோ.

வலிமை உடைய நெடிய வேல் அழித்த கிரவுஞ்ச மலையினின்றும் சிதறித் தோன்றும் நெருப்புப் பொறிகளும், புழுதியும், இரையும் ஓசையுமாகிய எல்லாம் விரைவாக எங்கும் செறிந்த தன்மை, மறித்து வீசும் திரைகளை உடைய கடல்கள் முழுவதும் அங்கு இருக்கும் நெருப்பும் திரண்டு ஒன்றாகி உலக அழிவு காலத்து உலகை அழிவு செய்ய எழுந்தது போலவும் ஆயிற்று. 195

தந்தியின் வதனங் கொண்ட தாரக வவுணன் மார்பில்
சிந்துறு குருதிச் செந்நீர் திரைபொரு தலைத்து வீசி
அந்தமில் நீத்த மாகி அயிற்படை அட்ட குன்றில்
வந்திடு பூழை புக்கு மறிகடல் மடுத்த தன்றே.

யானையின் முகத்தினைக் கொண்ட தாரகாசுரனின் நெஞ்சை வேல் பிளந்தபோது தோன்றிய இரத்தம் சிவந்த கடலைப்போலப் பொங்கி எழுந்து கரையெல்லாம் இரத்த அலையாக வீசி எல்லையற்ற பெரும் சமுத்திரமாகப் பொங்கி வேற்படை அழித்துப் பொடிப்படுத்திவிட்ட கிரவுஞ்ச மலை இருந்த துவாரம் வழியாக உள் நுழைந்து சென்று அப்பால் சமுத்திரத்தைச் சேர்ந்துகொண்டது. 196

விட்டவேல் மீண்டு கந்த வேள்கரத் திருப்பத் தீயோன்
பட்டதும் வெற்பு மாய்ந்த பான்மையும் அவுணர் யாருங்
கெட்டது நோக்கி மாலுங் கேழ்கிளர் கமலத் தேவும்
முட்டிலா மகத்தின் வேந்தும் முனிவருஞ் சுரரும் ஆர்த்தார்.

எம்பிரானுல் விடப்பட்ட வேல் மீண்டு வந்து அவர் திருக்கரத்தில் வீற்றிருந்தருளலோடும் தாரகாசுரன் அழிவானதும், கிரவுஞ்சமலை பொடியாக்கப்பட்டமையும், உற்றுணர்ந்த நாராயணக் கடவுளும், அழகிய செந்நிறங் கிளரும் தாமரை மலர்மேல் இருக்கின்ற பிரமதேவரும், குறைவிலா யாகங்களின் தலைவனுன இந்திரனும், தேவர்களும், முனிவர்களும் யாவரும் இரைந்து 'அரகரா'வென முழங்கி ஆரவாரித்தார்கள்.

ஆடினர் குமரற் போற்றி அங்கைக ளுச்சி மீது
சூடினர் தண்பூ மாரி தூர்த்தனர் அவனைச் சூழ்ந்து
பாடினர் தொழுது முன்னம் பன்முறை பணிந்து நின்ருர்
நீடிய வுவகை யென்னும் நெடுங்கடல் ஆழும் நீரார்.

எல்லாருமாக எழுந்து முருகனைப் போற்றிசெய்து ஆடினுர்கள், அழகிய கைகளை உச்சிமீது கூப்பினுர்கள். குளிர்ச்சிவாய்ந்த பூக்களை வாரி எடுத்துச் சொரிந்தார்கள், ஆறுமுகமுடைய அப்பனைச் சூழ்ந்து வலமாகவந்து வந்து பாடினுர்கள்; தொழுதார்கள். பூமியில் பலமுறை தாழ்ந்து தாழ்ந்து வணங்கி நின்ருர்கள், சொல்லற்கரிதாய் அளவின்றிப் பெருகுகின்ற ஆனந்தம் என்னும் நெடிய கடலுள் ஆழ்பவரை ஒத்து ஆனந்தமுற்ருர்கள். 198

ஆங்கது காலை தன்னில் அளப்பிலா மாயை வல்ல
ஓங்கல திறப்ப அங்கண் உறங்கிய வீர ரெல்லாந்
தீங்குறு மையல் நீங்கிக் கதுமெனச் சென்று செவ்வேள்
பூங்கழல் வணங்கி நின்று போற்றிய புடையின் நின்ருர்.

ஆங்கதுகாலைதன்னில் அளவு சொல்ல முடியாத மாயமயக்கம் செய்யும் கிரவுஞ்சமலையானது இறந்துவிட அவ்விடத்து மயக்கத்துயில் கொண்ட வீரர் யாவரும் தமக்குத் தீங்கை வருவிக்க நின்ற மையல் யாவும் நீங்கப்பெற்று விரைவாகச் சென்று செம்மேனிச் செல்வரான எம்பிரானின் தாமரை மலர்போலும் சிவந்த பாதங்களை வணங்கி போற்றிசெய்தவாறு எம் உயிர்முதலை, முருகனைச் சூழ்ந்து பக்கராக நின்ருர். 199

வாருறு கழற்கால் வீர வாகுவே முதலா வுள்ள
வீரர்கள் தம்மை யெல்லாம் வேலுடைக் கடவுள் நோக்கித்
தாரகன் வரையுட் பட்டுத் தகுமுணர் வின்றி நீவிர்
ஆருநொந் தீர்கள் போலும் மாயையூ டழுந்தி யென்ருன்.

வார்கட்டிய வீரக்கெண்டை அணிந்த பாதமுடைய வீரவாகு முதலாக உள்ள பெருந்தலைவர்களை எல்லாம் வேலேந்திய எமது கடவுள் பார்த்தருளி, ''வீரரே! நீங்கள் யாவரும் தாரகாசுரனுல் கிரவுஞ்ச மலையில் அகப்பட்டு உங்களுடைய தகுதியான உணர்வு இல்லாமல் மாயையூடு அழுந்தப் பெற்று அதனுல் மயங்குதலால் நீங்கள் எல்லாரும் நொந்து போனீர்கள் போலும்'' எனக் கேட்டருளினுர். 200

செய்யவன் இனைய வாறு சீரருள் புரிய வீரர்
ஐயநின் னருளுண் டாக அடியம்பா லிடர்வ துண்டோ
மையலோ டுறங்கு வார்போல் மருவுமின் புற்ற தன்றி
வெய்யதோர் கிரிமா யத்தால் மெலிந்திலம் இறையு மென்ருர்.

எக்காலமும் குன்றாத இளநலம் உடைய பகவான் இனையவாறு கேட்க அவர்கள் பால் நல்லருளைப் புரிதலும் அதுபோல் அவர்கள் யாவரும் எம்பிரானைப் பார்த்துச் சொல்வார்கள்! ''ஐயனே உமது அருள் எஞ்ஞான்றும் எமக்கு உண்டாகி இருப்ப பின்னர் நாங்கள் ஊறுபட்டுத் துன்பப்படுவதும் ஆமோ? மயக்கத்தால் நித்திரை செய்வார் போல நாம் இருந்தபோதும் நாம் எம்மை மருவிய இன்பத்தோடு இணைந்து இன்புற்றதன்றி கொடியதான கிரவுஞ்ச மலை மாயத்தால் ஓர் இறையளவேனும் நாங்கள் மெலிந்திலம்'' என்றார்கள். 201

என்றலும் வீர மொய்ம்பின் ஏந்தலை விளித்துச் செவ்வேள்
வென்றிகொள் சூரன் பின்னோன் விட்டிடத் தான்முற் கொண்ட
வன்றிறற் படையின் வேந்தை மற்றவன் கரத்தின் நல்கி
நன்றிது போற்று கென்றே நவின்றுநல் லருள்பு ரிந்தான்

என்றலும் வீரவாகு தேவரை எம்பிரான் தன்முன்னர் அழைத்து முன்பு தான் சூரனின் தம்பியாகிய தாரகாசுரன் விடுப்ப பெற்றுக்கொண்ட வலி உடைய படைகளுக்கெல்லாம் வேந்தாகிய சிவப்படைக்கலத்தை அவர் கையிலே கொடுத்தருளி ''வீர வாகுதேவனே! இதை நன்றாக போற்றிப் பேணி வருவாயாக'' என அருள் புரிந்து கொடுத்தருளினர் எங்கள் முருகப்பிரான். 202

தாரகன் போரில் துஞ்சுஞ் சாரதர் தம்மை யெல்லாம்
ஆருநீர் எழுதிர் என்னா அவரெலாம் எழவே செய்து
பாரிட வனிகஞ் சூழப் பண்ணவர் பரவல் செய்யச்
சீரிய வயவர் ஈண்டச் செருநிலம் அகன்றான் செவ்வேள்.

இப்பால் தாரகாசுரனுடைய போரிலே இறந்த பூத வீரர் தம்மை எல்லாம் ''நீங்கள் எல்லோரும் உயிர்பெற்று எழுவீராக'' என அவர்கள் யாவரும் உயிர்பெற்று எழும்வண்ணம் அருள் செய்துகொண்டு பூதங்கள் சேனையாகத் தன்னைச் சூழவும் தேவர்கள் வணங்கித் துதிப்பவும், சிறப்புடைய வீரர்கள் நெருங்கி வர போர்க்களத்தை விட்டு அகன்று அப்பால் சென்றார் குறைவிலா நிறைவாகிய குமரமூர்த்தி. 203

தாரகன் வதைப் படலம் முற்றிற்று

**ஆகத் திருவிருத்தம் 1531**

427

# 21. தேவகிரிப் படலம்

—oo—

மாகவந் தங்கள் கூளி வாய்ப்பறை மிழற்ற ஆடும்
ஆகவந் தங்கு மெல்லை யகன்றுசெங் கதிர்வேல் அண்ணல்
சோகவந் தங்கொண் டுள்ள சுரருடன் அனிகஞ் சுற்றி
ஏகவந் தங்கன் நின்ற இமகிரி யெல்லை தீர்ந்தான்.

பேய்கள் வாயல் பறையடிப்ப அதற்கு ஏற்ப பெரிய உடற் குறைகள் கூத்தாடு கின்ற போற்களத்தை விடுத்து நீங்கிச் சிவந்த ஒளிகாலுகின்ற வேலேந்திய எமது தலைவ ரான முருகக்கடவுள் இப்போ தங்கள் துயரங்கட் கெல்லாம் முடிவைக் கண்டு மகிழ் சிறந்து நிற்கும் தேவர்களோடு பூத சேனையானது சூழ்ந்து வரும்படியாக தான் வந்து சேர்ந்தருளிய இமயமலை எல்லையைத்தாண்டி அப்பால் சென்றருளினர். 1

அரியயன் மகத்தின் தேவன் அமரர்கள் இலக்கத் தொன்பான்
பொருதிறல் வயவரேனைப் பூதர்கள் யாரும் போற்றத்
திருநெடு வேலோன் தென்பாற் செவ்விதின் நடந்து மேல்பால்
இரவியில் இரவி செல்ல இமையவர் சயிலஞ் சேர்ந்தான்.

விஷ்ணுபிரான், பிரமதேவர் யாக அதிபனன இந்திரன் தேவர்கள் இலக்கத்து ஒன் பது வீரர்கள் இன்னும் போர் செய்யும் திறமை வாய்ந்த பூதங்கள் ஆகி உள்ளார் யாவரும் வணங்கிப் போற்றும்படியாக அருட்செல்வம் தரும் வேல்படையை ஏந்திய பெருமான் தென்திசைநோக்கித் தேர்மேலாகச் செவ்விதிற் சென்றுகொண்டிருப்ப அப் போது சூரியதேவன் அஸ்தமனமாக, அவ்வேளை எம்பிரான் தேவகிரி என்னும் மலையைச் சேர்ந்தருளினர். 2

ஒப்பறு சூர்பின் ஞேனை ஒருவன்வேல் அட்ட தன்மை
இப்புற வுலகின் உள்ளார் யாவரும் உணர்வர் இன்னே
அப்புற வுலகின் உள்ளார் அறிந்திட யானே சென்று
செப்புவ னென்பான் போலச் செங்கதிர் மறைந்து போனன்.

இப்போ ஒப்பு ஒருவர் கூறமுடியாதபடி விளங்கும் சூரபன்மனின் தம்பியான தாரகாசூரனை எல்லா உலகும் தான் ஒருவரான முருகப் பெருமான் திருக்கை வேல் சங்காரம் செய்ததை இந்தப்புறத்தில் உள்ளார் யாவரும் அறிவார்கள். ஆனல் அந்த மற்றைய புறத்தில் உள்ளார் அறியார்கள். அவர்கள் அறியும்படி நானே அதிவிரை வாகச் சென்று சொல்வேன் என்பான் போலச் சிவந்த கிரணங்களை உடைய சூரிய பகவான் மேற்குத் திசையில் மறைந்து போயினர். 3

பானுவென் றுரைக்குமேலோன் பகற்பொழு தெலாங்கைக்கொண்டான்
ஏனைய மதியப் புத்தேள் இரவினுக் கரச னுனன்
நானிவற் றிடையே சென்று நண்ணுவ னென்று செந்தீ
வானவன் போந்த தென்ன வந்தது மாலைச் செக்கர்.

சூரியன் என்னும் மேலவன் பகற்பொழுது எல்லாம் ஆட்சிகொண்டான். இராக் காலத்தில் சந்திரன் ஆட்சிக்கு வருவான். நான் ஏன் இடையில் ஆகுதல் ஆட்சி செய்யக் கூடாது? செய்யத்தான் வேண்டுமென பகல் இரவு என்னும் இரண்டின் இடையில்

மூன்று சுடர்கள் எனப்படும் சூரியன், சந்திரன், அக்கினி என்பவற்றில் அக்கினி தேவன் இவ்வாறு எண்ணிய வண்ணம் வந்துசேர்தல் போல மாலையில் செக்கர் வந்து சேர்ந்து கொண்டது. 4

வம்பவிழ் குமுத மெல்லா மலர்ந்திடு மாலை தன்னில்
வெம்படை பயிலத் தோன்றும் வேளுக்குத் தான்முன் வந்த
அம்புதி முரச மாயிற் ருகையால் தானும் வெற்றிக்
கொம்பென விளங்கிற் றென்ன எழுந்தது குழவித் திங்கள்.

வாசனை அவிழ்ந்து மலரும் குமுதமலர் எல்லாம் மலர்ந்திட்ட மாலைக் காலத்தில் கொடுமை தரும் மலர் பாணங்களால் உலகை மயக்கத்தோன்றுகின்ற மன்மதனுக்கு சமுத்திரம் முரசப்பறையாயிற்று ஆகவே அந்த மன்மதனுக்குதானும் அவன் வெற்றியை ஊதுவதற்கு கொம்பு வாத்தியம் ஆக வேண்டும் என்று வந்தது போல இளம் பிறை வானத்திலே தோன்றியது. 5

ஏற்றெதிர் மலைந்து நின்ற இகலுடை யவுணர் தம்மேற்
காற்றெனத் தேர்க டாவிக் கடுஞ்சமர் புரிந்த வெய்யோன்
மாற்றருஞ் செம்பொன் மார்பில் வச்சிரப் பதக்கம் இற்று
மேற்றிசை வீழ்ந்த தென்ன இளம்பிறை விளங்கிற் றன்றே.

சூரிய தேவன் தான் உதிக்கும் போதும் அஸ்தமனமாகும் போதும் தம்முடன் போர் செய்யும்படி எதிரேற்றுச் சண்டையிடவந்த மந்தேகர் என்னும் அசுரர்கள்மீது தனது தேரைச் செலுத்திச்சென்று கடும் போரினைச் செய்தபோது அச் சூரிய தேவனுடைய மாற்றில்லாத செம்பொன் மயமான மார்பில் அணிந்து கொண்ட வச்சிரப் பதக்கம் அறுந்து தவறி மேற்குப்புறத்தே வீழ்ந்ததோ! எனும்படி இளம்பிறை வானத்தில் விளங்கியது. 6

கானத்தின் ஏனம் ஒத்த கனையிருட் சூழல் மற்றவ்
வேனத்தின் எயிற்றை யொத்த திளம்பிறை அதனைப் பூண்ட
கோனொத்த தண்டம் அந்தக் கூரெயி றுகுத்த முத்தந்
தானொத்து விளங்கு கின்ற தாரகா கணங்க ளெல்லாம்.

ஆகாயத்தில் உள்ள இருளானது ஓர் பன்றியை ஒத்துக் கொண்டது. அந்த இருளான பன்றியின் கொம்பு என்னும்படி இளம்பிறை விளங்கியது. அதன் மேலான ஆகாயம் அப்பன்றியின் கொம்பினை அணிந்த சிவபிரானை ஒத்தது. சிவபிரான் பன்றிக் கொம்பைப் பிடுங்கி அணியும்போது உதிர்ந்த முத்துக்களைப் போல விளங்கியது வானத்தில் காணப்படும் நட்சத்திரங்கள் எல்லாம். 7

அல்லிது போந்த காலை ஆரமா மாலை யென்னக்
கல்லென அருவி தூங்குங் கடவுள் வெற் பொருசாரெய்தி
மெல்லி தழ் வனசத் தேவும் விண்டுவும் விண்ணின் தேவும்
பல்லிமை யோருஞ் செவ்வேள் பதமுறை தொழுது சொல்வார்.

இப்படியான இயற்கை அழகுடன் இராவானது வந்த நேரத்து அருவியாறுகள் அணியப்பட்ட மாலை எனும் படியாக, கல் எனும் குறிப்போசையுடன் பெருகி ஓடிச் செல்லும் கடவுட் தன்மை வாய்ந்த தேவகிரி என்னும் மலையின் ஒருசார் எய்தி மெல்லிய இதழுடைய தாமரை மலர்மேல் இருக்கும் பிரமதேவரும், விஷ்ணு மூர்த்தியும், வான உலக அரசனான இந்திரதேவனும், இன்னும் பல தேவரும் எல்லாருமாகக் கூடி செவ்வொளிபரந்த திருமேனி கொண்ட முருகப்பிரான் சேவடியினைப் பணிந்து சொல்வார்கள். 8

வன்கணே யுடைய சூர்பின் வருத்திட இந்நாள் காறும்
புன்கணே யுழந்தே மன்ஞன் பொருப்பொடு முடியச் செற்ருய்
உன்கணே வழிபா டாற்ற உன்னினம் இன்ன வெற்பின்
தன்கணே இறுத்தல் வேண்டுந் தருதியிவ் வரம தென்ருர்.

பெருமானே வன்மையும் கொடுமையும் உடைய சூரபன்மன் தம்பியான தாரகன் வருத்திட இந்நாள் வரையும் கொடும் துன்பத்தை நாங்கள் அனுபவித்துள்ளோம். அவ்வாறு வருத்திய அவனைத் தேவரீர் அவன் துயரம் செய்வதற்குத் துணையாய் இருந்தகிரவுஞ்ச மலையோடும் இறக்கும்படி செய்தீர். எங்கள் துயர வாழ்வை நீக்கி எல்லையில்லாப் பேரின்பம் பெறும்படி வைத்தருளிய உமக்கே எமது வழிபாடு செய்ய நினைந்தனம் அதற்கு தகுதி கொண்ட இம் மலையிடத்து தேவரீர் சிறிது தங்கல் வேண்டும். இந்த ஒரு வரத்தை தருவாயாக என வேண்டினர்கள் இவர்கள் யாவரும். 9

பசைந்திடும் ஆர்வங்கொண்ட பண்ணவர் இனைய தன்மை
இசைந்தனர் வேண்டு மெல்லை எஃகுடை அண்ணல் அங்கண்
அசைந்திடு தன்மை யுன்னி அருள்செய வதுகண் டன்னேர்
தசைந்துமெய் பொடிப்பத் துள்ளித் தணப்பில் பேருவகை பூத்தார்.

எம் பிரானிடத்து பெருகுகின்ற அன்பினை உடைய தேவர்கள் இவ்வாறு யாவரும் ஏகமனதுடன் இசைந்து வேண்டுதல்புரிய வேல்படையத் திருக்கரத்து ஏந்திய பெருமான் தேவர்கள் தங்கள் உள்ளம்கொண்ட அன்பின் நிலையினை திரு உளங்கொண்டு அவ்வாறு பூசை புரிவதற்கு இசைவு கொள்ளலும் அத்தன்மையைக் கண்ட தேவர் யாவரும் மகிழ்வால் உடலம் பூரித்து உரோமம் சிலிர்ப்பத் துள்ளி குறைவிலாத பெரும் மகிழ்வு கொண்டார்கள். 10

ஒண்ணில வுமிழும் வேலோன் ஒலிகழற் ருனையோடுங்
கண்ணனை முதலா வுள்ள கடவுளர் குழுவி னேடும்
பண்ணவர் கிரிமேற் சென்று பாங்கரில் தொழுது போந்த
விண்ணவர் புனைவன் றன்னை விளித்திவை புகல லுற்ருன்.

இவ்வாறு இவர்கள் மகிழ்வாக, அழகிய நிலவு ஒளி காலுகின்ற வேல் படையை ஏந்திய முதல்வரான முருகப்பெருமான் ஒலிசெய்யும் வீரக் கழலை உடைய பூதசேனையோடும் விஷ்ணுமூர்த்தி முதலாக உள்ள கடவுளர்கள் கூட்டத்தோடும் தேவர்கள் மலை எனும் தேவகிரி மேலாகச் சென்றருளி அங்கு ஆறுமுகப் பெருமான் பக்கராக கும்பிட்டபடி வந்த தேவர் தச்சனுனவனை அழைத்து அவனைப்பார்த்து இந்த வார்த்தை எம்பிரான் சொல்லியருள்கிருர். 11

புகலுறுஞ் சூழ்ச்சி மிக்கோய் புங்கவ ராயு ளோருந்
தொகலுறு கணர்கள் யாருந் துணைவரும் யாமும் மேவ
அகலுறும் இனைய வெற்பின் அருங்கடி நகர மொன்றை
விகலம தின்றி இன்னே விதித்தியால் விரைவின் என்ருன்.

யாவராலும் பாராட்டப்பெறும் புத்திசாதுரியத்தில் சிறந்த தேவதச்சனே! தேவர்களாய் இங்கு உள்ள யாவரும் தொகையாகப் பரந்த பூதகணங்கள் யாவும் எனது துணைவர்களும் யாமும் இவ்விடத்து மேவி இருத்தற்கு அகலம் பொருந்திய இத் தேவமலை இடத்தே எவரும் அணுகமுடியாத காவலுடைய நகரம் ஒன்றை குறைபாடு யாவும் இன்றி நீ விரைவில் செய்வாயாக என்ருர். 12

வேறு

குழங்கல் வேட்டுவக் கோதையர் ஆடலுங்
கழங்கு நோக்கிக் களிப்பவன் மற்றிது
வழங்கு மெல்லை வகுப்பனென் றன்னவன்
தழங்கு நூபுரத் தாள்பணிந் தேகினுன்.

குழங்கல் பூமாலை யணிந்த வேட்டுப்பெண்களது நடனத்தையும் கழங்காடலையும் பார்த்து மகிழ்கின்ற நாயகரான சுப்பிரமணியப் பெருமான் இந்த வார்த்தையைச் சொல்லும் அளவில் அப்படி வகுத்து அமைப்பேன் பெருமானே! எனக் கூறிய வண்ணம் ஆறுமுகப் பிரானின் சிலம்புகள் ஒலிக்கும் திருவடி மீது பணிந்து எழுந்து தேவதச்சன் சென்முன். 13

மகர தோரணம் வாரியின் மல்கிய
சிகர மாளிகை செம்பொன்னின் சூளிகை
நிகரில் பற்பல ஞெள்ளல்கள் ஈண்டிய
நகர மொன்றினை யாயிடை நல்கினுன்.

மகர தோரணங்கள், வாயில்கள் நிறையப்பெற்ற தூபியினை உடைய மாளிகைகள் செம்பொன்னுல் ஆகிய சூளிகைகள் நிகர்பிறிது காணமுடியாத பல பல வீதிகள் பொருந்திய ஓர் அழகிய நகரத்தினை அவ்விடத்துச் தேவதச்சன் செய்துமுடித்தான். 14

அவ்வ ரைக்கண் அகன்பெரு நொச்சியுட்
கைவல் வித்தகக் கம்மியர் மேலவன்
எவ்வெ வர்க்கும் இறைவன் இருந்திடத்
தெய்வ தக்குல மொன்றுசெய் தானரோ.

இவ்வாறு அந்தமலைக்கண் அகன்று சூழ்ந்து விளங்கும் மதில் ஒன்றின் நடுவணுக எவ்வெவர்க்கும் மேலானவரான எமது ஆறுமுகப்பெருமான் இருந்திடுவதற்கு என ஓர் தேவாலயத்தை மிக்க சாதுரியமாகச் செய்கின்ற தனது வித்தக மேம்பாட்டுடன் அழகிற்கு அழகாய்ப் பொருந்தும்படி அமைத்தான். 15

மாற்ற ரும்பொன் வரையுள் மணிக்கிரி
தோற்றி யென்னச் சுடர்கெழு மாழையின்
ஏற்ற கோட்டத் திழைத்தனன் கேசரி
ஆற்று கின்ற அரதனப் பீடிகை.

மாற்றில்லாத பொன் மலையில் உள்ளே ஓர் இரத்தினமலை தோற்றி உள்ளது எனும் படியாக சுடர் கொண்டுவிளங்கும் பொன்னுல் ஏற்புற அமைந்த கோவிலின் நடுவில் சிங்கங்கள் சுமக்கின்ற ஓர் இரத்தின சிம்மாசனத்தை எம்பிரான் வீற்றிருப்ப தற்காக செய்தருளினுன் தேவதச்சன். 16

இனைய தன்மையும் ஏனவும் நல்கியே
மனுவின் தாதை வருதலும் மள்ளர்தம்
அனிக மோடும் அமரர்கள் தம்மொடும்
முனையின் வேற்படை மொய்ம்பன்அங் கேகினுன்.

இவ்வாருக அமைகின்ற ஆசனமும் ஆலயமும் நகரமும் ஏனைய தீர்த்தங்கள் சோலைகள் யாவும் படைத்து உண்டாக்கி அம் மலைமேல் விளங்கும்படி செய்து விட்டு மனு என்னும் தச்சனின் தந்தையான தேவதச்சன் திரும்பி வருதலும் ஆறுமுகப் பிரான் பூத

சேனைகளோடும் வீரவாகு முதலிய வீரரோடும் தேவர்கள் உடனேயும் அந்நகரத்துட் சென்றருளினர்.

மனு என்பவன் உலக படைப்புக்கு ஏதுவானவன். பிரளய கால முடிவில் அந்த அந்த பிரளயம் செல்ல பின்னர் இவன் பிரமதேவரின் கட்டளையின்கீழ் அமைந்து நின்று தானும் உலகங்களைப் படைப்பான். இப்போ நாம் இருக்கும் இந்தப் பூமியை படைத்தவன் வைவஸ்வத மனு என்பவன். இப்பிரளயம் தோறும் மனுக்கள் பலராகச் சொல்லப்பெறுவர். சுவாயம்பு மனு, வைவஸ்த மனு என்பவராவர். ஒரு மனுவின் காலம் இவ்வளவு என குறிக்கப்பட்டுள்ளது. இவர்கள் யாவரும் பிரமதேவரின் வழித்தோன்றல் எனப்படுவர். இந்த மனுவின் தந்தைதான் தேவதச்சன். உலக தோற்ற வரலாற்றில் பிரமதேவர், உபபிரதேவர், விஸ்வ பிரமர் (தேவதச்சன்), மனு ஆகிய இந்த வரிசையில் எண்ணப்படுவர். இவர்கள் சிருஷ்டியாகிக்கு முதல்வர்களாவர்.

கோவில் வழிபாட்டு அர்ச்சனையில் வைவஸ்த மனு காலத்து என்று அந்தணர்கள் சங்கற்பத்தில் கூறுதல் நோக்கற்பாலது. 17

அறுமு கத்தவன் அந்நகரேகியே
துறும லுற்றிடுந் தொல்பெருந் தானையை
இறுதி யற்ற இருக்கைகொள் ஆவணம்
நிறுவ லுற்று நிகேதனத் தெய்தினன்

ஆறுமுகமுடைய பெருமான் அவ்வாறு கந்த மலையில் தமக்கு என ஆக்கப்பட்ட அந்த நகரத்து சென்று சேர்ந்தருளி நெருங்கிய தனது பழைய பெருஞ்சேனையை முடிவில்லாது காணப்படும் பல மாளிகைகள் கொண்ட வீதிகளில் தங்கும்படியாகச் செய்து பின்னர் தாம் தமது கோவில் உள்ளாக பிரவேசித்தார். 18

இரதம் விட்டங் கிழிந்துபொற் பாதுகை
சரணம் வைத்துத் தணப்பரும் வீரருஞ்
சுரரு முற்றுடன் சூழ்தரத் துங்கவேல்
ஒருவன் மற்றவ் வுறையுளின் ஏகினன்.

அங்கு சென்றதும் தனது தேரைவிடுத்து இறங்கி வீரவாகுதேவரால் இடப்பட்ட பொன் மிதியடி மிது தமது திருப்பாதத்தை வைத்து, விட்டு நீங்கமுடியாத வீரரான வீரவாகு தேவரும் மற்றும் தம்பியரும் உடன்கூடிவர கூரிய வேல் ஏந்திய ஏகனாகிய ஆறுமுகமுடைய பெருமான் தனது கோயிலுட் சென்றான். 19

ஊறில் வெய்யவர் யாரும் ஒரோவழிச்
சேற லெய்திச் செறிந்தென வில்விடு
மாறில் செஞ்சுடர் மாமணிப் பீடமேல்
ஏறி வைகினன் யாரினும் மேலையோன்.

ஓர் குறையும் இல்லாத சூரியர்கள் எல்லாரும் ஒரு வழியாகப் புறப்பட்டுச் சென்று கூடி இருந்தால் ஒப்ப ஒரே ஒளிமயமானதும் மாறுபாடு இல்லாததுமான செவ்வொளி பரந்த இரத்தின சிம்மாசனத்தின் பீடமேல் ஏறியருளினான் யாவரிலும் மேலான எமது ஆறுமுகக்கடவுள். 20

பொழுது மற்றதிற் பூவினன் ஆதியாம்
விழுமை பெற்றிடும் விண்ணவர் யாவருங்
குழும லுற்றுக் குமரனை அவ்விடை
வழிப டத்தம் மனத்திடை உன்னினர்.

இவ்வாருக சுவாமி சிம்மாசனப் பீடமேல் எழுந்தருளியதும் அதுபொழுதில் ஒழுக்க நிலேயால் உயர்வைப் பெற்றுக்கொண்ட தாமரை மலர் மேல் இருக்கும் பிரமதேவர் முதலாகச் சொல்லப்படும் தேவர்கள் யாவரும் எம்பிரானே வந்து கூடிக்கொண்டு எமது குமரப்பெருமானே அவ்விடத்தில் தாங்கள் வழிபடுவதற்கு தமது மனத்தில் நினேந்தார். 21

புங்க வன்விழி பொத்திய அம்மைதன்
செங்கை தன்னிற் சிறப்பொடு தோன்றிய
கங்கை தன்னைக் கடவுளர் உன்னலும்
அங்கண் வந்ததை அப்பெரு மாநதி.

இவ்வாறு அருச்சனே புரிந்து வழிபாடு செய்ய நினேந்த தேவர்கள் முன் எம்பிராட்டியின் திருக்கை விரலிலே இருந்தும் தோன்றிய கங்காநதியை இக் கடவுளர் அங்கு வரும்படி நினேந்தார்கள். நினேந்த மாத்திரத்தே அக்கங்கை உடன் அங்கு சேர்ந்து கொண்டது.
22

சோதி மாண்கலன் தூயன பொற்றுகில்
போது சாந்தம் புகைமணி பூஞ்சுடர்
ஆதியாக அருச்சனேக் கேற்றன
ஏதும் ஆயிடை எய்துவித் தாரரோ.

ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் நல்ல இரத்தின ஆபரணங்கள் தூயதான பொன்னுலான பட்டாடைகள் பூக்கள், சந்தனம், தூபம், மணி, பிரகாசமுடைய தீபம் ஆதியாகச் சொல்லப்படும் அருச்சனேக்குரிய பொருள்கள் யாவற்றையும் அவ்விடத்தே சேரும்படி செய்தார்கள்.
23

அண்டர் தொல்லே அமுத மிருத்திய
குண்ட முற்ற குடங்கர் கொணர்ந்திடா
மண்டு தெண்புனல் வானதி தன்னிடை
நொண்டு கொண்டனர் வேதம் நுவன்றுளார்.

தேவர்கள் யாவரும் தாங்கள் உண்ணும்படிக்கென முன்னர் அமுதம் வைக்கப் பட்டிருந்த பருத்த குடங்கள் முழுவதையும் கொண்டு வந்து அக்குடங்களே நீர்விட்டுப் பெருகிஓடுகின்ற ஆகாய கங்கையில் கைகளால் தாழ்த்து நீரினே எடுத்துக் கொள்கிருர்கள் வேதவாக்கியங்களேச் சொல்லிய வண்ணமாகவே.

நாம் சுவாமி திருவுருவச் சிலேக்கு அபிஷேகம் செய்யும்போது குடங்களில் நீர் நிறைத்து குப்பம் வைத்து மந்திரமோதி அர்ச்சித்து வழிபாடாற்றி பின்னர் அக் கும்பங்களே வீதியால் மந்திரம் சொல்லியவாறு எடுத்து வந்து அபிஷேகம் செய்வது போலவே தேவர்களும் எம்பிரானுக்கு அபிதுஷகம் செய்ய அமிர்தம் இருந்த ஆடங்களே எடுத்துக் கங்கை நீரில் ஆழ்த்தி நீர் எடுக்கும்போது வேதம் ஓதினுர்கள் எனப் பட்டது.
24

அந்த வெல்லே அயன்முதற் றேவரும்
முந்து கின்ற முனிவருஞ் சண்முகத்
தெந்தை பாங்கரின் ஈண்டி யவன்பெயர்
மந்திரங் கொடு மஞ்சன மாட்டினுர்.

அந்த நேரத்து பிரமதேவர் முதல் தவேர் யாரும் எம்பிரானுக்குத் தொண்டு பணிவிடை செய்வதில் முந்திக்கொள்கின்ற முனிவரும் எல்லாரும் ஆறுமுகத்துடன் விளங்கும் எந்தை பெருமான் பக்கராக இந்த கங்கா நீர் நிறைந்த குடங்களுடன் வந்து சேர்ந்து அவனுடைய பெயர் ஆகிய சாடச்சர மந்திரம் சொல்லி உள்ளப்பரிவோடும் எமது பகவானுக்கு அபிடேகஞ் செய்தார்.
25

வெய்ய வேற்படை விண்ணவற் கின்னணம்
ஐய மஞ்சனம் ஆட்டிமுன் சூழ்ந்திடுந்
துய்ய பொன்னந் துகிலினை நீக்கியே
நொய்ய பஃறுகில் நூதனஞ் சாத்தினர்.

கொடுமை கொண்டு கொடுமையை அறவே நீக்கியருளும் வேற்படையை உடைய பன்னிருகை கொண்ட பகவானுக்கு இவ்வாறு மிக அருமைப்பாடான அபிஷேகஞ் செய்து முன்னே எம்பிரான் அணிந்திருநத தூயதான பொன்னுற் செய்த ஆடையை நீக்கியே பின்னர் மிருதுவான பல வஸ்திரங்களைப் புதிதாகவும் அழகு பொருந்தும் படியும் சாத்தினர்கள்.

**நூதனம் சாப்தினர்:-** இஃது எம்பிரானுக்கு இவர்கள் ஆடை அணிந்து அழகுபடுத்திய தன்மை எவராலும் இவ்வண்ணம் செய்ய முடியாததோர் சிறப்பாக இருந்தமையாலும் இவ்வண்ணம் இவர்கள் சாத்திய பட்டாடை இதுகாறும் எவராலும் அறியப் படாததொன்றாயும் இருந்தது. அதோடு எவர் கையாலும் செய்யாதபடி இயல்பாகவே பொருந்திய செவ்விய பட்டாடை என்பதனாலும் நூதனம் எனக் கொள்ளப்பட்டது. 26

வீற்றோர் சீய வியன்றவி சின்மிசை
ஏற்றி வேளை இருத்தி அவன்பெயர்
சாற்றி மாமலர் சாத்தித் தருவிடைத்
தோற்று பூவின் தொடையலுஞ் சூட்டினர்.

பின்னர் எம்பிரானை வேறான அழகுடைய இன்னுமோர் சிம்மாசனத்தின் மீது ஏற்றி அதின் மீது பெருமானை இருத்தி அவருடைய பெயரைச் சொல்லியவாறு அழகிய பூக்களைச் சாத்தி அதன்பின் தேவவிருட்சங்கள் தருகின்ற பூக்களினால் தொடுக்கப்பட்ட பூமாலைகளையுஞ் சூட்டினர்கள்.

பன்னிரு புயத்து அப்பனுடைய நாமமோ அளவற்றது. அவை சொல்லவே உளங் குளிரும். இதனை அப்பர் சுவாமிகளும் ''பேர் ஆயிரம் பரவி வானோர் எத்தும் பெம்மானை பிரவிலா அடியார்க்கு என்னும் வாராத செல்வம் வருவிப்பானை'' எனவும் கூறுவர். 27

செய்ய சந்தனத் தேய்வைமுன் கொட்டினர்
ஐய பாளிதம் அப்பினர் நாவியுந்
துய்ய நானமுந் துன்னமட் டித்தனர்
மெய்யெ லாமணி மேவரச் சாத்தினர்.

எம்பிரான் திருமேனிமேல் மலர் மாலைகள் அணிந்து அழகுறச் செய்தபின் செம்மையான சந்தனக்கலவையை திருமேனிமேல் பூசிச் சாத்தினர்கள். அருமையான பச்சைக் கற்பூரத்தை அப்பினர்கள். புனுகையும் தூய்மையான கஸ்தூரிக் குழம்பையும் பெருமளவு பூசினர்கள் அப்பனுடைய மேனி எல்லாம் அழகாகத் தோன்றும் பொருட்டு பல ஆபரணங்களைச் சாத்தினர்கள். 28

சந்து காரகில் தண்ணென் கருப்புரங்
குந்து ருக்கமொண் குக்குலு வப்புகை
செந்த ழற்சுடர் சீர்மணி ஆர்ப்பொடு
தந்து பற்றித் தலைத்தலை சுற்றினர்.

சந்தனம், கூரிய அகில், குளிர்மையான கற்பூரம், குந்துருக்கம், ஒளியான குங்கிலியம் ஆகிய இவைகளைச் சேர்த்து ஒன்ருக்கிய தூபப்பொடியை இட்ட தூபத்தையும் சிவந்த ஒளிகாலும் சுடர் கொண்ட தீபங்களையும் சிறப்பான தங்கள் கையில் பிடித்து மணியை அடித்தவாறு இவற்றை ஏந்தியவாறு மும்முறையாகச் சுற்றிக் காண்பித்தார்கள். 29

இத்தி றத்தவும் ஏனவும் எஃகவேற்
கைத்த லத்துக் கடவுட்கு நல்கியே
பத்தி மைத்திற ஞற்பணிந் தேத்தினர்
சித்தி சங்கற்பஞ் செய்திடுஞ் செய்கையோர்.

இத் திறத்தவான பூசையையும் பின்னர் ஆசீர்வாதம் முதலியவற்றையும் கூரிய எஃகினல் ஆகிய வேலேந்திய கடவுக்கு காண்பித்து மிகவும் பத்திமைகொண்ட திறத்தினல் விஸ்ணுபிரான் பிரமதேவர் இந்திரன் தேவர்கள் யாவரும் வணங்கியே பின்னல் வரும் சூரசங்காரம் தேவர் சிறை மீட்பு ஆகியன சிறப்புற அமையும்படியான சித்திகளை சங்கற்பித்தவாறு பூசையை எமது செல்வருக்கு ஆற்றினர்கள்.

பூசை புரியும்போது சங்கற்பம் செய்தல் வழக்கம். சங்கற்பமானது இப் பூசையாது நிறைவாக வேண்டும் என செய்யப்படுவதோ அதன் தன்மையை முன்னர் செபித்துத் தான் செய்வது. தீர்க்காயுள் செல்வம் புகழ் வீரம் மங்களம் இப்படியானவைகளை கோவில் வழிபாட்டிலும் பூசையின் முன்னும் பின்னரும் சங்கற்பமாகக் கொள்வது காணப்படுவது. இதேபோலத் தேவரும் எம்பிரானைப் பூசித்தபின் தங்களுக்கு அசுரர் கொடுமை நீங்க சித்தியாகும் பொருட்டுச் சங்கற்பம் செய்தனர். இதனை நக்கீர தேவரும் திருமுருகாற்றுப்படையில் ''வேண்டினர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட'' எனச் சுவைபடக் கூறுகின்ருர். 30

தேவு கொண்ட சிலம்பினில் பண்ணவர்
ஏவ ருங்குழீஇ யின்னணம் பூசனை
யாவ தாற்ற வதுகொண் டமர்ந்தனன்
மூவி ரண்டு முகனுடை மொய்ம்பினேன்.

தெய்வீகத் தன்மை வாய்ப்பப் பெற்றமையால் தேவகிரி என்னும் பெயர்கொண்ட மலையில் தேவர்கள் யாவரும் கூடி இவ்வண்ணம் பூசனையானதை சிறப்புற அமையும்படி செய்து நிற்ப அப்பூசையை எமது கடவுளான ஐயர் பெருமான் ஏற்றுக்கொண்டு அங்கு அமர்ந்தருளினர் ஆறு திருமுகங்களுடன் அகிலமெங்குமாய் நிறைந்து சர்வ வலிமையுடன் சிறந்தருளும் முருகக்கடவுள். 31

அமரர் வெற்பில் அயிற்படை யேந்திய
விமல னுற்றது சொற்றனம் மேலினிச்
சமரி டைப்படு தாரகன் தந்திடு
குமரன் உற்றது மற்றதுங் கூறுகேம்.

தேவர்கள் மலையான தேவகிரியில் வேற்படையை ஏந்தியருளிய என்றும் இளமை நீங்காத எமது குமரப்பெருமான் இவ்வாறு தேவர் பூசையை ஏற்று அங்கு அன்று இரவில் தங்கியதை முனிவர்களே! இங்கு நாம் சொன்னேம். இனி மேலே போர்க்களத்திலே எம்பிரானது வேல்பட்டு இறந்துள்ள தாரகாசுரன் பெற்ற மைந்தனை அசுரேத்திரன் அங்கு மாயபுரிக்கு வந்த வரலாறும் அங்கு நிகழ்ந்ததும் மற்றும் செயல்களைப்பற்றியுங் கூறுவேன் என சூதமுனிவர்பிரான் நைமிசாரிணியத்து முனிவர்க்கு மீண்டும் சொல்லத் தொடங்குவார். 32

தேவகிரிப்படலம் முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் - 1,563.

# 22. அசுரேந்திரன் மகேந்திரஞ் செல் படலம்

எந்தை குமரன் எறிந்ததனி வேற்படையாற்
தந்தி முகமுடைய தாரகன்றுன் பட்டதனை
முந்துசில தூதர் மொழிய அவன்தேவி
அந்தமிலாக் கற்பிற் சவுரி அலக்கணுற்ருள்.

எந்தைபிரானுன குமரக்கடவுள் எறிந்த தன்னந்தனியான வேற்படையால் யானை முகமுடைய தாரகாசுரன் இறந்ததனை முன்னே கண்ணுற்ற சில தூதர் ஓடிச்சென்று தாரகாசுரனுடைய மனைவியான சவுரி என்பாளிடம் சொல்லுதலும் அளவுபடுத்த முடியாத பெருங் கற்பினை உடைய அன்னவள் அதுகேட்டபோதே ஆற்ருணுத் துயரங்கொண்டு மனஞ் சோர்ந்தாள். 1

வாழ்ந்த துணைவியர்கள் மற்றுள்ளோர் எல்லோருஞ்
சூழ்ந்து பதைத்திரங்கத் துன்பத் துடனேகி
ஆழ்ந்த கடல்படியும் அம்மென் மயிலென்ன
வீழ்ந்து கணவன் மிசையே புலம்புறுவாள்.

இந்த வார்த்தையைக் கேட்டதும் தாரகனுடைய மற்றைய வாழ்க்கைத் துணைவியர் ஆன மற்று எல்லோரும் சூழ்ந்து பதைபதைத்து இரங்கி அழுதவண்ணம் துன்பத்துடன் செல்ல சவுரியானவள் ஆழ்ந்த கடலில் தாழ்ந்து அவலமுறும் அழகிய மயில் போலச்சென்று போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் தனது கணவன் உடல் மீது வீழ்ந்து புலம்பி அழுவாள். 2

சங்குற் றிடுசெங்கைத் தண்டுளவோன் றன்பதமாம்
அங்குற் றனைஅன் றயன்பதஞ்செல் வாயன்று
கங்கைச் சடையான் கயிலையிற் சென் ருயல்லால்
எங்குற் றனைஅவ் விறைவன் அருள் பெற்ருயே.

''ஐயா! என் நாயகனே! என்னை விட்டுப் பிரிந்தாயோ! நீ பாஞ்சன்யம் என்னும் சங்கினை ஏந்திய கையினை உடைய நாராயணரின் வைகுந்தம் சென்ருயலை; பிரம தேவரின் உலகில் செல்வாயன்று. ஆகவே நீ கங்கை நதியைச் சடைமீது அணிந்து கொண்ட சிவபிரான் திருக்கைலாய மலையே சேர்வாய் அல்லாமல் ஈசன் அருள்கொண்ட நீ வேறு எங்கு சேர்ந்திருக்க முடியும்.'' 3

உந்துதனி யாழி உனக்கணியாத் தந்தோனும்
இந்திரனும் ஏனை இமையவர்க ளெல்லோரும்
அந்தகனுர் தாமும் அனைவர்களும் இன்றன்றே
சிந்தைதனி லுள்ள கவலையெலாந் தீர்ந்தனரே.

''உன்னோடு போர் செய்தபோது உன்னைக் கொல்லும்படி செலுத்தப்பட்ட தான் அரிதாகப் பெற்றுக்கொண்ட தனியான சக்கரப் படையை உனக்கு ஆபரணமாக அணியும்படி விட்ட விஷ்ணு மூர்த்தியும், இந்திர தேவனும் ஏனைய தேவர்களுமாகிய எல்லோரும், உயிர்களைப் பாசம் வீசிப் பிடிக்கின்ற இயமதர்மனுமாகிய எல்லாருமாக இன்றல்லவோ தங்கள் சிந்தையில் உள்ள கவலை யாவும் நீங்கிக் கொண்டார்கள்,''

பொன்னகரோர் யாரும் புலம்புற் றிட அவுணர்
மன்னவரோ டென்பால் வரும்பவனி காணுதேன்
துன்னு பறவையினஞ் சூழத் துயிலுமுனே
இன்ன பரிசேயோ காண்பேனுல் எம்பெருமான்

''தேவ உலகில் உள்ளோர் யாவரும் புலம்பி அழுது கொள்ள அசுர சேனுதிபதிகளுடன் கம்பீரமாக எஞ்ஞான்றும் என்னிடத்து வரும் பவனியான காட்சியைக் கண்டு கொண்ட உம்மை இன்று சேனுதிபதிகள் சூழ்வதற்குப் பதிலாகப் பறவைகள் நெருங்கிச் சூழும்படி நித்திரை செய்வார்போல் இருக்கும் உனை இந்த நிலையிலோ காண்பேன் எம் பெருமானே! தாரகனே!'' எனவும் சொல்லியழுவாள். 5

புல்லா திருந்தனையான் புல்லுவது கண்டுமது
பல்லோருங் காணிற் பழியென் றொழிந்தாயேல்
மல்லாருந் தோளாய் மயக்குற்றேற் கோருரையுஞ்
சொல்லாய் வறிதே துயின்றாய் துனியுண்டோ.

''ஐயா! நான் உன்னை அணைத்து ஈங்கிருப்பவும் நீ மட்டும் என்னை அணையாது இருக்கின்றாயே. ஐயோ! ஏன் இது வேளை நீ என்னைத் தழுவினுல் பல்லோரும் இந்த வெளியில் உன் செயலைக் காண்பார்களாதலாற் பழி எய்தும் என்னும் தன்மையாலோ என்னைத் தழுவவில்லை ஐயனே! மலை போலும் தோள்கொண்டானே! எனக்கு ஒன்றுந் தெரியவில்லையே! மயங்கிப் புலம்பும் எனக்கு ஒரு வார்த்தையும் சொல்லாயோ! ஏன் ஐயா! ஒரு சொல்லுமின்றித் துயில்கின்றீர்? ஐயோ! என் மீது ஏதேனும்வெறுப்பு உண்டோ?'' 6

மையோ டுறழும் மணிமிடற்றோன் தந்தவரம்
மெய்யா மெனவே வியந்திருந்தேன் இந்நாளும்
பொய்யாய் விளைந்ததுவோ பொன்றினையால் என்றுணைவா
ஐயோ இதற்கோ அருந்தவமுன் செய்தாயே.

''மைபோலும் கருமையான கண்டத்தை உடைய சிவபிரான் உனக்குத் தந்த அழியாத நிறைவான ஆயுள் கொண்ட பொய்யா வரத்தினுல் நீ என் செய்தாலும் இறவாய் என்று இறுமாந்து இருந்தேனே? ஆனுல் இப்போ அந்த வரம் யாவும் பொய்யாகும் வண்ணம் போய் விட்டதோ! என் கணவா! நீ இறந்துவிட்டாயே! ஐயய்யோ! இப்படி இறப்பதற்குத் தானு அரியதவத்தை முன் நீ செய்தாய்!'' 7

தன்னே டிணையின்றித் தானே தலையான
முன்னேன் அருள்புரிந்த முன்னேன் இளவல்வரின்
என்னே அவனே டெதிர்ந்தாய் இறந்தனையே
அன்னே விதிவலியை யாரே கடந்தாரே.

''தனக்கு வேறு இணையில்லாது தானே தலையான முன்னைப்பழம் பொருளான சிவபிரானின் புதல்வராய், விநாயகப்பெருமான் தம்பியாய் விளங்கும் முருகப்பிரான் போர்செய்யவரின், ஐயோ அவரின் உயர்வு இப்படியாகவென அறிந்தும் ஏனே அவரோடு போர் செய்ய எதிர்ந்தாய்? உன் செயலை நினைந்து நொந்து ஆவது என்? தலையில் எழுதிய இப்படியாக முடியும் என்ற விதியின் வலியை கடந்தாரும் யாவர்?'' 8

சந்தார் தடம்புயத்துத் தானவர்கள் தற்சூழ
அந்தார் கமழும் அரியணைமேல் வைகியநீ
சிந்தா குலத்திற் செருநிலத்தில் துஞ்சினையால்
எந்தாய் புகலாய் இதுவுஞ் சிலநாளோ.

வாசங் கமழும் சந்தனப் பூச்சு நிறையும் தோளினை உடைய அசுரர் பலர் உன்னைச் சூழ இருப்ப, அழகிய பூமாலைகள் நிறையும் தோளுடன் வந்து சிம்மாசனத்தின் மேலாக இருக்கின்ற என் கணவா! நீ இப்போது பெருங்கவலை சூழப் போர்க்களத்திலே இறந்து பட்டாய்! ஐயனே சொல்வாய்! நீ இந்த உலகிலே இப்படி முன்னிருந்த உனது பெருவாழ்வும் சில நாள் மட்டுமோ?'' 9

வென்றிமழு வேந்தும் விமலன் உனக்களித்த
துன்றும் வரத்தியலை யுன்னினையாற் சூழ்ச்சியினை
ஒன்று முணரா துயிருந் தொலைந்தனையே
என்று தமியேன் இனியுன்னைக் காண்பதுவே.

''வெற்றி தரும் மழுவாயுதத்தைத் திருக்கையில் ஏந்தியருளிய சிவபிரான் உனக்குக் கொடுத்த மேலோங்கிய வரத்தின் இயல்பை நினைந்தாயே ஒழிய அவர் கொடுத்த வரத்தின் இயல்பையும் நீக்கச் சூழ்ச்சி ஒன்று வரும் என்பதை நீ அறியாது உனதுயிரும் தொலைந்தாய். ஐயா! என் நாதனே! தமியேன் என்று இனி உன்னைக் காண்பதுவே! 10

வன்னி விழியுடையான் மைந்தன் அமர்புரிய
முன்னைவலி தோற்று முடிந்தா யெனக்கேட்டுப்
பின்னுமிருந் தேனென்னிற் பேரன் புடையோர்யார்
என்னினியான் செய்கேன் எனவே இரங்குற்றாள்.

''அக்கினியைக் கண்ணாக உடைய பெருமான் திருக்குமாரன் போர்புரிய, முன்னைக் காலம் தொட்டு நிகழ்ந்து வந்த உனது வலியை நீ தோற்று முடிந்தாய் எனக்கேட்டும் பின்னும் நான் இருந்தேன், என்று சொன்னால் இனி உன்மீது பேரன்புடையோர் வேறுயார்? ஐயையோ! நான் என் செய்வேன்'' என தாரகன் மனைவியான சவுரி புலம்பி அழுதாள். 11

மற்றைத் துணைவியரும் வந்தீண்டி மன்னவனைச்
சுற்றிப் புலம்பித் துயருற் றிடும்வேலை
அற்றத் தினனாகி ஆசுரத்தின் பாற்போன
கொற்றப் புதல்வன் வினவிக் குறுகினனால்.

மற்றுள்ள தாரகனின் வைப்பாட்டிகள் என்னும் மனைவியரும் வந்து கணவனைத் தீண்டித் தம் கணவனைச் சுற்றிப் புலம்பித் துயருற்று நிற்கும் நேரத்து முன்னர் தந்தையான தாரகனோடு ஏதோ திருப்தி இல்லாக் காரணத்தால் சிங்கமுகாசுரனுடைய ஆசுரம் என்னும் நகரத்தின்பால் சென்ற கொற்றம் மிக்க புதல்வனான அசுரேந்திரன் இங்கு வந்து சேர்ந்து கொண்டான். 12

தண்டா விறல்சேருந் தன்றாதை வீந்ததனைக்
கண்டான் உயிர்த்தான் கலுழ்ந்தான் கரங்குலைத்தான்
அண்டாத சோகத் தழுங்கினான் வெய்யகனல்
உண்டா னெனவீழ்ந் தயர்ந்தான் உணர்ந்தனனே.

குறைவில்லாத வலிமைகொண்ட தாரகன் ஆன தனது தந்தை இறந்த தன்மையினை அசுரேந்திரன் கண்டான். பெருமூச்சுடன் பதைத்து அழுது கண்ணீர் சொரிந்தான்; கைகளை உதறினான்; தாங்கமுடியாத சோகத்தால் வருந்தினான்; கொடிய தீயை உண்டான் எனும்படியாக வீழ்ந்து அயர்ந்து கிடந்தான்; பிற்பாடு தெளிந்தான். 13

என்றுமுறு இன்ன லிடைப்பட் டவன்எழுந்து
சென்றுதன தன்னைத் திருத்தா ளிடைவீழா
உன்றலைவன் யாண்டையான் ஓதாய்அன் னேயென்று
நின்று புலம்பி நினைந்திதனைய செய்கின்றான்.

எஞ்ஞான்றும் முன்னர்தான் அனுபவித்து அழியாத துன்பப்பட்டானாய் எழுந்து முன் புலம்பி அழுத தாயிடத்துச் சென்று தனது தாயின் சிறப்புடைய தாளில் வீழ்ந்து ''அம்மா! அம்மா! உன் நாயகன் எங்கே? எங்குற்றார் சொல்வாய்?'' என்று அவள் முன்பு நின்று புலம்பி அதன்பின் இதனை நினைந்து செய்கின்றான். 14

அன்னைமுத லோரை அகல்வித் தொருசாரில்
துன்னுதிரென் றேவித் தொலையாத தானவரில்
தன்னுழையோர் தம்மால் தழல்இந் தனமுதலாம்
மன்னு கருவி பலவும் வருவித்தான்.

தாய் முதலியோரை தந்தை உடலினைச் சூழ இருத்தலினின்றும் நீக்கி ''அப்பால் செல்லுங்கள்!'' எனச் சொல்லி அகல்வித்து ஒரு சாராக விடுத்து ''இங்கு இருங்கள்'' எனச் சொல்லி இறந்து போகாது தப்பி நின்ற அசுரரிற் சிலரை அங்கு நெருப்பு விறகு முதலியன கொண்டு வரும்படி செய்வித்து இன்னும் தந்தையின் ஈமக் கடன்களுக்கு வேண்டிய பொருள்களைச் சேகரித்தான். 15

வந்த பொழுதுதனில் வன்களத்தில் துஞ்சுகின்ற
தந்தைதனை முன்போல் தகவுபெற வொப்பித்தோர்
எந்திரத்தேர் மீதேற்றி ஈமத் திடையுய்த்துச்
சந்தனப்பூம் பள்ளி மிசையே தருவித்தான்.

எல்லாப் பொருள்களும் வந்த பொழுதில் வலிய போர்க்களத்தில் இறந்து கிடக்கின்ற தந்தையின் பிளவு பட்ட உடலை முன் போலத் தகவுடன் பொருந்தும்படி சேர்ப்பித்துப் பின்னர் அந்த உடலை ஓர் யந்திரம் இழுக்கும் தேர் மேல் தூக்கி ஏற்றுவித்துச் சுடு காட்டில் சேர்ப்பித்து அங்கு சந்தனக் கட்டை அடுக்கிய அழகிய பூஞ் சயனத்தின்மீது தாரகன் உடலை வைத்தான். 16

ஈமக் கடன்கள் இயற்றித்தன் றாதைதனைத்
தாமக் கனலால் தகனம் புரிந்திடலுங்
காமுற் றனனென் கணவனுடன் செல்வதற்குத்
தீமுற் றருதி யெனஅன்னை சென் றுரைத்தாள்.

ஈமக் கடன்கள் யாவும் இயற்றித் தன்னுடைய தந்தையாகிய தாரகனை தாம நெருப்பு (கொள்ளி வைத்தல்) வைத்துத் தகனம் புரிந்திடலும் அந்நேரத்து இதை நோக்கிய தாயான சவுரி ''மகனே! எனது கணவனோடு உடன் செல்வதற்கு நான் பெரிதும் விருப்பங் கொண்டேன். அதற்காக எனக்கும் இப்போது நீ நெருப்பமைத்து தருவாய் ஆக'' என சவுரி மகனிடம் சென்று சொன்னாள். 17

நற்ருய் மொழிந்ததனைக் கேட்டு நடுநடுங்கிப்
பொற்ருள் பணிந்தென்னைப் போற்றி யிருத்தியெனச்
சொற்ரு னதுமறுத்துத் தோகை சுளித்துரைப்ப
அற்ருக வென்ருன் அசுரேந் திரன்என்பான்.

நல்ல தாய் மொழிந்த இந்த வார்த்தையைக் கேட்டு அசுரேந்திரன் மிகவும் நடுநடுங்கி ஏங்கி அவளின் பொன்ஞன பாதத்தில் வீழ்ந்து வணங்கி ''அம்மா! என்னை தனியே விட்டு நீ பிரிய எண்ணுமல் என்னைப் பேணி வளர்த்து இருப்பாயாக'' எனச் சொன்ஞன். அதைச் சவுரி மறுத்து ''என் சொன்ஞய் மகனே'' எனக் கோபத்துடன் ''கற்புடைய மனைவிக்கு கணவனே மைந்தனே பெரிது'' என பேசுதலும் அதைக் கேட்ட அசுரேந்திரன் ''அம்மா அப்படியே செய்வேன்'' எனப் பணிந்து உரைத்தான்.

ஏனையதோர் தாயர்களும் யாமுங் கணவனுடன்
வானகம்போய் எய்த வழங்கென் றிடவிசையா
ஆன படியே அழலமைக்க அன்னையராம்
மானனையார் எல்லோரும் வான்கனலி னுள்புக்கார்.

''இங்குள்ள மற்றத் தாய்மார்களும் யானும் எனது கணவன் சென்ற இடத்திற்குச் செல்ல நெருப்பமைத்துத் தருவாய்'' எனச் சவுரி செப்ப அப்படியே அசுரேந்திரன் நெருப்பமைத்து வைப்ப அப்போது மானை ஒத்த சாயல் கொண்ட தாரகன் மனைவி யான சவுரியும் மற்றைய மனைவிமாரும் சென்று அந்நெருப்பில் புகுந்து தமது உடலம் நீக்கிஞர்கள். 18

புக்கதொரு காலை புலம்பியே அந்நகரை
அக்கணமே நீங்கி அசுரேந் திரனென்போன்
தக்க கிளைஞர்சிலர் தற்சூழ வேயேகி
மைக்கடலுள் வைகும் மகேந்திரமூ தூர்உற்ருன்.

தாயான சவுரியும் மற்றையோரும் நெருப்பில் சென்று புகுந்தபிற்பாடு இத்துய ரம் மிக்க செயலை அசுரேந்திரன் பார்த்துப் புலம்பி அழுது அக்கணமே அந்த நகரத்தை விட்டு நீங்கி அசுரர் சிலர் தன்னைச் சூழ்ந்து வரும்படியாகச் சென்று இருண்ட கருமை நிறங்கொண்ட சமுத்திர நடுவணுகத் தோன்றிய சூரபன்மனின் தலைநகரான வீரமகேந் திரபுரத்துப் புக்கான். 20

உளந்தளர் வெய்தித் தொல்லை ஒளிமுகன் இழந்து மேனி
தளர்ந்தனன் வறியன் போன்று தாரக முதல்வன் தந்த
இளந்தனி மைந்தன் வல்லே யேகலும் அனைய நீர்மை
வளந்திகழ் தொல்லை வீர மகேந்திரத் தவுணர் கண்டார்.

உள்ளம் தளர்ச்சிகொண்டு முன்புள்ள முகத்தின் ஒளி இழந்தவஞய் மேனி வாடிய நிலையில், மிக வறிய ஒருவனைப்போன்று தாரகாசுரன் பெற்ற இளமையுடன் கூடிய ஒரேயொரு மகஞன அசுரேந்திரன் என்பான் விரைவாக இக்கோலத்துடன் நகரினுள் பிரவேசித்தலும் அவனை வளம் எல்லாம் திகழ்ந்து விளங்கும் வீரமகேந்திர புரத்து அசுரர் கண்டார்கள். 21

உரங்கிளர் அவுணர் காணூஉ ஒய்யெனத் துளங்கி யேங்கிக்
கரங்களை விதிர்த்துக் கண்ணீர் கானெறி படர்ந்து செல்லப்
பெருங்கட லுடைந்த தேபோல் பேதுற வெய்தியாற்ற
இரங்கியிக் குமரனுற்ற தென்கொலென் றிசைக்க லுற்றார்.

நெஞ்சில் உரங்கொண்ட அசுரர் இத்தன்மையைக் கண்ணுற்று ''ஐயோ இதென்ன கோலம்'' என நடுக்கத்துடன் ஏங்கி கைகளை உதறி கண்ணீரானது காலால் வழிந்தோட பெரிய கடல் உடைந்ததுபோல உரக்கச் சத்தமிட்டு பேதுறல்கொண்டு பெரிதும் இரங்கியழுது ''இந்தக் குமரனுக்கு உற்றது என்கொலோ'' என்று இசைக்கலுற்றார்.

வஞ்சமுங் கொலையுஞ் செய்யான் மற்றிவன், இதற்குத் தாதை
வெஞ்சினங் கொடுபோ கென்று விடுத்தனன் போலும் என்பார்
தஞ்சம தாகி யுள்ள தாரகன் கொடுமை நோக்கி
அஞ்சியே அவனை நீங்கி யடைந்தனன் கொல்லோ என்பார்.

''இந்த அசுரேந்திரன் வஞ்சனையும் கொலையும் ஒருபோதும் செய்யமாட்டான். அதற்காக இவன் தந்தை தாரகாசுரன் இவன்மேல் கொடுங்கோபம் கொண்டு ''நீ இங்கு வேண்டாம், போய்விடு'' என்று விடுத்தனன்போலும் எனச் சில அசுரர் சொல்லுவார்கள். ''இந்த அசுரேந்திரனுக்கு தஞ்சமாய் இருக்கின்ற தாரகாசுரனின் கொடுமை நோக்கி தகப்பனுக்கு பயந்து அவனை விட்டு நீங்கி இங்கே இப்பிள்ளை வந்தான் போலும்'' என்பார்கள் சிலர். 23

சீரொடு துறக்கம் நீத்துத் தேவர்கோன் உருவ மாற்றிப்
பாரிடை யுழந்தான் என்பார் மற்றவன் பரனைவேண்டிப்
பேரிகல் மாயம் வன்மை பெற்றுவந் தடுபோர் செய்யத்
தாரகன் இறந்தான் கொல்லோ தளர்ந்திவன் வந்தான் என்பார்.

''சிறப்பான தேவ உலக வாழ்வை விடுத்து தேவேந்திரன் தனது உருவத்தை மாற்றி இப்பூமியில் உழன்று திரிந்தான் என்பார்கள். ஆகவே அந்த இந்திரன்தான் சிவபிரானைவேண்டி தவம்செய்து பெரிய வலிமையையும் மாயத் தன்மைகளையும் பெற்றுக்கொண்டு வந்து கொடிய போரைச் செய்ய தகப்பனான தாரகன் இறந்தான் போலும். ஆகவே இப்பிள்ளை தளர்ந்து கவலை மிகுதியால் சோர்வுடன் இங்கு வந்தான்'' என்பர் சில அசுரர். 24

மாண்கிளர் தார கப்பேர் மன்னவன் பகைஞர் ஆற்றும்
ஏண்கிளர் சமரில் வீந்தான் என்பதற் கேது வுண்டால்
சேண்கிளர் நிவப்பா லெங்குந் தெரிகிர வுஞ்ச வெற்பில்
காண்கிலம் அவுணர் தம்மைப் பூழியே காண்டும் என்பார்.

மாட்சிமை மிகுந்த தலைவனான தாரகாசுரன் அவனது பகைவர்கள் செய்கின்ற இறுமாப்புமிக்க போரில் இறந்திருக்க வேண்டும். இதற்கு நம்பத்தகுந்த காரணம் உண்டு அது எவ்வாறெனில் ஆகாயம் வரையும் கிளர்ந்து வளர்ந்து எல்லா இடங்களிலும் காணப்படுகின்ற கிரவுஞ்சமலையில் அசுரர்களை காணுகின்றிலோம். அதற்குப் பதிலாக புழுதியும் புகையுந்தான் காண்கின்றோம்'' என சில அசுரர்கள் கூறினார்கள். 25

**பையர வணையில் துஞ்சும் பகவன தாழிதன்னை**
**ஐயபொன் னணிய தாக அணிந்திடும் அவுணனோடு**
**மொய்யமர் புரிவார் யாரே முரணொடு வெம்போர் சில்லோர்**
**செய்யினும் அவரால் அன்னோன் முடிகிலன் திண்ணம் என்பார்.**

சிலர் சொல்வார் ''நீங்கள் சொல்வதை நம்பமுடியாது ஏனென்றால் பாம்பாகிய சயனத்தில் யோக நித்திரை செய்யும் விஷ்ணு பகவானின் சக்கரப்படையை அழகிய தன் பொன்மேனியில் ஆபரணமாக அணிந்துகொண்ட தாரகாசுரனோடு மிக்கவலி உடைய போரைச் செய்வார் யார்? மிக்க வலிமையோடு கொடிய போரைச் சிலவர் செய்தாலும் அவர்களாலே தாரகன் ஒருபோதும் முடிவாகி இறக்கமாட்டான் இது திண்ணம்.'' என்பார்கள் சிலர். 26

**அங்கையை ஒருவன் வாளால் அறுத்திடப் புலம்பி நங்கோன்**
**தங்கைவந் தமரர் தம்மைச் சயந்தனைச் சிறைசெய் வித்தாள்**
**இங்கிவன் தானுந் துன்புற் றேகுவான் இன்றும் அற்றே**
**புங்கவர் தமக்கே இன்னல் புரிகுவன் போலும் என்பார்.**

தனது சகோதரியான அசமுகியின் கையை வாளாலே ஒருதேவன் வெட்டிவிட அசமுகி புலம்பிவந்து எத்தனையோ தேவரை, இந்திரன் மகனை சயந்தனைச் சிறை செய்வித்தாள். இங்கு இன்று அசுரேந்திரனும் துன்பப்பட்டு வருகிறான். ஆகையால் இவனும் இன்னும் எத்தனையோ தேவர்கட்கே துன்பஞ் செய்வான் போலும்'' என் பார்கள். 27

**மணிகிளர் எழிலி வண்ணன் மற்றவ னொடுபோர் ஆற்றான்**
**அணியுல களித்த செம்மல் அமர்த்தொழில் சிறிதுந் தேறான்**
**தணிவறு செயிர்மீக் கொண்ட தாரக னொடுபோர் செய்யின்**
**இணையகல் ஈசன் அன்றி யாவரே வல்லர் என்பார்.**

நீலமணிபோலும் எழில் கொண்ட நீலமேனியை உடையவிஷ்ணு மூர்த்தி இந்த தாரகாசுரனோடு போர்செய்ய மாட்டான். அழகிய உலகங்களைப் படைக்கின்ற பிரம தேவர் தாரகனோடு போர்செய்ய சிறிதேனும் நினையார். பயம் ஏதும் இல்லாதபடி கோபநிலை கொண்ட தாரகனோடு போர்செய்யின் தனக்கு இணையாக வேறொருவர் இல்லாத சிவபிரானையன்றி வேறுயார் அவனோடு போர்செய்ய வல்லார்'' என்பர் சிலர்.

**இமையவர் கருடர் நாகர் இயக்கர்கந் தருவ ரேனோர்**
**நமரிடு பணிகள் ஆற்றி நாடொறுந் திரிந்தார் அற்றால்**
**சமரெதிர் இழைப்பார் இன்றித் தளர்ந்தனம் இந்நாள் காறும்**
**அமரினி யுளது போலும் ஐயம தில்லை என்பார்.**

தேவர்கள், கருடர்கள், நாகர்கள், இயக்கர்கள், கந்தருவத்தர்கள், ஏனைய கணத்தவர்கள் எமது குலத்தவரான அசுரர் இட்ட பணியைச் செய்து நாள் தோறும் இங்கு வந்து திரிவார்கள். அதனாலே எம்மோடு எதிர்த்துப் போர் செய்வதற்கு ஏற்ற வர்கள் இல்லாமல் தளர்ந்தோம். இனி எங்களுக்குப் போர் வந்துவிட்டது போலும்; இதற்கு இனி ஐயமில்லை'' என்பார் சிலர். 29

சேயிவன் அலக்கண் எய்திச் செல்லுறு பரிசா லங்கண்
ஆயதோர் தீங்கு போலும் ஐயமின் றிதனை நாடி
நாயகன் விடுக்கு முன்னம் நம்பெருந் தானை யோடு
மாயமா புரிகா றேகி அறிந்தனம் வருதும் என்பார்.

''இந்த அசுரேந்திரனுன பிள்ளை இப்படியாக பெருங் கலக்கத்துடன் சோம்பி வருதலால் ஏதோ ஒரு தீங்கு ஆகி இருக்க வேண்டும், இதற்கு ஐயம் இல்லை. ஆகவே அவ்விடத்தில் என்ன நடந்தது பார்த்து வாருங்கள் என எமது நாயகனுன சூரபன்மன் எம்மை விடுக்கு முன்பாகவே நாம் மாயபுரி என்னும் நகர்வரையும் சென்று பார்த்து வருவோம்'' என்று கூறினுர் சிலர். 30

எனைப்பல இனைய வாற்று லியாவரும் அவுணர் ஈண்டி
மனைப்படு பைத லோடும் வயின்வயின் உரையா நிற்ப
நினைப்பருந் திருமிக் குள்ள நெடுமகேந் திரத்திற் சென்று
வனைப்பெருங் கழற்காற் சூர மன்னவன் கோயில் போந்தான்.

என்று இவ்வாறு பலவார்த்தைகளை தாம் நினைக்கக் கூடிய அளவு நினைந்து சொல்லிய அசுரர் யாவரும் ஒன்ருகக் கூடி மனதின்கண் பதைப்புடன் வகை வகையாகப் பேசி நிற்ப எம்மால் நினைக்கவும் முடியாத செல்வச் சிறப்புள்ள வீரமகேந்திர புரத்திற்குச் சென்று வீரக்கழல் அணிந்த பாதமுடைய அவுணர் அரசனுன சூரபன்மனது அரண்மனை முன்பாக சென்ருன் அசுரேந்திரன். 31

போந்துதா ரகன்றன் மைந்தன் பொள்ளெனப் படர்த லோடும்
வாய்ந்தபே ரவைய மன்றில் வரம்பிலா அவுணர் போற்ற
ஏந்தெழில் அரிகள் தாங்கும் எரிமணித் தவிசின் மீக்கண்
வேந்தர்கள் வேந்தன் சூரன் மேவிவீற் றிருந்தான் மாதோ.

சூரபன்மன் அரண்மனையுட் சென்று தாரகன் புதல்வனுன அசுரேந்திரன் அதி விரைவாகச் செல்லலோடும் தனக்கென பல சிறப்புக்களுடன் வாய்க்கப் பெற்ற சபையில் அளவுகாண முடியாத அசுரர் போற்றி வணங்கும் படியாக அசுரர் தலைவனுன சூரபன்மன் அழகிய சிங்கங்கள் சுமக்கின்ற இரத்தின சிம்மாசனத்தின் மேலாக அரசற்கு அரசனுன சூரபன்மன் மேவிவீற்றிருந்தான். 32

வீற்றிருந் தரசு போற்றும் வேந்தனை யெய்தி யன்னுன்
காற்றுணை முன்னர் வீழ்ந்து கரங்களால் அவற்றைப் பற்றி
ஆற்றவும் அரற்றல் செய்ய அவுணர்கோன் அதுகண் டைய
சாற்றுதி புகுந்த தன்மை தளர்ந்தனை புலம்ப லென்ருன்.

இவ்வாறு மேன்மையுடன் விளங்கி வீற்றிருந்து அரசு செய்கின்ற சூரபன்மனை அசுரேந்திரன் கண்டபோதே கிட்டே ஓடிச்சென்று கிட்டி அவன் காலடியில் வீழ்ந்து தனது கைகளால் காலைப் பிடித்துக்கொண்டு மிகவும் துன்பப்பட்டுக் கதறிப் புலம்பிச் சத்தமிட்டு அழுதலும் அதைக்கண்ட சூரபன்மன் கேட்பான் ''ஐயா தாரகன் மகனே! என்ன உனக்கு நேர்ந்தது? அதைச் சொல். இப்போது நீ தளர்ந்து புலம்பாதே!'' எனக் கூறினுன் சூரபன்மன். 33

**என்றலும் மைந்தன் சொல்வான் இந்திரன் புணர்ப்பால் ஈசன்**
**வன்றிறற் குமரன் பூதவயப்படை தன்னோ டேகி**
**உன்றன திளவல் தன்னை ஒண்கிர வுஞ்ச மென்னுங்**
**குன்றொடும் வேலாற் செற்றுக் குறுகினன் புவியி லென்றான்.**

என்று சூரபன்மன் சொல்லலும் அசுரேந்திரன் சொல்வான் ''ஐயனே! கேள். இந்திரதேவனுடைய சூழ்ச்சியால் சிவபிரானுடைய மிகவலிமை உடையதோர் குமரன் பூதங்கள் என்னும் வெற்றிகொண்ட படைகளோடு இப்போது பூமியிலே தோன்றி உனது தம்பியாகிய தாரகனை அவன் வாழ்ந்த கிரவுஞ்சம் என்னும் மலையுடன் வேலாலே கொன்று பின்னர் இப்பூமியில் வந்துகொண்டிருக்கின்றார்'' என்றான்; 34

**வெய்யசூர் அதனைக் கேளா விழுமிதென் றுருமின் நக்குச்**
**சையமாம் அவுண னோடு தாரக வலியோன் றன்னை**
**மையுறழ் கண்டத் தண்ணல் மைந்தனோ அடுதல் செய்வான்**
**பொய்யிது வெருவல் மைந்த உண்மையே புகறி என்றான்.**

கொடிய சூரன் அதனைக்கேட்டவுடன் ''நன்றாயிருக்கிறது'' என்று இடிபோன்ற சத்தத்துடன் சிரித்துச் சொல்கிறான். ''கிரவுஞ்ச மலையான அசுரனோடு தாரகனை நஞ்சு கொண்ட கண்டத்தை உடைய சிவபிரான் மகனோ கொல்வான்; நான் ஒருபோதும் நம்பேன். இதுபொய். அட மகனே! பயப்படாதே! உண்மையைச் சொல். என்ன நடந்தது?'' என்றான் சூரன். 35

**தாதைகேள் சரதம் ஈது தாரகத் தந்தை தன்னை**
**மேதகு கிரவுஞ் சத்தை வேல்கொடு பரமன் மைந்தன்**
**காதினன் சென்றான் ஈமக் கடன்முறை எந்தைக் காற்றி**
**மாதுயர் கொண்டு நின்பால் வந்தனன் என்றான் மைந்தன்.**

அப்போது அசுரேந்திரன் சொல்வான் ''பெரிய தந்தையே! கேள். நான் சொல்வது முழுவதும் உண்மை. தாரகனாகிய எனது தந்தையையும் மேன்மை கொண்ட கிரவுஞ்ச மலையையும் தனது வேற்படையை விடுத்து பரமசிவன் மைந்தரான முருகக்கடவுள் கொன்றுவிட்டு அப்பால் சென்றார். ஆகவே நான் இறந்த தந்தைக்கு ஈமக்கடன் யாவும் செய்தபின்னர் சொல்லொணாத பெரும் துன்பத்துடன் இங்கு வந்தேன்'' என்றான்;

**தோட்டுணைவ னும்இளவல் துஞ்சினன் எனுஞ்சொல்**
**கேட்டலும் உளத்திடை கிளர்ந்தது சினத்தீ**
**நாட்டமெரி கால்வபுகை நண்ணுவன துண்டம்**
**ஈட்டுபொறி சிந்துவன யாக்கையுள் உரோமம்.**

தனது தோள்த்துணைபோலும் நின்ற தாரகன் இறந்தான் என்னும் சொற்கேட்டலும் சூரபன்மனுடைய உள்ளத்திலே கோபாக்கினி மூண்டது. கண்கள் நெருப்பைக் கக்குவனவாயின; மூக்கு புகை தள்ளுவதாயிற்று; அவனுடைய உடம்பில் உள்ள உரோமங்கள் பொறிதள்ளிக்கொண்டு நிற்பனவாயின; 37

**நெறித்தபுரு வத்துணைகள் நெற்றிமிசை சென்ற**
**கறித்தன எயிற்றினிரை கவ்விஅத ரத்தைச்**
**செறித்தன துடித்தன தெழித்தஇதழ் செவ்வாய்**
**குறித்தது மனங்ககன கூடமும் முடிக்க.**

நெற்றிப் புருவங்கள் சுருக்கிட்டு நெற்றிமேற் சென்றன. பற்கள் முழுமையும் ஒன்றோடொன்று நெருமிக் கறித்தன. நெருமிய பல் கீழ்ச் சொண்டைக் கடித்தது, சொண்டுகள் சுழன்று துடித்தன. வாயானது உரக்கச் சத்தமிட்டது. சூரன் மனமானது அண்டங்கள், உலகங்கள் அனைத்தையும் முடிக்க எண்ணியது. 38

இவ்வகை சினத்தெரி யெழுந்துமிசை கொள்ள
அவ்வெரியின் ஆற்றலை யவித்ததது போழ்தில்
வெவ்வினைகொள் தாரகன் மிசைத்தொடரும் அன்பால்
தெவ்வர்புகழ் சூரனிடை சேர்ந்ததுயர் ஆழி.

இவ்வாருகச் சூரபன்மனுக்குக் கோபத் தீயானது எழுந்து மேற்கொள்ள உடனே அவனுடைய கோபம் என்னும் நெருப்பு தன் வலியை மேற்கொள்ளாதபடி தனது தம்பி இறந்தான் என்ற தன்மையில் தம்பி மேலாகக்கொண்ட வினையின் சார்புடைய பாசம் என்னும் அன்பால் அப்போது பகைவர் யாவராலும் புகழப்படும் சூரபன்மனிடத்து எழுந்து நின்ற சகோதரபாசம் என்னும் துயரமான சமுத்திரம் தடுத்தது. சூரன் கொண்ட கோபம் என்னும் நெருப்பை தம்பி இறந்த கவலை என்னும் கடல் அணைத்து விட்டது. ஆகவே கோபம் தோன்றினும் துயரம் அதை மேற்கொண்டது.

துப்புநிகர் கண்புனல் சொரிந்தநதி யேபோல்
மெய்ப்புறம் வியர்த்தமுகம் வெள்ளமவை யீண்டி
அப்புணரி யானதுய ராழியது வென்றே
செப்புபொரு ளுண்மையது தேற்றியது போலும்.

தம்பி இறந்தான் என்னும் கவலையால் கண்கள் நீரை ஆறுபோல் சொரிந்தன. அவனுடைய மேனியின் புறத்தே வழிந்தோடியது. முகம் வியர்வைகொண்டது. கண்ணீரும் வியர்வையும் வெள்ளமாகக் கலந்தோடி அவன் மேனி முழுவதையும் நனைத்து விட்டபடியால் இவனுக்கு துயரம் என்னும் கடலே தன்னுள் ஆழ்த்தி நனைத்து விட்டது என்னும்படியான உண்மையைக் காட்டும்படி இருந்தது. 40

பருவர லெனும்புணரி யூடுபடி வுற்றே
அரியணை மிசைத்தவறி அம்புவியில் வீழா
உருமென அரற்றினன் உணர்ந்ததனை யஞ்சி
நரலையொடு பாரகம் நடுங்கியதை யன்றே.

கவலை என்னும் கடலினுள் படிந்து மூழ்கியவனுகி சூரபன்மன் தான் இருந்த சிம்மாசனத்தினின்றும் தவறிப் பூமியில் வீழ்ந்து இடிவீழ்ந்த சத்தம்போல ஓலமிட்டுக் கதறினன். இவன் கத்திய சத்தத்திலே அதனை உணர்ந்த இப்பூமியும் அதனில் வாழும் உயிர் யாவும் பயந்து ஏங்கி நடுக்கம் கொண்டன. 41

கூற்றுள நடுங்கிய குலைந்தது செழுந்தீக்
காற்றுவெரு வுற்றது கதிர்க்கடவுள் சோமன்
ஏற்றமிகு கோளுடு விரிந்தபுவி முற்றும்
ஆற்றிய பணிக்கிறையும் அஞ்சிய தலைந்தே.

இவனுடைய ஓலம் கேட்டு யமன் உள்ளம் நடுங்கினன்; அக்கினிதேவன் நிலை குலைந்தான்; காற்று பயந்தது; சூரியக் கடவுளும் சந்திரதேவனும் மேல் நிலையிலுள்ள மற்றக் கிரகங்களும் பயந்து நிலைதவறி ஓடின; இப்பூமி முழுவதையும் தாங்குகின்ற பாம்புகளுக்கு அரசுை ஆதிசேடன் முதலிய பாம்புகள் அஞ்சி உலைந்து அலைந்தன.

**பாங்கருறு தானவர்கள் பாசறையின் முழ்கி**
**ஏங்கினர் விழுந்தனர் இரங்கினர் தளர்ந்தார்**
**ஆங்கனைய போழ்துதனில் அந்நகர மெல்லாம்**
**ஓங்குதுயர் கொண்டுகலுழ் ஓசைமலிந் தன்றே.**

பக்கராக உள்ள அசுரர்கள் கவலையில் மூழ்கி ஏங்கினுர்கள்; விழுந்தார்கள்; ஓடினுர்கள்; தளர்வுற்றுர்கள். இப்படி இவர்கள் அவதிப்படும்போதில் அந்த வீரமகேந்திரபுர நகரமெல்லாம் பெருகி மேலிடும் துயர்கொண்டு அழத்தொடங்கியது. சூரன் அழுது அலற அவன் நகர அசுரர் அனைவரும் அழுதார்கள். 43

**ஆனபொழு தத்தினில் அழுங்கலுறு சூரன்**
**போனதொரு சீற்றவழல் புந்தியிடை மூள**
**மானமொடு நாணமட வல்லையில் எழுந்தே**
**தானுடைய ஏவலர் தமக்கிவை உரைப்பான்.**

இவ்வாருகிய நிலைகொண்ட நேரத்து கீழே விழுந்து கதறிய சூரன் தன்னைவிட்டுப்போன கோப நெருப்பு பழையபடி மனத்திலே மூள ''கீழே நானும் விழுந்தேனே'' என்ற வெட்கமும் ''எங்கள் குலத்து என் தம்பியை ஒரு குழந்தை கொன்றுனே; அப்படியோ!'' என்ற மானமும் மனத்தைப்போட்டு வருத்திக் கருக்க விரைவாக நிலத்தினின்றும் எழுந்து தன்னுடைய ஏவலாளர்களைப் பார்த்து அவருக்கு இதைச் சொல்வான். 44

**மன்னிளவல் ஆருயிரை மாற்றிவரு கந்தன்**
**தன்னிகல் கடந்துசய மெய்திவரல் வேண்டும்**
**என்னிரதம் வெம்படை இடுங்கவசம் யாவும்**
**உன்னுகணம் ஒன்றின்முனம் உய்த்திடுதி ரென்றுன்.**

''என்னுடைய தம்பி தாரகனைக் கொன்று உயிரை நீக்கிவிட்டு இங்கு வருகின்ற கந்தன் வலியை நான் சென்று போர் புரிந்து அடக்கி வெற்றிகொண்டு வரல் வேண்டும். ஆகவே நீங்கள் ஓடிச்சென்று என்னுடைய தேர், கொடியபடை அணியும் கவசம் யாவற்றையும் ஒரு கணப்பொழுதின் முன்பாக என்முன் சேர்ப்பீராக'' என்றுன். 45

**இறையிவை புகன்றிடலும் ஏவலர்கள் யாரும்**
**முறையிலவை உய்த்திடுதல் முன்னினர்கள் போனுர்**
**அறைகழ லுடைத்தகுவர் அன்னசெயல் நாடிக்**
**குறைவில்அனி கங்களொடு கொம்மென அணைந்தார்.**

சூரன் இவைகளைச் சொல்லவும் ஏவலாளர்கள் யாவரும் சொல்லிய முறைப்படி கொண்டுவந்து சேர்க்கும்வண்ணம் எண்ணி ஓடிப்போனுர்கள். வீரக்கழல் அணிந்த அசுர ஏவலாளர் வேறு உள்ளார் முன்போனவரின் செயலைக்கண்டு தாங்கள் போய் குறையில்லாத சேனையை அழைத்துக்கொண்டு விரைவாக அங்கு வந்தார்கள். 46

ஆயசெயல் காண்டலும் அமைச்சரில் அமோகன்
மாயைதரு சூரனடி வந்தனை புரிந்தே
ஏயதொரு மாற்றம திசைப்பல்அது கேண்மோ
தீயசின மெய்திட லெனுஇனைய செப்பும்.

இச்செயல் யாவற்றையும் அங்கு இருந்த மந்திரிகளிலே அமோகன் என்னும் மந்திரி எழுந்து மாயவள் பெற்ற மைந்தனை சூரனின் காலில் வீழ்ந்து வணங்கி முன்னின்று சொல்வான் ''அரசே! உமக்கு இப்போது ஏற்றதொரு வார்த்தையைச் சொல்வேன் அதைக் கேட்பீராக. கொடிய கோபம் கொள்ள வேண்டாம்'' என்று இந்த வார்த்தைகளை மந்திரி சொன்னான். 47

நஞ்சுறை படைகள் கற்று நவையுரு தொன்ன லாரை
வஞ்சினத் தெறியும் வீரர் வளநகர் அதனை மாற்றோர்
இஞ்சியைச் சூழ்ந்து போருக் கெய்தினும் எண்ணி யன்றி
வெஞ்சினத் தினைமேல் கொண்டு விரைந்தமர் இயற்றச் செல்லார்.

''நஞ்சு பூசிய படைகள் பயிலும் தன்மையைக் கற்று அதனால் தாழ்வின்றிப் பகைவர் யாவரையும் கோபத்தால் வெட்டி வீழ்த்தும் வீரர்கள் ஆனவர்கள் தங்கள் வளம் பொருந்திய நகரத்தின் மதிலைச் சூழ்ந்து பகைவர் போர் செய்யும்படி கிட்டே நெருங்கி வந்தாலும் எல்லாவற்றையும் ஆலோசித்து சிந்தனை செய்தலல்லாமல் திடீரெனக் கோபம் கொண்டு விரைவாக போர்செய்யச் செல்லார்.'' 48

குலத்தினை வினவி உள்ளக் கோளினை வினவி வந்த
நிலத்தினை வினவித் தொல்லோர் நெறியினை வினவிக் கொண்ட
சலத்தினை வினவிப் போர்செய் தானையை வினவி அன்னோர்
வலத்தினை வினவி யல்லால் மற்றென்று மனங்கொள் வாரோ.

''போர் செய்ய வந்தவரின் குலத்தை வினவி அறிந்து அவர்கள் உள்ளக் குறிப்பை அறிந்து எந்த ஊரில் இருந்து வந்தார் என்பதையும், முன் இவர்கள் போர் செய்யும் முறைமையையும் தெரிந்து, தாம் போருக்கு மேற்கொண்டுவரும் காரணத்தை வினவி அறிந்து, போர்செய்யவந்த சேனையின் தொகை அறிந்து, அவர்கள் வலிமையை அறிந்து அல்லாமல் வேறென்று தம் சிந்தையில் வீரரானவர் கொள்வாரோ.'' 49

வரத்தினில் வலியி னரோ மாயையில் வலியி னரோ
கரத்தினிற் படைக்க லத்தின் கல்வியில் வலியி னரோ
உரத்தினில் வலியி னரோ உணர்ச்சிசேர் ஊக்கமான
சிரத்தினில் வலியி னரோ என்றிவை தேர்வ ரன்றே.

''வரத்தில் பகைவர் வலியரோ, மாயை செய்வதில் வலியரோ, கைமேல் பிடிக்கும் படையில் வலியாரோ, படைக்கல, போர்த் தொழிற் கல்வியில் உயர்ந்தவரோ, நெஞ்சு வைராக்கியத்தில் உயர்ந்தவரோ, உணர்வான சூழ்ச்சிகளுடன் ஊக்கமும் கொண்ட சிரத்தை உடையவர்களோ என்று தமது பகைவரைப்பற்றிய வரலாறுகளை அந்த வீரர் முதல் தெளிந்து அறிவார்கள்.'' 50

**ஒற்றரைத் தூண்டி அன்னோர் உறுவலி உணர்வ ரேனும்
மற்றுமோ ரொற்றின் அல்லால் அன்னது மனத்துட் கொள்ளார்
சுற்றுறும் அனிக மன்றி யொருபுடை துவன்றிச் சூழும்
பெற்றியும் உளதோ என்ன வேயொரீஇத் தேர்வர் பின்னும்.**

''இவ்வாறான பகைவரின் இயல்புகள்பற்றிய நிலைபரங்களைத் தூதுவர்களை முன்னாகச் செலுத்தி இவர்கள் வலி, எண்ணம், கொள்கை, கோட்பாடு ஆகிய இவை யாவற்றையும் அறிந்தாலும் இன்னுமொரு கூட்டம் வேறு தூதரை அனுப்பி அவர்கள் வாக்கையும் உணர்ந்துதான், இரு தரமும் சென்ற வெவ்வேறு தூதுவர்கள் தெரிவித்த கருத்துக்களைக் கொண்டு பகைவர் நிலைமைபற்றி உணர்ந்துகொள்வார். போர் செய்யும்படி இங்கு கொண்டுவரப்பெற்ற இச்சேனையே அன்றிப் பின்னரும் வேறு உண்டோ எனவும் தூதுவரை இரகசியமாக விடுத்து அறிந்துகொள்ளுவர்.'' 51

**வினையது விளைவை யென்றும் மெல்லிய என்கை வெஃகார்
அனிகமும் அனையர் தன்மை அதனையுஞ் சிறுமைத்தாக
நினைகிலர் தமக்கு மாற்றார் நேர்ந்தவ ராகின் மேலோர்
முனையுறு புலத்தி லாற்றும் மும்மையும் முன்னிச் செய்வார்.**

''போரின் செயலாக வரும் விளைவை என்றும் வீரர் சுலபமாகக் கருதார். பகைவருடைய சேனையையும் அவர்களையும் சிறுமையாகவும் நினைக்கமாட்டார். தமக்குப் பகைவந்து சேர்ந்தால் எம் முன்னோர்கள் அப் பகையை ஒழிக்கமுதற்கண் கோபமில்லா உள்ளத்துடன் சாமம். பேதம், தானம் என்னும் மூன்று காரியங்களையும் மனதில் எண்ணிச் செய்வார்கள்.'' 52

**மூவியல் மரபி னாலும் முற்றுறா தொழிந்த காலைக்
கோவியல் மரபுக் கேற்பக் கொடுஞ்சினந் திருகிக் கொட்புற்
றேவியல் படைஞ ரோடும் படையொடும் எதிர்ந்து சுற்றி
மேவலர் பான்மை யுன்னி வெற்றிகொண் டணைவர் அன்றே.**

''சாமம், பேதம், தானம் என்ற மூன்றாலும் பகையை நீக்க முடியாதுபோன நேரத்து அரசு முறைமைக்கேற்பப் பெருங் கோபம் கொண்டு மாறுபாடாக எழுந்து செலுத்தப்படும் ஆயுதங்களோடும் சேனையோடும் படைகளோடும் எதிர்த்து சூழ்ந்து தம் மேல் வந்த பகைவரின் இயல்பையுன்னி அதற்கேற்பப் படை வகுத்து வெற்றி கொண்டு தண்டம் செய்ய வருவார்கள்;'. 53

**நேர்ந்திட வலியி லோரும் ஞாட்பிடை நேர்தி ரென்னார்
சேர்ந்திடும் போழ்தும் வேந்தர் செருவினைக் குறித்துச் சென்று
சார்ந்திடல் பழிய தன்றோ வெல்லினுந் தானை தூண்டிப்
பேர்ந்திடச் செய்வர் அஃதே பெறலரும் புகழ தன்றே.**

''தம்மோடு போர் செய்வதற்குக் கொஞ்சமேனும் வலியில்லாதவரும், ''போர் செய்ய வா'' என அழைத்தாலும் அப்போது தனக்கு நிகரற்ற வலியில்லாத ஒருவனோடு போர்புரிய அரசன் போனால் அது பழியாகும், அப்படித்தான் வெற்றிகொண்டாலும் அது ஒரு புகழுடைய வெற்றியல்ல, ஆகவே வலியில்லார் பகைவராகி வந்தால் தனது சேனையை அரசன் அவ் வலியில்லார்பாற் செலுத்தி வெற்றி கொள்

வதே புகழாகும்: அஃதன்றித் தான் சென்று வெற்றி கொள்ளல் புகழல்ல; அது இகழ்ச்சியாகும்.'' 54

ஈதரோ உலகி லுள்ள இறைவர்தம் இயற்கை யாகும்
ஆதலால் நின்னெப்பாரில் அழிவிலா அகில மாள்வாய்
ஏதமொன் றடையாய் வானோர் யாரையும் ஏவல் கொண்டாய்
போதனும் நெடுமா லோனும் வைகலும் புகழ வுற்றாய்.

''இதுதான் எங்கள் அரசனே! உலகில் உள்ள அரசர்கள் கடைப்பிடிக்கும் இயல்பான முறை. ஆனமையால், நீயோ எஞ்ஞான்றும் அழிவில்லாது உமக்கு ஒப்பார் ஒருவரின்றி ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆள்கின்றாய்! ஒரு வடு அல்லது பழி அடையாய்! தேவர்கள் எல்லாரையும் ஏவல் கொண்டாய்! தாமரைமலர் மேலான பிரமதேவரும் நாராயணக்கடவுளும் நித்தலும் புகழும் தன்மை கொண்டாய்.'' 55

இன்னதோர் மிடல்பெற் றுள்ள இறைவநீ அளிய னாகும்
பொன்னக ரவன்சொற் கேட்டுப் பூதமே படையா ஈசன்
நென்னலின் உதவும் பிள்ளை நேர்ந்திடின் அவனை வெல்ல
உன்னினை போதி யென்னின் உனக்கது வசைய தன்றே.

இவ்வாறாக வலிமைகொண்டுள்ள யாவர்க்கும் அரசனாகிய நீ மிகவும் எளிமையான அசுரேந்திரனின் சொல்லைக் கேட்டு நம்பி பூதங்களை தமக்குப் படையாக சிவபிரான் நேற்றுத் தோற்றுவித்த குழந்தை போர் செய்யும்படி வந்தால் அவரை ஒரு பெரிய வீரன் என நீயும் நினைந்து போர் செய்யப் போவாய் எனில் அது உனக்கு பெரியதோர் வசையாகும்.'' 56

மாற்றலர் வன்மை யோராய் மற்றவர் படைஞர் தங்கள்
ஆற்றலை யுணராய் நின்றன் அரும்பெருந் தலைமை யுன்னாய்
போற்றிடும் அமைச்ச ரோடும் புரிவன சூழாய் வாழா
சீற்றமங் கதுமேல் கொண்டு செல்லலுந் திறலின் பாற்றே.

''பகைவர்கள் வலிமை உணராய்; அவர்களின் படையின் வலியறியாய்; உன்னுடைய எவராலும் அடையமுடியாத பெரும் தலைமைப் பாடு எண்ணாய்; உன்பெருமை நினைந்து உன்னைப் போற்றி வாழவைக்க இருக்கும் மந்திரிகளோடு கூட மேல் செய்ய வேண்டியதைப்பற்றி ஆலோசித்து அறியாது வீணே வெறுங்கோப மிகுதியால் போர் செய்யச் செல்லுதலும் ஒரு திறமை உடைய செயலோ!'' 57

வீரமும் வலியும் மிக்கோ ராயினும் விதிவந் தெய்தில்
பாரிடை வலியிலோரும் படுத்திடப் படுவர் நின்போல்
பேருடல் அழியா ஆற்றல் பெறாமையால் இறுவா யெய்தத்
தாரகன் மழலை தேராச் சிறுவனுந் தடியப் பட்டான்.

''வீரமும் வலியும் மிக்கோர்கள் யாராயினும் விதிவந்து சேருமேல் இப்பூமியில் அவர்கள் வலியிலாத ஒரு சிறுவனினாலும் கொல்லப்படுவர், இதேபோல் உனது தம்பியாகிய தாரகன் பெரியவச்சிர உடலம், அழியாத வலிமை இவைகளைப் பெறாத தன்மையால் விதியான முடிவுவர ''இன்னும் மழலைச் சொல்லும் நன்றாகப் பேசத் தெரியாத குழந்தையால் கொல்லப்பட்டான்.'' 58

கலகல மிழற்றுந் தண்டைக் கழலடிச் சிறுவன் கைம்மாத்
தலையுடை இளவல் தன்னைத் தடிந்ததற் புதத்த தென்றால்
வலியரும் ஒருகா லத்தில் வன்மையை இழப்பர் ஆற்ற
மெலியரும் ஒருகா லத்தில் வீரராய்த் திகழ்வர் அன்றே.

''கல கல வெனச் சத்தமிடும் சிலம்பும் தண்டையும் அணிந்த சிறு பாதத்தை உடைய சிறுவனானவன் பெரிய யானை முகமுடைய தாரகாசுரன் என்னும் தம்பியைக் கொன்றது அற்புதம் என்று நினைக்க வேண்டாம். ஏனென்றால் உலக இயல்பின்படி வலியார்களும் ஒருகால் தம் வலிமையை இழப்பார்கள். மிகவும் மெலிந்து வலியிலா மல் இருப்பாரும் ஒருகால் வீரராய்த் திகழ்வார்கள்.'' 59

யாருநே ரன்றி வைகும் இறைவநீ சிறுவன் றன்மேற்
போரினை முன்னி யேகல் புகழ்மைய தன்றால் அன்னான்
சீரொடு மதுகை யாவுந் தேர்ந்துபின் னவனில் தீர்ந்த
வீரரைப் படையொ டேவி வெற்றிகொண் டமர்தி யென்றான்.

''யாரும் உனக்கு நேரின்றி வாழ்கின்ற அரசே! சூரபன்மனே! நீ சிறுவனான முருகன் மேலாகப் போரினைச் செய்ய வேண்டும் என நினைந்து செல்லுதல் உனக்குப் புகழ்தரும் காரியம் அல்ல. ஆகவே அக் குழந்தையின் சீர், வெற்றி, வீரம் யாவற்றையும் நீ ஆராய்ந்து அறிந்து பின்னர் அக் குழந்தைக்கு ஏற்ற வீரமுடைய ஒரு வீரனைப் பெரும் படையோடு போருக்குச் செலுத்தி வெற்றி கொண்டு இங்கு சிறந்திருப்பாய்'' என அமோகன் என்னும் மந்திரி கூறினான். 60

அறிதரும் அமைச்சர் தம்முள் அமோகன்இத் தன்மை தேற்ற
உறுதியீ தென்று சூரன் உள்ளுறு சினத்தை நீத்து
விறல்கெழும் அரிமான் ஏற்று விழுத்தகு தவிசின் ஏறிச்
செறிதரும் உழைஞர் தம்முட் சிலவரை நோக்கிச் சொல்வான்.

எல்லாவற்றையும் உணரும் புத்திக் கூர்மை உடைய மந்திரிகள் தம்மில் ஒருவனான அமோகன் இத்தன்மையான வாசகங்களைச் சொல்லி சூரபன்மனை தெளிவுபடுத்தலும்; அப்போது அதைக்கேட்ட சூரன், ''ஆம், நீ சொல்வது சரி, இது உறுதியான வார்த்தை'' என்று தான் உட்கொண்ட கோபத்தை விடுத்து வலிமைகொண்டதும் தான் முன்னர் அதினின்றும் தவறி விழுந்ததுமான அந்த மேலான அழகுகொண்ட சிங்காசனத்தில் திரும்ப ஏறி அமர்ந்துகொண்டு தன்பக்கராகச் சூழ்ந்து நின்ற ஏவலாளர் தம்முளே சிலரைப் பார்த்துச் சொல்வானாயினன். 61

பகனெடு மயூரன் சேனன் பரிதியம் புள்ளின் பேரோன்
சுகனிவர் முதலா வுள்ள தூதரைத் தருதி ரென்னப்
புகழ்புனை சூர பன்மன் பொன்னடி இறைஞ்சி யேத்தித்
தகுவர்கள் தலைவர் மற்றச் சாரணர் தம்மை உய்த்தார்.

''ஏவலாளரே! இப்போதே நீங்கள் விரைவாகச் சென்று உளவறியும் சாரணப் படைகட்குத் தலைவரான பகன், மயூரன், கருடன், சக்கரவாகன், சுகன் முதலாக உள்ள தூதரை என்முன்பு அழைத்து வாருங்கள் எனலும் உடன் அந்த ஏவலாளர் புகழ் படைத்த சூரபன்மனின் பொன்னான பாதத்தில் பணிந்து துதித்து உடன் புறப்

பட்டுச் சென்று அவன் சொல்லியவாறே அசுர சாரணர்களின் படைத்தலைவர்களைக் கொண்டுவந்து முன்னாக விடுத்தார்கள். 62

சாரணர் இனையர் போந்து தாள்முறை பணிந்து நிற்பச்
சூரனங் கவரை நோக்கித் துண்ணென நீவி ரேகிப்
பாரிடை வந்த கந்தன் பான்மையும் படைவெம் பூதர்
சேருறு தொகையும் யாவும் தேர்ந்திவண் வருதி ரென்றான்.

சாரணப் படைத்தலைவரான இவர்கள் வந்து சூரபன்மன் முன் அவனது பாத கமலங்களை முறையாகப் பணிந்து எழுந்து முன்நிற்றலும்; சூரபன்மன் அவர்களைப் பார்த்து ''சாரணத் தலைவரே! இப்போதே நீங்கள் விரைவாகச் சென்று, இப்பூமியில் சிவபிரான் திருக்குமாரான கந்தன் வந்துள்ளானும். அவனுடைய சிறப்பையும் அவனைச் சூழ்ந்த பெரிய கொடிய படைகளான பூதங்களையும், அவைகள் எவ்வளவு தொகை என்பதையும் மற்றும் யாவற்றையும் தேர்ந்து கொண்டு இவ்விடத்து வருவீராக'' என்றான். 63

ஒற்றுவர் உணர்ந்தந் நீர்மை உச்சிமேல் கொண்டு தங்கோன்
பொற்றடங் கழல்கள் தாழ்ந்து புடவியை நோக்கிச் சென்றார்
மற்றவர் போய பின்னர் மாறிலாச் சூர பன்மன்
வெற்றிகொள் அவுணர் போற்ற வீற்றிருந் தரசு செய்தான்

சூரபன்மன் சொல்லிய வார்த்தையின் உட்கருத்துக்களைத் தெளிவாக விளங்கிக் கொண்ட அந்த சாரணத் தலைவர்கள் அவன் கட்டளையை உச்சிமேற் கொண்டு (சிரத்தையுடன் ஏற்று) மீண்டும் தங்கள் அரசனின் பொன்னார்ந்த சேவடிமுன் தாழ்ந்து பணிந்து எழுந்து இப்பூமியை நோக்கியவாறு சென்றார்கள். இவர்கள் சென்ற பிற்பாடு மாறின்றிச் சிறப்புடன் வாழும் சூரபன்மன் வெற்றிபல ஈட்டிப் புகழ்கொண்ட அசுரர்கள் பலர் போற்றி வணங்கி நிற்ப வீற்றிருந்து அரசு செய்தான். 64

ஏதமில் சூர பன்மன் இளவல்தன் முடிவு நேடி
மாதுயர் கொண்டு தேறி வைகிய தன்மை சொற்றும்
ஆதியங் கடவுள் மைந்தன் அமரர்தங் கிரியை நீங்கிப்
பூதல மீது வந்த நெறியினைப் புகல லுற்றும்.

''முனிவர்களே! குறைவு ஒன்றும் இல்லாத சூரபன்மன் தம்பியான தாரகனின் முடிவை அறிந்து பெரும் துயரம்கொண்டு மீண்டுதேறி இருந்து அரசாண்டிருந்த தன்மை சொன்னோம். இப்பால் ஆதியங்கடவுளான சிவபிரான் திருக்குமாரன் இப் பூமியில் எந்தப் பாதையால் வந்தார்; எப்படி வந்தார் என்னும் தன்மையினைச் சொல்வோம்'' என சூதமுனிவர் மீண்டும் நைமிசாரணிய முனிவர்க்குச் சொல்கின்றார். 65

அசுரேந்திரன் மகேந்திரஞ் செல் படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் 1628

451

# 23. வழிநடைப் படலம்

குருமணி மகுடம் ஆறுங் குழைகளுந் திருவில் வீசத்
திருமணி வரையின் மேவுந் திருக்கைவேற் பெருமானுக்குக்
கருமணி யாழிப் புத்தேள் கையுறை யாக ஆங்கோர்
பருமணி நீட்டிற் றென்னப் பானுவந் துதயஞ் செய்தான்.

இரத்தினங்களிற் சிறப்புற்ற மணிகளால் செய்யும் தொழில்கள் அனைத்தும் நிரம்ப அமைந்த ஆறு இரத்தின முடிகளும், திருக்காதில் அணியப்பெற்ற குண்டலமும் அருள்நிறையும் ஒளிவீச திருக்கையில் வேலேந்திய வண்ணம் தேவகிரியில் தேவர்கள் பூசை செய்ய வீற்றிருந்தருளிய ஆறுமுக நாயகனுக்கு கருமையான நீல இரத்தினம் போலும் வண்ணமுடைய சமுத்திர தேவனானவன் கையுறைப் பொருளாக ஓர் முத்து மணியை நீட்டிக்கொடுக்குமாறுபோல சூரியபகவான் சமுத்திரத்தின் கிழக்கே வந்து உதயமானான். சூரியன் உதயமாகி கடல்மேல் தோன்றிய காட்சி தேவமலையில் ஒளி வீசும் இரத்தின முடிகளும் குண்டலங்களும் நிறைய ஆறுமுகமும் பன்னிரண்டு திருக் கையுடனும் தேவகிரியில் இருந்தருளும் பெருமானுக்கு காலைவணக்கம் செய்யும்படி சமுத்திரதேவன் முத்துமணி ஒன்றை நீட்டியது போலும் என்றார். 1

மங்குல் வானமேல் வெய்யவன் கதிரென வழங்குஞ்
செங்கை கூப்பியே தொழுதிடு வானெனச் செல்ல
அங்கவ் வேலையில் அறுமுகன் கடவுள்வெற் பகன்று
பொங்கு தானையும் அமரருஞ் சூழ்தரப் போந்தான்.

மேகங்கள் உலவும் வானத்திலே வெப்ப கிரணங்களை உடைய சூரிய பகவான் தனது கிரணங்கள் என்னும் கைகளை மேற் குவித்து தேவகிரியில் இடங்கொண்ட எம் கடவுளை வணங்குவான்போல மேலே எழுந்து செல்ல அங்கு அந்த நேரத்து ஆறுமுகம் உடைய பகவான் தேவகிரி என்னும் மலையை விட்டு நீங்கி பொங்கித் திரண்டு வேகத்துடன் செல்லும் பூத சேனையும் தேவரும் சூழ்ந்து வரும்படியாகப் புறப்பட்டுச் சென்றருளினர். 2

தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
உன்னி நாடிய மறைகளின் முடிவினை யுணரா
என்னை யாளுடை யானிடஞ் சேர்வன்என் றிமையக்
கன்னி பூசனை செய்தகே தாரமுன் கண்டான்.

இவ்வாறு சென்றருளிய பெருமான், அம்பாளை விட்டு நீக்கி சிவபிரானையே தனியே வணங்குவேன் எனத் திடசங்கற்பம் கொண்டு சிவபிரானை மட்டும் வணங்கும் வரலாறு உடைய பிருங்கி என்னும் முனிவரின் செயல் கண்டு அம்பாள் யாவற்றையும் சிந்தித்து நாடி வேதங்கள் சுட்டி நிற்கின்ற முடிபை உணர்ந்து இமயமலையில் தோன்றிய நித்திய கன்னிகையாகிய உமையம்மை எம்பிரானுடைய இடப்பாகத்தைச் சேர்ந்து கொள்ளவென முற்பட்டு அதற்காக கேதாரத்திற் சென்று பூசை செய்தருளிய திருக் கேதாரம் என்னும் தலத்தை முன்னாக முருகப்பிரான் கண்டுகொண்டார். தேவகிரியில் நின்றும் புறப்பட்டு தெற்கு நோக்கி வரும் பெருமான் முதலாவது கண்ட தலம் திருக்கேதாரமாகும்.

பிருங்கி முனிவர் வரலாறு: அம்பாளைவிட்டு சிவபிரானையே வழிபடுவேன் எனத் திடங்கொண்ட பிருங்கி முனிவர் அவ்வாறு செய்தலும் அம்பாள் அதுகண்டு பெருமானை விட்டு நீங்க அப்போது சத்தியாவும் பிருங்கி முனிவரிடம் இருந்து நீங்கலும் அவர் கீழே விழப்போகும்போது சிவபிரான் விழாதபடி நிற்க மூன்று கால் கொடுத்தார். இந்நிலையை உணர்ந்த பெருமாட்டி சிவனே பரம்பொருள் எனும் வேதங் கூறும் உண்மையைத் தெளிந்து பிரிந்த பெருமானை மீண்டும் சேர்வதற்காக திருக்கேதாரத்தில் சென்று பூசைசெய்து பழையபடி சுவாமி இடப்பாகத்து அமர்ந்தருளினர் என்பது வரலாறு. 3

பைய ராவின்மேற் கண்டுயில் பண்ணவன் றனக்குந்
தையல் பாதிய னேபரம் பொருளெனுந் தன்மை
மையல் மானுடர் உணர்ந்திட மறைமுனி யெடுத்த
கைய தேயுரைத் திட்டதோர் காசியைக் கண்டான்.

பாம்பாகிய சயனத்தின்மேல் யோகநித்திரை செய்கின்ற நாராயணக்கடவுளுக்கு தையலைப் பாகமாக உடைய சிவபிரானே பரம்பொருள் என்னும் தன்மையை அறியாத மனிதரும் அறிந்து கொள்ளும்படியாக வியாசமுனிவர் எடுத்த கையே வழங்காமல் போனதன்மையால் இந்த உண்மையை உரைத்திட்டதோர் காசி எனும் சிவாலயத்தைக் கண்டார்.

வியாசமுனிவர் பரம்பொருளை உணர்ந்த வரலாறு: வியாசமுனிவர் காசியிற் சென்று அங்குள்ளார் முன்னிலையில் ''நாராயணக் கடவுளே பரம்பொருள்'' எனச் சொல்லி இரண்டு கைகளையும் நீட்டினர். அப்போது நந்தியெம் பெருமான் வியாசனை நோக்கி ''அப்படியா, வேதங்கள் யாவும் சிவனே பரம் பொருள் எனக் கூறியும், நீ அதை நான்காக வகுத்தும் இங்கு இப்படிச் சொன்னமையால் நீட்டிய கை மடக்க முடியாது போகக் கடவது'' என, அப்போது நீட்டிய கை நீட்டியபடியே வியாசமுனிவர் மடக்க இயலாது நின்றார். ஆகவே இச்செயலால் சிவனே பரம்பொருள் என உலக மக்களைத் தெளிய வைத்த இடமான காசித் தலத்தைக் கண்டார். 4

பருப்ப தப்பெயர்ச் சிலாதனற் பாலகன் பரமன்
இருப்ப வோர்வரை யாவனென் றருந்தவம் இயற்றிப்
பொருப்ப தாகியே ஈசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான்.

மலையின் பெயர்கொண்ட சிலாதன முனிவரின் மகனான நந்தியங்கடவுள் சிவபிரான் தன்மேல் இருப்பத் தான் ஓர் மலை ஆவேன் என்று எண்ணி அதற்காகத் திடங்கொண்டு தவம் செய்து தவப்பேற்றால் தான் மலையாகி ஈசனின் திருவுருவைத் தனது மலைவடிவின் முடிமேல் தாங்கிய பெருமைகொண்ட திருப்பருப்பதம் என்னும் பெயர்கொண்ட சிவாலயத்தின் அற்புதம் யாவையையும் கண்டருளினர் எமது ஆறுமுகக் கடவுள். 5

அண்டம் மன்னுயிர் ஈன்றவ ளுடன்முனி வாகித்
தொண்ட கங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்.

அண்டங்களையும் மேலான உயிர்களையும் ஈன்ற தாயாகிய உமையம்மையாரொடு தாம் கோபமாகி தொண்டகப் பறை முழக்கம் குறைவுறாத திருவேரகம் என்னும்

தலத்தை விடுத்து கீழே மண்டிய பாதாள உலகத்திற்குச் சென்று பின்னர் ஓர் குகை வழியாக முன்னே இப்பூமியில் தான் வந்தருளிய இடமான திருவேங்கடம் என்னும் மலைத்தலத்தையும் எம்பிரான் கண்டருளினர்.

முருகக் கடவுளுடைய தலமே இக்காலத்தில் உள்ளார் வணங்கும் திருவேங் கடமலையாகும். இது திருமாலின் தலமெனவே கொள்கிறார்கள் இப்போதுள்ளார்.

**சிலந்தி மாசுணம் மும்மதக் கரிசிவ கோசன்**
**மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்**
**பலந்த ரும்வழி பாட்டினுற் ~~பரனைக்~~**
**கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்.**

சிலந்தியும், பாம்பும், மும்மதம்பொழியும் யானையும், சிவகோசரியாரும், போர் புரியும் வேடுவர் தலைவரான கண்ணப்பநாயனுரும், நக்கீரதேவனும், கன்னிகைகளும், யாவர்க்கும் பலனைக் கொடுக்கின்ற வழிபாட்டாலும், வழிபாடு செய்து சிவபிரானைக் கலந்து முத்தி எய்திய தலமாகிய தென்கைலாயம் எனச் சிறப்பித்துச் சொல்லப்பெறும் திருக்காளத்தி என்னும் சிவாலயத்தைக் கண்டருளினர் எமது ஆறுமுகக் கடவுள்.

**சிலந்தி பூசை செய்தது:** பிரமதேவரின் சாபத்தால் சிலந்தி வடிவாகிய மாதவ ஊறன் என்பவன் காளத்தியில் சென்றருளி அங்கு எம்பிரானுக்கு தனது வாய் நூலால் ஆலயம் சமைத்து உண்டாக்கி வழிபாடு செய்து முத்திபெற்றான்.

**பாம்பு பூசித்தமை:** சிவபிரான் அணிகலமாக விளங்கும் காளன் என்னும் பாம்பு பெண்கள்மேல் இச்சையாக அவர்களுடன் பலகாலம் கூடி இன்புற்ற நிலையால் சிவபிரான் அணியாக அமையத் தவறியமையால் ஏற்பட்ட சாபத்தினுல் இப்பூமியில் வந்து திருக்காளத்தியில் ஈசனை வழிபாடு செய்து அங்கு தனக்கு மாறுகவந்த யானை ஒன்றுடன் மாறுபட்டுப் போர்புரிந்து இருவரும் இறக்க காளன் என்னும் பாம்பு முத்தி எய்தியது.

**யானை முத்தி பெற்றமை:** திருக்கைலாய மலையில் சிவபிரான் சந்நிதியில் உத்தரவின்றி உட்பிரவேசித்த தன்மையால் அத்தி என்னும் கணத்தலைவன் அம்பாளின் சாபத்திற்கு உள்ளாகி இப்பூமியில் வந்து யானை வடிவாகி சிவபிரானை காளத்தியில் பூசைசெய்து தன்னோடு மாறுபட்ட காளன் என்னும் பாம்பு உடன் போர் செய்து இறந்து முத்தி எய்தினன்.

சிலந்தியும், பாம்பும், யானையும் பூசித்துப் பேறு அடைந்தமையால் சீ+காளம்+ அத்தி என்னும் மூன்றினது பதங்களும் சேர்ந்து சீகாளத்தி திருக்காளத்தி என வந்தது என்பர்.

**சிவகோசரியார்:** இவர் காளத்திமலையில் பெருமானை வேதவிதிப்படி அர்ச்சித்தவர். கண்ணப்பநாயனர் செய்த பூசையைத் தவறுகக் கருதி சுவாமியால் அங்கு பின்னர் உணர்த்தப்பட்டு கண்ணப்பர் கண்அப்பும் அன்புச்செயலை நேரில் கண்ட பிராமண முனிவர்.

**கண்ணப்பர்:** கண்ணப்பநாயனர் வேட்டுவக் குலத்தவர். காளத்திமலையில் வேட்டையாடப்போன நேரத்தில் அங்கு இருந்த கோவில் சென்று சுவாமியைக் கண்டு அன்பாகி வாயில் நீர் எடுத்து வந்து அபிஷேகித்தும் கொண்டையில் பூக்கொண்டுவந்து சூட்டியும் தனது வாயில் இட்டு பதம் அறிந்த ஊனுகிய அமுதை நிவேதித்தும் சொல்லொணுத அன்பால் பூசை செய்து கண்ணையே அம்பால் இடந்து அப்பி முத்திபெற்றவர்.

நக்கீரர்: மதுரை சோமசுந்தரக் கடவுளின் தலைமையில் நடந்த தமிழ்ச் சங்கத்தில் உள்ள புலவர். இவர் இறைவன் அருளால் கைலைபாதி காளத்திபாதி என்னும் அந்தாதிபாடி இறைவன் அருள் பெற்றவர். காளத்தியில் கோவில்கொண்ட பெருமானின் அருட் சத்தியாகிய ஞானப்பூங்கோதை அம்பாளிடத்து பெரிதும் அன்புடையவர்.

கன்னியர்: இவர்கள் மதுரையில் உள்ள தாசி ஒருத்தியின் மக்களாவர். இவர்கள் நக்கீரதேவரின் காளத்தி அப்பன்மேல் பாடிய பாடலைப்படித்து காளத்தி செல்ல விரும்பினார்கள். தாய் அதற்கு உடன்படாமையால் அவர்கள் எப்படியாவது காளத்தி செல்ல வேண்டும் என எண்ணிய எண்ணத்தை அறிந்த இரு கள்வர் இவர்களை வஞ்சனையால் அழைத்துச் சென்று பொருள்களையும் ஆபரணத்தையும் அபகரிக்க எண்ணி அக்கள்வர் தபோதனர் வேடங்கொண்டு தாயை அறியாது இந்த இரண்டு கன்னியர்களுக்கும் தாங்கள் காளத்தி செல்வதாகக்கூறி அவர்களை நம்பச்செய்து களவாகக் கூட்டிச் சென்று காட்டில் வைத்து இப்பெண்களைக் கொன்று ஆபரணம் அபகரிக்க எண்ணுவதை பெண்கள் உணர்ந்து சிவபிரானைத் தியானிக்க சுவாமி ஓர் பூக்கொய்யும் பண்டாரம்போல் வந்து இவர்களைக் கள்வரிடம் மீட்டு காளத்தியில் சேர்த்து மறைந்தருள இக்கன்னியர் அங்கிருந்து காளத்தி அப்பனை வணங்கி முத்தி எய்தினர்.

**கொடிய வெஞ்சினக் காளியிக் குவலய முழுதும்**
**முடிவு செய்வன்என் றெழுந்தநாள் முளரியான் முதலோர்**
**அடைய அஞ்சலும் அவள்செருக் கழிவுற வீழியாக்**
**கடவுள் ஆடலால் வென்றதோர் வடவனங் கண்டான்.**

கொடுமையுடன் பெருங்கோபமுடைய காளிதேவியானவள் இந்த பூமி முழுமையும் முடிவு செய்வேன் என எண்ணி நடமாடிக்கொண்டு அழிவுசெய்ய முற்படலும் அப்போது அதுகண்ட பிரமதேவர் முதற்கடவுளர் பெரிதும் அஞ்சி ஒடுங்க, அக்காளி தேவிகொண்ட செருக்கு அழிவுறும்படியாக அழியாத கடவுளாகிய சிவபெருமான் திருப்பாதத்தை மேலே தூக்கி நின்று ஆடியருளி காளியின் ஆடலை வென்று அருள் செய்த திரு ஆலங்காடு என்னும் பதியையும் எம்பிரான் சென்று கண்டருளினர். 8

**அம்பு ராசிகொள் பிரளயத் தினுமழி வின்றி**
**உம்பர் மாலயற் குறையுளாய்க் கயிலைபோ லொன்றாய்**
**எம்பி ரான்தனி மாநிழல் தன்னில்வீற் றிருக்குங்**
**கம்பை சூழ்தரு காஞ்சியந் திருநகர் கண்டான்.**

சமுத்திரங்கள் உலகை அழிவு செய்யும் காலமாகிய சலப்பிரளயத்திலும் அழிவில்லாது தேவர்கள், நாராயணக் கடவுள், பிரமதேவர் இவர்கட்கு என்றும் இருப்பிடமாய் திருக்கைலாய மலைபோல எல்லாச் சிறப்பும் உடைய ஒன்றாகியும் விளங்கும் தனியான மாமர நிழலிலே எம்பிரான் வீற்றிருந்தருளும் பெரும் பேறினை உடையதும், கம்பையாறு சூழ்ந்து விளங்கப்பெற்றதுமான திருவோங்கிய காஞ்சி என்னும் பதியையும் கண்டருளினர் எமது முருகக் கடவுள். 9

**ஏல வார்குழல் உமையவள் பூசைகொண் டிருந்த**
**மூல காரண மாகிய முதல்வன்ஆ லயமும்**
**மாலும் வேதனும் அமரரும் வழிபடு மற்றை**
**ஆல யங்களாய் உள்ளவுங் கண்டனன் ஐயன்.**

நறுமணம் கமழும் இயற்கை வாசனை உடைய கூந்தலைக் கொண்ட உமை அம்மை யார் பூசையை ஏற்றுக் கொண்டு காஞ்சியிலே இருந்த எப்பொருட்கும் மூலகாரணர் ஆன சிவபிரான் ஆலயம் எனும் கச்சிஏகம்பமும் நாராயணக் கடவுள் பூசை செய்த திருமாற்பேறும் இன்னும் பிரம தேவர் தேவர்கள் யாவரும் பூசைசெய்து பேற டைந்த வேறு வேறு சிவாலயங்களையும் காஞ்சியில் எம்பிரான் கண்டருளினர். 10

**என்னிகர் எவரு மில்லென் றிருவரும் இகலும் எல்லை**
**அன்னவர் நடுவு தோன்றி அடிமுடி தெரியா தாகி**
**உன்னினர் தங்கட் கெல்லாம் ஒல்லையின் முத்தி நல்கித்**
**தன்னிகர் இன்றி நின்ற தழற்பெருஞ் சயிலங் கண்டான்**

அதன் பின்னராக எம்பிரான் சென்றருளி எனக்கு நிகராவார் யாரும் இலை எனச் செருக்குற்றமையால் பிரமதேவரும் திருமாலும் தாங்கள் இருவரும் ஒருவ ரோடு ஒருவர் போர்செய்த நேரத்து அவர்கள் நடுவே சோதியாகத் தோன்றி அதன் அடியையும் முடியையும் போர்செய்த பிரமாவும் விஷ்ணு மூர்த்தியும் தெரியாதபடி யாகிய வண்ணம் கொண்டு நின்று பின்னர் அருளால் மலைவடிவாகச் சுருங்கி சிவலிங்க மூர்த்தியாகவே அசையும் படியாகி ஆனல் நினைத்தவர்களுக்கெல்லாம் உடன் முத்தி தரும் தலம் எனப்படும் திரு அண்ணுமலை என்னும் மலைத் தலத்தையும் எம்பிரான் பார்த்தருளினர்: 11

**மண்ணுல கிறைவன் செய்யும் மணந்தனை விலக்கி எண்டோள்**
**அண்ணலோர் விருத்தன் போல்வந் தாவண வோலை காட்டித்**
**துண்ணெண வழக்கில் வென்று சுந்தரன் றனையாட் கொள்ளும்**
**பெண்ணையம் புனல்சூழ் வெண்ணெய்ப் பெரும்பதி தனையுங் கண்டான்.**

இந்த மண் உலகிலே சுந்தரமூர்த்தி சுவாமிகள், தான் திருமணம் செய்யும்படி யாகச் சென்றிருந்த திருமணப் பந்தரிலே எங்கள் சிவபிரான் தாம் ஓர் கிழப்பிரா மணர்போல எழுந்தருளி வந்து தமது திருக்கையில் ஓர் அடிமைச் சீட்டையும் காண் பித்து ''சுந்தரனே! நீ எனது அடிமை'' எனச் சாதித்து தனது கையில் வைத்திருந்த உறுதியான ஓலையைக் காண்பித்து நிற்றலும் சுந்தரர் அதை ஏற்காது மறுத் ததற்காக விரைவாகத் திருவெண்ணெய் நல்லூர் சென்று அங்கு நீதிவான்கள் முன் னிலையில் தனது வழக்குச் சொல்லி வெற்றிகொண்டு அதனலே சுந்தரமூர்த்தி சுவாமி களின் திருமணம் நிகழ்வுறுவகை தடுத்தருளி உய்யும்படி அவரை ஆண்டுகொண்ட பெருமான் வீற்றிருந்தருளிய பெண்ணையாறு சூழ வரும் சிறப்பினைக் கொண்ட திரு வெண்ணெய் நல்லூர் என்னும் பதியையும் எங்கள் குருபரன் பார்த்தருளினர். 12

**தூசினல் அம்மை வீசத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சும்**
**மாசிலா வுயிர்கட் கெல்லாம் அஞ்செழுத் தியல்பு கூறி**
**ஈசனே தனது கோலம் ஈந்திடு மியல்பால் அந்தக்**
**காசியின் விழுமிதான முதுகுன்ற வரையுங் கண்டான்.**

இப்பால் எங்கள் ஆறுமுக ஐயன் சென்றருளி, உலகமுதல்வியான அம்மை இவ் விடத்துச் சேர்ந்து இறக்கும் உயிர்களை தமது மடிமேற் கிடத்தி வஸ்திரத்தினலே வீச அப்போது இறக்கப்போகும் மாசு இல்லாத உயிர்களுக்கு அவைகளின் செவியில் ஐந்து எழுத்தின் இயல்பை ஓதி சிவபிரான் தனது வடிவத்தை இறக்கின்ற உயிர்

கட்கு கொடுக்கும் இயல்பினுல் அந்தக் காசி என்னும் பதியிலும் பார்க்க மேம்பாடான திருமுதுகுன்றம் என்னும் மலைத்தலத்தையும் கண்டருளினுர் பன்னிரு கைகளை யுடைய பகவான். 13

விரிகனல் வேள்வி தன்னில் வியன்றலை அரிந்து வீட்டிப்
பொருவரு தவத்தை யாற்றும் பதஞ்சலி புலிக்கால் அண்ணல்
இருவரும் உணர்வாற் காண எல்லையில் அருளா லீசன்
திருநட வியற்கை காட்டுந் தில்லைமூ தூரைக் கண்டான்.

மேலாகச் சுவாலித்து எழுந்த யாகத்தில் அழகிய தனது தலையையே அரிந்து வீழ்த்தி நிகரற்ற தவத்தை ஆற்றிய பாம்புக்காலினை உடைய பதஞ்சலி முனிவரும் புலியின் கால் கொண்ட வியாக்கிரபாத முனிவரும் இருவரும் உணர்வினுல் கண்டு தரிசிக்கும்படியாக எல்லையற்ற கிருபையோடும் ஈசன் திருநடனத்தின் இயல்பினைக் காட்டியருளிய தில்லையம்பலம் என்னும் முதிய ஊரினை எங்கள் குருமணியான குமரன் கண்டருளினுன்.

பதஞ்சலி:- இவரை ஆதிசேடனின் மறுஅவதாரம் எனச் சொல்வர். இவர் அத்திர முனிவரின் புதல்வன் சிவபிரான் திருநடனம் தரிசிக்கும் பேறு பெற விரும்பியே இப் பிறவி எடுத்துக் கொண்டார், தை மாசத்தில் பூச நட்சத்திரத்தில் அன்று எம்பிரான் திருநடனத்தைத் தரிசித்துக் கொண்டவர்.

புலிக்கால் முனிவர்:- இவர் சிவபிரானை அர்ச்சிப்பதற்கு வேண்டிய மலர் கொய்வதற் காக இறைவனை வேண்டியே வழிபட்டு இந்தப் புலிக்காலை வேண்டிப் பெற்றுக் கொண்டார்.

தண்டளிர்ச் சோலைத் தில்லைத் தபனிய மன்றி லென்றுந்
தொண்டையங் கனிவாய் மாது தொழச்சுராட் புருடன் உள்ளத்
தண்டரு மதிக்க லாற்ற அற்புதத் தனிக்கூத் தாடல்
கண்டனன் கசிவால் உள்ளங் களிப்புற வணங்கிப் போனுன்

குளிர்மையும் பசுமையும் நிரம்ப தழைத்தோங்கிய பூஞ்சோலையுள்ள பொன்மய மான தில்லையம்பலத்தே எஞ்ஞான்றும் கொவ்வைப் பழத்தின் நிறங்கொண்ட சொண் டுடன் கூடிய வாயினை உடைய உமைஅம்மையார் கண்டு தொழும்படியாக விராட் புருடன் என்பவனுக்கு இருதயம் என்னும் சிதம்பர தலத்திலே தேவர்களும் நாடற் கரிய தன்மையால் அற்புதம் நிறையும் வண்ணமுடைய தனியான கூத்தின் ஆடல் கண்டருளி எமது குருபரனுன ஆறுமுகக் கடவுள் திருவுள்ளம் கசிவாகி களிப்புற்று வணங்கிப் போனுர். 15

குடமுனி கரத்தில் ஏந்துங் குண்டிகை இருந்து நீங்கிப்
படிதனில் வேறுவேறாய்ப் பற்பல நாமந் தாங்கிக்
கடல்கிளர்ந் தென்னச் செல்லுங் காவிரி யென்னு மாற்றின்
வடகரை மண்ணியின்பால் வந்தனன் கருணை வள்ளல்.

அகத்தியமுனிவர் தமது கையில் ஏந்திய கமண்டலத்தினின்றும் புறப்பட்டு வெளியே ஆறுகிப் பெருகி இப்பூமிமேல் வேறு வேறு கிளைகளாகப் பிரிந்தோடி பற் பல நாமங்களைக் கொண்டு கடல் புறப்பட்டுப் பெருகுவதுபோலச் செல்லும் காவிரி

என்னும் ஆற்றங்கரையினில் வடபுறத்துக் கிளையாகப் பெருகிய மண்ணியாற்றங் கரையின்பால் வந்து சேர்ந்தருளினுன் கருணை வள்ளலான ஆறுமுகப் பிரான்.

தேவகிரியில் நின்றும் அதிகாலை புறப்பட்டுத் தெற்கு நோக்கி வழிக்கொண்டு திருக்கேதாரம், காசி, திருப்பருப்பதம், திருவேங்கடமலை, திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சி, திருஅண்ணுமலை, திருவெண்ணெய்நல்லூர், திருமுதுகுன்றம் ஆகிய தலங்களைக் கண்டு பின்னர் தில்லைச் சிதம்பரத்தைச் சேர்ந்து அங்கு உமையம்மையார் சாட்சியாக வணங்கி நிற்ப உலகுய்ய, ஆடும் ஆடல் தரிசித்து மகிழ்வால் வணங்கி அப்பால் மண்ணியாற்றங் கரையில் எம்பிரான் சேர்ந்தருளினுர். 16

வழிநடைப் படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் - 1644

# 24. குமாரபுரிப் படலம்

அளவில் பூதவெம் படையொடு மண்ணியா றதன்கட்
குளகன் வந்துழி எழுந்திடு பூழிவான் குறுகி
ஒளிரும் வெய்யவன் கதிர்தனை மறைத்தலா லோடி
வளைநெ டுங்கடல் மூழ்குவான் புக்கென மறைந்தான்.

அளவு இல்லாத பூதங்களாகிய கொடிய சேனைகளோடு மண்ணியாற்றங் கரையில் குண்டலம் விளங்கும் பன்னிரு செவியினை உடைய எம்பிரான் வந்திடுதலும் எழுந்த புழுதியானது வானத்தைக் குறுகிச்சென்று பிரகாசமுடைய சூரியதேவனின் கதிர்களை மறைத்துக் கொண்டமையால், சூரியபகவான் ''என்மேல் புழுதிபட்டது. ஆகவே நான் குளிக்கவேண்டும்'' எனக் கடலில் சென்று குதிப்பான்போல் மேற்குப் புறத்து சமுத்திரத்தில் மறைந்தான். 1

மறைந்த காலையில் தோன்றின மாலையும் நிசியுங்
குறைந்த திங்கள்வந் துதித்தது தாரகை குறுகி
நிறைந்தெ ழுந்தவோர் மன்னவன் இறந்துழி நீங்கா
துறைந்த ஒன்னலர் யாவருங் கிளர்ந்தவா றெப்ப.

சூரியன் மறைந்தகாலையில் மாலைப்பொழுது தோன்றியது. இரவும் இளம் பிறையும் உதயமாகிக்கொண்டன. நட்சத்திரங்கள் உதயமாகின. இவையாவின் வரவும் எவ்வாறெனில் நல்லபடியாகச் செங்கோல் செலுத்தி ஆண்ட ஓர் அரசன் இறந்தபோது அவனுக்கு முன்பயத்தால் வெளிப்படாதிருந்த பகைவர் வெளிப்பட்டவாறு போல இருந்தது. 2

மிக்க தாருக வனத்தினை யொத்தது விசும்பில்
தொக்க பேரிருள், மாதரொத் தனஉடுத் தோற்றஞ்,
செக்கர் ஈசனை யொத்ததொண் போனகஞ் செறிந்த
கைக்க பாலம தொத்தது கதிரிளம் பிறையே.

மேலான தாருகவனம் என்னும் பதியை ஒத்தது வானத்தில் கூடிய இருள். அங்கு வாழ்ந்த முனிவர் பத்தினிமார்களை ஒத்தன வானத்துள்ள நட்சத்திரங்கள்: மாலைச் செக்கர் வானம் ஈசனை ஒத்தது. சுவையான அமுது கொள்ளப்பெற்ற ஈசன் திருக் கையில் உள்ள பிட்சாபாத்திரமான கபாலத்தை ஒத்தது ஒளி உடைய இளம்பிறை. 3

நிலவு லாவிய ககனமா நீடுபாற் கடலில்
குலவு கின்றதோர் பொருளெலாம் கொண்டுகொண் டேகி
உலகில் நல்குவான் முயலெனும் ஒருமகன் உய்ப்பச்
செலவு கொண்டதோர் தோணிபோன் றதுசிறு திங்கள்.

சந்திரனின் ஒளியானது பரந்து தோன்றுவதால் அதுவோர் பாற்கடல் எனும்படி யாக அமைய அவ்வாறாகிய பாற்கடலில் குலவி விளங்கும் பொருள்கள் யாவற்றை யும் கொண்டு கொண்டு சென்று உலகிலே சேர்க்கும்படியாக முயலகன் என்பவன் செலுத்திய ஓர் தோணிபோல விளங்கும்படி சந்திரனாகிய இளம்பிறை முயற்கறை என்னும் கருமையுடன் வானத்து நீந்தல் போலத் தென்பட்டது. 4

ஆன காலையில் அறுமுகப் புங்கவன் அமல
மேனி சேரொளி நிலவொடு கங்குலை வீட்டிப்
பானு மேவரு மெல்லெனச் செய்தலிற் பரமாம்
வான நாயகன் கயிலைபோன் றிருந்ததவ் வையம்.

அவ்வாறாகிய காலையில் ஆறுமுகமுடைய கடவுள் நிர்மல சொரூபமாக விளங்கும் திருமேனியினின்றும் பிரகாசிக்கும் ஒளியானது இராக்காலத்து இருளையும் நிலவின் ஒளியையும் நீக்கி சூரியன் பொருந்தி விளங்கும் பகற்காலம்போல் இருத்தலில் இப் பூமியே திருக்கைலாய மலைபோல் இருந்தது. 5

வீசு பேரொளி விறற்குகன் இவ்வா
றுசின் மண்ணியின் அகன்கரை நண்ண
ஈச னும்அவனை எய்துபு வேதாக்
கேசவன் முதல்வர் இன்ன கிளப்பார்.

எங்கும் பரந்து வீசுகின்ற பேரொளியினை உடைய சர்வ வல்லவரான முருகப்பிரான் மண்ணியாற்றங்கரையைச் சேர்ந்தருள ஈசனாகிய அவரைப் பிரமதேவரும் நாராய ணக்கடவுளும் மற்றையோரும் சென்று சேர்ந்து எம்பிரானுக்கு இவ்வாறு சொல் வார்கள். 6

ஆண்ட இந்நதி யகன்கரை எல்லாம்
மாண்ட வாலுகம் மலிந்தினி தாகும்
நீண்ட சோலைகள் நிரந்தன தோன்றி
ஈண்டி ஈண்டையின் இறுத்துள அன்றே.

''எம்பிரானே! ஆழமாகிய இந்த மண்ணியாற்றின் அகன்ற கரை எங்கணும் மேலான சிறந்த வெண்மணல்கள் மலிந்து இனிதாகச் சிறந்திருக்கின்றது: நெடிய மரங்கள் நிறைந்த சோலைகள் காணப்படுகின்றன; செங்காந்தள் மலர்கள் இங்கு நிறைய மலர்ந்து உள்ளன; 7

பிறைபு னைந்திடு பெருந்தகை தானம்
இறுதி யில்லன இருந்தன வற்றால்
நறிய தாகுமிந் நதிக்கரை தன்னில்
இறைவ இவ்விடை இருந்தருள் என்றார்.

''இளம் பிறையணிந்த சடையுடைய பெருமானின் ஆலயங்கள் ஏராளமானவை இங்கு உள்ளன. இத்தன்மையால் இந்த மண்ணியாற்றங்கரை மிகவும் நன்மை கொண்டதாகின்றது. ஆகவே, தேவரீர் ஏதுவித சிரமுமின்றி இங்கு இருந்தருள் வீராக'' என்றார்கள். 8

வனையும் மேனிஅயன் மால்முதல் வானோர்
இனைய செப்புதலும் யாரினும் மேலோன்
வினைய மெத்தவுள விச்சுவ கன்மப்
புனைவ னுக்கிது புகன்றிடு கின்றான்.

உலகைப் படைப்பதற்கென பொருத்தமான மேனிஉடைய பிரமதேவர் விஷ்ணு மூர்த்தி தேவர்கள் முதலாக உள்ளோர் யாவரும் இனைய வார்த்தையினைச் செப்புதலும் அப்போது எவற்றுக்கும் யாவருக்கும் மேலவரான ஆறுமுகக்கடவுள் மிகவும் கைத்திறமைகொண்டு தொழில் புரியும் விச்சுவகன்மன் என்னும் தேவதச்சனைப் பார்த்து இது செப்புவார். 9

மெய்வி தித்தொழிலில் வேதன் நிகர்க்குங்
கைவ லோய்ஒரு கணம்படு முன்னர்
இவ்வி டத்தினில் எமக்கொரு மூதூர்
செவ்வி திற்புனைவு செய்குதி யென்றான்

''உண்மையான படைப்புத் தொழிலில் பிரமதேவனை நிகர்க்கின்ற கைவன்மை உடைய விச்சுவகன்மனே! ஒருகணப்பொழுதின் முன்பாக இவ்விடத்தினில் எமக்கு ஒரு மூதூரை செப்பமாகச் செய்து முடிப்பாயாக'' எனப் பணித்தார் எம்கடவுள். 10

என்ன லோடும்அவ் விடந்தனில் எங்கோன்
துன்னு தொல்படை சுராதிப ரோடு
மன்ன அங்கணொரு மாநகர் நெஞ்சத்
துன்னி நல்கலும் உவந்தனர் யாரும்.

என்று எம்பிரான் சொல்லலோடும் அவ்விடந்தனில் எம்பிரான் பக்கராக நெருங்கிச் சூழ்ந்து வந்த பூதசேனைகள் தேவர்கள், வீரர்கள் முதலியவரோடு பொருந்தி தங்கி இருக்கும்படியாக அமைவுற ஒரு பெரிய நகரத்தை தனது நெஞ்சத்தால் நினைந்து அதன்படியே ஆகும்படி விதித்து முடித்தான் தேவதச்சன். 11

அப்பு ரத்தையறி வன்கடி தாற்றி
முப்பு ரத்தையடு முன்னவன் நல்கும்
மெய்ப்பு ரத்தவனை நோக்குபு மேலோய்
இப்பு ரத்திடை எழுந்தரு ளென்றான்.

அவ்வாறாகிய நகரத்தை எல்லாவற்றையும் உணரும் தேவதச்சனான விச்சுவகன் மன் விரைவாக ஆக்கி, முப்புரங்களையும் சங்காரம் செய்த முன்னவராகிய சிவபிரான் தந்தருளிய உண்மை வடிவான திருமேனி உடைய ஆறுமுகப்பிரானை நோக்கி ''எல்லார்க்கும் முன்தோன்றிய மேலவனே! வேலவனே! இந்த நகரத்து எழுந்தருள் வீராக'' என தேவதச்சன் கூறினான். 12

என்ற லோடும்இர தத்தின் இழிந்தே
துன்றும் வானவர் சுராதிப ராணோர்
சென்ற பூதர்கள் செறிந்துடன் ஏக
மன்றல் மாநகரில் வள்ளல் புகுந்தான்.

என்று தேவதச்சன் வேண்டுதலோடும் எமது கடவுள் தமது தேரில் நின்றும் இறங்கி தம்முடன் கூடிய தேவர், இந்திரன் பிரமவிஷ்ணுக்கள் ஆகியோர்களும் உடன் வந்த பூதங்களும் எல்லாரும் நெருங்கிச் சூழ்ந்துவர சிறப்புடன் அமைந்த மங்கலகர மாகிய நகரத்து அருள் வள்ளலாகிய பெருமான் புகுந்தருளினார். 13

செல்லு மாமுகில் செறிந்திடு காப்பின்
மல்லல் மாநகர் வளந்தனை நோக்கி
எல்லை யில்அறிவன் யாமுறை தற்கு
நல்ல மாநகரி தென்று நவின்றான்.

வானத்தில் சஞ்சரிக்கும் கருமையான மேகங்கள் படிந்து செறியும்படி உயர்ந்த மதில் சூழ்ந்த காப்புடைய பெரிய நகரத்தின் வளந்தனை எல்லையில்லா அறிவு சொரூபமான முருகக்கடவுள் பார்த்தருளி நாம் உறைவதற்கு நல்லதோர் நகரம் இது'' என சொல்லியருளினார். 14

வீர வேளிது விளம்புத லோடும்
ஆரும் வானவர்கள் அம்மொழி கேளா
ஏரெ லாமுடைய இந்நகர் சேய்ஞ
லூர தென்றுபெயர் ஓதினர் அன்றே.

வீரம் பொருந்திய பகவான் இதை விளம்புதலோடும், அங்கு சூழ்ந்து நின்ற தேவர்கள், வீரர்கள் யாவரும் அந்தத் திருவார்த்தையைக் கேட்டு எல்லா எழிலையும் உடைய இந்த நகரமானது ''இன்று தொட்டு சேய்ஞலூர் என்னும் பெயரோடு விளங்கு வதாக'' என யாவரும் சொன்னார்கள். 15

ஆய காலையனி கப்படை சூழ
ஏய பின்னிளைஞர் இந்திரன் வேதா
மாயன் ஏனையர் வழுத்திட ஆண்டைக்
கோயில் செல்லுபு குமாரன் இருந்தான்.

அவ்வாறாகிய காலையில் தனது சேனையானது எங்கும் சூழ எம்பிரான் சென்ற பின்னர் இந்திர தேவன், பிரமதேவர், நாராயணக்கடவுள் இன்னும் மற்றும் ஏனை யோர் யாவரும் தொழுது வணங்கும்படியாக அங்குள்ள கோயிலில் சென்று குமா ரக் கடவுள் இருந்தருளினார். 16

பன்னிரு புயத்தொகை படைத்தகும ரேசன்
தன்னருள் அடைந்துவிதி தன்னேமுத லானேர்
அன்னவன் விடுத்திட' வகன்றுபுடை யேகித்
தொன்னிலை இருக்கைகள் தொறுந்தொறும் அடைந்தார்.

பன்னிரண்டு புயங்களை உடைய பகவான் கோவிலில் வீற்றிருத்தலும் அப்போது எம்பிரானை வணங்கி அருள் அடைந்து மகிழ்வாகிய பிரமதேவர் முதலாயினேரை பெருமான் சென்று வருமாறு விடுத்திட அவர்கள் யாவரும் கோவில் வெளிப்புற இடங்களில் தாங்கள் இருப்பதற்கென அமைக்கப்பட்ட இடங்கள் தோறும் சென்று அங்கு தங்கினர்கள். 17

தானைகள் தமக்குரிய சாரதர் இலக்கர்
ஏனையர் வழுத்த எமை யாளுடைய வள்ளல்
கோனகர் இருக்கவிடை கொண்டுசெல் குழாத்துள்
வானவர் தமற்கிறை செயற்கையை வகுப்பாம்.

சேனைகளுக்குத் தலைவரான பூதங்களும் இலக்கம் வீரரும் வீரவாகுதேவர் முதலியோர்கள் யாவரும் துதித்து வணங்க, எமை ஆளுடைய வள்ளலான எமது பிரான் அங்கு நகரக்கோவிலில் கருணையோடு இருக்க, எம்பிரானிடம் விடைபெற்று, தமது இருப்பிடம் தோறும் செல்லும் தேவர் கூட்டத்துள் தேவர்கட்கு அரசனுகிய இந்திரனின் செய்கையை இங்கு வகுத்துச் சொல்வேன். 18

தாங்கரும் பெருந்திறல் தார காசுரன்
பாங்கமர் குன்ருெடும் பட்ட பான்மையால்
ஆங்கனம் புரந்தரன் அவலம் யாவதும்
நீங்கினன் உவகையால் நிறைந்த நெஞ்சினன்.

தம்மால் வெல்லமுடியாத பெரும் திறையான தாரகாசுரன் அவன் பக்கரில் அமர்ந்த கிரவுஞ்ச மலையோடும் வேல்பட்டு அழிந்துபோன தன்மையால், இந்திர தேவன் அவ்விடத்துத் தான் கொண்ட கவலையாவும் நீங்கினன். மகிழ்ச்சியாலே உள்ளம் நிறைவாகி நிரம்பினன். 19

விருந்தியல் அமிர்தினை விழும மில்வழி
அருந்தின ருமென ஆகந் தண்ணெனப்
புரந்தரன் இருந்துழிப் புக்குத் தாழ்ந்ததால்
வரந்திகழ் சிரபுர வனத்தில் தெய்வதம்.

நன்மையான உணவு முறையால் சிறந்த அமிர்தத்தை ஒரு துன்பமும் அநுபவியாமல் பெற்று தான் உண்டான் போல தனது மேனியானது குளிர்வாகிப் புளகாங்கிதங் கொள்ள இந்திரன் அங்கு இருந்த நேரத்து அங்கு அவன் திருமுன்பாகப் புகுந்து சீகாழி வனத்தில் நின்றும் வந்த வனதேவதை தாழ்ந்து வணங்கியது. 20

முகில்பொதி விண்ணகம் முதல்வன் பூண்களும்
நகில்பொதி சாந்துடை நங்கை பூண்களுந்
துகில்பொதி கிழியொடு தொல்லை வைத்தவை
அகில்பொதி காட்டகத் தடிகள் உய்த்ததே.

மேகங்கள் சூழப்பெற்ற தேவ உலகத்து முதல்வனான இந்திரனுடைய ஆபரணங்களும், கலவைச்சாந்து அணியும் தனங்களை உடைய இந்திராணி அம்மையார் ஆபரணங்களும், வைக்கப்பட்டிருந்த பொற் துகில் முடிப்பை அந்த சந்தன மரங்கள் நிரம்பிய காட்டில்வாழும் வனதேவதை இந்திரன் முன்பு வைத்தது. 21

முந்துற உய்த்தபின் முதல்வ கேட்டிநீ
பைந்தொடி அணங்கொடு பரமன் காழியில்
வந்தனை நோற்றநாள் வைத்த பூணிது
தந்தனன் கொள்கெனச் சாற்றி நின்றதே.

இந்திரன் முன்னர் இந்த ஆபரண முடிப்பை வனதேவதை வைத்த பிற்பாடு சொல்கிறது "முதல்வா! கேட்பாயாக நீ பசிய அழகிய காப்பினை அணிந்த இந்திராணியோடு சிவபிரானுடைய சீகாழிப்பதியிலே வந்துதவஞ் செய்து இருந்த காலத்து எம்மிடத்துக் காவலாக வைத்த பொருள்களான ஆபரணங்கள் இது. இப்போது நான் இதைத் திரும்பவும் உன்னிடம் தருகிறேன் பெற்றுக் கொள்வாய்" எனச்சொல்லி வன தேவதை முன்னின்றது. 22

நிற்புறு கின்றுழி நேமி அண்ணற்கு
முற்படு கின்றவன் முளரிப் பண்ணவன்
கிற்புறு செய்யபூண் கிழியை நோக்கினன்
கற்புடை யாள்விடுந் தூதின் காட்சிபோல்.

அவ்வாறு வனதேவதை நிற்கின்ற நேரத்து சக்கரப்படை ஏந்திய விஷ்ணுமூர்த்திக்கு ஓர் அவதார நிலையில் முற்பட்டவன் எனச் சொல்லப்படும் இந்திரன் தாமரை மலர்மேல் இருக்கும் பிரமனும் விரும்பும்படியான அந்த ஆபரண முடிப்பை கற்பு உடைய மனைவியான இந்திராணி தன்மேலாக செலுத்திய தூது ஒன்று போல நினைத்து நோக்கினன். 23

எரிமணி அணிகலன் இட்ட பூந்துகில்
விரிதரு பொதியினை விரலின் நீக்கினன்
திருமகள் அமர்தரு தெய்வத் தாமரை
வரியளி சூழ்வுற மலர்ந்த தென்னவே.

நெருப்பினைப் போலும் ஒளி உடைய இரத்தினங்களால் செய்யப்பெற்ற ஆபரணங்கள் இடப்பட்ட பூந்துகில்முடிப்பை விரியும் படியாக தனது விரல்களால் நீக்கினன். அப்போது இந்திரன் விரித்த அம் முடிப்பானது மகாலெட்சுமி வீற்றிருக்கும் தெய்வத் தாமரை மலரானது வண்டினங்கள் சூழும் படியாக விரிந்து மலர்ந்துள்ளது என்னும்படியாக அந்த ஆபரண முடிப்பை இந்திரன் அவிழ்த்தலும் அது விரிந்து கொண்டது. 24

துண்ணெனக் கிழியதன் தொடர்பு நீக்கலும்
ஒண்ணுதற் றுணைவிபூண் உம்பர் தோன்றலுங்
கண்ணுறக் கண்டவட் கருதி னன்ரோ
எண்ணுதற் கரியதோர் இன்பந் துய்த்துளான்,

விரைவாக இந்திரன் அந்தமுடிப்பின் தொடர்பை அவிழ்த்து நீக்கலும் அதிலே அழகிய நெற்றியை உடைய இந்திராணியின் ஆபரணம் மேற்படத் தோன்றலும் ஆபரணத்தைக் கண்ணுரக் கண்டவுடன் இந்திராணியை உடன் நினைவானுன். ஆனுல் பத்தித் திருமுகங்கள் ஆறுடன் பன்னிரண்டு தோள்களுமாகத் தித்தித்திருக்கும் பேரானந்த வடிவினராகிய எம்பிரானைத் தரிசித்து முன் எண்ணற்கரிய பேரின்பம் பூண்டு நின்றவனுன இந்திரதேவன். 25

பூட்கையின் முலையுடைப் பொன்னங் கொம்பின்மேல்
வேட்கைய தாயினன் மிகவும் பற்பகல்
வாட்கையின் றிருந்தது மனத்தின் முன்னினுன்
காட்கொளுங் காமநோய்க் கவலை எய்தினுன்.

யானைத்தந்தம் போலும் நீண்ட தனங்களை உடைய இந்திராணி மேல் விருப்பங் கொண்டான் மிகவும் பற்பகல் தனது மனைவியோடு வாழ்க்கை இல்லாது இருந்ததை மனத்தில் எண்ணினுன். அந்த நினைப்பாலே அவனுல் தவிர்க்க முடியாத வைரமான காமநோயால் பெருங் கவலை கொண்டான் இந்திரன். 26

நெய்ம்மலி தழலென நீடிக் காமநோய்
இம்மென மிசைக்கொள இரங்கி ஏங்கினுன்
விம்மினன் வெதும்பினன் வெய்து யிர்த்தனன்
மைம்மலி சிந்தையன் மருட்கை எய்தினுன்.

நெய் விடப்பெற சுவாலிக்கும் நெருப்புத் தழல்போல காம நோயானது பெருகப்பட்டு திடீரென மேற் கொள்ளுதலும் இரக்கமுற்று ''நான் என் செய்வேன்'' என ஏங்கினுன்; விம்மினுன்; காமத் தீயால் உடல் வெதும்பினுன். கொடிதான பெரு மூச்சை விடுத்தான். இருள் நிரம்பிய சிந்தை உடையவனுய் மயக்கம் எய்தினுன் இந்திரதேவன். 27

பசையற வுலர்வுறு பராரைப் பிண்டியின்
தசைமலி முழுதுடல் தளர்ந்து வாடினுன்
இசைவரு கைவலோன் எழுது பாவைபோல்
அசைவிலன் இருந்தனன் அணங்குற் றென்னவே.

ஈரப் பசுமை அற்று வாடிய பருத்த அடியினை உடைய அசோக மரம் போன்று தசை பொதிந்த உடலம் முழுவதும் வாடிச் சுருங்கித் தளர்ந்தான். புகழ் பெற்ற ஒரு சித்திரக்காரன் எழுதிய சித்திரப் பாவை ஒன்றுபோல அசைவிலாது இருந்தான் இந்திரதேவன் அங்கு பேய் பிடித்தவன் தன்மைபோல. 28

முருந்துறழ் எயிற்றினுன் முலைத்த டங்களில்
பொருந்துற மூழ்கியே புணர்ந்து வைகலும்
இருந்திடு கின்றவன் இடர்ப்பட் டின்னணம்
பிரிந்திடின் வருந்துதல் பேசல் வேண்டுமோ.

முல்லைப் பூவின் மொட்டுப் போலும் அழகிய பற்களை உடைய தனது மனைவியின் விசாலித்த முலைகள் என்னும் குளத்தில் பொருந்தும்படியாக மூழ்கினுற்போல அணைந்து புணர்ந்து நிற்றலும் மகிழ்ந்து இருந்திடுகின்றவனுன இந்திரன் இப்போ இடர்ப்பாடு கொண்டு இவ்வண்ணமாகப் பிரிந்திருப்பானுயின் அதுபற்றிப் பேசுதல் வேண்டுமோ.

மனைவியோடும் போகத்தை முன்னர் நித்தலும் அநுபவித்தவன் இப்போ பிரிந்திடில் அது மிக வேதனை தரும் ஒன்றுகுமே ஆதலால் அவன் கொண்ட வேதனையைப் பேசுதல் வேண்டுமோ என்றுர். 29

மெய்ந்நனி அலசுற விரக மீக்கொள
இன்னணஞ் சசிபொருட் டினையும் நீர்மையோன்
பொன்னணி தன்னையும் புனைதல் வேண்டலன்
தன்னுழை யவர்தமை நோக்கிச் சாற்றுவான்.

தனது மேனி மிகவும் வாட்டமுற காம இச்சை மிகவும் மேலுற இவ்வாறுகத் தனது மனைவி இந்திராணி பொருட்டாக வருந்தும் இயல்புடைய இந்திரதேவன் தனக்கு உற்ற பொன் ஆபரணங்களையும் விரும்பாதவனுய் அணியவும் மனங்கொள்ளாதவனுய்த் தன் பக்கராக நின்ற தூதுவர் சிலரைப் பார்த்து இவ்வண்ணம் பேசுகிறுன்.

இக்கிழி யொன்றினை ஏந்தி முந்துபோற்
சிக்குற வீக்கியே சேமித் துங்கள்பால்
வைக்குதிர் என்றலும் வணங்கி நன்றெனு
அக்கணம் அனையவர் அதனை யாற்றினுர்.

''நீங்கள் இந்த ஆபரண முடிப்பை எடுத்து முன்புபோலச் சிக்காராகக் கட்டிப் பக்குவமாக உங்கள்பால் வைத்துக் கொள்ளுங்கள்'' என இந்திரதேவன் கூறுதலும் தூதுவர்களும் அது கேட்டு, அவனை வணங்கி ''அரசே! இது நன்று'' என்று அக் கணமே அந்தத் தூதுவர் அவன் விரும்பியபடி அதனைச் செய்தார்கள். 31

அன்னதோர் அளவையில் அடவித் தேவினைக்
கொன்னுனை வச்சிரக் குரிசில் நோக்குறு
நின்னுழை அளித்திட நீசெல் கென்றலும்
மன்னவ நன்றென வணங்கிப் போயதே.

அவ்வாறுகிய நேரத்து வன தேவதையை கூரிய நுனிகொண்ட வச்சிரப் படையைக் கையில் ஏந்திய இந்திரன் பார்த்து ''உனது இடத்திற்கு வழமையாக நீ செய்யும் காவலைச் செய்யப் போவாயாக'' என்றலும் அது போதில் வன தேவதை ''எங்கள் அரசே! நன்று என்று வணங்கித் தன் இடத்துச் சென்றது. 32

பொந்திடு காலையிற் பூலோம சைப்பெயர்
ஏந்திழை காமநோய் எரியின் துப்பினுற்
காந்திய வுளத்தினன் கனலும் யாக்கையன்
ஓய்ந்தனன் தட்பமேல் உளம்வைத் தேகினுன்.

வன தேவதை போன காலத்து புலோமசை என்னும் பெயருடைய தனது மனைவியான பெண்ணினுல் வந்த காம நோயான நெருப்பின் வேகத்தால் காந்தப்பட்டுச் சுடப்படும் உள்ளத்தினில் வெப்புறும் உடலின் செயல் யாவும் ஓய்ந்தவனுய் இந்திர தேவன் இப்போ குளிர்ச்சியான ஓர் இடத்தை அடைய விரும்பி அப்பால் சென்றுன்;

ஒளியிழை உழத்தியர் ஒளிமென் கூந்தலின்
அளியினம் நறவுதுய்த் தலரிற் கண்படு
நளியிருந் தண்டலை ஞாங்கர் பொங்கிய
புளினமொன் றதன்மிசை புக்கு வைகினுன்.

ஒளியுடைய ஆபரணங்களை அணிந்த வயல்வேலையாற்றும் பெண்களின் வாசம் கொண்ட கூந்தலிற் சூடிய பூவின் தேனை உண்டு பூக்களில் நித்திரை செய்யும் வண்டினங்கள் பொருந்திய குளிர்ந்த பெருஞ் சோலை உடைய ஓர் மணற் பரப்பு ஒன்று அவ்விடத்து உண்டு. அந்த மணற் பரப்பிலே காம நோய் வேதனையால் வந்து இருந்துகொண்டான் இந்திரன். 34

**தீந்தழல் வெங்கதிர் திளைத்த வாறென**
**நீந்தருங் கங்குலின் நிலவுத் தீப்படப்**
**பூந்துணர் பரவிய புளினம் பொன்னகர்**
**வேந்தனுக் காற்றவும் வெம்மை செய்ததே,**

அவ்வாறு மணலில் இருந்த இந்திரனுக்குச் சந்திரனின் நிலவின் கதிர்கள் படுகிறது. அது இப்போ அவனுக்கு நெருப்பாற் சுட்டதுபோல் இருக்கின்றது. ஆகவே நீக்க முடியாத அந்த இரவிலே நிலவாகிய நெருப்புப்படப் பூக்களின் மகரந்தப் பொடிகள் சிதறுண்டு பரவிய அந்த மணற் பரப்பு ஆறுதலுக்காக வந்து இருந்த இந்திரனுக்கு மிக வெம்மையைச் செய்வதொன்ருக விளங்கியது. 35

**சூற்புயல் மாறிய சுரத்தில் தொக்குறு**
**மாற்பரல் வரைபுரை மணலின் திட்டையின்**
**பாற்படு கின்றனன் பனிம திக்கதிர்**
**மேற்பட அசைந்தனன் வினையம் வேறிலான்.**

இவன் நிலை எவ்வாருயிற் றெனின் கருக்கொண்ட மேகங்கள் மழை பெய்யாத பாலை வனத்தில் தொகுதியாகக் குவிந்து கிடக்கும் பருக்கைக் கற்களாலான மலைபோன்ற இந்த மணல் மேட்டின் மேலாக இருக்கின்ற இந்திரன் குளிர்மையான சந்திரனின் நிலவுக் கதிர்கள் மேனியிற் படத் துடித்துப் பதைத்தான் வேறு செயல் அறியாதவனுய். 36

**திங்களும் வெங்கனல் சிதறிக் காய்ந்திடத்**
**துங்கவேள் படையுடன் பிறவுஞ் சூழ்ந்திட**
**மங்கிய உணர்ச்சியன் மயலின் வன்மையான்**
**புங்கவர் மன்னவன் புலம்பல் எய்தினன்.**

சந்திரனும் கொடிய நெருப்பைச்சிந்தச் சுடுவான்போல அவனைவாட்ட மன்மதனும் தனது பாணங்களை விடுப்பவும் வேறுதன்மைகளும் சூழ இதனல் இந்திரன் மயங்கிய உணர்ச்சி உடையவனுய் காமத்தின் வலிமையால் மயங்கியவனுய் தேவர்கட்கு அரசனுன இந்திரன் புலம்பத் தொடங்கினன். தன்சுயநிலையற்று புலம்புகின்ருன், 37

**மட்டமர் புரிகுழல் மடந்தை என்னுடல்**
**இட்டுயிர் வவ்வினள் இருந்த யாக்கையுஞ்**
**சுட்டிடு கிற்றியால் தூய திங்கள்நீ**
**பட்டவர் தம்மையும் படுப்ப ரோவென்பான்.**

சந்திரதேவனை நோக்கி இந்திரன் சொல்வான் ''தூய்மையுடைய சந்திரனே! தேன் சொரியும் மலர்சூடிய பெண்ணுகிய இந்திராணி எனது உயிரைத் தான் கொண்டு என் உடலைவிட்டு வைத்தாள். அப்படியாக இருந்த எனது உடலையும் நீ சுடுகிருயோ! செத்தாரையும் எவராவது பின்னரும் கொல்வதற்கு முயலுவாரோ? 38

எஞ்சலில் அமுதினை யார்க்கும் நல்குநீ
நஞ்சினை யுகுத்திநண் ணலரில் தப்பியே
உஞ்சனன் இவனுயிர் ஒழிப்பன் யானெனு
வஞ்சினம் பிடித்தியோ மதிய மேயென்பான்.

''சந்திரனே! நீ எல்லார்க்கும் குறைவிலாத அமுதினைக் கொடுப்பவன். அப்படியான நீ இப்போ எனக்கு மட்டும் நஞ்சினைச் சொரிகிறாய். ஓகோ! நீ என் மீது கோபமானதற்கு காரணம் இப்போ தெரிகிறது. இந்த இந்திரன் அசுரனிடமிருந்து தப்பிக்கொண்டான். அவனைவிடாது நான் சுட்டெரிப்பேன் என வஞ்சினம் பிடித்தாயோ? நல்லசிந்தை உடையமையால் மதியம் என்றே அழைப்பாரே! ஏன் இவ் வண்ணம் செய்தாய்?'' என்பான். 39

நிற்றலும் வருதிநீ நீடு தண்ணளி
உற்றிடல் அன்றியே ஒறுத்தி லாய்மதி
அற்றமின் றுன்னிவந் தடுதி யாரிடைக்
கற்றனை இத்திறங் கள்வ நீயென்பான்.

''நித்தலும் சந்திரனே நீ வருவாய்! எஞ்ஞான்றும் நீ குளிர்மையுடன் பொருந்தி இருப்பதே அன்றி ஒருபோதும் துன்பப்படுத்துவாயல்ல. அப்படியான நீ இன்று ஓர் பாதகத்தை நினைத்து வந்து புரிகின்றாய். சந்திரனே! நீ யாரிடத்து இந்தப் பாதகச் செயல் புரிவதைக் கற்றுக்கொண்டாய்? சந்திரனே! நீ சரியான கள்வனாவாய்'' என்றார்.

பெண்ணிய லாரிடைப் பிறங்கு காமமும்
உண்ணிகழ் விரகமும் உனக்கும் உண்டதை
எண்ணலை யழல்சொரிந் தென்னைக் காய்தியால்
தண்ணளி மதிக்கிது தகுவ தோவென்பான்.

''பெண்களிடத்தாக ஏற்படுகின்ற மோகமும் அதனாலே உனது உள்ளத்தே உண்டாகின்ற ஆசையும் சந்திரனே! உனக்கும் உண்டு. அதை நீ நினைக்கின்றாயில்லை. நெருப்பைச் சொரிந்து என்னைக் காய்கிறாயே. குளிர்ச்சியைச்செய்யும் சந்திரனுக்கு இது தகுவதோ!'' என்பான் இந்திரன். 41

அரியநற் றவம்பல ஆற்றி இன்றுகா
றுரியதோர் என்பல தூனில் யாக்கையேன்
பரிவுறச் சுடுவதிற் பயனென் பாரிலிவ்
வொருவனை விடுகென உரைத்து வேண்டுவான்.

''அரியதான தவம் பலவற்றை நான் இன்றுவரையும் செய்து இதோ பார்! எனது உடலில் உள்ள தசைப்பற்று எல்லாம் நீங்கப்பட்டு எனது உரிமையான எலும்புக் கூடுதான் உண்டு எனும்படி எனது உடலம் வாடியது. ஆகையால் நீ உனக்கு மகிழ்வாகும்படி பரிவாகச் சுடுவதினால் என்னபயன்? சந்திரனே! நீ வேண்டுமானால் இப்பூமியில் எல்லாரையும் சுடு. ஏழையான என்னைமட்டும் விட்டுவிடு'' என்றான். 42

அண்டமேல் நின்றனை அவனி வானகம்
எண்டிசை எங்கணும் எளிது காண்டியால்
ஒண்டொடி யொருத்திஎன் னுயிர்கொண் டுற்றனள்
கண்டதுண் டோமதிக் கடவுள் நீயென்பான்.

"நீ அண்டங்கள் மேலாக நிற்பாய், பூமி வான உலகங்கள் எட்டுத்திக்குகள் எல்லாம் இலகுவாகக் காண்பாய். என்விருப்பத்தை உடைய அழகிய ஒருத்தியான இந்திராணி என் உயிரையே பற்றிக் கொண்டு எங்கோ புலப்படாது ஒழித்துவிட்டாள்; அவளைக் கண்டதுண்டோ சந்திரனுகிய கடவுளே நீ?" என்பான் இந்திரன். 43

யான்முதல் தோன்றினன் எனது பின்னவன்
கான்முளை யாகிய காம நீபல
பான்மையின் எனையடல் பழிய தேயலால்
மேன்மைய தாகுமோ விளம்பு வாயென்பான்.

"யான் முன்பிறந்தேன். எனது பின்னுல் பிறந்தானுன விஷ்ணு மூர்த்தி (உபஇந் திரன்) யின் சிறுபிள்ளையான மன்மதனே! நீ பலபான்மையாக வந்து என்னேடு போர்செய்தல் பழியாகும். இதுபழியல்லாமல் மேன்மையான தாகுமோ! எனக்கொரு கால் சொல்லுக" என்பான் இந்திரன்; 44

பரேருள உனதுமெய் படுத்த கண்ணுதல்
ஒரேமலென உதவிய நிமலன் ஈண்டுளன்
ஒரேகணம் ஒடுங்குமுன் உயிரும் வாங்குமால்
பொரேலினி மதனநீ போகு போகென்பான்.

"பார்த்துக்கொள் மன்மதனே! பருத்த அழகிய உனது உடலத்தை எரித்த நெற்றிக் கண்கொண்ட கடவுள் தமது அதேகண்ணுல் தோற்றுவித்த கடவுள் இங்கு இருக்கின்றுர்! இதைஅறிந்தால் ஒருகணம் ஒடுங்கும் முன் உனது உயிரும் வாங்குவார்; போர் செய்யாதே! மன்மதனே! நீ போ போ" என்பான் இந்திரன்; 45

வானுழை திரிதரு மதியம் போக்கிய
தீநுழை புண்ணில்வேல் செறித்த தென்னவேள்
கோனுழை கின்றன அதனில் கூடளி
ஈநுழை கின்றன போலும் என்கின்றுன்.

"ஆகாயத்து உலாவுகின்ற சந்திரன் செலுத்திய நிலாக் கிரணங்களாகிய நெருப்புச் சுட்ட புண்ணில் வேலால் குற்றியதன்மை போல மன்மதனின் அம்புகள் வந்து நுழை கின்றனவே! இதுதான் போதாதென இதனிலே மன்மதனின் மலர்ப் பாணங்களில் கூடவந்த ஈக்களும் அம்புபட்ட புண்ணில் மொய்க்கின்றது போலும் என் செய்வேன்" என்பான்; 46

வன்றிறல் கொலைஞர்கள் மானில் கூவிமான்
ஒன்றறக் கவர்தல்போல் உயிரென் காலினை
இன்றது போலவந் துள்புக் கீர்த்ததால்
தென்றலுக் கியான்செய்த தீதுண் டோவென்பான்.

வலிமையுடன் கொலைபுரியும் வேடுவர்கள் மானைப்போலச் சத்தமிட்டுக் கூவி அழைப்ப அதுகேட்ட மான்கள் வர அதைத் தவறுது பிடித்துக்கொள்வது போல

உயிரான எனது காற்றை இந்த தென்றலென்னும் காற்றும் வந்து உள்ளே புகுந்து இழுத்துச் செல்கிறதே! ஐயோ, இத்தென்றல் காற்றுக்கு நான்செய்த தீமை ஏதேனும் உண்டோ'' என்பான். 47

வாகுலப் பரியதோர் மாதர் மாலெனும்
ஆகுலப் புணரியுள் அழுந்தி னேரையும்
வீகுலத் தொகையினுள் விட்டி சைந்திடுங்
கோகிலப் பறவையுங் கொல்லு மோவென்பான்.

ஓயாத துயரமான ஆகுலத்தை கடல் பெருகுவதுபோலத் தருகின்ற அழகிய தோள்களும் எழிலும் கொண்ட பெண்கள் மோகம் எனும் கடலுள் அழுந்தப்பட்டோரையும், பறவைக்கூட்டத்தில் விட்டு விட்டு இசைக்கின்ற குயிற்பறவையும் கொல்லுமோ'' என்பான். 48

நம்முரு வாயினன் நாகர் கோனெனுத்
தம்மன முன்னியே தளர்வு நீக்கில
கொம்மென அரற்றியுங் கூவ லின்றியும்
எம்முயிர் கொள்வன இருபுளா மென்பான்.

''எங்கள்வடிவத்தைக் கொண்டான் இந்த இந்திரன் முன்னராக என (தக்கன் யாகத்து குயிலாகவும், அகலிகைபால் சென்றபோது சேவலாகவும் வடிவுகொண்டவன் இந்திரன்) தங்கள் மனதிலே எண்ணியாகுதல் என்மேற் கரிசனையாகி என் துயரம் நீக்கிற்றில்லையே! ஐயோ குயில்கள் கூவி வாட்டுகின்றனவே! சேவல்கள் கூவாது நிற்கின்றனவே! இதனால் விடிவது இல்லையாகுதே'' என இந்திரன் கூறிப் புலம்புவான்.

தண்டுதல் இன்றியே தானு நானுமாய்ப்
பண்டொரு வனிதையைப் பரிவிற் கூடினேம்
அண்டரும் அறிகுவர் அற்றை நாட்சினம்
உண்டுகொல் கதிரினம் உதிக்கி லானென்பான்.

மனம் விட்டுப் பிரியாமல் இந்தச் சூரியனும் நானுமாக பெண்வடிவங் கொண்ட அருணன்பால் மிக்க பரிவோடு கூடிமகிழ்ந்தோம். அதனை எல்லாத் தேவர்களும் அறிகுவர். அவ்வண்ணமாக அன்று நாளில் என்மீது கோபம் வைத்தனனோ சூரியன்? அல்லாவிடில் ஏன் இன்னும் இவன் உதயமாகிறான் இல்லை'' என்பான் இந்திரன். 50

கோழிலை மடற்பனைக் குடம்பை சேர்தரு
மாழையம் பசலைவாய் மகன்றி லென்பவை
காழக வரிசிலைக் காமன் கோடுபோல்
ஊழியும் வீழ்ந்திடா தொலிக்கு மோவென்பான்.

வலிமையான இலையினை உடைய மடல்கொண்ட பனைமரத்தில் சேர்ந்திருக்கும் பொன்போலும் பசிய வாயினை உடைய அன்றில் என்னும் பட்சிகள் வைரமான

வில்லே உடைய மன்மதனின் வெற்றிக்கொம்பு ஊதுவது போல ஊழிக்காலம் வரையும் ஒய்வில்லாது கூவிச் சத்தம் இடுமா'' என்பான். 51

துன்னல ராகிய தொகையி னோர்தமைத்
தன்னிடை வைத்தெனைத் தளர்வு கண்டதால்
அன்னதும் அன்றியின் றுவி கொள்ளவும்
உன்னிய தோகடல் உறங்க லாதென்பான்.

''இக்கடலானது எனது பகைவரான அசுரர் கூட்டத்தோரைத் தன்னிடமாக வைத்து என்னை அவர்கள் தளர்வுசெய்து வருத்த இடங் கொடுத்தது. அதுவுமல்லாமல் இன்று எனது உயிரை மாய்க்கவும் எண்ணியதோ இக்கடல். ஏன் இது உறங்காது இரைந்து வேதனை உறுத்துகிறது'' என்பான் இந்திரன். 52

இவ்வகை யாமினி யெல்லை முற்றவும்
வெவ்வழல் சுற்றிடும் விரக நோய்தெற
உய்வகை யொன்றிலன் உயங்கல் அல்லது
செய்வது பிறிதிலன் தெருளில் சிந்தையான்.

இவ்வகையாக இனி இரவின் எல்லை முற்றவும் கொடிய நெருப்பாகிச் சுடுகின்ற காமநோய் வருத்த ஓர் உய்யும்வகை ஒன்றும் அறியாது பரிதவித்தான் இந்திரன், இறந்தார் போல வாடுதலே ஒழிய வேறு செய்வகை ஒன்றும் இல்லாது தெளிவில்லாத சிந்தையுடன் இந்திரன் இருந்தான். 53

ஆக்கம் இத்திறம் அடைவுழிப் பத்துநூ றடுத்த
நோக்க முற்றவன் சசிபொருட் டுற்றநோய் அதனை
நீக்கு கின்றனன் யானென நினைந்துளான் என்ன
மாக்கள் பூண்டதேர் வெய்யவன் குணதிசை வந்தான்.

தனது மேனி முழுவதிலும் ஆயிரம்கண் கொண்டுற்ற இத்திறமாக தனது இந்திராணி பொருட்டால் ஆக்கவலிமை கெட்டுத் தளர்வுறும் காமநோயை ''நான் இதோ நீக்குகின்றேன்'' என நினைந்துளான் போன்று குதிரைகள் பூட்டிய தேர் மேலாகச் சூரியபகவான் கிழக்கே வந்து தோன்றினன். 54

வெம்பு தொல்லிருள் அவுணர்தங் குழுவினை வீட்டி
உம்பர் மேற்செலும் மதியெனும் மடங்கலை உருத்துப்
பைம்பொன் வெஞ்சுடர்க் கரங்களால் அதன்வலி படுக்குஞ்
சிம்பு ளாமெனத் தோன்றினன் செங்கதிர்க் கடவுள்.

யாவரையும் துயரப்படுத்தும் கொடிய இருள் என்னும் அசுரரை அழித்து வானத்தில் செல்கின்ற சந்திரதேவன் என்னும் சிங்கத்தைக் கோபித்துத் தன்னுடைய பசிய பொன்மயமான கைகளால் அந்தச் சிங்கம் எனும் சந்திரனின் வலியைக் கெடுக்கும் சரபப் பட்சி எனும்படியாக வந்து தோன்றினர் சூரிய பகவான். 55

தொடர்ந்த ஞாயிறு விடுத்திடுங் கதிர்களாந் தூசி
படர்ந்த காலையில் நிலவெனும் அனிகமுன் பட்ட
அடைந்த மீனெனுந் துணைவரும் பொன்றினர் அமர்செய்
துடைந்த மன்னரில் போயினன் உடுபதிக் கடவுள்.

தொடர்ந்தெழுகின்ற சூரியன் என்னும் அரசன் விடுத்திடும் கதிர்க் கிரணங்கள் என்னும் தூசிப்படையானது சென்று படர்ந்த காலத்து சந்திரனுடைய நிலவு என்னும் சேனை பட்டது. சந்திரனுக்குத் துணைவர் என்னும் வெள்ளி எல்லாம் பட்டன. போர் செய்து ஆற்றுது பயந்து ஓடும் ஓர் அரசன்போல சந்திரனுன கடவுள்தானும் சென்று மறைந்தான். 56

விரிந்த பல்கதிர் அனிகத்தை வெய்யவன் விடுப்பத்
துரந்த சோமனை அவன்புறங் காட்டினன் தொலைந்து
கரந்து போதலும் பின்னுறச் சென்றில களத்தில்
இரிந்து ளோரையுந் தொடர்வரோ சூரர்தம் இனத்தோர்.

சூரிய தேவன் தன்னிடமிருந்து விரிவாகும் கிரணங்கள் என்னும் சேனையை விடுப்ப அக் கிரணமான சேனை கலைப்ப அதனுல் சந்திரன் புறங் காட்டிப் பயந்து ஓடிப் போதலும் ஓடிய சந்திரனைத் துரத்திப் பின்னுகச் சென்றில. ஏனென்றுல் பயந்து ஓடுவாரை வீரரானவர் கலைத்துச் செல்வாரோ, இல்லையே. 57

திங்கள் தன்குறை உணர்த்தவாய் திறந்தெனச் செய்ய
பங்க யங்கள்போ தவிழ்ந்தன குமுதங்கள் பலவுந்
தங்கள் நாயகன் உடைந்தது நோக்கியே தபனற்
கங்கை கூப்பிய திறனென ஒடுங்கிய அன்றே.

சந்திரன் தோற்ருேடிய குறையை வாய் திறந்து உரக்கச் சொல்வார்போன்று செய்ய இதழ்கள் விரித்து தாமரைப் பூக்கள் மலர்ந்தன. குமுதமலர்கள் யாவும் தங்கள் நாயகனுன சந்திரன் சூரியனுடன் செய்து கொண்ட போரில் தோற்று ஓடியதைக் கண்டு சூரிய தேவனுக்குக் கை கூப்பிப் பயத்தால் அஞ்சலி செய்வதுபோன்று ஒடுங்கிக் கூம்பின. 58

வனமெ ழுந்தன வனசமு மெழுந்தன வரியின்
இனமெ ழுந்தன மாக்களும் எழுந்தன எழில்சேர்
அனமெ ழுந்தன புள்ளெலாம் எழுந்தன அவற்றின்
மனமெ ழுந்தன எழுந்தன மக்களின் தொகையே.

சூரிய பகவான் உதயத்தால் சோலைகள் கிளர்ந்தெழுந்தன; தாமரைகள் மலர்ந்தன; வண்டுக் கூட்டங்கள் எழுந்தன. மிருகங்களும் எழுந்தன; அழகு உடைய அன்னங்கள் எழுந்தன; பறவைகள் யாவும் எழுந்தன. அந்த மிருகம் பறவை இவற்றின் மனம் மகிழ்வுடன் கிளர்ந்து எழுந்தன. மனிதர் கூட்டம் துயில் நீங்கி விழித்தெழுந்தார்கள். 59

ஞாயி றுற்றவவ் வளவையின் நனந்தலை உலகில்
ஏயெ னச்செறி இருளெலாம் மறைந்திருந் தென்னச்
சேய ரிக்கணி தந்திடு தெளிவில்கா மத்து
மாயி ருட்டொகை யொடுங்கிய திந்திரன் மனத்துள்.

சூரியன் உதயமாகிய அவ்வளவில் பூவுலகத்திற் பரந்த இருள்கள் யாவும் சூரிய னுக்குப் பயந்து விரைவாகச் சென்று ஒழித்திருத்தல்போல செவ்வரி ஓடிய கண்ணினை உடைய இந்திராணிபால் கொண்ட மோகம் தந்திட்ட காம நோய் என்னும் இரு ளானது இந்திரன் மனத்தில் ஒடுங்கியது. 60

கையி கந்துபோய்த் தன்னுயிர் அலைத்தகா மத்தீப்
பைய விந்திடு பாந்தள்போல் தணிதலும் பதைப்புற்
றெய்யெ னக்கடி தெழுந்தனன் நகைத்துவெள் குற்றான்
ஐய கோவிது வருவதே எனக்கென அறைந்தான்.

தனது கட்டுப்பாட்டையும் மிஞ்சி தனது உயிரை அலைத்து நின்ற காமநோயான நெருப்பானது படத்தைச் சுருக்கும் பாம்புபோல மெல்லவே தணிவாதலும் தன் தவறு உணர்ந்த இந்திரன் பதைத்துக் கொண்டு உடன் எழுந்தான். தன் நிலையை எண்ணிச் சிரித்தான். வெட்கப்பட்டான். ''ஐயோ இந்த எண்ணமும் எனக்கு வரலாமோ'' எனச் சொன்னான். 61

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்கும்நல் லுணர்வினைத் தொலைக்கும்
ஏம நன்னெறி தடுத்திருள் உய்ந்திடும் இதனால்
காம மன்றியே ஒருபகை உண்டுகொல் கருதில்.

தீமையாக எது உள்ளதோ அவ்வளவையும் இக்காமம் தரும். குறைவில்லாச் செல்வத்தைக் கொடுக்கும் நல்ல உணர்வைத் தொலைக்கும். பேரானந்தம் அடையும் இன்பவழியை அடைய முடியாதபடி தடுக்கும். இருளாய நரகத்துச் சேர்க்கும் இதனாலே ஒருவனுக்கு உண்மையான பகை யாதெனில் அது காமம் ஆகும். எண்ணிப் பார்த்தால் இதுவன்றிப் பிறிதில்லை. இக்கருத்தை பரஞ்சோதி முனிவரும் திருவிளையாடற் புரா ணத்து இப்படிச் சொல்வார். ''காமமே கொலைகட்கு எல்லாம் காரணம்; கண்ணோ டாத காமமே களவுக்கு எல்லாம் காரணம். கூற்றம் அஞ்சும் காமமே கள்ளு உண் டற்கும் காரணம், ஆதலாலே காமமே நரகபூமி காணியாய்க் கொடுப்பது'' என்பர். 62

என்ப துன்னியே இந்திரன் ஆண்டவைப் பிகந்து
தன்பு றந்தனிற் கடவுளர் குழுவெலாஞ் சார
அன்பொ டேபடர்ந் தறுமுகன் அடிகளை அடைந்து
முன்பு தாழ்ந்தனன் உரோமமுஞ் செங்கையும் முகிழ்ப்ப.

என்பதை இந்திரன் நினைத்து அவ்விடத்து தனது இருப்பிடத்தை விட்டுப் போய் தனது பக்கராக தேவர்கள் கூட்டமாகச் சார்ந்துவர அன்பொடு விரைவாகச் சென்று

குருபரனுகிய ஆறுமுகத்து அப்பனை அடைந்து முன்பு தாழ்ந்து வணங்கினுன் உரோமஞ் சிலிர்த்து சிவந்த கைகள் கூப்பி வணங்கியவாறே. 63

தொழுத கையினன் கோட்டிய மெய்யினன் துகிலத்
தெழுது பாவையில் ஆன்றமை புலத்தினன், இறைஞ்சிப்
புழுதி தோய்தரும் உறுப்பினன் சுருதியின் பொருண்மை
முழுதும் ஊறிய துதியின ஞகிமுன் நின்ருன்.

கூப்பித் தொழுத கையினனுய் தாழ்ந்து வளைந்த மேனியனுய் துகில் ஒன்றில் எழுதிய சித்திரப் பாவைபோல் அசைவில்லாதவனுய் அமைந்து ஒடுங்கிய புலன் உடையவனுய் புழுதி படிந்த உடல் உடையனுய் வேதங்களின் பொருண்மை முழுதும் ஊறிய துதியினனுகியே முன்னுக நின்ருன் இந்திரன். 64

கரிய வன்றனைச் செய்யவன் கருணைசெய் தருளி
வருதி யென்றுகூய் மறைகளும் வரம்புகாண் கில்லா
அரன தாள்களை அருச்சனை புரிதுநாம் அதனுக்
குரிய வாயபல் கரணமுந் தருதியென் றுரைத்தான்,

கருமை மேனியினனுன இந்திரனை செவ்வொளி பரந்த திருமேனி கொண்ட பகவான் பார்த்தருளி ''இந்திரனே வருவாய்!'' என அழைத்து சொல்வார். ''வேதங்களும் எல்லைகாண முடியாத சிவபிரானுடைய திருவடிகளை நாம் அர்ச்சனை புரிவோம். அதற்காக வேண்டிய பல பொருள்களும் இங்கு நீ தருவாயாக'' என்ருர். 65

உரைத்த வெல்லையில் தொழுதுபோய் உழையரில் பலரைக்
கரைத்து வீற்றுவீற் றேவியே கடிமலர்க் கண்ணி
திரைத்து கிற்படா நறும்புனல் அவிபுகை தீபம்
விரைந்த கந்தங்க ளேனவுந் தந்தனன் விரைவில்.

சுவாமி சொன்ன எல்லையில் இந்திரன் தொழுது சென்று தனது ஏவலரிற் பலரை வெவ்வேறு திக்கிலும் சென்று இவை சேகரிக்குமாறு உணர்த்தி வாசங்கொண்ட பூக் கண்ணிகள், திரை, வஸ்திரம். வாசநீர், நைவேத்தியம், தூபம், தீபம், வாசனைச் சாந்து, சந்தனம் ஆகியவற்றையும் ஏனைய சிவபூசைத் திரவியங்களையும் கொணர்வித்து வைத்தனன் விரைவில். 66

அவ்வக் காலையில் ஆறுமா முகனுடை யடிகள்
தெய்வக் கம்மியற் கொண்டொரு சினகரம் இயற்றிச்
சைவத் தந்திர விதியுளி நாடியே தாதை
எவ்வெக் காலமும் நிலையதோர் உருவுசெய் திட்டான்.

அந்தநேரத்து ஆறுமாமுகமுடைய எமது குருநாதன் தேவதச்சனைகொண்டு ஒரு கோவிலைச் செய்து அதிலே சைவ ஆகம முறைப்படி நாடி ஆராய்ந்து தந்தையாகிய சிவபிரானது எந்தக்காலமும் நிலையாக உள்ள சிவலிங்க உருவம் ஒன்றினைச் செய்திட்

மற்றிது நம்பால் தோன்றும் வான்படை மாயன் வேதாப்
பெற்றுள தன்றி யார்இப் பெரும்படை பரிக்கும் நீரார்
முற்றுயிர் உண்ணும் வெஞ்சூர் முரட்படை தொலைப்பான் ஈது
பற்றுதி மைந்த என்னுப் பராபரன் அருளிப் போனுன்.

''இந்தப் படையானது எம்மிடத்துத் தோன்றிய மேலான படையாகும். பிரமன் விஷ்ணுமூர்த்தியும் இதனைப் பெற்றூர் இல்லை. அது அல்லாமலும் யார் இப்படையை தாங்கும் தன்மை உடையார்? உலகத்து உயிர் முழுவதையும் உண்டு அழிக்கின்ற வலி உடைய கொடிய அசுரர் படையை தொலைக்கும்படியாக இதைப்பற்றிக் கொள்வாயாக, மகனே'' என அருள் செய்து எமது ஈசன் மறைந்தருளினுர். 76

கருணைசெய் பரமன் சேணிற் கரந்தனன் போன காலை
அருள்பெறு நெடுவேல் அண்ணல் அன்னவற் போற்றிப் பின்னை
விரவிய இலக்கத் தொன்பான் வீரரும் அயனும் ஏனைச்
சுரர்களும் வழுத்திச் செல்லத் தூயதன் தேரிற் புக்கான்.

படையினைக் கொடுத்து கருணை செய்த சிவபிரான் வானத்தில் மறைந்துபோன காலையில் சிவபிரான் அருளைப்பெற்ற நெடிய வேலை உடைய ஆறுமுகக் கடவுள் சிவ பிரானைப் போற்றி செய்து பின்பு தன்னேடும் பொருந்தி வந்த இலக்கத்து ஒன்பது வீரரும் பிரமனும் ஏனைய தேவர்களும் வணங்கிச் செல்லும்படியாக, தூய்மை பொருந்திய தனது தேரில் எழுந்தருளிக் கொண்டார். 77

சில்லியந் தேர்மேற் செவ்வேள் சேர்தலும் உலவை வேந்தன்
வல்லைதன் தமர்க ளோடும் வாம்பரி கடாவி உய்ப்ப
எல்லையிற் பரிதி தோன்ற எழுதரும் உயிர்க ளேபோல்
ஒல்லென எழுந்த தம்மா உருகெழு பூத வெள்ளம்.

பெரிய உருளையான சில்லுகளை உடைய தேர் மேலாகி முருகப் பிரான் சேர்தலும் வாயுதேவன் விரைவாகத் தனது இனங்களோடும் வேகமாகச் செல்லும் குதிரைகளைத் தூண்டிச் செலுத்த அந்நேரத்து ஒளியுடைய சூரிய பகவான் தோன்றுதலும் மகிழ்வால் எழுதரும் உயிர்களே போல் ''ஒல்'' என இரைந்துகொண்டு எழுந்தது உருமிக்க இந்த இரண்டாயிரம் வெள்ளம் பூத சேனை யாவும். 78

சாரத நீத்த மெல்லாந் தரையின்நின் றெழுந்து சூழ்ந்து
போரணி யணிந்து போந்த புடைதனில் இலக்கத் தொன்பான்
வீரருஞ் சுரர்கள் யாரும் மேவினர் வந்தார், வான்ருேய்
தேர்மிசை அவர்க்கு நாப்பட் சென்றனன் குமரச் செம்மல்.

பூதங்களான சேனை யாவும் பூமியில் நின்றும் எழுந்து எம்பிரானைச் சூழ்ந்து போருக்கு உற்ற அணி அணியாக வகுத்துச் சென்றன. சுவாமிபக்கராக இலக்கத்து ஒன்பது வீரர்களும் தேவர்கள் எல்லாரும் நெருக்கமாகப் பொருந்தி வந்தார்கள்.

கார்த்திகை காதலன் கறைமி டற்றுடை
மூர்த்திநல் லருள்செய முன்னி வந்தது
பார்த்தனன் எழுந்தனன் பணிந்து சென்னிமேற்
சேர்த்திய கரத்தொடு சென்று போற்றினன்.

கார்த்திகைப் பெண்களின் காதற்புதல்வராகிய முருகப்பிரான் நஞ்சை உடைய திருக்கழுத்துடைய மூர்த்தி தமக்கு அருள் செய்ய எண்ணி வந்ததைப் பார்த்தருளினர். உடன் எழுந்து பணிந்து தலைமேலாகக் கூப்பிய கைகளோடு சென்று போற்றி செய்தருளினர், 72

செயிர்ப்பறு நந்திதன் திறத்தில் வீரரும்
வியர்ப்பினில் வந்தெழு வீர ருங்குழீஇக்
கயற்புரை கண்ணுமை கணவற் காணுறீஇ
மயிர்ப்புறம் பொடிப்புற வணங்கி ஏத்தினர்.

கோபமாதி குணங்கள் நீங்கிய நந்திதேவர், கணங்களின் பாற்பட்டவராகி வந்த வீரவாகுதேவர் முதல் வீரர் ஒன்பதுபேரும், வேர்வையில் தோன்றிய இலக்கம் வீரரும் கூடி கயல்மீனை ஒத்த கண்ணினையுடைய உமையம்மையாரின் கணவனைக் கண்ணுற்று உரோமம் யாவும் பொடிப்ப வணங்கி ஏத்தினர்கள். 73

முண்டகன் முதல்வரும் முரண்கொள் பூதருங்
கண்டனர் அனையது கரங்கள் கூப்பியே
மண்டனின் மும்முறை வணங்கி வானகம்
எண்டிசை செவிடுற ஏத்தல் மேயினர்.

பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் முரணன பூதரும் எல்லாரும் எம்பிரானையும் பெருமாட்டியையும் கண்டனர். தமது கைகள் கூப்பியே மண்தனில் மும்முறை வணங்கி வானஉலகம் எட்டுத்திக்கு எங்கும் செவிடுறும்படி தோத்திரம் சொல்லித் துதித்தார்கள். 74

ஆயது காலை தன்னில் அருவுரு வாகும் அண்ணல்
சேயினை நோக்கி உன்றன் வழிபடற் குவகை செய்தேம்
நீயிது கோடி யென்னு நிரந்தபல் புவன முற்றும்
ஏயென முடிவு செய்யும் படைக்கலத் திறையை ஈந்தான்.

அவ்வாறாகிய நேரத்து அருவும், உருவும் ஆகி நிறைகின்ற சிவபிரான் தமது குமரனை நோக்கி ''உன்னுடைய வழிபாட்டிற்கு நாம் மகிழ்ந்தோம். நீ இதைப் பெற்றுக் கொள்வாயாக'' எனக் கூறியருளி பரந்து விளங்கும் உலகம் எல்லாம் முடிவு செய்கின்ற படைக்கலங்கட்கு எல்லாம் தலைமையான பாசுபதப் படையைக் கொடுத்தருளினர் எமது அப்பனுடைய திருக்கரத்து; 75

**மற்றிது நம்பால் தோன்றும் வான்படை மாயன் வேதாப்**
**பெற்றுள தன்றி யார்இப் பெரும்படை பரிக்கும் நீரார்**
**முற்றுயிர் உண்ணும் வெஞ்சூர் முரட்படை தொலைப்பான் ஈது**
**பற்றுதி மைந்த என்னுப் பராபரன் அருளிப் போனன்.**

''இந்தப் படையானது எம்மிடத்துத் தோன்றிய மேலான படையாகும். பிரமன் விஷ்ணுமூர்த்தியும் இதனைப் பெற்றார் இல்லை. அது அல்லாமலும் யார் இப்படையை தாங்கும் தன்மை உடையார்? உலகத்து உயிர் முழுவதையும் உண்டு அழிக்கின்ற வலி உடைய கொடிய அசுரர் படையை தொலைக்கும்படியாக இதைப்பற்றிக் கொள்வாயாக, மகனே'' என அருள் செய்து எமது ஈசன் மறைந்தருளினர். 76

**கருணைசெய் பரமன் சேணிற் கரந்தனன் போன காலை**
**அருள்பெறு நெடுவேல் அண்ணல் அன்னவற் போற்றிப் பின்னை**
**விரவிய இலக்கத் தொன்பான் வீரரும் அயனும் ஏனைச்**
**சுரர்களும் வழுத்திச் செல்லத் தூயதன் தேரிற் புக்கான்.**

படையினைக் கொடுத்து கருணை செய்த சிவபிரான் வானத்தில் மறைந்துபோன காலையில் சிவபிரான் அருளைப்பெற்ற நெடிய வேலை உடைய ஆறுமுகக் கடவுள் சிவ பிரானைப் போற்றி செய்து பின்பு தன்னோடும் பொருந்தி வந்த இலக்கத்து ஒன்பது வீரரும் பிரமனும் ஏனைய தேவர்களும் வணங்கிச் செல்லும்படியாக, தூய்மை பொருந்திய தனது தேரில் எழுந்தருளிக் கொண்டார். 77

**சில்லியந் தேர்மேற் செவ்வேள் சேர்தலும் உலவை வேந்தன்**
**வல்லைதன் தமர்க ளோடும் வாம்பரி கடாவி உய்ப்ப**
**எல்லையிற் பரிதி தோன்ற எழுதரும் உயிர்க ளேபோல்**
**ஒல்லென எழுந்த தம்மா உருகெழு பூத வெள்ளம்.**

பெரிய உருளையான சில்லுகளை உடைய தேர் மேலாகி முருகப் பிரான் சேர்தலும் வாயுதேவன் விரைவாகத் தனது இனங்களோடும் வேகமாகச் செல்லும் குதிரைகளைத் தூண்டிச் செலுத்த அந்நேரத்து ஒளியுடைய சூரிய பகவான் தோன்றுதலும் மகிழ்வால் எழுதரும் உயிர்களே போல் ''ஒல்'' என இரைந்துகொண்டு எழுந்தது உருமிக்க இந்த இரண்டாயிரம் வெள்ளம் பூத சேனை யாவும். 78

**சாரத நீத்த மெல்லாந் தரையின்நின் றெழுந்து சூழ்ந்து**
**போரணி யணிந்து போந்த புடைதனில் இலக்கத் தொன்பான்**
**வீரருஞ் சுரர்கள் யாரும் மேவினர் வந்தார், வான்றோய்**
**தேர்மிசை அவர்க்கு நாப்பட் சென்றனன் குமரச் செம்மல்.**

பூதங்களான சேனை யாவும் பூமியில் நின்றும் எழுந்து எம்பிரானைச் சூழ்ந்து போருக்கு உற்ற அணி அணியாக வகுத்துச் சென்றன. சுவாமிபக்கராக இலக்கத்து ஒன்பது வீரர்களும் தேவர்கள் எல்லாரும் நெருக்கமாகப் பொருந்தி வந்தார்கள்;

இவர்கள் யாவர்க்கும் நடுவணுக வானத்தில் உயர்ந்து செல்லும் தேர்மேலாக ஆறுமுக ஐயன் சென்றருளினுர். 79

மண்ணியங் கரையிற் றென்பால் வகுத்தசேய் ஞல்லூர் நீங்கி
எண்ணிய வுதவும் பொன்னி இகந் திடை மருதி னேடு
தண்ணியல் மஞ்ஞை யாடுந் தண்டுறை பறிய லூருங்
கண்ணுதல் இறைவன் தானம் ஏனவுங் கண்டு போனுன்.

இவ்வாறு மண்ணியாற்றங் கரையில் தென்புறமாக வகுத்து அமைத்த திருச்சேய் ஞலூரை விட்டு கடந்து, நினைந்ததைக் கொடுக்கும் காவிரியாற்றைக் கடந்து, திருவிடைமருதூர் என்னும் சிவாலயம் சேர்ந்து அப்பால் குளிர்மையான வளம்தரும் திருமயிலாடுதுறையும், திழிக்கருப்பறியலூர் என்னும் சிவாலயங்களையும் இன்னும் இவ்வழியால் சேருங்கால் வந்து சேருகின்ற நெற்றிக்கண் கொண்ட சிவபிரான் ஆலயங்கள் வேறு உள்ளனவும் கண்டு சென்ருர் முருகக்கடவுள். 80

எழில்வளஞ் சுரக்குந் தொல்லை இலஞ்சியங் கானம் நோக்கி
மழவிடை இறைவன் பொற்ருள் வணங்கியே மலர்மென் பாவை
முழுதுள திருவும் என்றும் முடிவில்மங் கலமும் எய்த
விழுமிதின் நோற்றுப் பெற்ற வியன்திரு வாரூர் கண்டான்.

எழில் மிக்க வளஞ் சுரக்கும் மிகப் பழையதான திரு இலஞ்சியங் கோட்டூர் என்னும் சிவாலயத்தைக் கண்டு அங்கு தருமதேவதையான இடபத்திருந்தருளும் சிவபிரான் பாதத்தை வணங்கி பின்னர் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் மகாலெட்சுமி தேவி தனக்கே முழுதாக உள்ள செல்வமும் என்றும் முடிவற்று விளங்கும் சுமங்கிலியான சிறப்பும் மங்கலங்களும் மிகஉயர்வாகிய சீலத்தோடும் இருந்து தவம் புரிந்து அருச்சித்து பேறுபெற்ற திருவாரூர் என்னும் சிவாலயத்தை முருகக்கடவுள் கண்டருளினுர். 81

குமார புரிப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 1725

# 25. சுரம் புகு படலம்

புற்றிடங் கொண்ட புத்தேள் புரந்தரற் கருள்செய் திட்ட
நற்றலந் தன்னைச் சேர்ந்த நகரமுள் ளனவுங் காணூஉக்
கொற்றவெங் கதிர்வேல் அண்ணல் கொல்லுலை அழலிற் செக்கர்
பற்றிய இரும்பு போலும் பாலையங் கானத் துற்றான்.

கறையான் புற்றின்மீது கோவில் கொண்டருளிய திருவாரூர் அப்பன் இந்திரனுக்கு அருள்புரிந்திட்ட அந்தச் சிவாலயமும் அதனைச் சார்ந்து விளங்கும் அந்நகரத்துள்ள ஏனைச் சிவாலயங்களும் கண்ணுற்றருளிய பிற்பாடு மேலும் சென்று கூரிய வேற் படையை ஏந்திய பெருமான் கொல்லன் உலையில் உள்ள நெருப்பில் காயப்பண்ணிய சிவந்த இரும்புபோலும் ஒரே சிகப்பு மயமான பாலைநிலத்தை வந்துசேர்ந்தருளினர்.

ஏழு நேமியும் பெரும்புறக் கடலுமெண் டிசையுஞ்
சூழ அன்னதால் அழிவின்றித் தொன்மைபோ லாகி
ஆழியுள்ளுறும் வடவையின் அவற்றினைப் பருகி
ஊழி தன்னினும் இருப்பதவ் வுயர்பெரும் பாலை.

ஏழு கடல்களும் இதற்கு அப்பாலான புறவழி சமுத்திரமும் எட்டுத்திக்கிலும் சூழ வந்தாலும் அதனாலும் அழிவில்லாது பழைமைபோலப் பொருந்தி சமுத்திரங்களின் நீரிலுள் மறைந்து இருக்கும் கொடிய வடவாமுகாக்கினி என்னும் நெருப்பையும் உறிஞ்சிக் குடித்து ஊழிக்காலத்தும் அழியாது இருப்பது சுவாமி வந்த பாலைநிலம்.

அண்டர் நாயகன் உலகடும் மகந்தனக் காகும்
பண்ட மேசெறி பல்வளம் ஆருயிர் பசுக்கள்
மண்டு நேமிநெய் நிலங்கல மாயுற மலர்தீக்
குண்ட மாயது கள்ளிசூழ் கொடியவெம் பாலை.

தேவர் நாயகரான சிவபிரான் உலக அழிவு எனும் சங்காரத்தைச் செய்யும் யாகத்திற்கு இவ்வுலக வளங்கள் யாவும் ஓமத்திரவியங்களாகவும், சகல உயிர்களும் யாகப் பசுவாகவும் பெருகும் சமுத்திரம் நெய்யாகவும் நிலம் பாத்திரமாகவும் கொண்டு செய்யப்பெறும் சங்கார யாகத்திற்கு இந்த பாலைநிலம் ஓமகுண்டம் எனும்படியாக அமைந்துள்ளது போல்வது.

வண்ண வெண்சுதை மெய்யுடை வரநதி கேள்வன்
நண்ணு தொல்லுல காகியே நரலையுற் றென்னத்
தண்ணி லாவெழு நாத்தலை இரண்டுடைத் தழலின்
பண்ண வற்குல காயது முதுபெரும் பாலை.

வண்ணம் மிக்க வெண்மையான மேனியை உடைய கங்கையாற்றின் நாயகரான வருணபகவான் பொருந்திவாழும் பழைமையான உலகம் ஆகியே சமுத்திரம் உற்று இருக்கும் தன்மையேபோல், சீரிய ஒளி உடைய ஏழு நாக்குகளையும் இரண்டுதலைகளையும் உடைய அக்கினி பகவானுக்கு ஓர் உலகம் ஆயது இந்த முதிய பெரிய பாலை நிலம்

உடைய தொல்குலக் கேண்மையால் அவ்வனத் துறையுங்
கொடிய வன்னிபாற் சென்றதோ வெப்பமேல் கொண்டு
நடுந டுங்கிவெம் புகையுமிழ்ந் தரற்றிநா வுலர்ந்து
கடல்ப டிந்துநீர் பருகுமால் வடவையங் கனலே.

இந்த பாலைநிலத்து உள்ள நெருப்பு தன்னுடைய குலத்தைச் சார்ந்தது. ஆகையால் இதனிடம் ஒருகால் சென்று வருவேன் என எண்ணி முன் பின் அறியாது வடவாமுகாக்கினி என்னும் நெருப்பு இப்பாலை நிலத்திற் சென்றுள்ளது போலும். அதனுல் அந்த வடவாமுகாக்கினி இதன்மேல் சென்றதால் வெப்பமேற் கொண்டு நடுநடுங்கி கொடிய புகையை கக்கி நாவறண்டு அதனுல் ஓடிச் சென்று கடலிலே படிந்து கொண்டு வெப்பு தீரவே இன்னமும் இருப்பதோ இந்த வடவாமுகாக்கினி! 5

கற்றை யங்கதிர்ப் பரிதியும் மதியுமக் கானஞ்
சுற்றி யேகுவ தல்லது மிசைபுகார் சுரரும்
மற்று ளார்களும் அனையரே எழிலியும் மருத்தும்
எற்றை வைகலும் அதன்புடை. போகவும் இசையா.

கற்றையான கிரணங்களை உடைய சூரியனும் இந்த பாலை நிலத்தை சுற்றிக் கொண்டு போவதே அல்லாது மேலாக செல்லார். தேவர்களும் மற்றையோர்களும் அப்படித்தான். மழைமேகமும் காற்றும் எந்த ஒரு நாளிலாவது இந்த பாலை நிலத்தின்மேல் போவதற்கு சம்மதம் கொள்ளார்கள். 6

சேனம் வெம்பணி ஒண்புறு விரலைமான் செந்நாய்
ஆனை யாதிகள் அவ்வனத் திருக்கவும் ஆவி
போன தில்லையால் அங்கியிற் ருேங்கிய பொருள்கள்
மேனி கன்றுவ தன்றியே விளியுமோ அதனுல்.

பருந்து, கொடிய நாகம், மிருதுவான புறு, கலைமான், புள்ளிமான். செந்நாய், யானை. ஆதிய மிருகங்கள் அந்த பாலைவனத்தில் இருப்பவும் அவர்கள் உயிர்போவதில்லை ஏனென்ருல் அவர்கள் பிறந்தது அங்கேயே ஆனபடியால் நெருப்பில் தோன்றிய பொருள்கள் மேனி புலுட்டையாகிக் கன்றிப்போவதே ஒழிய இறக்கமாட்டார்கள் என்பதாகும்.

எண்ணி னுஞ்சுடும் பாலையங் கானிடை எழுந்த
கண்ண கன்புகை அழல்படு கின்றகாட் சியவே
விண்ணின் நீலமுஞ் செக்கரும் அவற்றினல் வெடித்த
புண்ணும் மொக்குளுங் கதிர்களும் உடுக்களும் போலாம்.

மனதால் நாம் நினைத்தாலும் சுடுகின்ற இந்தப் பாலை நிலமான வனந்திரத்தில் எழுந்த பரந்த புகையும் நெருப்பும்தான் இங்குள்ள இடங்களிலும் தெரியப்படுகின்ற வானத்தில் நீல நிறமும் செக்கர் வானமும் எனவும் சொல்லலாம். இப்பாலைவன நெருப்பு எரிந்தபோது வானத்தில் ஏற்பட்ட புண்ணும் கொப்புளமும்தான் வானத்தில் உள்ள கதிர் ஒளியும் நட்சத்திரங்களும் எனலாம்;

**வேக வெய்யவன் புடையுரு தவ்வன மிசையே**
**போக வோரிறை எழுந்தழல் சுட்டது போலும்**
**ஏது தேரொரு காலிலா திழந்ததால் இருகால்**
**பாகி ழந்தனன் அவன்கதிர் அங்கிபட் டனவே.**

வேகமாகக் கொதிக்கும் வெய்யிலைச் சொரிகின்ற சூரியபகவான் இதன் பக்கரா கவும் போகநினையாத பாலைவன மேலாக மறந்து ஒருநாள் போய் விட்டானோ; அதனால் அந்தப் பாலைவன நெருப்புச் சுட்டமையால் போலும் அவன் தேருக்கு ஒரு சில்லில்லை. சாரதியான அருணனுக்கு கால் இரண்டும் இல்லாமல் போனதும் அதுதான். சூரியன் வெய்யில் இவ்வளவு வெப்பமானதும் அதனால் என நாம் சொல்லலாம். 9

**தங்கள் தொல்பவம் அகன்றிலா விண்ணவர் தம்மைத்**
**துங்க முத்தியின் பொருட்டினால் அடைபவர் தொகைபோல்**
**அங்கம் நொந்துதம் போலவே வெப்பமுற் றயருங்**
**கங்கம் நாடியே நீழலுக் கடைவன கலைகள்.**

தங்களுடைய பழைய வினைகளான பாவங்களையே நீக்க முடியாத தேவர்களை இவர் ஒரு மகான் என நினைந்து அவரிடம் முத்தி பெறும் பொருட்டாக ஓடிச் செல்லும் சனங்கள் தன்மைபோல தங்களுடைய அங்கங்கள் நொந்து பாலை நில வெப்பத்தால் அயர்வு கொண்டு பறந்து திரியும் பருந்தின் நிழலில் தங்கி நிற்பதற்குத் தேடி அலைவன கலைமான்கள். 10

**கோல வெங்கதிர் மதியிவர் வைகலுங் கொடிய**
**பாலை வெஞ்சுரத் தாரழல் வெம்மைபட் டனரோ**
**காலை தன்னினும் மாலையம் பொழுதினுங் கங்குல்**
**வேலை தன்னிலும் பிறவினும் வேலைநீர் படிவார்.**

ஒளிரும் வெப்பமான கதிரும் உடைய சூரியன், சந்திரன் என்னும் இவர்கள் நித்தலும் இப்பாலைவனம் மேலாக வருங்கால் இதன்வெப்பம் பட்டுக் கொண்டாரோ தெரியாது. காலையிலும் மாலையிலும் இரவிலும் எக்காலத்திலுமே சமுத்திர நீரில் மூழ்கிக் கொள்கிறார். 11

**தொடரும் வானவர் யாவரும் ஐயைதாள் தொழுவார்**
**கொடிய பாலைமுன் னுணர்கிலா தணுகினர் கொல்லோ**
**அடிசி வந்தகம் வெம்பியே அமுதமுண் டதற்காப்**
**படியின் மேலென்றுஞ் செல்கிலர் விண்மிசைப் படர்வார்.**

உலகில் செல்கின்ற தேவர்கள் யாவரும் துர்க்கா தேவியின் திருவடி தொழ வேண்டி அவள் இப்பாலை நிலத் தெய்வமானபடியால் அங்கு அவளைத் தொழும் படியாக வந்து சேர்ந்தபோது இந்தப்பாலை நில மண் சுட்டதினால் கால் சிவந்து வெம்பி உடலம் கருகி தாங்கள் அமுதம் உண்ட படியால் தங்கள் வனப்பு கெடாமல் மாட்
போனாலும் இனிமேல் நாம் இந்த பாலை நிலம் உள்ள பூமியில் எதிலும் மிதிக்க போனாலும் இனிமேல் நாம் இந்த பாலை நிலம் உள்ள பூமியில் படாது அந்தரத்தே செல்வார்கள். 12
டோம் என நினைந்து தம் பாதங்கள் பூமியில்

ஒள்ளி தாகிய தலைமையிற் பிறந்துளோர் உலகம்
எள்ளும் நல்குர வெய்தலால் இழிந்தவர் கண்ணுங்
கொள்ளு மாறெரு பயன்குறித் தேகல் போற்கொடிய
கள்ளி தன்புடை நீழலுக் கொதுங்குவ கரிகள்.

நல்ல மேம்பாட்டுடன் விளங்கும் தலைமைப்பாட்டுடன் கூடிய குலத்திற் பிறந்தோர்களுக்கு உலகம் வெறுக்கும் வறுமை வந்துற்றபோது தமக்குப் பொருள் உதவி வேண்டி இழிந்த குலத்துள்ள கூடாவொழுக்கம் உடையவர்பால் செல்லும் தன்மை போல கொடிய முள்ளுடைய கள்ளி மரத்தின் கீழ் நிழலுக்காக வந்து ஒதுங்கி நிற்கின்றன யானைகள் சில இப்பாலைவனத்து. 13

இரவி கம்மியன் சுட்டுறு கோல்கதிர் எரிதீ
மருவு செந்தரை பொறிமணி கொள்கலம் வறுங்கான்
கரிக ளேகரி காற்குழல் துதிக்கைநீர் கானல்
புரித ரும்பணி வெந்திடும் பணிக்குலம் போலும்.

சூரியபகவான் எனும் கொல்லன் செய்கின்ற பெரிய தொழிலில் சுடுகின்ற கோலாக அவன் கிரணங்களும், எரிகின்ற நெருப்பு சிவந்த பாலைவனமும், நெருப்பு பொறிகள் மணிகளும், பாத்திரம் வறிய காடும், கரிய யானைகள் கரி எனும்படியும். காற்றுஊதும் (துருத்தி) குழல் யானைத் துதிக்கையாகவும், நீர் கானல் நீராகவும் கொண்டு செய்கின்ற தொழில் பாம்புக் கூட்டங்களை வேக வைத்தல் போலும். 14

ஆன்ற வான்புவி நதிப்புனல் பாதலம் அதன்கண்
தோன்று நீத்தநீர் யாவையும் ஒருங்குறத் துற்றுச்
சான்ற பாலையஞ் செந்தழல் அப்புனல் தன்னைக்
கான்ற வாறெனக் கிளர்வன அந்நிலக் கானல்.

மேலோங்கிய வானத்துள்ள கங்கை நீர் பாதாளத்துள்ளே தோன்று நீர் யாவையும் ஒருங்குற இந்தப் பாலை நிலத்துள்ள வெப்ப நெருப்பு குடித்து அதன் நீரை ஆவியாக இந்நில மேலாக தருகிறது எனும்படியாக அந்த பாலைவனத்து கானல் அலைகள் தோன்றுகின்றன. 15

விஞ்சு கானல்வெண் டேரினை யாறென விரும்பி
நெஞ்சில் உன்னியே இரலைமான் மடப்பிடி நெடுந்தாட்
குஞ்ச ரந்திரிந் துலைவன கொடியவெம் பணிகால்
நஞ்சு தன்னையும் அருந்துவ ஞமலிநீர் நசையால்.

தேர் செல்வதுபோல மிஞ்சி பரந்துசெல்லும் கானல் நீரினை இது ஒரு உண்மையான ஆறு எனும்படிஎண்ணி உண்ணும் பொருட்டு கலைமான், புள்ளிமான், பெண்யானை, நெடிய கால்உடைய ஆண்யானைகளாதியன திரிந்து உலாவி அலைவன. கொடிய நஞ்சுடைய பாம்புகள் கக்கிய நஞ்சையும், நீர்வேட்கையால் அங்குள்ள நாய்கள் உண்ணும். 16

செய்ய மண்மகள் உலப்புறு உந்தியந் தீயாய்
வெய்ய வன்செலற் கரியவப் பாலேமே வுதலான்
மொய்யில் வெம்பணி புகையழல் உமிழ்வன முரணும்
மையு றுங்கொடு நஞ்சொடு கான்றசெம் மணிகள்.

செம்மையான பூமி தேவியினுடைய உதராக்கினி எனும் நெருப்பாகவும் சூரிய பகவானும் செல்லுவதற் கரியதாகிய தன்மையோடும் அப்பாலேவனம் மேவுதலால் வலியிலாத பாம்புகள் புகையையும் நெருப்பையும் ஒருங்கே கக்குவன போன்று இருப்பன கரிய நஞ்சோடு பாம்புகள் கக்கிய இரத்தினங்கள். 17

மூலேயின் அஞ்சொரி முத்தமும் முந்துசெம் பரலும்
அளவில் பாந்தளின் மணிகளும் ஈண்டியே அமர்தல்
விளிவில் அவ்வனத் தீச்சுடத் தனதுமெய் வெடித்தே
உலேயும் மண்மகள் மொக்குளுற் றிடுதிறன் ஒக்கும்.

மூங்கில்கள் சொரிந்த முத்துக்களும் முன்னே தோன்றும் சிவந்த பருக்கைக் கற்களும் அளவற்ற பாம்புகளின் இரத்தினங்களும் எல்லாம் கூடிப்பரவி இருக்கும் தன்மை அழியாத இந்த பாலேவனத்து நெருப்புச் சுட்டதால் பூமி தேவியின் மேனி வெடித்துச் சிதறிய பருக்கைகள் உற்றன போன்றன எனும்படியானது. 18

கள்ளி பட்டன பாலேயுந் தீந்தன கரிந்து
முள்ளி பட்டன எரிந்தன குராமரம் முளிந்து
கொள்ளி பட்டன காரகில் அன்னதாற் கொடுந்தீப்
புள்ளி பட்டது போன்றது பாலேயம் புவியே.

அங்குள்ள கள்ளி மரங்கள் யாவும் பட்டன. பாலேமரம் தீய்ந்து கரிந்து போயது. முள்ளிச் செடிகள் பட்டன. குராமரங்கள் எரிந்து போவன. அகில்மரமல்ல கொள்ளி எனும்படியாக உலர்ந்து காண்பன கரிய அகில் மரங்கள். இத்தன்மையான காட்சி தரும் மரச் செறிவினுல் அப்பாலேவனம் கொடிய நெருப்பின் புள்ளிபட்டது போல பொருந்திற்று. எவ்விதமான நீர்த்தன்மையும் பெறமுடியாததால் மரங்கள் தோன்றி னுலும் பட்டு எரிந்து உலர்ந்த நிலேயாகவே காணப்படும் அப்பாலே நிலம். 19

இன்ன தாகிய பாலேயஞ் சுரத்திடை இறைவன்
தன்ன தாகிய தானேக ளொடுந்தலேப் படலும்
மின்னு மாமுகில் பொழிந்தபின் தண்ணளி மிக்கு
மன்னு கின்றபூங் குறிஞ்சிபோ லாயதவ் வனமே.

இவ்வாருகிய வெப்புடைய பாலேநிலம் வழியாக எமதுகடவுள் தன்னுடைய பூத சேனேகளோடும் வந்து சேர்ந்தருளலும் உடன் அப்பாலே வனமானது மீண்டும் மேகங்கள் மழை பொழிந்தபின் குளிர்ச்சிமிக்குடன் விளங்கும் பூஞ்சோலே உடைய குறிஞ்சி நிலம் போல் ஆய்து. 20

ஆற்ற ருந்திறல் அங்கிதன் அரசியல் முறையை
மாற்றி யெம்பிரான் வருணற்கு வழங்கின னென்ன
ஏற்ற மாகிய வெம்மைபோய் நீங்கியே எவரும்.
போற்று நீரொடு தண்ணளி பெற்றதப் புவியே.

எவராலும் மாற்றமுடியாத அக்கினி தேவனுடைய அரசாட்சியை எமது குமரப் பெருமான் நீக்கி அந்த அரசியலை வருண தேவனுக்கு கொடுத்தவாறு போல மிகவும் மேலான வெப்பம் எல்லாம் போய் நீங்கி எவரும் போற்றி மகிழும் படியான தன்மையோடு குளிர்ச்சியை அடைந்து கொண்டது அப்பாலை நிலம். 21

காதல் நீங்கலா தலமரும் ஆருயிர்க் கரணம்
ஆதி ஈசன தருளினுல் அவனதா கியபோல்
ஏது நீரிலா தழல்படு வெய்யகான் இளையோன்
போத லாற்குளிர் கொண்டது நறுமலர்ப் பொழிலாய்.

ஈசன்மேல் காதல் நீங்காது உலகில் வருத்தமுறுகின்ற மேலான உயிர்களின் மனம் புத்தி சித்தம் யாவும் ஆதியான பகவான் அருளால் அவன் வசமாகவே உலகப் பற்றில் நின்றும் நீங்கி ஏகப்படு நிலையில் விளங்கும் தன்மை போல கொஞ்சமும் நீர்த்தன்மை இல்லாது நெருப்புப் பட்டு எரிந்த கொடிய பாலைவனம் என்றும் இளமையான கோலமுடைய முருகக் கடவுள் வருதலால் நல்ல பூஞ்சோலையாக மாறிக் குளிர்ச்சி கொண்டது. 22

புறநெ றிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கால்
அறிவும் ஆற்றலுங் குறிகளும் வேறுபட் டனபோல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவன் வரவால்
நறிய தண்மலர்ச் சோலையாய் உவகைநல் கியதே.

பிறசமய மாரக்கங்களில் அறியாமையால் புகுந்துள்ளோர்கள் சிவனருள் சேருங் காலத்து அவர்களின் அறிவும் ஆற்றலும் குறிகளும் செயல்களும் மாறி நந்நிலைமை யாகின்றவாறு போலவே மிக வறியதாகிய நெருப்பான தன்மை கொண்ட பாலை நிலமானது வேலேந்திய பகவான் அங்கு வரலாலே வாசமுடைய பூஞ்சோலையாக மாறி யாவர்க்கும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. 23

நீரறு முரம்பின் றன்மை நீங்குமச் சுரத்தின் தன்பால்
ஈரறு புயத்தன் செல்ல எழில்கெழு பரங்குன் றத்தில்
பாரறு தவம்பூண் டுள்ள பராசரன் சிறுர்க ளாய
ஓரறு வகைமை யோரும் ஓதியால் அதனைக் கண்டார்.

நீரற்று விளங்கும் வெப்பம் யாவும் நீக்கப்பட்டு குளிர்மையுடன் விளங்கும் அந்தப் பாலைநில மேலாக பன்னிரண்டு தோள்களை உடைய அப்பன் செல்ல அதுபோது திருப்பரங் குன்றத்து அமர்ந்து நிகரற்ற தவம் புரிந்த பராசர முனிவரின் பிள்ளைகள் ஆறுபேரும் ஞான உணர்வால் எமது பெருமானுடைய வருகையைக் கண்டார்கள்.

தத்தனே அனந்தன் நந்தி சதுர்முகன் பரிதிப் பாணி
மெய்த்தவ மாலி என்ன மேவுமூ விருவர் தாமும்
அத்தன தருளை முன்னி அடுக்கலின் இருக்கை நீங்கி
உத்தர நடவை யெய்தி ஒய்யெனப் படர்த லுற்ருர்.

தத்தன், அனந்தன், நந்தி, சதுர்முகன், சக்கரபாணி, உண்மையான தவமாற்றும் மாலி என்னும் பெயருடன் திருப்பரங் குன்றத்து இருந்த ஆறு பிள்ளைகளும் சிவபிரான் முன்னர் தங்கட்குக் கொடுத்தருளிய அருளை நினைந்துகொண்டு திருப்பரங் குன்றத்துத் தமது இருப்பிடத்தைவிட்டு நீங்கி வடக்கு நோக்கி நடந்துகொண்டு விரைவாகச் செல்வாராயினர். 25

ஆர்வல ராகும் மைந்தர் அறுவரும் அளகை நேடிப்
பார்வல்வந் தணையு மாபோல் பாலையென் றுரைக்கு மெல்லை
நேர்வரு கின்றகாலை நெடும்படை நீத்தஞ் சூழச்
சூர்வினை முடிப்பான் செல்லுந் தோன்றல்வந் தணிய ஞுன்.

எம்பிரானைக் கண்ணுரக் கண்டு தரிசிக்கும் ஆர்வம் கொண்ட இந்த ஆறு பேரும் தனது தாயை ஓடிச் சென்று அணைகின்ற குஞ்சுகள்போன்று பாலை என்று சொல்லப் படும் நில மீதாக எழுந்தருளி நேராக வந்துகொண்டிருக்கின்ற வேளையில் நெடியதாய்ப் பரந்த தனது பூத சேனையான கடல்சூழ்ந்து வர உலகில் சூழும் தீவினைகளான அசுரர் கொடுமையை அகற்றும்படி எழுந்தருளிவரும் தோன்ருத் துணையான ஆறுமுகப் பிரானும் இவர்கட்கு நேரே வந்து சேர்ந்தருளினர். 26

அணிமயிற் சேயோன் நண்ண ஆறுமா முகமும் பன்னீர்
இணைதவிர் புயமுங் கையும் ஏந்தெழிற் படையின் சீரும்
மணியணி மார்புஞ் செங்கேழ் வான்றுகின் மருங்கும் பாதத்
துணையுமத் துணையிற் கண்டு தொழுதுகண் களிப்புக் கொண்டார்.

தமக்கு மிகக் கிட்டவாக, எவர்க்கும் எட்டொணுத குழந்தை வடிவான குமரப் பெருமான் வந்து சேர்தலும், ஆறு அருள் பெருகும் முகமும் பன்னிரண்டு இணை பிறிது இல்லாது தோன்றும் கைகளும், திருக்கையில் ஏந்திய படைகளின், சீரும், முத்து மாலை அணிந்த மார்பும் செவ்வொளிகாலும் மேலாகிய பட்டாடை உடுத்த திருவரையும், அழிவில் நின்றும் காப்பாற்றும் துணையான இருபாதமும் அப்பாத அருளால் விளையும் துணையினுல் கண்டு கொண்டு கை கூப்பித் தொழுது தங்கள் கண்கள் மலர்ந்து ஆனந்த முற்ருர்கள். 27

மூவிரு திறத்தி ஞேரும் முற்றெருங் குணர்ந்த வள்ளல்
பூவடி வணங்கித் தேனீப் புதுநறு அருந்தி யார்த்து
மேவருந் தன்மைத் தென்ன வியப்பொடு வழுத்தி நின்று
தேவர்கள் தேவ எம்பால் திருவருள் செய்தி யென்ருர்.

ஆறு முனி பிள்ளைகளும் முழுவதும் எல்லாம் உணர்ந்த வள்ளலான முருகப்பிரானின் பூமலரடிகளை வணங்கித் தேன் வண்டானது இனிய தேனைப் புதிய பூவிலே உண்டு ஆர்த்து விளங்கும் தன்மைபோலப் பெரு வியப்புடன் அற்புதமாய் விளையும்

அப்பனே வணங்கி வாழ்த்தி நின்று ''தேவர்கள் தேவனே! எம்பால் தேவரீர் திருவருள் செய்வீராக'' எனப் போற்றி நின்றார்கள். 28

என்றிவை இருமூ வோரும் இசைத்துளி உயிர்கட் கெல்லாம்
ஒன்றிய உயிரு மாகி உணர்வுமாய் இருந்த மூர்த்தி
தன்றிரு மலர்த்தாள் முன்னந் தலையளி யோடு தாழ்ந்து
நின்றுகை தொழுதிட் டன்னோர் நிலைமையை மகவான் கூறும்.

என்று இவைகளை ஆறு முனிமைந்தரும் இசைத்த நேரத்து அவ்வேளை உயிர்கட்கு எல்லாம் ஒன்றாக விளங்கும் உயிராகி உணர்வாகி இருந்து அருள் புரியும் குமாரக் கடவுள் தம்முடைய திருப்பாத முன்பாகத் தலையான அன்புடன் தாழ்ந்து வணங்கி நின்று கை தொழுது இந்திர பகவான் அங்கு உள்ளம் மலர்ந்து வணங்கி நிற்கும் முனிபிள்ளைகள் வரலாற்றை எம்பிரானுக்கு எடுத்துச் சொல்வான். 29

மறுவறு பராச ரன்றன் மதலைக ளாகு மின்னோர்
அறுவருஞ் சிறு ரேயாகி ஆடுறு செவ்வி தன்னில்
நிறைதரு சரவ ணத்து நெடுந்தடம் புனலிற் பாய்ந்து
முறைமுறை புக்கு மூழ்கி முகேரென அலைக்க லுற்றார்.

''குற்றம் யாதும் இல்லாத தவவாழ்வுடைய பராசர முனிவன் பிள்ளைகளாகும் இந்த ஆறுபேரும் குழந்தைகளாக விளையாடல் புரியும் காலத்து, நீர் நிறைவுடன் விளங்கிய சரவணப்பொய்கை இடத்து நீரிலே பாய்ந்து முறைமுறையாகச் சென்று நீர் மூழ்கி விரைவாக நீரை அலைத்தார்கள்.'' 30

உலைத்தலை உணர்ச்சி கொள்ள உள்ளுயிர் திரியு மாபோல்
நிலைத்தலை யின்றி யார்க்கும் நீந்தல் செய்குண்டு நீத்தம்
அலைத்தலை யடையும் எல்லை ஆயிடை வதிந்த மீன்கள்
தலைத்தலை யிரிய இன்னோர் தன்மையங் கதனைக் கண்டார்,

''உணர்வுகள் ஒருவர்க்கு அடங்காது உலைய அவரின் உள்உயிரும் திரியும் தன்மையே போல ஓர் இடத்து நிலைத்து நில்லாதபடி சத்தமிட்டு ஆரவாரித்து நீந்திக்கொண்டு விளையாடலும் அப்போது நீர் அலைகள் தோன்றி அலைத்தலை அடைந்த நேரத்து அங்கு பொய்கையில் இருந்த மீன்கள் யாவும் தலைத்தலையாக ஓடித்திரிதலும் இப் பிள்ளைகள் அதனைக் கண்டார்கள்.'' 31

அங்கது தெரிந்து நின்றோர் ஆண்டுறு மீன்கள் பற்றித்
துங்கம துடைய கோட்டின் சூழலுய்த் துலவு மெல்லைச்
செங்கதி ருச்சி வேலைச் செய்கடன் நிரப்ப உன்னிப்
பங்கமில் நோன்மை பூண்ட பராசரன் அங்கண் வந்தான்.

''அந்த மீன்களைக் கண்டுகொண்ட இப்பிள்ளைகள் அங்குள்ள மீன்களைப் பிடித்து மேலோங்கிய கரையின் சூழலிலே போட்டு விளையாடிநின்ற நேரத்து சூரியபகவான் உச்சியில் தோன்றும் வேளையான மத்தியான நேரத்து செய்யப்படவேண்டிய கடன்களைச் செய்து முடிக்குமாறு நினைந்து இவர்கள் தந்தையான தவவிரதம்கொண்ட பராசர முனிவர் அங்கு வந்தார்.'' 32

வள்ளுறை கொண்ட தெய்வ வான்சர வணத்து வந்தோன்
பிள்ளைக ளாகும் இன்னோர் பிடித்தபுன் றொழிலை நோக்கித்
தள்ளருஞ் சினமேல் கொண்டு தனயர்காள் நீவிர் ஈண்டே
துள்ளுறு மீன மாகிச் சுலவுதி ரென்று சொற்றான்.

''வளம் நிறைந்துகொண்ட மேலான தெய்வத்தன்மை உடைய சரவணப்பொய்கையிடத்து மத்தியானக் கடன் செய்யும்படி வந்து பராசர முனிவர் தனது பிள்ளைகளாகும் இன்னோர்கள் மேற்கொண்ட கீழ்த்தரமான மீன் பிடிக்கும் செயலைப் பார்த்து நீக்கமுடியாக் கோபம்கொண்டு பிள்ளைகளை நோக்கி ''பிள்ளைகளே! நீங்கள் எல்லாரும் இங்கு துள்ளுறுகின்ற மீனாகி இப்பொய்கையில் உலாவுவீராக'' எனச் சாபமிட்டார் பராசர முனிவர்.'' 32

அவ்வுரை இறுக்கு முன்னர் அறுவரும் மேனாள் ஆற்றும்
வெவ்வினை யூழின் பாலால் மீனுரு வாகி அஞ்சி
எவ்வமி தகலு கின்ற தெப்பகல் உரைத்தி யென்னச்
செவ்விதின் உணர்ந்து மேலைத் திருமுனி புகலல் உற்றான்.

அந்தச் சாபத்தை சொல்லுமுன்பாக இந்த ஆறு பிள்ளைகளும் முன்னாள் தாங்கள் செய்துகொண்ட கொடிய ஊழ்வினையின் விளைவால் மீன் உருவாகி பயந்து தந்தையைப் பார்த்து ''எந்நாள் எமக்கு இப்பழி நீங்கும்? அதைச் சொல்வீராக'' என்ன எல்லாவற்றையும் செவ்வையாக உணர்ந்த மேலாகிய அருள் முனிவனான பராசர முனிவன் சொல்லலுற்றான்.'' 34

இத்தடந் தன்னில் மேனாள் இராறுதோ ளுடைய அண்ணல்
அத்தன தருளால் வைக அனையனை யெடுக்கும் அம்மை
மெய்த்தனம் உகுக்குந் தீம்பால் வெள்ளமாம் அதனை நீவிர்
துய்த்திடும் எல்லை தன்னில் தொல்லுரு வாதி ரென்றான்.

''இந்தப் பொய்கையிலே இனிவருங்காலத்து பன்னிரண்டு தோள்களைக் கொண்ட பகவான் முருகன் தந்தை சிவபிரான் அருளால் இப்பொய்கையில் இருப்ப அவரை எடுக்கும்போது அம்மையாருடைய உண்மை வடிவான தனங்கள் பால் சொரிய அந்த தித்திப்பாகிய பால் வெள்ளமாகப் பெருகி வந்து இப்பொய்கையில் கலப்ப அதனை நீங்கள் உண்கின்ற எல்லைதன்னில் பழைய வடிவாவீர்கள்'' என முனிவன் சொன்னான்.''

என்றிவை முனிவன் கூறி இரும்பகற் கடனை யாற்றிச்
சென்றனன் அதற்பின் மீனின் திருவுரு அமைந்த இன்னோர்
அன்றுதொட் டளப்பில் காலம் அலமரும் உணர்ச்சி யெய்தி
மன்றலஞ் சரவ ணத்து மாண்பெருந் தடாகத் துற்றார்.

''என்று இவைகளை பராசரமுனிவன் கூறிவிட்டு மத்தியான வேளையில் தான் செய்யும் கதிகளை முடித்துவிட்டுச் சென்றனன். அதன்பின் மீனின வடிவம் அமைந்த இவர்கள் அறுவரும் அன்று தொட்டு அளப்பில்லாத காலம் அலமந்து திரியும் உணர்வு கொண்டு மங்கலம் நிரம்பிய சரவணப்பொய்கை எனும் மாட்சிமைகொண்ட பெருந் தடாகத்து மீனாக உற்றார்கள்.'' 36

**ஐயநீ யனைய பொய்கை அமர்தலும் அவ்வை கண்டாங்**
**கொய்யென எடுப்பக் கொங்கை உகள நின் றிழிந்த தீம்பால்**
**துய்யமோர் நீத்த மாகித் துறுமலும் அதனைத் துய்த்து**
**மையல்நீங் குற்றுத் தொல்லை வாலிய வடிவம் பெற்றூர்.**

''ஐயனே! நீர் அந்தச் சரவணப்பொய்கையில் சேர்ந்து அமர்ந்திருத்தலும் அம்மை யார் கண்டு அன்புமிகுதியால் தேவரீர்கொண்ட ஆறுருவையும் விரைவாக எடுத்தலும் தனங்களினின்றும் வழிந்த இனிய பால் தூயதான கடல்போலப் பெருகித் தீர்த்த மாகி பொய்கையில் கலத்தலும் அதனை இவர்கள் தாங்களும் நீரோடு கலந்தபாலை உண்டு தங்கள் பழியால் விளைந்த மீன்வடிவம் நீங்கப்பட்டு பழைமையான தங்களது அழகிய வடிவத்தைப் பெற்றூர்கள்.'' 37

**தொல்லுரு வடைந்த இன்னோர் தூமதி வேணி யண்ணல்**
**நல்லருள் அதனுல் வந்து நவையகல் பரங்குன் றத்தின்**
**எல்லையில் விரதம் பூண்டாங் கிருந்தனர் எந்தை ஈண்டுச்**
**செல்லுவ துணர்ந்து போந்தார் என்றனன் தேவர் செம்மல்.**

''பழைய உருவத்தை அடைந்த இவர்கள் தூய இளம்பிறையணிந்த சடையுடைய சிவபிரான் அருளினுல் வந்து குறைவு இலாத திருப்பரங்குன்றத்தைச் சேர்ந்து எல்லையற்ற தவவிரதம் பூண்டு அங்கு இருந்தார்கள். எந்தையே! தேவரீர் இவ்விடத்து வருவதை அருளால் உணர்ந்து இங்கு வந்தார்கள் இந்த ஆறு பராசரமுனிவன் பிள்ளை களும்'' என தேவ அரசனுன இந்திரன் சொன்னுன். 38

**தம்மக வுரைக்குங் கூற்றந் தாதையர் வினவு மாபோல்**
**அம்மக பதிசொற் கேளா அருள்செய்து பராச ரன்றன்**
**செம்மல்கள் தம்மை நோக்கிச் செயிரறு குணத்து நீவிர்**
**எம்மொடு செல்வீ ரென்ருன் யாவையும் உணர்ந்த பெம்மான்.**

தம்முடைய பிள்ளை சொல்கின்ற வார்த்தையை தந்தை தாய் கேட்குமாப்போல இந்திரனுடைய இந்த வார்த்தைகளை எம்பிரான் கேட்டருளி அருள் புரிந்து பராசர முனிவனுடைய பிள்ளைகளை நோக்கி ''கோபம் முதற் குற்றம் நீங்கிய குணமேன்மை உடைய நீவிர் எம்மொடு செல்வீராக'' என்று அருள் புரிந்தார் எல்லாவற்றையும் உணர்ந்த எமது ஈசன். 39

**பராசன் மைந்த ரன்ன பான்மையை வினவிச் செவ்வேற்**
**கராசரண் அடைந்தேம் என்று கட்டுரைத் திறைஞ்சிச் செல்லச்**
**சராசரம் யாவுந் தந்த சண்முகன் தழல்கட் கெல்லாம்**
**இராசர்தந் தன்மை எய்தும் இருஞ்சுரங் கடந்து போனுன்.**

பராசர முனிவனுடைய பிள்ளைகள் எம்பிரான் அருள் செய்த வண்ணம் கேட்டு செவ்விய ஒளியுடைய திருமேனியுடன் தோன்றும் பன்னிருபுயத்து பகவானின் பாதார விந்தங்களைப் புகலிடமாக அடைந்தோமென்று யாரும் அறியும்படி சொல்லி எம்பி ரானை வணங்கியவாறு உடன் செல்ல மேலான வளங்கொண்டு விளங்கும் பாலை நிலத்தைக் கடந்து அப்பால் சென்றருளினுர். 40

சுரம்புகு படலம் முற்றிற்று

**ஆகத் திருவிருத்தம் - 1765**

487

# 26. திருச்செந்திப் படலம்

—oo—

சுரமது கடந்து நீங்கிச் சோதிவே லுடைய வள்ளல்
விரிபுனல் சடிலத் தண்ணல் மேவுசெங் குன்றூர் நோக்கிப்
பருமணி வயிர முத்தம் பலவளம் பிறவும் ஆழித்
திரையெறி அலைவா யாகுஞ் செந்திமா நகரம் புக்கான். 1

இவ்வாறுசிய வெப்பம் உடைய பாலை நிலத்தைக் கடந்து நீங்கிச் சென்றருளி சோதிமயமான வேல் படைய உடைய எம்பெருமான் விரிந்த தினர எறியும் கங்கை நீரைச் சடையில் தாங்கும் சிவபிரான் வீற்றிருந்தருளும் செங்குன்றூர் என்னும் பதியை நோக்கியவாறு சென்றருளி பருக்கை போலும் இரத்தினம், வயிரம், முத்து, சங்கு, பவனம் இவை போன்ற திரவியங்களை சமுத்திர அரசனுனவன் தன் திரை என்னும் கரங்களால் ஏந்திச்சென்று கரையில் சேர்த்து வழிபாடு செய்யும் திருச்சீர் அலைவாய் எனப்படும் திருச் செந்தூர் நகரினைச் சென்று சேர்ந்தருளினுர்.

அறுமுகன் அங்க ணேகி அகிலகம் மியனை நோக்கி
இறையிலோர் சினக ரத்தை இயற்றுதி ஈண்டை என்னத்
திறனுணர் புனைவர் செம்மல் சிந்தையின் நாடித் தேவர்
உறைதிரு நகரம் வெஃக ஒருதிருக் கோயில் செய்தான். 2

ஆறுமுகமுடைய கடவுள் அங்கே சென்று உலகம் படைக்கும் தேவ தச்சனை நோக்கி ''ஓர் இறைப்பொழுதின் முன்னுக ஓர் கோயிலை இங்கு ஆக்குவாயாக'' எனலும் அப் போது அத்திறத்தை உணர்ந்து கொண்ட தேவதச்சன் தனது மனதால் யாவற்வையும் சங்கற்பித்து தேவர்கள் வாழும் பொன் உலகமும் இந்தக் கோவில் அமைப்பை நோக்கி ஆசைகொள்ள ஓர் கோவிலைச் செய்து முடித்தான் தேவதச்சன்.

பொன்னுறும் இரதம் நீங்கிப் புறனெலாந் தானை நண்ண
அந்நகர் அதனு ளேகி அரும்பெருந் துணைவர் பூதர்
மன்னவர் அயன்மா லாதி வானவர் யாரும் போற்ற
மின்னுபொற் பீடத் தையன் வீற்றிருந் தருளி னுனே. 3

எங்கள் ஆறுமுக ஐயர் தாம் எழுந்தருளி வந்த பொன்னுன தேரில் நின்றும் நீங்கி தனது பக்கரெல்லாம் சேனைகள் சூழ்ந்துவர அந்த நகரம் போலும் கோவில் உள்ளே சென்று அங்கு அரிய பெரிய துணைவரான வீரவாகு தேவர் முதல் இலக்கத்து ஒன் பது வீரரும் பூதசேனுதிபதிகளும் பிரமதேவலும் நாராயணக் கடவுளும் தேவர்கள் யாவரும் போற்றி செய்யும்படி மின்னல்போல் ஒளிவீசும் பொன்னின் பீடத்து எமது ஐயன் வீற்றிருந்தருளினுர்.

வேறு

பானிமிர் மென்குரற் பாற்படு நல்யாழ்
கானமி சைத்தனர் கந்தரு வத்தோர்
ஆனபல் சட்டுவம் அங்கைதொ றேந்தி
வானமிர் தைச்செவி வாக்குறு மாபோல்.

பாவின் சுவை ஒத்த இனிமையான குரல் உடைய நல்ல யாழை எடுத்து கரத்தில் ஏந்தி தேவகானம் எனும் ஓசையை அங்கு கந்தருவத்தர் இசைத்து நின்ருர்கள். அது எவ்வாறெனில் அழகிய பொன் வட்டிலிலே தேவாமிர்தத்தை ஏந்தி கேட்பார் செவியில் வார்ப்பதுபோல யாழும் மிடறேசையுடன் கூடிய பாடலும் அமுதமாக இருந்தது. 4

சுருதியெ லாமுணர் தூயவன் வானேர்
புரவலன் மாமுனி புங்கவர் யாரும்
மருமலர் மாரி வழுத்தினர் வீசி
இருபுடை தன்னினும் எய்தினர் ஈண்டி

வேதங்கள் எல்லாம் உணர்கின்ற தூயவரான பிரமதேவரும் தேவர்க்கரசனுன இந்திரனும் பெரிய தவவாழ்வு கொண்ட முனிவரும் தேவர்கள் பலருமாக வாசனை கொண்ட பூக்களைக் கை நிரம்ப ஏந்தி ஆறுமுகமுடைய அப்பன் புகழ் பாடியவண்ணம் துதித்து சொரிந்து எம்பிரானின் இருபக்கராகவும் நெருங்கிக் கொண்டார்கள்.

வாலிய தூயொளி வானதி யாவும்
பாலகன் மெய்யணி பார்த்தனர் ஆடி
ஏலுறு பாங்கரின் ஈண்டிய வாபோல்
காலினர் சாமரை கைக்கொ டசைத்தார்.

இயல்புடன் வெண்மையான தூய ஒளி உடைய தேவ உலக கங்கைகள் யாவும் தங்கள் பாலகன் தங்களை விட்டு திருச்செந்தூர் வந்தார், அவர் அழகு எப்படி என திரும்பத் திரும்பப் பார்ப்பாராகி அங்கு எம்பிரான் பக்கரில் ஏற்ற முறைமையின் வந்து நின்ருற்போல வாயுக்கள் மெண் சாமரைகளைக் கையில் ஏந்தி அசைத்தார்கள். 6

ஒண்ணிழல் மாமதி யோரிரு வடிவாய்
அண்ணல் முகத்தெழி லார்ந்திட நண்ணி
விண்ணிடை நின்றென வெங்கனல் வருணன்
தண்ணிழல் வெண்குடை தாங்கினர் நின்ருர்.

குளிர்மையான நிலவு காலும் பெரிய பூரண சந்திரர் இருவர் இரண்டு வடிவாகி ஆதியும் அந்தமும் இல்லாத அப்பனின் ஆறுமுக எழிலைக் கண்டு கண்குளிரும்படி மேலே சேர்ந்துள்ளார் எனும்படியாக, வருண பகவானும் அக்கினி பகவானும் எம்பெருமான் திருமுடிமேல் குளிர்மையான நிழல் தரும் பூரண சந்திரவட்டக் குடைகளைப் பிடித்து நின்ருர்கள். 7

கட்டழல் கான்றிடு காமரு நாகம்
எட்டும லாதன யாவையும் ஈண்டி
உட்டெளி வாற்பணி உற்றென ஆல
வட்டம சைத்தனர் வானவர் பல்லோர்.

கண்களில் நெருப்பைக் கக்குகின்ற அழகிய நாகபாம்புகள் எட்டும் இவையல்லாத மற்றைய நாகபாம்புகளும் இங்கு வந்து கூடி இங்கே எளிவந்த கருணையுடன் வீற்றிருக்கும் முருகப் பிரானை உள்ளத் தெளிவாகி 'ஓகோ! நாம் எமது கொடுமையான அகந்தை கோபம் முதல் வேகமாறி பணிவோம் என தங்கள் தலையை சாய்த்து எம்பிரானைப் பணிந்து நிற்பதுபோல் அமைய தேவர் பலர் எம்பிரானைச் சூழ ஆலவட்டம் வீசினர்கள். 8

வானுயர் தோள்விறல் வாகெனும் அண்ணல்
தானுடை வாள்கொடு சார்ந்தயல் நிற்ப
ஏனைய தம்பியர் எண்மர் இலக்கர்
ஆனவர் போற்றி அகன்கடை நின்ருர்.

மிக மேலான தோள்வலிமை கொண்ட வீரவாகு தேவர் என்னும் கடவுள் தனது உடைவாளை ஏந்தியவண்ணமாக எம்பிரானைச் சார்ந்து அயலே நிற்ப வீரவாகு தேவரின் மற்றைய தம்பிமார் எட்டுப்பேர்களும் இலக்கம் வீரர்கள் ஆகும் யாவரும் எம்பிரானைப் போற்றியவாறு அகன்ற கடைவாயில்கள்தோறும் நின்றருளினார்கள். 9

## வேறு

பொருந்தி இன்னவர் புறத்துற அங்கண்
இருந்த ஞானமுதல் எல்லையில் காலம்
வருந்து கின்றமக வான்முகம் நோக்கித்
தெரிந்திடாதவரின் இன்னன செப்பும்.

இவ்வாறாக இவர்கள் யாரும் பொருந்தி இன்ன வகையாகப் புறத்தே நிற்ப அந்நேரத்து அங்கு வீற்றிருந்தருளிய ஞான முதல்வரான முருகப்பெருமான் எல்லையற்ற காலமாக அசுரர்களால் வருந்துகின்ற இந்திரதேவனின் முகத்தை நோக்கி எல்லாவற்றையும் அறிபவராகி இருந்தும் தாம் யாதொன்றையும் அறியாதவர்போல் இவ்வாறு சொல்லியருள்கின்றார். 10

துறந்து நீதியமர் சூர்முத லானோர்
பிறந்த வாறுமவர் பேணிய நோன்பும்
இறந்த செய்யவரம் எய்திய வாறுஞ்
சிறந்து பினனரசு செய்திடு மாறும்.

''இந்திரனே! நீதியை விட்டு வாழ்கின்ற சூரபன்மன் முதலானோர் பிறந்த வரலாறும் அவர்கள் பேணிய தவமும் அத்தவத்தால் அவ்வசுரர் மேலான வரம்பெற்ற வரலாறுஞ், வரத்தால் சிறந்து பின்னர் அரச பதவி மேற்கொண்ட வரலாறும். 11

மற்ற வெய்யவர்தம் மாயமும் முற்கொள்
வெற்றி யும்வலியும் மேன்மையும் நும்பால்
இற்றை நாள்வரை இயற்றிய துன்பும்
முற்று மொன்றற மொழிந்திடு கென்றான்.

இன்னும் அக்கொடிய அசுரர் செய்யும் மாயமும், முன்பு அவர்கள் ஈட்டிய வெற்றியும் வலியும் மேம்பாடும் உங்கள் பாலாக அந்த அசுரர் இன்றுவரை செய்த கொடுவினையும் துன்பமும் முற்றுமொன்றுங் குறைவில்லாதபடி எமக்கு எடுத்துச் சொல்வாயாக'' என்றார் எமது ஆறுமுகமுடைய பகவான். 12

கோக்கு மாரன்இவை கூற இசைந்தே
மீக்கொள் பொன்னுலக வேந்தயல் நின்ற
வாக்கின் வல்லகுர வன்றனை அன்பால்
நோக்கி நீயிவை நுவன்றருள் கென்றான்.

யாவர்க்கும் தலைமைப்பாடுடன் விளங்கும் குமரப் பெருமான் இவை கூறலும் அது கேட்ட மேல்நிலையிலுள்ள பொன்னுலக அரசனான இந்திரன் உடனே உடன்பாடாகி தனது பக்கராக உள்ள வாக்கில் வல்லவனான வியாழ பகவானை அன்பால் நோக்கி ''எமது குருவே! இந்த வரலாறுகள் யாவற்றையும் எங்கள் ஆறுமுக ஐயனுக்கு கூறியருள்வாய்'' என இந்திரன் சொன்னான்.

வச்சி ரங்கொள்கரன் மற்றது செப்ப
அச்செ னக்குரவன் அன்ன திசைந்தே
செச்சை மொய்ம்புடைய சேயிரு பொற்றாள்
உச்சி கொண்டுதொழு தின்ன துரைப்பான்.

வச்சிரப் படையைக் கையிற்கொண்ட இந்திரன் இது செப்பலும் ''அச்சோ! அது மிக நன்று'' எனக் குருவான வியாழ பகவான் அதற்கு இசைவாகி வெட்சி மலர் மாலை சூடியருளிய பன்னிரு தோளினை உடைய குழந்தை நாயகரின் செவ்விய இரு பாதங்களையும் உச்சிமீது சேரும்வண்ணம் தாழ்ந்து வணங்கித் தொழுது இந்தவாறு கூறியருள்வான் வியாழ தேவன். 14

அறிதி எப்பொருளும் ஆவிக டோறுஞ்
செறிதி எங்கள்துயர் சிந்துதல் முன்னிக்
குறிய சேயுருவு கொண்டனை யார்க்கும்
இறைவ நின்செயலை யாருணர் கிற்பார்.

''பெருமானே நீரோ எல்லாப் பொருளும் அறிவாய் அன்றியும் எல்லா உயிர் தோறும் செறிந்திருப்பாய். அவ்வண்ணமாகிய பேரருள் நிலையுடைய நீ எங்களது கொடிய துயரம் நீக்கும்படி சின்னஞ் சிறிய குழந்தைவடிவு கொண்டருளி இங்ஙன் வந்தருளினீர். எல்லார்க்குங் கடவுளே! உமது செயலை யார்தான் அறிந்துகொள்ள முடியும்.'' 15

எல்லை யில்புவனம் யாவையும் யாண்டும்
ஒல்லு மூவரும் உயிர்த்தொகை யாவுந்
தொல்லை மேனிகொடு தோன்றினை யால்நீ
வல்ல மாயவியல் மற்றெவர் தேர்வார்.

எல்லையற்று விளங்கும் இப்புவனங்களும் எல்லாப் பொருளையும் எல்லா இடமும் சிறப்பினை உடைய பிரமா, விஷ்ணு, உருத்திரன் எனும் மூவரும் உயிர்த்தொகைகள் யாவும் உமது பழைமையான மேனியில் தெரியும்படியாக எமக்கு தோற்றமளித்தருளினாய் கருணைக்கடலே முருகா! இவ்வாறு எப்பொருளும் ஆகியும் ஆகாத நினது மாய இயல்பின் பெருமையை இங்கு ஆரால் உணர முடியும், 16

வெய்யர் தன்மையை வினவிய தன்மை
ஐய அன்னதை அறிந்திட அன்றே
கைய ரேந்துயர் களைந்துள மீதில்
செய்ய இன்புதவு சீரரு ளாமால்.

கொடிய அசுரரின் தன்மையை நீர் கேட்ட வரலாறு ஐயனே! அதை நீர் அறிந்திடு தற்கு அல்ல. துயர்ப்படுகின்ற எங்கள் துயர் யாவையும் களைந்து எம் உள்ளத்தே செம்மைதரும் அழிவிலா இன்பத்தை அருள்செய வேண்டியே தேவரீர் மேற்கொள் ளும் உமது அருட் செயலின் ஒன்றாகும்'' என்றார் வியாழ பகவான். 17

ஆகையால் அவுணர் தன்மைக ளெல்லாம்
போகு மெல்லைபுகல் கின்றனன் என்னு
வாகைசேர் குமர வள்ளலை நோக்கி
ஓகை யோடரசன் ஓதிடு கின்றான்.

ஆகையால் பெருமானே அசுரர் தன்மைகள் வரலாறுகள் யாவும் என்னால் அறியப் படும் அளவில் தேவரீருக்கு எடுத்துச் சொல்வேன் என்று வெற்றிமாலை சூடிய குமரப் பெருமானை நோக்கி மனதில் ஊற்றெடுக்கின்ற பெரு மகிழ்வோடும தேவகுருவாகிய வியாழ பகவான் எடுத்து எமது உயிர் முதலாகிய முருகப் பெருமானுக்கு ஓதியருள்கின்றார். 18

திருச்செந்திப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1783

உற்பத்தி காண்டம் முற்றுப்பெற்றது.

கச்சியப்ப சிவாசாரியார் திருவடி வாழ்க.

